உ
ஓம்.

திருச்சிற்றம்பலம்
ஸ்ரீ சற்குருவேநம:

வசிட்ட முனிவர்
ஸ்ரீராமருக்கு உபதேசித்தருளிய

ஞானவாசிட்ட

# வமல ராமாயண வசனம்.

இஃது
பி. தெய்வசிகாமணி முதலியாரவர்களால்
பார்வையிட்ட ஷை பிரதியை

சுத்தப் பதிப்பு.




சேலம். சுப்பராயபிள்ளை அவர்கள் குமாரர்
சே. கண்ணுபிள்ளையவர்கள் உத்திரவின்படி
கொன்னூர்
லோகநாதமுதலியார் அவர்கள்
அச்சிட்ட பிரதிக்கிணங்க

**M. A. சுப்பிரமணிய முதலியார்**
அவர்களால் தமது
மனோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
சென்னை



இதன் விலை ரூபா 2

1926

உ

கடவுள் துணை.

# ஞானவாசிட்ட
# வமலராமாயன வசனத்தின்
## ரிஜிஸ்டர் அறிவிப்பு.

---

இதனால் சகலருக்கும் அறிவிப்பது யாதெனில் இஞ்ஞானவாசிட்ட வமலராமாயனவசனம் என்னும் நூலை முன்னர் எனதுமைத்துனர் ம-ள-ள-ஸ்ரீ கொண்ணூர் லோகநாத முதலியாரவர்கள் அச்சிட்டு, ரிஜிஸ்டர் செய்வித்து விற்றுவந்த பிரதியின்படியே இப்போது என்னாலும் ஷை நூலை மிகவும் விளக்கமாக அச்சிட்டு ரிஜிஸ்தர் செய்திருக்கிறேனாகையால், என்னுடைய உத்தரவின்றியாராகிலும் இதை அச்சிடுவார்களானால் சட்டப்படி ஏற்படும் தண்டனைக்கு உள்ளாவதோடு, எனக்கு நேரும் சகல நஷ்டங்களையும் கட்டிக்கொடுக்கவேண்டிவரும்.

இங்ஙனம்:

ம. அ. சுப்பிரமணிய முதலியார்.

மனோன்மணி விலாசம் பிரஸ்,

மின்ட் பிளடிங்ஸ் போஸ்டு, சென்னை.

உ

# ஞானவாசிட்டம் வசனம்.

| அட்டவணை. | பக்கம். |
|---|---|



ஆக பிரகரணமாறமுள்பட கதை சங.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சற்குருவே நம:

ஞானவாசிட்ட வமலராமாயணக் கதையின்

# சங்கிரகம்



மேலானவால்மீகமுனிவர், பரதுவாசருக்கு அனுக்கிரகிக்கப்பட்ட சுவானுபவமானது, அபரோட்சமாம்பொருட்டு வசிட்டமுனிவர் இராமனறிந்த சுவானுபவமபரோட்சமாகுநிமித்த முபதேசித்த கதைகளைச் சொல்லத்தொடங்கினதாம்.

ஸ்ரீராமர் வசிட்டமுனிவரோடு தசரதர் அனுக்கிரகம்பெற்றுக்கொண்டு தம்பிமார்களோடு தான் தீர்த்தயாத்திரைசெய்து பின் பட்டணம்வந்து ஞானபாதத்தில் விருப்புற்றவராய் பாசவைராக்கியமுண்டாய் நிராசையால் சாதனசதுஷ்டய முதித்து குருதரிசனாபேக்ஷையுண்டாக அப்போது ஆசாரியரை யறிவிக்க. விசுவாமித்திரமுனிவர் யாகசம்ரக்ஷணையை முன்னிட்டு எழுந்தருளிவந்து, அரக்கரைச் சிதைவிக்க ஸ்ரீராமரை யுதவவேண்டிவந்த காரியத்தை வெளியிட, தசரதர் குழந்தையை யனுப்ப மனம்வருந்த, முனிவர் அவாவதரித்ததி னுண்மையை விளங்கச்சொல்லவும் தசரதர் இராமர் என்னசெய்கின்றாரென்று ஏவலாளரைக்கேட்க, இராமர் தீர்த்தயாத்திரைசெய்து வந்தநாள் முதலாக சகலத்தையும்நீக்கி யிருக்கிற தன்மையை அவர்கள் விண்ணப்பஞ்செய்யவும், இராமரைச் சபைக்குத்தருவித்து அறிவுள்ள நீ துக்கிக்கவேண்டாமென்று முன் பிதாசொல்லினர். பின்பு முனிவர் சிந்தாஸ்வருபமும், அதனளவும், அதனிருப்பும், அதன்காரணமுமான நான்குவிதமான கேள்வி கேட்க, இராமர் ஜீவேஸ்வர சகங்களைக் கிரமமாகத்தூஷித்து, சித்தத்தியாகம் விரும்பி, ஆத்மஞானத்தை யபேட்சித்து விஸ்ராந்தி வருமளவும் நித்தியகருமமும்செய்யாது தேகத்தை விடுவேனென்று சபையில் முனிவர்கள் அபிப்பிராயந்தெரிந்துகொள்ள மௌனியாக விருந்தார்.

சுயமாயுண்டான நிராசையினால், தேவத்தன்மைநிறைந்த சபையில் சொல்லிய இராமனனுபவத்தினால், இவன் சகலபந்தங்களுநீங்கி சைதன்னிய மாத்திரமாயிருப்பதை யுணர்ந்தோரில் விஸ்வாமித்திரமுனிவர் மேற் சகசவியாபகமான சாக்ஷாத்காரமே நீயென் றறிவிக்கும்பொருட்டு அனுபவமுள்ள சுகமுனியின்கதையை நிரூபித்து விசுவாமித்திரர் சொல்லுவார்.

ஸ்ரீராமர், மனதினால்றிந்தபொருளே பொருள். வேறுபொருள் இல்லையென்று மகான்களால் சொல்லக்கேட்டு, மகாமனதில் விஸ்ராந்தியடைந்து சந்தேகந்தீராநின்ற பெரியோர்களுக்கு வரையறுத்துச் சொல்வதைப்பார்த்து, நம்மிருவர்க்கும் பிரமனால் ஆத்மசாக்ஷாத்காரம்விளங்கும்படி அனுக்கிரகித்த ஒப்பற்ற ஞானகதைகளனைத்தையும் இராகவனுக்குப் போதிக்கவேண்டும் என்று சொல்ல, அப்படியே பிரம்மாவாலே நிடதத்தின்மேலிருந்து அனுக்கிரகஞ்செய்த நிருமல ஞானக்கதைகள்மனதிலிருப்பதைச்சொல்லுவேனென் றுசுகமுனியறிந்தஅறிவைக்கொண்டே அந்த சுவானுபூதி சாக்ஷாத்காரமாகும்பொருட்டு, சனகாசனருளியபடியே, இராமனறிந்த அறிவைக்கொண்டு அவர்சுவானுபூதி சாக்ஷாத்காரமாகும்பொருட்டுஅவர்க்

குதபமான முத்திவிருப்பத்தை வைப்புறத்த வசிட்டமுனிவர் முமூட்சுப்பிரகரணத்தைக்கூறி, சாதனசதுஷ்டயத்தில் மூன்றுசாதனமு நிறைந்துநான்காஞ்சாதமான முமூட்சுவில் அதிதீவரனை இராமனுக்கு அத்துவிதஸ்வரூபத்தையும் அஃதடைபு முபற்சியையும், அதற்குக் கருவியான சுத்தவாசனையையும், அதற்குச்சகாயமான சாந்தியாதிகுணங்களையுஞ்சொல்லி, அத்துரியஞானம் பிரசன்னமாம்பொருட்டுசிறுஷ்டிக்குமுன், சத்தாமாத்திரமாகியும், சதோதயமாகியும், பிரகாசிக்கின்ற பிரம்மத்தின் லீலாசமீபத்தில் பிரதிபலனமான சைதன்னியமேசகத்துற்பத்தியென்றும், அதன்விளக்கமே சகஸ்திதியென்றும், அதனடக்கமே சகசாந்தமென்றும், இம்மூன்றிலும் ஒருதன்மயமாகவிளங்கு மதிஷ்டான சைதன்னியமே நிருவாணமாகுமென்றும் இந்நான்கு பிரகாரத்தால் சர்வமும் பிரம்மமயமென்பதையும் ராமருக்குபதேசிக்க, காணப்பட்ட யாவுஞ் சைதன்னியவடிவமாகப் பார்க்கும்போது உதயமான சுகஸ்வரூபமாய் விளங்குவாயென்றும், இக்கணமே ஆத்மாதீதமாக விளங்கும் போதாகாரமாய் சகலகிருத்தியங்களுஞ் செய்வாயென்றும், நித்தியசுகபோதமான சிவஸ்வரூபமே யாவுமாய் விளங்குதென்னுஞ் சுவானுபூதியே கருமத்தியாக மென வாக்கியார்த்த உபதேசத்தை வசிட்டமுனி முகித்தார். இந்தப்பிரகாரஞ்சீவன் முத்தித் தன்மையிலிருந்து, இராமா; இராஜாங்கத்துக் குரித்தான துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்வாயென்று சொல்லியபடியே ஸ்ரீராமர்செய்துபின் விதேகமுத்தியை யடைந்தார், இந்த பாத்துவாசமுனிக்கு வால்மீகமுனிவர் அனுக்கிரகஞ்செய்ய; அந்தப்ரகாரம் பரத்துவாசரும் நிரதிசயாநந்த சைதன்ய சாக்ஷாத்காரமான சீவன்முத்திபதத்திற் சுகித்திருந்து பின் விதேகமுத்தியை யடைந்தனரென்பதாம்.

ஞானவாசிட்ட வமலராமாயன சங்கிரகம்.

முற்றிற்று.

---

உ

## பாயிரம்.

வீரை ஆளவந்தாரென்னும் முனிவர், திராவிடபாஷையிற் பாவினமாக வருளிய ஆத்மஞான சாஸ்திரத்துக்கு, திருத்துருத்தியென்னும் திருப்பதியின்கண்ணெழுந்தருளி விளங்கிய ஸ்ரீ அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகிய இந்திரபீடம் கரபாத்திரஸ்வாமிகளென்னும் சதாசிவப்பிரமேந்திர யோகீஸ்வருடைய வாதீனத்துக் குரியராகிய திருநாகை - அருணாசலஸ்வாமிகளுடைய பிரதமசிஷியராகியபிறைசை-அருணாசலஸ்வாமிகளால்வடநூலாறாயிரத்தின் சமுத்திரதாரணியென்னும் வியாக்கியானம்; பிறைசை-அஷ்டகோத்திரம் சிங்கராசாரியாராலும், காஞ்சீபுரம்-இந்திரபீடம்-உபநிடதப்பிர்ம்ம யோகீஸ்வராதீனபராகிய இராமப்பிர்ம்மேந்திர யோகீஸ்வார் அனுக்கிரகித்த முப்பத்திராயிரம் திருக்கோட்டியூர் சுந்தராசாரியாராலும், தத்துவபோதினியென்னும் வியாக்கியானம், மோகூர்-சுப்பாசாஸ்திரியாலும் ஒத்துக்கொண்டு அதன் கருத்தை யனுசரித்த அவதாரிகை முதலியவைந்திலக்கணமாகப்பகுத்துச் செய்ததின்படி அவதாரிகை, தாத்பரியம், இவைகளோடு உத்திரர், வசனரூபமாகப் பதிப்பிக்கப்பட்டது.

ஓம்

சிவமயம்.

# ஞானவாசிட்டம்.

## வயிராக்கியப்பிரகரணம்.

### அவதாரிகை.

வடமொழியிலுள்ள ஞானவாசிட்டநூலைத் தமிழ்ச் செய்யுளில் மொழிபெயர்க்கப் புகுந்த இந்நூலாசிரியர் இது நிர்விக்கினமாய் நிறைவேறும்பொருட்டு விநாயகமூர்த்தியைச் சகுணமாகவும், நிர்க்குணமாகவும் உபாசனை செய்கின்றார்.

பெண்மைபாதியன் பெற்ற களிற்றினை
யண்மை தூர மறவகத் துன்னுவாந்
திண்மை ஞானச் சிறப்புயர் வாசிட்ட
முண்மை யாக வொருங்குரை செய்யவே.

(இதன்பொருள்.) திடம்பொருந்திய வாக்கியார்த்தபோதச் சிறப்பினால் மேன்மையாக விளங்கிய ஞானவாசிட்டத்தை, கீர்வாணத்திலுள்ள பிரகாரமாகத் தமிழ்ச்செய்யுளான் முழுதுஞ் சாற்றும்பொருட்டு உமைபாகனாகிய பரமசிவன் ஈன்றருளிய யானைமுகத்தினையுடைய விநாயகமூர்த்தியை அணிமைசேய்மையின்றி இடைவிடாம லுள்ளத்தின்கண் சிந்திப்பாம்.¶—

---

க. கவி. அவதாரிகை. வசிட்டோபதேசமானசுவானுபவத்தைக் கீர்வாணஸ்லோகமாய்ச் சொல்லப் புகுந்த வடநிலைபெற்ற ஞானப் பிரகாசமே சுவர்க்கலோகத்திலும், பூலோகத்திலும், அந்தரிக்ஷ லோகத்திலும்,

¶ இதனது தாற்பரியம். இந்நூலில் கூடஸ்தபிரமைக்கியத்தி லுதயமாகாநின்ற சுவானுபூதி சாட்சாத்காரத்தை விநாயகமூர்த்தியாகக் கூறினதாம்.

நூலாசிரியர், இந்நூல் நிர்விக்கினமாய் நிறைவேறி யாவருஞ் சிரவணஞ்செய்யும்பொருட்டு ஆத்மஞான சாட்சாத்காரஸ்வருபத்தை நிருபாதிக நிட்டையினாலுஞ் சோபாதிக நிட்டையினாலும் விலட்சண சலட்சணமாக வுபாசனை செய்கின்றார்.

என்னுடைய வகத்திலும், புறத்திலும், விளங்காநின்றது. வடிவங்களனைத்துமாய் நிறைந்திருக்கின்றது; அவ் வஸ்துவைத் திரிகரணங்களாலும் இரண்டறத் தொழுது வணங்குவாம்.‡—

உ. கடவுள் வணக்கங்கூறி நூற்பெருமை நுவலுகின்றது.

பிரகாசியாநின்ற பிரமன் முதலிய கடவுளராகிய மும்மூர்த்திகளாலும், சமஸ்த சுருதிகளாலும், சகல சாத்திரங்களாலும், சொல்லப்பட்ட வாசிட்டமென்னுஞ் சிறப்பாகிய ஞானசாஸ்திரம் ஆத்மஞானத்தினால் நிறைந்திருக்கின்றது.§—

ங. இதுவுமது.

நிலைபெற்ற வாசிட்டமாகிய மேலான ஞானசாத்திரமானது முதன்மையாகிய பிரமதேவனது இதயகமலத்துக்கு ஞானசூரியனாகவும், தனுசை யெடுப்பதற்கு மனமில்லாத மூழ்ச்சுப்பருவத்தையுடைய இராமனது சிறப்பான சிரவணத்துக்குத் தெளிவாகிய ஆனந்தாமிர்தமாகவும், சலனமில்லாத வான்மீகரிஷியினுடைய அநுபூதிவசனத்தி னுதயமாகிய சத்தாகவும் விளங்குகின்றது.†—

ச. இதுவுமது.

அறிவிற்பெரிய மகத்துக்களால் தன்மயமாயறியத்தக்க மேன்மைநிறைந்தது, மனோசங்கற்பம் விரியப்பெற்ற அற்பவறிவையுடையவர்களால் அநுபவமாயறியத்தகாதது, அறிவிக்கத்தக்க முறைமையிற்சிறந்தது; வாசிட்டநூலானது, அறிதற்கரிய மெய்ஞ்ஞானத்தை யறிவியாநின்ற ஞானசாத்திரங்கள் எல்லாவற்றினு மேலானதாம்.¶—

ரு. அருள்வடிவமாயிருத்தல்.

தன்னைத் தெரிந்துகொள்ளும் அறிவில்லாத புத்திரருக்கு ஞானகாரத்தையூட்டி ஆத்மசம்ரட்சணையென்னும் இதத்தைச்செய்யாநின்ற தயையினால் அரியவாசிட்டநூலாகிய அன்னைக்கு விடய ஆகாரத்தையூட்டி தேகசம்ரட்சணை செய்யாநின்றதாயானவள் சமானமாவாளோ? தேகத்

‡ இதனது தாற்பரியம். அத்தொய்த சித்தாந்தமானவேதாந்தங்களினதுமகாவாக்கியார்த்தத்தின்படியே விலட்சணமாகிய கூடஸ்தபிரமைக்கிய ஞானத்மவியாபகத்தை நிருபாதிகநிட்டையினாலும், பின்பு சலட்சணமான சர்வமுஞ் சச்சிதானந்த பிரமமென்கின்ற ஆத்மஞான சாட்சாத்காரத்தைச் சோபாதிக நிட்டையினாலும் துவிதமின்றி வணக்கங் கூறியதாம்.

§ இதனது தாற்பரியம். இந்நூல் சுருதி குருசுவாநுபவங்களை விளக்குகின்ற பிரபலச் சுருதியாம்.

† இதனதுதாற்பரியம். இந்நூல், சீவேஸ்வரஜகங்கள் சச்சிதானந்தப் பிரமமயமென்பதை யறிவிக்கின்றதாம்.

¶ இதனதுதாற்பரியம். சகலமும் பிரமாநந்த சாட்சாத்காரமாக விளங்குமதீ தாநுபூதியை யுணர்த்தும் பிரபலசுருதியாயிருக்கின்ற திந்நூலென்பதாம்.

துக்குரித்தான தாயானவள் விடயவாசனையையுண்டாக்கிச் சநநத்தைமாருமல் நிலைபெறச் செய்வள், பெருமைபொருந்திய வாசிட்டநூலென்னுந் தாயானவள் பிரமானந்த வாசனையை யுண்டாக்கி இச்சநநத்தை நீக்குவாள்.‡—எண்ணத்தகுந்த மகா சாந்தகுணத்தையுடைய இராகவன், தன தாத்ம ஸ்வரூபத்தையுடைய வசிட்டமுனியானவரனுக்கிரகஞ்செய்த ஞானர்த்தத்தையே, வான்மீக முனிவரால் வடமொழியி லருளிச்செய்யப்பட்ட இவ் வாசிட்டமென்னும் ஆத்மஞானசாத்திரத்தைச் சொர்னபாத்திரத்தில் வைக்கத்தகுந்த அமிர்தத்தை மிர்த்திகாபாத்திரத்திலும் வைக்கத்துணியு மேழையேனுகிய யான் இசையமைந்த தென்மொழியினல் சொல்லுவேன். §—இவ் வாசிட்டநூலுக் கதிகாரியானவன் அஞ்ஞானியுமல்லன், மனேதுன்ப நீங்கும்படி ஞானத்மாவையடைந்த சீவன்முத்தனுமல்லன், யான் பந்தத்தை யடைந்திருக்கின்றேன்; இதை நீக்கி இனி மோக்ஷத்தைச் சேரக்கடவேனென்று சிந்திக்கும் அந்நிச்சயத்தை யுள்ளவனேயென்று கொள்ளக்கடவது.—முழுதையு முணர்ந்த ஆசாரியராகிய மேலான வான்மீகமுனிவரை பரத்துவாச முனிவ நமஸ்காரஞ்செய்து கொடிய பிறவியிற்செறிந்த வெவ்விய சம்சாரதுன்பத்தில் அரிய சத்துவகுணத்தையுடைய இராமனிருந்ததெப்படி? தேவரீர் கிருபையினு லனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று மிருதுவாகக் கேட்டார். †—புதல்வனுகிய பரத்துவாசனே! நீ கேட்ட வினு பரமசுகத்தை விளைக்கு நன்மையுள்ளதாம். நீ நிருவானசுகத்தைக் கேட்பதற்குரித்தான சாதனசதுஷ்டய சம்பத்துள்ளவன் யானதைச் சொல்லுவேன் கேட்பாயாக. துன்பஞ்செய்கின்ற அஞ்ஞானத்தை நீ ஜெயஞ்செய்யலாம். மோகமானது ஜகத்சம்பந்தமாய், வளமைதங்

௬. நூற்பெருமை நுவன்று அவையடக்கங் கூறுகின்றது

௭. அவையடக்கங்கூறி அதிகாரியிலக்கணங் கூறியது.

௮. அதிகாரி குரு முகமாய் விசாரித்தல்

௯. விசாரித்த சீடனது மோக நிவர்த்தியின் பொருட் டதனுற்பத்தி கூறல்.

‡ இ-ம் இந்நூல் அநித்தியமான விடயாநந்தத்தைமாற்றி நித்தியமான பிரமாநந்தத்தைக் கொடுக்கின்ற கருணையில் மிஞ்சினதாம்

§ இ-ம் இத் தமிழ்நூல் சர்வத்திரசாதாரணமாயிருந்து பக்குவருக்குச்சுவானுபூதியை விளைவிக்கின்றபடியால், சீவகாருணியமுள்ள சத்துக்கள் மிகுந்த வகமகிழ்ச்சியோடும் மேன்மையாகக் கொள்வரென்பதாம்

† இ-ம் பரிபக்குவமான சீடன் சீவன் முத்தித்தன்மையை விசாரித்ததாம்.

கிய ஆகாயத்தில் இல்லாத நீலநிறமுண்டானதுபோல, பிரமனிடத்திலில்லாததாக வந்து பொருந்தும்.*

௧0 மாயாவிலக்கணங்கூறி அதை நிவிர்த்திக்கும் அனுபூதியிலக்கணங்கூறல்.

—நித்தியமாகக் காணப்பட்ட இம்மோகமாகிய ஜகத்தை எவ்வளவேனுந் திரும்ப நினையாமல் மறந்துவிடுவதே நன்மையென்று நிச்சயித்து, ஸ்வரூபசமஸ்காரமான மகாமனத்துக்கு உள்ளதுபோலத்தோற்றப்பட்ட சகமானது இதார்த்தமா யில்லவேயில்லையென்று ஞானத்தினல் உண்டாவதெப்போதோ, அப்போதே மேலான நிருவாண சுகமாம்.†

௧௧. திருக்குவைச்சொல்லித் திரிசியசிருஷ்டி நீங்காவிடில் பரமசுகமுண்டாகாதெனல்.

—சதோதயமாய் ஒருவராலுண்டாக்குவதற்கு உரியதல்லாததாய் சுயமாக வுண்டான நாசமில்லாத நிருவாணசுகமானது, வழிபடாநின்ற பரமஞானமான இந்தத் திரிசிய விஸ்மரணத்தைவிட்டு அபரஞானத்தையுடைய சாத்திரங்களென்கிற படுகுழிகளிலுழன்று, அறிவின்மையாகிய குணத்தினல் பிறப்போர்க்கெல்லாம் எக்காலத்திலும் பொருந்தாதாம்.¶

௧௨. திரிசிய விஸ்மரண மான வாசனைத் தியாகம் பெரியோர்க்குஞ் சம்மதமாமெனல்.

—சஞ்சலத்தை விளைக்கின்ற வாசனையைப் பற்றற விடுதலையே நன்றென்றும் நிலைபெற்ற மோக்ஷமென்றும் மாசற்றமார்க்க மிதுவென்றும் மேலான சத்துக்கள் சொல்லுவார்கள். அவ்வாசனை இரண்டுவிதமாம். அவற்றில், ஜநநத்தைக்கொடுத்து நடுக்கத்தைச் செய்யாநின்ற அசுத்த வாசனை யொன்று, அச் சநநத்தை நிவிர்த்திசெய்கின்ற சுத்த வாசனை யொன்றும்.‡

௧௩. வாசனையை நிவர்த்திக்கும்

—அஞ்ஞானத்தினது மயமே தேகமாய்மிகுந்த அகம்பாவ நிறைந்து பலசநநத்தை

---

*இ·ம். ஆகாயத்தில் நீலநிறமில்லாதிருந்துந் தெரிவின்மையினு லிருப்பதாய்த் தோற்றுவதுபோலப் பிரமஞானத்தில் ஜகத்மோகமித்தையாயிருந்துஞ் சுவானுபவமின்மையாற் பரமார்த்தம்போலத் தோற்றப்படுகின்றதென்று அத்தியாரோபவுத்தியா லறிவித்ததாம். அத்தியாரோபமாவது, இதார்த்தமான சச்சிதானந்தப் பிரத்தியக்ஷத்தை இல்லாத நாமரூபவடிவமான சகமாக விபரீதபாவனையாற் காண்குதல்.

† இ·ம். உபதேசித்த மகாவாக்கியார்த்தந்தோன்ற தான் சின்மாத்திரமாக விளங்குந் திருஷ்டியினுற் சகலமுஞ் சின்மாத்திரமாய் விளங்குமென்னு மனுபவம் வந்தால் அதுவே நிரதிசயாநந்தாபரோட்ச சாட்சாத்காரமாமென்று; சூசகமா யபவாதவுத்தியா லறிவித்ததாம்; இவை குருமுகத்தாற்றெறிந்துகொள்க.—அபவாதமாவது விபரீதபாவனையாற் பார்க்கின்ற இல்லாத நாமரூபவடிவமாகிய ஜகத்தை இதார்த்தமான சச்சிதானந்தவடிவமாகத் தெளிவினுற் காண்குதல்.

¶ இ·ம். சாத்திரஞானஞ் சிரமத்தின்பொருட்டேயன்றி திரிசிய விஸ்மரணம்போல நித்தியசித்த பரப்பிரமவிடயாபரோக்ஷானுபவமான விஸ்ராந்தியைக் கொடாதென்பதாம்.

‡ இ·ம். வாசனுத்தியாகமே விதேகமுத்தியெனச் சொல்லி அதன் சாமானிய விலக்கணத்தைச் சொன்னதாம்.

பொருட்டு அதன் விசேடண நிரூபி

மேலுமேலு முண்டாக்குவதை அசுத்தவாசனை
யென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் மறுசநநம்
நீங்கி முளையில்லாமல் சிவந்த வக்கினியினால்
வறுக்க முளையாத விதைக்குச் சமானமான அவ்வா
சனையைச் சுத்தவாசனையென்று சத்துக்கள் சொல்
லுவார்கள்†—பிராரத்த தேகத்தைத் தாங்கும்பொ
ருட்டுத் தரிப்பதாய்ச் சுத்தவாதனையை அடைந்து
ஜநநமாகிய அநர்த்தத்தில் எப்போதுஞ்செல்லாதவர்
களைச் சூட்சுமமான ஞானனுபவத்தினால் பார்க்க
வேண்டிய ஞானவிஷயங்களனைத்தையும் பார்த்துச்
சிதாநந்த சுகத்தை விளைக்கும் சீவன்முத்தித்
தன்மையையடைந்தவர்களென்று சொல்லலாம்.*-

கச. சுத்த வாசனையடைந்த சிவன்முத்தரிலக் கணங்கூறல்

மாட்சிமைப்பட்டதான ஒப்பற்ற சீவன் முத்தித்
தன்மையைப்பெற்று இராகவன் பூரணமகாமனது
டனேயிருந்த மார்க்கத்தைச் சொல்லக் கேட்குமிட
த்தில் கேள்வியால் அறிவு விளங்கிய விச்சிரவணத்தி
னால் சராமரணங்களை நீக்குவாய் புதல்வனேயென்று
வான்மீகமுனியானவர் சொல்லத்தொடங்கினர்.§--

கரு. சீவன் முத்தரிலக்கணங் கூறி இராமன் சீவன் முத்தானன நெறியைச் சொல்லத் தொடங்குதல்.

நான்கு வேதங்களையும் கலைகளனைத்தையும் அப்
பியாசித்து விளையாட்டினால் ஒன்றிற்கும் பயப்படா
மல் சிறிதுநாளிருந்தார், விளையாட்டுப்பருவ நீங்கின
பிற்காலம் மேகவண்ணனை தாமரைக்கண்ணையுடை
ய இராமன், மேலான இலாபத்தைக்கொடுக்கத்தக்க
புண்ணியதீர்த்தங்களனைத்தையும், சத்துக்களுடைய
புண்ணியாச்சிரமங்களையும், தரிசிக்கும்பொருட்டு.‡

கசு. இராமன் தீர்த்தயாத்திரை விரும்பல்.

பிதாவினது பாதமென்னும் குவியாத அம்போரு
கத்தை அம்சம்போல இராம னடைந்து நமஸ்கரி
த்து, என்பிதாவே! பழமையான புண்ணியதீர்த்தங்
களையும், தேவாலயங்களையும், முனிவர் தபோவனங்

கஎ. பிதாவை வினவல்.

---

அசுத்தவாசனையுள்ளவன் பெத்தனென்
† இம். அஞ்ஞான சமஸ்காரமான அசுத்தவாசனையுள்ளவன் முத்தனென்றுஞ் சொல்லப்
றும், ஞானசமஸ்காரமான சுத்தவாசனையுள்ளவன் முத்தனென்றுஞ் சொல்லப்
பட்டதாம்.
* இம். பிராரத்தம் புசிக்கும்படி முடிவாகவந்த தேகத்தைத் தரித்திருக்கு நிமி
த்தஞ் சுத்தவாசனையைத் தரித்தவன். இனிச் சநநத்தி லழுந்தானென்பதாம்.
§ இ-ம். வான்மீகமுனிவர் பரத்துவாஜருக்குத் தம்மா லனுக்கிரகிக்கப்பட்ட
சுவானுபவமனது அபரோக்ஷமாம்பொருட்டு இராமனறிந்த சுவானுபவம் பரோ
க்ஷமாகு நிமித்தம், வசிட்டமுனிவ ருபதேசித்த கதைகளைச் சொல்லத்தொடங்
கின்தாம்.
‡ இ-ம். சித்தசுத்திவந்து அதனாற் சாதனசதுஷ்டயமுண்டாய், அதனாற் சற்
குரு ளைிப்படுநிமித்தந் தீர்த்தயாத்திரைசெய்யும் புண்ணிய பரிபாகத்தினால்
தனக்குத்தானே விருப்பமுண்டான தென்பதாம்.

கிய ஆகாயத்தில் இல்லாத நீலநிறமுண்டானது போல, பிரமனிடத்திலில்லாததாக வந்து பொருந்தும்.*—

௧0 மாயாவிலக்கணங்கூறி அதை நிவிர்த்திக்கும் அனுபூதியிலக்கணங்கூறல்.

நித்தியமாகக் காணப்பட்ட இம்மோகமாகிய ஜகத்தை எவ்வளவேனும் திரும்ப நினையாமல் மறந்துவிடுவதே நன்மையென்று நிச்சயித்து, ஸ்வரூபசமஸ்காரமான மகாமனத்துக்கு உள்ளதுபோலத்தோற்றப்பட்ட சகமானது இதார்த்தமாயில்லவேயில்லையென்று ஞானத்தினால் உண்டாவதெப்போதோ, அப்போதே மேலான நிருவாண சுகமாம்.†—

௧௧. திருக்குவைச்சொல்லித் திரிசியசிருஷ்டி நீங்காவிடில் பரமசுகமுண்டாகாதெனல்.

சதோதயமாய் ஒருவராலுண்டாக்குவதற்கு உரியதல்லாததாய் சுயமாக வுண்டான நாசமில்லாத நிருவாணசுகமானது, வழிபடாநின்ற பரமஞானமான இந்தத் திரிசிய விஸ்மரணத்தைவிட்டு அபரஞானத்தையுடைய சாத்திரங்களென்கிற படுகுழிகளிலுழன்று, அறிவின்மையாகிய குணத்தினால் பிறப்போர்க்கெல்லாம் எக்காலத்திலும் பொருந்தாதாம்.¶—

௧௨. திரிசிய விஸ்மரணமான வாசனாத் தியாகம் பெரியோர்க்குஞ் சம்மதமாமெனல்.

சஞ்சலத்தை விளைக்கின்ற வாசனையைப் பற்றற விடுதலையே நன்றென்றும் நிலைபெற்ற மோக்ஷமென்றும் மாசற்றமார்க்க மிதுவென்றும் மேலான சத்துக்கள் சொல்லுவார்கள். அவ்வாசனை இரண்டுவிதமாம். அவற்றில், ஜநநத்தைக்கொடுத்து நடுக்கத்தைச் செய்யாநின்ற அசுத்த வாசனை யொன்று, அச் சநநத்தை நிவிர்த்திசெய்கின்ற சுத்த வாசனை யொன்றும்.‡—

௧௩. வாசனையை நிவர்த்திக்கும்

அஞ்ஞானத்தினது மயமே தேகமாய்மிகுந்த அகம்பாவ நிறைந்து பலசநநத்தை

---

*இ·ம். ஆகாயத்தில் நீலநிறமில்லாதிருந்துந் தெரிவின்மையினா லிருப்பதாய்த் தோற்றுவதுபோலப் பிரமஞானத்தில் ஜகத்மோகமித்தையாயிருந்துஞ் சுவானுபவமின்மையாற் பரமார்த்தம்போலத் தோற்றப்படுகின்றதென்று அத்தியாரோப வுத்தியா லறிவித்ததாம். அத்தியாரோபமாவது, இதார்த்தமான சச்சிதானந்தப் பிரத்தியக்ஷத்தை இல்லாத நாமரூபவடிவமான சகமாக விபரீதபாவனையாற் காணுதல்.

† இ·ம். உபதேசித்த மகாவாக்கியார்த்தந்தோன்ற தான் சின்மாத்திரமாக விளங்குந் திருஷ்டியினாற் சகலமுஞ் சின்மாத்திரமாய் விளங்குமென்னு மனுபவம் வந்தால் அதுவே நிரதிசயாநந்தாபரோட்ச சாட்சாத்காரமாமென்று; சூசகமா யபவாதவுத்தியா லறிவித்ததாம்; இவை குருமுகத்தாற்றெறிந்துகொள்க.—அபவாதமாவது விபரீதபாவனையாற் பார்க்கின்ற இல்லாத நாமரூபவடிவமாகிய ஜகத்தை இதார்த்தமான சச்சிதானந்தவடிவமாகத் தெளிவினாற் காணுதல்.

¶ இ ம். சாத்திரஞானஞ் சிரமத்தின்பொருட்டேயன்றி திரிசிய விஸ்மரணம் போல நித்தியசித்த பரப்பிரமவிடயாபரோக்ஷானுபவமான விஸ்ராந்தியைக் கொடாதென்பதாம்.

‡ இ·ம். வாசனாத்தியாகமே விதேகமுத்தியெனச் சொல்லி அதன் சாமானிய விலக்கணத்தைச் சொன்னதாம்.

பொருட்டு அதன் விசேடண நிரூபி

மேலுமேலு முண்டாக்குவதை அசுத்தவாசனையென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் மறுசநநம் நீங்கி முளையில்லாமல் சிவந்த வக்கினியினால் வறுக்க முளையாத விதைக்குச் சமானமான அவ்வாசனையைச் சுத்தவாசனையென்று சத்துக்கள் சொல்லுவார்கள்†—

கச. சுத்த வாசனையடைந்த சீவன்முத்தரிலக் கணங்கூறல்

பிராரத்த தேகத்தைத் தாங்கும்பொருட்டுத் தரிப்பதாய்ச் சுத்தவாதனையை அடைந்து ஜநநமாகிய அநர்த்தத்தில் எப்போதுஞ்செல்லாதவர்களைச் சூட்சுமமான ஞானானுபவத்தினால் பார்க்கவேண்டிய ஞானவிஷயங்களனைத்தையும் பார்த்துச் சிதாநந்த சுகத்தை விளைக்கும் சீவன்முத்தித் தன்மையையடைந்தவர்களென்று சொல்லலாம்.*—

கரு. சீவன் முத்தரிலக்கணங் கூறி இராமன் சீவன் முத்தானான நெறியைச் சொல்லத் தொடங்குதல்.

மாட்சிமைப்பட்டதான ஒப்பற்ற சீவன் முத்தித் தன்மையைப்பெற்று இராகவன் பூரணமகாமனதுடனேயிருந்த மார்க்கத்தைச் சொல்லக் கேட்குமிடத்தில் கேள்வியால் அறிவு விளங்கிய விச்சிரவணத்தினால் சராமரணங்களை நீக்குவாய் புதல்வனேயென்று வான்மீகமுனியானவர் சொல்லத்தொடங்கினார்.§—

கசு. இராமன் தீர்த்தயாத்திரை விரும்பல்.

நான்கு வேதங்களையும் கலைகளனைத்தையும் அப்பியாசித்து விளையாட்டினால் ஒன்றிற்கும் பயப்படாமல் சிறிதுநாளிருந்தார், விளையாட்டுப்பருவ நீங்கின பிற்காலம் மேகவண்ணனான தாமரைக்கண்ணையுடைய இராமன், மேலான இலாபத்தைக்கொடுக்கத்தக்க புண்ணியதீர்த்தங்களனைத்தையும், சத்துக்களுடைய புண்ணியாச்சிரமங்களையும், தரிசிக்கும்பொருட்டு.‡

கஎ. பிதாவை வினாவல்.

பிதாவினது பாதமென்னும் குவியாத அம்போருகத்தை அம்சம்போல இராமனடைந்து நமஸ்கரித்து, என்பிதாவே! பழமையான புண்ணியதீர்த்தங்களையும், தேவாலயங்களையும், முனிவர் தபோவனங்

---

† இ-ம். அஞ்ஞான சமஸ்காரமான அசுத்தவாசனையுள்ளவன் பெத்தனென்றும், ஞானசமஸ்காரமான சுத்தவாசனையுள்ளவன் முத்தனென்றுஞ் சொல்லப்பட்டதாம்.

* இ-ம். பிராரத்தம் புசிக்கும்படி முடிவாகவந்த தேகத்தைத் தரித்திருக்கு நிமித்தஞ் சுத்தவாசனையைத் தரித்தவன். இனிச் சநநத்தி லழுந்தானென்பதாம்.

§ இ-ம். வான்மீகமுனிவர் பாத்துவாஜருக்குத் தம்மா லனுக்கிரகிக்கப்பட்ட சுவானுபவமனது அபரோக்ஷமாம்பொருட்டு இராமனறிந்த சுவானுபவம் பரோக்ஷமாகு நிமித்தம், வசிட்டமுனிவ ருபதேசித்த கதைகளைச் சொல்லத்தொடங்கினதாம்.

‡ இ-ம். சித்தசுத்திவந்து அதனாற் சாதனசதுஷ்டயமுண்டாய், அதனாற் சற்குரு வெளிப்படுநிமித்தந் தீர்த்தயாத்திரைசெய்யும் புண்ணிய பரிபாகத்தினால் தனக்குத்தானே விருப்பமுண்டானதென்பதாம்.

களையும் காணவாசையுற்று என் மனது எண்ணியது.—முடிவில்லாமல் யாசிக்கப்பட்ட சகலமும் உம்மால் முடிவுபெறுததில்லை; அடியேன் முந்தினதாக விரும்பிக்கேட்ட வரத்தையுந் தேவரீ ரருளவேண்டுமென்று கேட்க, உலகம் புகழாநின்ற வசிட்டமுனிவரோடு தசரதரானவர் ஆலோசித்துச் சீக்கிரமாகப் போய்வாவென்று சொல்ல, மேகவண்ணனான இராமன் பிதாவினது பாதத்தினமஸ்கரித்து தீர்த்தயாத்திரைக்குப் பிரயாணமாகி, †—தம்பிமார்களுடனே சுபதினத்தில் பிரயாணப்பட்டுத் தமது கோசலமண்டலத்தைக்கடந்து நதிகளையும், தபோவனங்களையும், துறவிகளாச்சிரமங்களையும், பாலைவனங்களையும், சமுத்திரதீரங்களையும், மலைச்சார்புகளையும், இன்பமிகத்தரிசித்து,—தேவர்கள் புகழவும் மனிதர் தோத்திரஞ்செய்யவும் திரும்பி, தனது மேலான சிவபுரத்தை அடைகின்ற ஈசனைப்போலவும், தேவலோகத்தைப் பொருந்தாநின்ற தேவேந்திரனுடைய குமாரனாகிய சயந்தனைப்போலவும், தசரதமகாராசன் வாசஞ்செய்கின்ற அயோத்தியாபுரியில் அனைவரும் புட்பங்களைத்தூவித் துதிசெய்ய, இராமர் அடைந்து.*---தான் பார்த்த தேசாசாரங்களைச்சொல்லியும், உதயமாதற்குமுன்னமே சயனம்விட்டெழுந்திருந்து நித்தியகருமங்களைச்செய்தும், பிதாவான தசரதருடைய பாதங்களை நமஸ்காரஞ்செய்தும், நெடியதவமுள்ள வசிட்டர் முதலான முனிவர்களுடைய வசனங்களினால் ஞானநீதிபொருந்திய நானாவிதமான கதைகளைக் கேள்விப்பட்டும்,‡---பிதாவினுடைய வசனத்தின்படியே படைகளுடன் வேட்டையாடியும், பந்துசனங்கள் இஷ்டஜனங்கள் தம்பிமார்களோடும் போசனஞ்செய்து இரவைச்சுகமாகத்தள்ளி, குளிர்ச்சியான சந்திரனைப்போலவும், மதுரமான அமிர்தத்தைப்போலவும், அரசர்களுக்கு இனிமையைச் செய்தும் பதினைந்துவருடங்களைப் போக்கினர். அந்நாளில்,¶—தனது நிறைந்த வழகையுடைய சரீரமுழுது

(கஅ. தீர்த்தயாத்திரைக்குப் பிரவேசித்தல்.)

(கக. பின்னோர்களோடுந் தீர்த்தயாத்திரையின் மகிழ்ச்சியடைதல்.)

(உ0. மீண்டு நகர மெய்தல்.)

(உக. தின சரிதை காரணமாகவுண்டான குணங்களை யுரைத்தல்.)

(உஉ. இதுவுமது.)

(உங. இக்குண)

† இ-ம். புத்திரன் முந்தினதாக பிதாவினனுக்கிரகம் பெற்றுக்கொள்ளவேண்டிய விதிப்படிக்குச் சித்தசுத்திக்கேதுவான தீர்த்தயாத்திரைக் கனுக்கிரகம் பெற்றுக்கொண்டதாம்.

* இ-ம். ஸ்நானமுதலியவைகளைக் கிரமமாகச்செய்து வந்தாரென்பதாம்.

‡ இ-ம். சரிதை கிரிகை யோகமென்னு மிம்மூன்றுபாதமுங்கடந்து ஞானபாதத்தில் விருப்பமுற்றாரென்பதாம்.

¶ இ ம். சீவகாருணியமும் பாசவயிராக்கியமு முண்டானதென்பதாம். இதில் ஈசுரபத்தியும், பிரமஞானமு மமைந்து கிடைக்கின்றதெனவறிக.

ங்களுள்ள இராமனது வயிராக்கிய விலக்கணங்கூறல்

ம்சரற்காலத்திற் குறைந்துவரும் ஆற்றுச்சலத்தைப் போலத் தினந்தோறுங் குறைந்துவர, நெடிய கண்களையுடைய செவ்விய குளிர்ந்த முகமானது வண்டுகள் மொய்க்காநின்ற வெண்டாமரைப்பூப்போல வெளுத்துவர, ஓர்கரத்தினால் கன்னத்தைத்தாங்கிக் கொண்டு சத்தியாநின்ற வீரகண்டையைத்தரித்த பாதத்தையுடைய இராகவன் பதுமாசனத்தில் இருந்து,---சிந்தனை வயத்தனாகிச் செய்யத்தக்க செயல்களியாவையும் விடுத்துப் புத்திதளர்ந்து எவர்க்குஞ் சொல்லாதவராய் எழுதின் சித்திரத்தைப்போலச் சதாகாலமும் இருத்தலைப்பார்த்து, பரிசனங்கள் தனது பாதத்தில் வணங்கி வேண்டிக்கொள்ளமனது நொந்து பார்த்தற்கரிய தளர்ந்தமுகத்தையுடையவராய் நித்திய கன்மங்களைச் செய்தார். ‡-பிதாவான தசரதன் ஒருநாள் இராகவனை வரவழைத்துத் தன்மடியின்மேல் வைத்துக்கொண்டு வருத்தப்படுவ தென்னவென்று கேட்க, பாதத்தை வணங்கி வருத்தமொன்றுமில்லையென்று சொல்லியகன்றார். உலகம் புகழாநின்ற விசுவாமித்திர முனியானவர் இராஜசபைக்குவரவும் வணங்கித்தோத்திரஞ் செய்து மகுடத்தையுடைய அரசர்க்கரசனான தசரதன் ஆராதனைய விதிப்படி செய்து,† --அடியேன் சிந்தியாத காலத்திலும் கிருபையினாலெளிதாக வெழுந்தருளிய தேவரீரது மேலான தரிசனத்தினால் வினைகளனைத்தும்நீங்கி,சூரியனால்விகசித்தலையடைந்ததாமரைப்பூவுக்கொப்பானேன். இப்படிப்பட்ட ஒப்பற்ற அகத்தளப்போதுபடைந்திலேன். மழையின்றியகாலத்தில் வருந்தும் பயிரைக் குளிர்விக்கின்றமழையையும் குருடனடைந்த கண்ணையும் நின்காட்சி யொத்திருக்கின்றது.---இத்தேகத்தோடு ஆகாயகமனம் பண்ணுநெறி வந்ததுபோலவும், நீங்கியசீவன் அச்சரீரத்திற்புக மீளவந்தது போலவும், ஆரவாரிக்கின்ற பாற்கடலின்கண் ணுண்டாகிய தேவலோகத்தில் அக்கினிக் கோட்டைக்குள்ளிருக்கும் அமுதகலசமானது என்னிடத்தில் வந்ததுபோலவும், எமதுபிதாவாகிய தேவரீர் எழுந்தருளிய சுகமானது தேகமுழுமையும் கங்கையைப் போலக் குளிர்விக்

உச. நிராசையால் சாதன சதுஷ்டய முதித்தல்.

உடு. ஆசாரியரை அறிவிக்க விசுவாமித்திரரெழுந்தருளுதல்.

உசு. அரசனுநந்தித்தல்.

உஎ. இதுவுமது.

‡ இம். இராமரது விரத்தியினால் திரிகரணங்களு மெலிந்து, நான்கு சாதனமு நிறைந்து, குருதரிசனத்திற் கபேட்சையு முண்டாயிற்றென் பதாம்.

† இம். தீவராபக்குவத்தையுடைய இராமருக்கு விஸ்ராந்தி யுண்டாகும் பொருட்டு யாகசம்ரக்ஷணையை முன்னிட்டு முனிவந்ததாம்.

உஅ. முனிவந்த கருமத்தை யரசன் வினவுதல்.

கும்படி யிருந்து எனதுள்ளத்தின் றளர்ச்சியெல்லாம் நீங்கினது.¶—இராகத்துவேடங்களும், விடயத்துக்கஞ்சுதலும், நிலையின்மையும், வீணான கோபமும், கொடிய சநநவியாதியுமில்லாத மகாதவத்தையுடைய முனியே! இவ்விடத்தில் தேவரீரெழுந்தருளிய வரவானது அதிசயமாம். எது நீர் நினைத்ததோ அதைத்தர விசைந்தே னறிவியுமென் றரசன் கேட்டான். மேலான விசுவாமித்திரமுனிவர் தேகத்தில் மயிர்க்குச்செறிந்து சொல்லுவார்.‡—அரசர்கள் பணிய வாழ்கின்ற தசரதமகாராஜாவே! ஆசிரியராகிய வசிட்டரது வாக்கியத்தைத் தடுக்காதவரே! மேலான சூரியவமிசத்தில்வந் துதித்தவராதலால் உமக்குத் தகுந்த வசனத்தைச் சொன்னீர். முதன்மையாகிய சிவந்த வக்கினியையுடைய யாகத்தை முயற்சிப்பதற்கு விக்கினமாய்த் தீமைசெய்யாநின்ற இராக்ஷதர்களுக்குச்சகிக்கமாட்டாமல்,—நீர்கொடுக்கத்தக்கவரென்று உம்மை யடைந்தேன். பயப்படுத்துகின்ற வியாச்கிரமத்தைப்போலப் பலமுள்ளவன், தேவேந்திரனைப்போல வீரமுள்ளவன், மயக்குகின்ற இராக்ஷதர்க் கியமனானவன், சத்தியசந்தனென்னும் உம்முடைய முந்தின குமாரனான தெளிவுபொருந்திய இராகவனென்கின்ற குழந்தையைத்தருவாய்.

உக. அவசியஞ் செய்ய வேண்டிய வேள்விக் குதவி வேண்டல்.

௩௦. நிருதர்க்கு இயமனான விராகவனைக் கேட்டல்.

௩௧. இராமனது சத்தியை யுரைத்தல்.

வெல்லுதற்கரிய இராக்ஷதசேனையை இராகவனே எளிதாகக்கொல்வான். அரசனே! பாலனென்கின்ற அச்சத்தை விட்டுவிடு. என்னையொத்த முனிவர்கள் வருத்துஞ் சந்தேகமான காரியத்தில் மனம்வையார்கள்.—இயாவரினுஞ்சிறந்த இராமனதுபெருமையை யானும் வசிட்டர் முதலிய வாசிரியர்க ளறிவார்கள். பெருமையையும், தருமத்தையும், கீர்த்தியையும், வேண்டுவையாயின், அம் மகா குணசாலியான இராமனைக்கொடும். பெருந்தகைமையை யுடையவர்கள் இரப்பவர்க்குக் கொடாத பொருளுண்டோ? கொடுப்பின் சௌரியமுள்ள இராக்ஷதர்கள் இவனால் நாசமடைவது சத்தியமென்று சொன்னார்*— விசுவாமித்திருடைய வசனத்தைக்கேட்டுத் தசரதன் இரண்டு நாழிகைநேரம் வருந்தி, தனியனான ஒரு

௩௨. இராமன் பெருமையை யறிவித்தல்.

௩௩. புத்திரனது ஸ்வரூபந் தெரியாமல் தசரதன் பரதவித்துக்

¶ இ-ம். முனிவரவிலுண்டான சுகத்தின் பெருமையைச் சொல்லியதாம்.

‡ இ-ம். புத்திரனது மனோதுக்கத்தைத் தீர்க்கு மந்தரங்கமுடைய தசரதமகாராஜன் விசுவாமித்திரமுனிவர் கருத்தின்படி நடக்கச் சம்மதித்ததாம்.

* இ-ம். இராமன் இராக்ஷதசங்காரார்த்த முதித்தவரெனச்சூசகமா யறிவித்ததாம்.

பாலன், பதினைந்து வயதுள்ளவன், யுத்தஞ் செய்தறியான், நடுக்கஞ்செய்யும் வல்லமையையுடைய இராக்ஷதர்களுடன் போர்செய்ய வலியில்லாதவன், சத்துருக்கள்கோட்பாடறிதலிற்றெளிவில்லாதவன்; ஆதலால், சதுரங்க சேனையோடுபோய் அடியேனே அவ்விராக்ஷதர்களோடரியயுத்தஞ்செய்வேன். †—மைந்தரில் முதல்வனாகிய இராமன் பிரிந்தால் மற்றமூன்றுபேருமுயிருடன் வாழார், நானுமினிய உயிரோடும் வாழமாட்டேன், இப்போது இராவணன் நீங்க மற்ற யாவராயினும் அவர்களுக்குப் பயப்படேன், முன்பு இராவண யுத்தத்துக்கும் பயப்படேன், பகைவர் முதுகுகாட்டப் போர்செய்யும் வீரர்களுடைய வீரங்கள் நிலையாயிருக்குமா.¶— காலவேறுபாட்டினால். சகல வஸ்துக்களும் மயங்கி வேறுபடும், வலியோரெளியராவர், வயோதிகத்தினால் இனிச் செய்வதியாதென்றுமிகவும் துயருறுகின்றேன் என்றுசொன்னான். அதற்கு முனிவர் கோபித்துச் சொல்வார். ‡—

௩௪. புத்திரவாஞ்சையை யறிவித்தல்.

௩௫. இக்காலத்தில் இராக்கதர்களைக்கொல்லுஞ் சத்தி எங்களுக்கின்றெனல்.

௩௬. பயபத்தியுண்டாகும்பொருட்டுமுனி கோபித்தல்.

நீ விரும்பியதைக் கொடுத்தேனென்று சொன்ன சத்தியந் தவறினாய், போரிலுயர்ந்த கேசரிபோன்ற அரசனை நீ அற்பமிருகத்தி னியல்பைச்செய்தாய், மனைவிபுத்திரர் முதலிய சுற்றத்தாரோடு நீவாழ்வாய், நாமேகுதுமென்று விஸ்வாமித்திரர் கோபிக்க.*—

௩௭. வசிட்டர் பிறதிக்ஞையைக் காக்கும்படி ஞாயங்கூறல்.

அதைப்பார்த்து வசிட்டமுனிவர், மனுவமிசத்திற் பிறந்தவனாய்த் தசரதச் சக்கிரவர்த்தி யென்னு நாமத்தைப் பெற்றிருக்கின்ற நீ சொன்ன சத்தியத்தைக் காப்பாற்றிக்கொள், உன்வாக்குப் பிறழுமானால் வேறே யார் காக்கவல்லவர். திருத்தஞ்செய்து உம்மால் நிறுத்தப்பட்ட இராஜநீதியை பூமியிலுள்ளவர்கள் கடவாமற்காப்பாராயின், இராஜாவே நீகடக்குங்

† இ-ம். புத்திரவாஞ்சையினால் அவனையனுப்ப மனமில்லாமல் விசனமடைந்தவராய், இராக்ஷதர் யுத்தத்துக்குச் சத்தியில்லாதிருந்தும் இருப்பதுபோலச் சொன்னதாம்.

¶ இ-ம். அறுபதினாயிரம்வருடஞ் சென்றபின்பு யாகத்திலுற்பவமான புதல்வனைப்பிரிந்தால் நமதுஉயிரும் பிரியுமென்னும் வருத்தத்தைமுனிவருக்கிரக்கம்வரும்படி யறிவித்ததாம்.

‡ இ-ம். இக்காலம் பலமுள்ள அரக்கருக்கு இராமனையனுப்ப மனமில்லையென்பதைக் குறிப்பாற் காட்டினதாம்.

* இ-ம். துட்டநிக்கிரகஞ் செய்விக்கும்படியான கோபமுண்டாயிற்றென்பதாம்.

௩௮. குருவாக்கியபரிபாலனம். தன்மைத்தோ.†— அக்கினியினுல் இரக்ஷிக்கப்பட்ட
வமுதத்தைப்போல இவ்விஸ்வாமித்திரரிஷி இராக
வனை மிகவுங்காப்பார், போரையே வாழ்வாகவுடைய
இராக்ஷதர்கள் செய்கின்ற தீமைநெருங்காது என்று
வசிட்டமுனி சொல்லக்கேட்ட வலிய புயத்தை
யுடைய தசரதமகாராஜனனவன், பெரியோர்கள்
கிருபையினுற்கிடைத்த இராமன் என்னசெய்கிரு
ரென்று இராமனதுபரிசனங்களைக்கேட்க, ஏவலாளர்
கையைக்குவித்துக்கொண்டு[தீர்த்தயாத்திரைசெய்து
வந்தநாள்முதலாக அவர் அடைந்திருக்கின்ற துக்கத்
௩௯. இராமரது விரத்தியைக் கூறல். தைச் சொல்லத் தொடங்கினுர்கள்.¶—நாங்கள் பாத
த்தைவணங்கி வேண்டிக்கொண்டபின்பு பழமையான
நித்தியகருமங்களைச் சிலவற்றைச் செய்கின்ருர்;இதத்
தைக்கொடுக்கின்ற மகளீரும், செல்வமும், வீடு
மித்தை யாதலினு லென்னபிரயோசனமென்கின்ருர்;
வெள்ளிய நல்லவஸ்திரமும், அறுசுவையுண்டியும்,
குளிர்ந்த சலமுதலியவற்றில் கருத்தில்லாதிருக்கின்
ருர்; செருக்குநீங்கிய துறவினர்களைப்போல அபிமா
னத்தையும், இராஜப்பிரவிர்த்தியையும், சுகங்களிற்
சந்தோஷித்தலையும், துக்கத்தில் வருந்துதலையும் நீக்கி
௪0. இதுவுமது யிருக்கின்ருர்.—துன்பமில்லாத சீவன்முத்திப் பத
த்தை நீங்கிய நானுவிதமான செய்கைகளினுல் ஆயு
ளானது கழியுமென்று துக்கத்தோடுஞ் சொல்லு
கிருர்; நிறைந்த சம்பத்தானது ஆபத்துக்கிடமாயிருக்
கின்றதென்று அவாவைவிட்டுச் சகலருக்குங் கொடுக்
கின்ருர்; வியாபித்திருக்கின்ற நினைவை யாங்களறிந்
திலேம், இவ் விளவரசருக்கு எவர்கள் அரசிற்குரிய
நற்குணங்களைகற்பிக்கவல்லவர்கள்,இப்போதுதொட
ர்ந்திருக்கின்றசெய லிதுவென்று வணங்கிச் சொன்
ஞர்கள். முனிவரதைக்கேட்டுச் சொல்லத்தொடங்கி
௪௧. முனிவர் இராமனபிப்பிராயமறிவித்தல். ஞர்.‡—இம் மகத்தானச் செல்வமுள்ள இராமனைக்
கூட்டமாயிருக்கின்ற மான்களில் தனித்தமானைக்கொ
ண்டுவருவதுபோல நீங்கள் இவ்விடத்திற் கொண்டு

† இ-ம். வாக்கிய பரிபாலனஞ்செய்யும் மாபிற்குரிய நீ ரதை யெம்படியுங் காக்கவேண்டு மென்பதாம்.

¶ இ ம். இரகுவம்மிசத்துக்கு நல்லகதியுங் கீர்த்தியு முண்டாகும்பொருட்டு இராமனை முனிகாப்பதும் அவன் அரக்கரைக்கொல்வதும் நிச்சயமென்றனுப் பும்படி தசரதருக்கு வசிட்டமுனி குறிப்பினுற்சொல்ல, அப்படியே சம்மதித்த தாம்.

‡ இ-ம். இராமனது விசாரணையாலுண்டான நிராசையை விசனமாகக் கருதிச்சொன்னதாம்.



வாருங்கள், இப்போ துண்டாயிருக்கின்ற இந்த
மகாமோகமானது ஆசையினுலும் ஆபத்துக்களினு
லும் வந்ததன்று, சொல்லுதற்கரிதாகிய இராகத்தினு
லும் விவேகத்தினுலும் வராநின்ற ஞானசம்பத்தாம்,
குற்றமற்ற ஆத்மவிசாரணைக்குரிய பல யுத்திகளால்
மயக்கநீங்கி எங்களைப்போல பிரமத்தில் விஸ்ராந்தி
௪௨. இராமர் சபைக்கு வருதல் யடைவர்.†—இராமர் மனது பூரணத்தையடைந்து
பெருமையோடும் மனிதர்களுக்குத்தகுந்த அனைத்
தையும் இன்புற்றுச் செய்வாரென்று முனிவர்சொல்
லுகின்ற சமயத்தில், ஸ்ரீராகவனும் பிதாவை நமஸ்
கரிக்கும் பொருட்டுச் சபைக்குவந்து பிதாவினுடைய
ஆரவாரிக்கின்ற வீரக்கழலணிந்த பாதங்களையும்,
வசிட்டர் விசுவாமித்திரர்களுடைய பாதங்களையும்,
கலைஞானமுள்ள பிராமணர்களுடையபாதங்களையும்,
வித்தியா குருக்களுடைய பாதங்களையும் வணங்கி,
தனதுபயபாதத்தில் நமஸ்கரித்தவர்களை முகமன்
வசனத்தினுலும், சிரக்கம்பத்தினுலும், கண்சைகை
௪௩. முன்பிதா போதித்தல். யினுலும், அங்கீகரித்தார்.‡— மடியின்மேல் வந்திரு
ப்பாயென்று அரசன்சொல்ல, வராமல் மடித்தவஸ்
திரத்தை பூமியின்கண்விரித் ததிலிருந்த மாத்திரத்
தில், அரசனேக்கி மேலான வறிவையடைந்த புத்தி
ரனே! முடிவில்லாத நற்சுகங்களிருத்தற்கு நினைக்கத்
தகுந்த ஸ்தானமான நீ மூடர்கள்போல நொடிநேர
மாகிலும் மனஞ்சோர்ந்து பார்த்தற்கழகான தேகம்
௪௪. இதுவுமது மெலிந்து துக்கிக்கவேண்டாம்.¶— முதியோராயும்,
பிரமரிஷியாயுமிருக்கின்றநம்மாசாரியராகியவசிட்டர்
சொல்லிய நிருவாணபதத்தை, ஆசையைப் பொருந்
தாத மனதையுடைய உன்னையொத்தவர்கள் அடைந்
தார்கள் நீயேன் வீணுக வருந்துகின்ருய், துன்பத்
தைச்செய்யாநின்ற வாபத்துக்களனைத்தும், வலிய
மோகநீங்கினுல் உனது பக்கத்திலும் வரமாட்டா
தென்று மகா மகுடத்தையுடைய அரசர்க்கரசனுகிய
தசரதன்சொன்னபின்பு, வசிட்டமுனியானவர்இவை

† இ-ம். இராமன் வருந்துவது நிருவாணசுக மடைவதற்குக் காரணமேயன்றி வேறின்றென்புதாம்.

‡ இ-ம். இராமன் சீவன்முத்தியைப்பெற்றுப் பூரணமனதுடன் பூமிபாலனஞ்செம்யும்பொருட்டுப் போதிக்க வழைப்பித்ததாம்.

¶ இ-ம். சுகமிருத்தற்கு ஸ்தானமான வறிவுள்ளவன் துக்கிக்கவேண்டுவதின்றென்பதாம்.

சரு. விசுவாமித்திரர் இராமர் மனோதுன்பத்துக் கேதுவானசிந்தையைநான்குவிதமாகவினவுதல்.

சசு. முனிவர் வினவுக் குத்தரஞ் சொல்லத் தொடங்குதல்.

சஎ. சிந்தாஸ்வரூபமும் அதனளவும் அதனிருப்பும் அதன்காரணமுமான நான்கு சங்கைக்குத்தரஞ் சொல்லி இதனாற் பயனின்றெனல்.

சஅ. இதுவுமது

களைச் சொல்லத்தொடங்கினர். §— ஜயித்தற்கரிய கொடிய முயற்சிக்கிடமாகிய விடங்களென்கின்ற சத்துருக்களை எளிதில் ஜயித்த வதிசூரனே! கலங்குகின்ற வறிவில்லாதவர்களுக்கு உரியதாயிருக்கின்ற அஞ்ஞானநிறைந்த மோகசமுத்திரத்தில் வீழாதேயென்றும், நல்லவீட்டை கீழெலியறுத்தழிக்கு மழிவைப்போல நீ யோகத்தினாற் றுன்பப்படுங் காரணமென்ன சொல்வாயாகில் அதுநீங்கி நீ இச்சித்திருப்பதெதுவோ அதனை யடைவாயென்றும், †— திரும்பி வாராமல் மனோதுக்கம் நீங்கும் சொல்லென்று விசுவாமித்திரரிஷிகேட்க, மேகத்தினது சத்தத்தினால் உஷ்ணநீங்கிக் களிப்புற்ற மயிலைப்போலத் துக்கநீங்கி இராமர் சந்தோஷித்து அறியாமையையுடைய வென்னைக் கிருபாவடிவமும் சிரேட்டமு முள்ளவராகிய மகாதவத்தையுடைய விசுவாமித்திரரே! தேவரீர் சொல்லென்று முன்சொல்லிய படியால் சொல்லுகிறேன் கேட்டருளுவீராக; பெரியோர்கள் வாக்கியத்தைத் தடுக்கின்றவர் யாவரென்று சொல்லத்தொடங்கினர். ¶— பிதாவாகிய இத்தசரதனது மனையிலுதித்து விரத்தியடைந்து சகலவித்தைகளையு மப்பியாசஞ்செய்து நல்ல வாசாரப்படிநடந்து மேலான புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப் பிரதக்ஷணஞ்செய்துவரவும், இந்நெடிய ஜகப்பிராந்தியில் ஆசைகளனைத்து நீங்கிற்று. இச்சகத்தி லெவ்வளவேனுஞ் சுகமில்லை நாசமடைதல் ஜநிப்பதற்கேயாம், ஜநிப்பது திரும்பமரணத்துக்கேயாம், ஆதலால், சகலமு மித்தையாம்.— எவ்வஸ்துக்களும் தீமையாயும், ஆபத்துச் சேர்வதற்குஸ்தானமாகியும், ஒன்றற்கொன்று சம்பந்த மில்லாததாகியும், மனோசங்கற்பத்தினால் சம்பந்தமாயும், இருப்புச்சலாகையைப்போல வன்மையாகியும், மஹாசம்பத்துக்கு ஸ்தானமாகின்றன. ஆதலால், விடயபோகத்தினாலும் இராச்சியத்தினாலும் என்னபிரயோசனம். அகம்பாவமெப்படிப்பட்டது வந்திருப்பதாகிய தேகமெப்படிப் பட்டதென்று விசாரிக்கில், ஆத்மவிதி

§ இ-ம். ஆசிரியர் உபதேசத்தினால் விளங்கு மாத்மானுபவத்தினால் மோகத்தை வெல்லவேண்டு மென்பதாம்.

† இ-ம். துன்பத்தை நிவிர்த்திப்பதின்பொருட்டதற்கேதுவைவினவினதாம்

¶ இ-ம். துக்கத்தை நிவிர்த்திசெய்து பரமசுகத்தை யடையும்பொருட்டு உத்தரஞ் சொல்வதாம்.



சக. பயனின்றியிதனாற் றுன்பப் படுங்காரணமுரைத்தல்.

‡ ருo. சம்சாரந் துன்பமென்று உரைத்து இத்துன்பத்தைநிவிர்த்திப்பிக்கும்பொருட்டு அதை ¶ தனமுதலிய பதினொரு விததோஷமாகக் காண்குதலை இப்பிரகாணத்திற்கூறுவான்றொடங்கி இச்சம் சாரத்துக் காரணமான தனதோஷத்தை முதலிற்கூறுகின்றது.

§ ருக. தனம் யாகாதி கிரியைகளை முன்னிட்டுச்சுகத்தைக்கொடுக்குமெனில் அப்படியுங் கொடாதெனல்.

ரித்தமான விச்சகலமு மித்தையேயாம். †— அனைத்து மித்தையாதலால், இவற்றி லியா ரெதைப்பெற்றூர்களென்று இப்படி விசாரிக்கின்ற எனக்கு, மார்க்கத்தில் நடப்பவர்க்கு அலைமோதாநின்ற கானற்சலத்தைக் கானலெனக் கண்டுழிச் சலப்பிராந்தி வாராத தன்மையைப்போல, வஸ்துக்களனைத்திலும் இச்சையுண்டாகாது, போதிக்கப்படாத விவ்விடய துன்பநீங்குகின்ற மார்க்கத்தை நாடுமிடத்தில் முதிர்ந்த மரமானது தானடைந்த அக்கினியினால் வேகின்றதுபோல வேகிறேன், தீர்க்கக்கூடாத வெவ்விய மோகமானது கண்டத்தை யடைகின்ற கல்லாகும். ‡— உறவினரால் நிந்திக்கப்படுமென்று பயந்து இத்துன்பத்தை வாய்விட்டழுதாற்றிலன், மக்களையுடைய சம்சாரமானது தலைமையான ஆபத்துள்ளவர்களுக்குச் சுகமாகாததுபோல, சிந்தாசமுகஞ் சுழலுதற்கு இடமாயிருக்கின்ற திரவியமானது ஆனந்தத்தைக் கொடாது, கீழ்மக்களெனவும், மேன்மக்களெனவும் தாரதம்மியம் பாராமல், வணங்கினவர்கள் வசத்திற் சாருகின்ற வேந்தரைப்போல, கதியாயடைந்தவர்களிடத்தில் சேருகின்ற செல்வமானது உக்கிரிஷ்டமானாலும் மகான்களை நிந்திப்பதற் கேதுவாதலின் சிறப்பில்லாததாம்.§— தனத்தைக்கொண்டு செய்யுங் கிரியா பேதங்களால் இராகத்துவேடங்களென்னும் விஷத்தினால் சத்துக்கள் வாக்கியாமுதங்களின் இரசமாகிய பிரியமும் கைப்பாக நீக்குவதா ¶யிருக்கின்ற செல்வமென்னுஞ் சுழல்காற்றினால் பனியைப்போல அறிவு மயங்காதாரார், பரசனங்களும் சுசனங்களுமாகிய இருதிறத்தவர்களுக்கும் குளிர்ந்தினிமையுள்

† இ-ம். பாவமே ரூபமாகியும், விடயவஸ்துக்களே யளவாகியும், ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாததே இருத்தலாகியும், சங்கற்பமே காரணமாகியுமிருக்கின்ற இச்சமுசாரத்தை விசாரிக்கின் பயனின்மையு மித்தையுமாயிருத்தலின் எப்படி நீக்கிக்கொள்வோமென்னுஞ் சிந்தையைச் சொன்னதாம்.

‡ இ-ம். ஒருவருக்குஞ் சுகத்தைக்கொடாத இம்மோகத்தினால் வீணாக வருந்துகின்றே னென்பதாம்.

§ இ-ம். சிந்தனைக்கேதுவாயுஞ் சஞ்சலமுள்ளதாயு மூடமாயுமிருக்கின்ற இத்தனத்தி லென்னசுகமென்பதாம்.

¶ அவையாவன :-- தனம், ஆயுள், அகங்காரம், மனது, ஆசை, தேகம், பாலியம், எவ்வனம், வனிதையர், வார்த்திகம், காலம் என்பனவாம்.

௰௨. இத்தனம் அனர்த்த நிமித்த மேயன்றி யர்த்த நிமித்த மாகாதென முடித்து, நிறுத்த முறையான் இத்தனத்தை யனுபவிக்கும்பொருட்டு வேண்டிய வாயுளைப்பின்வைத்து அஃதொரு கணமு நிலையென்றெனத் தூஷித்தல்.

௰௩. கன்மிகளுக்காயினுஞ் சுகங்கொடுக்குமெனில் அவர்க்குங்கொடாதெனல்.

௰௪. ஆயுளினிச்சை வியர்த்தமாமெனல்.

ளவரும் செய்நன்றியறிபவரும் அறிவுடையவரு மெளியவர்களும் வீரர்களுமின்னனஞ் சமானமில்லாதவேனையோரும் செல்வத்தால் புழுதியினுன்மறைப்பட்டுஒளிருகின்ற விரத்தினம்போ லீனமடைவார்கள். ¶—குற்றமற்ற செல்வர்களும் சொற்றவருத வீரர்களும் சமதிருஷ்டியாய்ப் பார்க்கு மரசர்களுமாகிய இவர்கள்மிகவும் அரியர்கள், மனதைக்கிரிகிப்பதாயும் கணத்தி னசிப்பதாயு மிருக்கின்ற தனமானது சர்ப்பஞ்சூழ்ந்த கூபத்திலுள்ள கொடியினரும்பைப்போல நிட்பலமாம். [ஆயுள் தூஷணம்] தலைகீழா யிருக்கின்ற இலையினுனியில்தொங்கிய மழைத்துளிக்கொப்பாகிய பிராணனுனது உன்மத்தரைப்போலக் காலமல்லாத காலத்தில் தேகத்தைவிட் டோடிப்போகும். †—வளர்கின்ற வைம்புலமென்னும் சர்ப்பந்தீண்ட, மனந்தளர்பவர்களும் உண்மைஞானம் அடையாதவர்களுமான இவர்களுடைய ஆயுளானது தளர்வடைவதற்குக்காரணமாம், மட்டிடப்படுஞ் சரீரத்தை மெய்யென்றழுந்தி மோகமென்கின்றமேகத்தில் மின்னலைப்போலு மிருக்கின்ற இவ்வாயுளில் சந்தோஷியேம், நிரந்தரமான வந்தரத்தைப் பிளக்கவும் சஞ்சலமுள்ள காற்றைப்பிடிக்கவும் தோன்றித்தோன்றியழியாநின்ற அலைகளைக்கோக்கவும் இலேசாம், இவ்வாயுளை நிலையென விரும்பக்கூடாது.§—சரற்காலமுகிலைப்போலவும், நெய்யில்லாத தீபத்தைப்போலவும், கடலின் அலையைப்போலவும்,நிலையாகக்கெடுகின்றதாயும், எவ்வளவேனும் விஸ்ராந்தியில்லாத சிந்தையாயும், விஸ்தாரமுள்ள மூடமாயும், புருடார்த்த சூனியமாயு மிருக்கின்ற ஆயுளின்பிரயோசனத்தை ஆராயில், ஒட்டியிருக்கின்றவுடலையுடைய இப்பிக்கு உயிரைப்பிரிக்கின்ற கருப்பத்தைப் போல நீக்கக்கூடாத

---

¶ இ-ம். செல்வம் சுவர்க்கபோக மமதையினுல் ஆகமார்த்தத்தைக் கிரிகிக்கவொட்டாமல் வருத்துமென்றும், அஃதுள்ளவனில் லவ னிலக்கணம் இன்னதென்றுங்கூறினதாம்.

† இ ம். உயர்ந்தோரை நிந்திக்கச்செய்யுஞ் செல்வமும், அதையனுபவிக்குமாயுளுந் துன்பமேயென்பதாம்.

§ இ-ம். கன்மிகளுக் காத்மவிவேகத்தைக் கொடாமல் ஜநநத்தைக் கொடுப்பதுமன்றிக் கணமு நிலையில்லாததினுல் இவ்வாயுளிற் சுகமின்றென்பதாம்.

௫௫. விஸ் ராந்தியடையு மாயுளே சபலமாமெனல்.

துன்பத்தை யுண்டாக்கும். †—அடையத்தக்க வாத்மஞானத்தையடைந்து இனித்துன்பநீங்கி ஆநந்தமானது அளவற்றதாய் கீழான விருக்ஷங்களும் மிருகங்களும் பட்சிகளுமாகிய இவைகளைப்போல வீணுககாலத்தை போக்காமல் தடையற்ற ஆத்மவிசாரத்தால் சீவிப்பதே மேலானவாயுளாம். மறுசநநத்தை ஒழிந்தவருடைய சநநம்மேலானதாம் மற்றவனைத்தும் கிழக்கழுதையின்பிறவியாம்.

௫௬. பய னின்றியவாயுளே சுமையாமெனல்.

‡—விவேகமில்லாதவருக்கு நூலானது சுமையாகும்; உண்மைஞானமில்லாதவருக்கு சரீரஞ்சுமையாகும்; சாந்தமில்லாதவருக்கு மனஞ்சுமையாகும்; காமாதிதோஷ முடையவருக்கு ஆத்மஞானஞ் சுமையாகும்; அழகியதேகமும் ஆயுளும் மனதும் புத்தியும் அகங்காரமும் தொழில்களுமாகிய அனைத்தும் அறிவிற்சுகம் அடையாதவர்களுக்குகீழ்மக்களெடுச்குஞ்சுமையைப்போலதிரண்டசுமையாகும்.

௫௭. இவ் வாயுள்துன்ப நிமித்தமே யன்றிச் சுகநிமித்த மன்றெனமுடித்து நிருத்த முறையான் அவ்விரண்டிலுங் கருத்தா போக்தாவென்னு மபிமானமுண்டாதலா லதன்பின் அகங்காரம் வைத்து அதையுந்தூஷித்தல்.

¶—எவ்வனவாயுளானது சிலநாள்தேகத்தில் பழகித்தூர்ச்சனருறவை விடுகின்ற ஞானிகள் தன்மையைப் போலப்பிரியும், இன்பமும் நிலையும் நிலைபெறாமல் நசிப்பதற் கிடமாயிருக்கின்றவாயுளைப் போலத்தீதானது வேறொன்றில்லையாம். [இனியகங்காரதூடணம்] துன்பமானமோகத்தினால்விருதாவாகவுண்டாய் எவ்விடங்களிலும் விருதாவாக நிறைந்திருக்கின்றதான தீமையாகிய மித்தையான வகங்காரமென்னும் சத்துருவினால் அச்சப்படுகின்றேன் §—

௫௮. மித்தையாவஸ்துக்களைநானென்றபி மானிக்கும் அகம்பாவத்தாற் கலங்குகிறேனெனல்.

மனோதுக்கமும்ஆபத்துகளும் விருத்தியாகின்ற வியாபாரங்களும் அகங்காரத்தினா லுண்டாகும்; இதைப் போலப் பெரியசத்துரு வேறில்லை; வெகுகாலம் சத்துருவான இவ்வகங்காரத்தை அடைந்து கலங்குகின்றேன். அன்னத்தோடு சலத்தையும் புசியேன்; அரியபோகத்தை சொல்லுவதென்ன; அகங்காரஞ்

† இ-ப். கணமுநிலையின்றி விரும்பினவர்களுக்குத் துக்கத்தைக் கொடுக்கின்ற ஆயுளில் என்னபிரயோசனமென்பதாம்.

‡ இ-ம். ஆத்மப்பிரயோசனத்தை யடைந்ததிற் சீவிக்குமாயுளைத்தவிர மற்றதிலென்ன சுகமென்பதாம்

¶ இ-ம். அறிவிலின்ப மனுபவியாமல் அநாத்மாவான சகலமு மியானெனதெனத் தாங்கி வருந்துகின்றவ னாயுளி லென்னசுகமென்பதாம்.

§ இ-ம். பயனின்றி தேகத்தைச் சுமந்துகெடுகின்ற வாயுளில் எப்போதுஞ் சுகமில்லையென்றும், அதையபிமானித்த வகங்காரத்திலென்ன சுகமென்றுஞ் சொன்னதாம்.

சேர்ந்த நித்தியகன்மங்களும் யாகங்களும் புசிப்புக ளுமாகிய எல்லாமித்தையேயாம்; இவ்வகங்காரமா னதுவிடுதலேதத்துவமாம். ¶—அகங்காரமாகியமே கம்எம்மட்டிருக்கின்றதோ இச்சையென்னும் மலேமல் லிகை அம்மட்டும் விருத்தியடையும்; மிகுந்த துன்ப மாகிய இந்தவகங்காரத்தினது செயலேவிட்டும்என்னை யறியாமையினுல் மிகவும் வருந்தினேன்; உலகத் தில் ஆபத்துக்கு ஸ்தானமாயும் நிலேயில்லாததாயும் மனதின்கண் ணிருப்பதாயும் உன்மத்தமாயும்முடிந்த விசாரணையும் அறிவுமில்லாத அகங்காரமானது தீரும்படி அநுக்கிரகிப்பாய்.†-இராகாதி தோடங்க ளுக்குச்சிதைந்து பெருங்காற்றி லகப்பட்ட பெரிய மாபிலின் இறகைப்போல, சாதுசங்கத்தினின்று நீங் கிச் சஞ்சலிக்கும் நகர்நாய்போல் நெடுந்தூரம் மனது விருதாவாக விடயங்களிற் சுழலும்பயனுனது அற்ப முஞ்சித்தியாது; காப்புற்ற பூங்குடலேயானது சலத் தை தன்னிற்றரியாததுபோலஅரியதிரவியங்கிடைத் தாலும் களிப்புற்று வுட்கொள்ளாயல் தீயமனமானது சுழலும். ‡—ஆசையென்னு மில்லாளின் பின்ருெ டர்கின்ற மனமென்கின்ற கோரமுள்ள நாயானது, பிணத்தைப் பிடுங்கித்தின்னுந் தன்மையைப்போல அறிவின்மைப் பொருந்தியவென்னை பிடுங்கிப்புசிக் கும்; அடிக்கின்ற சண்டமாருதத்தினுல் சின்னுபின் னமாய் முறிபட்டெழுந்த திரணத்தைப்போல மயக் கமும் துன்பமும் அடையும்பொருட்டு மனமானது மகாசூனியத்தில் 'விழும்படி அதிதூரத்தின் மலங் கும்படி யென்னைத்தள்ளிவிடும். §—காரணமில்லாத மித்தையாக நிறைந்த உருவமாய் விசாரணையால் வேறுபடாநின்ற கொடிய மனமானது பிசாசம்பற்றிய பாலரைப்போல என்னை நானுவிதமான விருத்திக ளிற் கூட்டிவிக்கும்; பூமியினின்று நீங்கி பாதா ளத்துக்குச் செல்லும் பாதாளத்தினின்று நீங்கி பூமிக்கு வரும் கள்ளமன மானது கிணற்றிற்

ருக. அகம்பாவ நீங்கும்வகை வினு வுதல்.

சுO. அகங்காரத் தைச்சொல்லி நிறு த்த முறையான் அவ்வகங்கார வசத் தாற்சங்கற்பவிகற் பாத்மகமான மன துண்டாதலா லத ன்பின் மனதை வைத்ததையுந் தூஷித்தல்.

சுக. மனம் இச் சாவசத்திற் சென் று என்னை வருத் துகின்ற தெனல்.

சுஉ. மித்தையா னமனம் என்னைப் பலகன்மத்திற்றள் ளி வருத்துகின்ற தெனல்.

¶ இ-ம். மனேதுக்கமுண்டாவதற்குக் காரணமாகிய நித்தியகன்ம முதலி யவற்றிலகப்பாவஞ்செய்யு மித்தையான வகங்காரத்தி லென்னசுகமென்பதாம்.

† இ-ம். ஆசைக்குப் பீசமாயும், ஆபத்துக்கு ஸ்தானமாயும், மூடசிரேட் டமாயு மிருக்கின்ற வகங்காரத்திலென்ன சுகமெனமுடித்ததாம்.

‡ இ-ம். பிரயோசன மொன்றுமில்லாமல் வீணுகச்சுழல்கின்ற மனதினு லென்னசுக முண்டாமென்பதாம்.

§ இ-ம். மோகத்தையுண்டாக்கி வீணுகவென்னை வருத்துகின்ற வீச்சாவச மான மனதினு லென்னசுக மிருக்குமென்பதாம்.

கிடக்கின்ற மரத்தை நைந்தகயிற்ருல் கட்டி யெடுப்பதுபோல என்னை யுயர்வுதாழ்வான விருத்திகளிற் றள்ளும். ¶— விடப்போன்ற மனமென்னும் வலிய பேயானது அக்கினியிலுங் கொடுமையாம்; மலைகளைக்காட்டிலுங் கடத்தற்கரியதாம்; நீண்டவச்சிரத்திலும் வன்மையாம்; வாரியைக்குடித்தாலுங் குடிக்கலாம், மகாமேருவை யடியோடே பிடுங்கினுலும் பிடுங்கலாம், சுடாநின்ற அக்கினியை விழுங்கினுலும் விழுங்கலாம், இம்மனதை ஓர் நிலையினு நிறுத்தக் கூடாது; விடயங்களனைத்து முண்டாவதற்குக் காரணமாம்; நசிக்காநின்றஜகமானதுஇம்மனதுண்டானுலுண்டு, இல்லையானுலில்லையாம்; ஆதலால்இம்மனதை நசிப்பிக்கவேண்டும். *-மலையிலுண்டான காடுபோலச் சுகதுக்கங்களாகிய இவை யாவும் மனதிலுண்டாகும்; குற்றமற்ற விவேகத்தினுல் மனநசித்தால் அச் சுகதுக்கங் கெடுமென்று மறிந்தேன்; [ஆசாதூஷணம்] கடினமான மோகமென்கின்ற கறுத்த இருட்டினையுடையசெயலிலமைதிபிறவாதஆசையென்னுமிராத்திரியில் ஆத்மாகாயத்தில் காமக்குரோதமென்கின்ற கோட்டான் கூட்டமானது விளையாடும். †— என்னுல் விரும்பப்பட்ட சற்குணங்கள் எலியினுல் யாழ்நரம்பு கெடுவதுபோல இராகத்தினுல்கெடும், ஆத்மஞானத்தையுடைய பலமில்லாத சித்தத்தையுடைய நாங்கள் மேலுள்ள வலையிலகப்பட்ட பறவையைப் போல மெலியும்படியுண்டாகும்; அவாவக்கினியானது எரிக்கவருந்தினேன்; குற்றமற்ற வமிர்தத்தின் முழுகினுலும் என்னறிவு சீதளமாகாதென்று என் மனதி லெண்ணுகின்றேன். ‡— அமரபக்ஷத் தமாவாசை யிருளைப்போல மகாவலிமையுள்ள தீரர்களையும் அச்சஞ்செய்விக்கும் நல்லறிவாகிய கண்ணைக் கெடுக்கும், உபசாந்தமுடைய சத்துக்களையும் நடுங்குவிக்கும், ஆந்தைவடிவமான ஆசையென்கின்றகிழத்தாசியானவள் ஓர் வஸ்துவும் தனக்குக் கிடையாததாயினும் இனிய திரவியத்தை விரும்பி யாவர்க்கும்

சுரு. வண்மையுள்ள மனதை நசிப்பிக்க வேண்டுமெனல்.

சுச. மனேனுடணத்தை முடித்து நிறுத்த முறையான் அது நிரந்தரம் போகத்தை இச்சிப்பதனு லதன்பின் னுசைவைத்து அதனையுந் தூஷித்தல்.

சுடு. ஆசையே யக்கினியாக வருத்துகின்றதெனல்.

சுசு. ஆசையைக் கிழக் கணிகையாகத்தூஷித்தல்.

¶ இம். விசாரமின்றிய விடத்துண்டாய்த் தான்சுழல்வதுமன்றி என்னைப் பவத்திற் சுழற்றுகின்ற மனதினுற் சுகமென்னவென்பதாம்.

* இம். மனது, அனர்த்தரூபமான ஜகத்துக்குக் காரணமாதலால், அதை எவ்விதத்திலுங் கெடுக்காவிடிற் சுகமில்லையென்பதாம்.

† இம். சுகதுக்கத்துக்குப் பீஜமான மனதை விவேகஞானத்தாற் கெடுக்காவிடிற் சுகமேதென்பதாம்.

‡ இம். இவ்விச்சை விஸ்ராந்தியைக் கொடாதென்பதாம்.

பின்செல்லுவள், தனதிஷ்டமு மடையாததாம்.¶—

௬௭. ஆசையொன்றிலு மமைதி பிறவாமல்வருத்துகின்றதெனல்.

வார்த்திகப் பருபவத்திலுண்டாகுந் தளர்வினால் தன்னாற் சக்தியில்லாத நடனத்தை முயற்சிப்பவளாய் மனக்களிப்பில்லாமல் நடனஞ்செய்கின்ற நாடகக் கணிகையைப்போல என்னை யிச்சைவருத்துகின்றது; நேரே பெறுதற்குக் கூடாதவஸ்துக்களை அடையப் போம், கிடைத்தாலும் பின்னுஞ் சுகத்தையேநாடும், திரமில்லாமல் ஆசையானது குரங்கைப்போல ஓரிடத்திலுந் தங்காமலலைகின்றது.‡—

௬௮. ஆசாவியாதிக்கவுஷதங் கூறல

பூங்காவில்மதுவுண்டுகளித்த வண்டைப்போலப் பாதாளமும் ஆகாயமும் எட்டுத்திக்குமாகிய விவையனைத்திலும் க்ஷணத்திற் சுற்றிக்கொண்டுவரும்; தாவிவளராநின்ற ஓராசையே துன்பங்கள் எல்லாவற்றினு மகத்தான பிறவித்துன்பத்தைக் கொடுக்கும்; கோட்டைக்குள் வசிப்பவர்களுக்கும் துக்கத்தைச்செய்யும் அவாவென்கின்ற விடூசிகாவியாதிக்குச் சிந்தையறலே அமரர்கடுநிக்கும் மந்திராவுஷதமாம்; சிந்தையற்றால் ஜகத்துன்ப நீங்கும்.§—

௬௯. ஆசை யாவரையுங் கெடுக்குமெனல்.

இச்சையானது பசுமையான சொர்ன வளையலையணிந்த மாதரைப்போலும் வியாதியைப் போலும் தாமரைமுகையை சூரியனது கிரணமலர்த்துவதுபோல ஆழ்ந்தகருத்தையுடைய புருடர்களைப் பகிர்முகமாய் வெளிப்படுத்தும் வச்சிரத்தின் முனையையும் முனைபிற்கூருள்ள வாளாயுதத்தையும் அக்கினியினால்வெந்த அயப்பொறியையும்போலக் கொடுமையான மனோராகமானது மகாமேருவுக்கொப்பான வுயர்வுள்ளவர்களையு மழகுள்ள ஞானவான்களையும் திடமுள்ளவர்களையும் வீரர்களையும் மற்றியாவரையும் நொடியில் திரணமாக்கும்.†—

௭௦. ஆசா தாடண முடித்துநிறுத்த முறையான் இப்போகமனுபவித்தற்கு ஸ்தானந் தேகமாதலால தனை யதன் பின் வைத்தவைதயுந் தூஷித்தல்.

குளிர்ந்த குடலினாலும் நரம்பினாலும் நெறுக்குற்றுப்பலவிகாரமுடையதாய் இரங்கும்படி ஒருபோது வாடியும் ஒருபோது பருத்துமிருக்கின்ற தேகமானது சம்சார வுற்பத்தியில் பிரகாசித்தாலும் துக்கநிமித்தமேயாம்; அதிகரித்த அற்பவிஷயத்தால் சுகத்தையும் துக்கத்தையும்

¶ இ-ம். யாதிடத்திலுந் தன்மனோரத நிறைவேறாமல் அவரவர் நற்குணங்களை மாறுபடுத்தி வீணாக வருத்துகின்ற ஆசையினால் என்னசுக மென்பதாம்.

‡ இ-ம். முடியாதகாரியத்தின் முயன்றொன்றிலு மமைதிபிறவாமற் சுழன்று வருந்துகின்ற வாசையா லென்னசுக மென்பதாம்.

§ இ-ம். தசதிசையிலுஞ்சுழன்று வருத்தத்தைக்கொடுக்கின்ற ஆசையைச் சிந்தாத்தியாகத்தாற் கெடுக்காவிடில் என்னசுக மென்பதாம்.

† இ-ம். யாதிலும் வல்லமையுள்ள விச்சாத்தியாகம் வராவிடி லென்னசுகமுண்டாமென்பதாம்.

அனுபவியாநின்ற இத்தேகத்தைப்போல நேரான
குணமில்லாததும் துக்கமுள்ளதும் ஈனமுமா யிருக்
எக. இதுவுமது.
கின்ற தன்மை யதுவேறென்றுண்டோ. ‡— அகங்
காரனென்னுங் கிரகஸ்தனுக்கு வீடாயிந்திரியங்களா
கிய துட்டபசுக்கள் பத்தும் சங்கற்பஞ் செய்யாநின்ற
மனமாகிய அடிமையு மிச்சையென்கின்ற இல்லாளும்
வாயென்னும் வாயிலும் அவ்விடத்திற் கட்டும் பல
பலவான தந்தங்களென்கிற தோரணமும் நாவாகிய
வானரமும் பொருந்தி தோன்றுகின்ற அற்பவிஷயத்
தால் இன்பதுன்பங்களில் அமிழாநின்ற தேகமானது
நித்தியமானாலும் அநித்தியமானாலும் நல்லபயன்
எஉ. இதுவுமது.
யாது?*—செல்வமும், நாடும், தொழிலும், இவை
களையனுபவித்தற்குரிய இத்தேகமும் இருக்குமாயின்
விருப்பத்தக்கவையாம்; நியதிப்படி வாராநின்றகூற்று
வனால் சிறிது தினத்தில் இவைக ளனைத்தும் நசிக்
கும். இரத்தமாமிச முடையதாய்க்கெடுவதே சுபாவ
மாய்த் தரித்திரனுக்குஞ் செல்வனுச்கு மொருதன்
மையவாய் மிகவும் பகுத்தறியாமல் சரையுமரணமும்
எங. தேகமநித்திய மெனமுடித்து நிறுத்த முறையான் அதற்குமுந்தின வவஸ்தைபாலியமாதலாலதனை யதன்பின் வைத் ததையுந் தூஷித்தல்.
பொருந்து மித்தேகத்தி லழகென்னையுள.¶—மின்ன
லிடத்திலும் சரற்பருவ முகிலினிடத்திலும் விசால
முள்ள கந்தர்வநகரத்திலும் நல்ல நிச்சயபுத்தி வைப்
பவன் யாவனோ அவனே சரீரத்தை மெய்யாக நாடு
பவன். [பாலதூஷணம்] நிலையில்லாமற் சலனத்தை
யடைந்து நானாவிதமான செய்கைகளென்னும் அலைக
ணிறைந்த பவசமுத்திரத்தில் எச் சநநமெடுத்தாலும்
அதற்குரிய பாலப்பருவமானது மிகுந்த துன்பத்துக்
குக் காரணமாம்.†— நீங்காதவாபத்தையும், தளர்
எச. சலனமுள்ளது சைசவமெனல்.
வையும், பேச்சின்மையையும், அறியாமையையும்,
இச்சையையும், துவளலையும், அடைந்து சஞ்சலப்
படுகின்ற குழந்தைப்பருவத்தோடு சஞ்சலசுபாவ
மான மனதுசேர்ந்து, கடலினலைகளும், மாதர்களு
டைய கண்களும், அக்கினிக் கொழுந்துகளும், மின்
னல்களும், இவையனைத்திற்குஞ் சஞ்சலமப்பியாசிப்

‡ இம். மாமிசபிண்டமாகிய சரீரமானது, இன்டம்போல விளங்கினலுந் துன்பமேயாதலால் அதிலென்னசுக முண்டாமென்பதாம்.

* இ-ம். அகங்காரத்துக் கிடமாகிய இத்தேகம் இருந்தனாலும் போனதினாலு மென்னசுக மென்பதாம்.

¶ இ-ம். தனக்குபகரிக்கின்ற செல்வனுக்கும் அதற்கியலாத தரித்திரனுக்குந் தாரதன்மியம்டாராத இத்தேகத்தி லென்னசுக மிருக்குமென்பதாம்.

† இம். அசத்தியமான தேகத்தைச் சத்தியமாக நம்புதலினால் என்னசுக முண்டா மென்பதாம்.

பதி அலையப்பட்ட ஞாளியைப்போல மலத்தைப் புசிக்கும், அற்பவிடயத்தால் சந்தோஷிக்கும் துக்கிக்கும்.

௭௫. சைசவமறிமைக்கிடமாமெனல்

§— மண்ணைப்புசிக்கும் ஆகாயத்திலுள்ள சந்திரனை தன்னிடத்தில் வாவென்று கூப்பிடும் இவ்வறியாமை சுகத்தின் பொருட்டாமா, உபாத்தியாயருக்கும் மாதாவிற்கும் பிதாவிற்கும் உறவினர்க்கும் முன்பிறந்தவருக்கும், மற்றொருவருக்கும் நடுக்கமிருகின்ற நோதலுள்ள வாலப்பருவமானது அச்சத்துக்கு ஸ்தானமாம்; குற்றமெலாம் நிறைந்தகூடாம்; குறிக்கப்பட்ட அவிவேகமென்னுந் தூர்த்தன்வாழ்தற்கு வீடாகும்; யாவருக்கும்இப்பருவத்திற் சுகமுண்டாகாது. ‡-

௭௬. பாலதாடணமுடித்துநிறுத்தமுறையான் அதின்முதிற்சியே எவ்வனமாதலாலதனை யதன்பின் வைத்தடையுந் தூஷித்தல்.

இவ்வாலப்பருவத்திலுள்ள அநர்த்தங்களைக்கடந்து துன்பத்தில் விழுகின்ற எவ்வனப்பருவத்தையடைந்து மனமென்னும் இழிவிற் சமானமில்லாத பொந்தில் வசிக்கும் மன்மதனென்கின்ற பேயடிக்க மனமெலியும்; அறிவானது சொல்லுதற்கரிய வித்தியாப்பியாசத்தினால் விஸ்தாரமுடையதாய்க் குருபணியாற் றெளிவுற்றுச் சத்கிருத்தியத்தினாற் பரிசுத்தமாகிச் சிறப்புள்ளதானாலும் கார்காலத்தினது ஆற்றுச்சலம்போல எவ்வனப்பருவத்திற் சேருங் காலத்தில் கலக்கமாம்.

௭௭. எவ்வனங் காமத்துக் கிடமாமெனல்.

¶—மனதென்னும் மானனது மயங்கிப்போய் விடயங்களென்கிற படுகுழியில்வீழும் பொருட்டுத் தேகமென்கிற பாலைநிலத்தில் எவ்வனமென்கிற கொடிய பேய்த்தேரானது உண்டாகி மிகவும் வளரும்; மிகுந்த துன்பமானது, எவ்வனத்தினின்பம் எம்மட் டிருக்கின்றதோ அம்மட்டும் வளரும், ஆசைகளும் இளமை யெம்மட்டிருக்கின்றதோ வம்மட்டும் வேகமுற்றெழுந்து மிகவு மநர்த்தங்களைச் செய்யும்.

௭௮.! சற்குணமுள்ள வெவ்வனமரிதெனல

†— எவ்வனமென்கின்ற விக்கினத்தைத் தாண்டி இலேசாக முத்தியிற்சேர வலியுள்ளவர்கள் எத்தன்மை யுள்ளவர்களோ அத்தன்மையுள்ளவர்களே புருடர்கள்; அப்புருடர்களே எல்லாராலும் வணங்குதற்குரியர்; அவர்களேயறிஞர்கள்; உண்மை

---

§ இம். அலைமுதலானவைகளிலு மதிகசஞ்சலத்தையுடைய பாலப்பருவத்தில் என்னசுக மென்பதாம்.

‡ இம். அறியாமைமுதலிய சகலகுற்றமு நிறைந்திருக்கின்ற பாலப்பருவத்தால் என்னபய னென்பதாம்.

¶ இம். தெளிந்தவறிவையுங் கலக்குகின்ற காமத்தையுடைய வெவ்வனத்தினலென்னசுக மென்பதாம்.

† இம். மனதுமயங்கி விடயத்திற்சென்று துன்பவின்பங்களில் வருந்துமனர்த்தத்துக் கேதுவான வெவ்வனத்தி லென்னசுக மென்பதாம்.

நிலையுள்ளசத்துக்கள்சார்தற்குஸ்தானமாயும் விநயசம்பத்தைப்பெற்றுக் கருணையினல் பிரகாசியாநின்ற பரிசுத்தமான குணத்தையுடைய வெவ்வனமானது இச்சகத்தின்கணுண்டோ, ஆகாயத்தில் நிறைந்தவனமுண்டோ.† கணுக்களும், நரம்புகளும், எலும்புகளும், மாமிசங்களும்நெருங்கியபிரதமையையொத்த மகளிருடையசூத்திரத்திலாடும் சரீரமாகிய கூட்டில் என்னசுகம்? வாசனையுள்ள மிருதுவான கூந்தலையுடைய மாதர்கள் நேத்திரத்தில் தோலையும் மாமிசத்தையும் கண்ணீரையும் இரத்தத்தையும் மனதினல் பகுத்துப்பார்க்கில் சிறப்பாயின் இச்சிப்பாம். §—மகாமேருவினுச்சியினின்றும்வீழாநின்ற விரிந்தவலையையுடைய கங்காசலத்தைப்போல முத்துமாலைபொருந்தி விளங்குகின்ற அழகிய வாபரணத்தையணிந்த மாதர்களுடையதனங்களானவைவூர்ப்புறத்திலுள்ள சுடுகாட்டில் அடைந்தகாலத்தி லிதனை நேராகக் கிடைத்த உருண்டைச்சோற்றின் கவளத்தைப்போல வரிசைவரிசையாகவந்து நாய்கள் புசிக்கும். ‡-அடைதற்கரிய சூடுள்ளதாயும் கூந்தலென்னுந் தூமமுள்ளதாயும் கண்ணென்னுந் தீக்கின்ற தொழிலையுடையதாயு மிருக்கின்ற பாவமென்னும் அக்கினியின் மகளிரென்னுஞ் சுவாலையானது சேருகின்ற துரும்பைப்போல எவரைத்தானெரிக்காது; தூரத்தெரிக்கின்ற நரகாக்கினிக்குமடவாருடைய குளிர்ந்த தேகமானது உலர்ந்தகாட்டமாம். ¶—கரியவிழிகளையுடைய மகளிர்கள் மிகுந்த வறியாமைநிறைந்த மனதையுடைய மானுடராகிய பட்சியைப் பிடிக்கும்பொருட்டு மன்மதனெனுகிற வேடனுனவன் எறியாநின்ற வலைக்குச் சமானமாவார்கள். கொடியமனமென்கின்ற சேறுநிறைந்த பிறவியென்னுஞ் சிறுகுளத்தில் மனிதராகிய மீனைக் கவர்தற் கியமவாதனையென்னும் பாசத்திற்

எக. எவ்வளவு தூடண முடித்து நிறுத்த முறையான்அதற்கு முக்கியமான போகத்துக்குத் தகுந்த தாயுஞ்சருவவிடய சமஷ்டிரூபமாயுமிருக்கின்றது ஸ்திரீகள் ஆதையாலவர்களையதன் பின்வைத்தவராதுதே கச்சுக்களைத் தூஷித்தல்.

அ0. மகளிர்தனதூஷணம்.

அக. மகளிரைச் சுவாலையாகவும் இந்தனமாகவுந் தூஷித்தல்.

அஉ. மகளிரைவலையாகவுந் தூண்டிலினிரையாகவுந் தூஷித்தல்.

† இ-ம். விடயசுகத்தை நீக்கிப் பரமசுகத்தை யடைவிப்பதற் கேதுவான வெவ்வனமில்லாவிடி னென்னசுக மென்பதாம்.

§ இ-ம். மாதர்களுடலையும், நேத்திரத்தையும், பகுத்துப்பார்க்கி லிவைகளிலென்னசுக முண்டென்பதாம்.

‡ இ-ம். ஆபரணங்களா லலங்கரிக்கப்பெற்றும் அந்தத்தில் நாய்கள் முதலானவை பட்சிப்பதற்கு யோக்கியமாயிருக்கின்ற ஸ்திரீகளினது தனத்திலென்னவழகிருக்கின்றதாம்.

¶ இ-ம். இம்மையிற் காமாக்கினியினு லெரிப்பது மறுமைக்கு நாகாக்கினியையுண்டாக்குவதுமான மின்னரிடத்தி லென்னசுக மென்பதாம்.

௮௩. மகளிர் இன்பத்தைத் தூஷித்தல்.

௮௪. மகளிரின்ப நீங்கலே பேரானந்தமெனல்.

௮௫. மகளிரின் பத்தை விரும்பேனெனல்.

௮௬. ஸ்திரீ தூடண முடித்து ஸ்திரீ முதலிய போகங்களை யனுபவிக்கசக்திஇல்லாதிருந்தும் அவைகளில் இச்சையுள்ளது மூப்பாகையால்அதனை யதன் பின்வைத்துஅதையுந் தூஷித்தல்.

௮௭. சரையின் றுற் குணங்களை யுரைத்தல்.

பூட்டிய தூண்டின்முள்ளினுள்ள இரையாகிய மாமிசத்துக்கிணையாவார். ‡—மிருந்ததுக்கத்தை பூட்டியிருக்கின்ற பூட்டாகவும் முடிவில்லாத விராகத்துவேஷங்க ளென்கின்ற இரத்தினங்கள் வைத்திருக்குஞ் சம்புடமாகவு மிருக்கின்ற மாதர்களது சுகத்தை விரும்பேன்; இதுமாமிசம், இதுவிரத்தம், ஈதஸ்தி, இதுநரம்பென்று விசாரிக்கில் சந்திரவதனத்தையுடைய மகளிரது ஆசையானது சிலதினத்தில்பகையாம். †—மனைவியை யுடையவனெவனோ, அவனுக்கே போகத்தி லாசையுண்டாம்,. மனைவி யில்லாதவனுக்கு புணர்ச்சியினின்ப மெவ்விடத்துண்டாகும், போகத்துக்கிடமான பெண்ணைவிடில் மனதின்கண்ணுள்ள வுலகபந்தம்போம் நாமமாத்திரமான வுலகநீங்கினல் நீங்காத பேரானந்த முதயமாம். §—விசாரமின்றி வருஞ்சமயத்தினின்பமாகியும் வந்தபின் இசைபடாநின்ற வண்டினத்திறகைப்போல எக்காலமுஞ் சஞ்சலிப்பதாயும் நீக்குதற்கரிதாயு மிருக்கின்ற மகளிரனுபோகத்தினுலுண்டாகும் வியாதியும், இறப்பும், வயோதிகமும் ஆதியான துன்பங்களுக்குப்பயந்து மனதில் இச்சிக்கேன்; எப்படி இனியடைதற்குரிய பிரமபதத்தையடைவேன். ¶—முடிவுபெருத பாலப்பருவத்தை எவ்வனமானது விழுங்கிவிடும் இவ்வெவ்வனத்தை வேறுபடுத்துகின்ற மூப்பானது விழுங்கும் மயக்கமும் வியாதியும் துன்பமுமாகிய விவைகளை மிகவும் பயனுகவுடைய வார்த்திகம் வந்தால் இரண்டாம் விவாகத்தில்வந்த மனைவியால் முன்னுள்ள மனைவியானவள் புருடன்மனதினின்று நீங்குவதுபோல முதிர்ந்த வறிவு பிரிந்தோடும்*— வார்த்திகம் வரும்போதில் நவத்துவாரமுள்ள சரீரத்தில் தளர்வும் மறதியும் அமைந்திராநின்ற வாசையும் துயரமும் செய்தற் களவுள்ளனவாகிய காரியங்களில்

‡ இம். அறிவிலரான மனிதரைப்பிடித்து காமத்திலழுத்தி துக்கம்விளைவிப்பதற்குக் காரணமான மாதரிடத் தென்னசுக மென்பதாம்.
† இ-ம். துக்கத்தைக்காப்பதாயும், இராகாதிதோஷங்களுக் கிடமாயும் இருக்கின்ற மாதர்களினுருவத்தை விசாரிக்கி லதிலென்னசுக மிருக்கின்றதாம்.
§ இம். மகளிரிச்சையை நீங்கும் காரணத்தினல் திரிசயநீங்கிச் சுகமுதயமாமென்பதாம்.
¶ இம். வரும்போதின்பமும் வந்தபின் றுன்பமுமாய் வருத்துகின்ற மாதர்கள் சுகத்தைநீக்கிப் பரமசுகத்தை யடைவேனென்பதாம்.
* இ-ம். தெளிந்தவறிவையு நீக்குந்துன்பமயமான வயோதிகப்பருவத்தில் என்னசுக மிருக்கின்றதாம்.

செல்லுதற்குச் சக்தியில்லாமையும், கொடியவியாதி
யுண்டாதலும், குறிக்கப்பட்டவஸ்துக்களை சம்பாதிக்
கத்தடுமாற்றமும், புத்திரன் முதலியவர்களாற் செய்
யப்பட்ட பழிப்புமாகிய விவைகொடாநின்ற துக்க

௮௮. சரையி லுள்ள நிந்தையையும் ஆசையையு முரைத்தல்.

மானது நானுவிதமாகும்.‡— வயோதிகப் பருவம்
வந்து சரீரநடுங்கப் பட்டவர்களைப்பார்த்து இஷ்டர்
களும், புத்திரர்களும், உறவினர்களும், மகளிரும்,
அடிமைகளும், சிரிப்பார்கள்; பார்ப்பதற்குச்சகிக்கப்
படாத வடிவமாய்த் துன்பத்தையும் நரையையும்
பொருந்தி வலிமையையும் நற்குணங்களையும், நீங்
கினவார்த்திகத்தைவெட்டுப்பட்டமரத்தில் கழுகடை

௮௯. சரையினால் வரும் அச்சத்தை யுரைத்தல்.

வதுபோல ஆசைவந்து பொருந்தும்.§— பிழையை
யும் மெலிவையும் பொருந்தி மனதையெரித்து நிறை
ந்த வாபத்துக்களனைத்திற்கும் பாங்கியான விச்சை
யைப் பொருந்துகின்ற வயோத்திகத்தில் ஒப்பற்ற
பரலோகத்தில் பொருந்த நன்மையென்ன வென்று
நமதிச்சையினாலுண்டான வினைகளை நீக்கக்கூடாத

௯0. சரையிற் சக்தி யின்மையும் அது வுணவாத லுங்கூறல்.

தால் அச்சம் மிகவும் அதிகரிக்கும்.†— வார்த்திகத்
தில் விடய விச்சையிற் களிப்புமிகும்; அதைப் புசித்
தற்குச் சத்தியின்றாம்; இச்சிப்பதை யனுபவிப்ப
தற்கு வல்லமையில்லாததினால் நினைப்பனைத்துமெரி
ந்துவாடும் பருவகாலத்தி னீறுபூத்தமுதிர்ந்த பூசினை
யின் பெரியபழம்போல காலனானவன் மனிதர்களு
டைய வெண்மையான நரையையுடைய சிரசை புசிப்

௯௧. சரையை மரண வரசனுக் கங்கமாக வருணித்தல்.

பான்.¶— இறப்பாகிய அரசன்முன்னே வருகின்ற
நரையென்னும் வெண்சாமரையை வீசிக்கொண்டு
கூட்டமுள்ள தேகவியாதிகளு மந்தக்கரணவியாதி
களுமான படைகள் நடக்கும், தகுதியில்லாத நரை
யென்னும் வெண்சுண்ணந்தீற்றிய தேகமாகிய வீட்

‡ இம். சரீரத்தளர்ச்சி முதலான நானுவிதங்களாலுந் துன்பமனுபவித்தற்குரியவயோதிகப்பருவத்தி லென்னசுக மிருக்கின்றதாம்.

§ இம். எல்லாராலு நகைசெய்வதாயுந் துன்பமயமானவாசை குடிகொண்டிருப்பதாயுமிருக்கின்ற வயோதிகப்பருவத்திற் சுகமின்றென்பதாம்.

† இம். மனதை வேகச்செய்கின்ற வாபத்துகளுக்குச் சகாயமான இச்சையும் இளமையிற் செய்திருக்கின்ற தீவினைகளை இப்போது பரிகரிக்கக் கூடாமையான் மறுமைக் கென்செய்வோமென்னும் பயமுமிகுந்திருக்கின்ற வார்த்திகத்தி லென்ன சுக மிருக்கின்றதாம்

¶ இ-ம். விரும்பப்படும் பதார்த்தங்களிருந்து மனுபவிக்கக்கூடாத துக்கத்தையுடையதாயும், காலவழிப்பதற்குப் பக்குவமாயுமிருக்கின்ற வார்த்திகப் பருவத்திலென்னசுக மிருக்கின்றதாம்.

௧௨. சரைதூடணத்தை முடித்திப்பருவத்தைச் சங்கரிக்குங் காலமுண்டாதலால் அதன் பின்னதனை வைத்ததையுந் தூஷித்தல்.

டுக்குள் ஆபத்தும் அறிவின்சத்தியும் சோர்வுள்ள ரோகமுமான மாதர்கள் வாழ்வார்கள்.†-நரைபொருந்திய கொடியமுதிர்வயதாகிய பிசாசோடுங்கூடி வாழ்வதினல் சுகமென்ன, ஈடணத்ரயங்களையும் அற்பமாக நீக்கும் இச்சையையுடையமூப்பை கெடுத்தற்கு எவர்க்கும் அரிதாகும். [காலதூஷணம்] வரிசையாக வந்த சநநத்தில் அஞ்ஞானமயமாய் விளங்காநின்ற இன்பப்பொருள்களெல்லாம் குற்றம்பொருந்திய எலியால் நூல்போல் கூற்றனுற்கெடும்.¶— மகரமச்சங்களுறைகின்ற கடலில் ஜலத்தை பானஞ்செய்யாநின்ற வடவாமுகாக்கினியைப்போலஎல்லாவற்றையும்புசிக்கின்ற காலனுல் உலகத்தின்கண் புசிக்கப்படாததொன்றில்லை; சொல்லுதற்கறியமகத்துக்களாயினும் நியதிக்குப் பின்னெரு க்ஷணநேரமும் பொறுன், சகலத்தையும்புசித்துஅவனேசமஸ்தமுமாயிருப்பன். §-

௧௩. காலம்மகான்களையும் அழிக்குமெனல்.

௧௪. காலம் பலமானசராசரங்களையுங்கெடுக்குமெனல்.

சிறந்த வரசர்களும் நன்மையினையுடைய பிரமாதிகளும் மகாமேருவுக்கிணையான விருத்திராசூரன்முதலிய யாவரையும் சர்ப்பத்தைக் கொல்லாநின்றகருடனைப்போலக் காலனழிப்பான்; துகளுடன் இலையும் திரணமும் மகாமேருவும் சமுத்திரத்து வெள்ளமும் செழித்த மயேந்திரகிரியுமாகிய இவைகளை காலனுனவன் கெடுத்து தன்வசமாக்குவன்.‡—விரிந்தசீவமசகங்கள் சப்திக்கின்ற அண்டங்களெனும் பழங்களை உதிர்த்த அத்திவிருக்ஷமாகியும், சூரியனே நேத்திரமாக மத்தியானமென்னும் பார்வையால் பக்குவம் பார்த்து, உலகமென்கின்ற பழையகாட்டில் உலகபாலரென்னுங் கனிகளைக்கொய்து, தானே புசிப்பவனுயுமிருக்கின்ற காலனுனவன் பிரகாசிக்கின்ற வுயர்ந்தோர்களென்னு மிரத்தினங்களை வரிசையாக முக்குணங்களென்னுங் கயிற்றில் கோவையிட்டுதரித்துக்

௧௫. காலத்தின் சிருட்டியாதியைச் சொல்லுதல்.

† இ-ம். மரணத்துக் கங்கமாகியு மாபத்துமுதலியவற்றிற் கிடமாகியுமிருக்கின்ற இவ்வயோதிகப்பருவத்திற் சுகமின்றென்பதாம்.

¶ இம். ஈடணுத்ரயங்களாலுள்ள துன்பங்களுக்கு மிகுந்த துன்பங்களைக் கொடாநின்ற சரையினுலும், சநநத்திற் சுகம்போலத்தோற்று மதனையுங் கெடுக்கின்ற காலத்தினுலு மென்னசுக மிருக்கின்றதாம்.

§ இ-ம். பஞ்சபூதத்தைக் கெடுப்பதுமன்றிச் சத்துக்கள் வடிவங்களையுங் கெடுத்துச் சூனியமாகமிஞ்சுங் காலத்தினு லென்னசுக மென்பதாம்.

‡ இம். உலகத்தின்கண் மகத்தாகியு மற்பமாகியுமிருக்கின் றவைகளைக் கெடுத்துச் சூனியமாக்குங்காலத்தினு லென்னசுகமென்பதாம்.

கசு. காலம் உலகத்திலுள்ள யாவையுங் கெடுக்குமெனல்.

கெடுப்பான்.¶— சிறியவுலகமென்னுஞ் சீரணித்த வீட்டில் சின்றாநின்ற வுலகத்தாரென்னு மிரத்தினங்களை மிருத்துவென்னுஞ் சம்புடத்திற் சேர்க்கின்ற காலனானவன், உணர்வற்ற பல சீவர்களாகியமிருகங்களும், பட்சிகளும், அளவின்றி எவ்விடத்திலுங் கெட பசையற்ற வுலகமாகிய பாலைவனத்தில் வேட்டைசெய்து, மகாகற்பவனத்தில் பிரகாசமுள்ள வடவானலமென்னுந் தாமரையானது சேர்ந்திருக்கின்ற சமுத்திரத்தை விளையாடாநின்ற குளமாகச்சேர்வன.‡— கசப்பும், புளிப்பு, முறைப்புமாகிய இவை முதலான அறுசுவையுடைய மிகுந்த வசரவுயிர்களாலும், சமானமில்லாத பால், தயிர் முதலாக சத்தசமுத்திரங்களினாலும், நானாவிதமாகிய சிருஷ்டிகளுள்ள உலகங்களினாலும், உணவையுடைய காலனானவன், சுழன்றுகழன்று நிலைபெற்ற வவ்வவைகளில் மகாகற்பத்தில் எப்போதும் சுற்றிக்கொண்டுவருவான். †—

கஎ. காலம், கசலத்தையு மற்பமாகக் கெடுக்குமெனல்.

கஅ. காலனுடணமுடித்து அதனையுஞ் சங்கரிக்கின்ற சங்கார சத்தியின் குணங்களையுரைத்தல்.

பழமையாகிய ஜகத்திலுண்டாகின்ற தாபரசங்கமமான வஸ்துக்களனைத்தையும் கொன்று வெல்லுதற்கரிய சங்கார சத்தியானவள் மிகவும் பயங்கரமும் மிகுந்த வல்லபமுமாகிய நடையையுடையவளாய் துற்காதி சத்திகளனைத்தையும் தன்னுடன்பொருந்தப்பெற்றுசாரக்கூடாத உலகமோகமென்னும்பொலிவான காட்டில் பெண்புலியைப்போல வாழ்வாள்.*—

கக. சங்காரசத்தியினடனச் சிறப்புரைத்தல்.

மிகுந்த சீவர்களைக்கொன்று இரசம்பொருந்திய பூமியாகிய மதுபாத்திரத்தைக் கரத்திலேந்தி மூன்றுலகமென்கின்ற இதழ்களையுடைய நீலோற்பலஞ், செங்கழுநீர் தாமரைமலரென்னு மிவைகளாற் றொடுத்த அலங்கலைப் புனைந்து எறியாநின்ற கோடையிடியைப்போல மந்தகாசஞ்செய்கின்ற நரசிங்கத்தை, லீலைக்குரிய கிளிப்பிள்ளையாகநீண்டு மிகுந்த பராக்கிரமத்தையுடைய புஜமாகிய கூட்டில் ஏந்திக்கொண்

¶ இ-ம். முத்தொழிற் கேதுவாகியுஞ் சூனியமாகியு மிருக்கின்ற காலத்தினாலென்னசுக மென்பதாம்.

‡ இ-ம். சகலவுயிர்களையுநாசஞ்செய்துமகத்தையுமற்பமாக விளையாடுங் காலத்தினாலென்னசுக மிருக்கின்றதாம்.

† இ-ம். ஜகங்களே புராதனமாகவும், ஜீவகோடிகளே பதார்த்தங்களாகவும், சத்த சமுத்திரங்களே செய்பாற்றயிராகவும், புசித்து எப்போதுஞ் சுழன்றுகொண்டிராநின்ற இக்காலத்தினாற் சுகமின்றென்பதாம்.

* இ-ம். உலகத்திலுள்ள சகல வஸ்துக்களையுஞ் சங்காரஞ்செய்து பிராந்திவடிவமான ஜகத்திற் சகல சத்திகளுக்குஞ் சத்திபா பெதிர்ற்றிருக்கின்றது, சங்காா சத்தி யென்பதாம்.

கூஉ. சரைதூடனத்தை முடித்திப்பருவத்தைச் சங்கரிக்குங் காலமுண்டாதலால் அதன் பின்னதனை வைத்ததையுந் தூஷித்தல்.

கூங. காலம்மகான்களையும் அழிக்குமெனல்.

கூச. காலம் பலமானசராசரங்களையுங்கெடுக்குமெனல்.

கூடு. காலத்தின் சிருட்டியாதியைச் சொல்லுதல்.

டுக்குள் ஆபத்தும் அறிவின்சத்தியும் சோர்வுள்ள ரோகமுமான மாதர்கள் வாழ்வார்கள்.†-நரைபொருந்திய கொடியமுதிர்வயதாகிய பிசாசோடுங்கூடி வாழ்வதினால் சுகமென்ன, ஈடணாத்ரயங்களையும் அற்பமாக நீக்கும் இச்சையையுடையமூப்பை கெடுத்தற்கு எவர்க்கும் அரிதாகும். [காலதூஷணம்] வரிசையாக வந்த சநநத்தில் அஞ்ஞானமயமாய் விளங்காநின்ற இன்பப்பொருள்களெல்லாம் குற்றம்பொருந்திய எலியால் நூல்போல் கூற்றனாற்கெடும்.¶—மகரமச்சங்கமுறைகின்ற கடலில் ஜலத்தை பானஞ்செய்யாநின்ற வடவாமுகாக்கினியைப்போலஎல்லாவற்றையும்புசிக்கின்ற காலனால் உலகத்தின்கண் புசிக்கப்படாததொன்றில்லை; சொல்லுதற்கரியமகத்துக்களாயினும் நியதிக்குப் பின்னொரு க்ஷணநேரமும் பொறான், சகலத்தையும்புசித்துஅவனேசமஸ்தமுமாயிருப்பன். §-சிறந்த வரசர்களும் நன்மையினையுடைய பிரமாதிகளும் மகாமேருவுக்கிணையான விருத்திராசூரன்முதலிய யாவரையும் சர்ப்பத்தைக் கொல்லாநின்றகருடனைப்போலக் காலனழிப்பான்; துகளுடன் இலையும் திரணமும் மகாமேருவும் சமுத்திரத்து வெள்ளமும் செழித்த மயேந்திரகிரியுமாகிய இவைகளை காலனானவன் கெடுத்து தன்வசமாக்குவன்.‡—விரிந்தசீவமசகங்கள் சப்திக்கின்ற அண்டங்களெனும் பழங்களை உதிர்த்த அத்திவிருக்ஷமாகியும், சூரியனே நேத்திரமாக மத்தியானமென்னும் பார்வையால் பக்குவம் பார்த்து, உலகமென்கின்ற பழையகாட்டில் உலகபாலரென்னுங் கனிகளைக்கொய்து, தானே புசிப்பவனுயுமிருக்கின்ற காலனானவன் பிரகாசிக்கின்ற வுயர்ந்தோர்களென்னு மிரத்தினங்களை வரிசையாக முக்குணங்களென்னுங் கயிற்றில் கோவையிட்டுதரித்துக்

† இ-ம். மரணத்துக் கங்கமாகியு மாபத்துமுதலியவற்றிற் கிடமாகியுமிருக்கின்ற இவ்வயோதிகப்பருவத்திற் சுகமின்றென்பதாம்.

¶ இ-ம். ஈடணாத்ரயங்களாலுள்ள துன்பங்களுக்கு மிகுந்த துன்பங்களைக் கொடாநின்ற சரையினாலும், சநநத்திற் சுகம்போலத்தோற்று மதனையுங் கெடுக்கின்ற காலத்தினாலு மென்னசுக மிருக்கின்றதாம்.

§ இ-ம். பஞ்சபூதத்தைக் கெடுப்பதுமன்றிச் சத்துக்கள் வடிவங்களையுங் கெடுத்துச் சூனியமாகமிஞ்சுங் காலத்தினா லென்னசுக மென்பதாம்.

‡ இ-ம். உலகத்தின்கண் மகத்தாகியு மற்பமாகியுமிருக்கின் றவைகளைக் கெடுத்துச் சூனியமாக்குங்காலத்தினா லென்னசுகமென்பதாம்.

௯௬. காலம் உலகத்திலுள்ள யாவையுங் கெடுக்குமெனல்.

கெடுப்பான்.¶— சிறியவுலகமென்னுஞ் சீரணித்த வீட்டில் சிந்தாநின்ற வுலகத்தாரென்னு மிரத்தினங்களை மிருத்துவென்னுஞ் சம்புடத்திற் சேர்க்கின்ற காலனானவன், உணர்வற்ற பல சீவர்களாகியமிருகங்களும், பட்சிகளும், அளவின்றி எவ்விடத்திலுங் கெட பசையற்ற வுலகமாகிய பாலைவனத்தில் வேட்டைசெய்து, மகாகற்பவனத்தில் பிரகாசமுள்ள வடவானலமென்னுந் தாமரையானது சேர்ந்திருக்கின்ற சமுத்திரத்தை விளையாடாநின்ற குளமாகச்சேர்

௯௭. காலம், கசலத்தையு மற்பமாகக் கெடுக்குமெனல்.

வன்.‡— கசப்பும், புளிப்பு, முறைப்புமாகிய இவை முதலான அறுசுவையுடைய மிகுந்த வசரவுயிர்களாலும், சமானமில்லாத பால், தயிர் முதலாக சத்தசமுத்திரங்களினாலும், நானாவிதமாகிய சிருஷ்டிகளுள்ள உலகங்களினாலும், உணவையுடைய காலனானவன், சுழன்றுகழன்று நிலைபெற்ற வவ்வவைகளில் மகாகற்பத்தில் எப்போதும் சுற்றிக்கொண்டுவருவான். †—

௯௮. காலனுடனுடித்து அதனையுஞ் சங்கரிக்கின்ற சங்கார சத்தியின் குணங்களையுரைத்தல்.

பழமையாகிய ஜகத்திலுண்டாகின்ற தாபரசங்கமமான வஸ்துக்களனைத்தையும் கொன்று வெல்லுதற்கரிய சங்கார சத்தியானவள் மிகவும் பயங்கரமும் மிகுந்த வல்லபமுமாகிய நடையையுடையவளாய் துற்காதி சத்திகளனைத்தையும் தன்னுடன்பொருந்தப்பெற்றுசாரக்கூடாத உலகமோகமென்னும்பொலிவான காட்டில் பெண்புலியைப்போல வாழ்வாள்.*—

௯௯. சங்காரசத்தியினடனச் சிறப்புரைத்தல்.

மிகுந்த சீவர்களைக்கொன்று இரசம்பொருந்திய பூமியாகிய மதுபாத்திரத்தைக் கரத்திலேந்தி மூன்றுலகமென்கின்ற இதழ்களையுடைய நீலோற்பலஞ், செங்கழுநீர் தாமரைமலரென்னு மிவைகளாற் றொடுத்த அலங்கலைப் புனைந்து எறியாநின்ற கோடையிடியைப்போல மந்தகாசஞ்செய்கின்ற நரசிங்கத்தை, லீலைக்குரிய கிளிப்பிள்ளையாகநீண்டு மிகுந்த பராக்கிரமத்தையுடைய புஜமாகிய கூட்டில் ஏந்திக்கொண்

---

¶ இ-ம். முத்தொழிற் கேதுவாகியுஞ் சூனியமாகியு மிருக்கின்ற காலத்தினாலென்னசுக மென்பதாம்.

‡ இ-ம் சகலவுயிர்களையுநாசஞ்செய்துமகத்தையுமற்பமாக விளையாடுங் காலத்தினாலென்னசுக மிருக்கின்றதாம்.

† இ-ம். ஜகங்களே புராதனமாகவும், ஜீவகோடிகளே பதார்த்தங்களாகவும், சத்த சமுத்திரங்களே நெய்பாற்றயிராகவும், புசித்து எப்போதுஞ் சுழன்று கொண் டிராநின்ற இக்காலத்தினாற் சுகமின்றென்பதாம்.

* இ-ம். உலகத்திலுள்ள சகல வஸ்துக்களையுஞ் சங்காரஞ்செய்து பிராந்தி வடிவமான ஜகத்திற் சகல சத்திகளுக்குஞ் சத்தியா யெதிரற்றிருக்கின்றது, சங்கார சத்தி யென்பதாம்.

௧௦௦. இதுவுமது. டிருக்கின்றதன்மையை யுடையவளாய் *— நிலையான
சரற்காலத் தாகாயத்தைப்போல, சரீரத்திற் களங்க
மின்றி சுரவீணையி னிசையையொத்த மதுரவசனத்
தைப் பொருந்தியிருக்கின்ற மகாகாலனை, விளையாட்
டின்பொருட்டு குயிற்குஞ்சாகக்கைக்கொண்டுசர்வமு
மில்லையென்கின்ற வெற்றிபொருந்தியவில்லைத்தரித்து
உண்டாகின்ற துன்பங்களாகிய வம்புகளைத் தரித்துக்
கொண்டு எவ்விடத்திலும் தனதிச்சைப்படி நிருத்
தஞ்செய்து பிரகாசித்து சுழன்றுகொண்டிருக்கின்
௧௦௧. இதுவுமது. றாள். ¶— அவளுக்கு சுவர்க்கம் சிரத்திற்றரிக்குமாபர
ணமாம், தீவினையென்கின்ற தந்துவினால் கோத்துக்
கட்டப்பட்ட பலநரகமென்னு நூபுரங்களை பாதாள
மென்கின்ற பாதத்திற்றரிப்பள், சூரியசந்திரரென்
கின்ற குண்டலாபரணங்களையும் இமயமலையென்
கின்ற அஸ்தியாபரணத்தையும், மகாமேருவென்
கின்ற சொன்னுபரணத்தையும் தனதிரண்டு செவியி
லும் கீழணிமேலணியாத் தரிப்பள், சக்கரவாள
கிரியை அரையிற்றரிக்கப்பட்ட மேகலையாக சங்கார
௧௦௨. இதுவுமது. சத்தியானவள் தரிப்பள். ‡— பின்பக்கத்திற்றூழ்ந்து
அசைந்து விளங்காநின்ற சுப்பிரமணியரது வாகன
மென்கின்ற வருடையும் மயிலையும் தரிப்பள், மூன்று
கண்களென்னும் பெரியபள்ளங்களால் அச்சஞ்செய்
யப்பட்ட சந்திரனையணிந்த வுருத்திரர்களின் சிர
சைத்தரிப்பள், கன்னியாகிய பரமேஸ்வரியினுடைய
கூந்தலென்னுஞ் சாமரத்தையும் பலைநிகர் பைரவர்
களின் துள்ளுகின்ற கவந்தங்களையும் தரிப்பள், ஆயி
ரங்கண்களென்கின்றபள்ளப்பிரகாசியாநின்றதேவேந்
திரனது சரீரமென்கின்ற பிக்ஷாபாத்திரத்தை தரிப்
௧௦௩. இதுவுமது. பள். †— சரீரசம்பந்தமான நரம்புகளாற் கோக்கப்
பட்ட சிரக் கபாலமாலைகளால் பிரகாசமிகுந்த ஆகா
யத்தையுடையவளாய் தனக்குத்தானே பயங்கரமாய்
உலகங்களனைத்தையும் நாசஞ்செய்வள், விஸ்வரூபங்
கொண்ட விஷ்ணுவினது விருத்தமாகிய சிரங்களென்
கின்ற தாமரைமலர்களாற்றொடுத்தமாலைகளுடன் ஒப்

* இ-ம்; காளராத்திரி விஸ்வத்தைத் தன்வயமாக்குமென்பதாம்.

¶ இ-ம். காளராத்திரி சர்வத்தையுஞ் சங்கரிக்கின்ற மகா காலனையுந் தனது விநோதக் கருவியாய் வைத்திருக்குமென்பதாம்.

‡ இ-ம். சங்காரசத்தி, சுவர்க்கமுத னரகபரியந்தங்களை விசித்திரமான ஆபரணங்களாகத் தரிக்குமென்பதாம்.

† இ-ம். கோரசத்தி உருத்திரன் முதலிய சகலரையுந் தன்வயமாக்குமென்பதாம்.

கoச. ஜகத்தைத்தனமாகவும்சிவனை வாயுள் முதலியவொன்பதாகவும் பரத்தைக் காலமாகவும் பகுத்துத் அூஷணித்து மேல்இவைக்கெல்லாங்காரணமான ஈசுரசத்தியைச்சொல்லி அதனையுஞ் சத்தாமாத்திரத்திலடக்கி அச்சத்தொன்றுமே சேடமென்பதைவெளிப்படுத்துநிமித்தம் நியதிசத்தி முதலியவற்றையுமித்தையெனநீக்குகின்றது

பற்ற நிருத்தஞ்செய்து சர்வசங்காரகாலத்தில் பிரகாசித்துக் கொண்டிருப்பள். ‡— இப்பொழுது சொல்லப்பட்டவஸ்துக்களியாவும் நித்திய வஸ்துக்களல்லவாம், கொடியமனமானது அகங்கார நிமித்தமேயாம் தெரியப்பட்டபொருகள்ளியாவும் இல்லாததாகப்போகின்றன. சநநங்களின்முடிவு தெரியவில்லை ஆதலின், அறிவுமயங்கும் வியாகுலத்தினல் மனம்வருந்தும், இச்சாவியாதிகள் யாவர்க்குமிருந்திருக்கின்றன. இருண்டமயக்கமான விச்சைதீர்ந்த சத்துக்கள் அரியராம். புருடார்த்த சாதனத்திற்குரிய எவ்வனமானது. பயனின்றிய முயற்சியினல் தானே கழிகின்றது.¶—மகான்களிடத் தன்பானது நெடுந்தூரமாம்.

கoடு. சாதுசங்கமரிதெனல்.

ஆதலின் அடையத்தக்க மோக்ஷமார்க்கங்கிடையாது. ஆதலின் ஆத்மதத்துவம் பெறுதற்கரிதாம். களங்கமனது பிறர்சுகந் தனது சுகமாயனுபவிக்கு மைத்திரியில்லாமையான் மயங்கும், ஆதலின் பிறர்செய்யுஞ் சத்கிருத்தியத்தி லாநந்திக்கு முதிதையின்மையால் அகமகிழ்ச்சி தூரமாம், பிறர்துக்கந் தன்றுக்கமாகப் பார்க்குந்தயை யின்மையாற் கிருபையுண்டாகாது, பரவுகின்ற இழிவானது பிறர்செய்யுந் தீவினையிலுபேட்சையில்லாததினல் அதிதூரத்திலிருந்தாலும் வரும். தைரியம்போய் அதைரியமாம், கெடும்படிநரகத்தில் வீழ்பவர் திரும்பவுஞ் சுவர்க்கத்தி லேறுவார்கள், மூடர்கள் சங்கமெளிதாம், தெளிந்த சாதுக்கள் சங்கமானது அரிதாம்.†— தோன்றி நசிக்கின்ற வஸ்துக்களிற் பெற்றபாவனையானது பவபந்தமாம். வாசனுசமஸ்காரமுள்ள சீவபரம்பரைகள்கலந்துசுவர்க்க நரகங்களிற் செல்லும். திக்குகள் அதைப்பகுக்குஞ் சூரியனின்மையாற் றேற்றுவாம். தரிசித்ததேயங்கள் மறுபேருள்ளதாக மாறுபடும். கனமானமலைகள் சிதறிப்போம். சத்தாசாமானியமானது வியாபிக்க அந்தரக்ஷலோகநசிக்கும், தேவலோகநசிக்கும், பூலோகநசிக்கும், நெருங்கிய சமுத்திரம்வற்றும் நக்ஷத்

கoசு. ஜீவேஸ்வராஜகங்கள் தத்துவத்தில் அயிக்கியமாமெனல்.

‡ இ-ம்: சங்காரசத்தி சிருஷ்டி திதி கிருத்தியமுள்ள பிரம விஷ்ணுக்களையுந் தன்வயமாக்கிச் சர்வ சூனியமயானத்தினிருத்தஞ்செய்யும் பரமேஸ்வர சத்தியாம

¶ இ-ம். நித்தியமான வாத்மார்த்தத்தையடைய முயற்சியாமல் வீணகக் கழிக்குங் காலத்துக்கு விசனப்பட்டதாம்.

† இ-ம். சற்சங்கமில்லாததினற் றத்துவஞானமு மற்சர முதலியவற்றுன மைத்திரி முதலியனவுமில்லாமற் சுழல்வார்களென்பதாம்.

திரங்கள் சிதறும், அசுரர்களும் தேவர்களுமாகிய விருவருடைய கூட்டங்களுநசிக்கும். †— சித்தர்களு நசிப்பார்கள். துருவனுங் கெடுவான். மும்மூர்த்திகளும் பரதத்துவத்திற் கலப்பார்கள், சிருஷ்டியாதியைச் சங்கற்பத்தா லுண்டாக்கு மீஸ்வரசத்தியான காலமும் விதிக்கிற நியமனசத்தியும் அந்தமாம். பருத்தவாகாயமு நாசமாம். மாயாமயக்கத்தை நிவிர்த்தி செய்யும்பொருட்டு கொடுப்பவராயும், வசனத்துக்குங் கேள்விக்குமெட்டாத தத்துவஸ்வரூபராயும்; களங்கரகிதமான ஞானமூர்த்தியராயு மிருக்கின்ற ஒன்றான பரமேஸ்வரனால் நிந்தைபொருந்த பழமையாகத் தோற்றுகின்ற ஜகத்து ஈனமாம்.

௧௰௭. இதுவுமது.

௧௰௮. சகத்துண்மையென்பதை நிந்தித்தல்.

*— இக்காலம் மங்கலங்களாம். இது வசந்தகாலமாம், தேசயாத்திரைக்கிது நல்லகாலமாம், அவ்வளவு சிறப்புள்ளதே பந்துக்களாம். இந்தச்சுகமிருந்த பிரகாரமும் அதிசயமுள்ளபோகமும் என்ன வியப்புள்ளதாகு மென்று விருதாவாகச் சிந்தித்து ஜகத்துளார் நசிக்கின்றார்கள்.

௧௰௯. சம்சாரசுகம் முடிவிற்றுன்பமாமெனல்.

மகான்கள் சரித்திரத்தை தான்செய்யச் சிந்தித்து முன்னதாயிருக்கின்ற பகற்காலங்களிலெல்லாந்தேடாமல் அக்காலம் வீணாகப்போகுமானால் இரவில் நித்திரையுண்டாமோ, ‡—இல்லாளையும், புத்திரர்களையும், தனத்தையும், அமுதத்தைப்போல என்னுடையதென் றபிமானித்து மனதினாலிச்சித்து தனது செல்வங்களனைத்தையும் அந்தமனைவி புத்திரர்களுக்காகவே செய்வார்கள். அவ்விருப்பமுள்ளவைகளாகிய வனைத்தும் வினையினால் நசிக்குங்காலத்தில்அதிக துக்கத்தைச் செய்யும்.

௧௧௰. எதிரற்ற செல்வமு நசிக்குமெனல்.

¶— சத்துருக்களனைத்தையும் துரத்திவிட்டு செல்வம் அனேகம்வர அவைகளை எதிரில்லாமல் அனுபவிக்குங்காலத்தில் எங்கிருந்தோ வந்து கேடற்றகாலன் நாசஞ்செய்வான், மனைவிபுத்திரர் முதலான மாயைகள் நாநாவிதமான விடங்களி

† இ-ம். சத்தாமாத்திரத்திற் பாவனையாலுண்டான வனைத்து மித்தையாயிருக்க நாமெப்படி நித்தியமாவோமென்பதாம்.

* இ-ம். பரிசுத்தமான ஞானத்தில் மும்மூர்த்தி முதலிய பேதங்களில்லாதிருக்க நாமெப்படி யிருப்போமென்பதாம்.

‡ இ-ம். போகங்களை யற்புதமென்று வீணாகக்கருதி பிரம விசாரத்தை விரும்பாம லிருப்பதற்கு விசனப்பட்டதாம்.

¶ இ-ம். தனது செல்வங்களைத் தானபிமானித் திருக்கின்ற மனைவி புத்திரர்களுக்குக் கொடுக்கும்போதிற் சுகமாயும் அவை நசிக்கும்போது துக்கமாயும் வருத்துமென்பதாம்.

விருந்து மார்க்கத்தில்வந்து கூடுவார் போலவாம். †—

ககக· பிரமராயுளுமித்தையெனல்

கற்பமாகிய க்ஷணநேரத்தில் பிரமாக்களு நசிப்பார்கள், சிறிதாகிய காலநுட்பத்தினால் காலசமூகத்தின் அணுத்துவத்தையும் மகத்துவத்தையும் சிந்தித்து அளவுசெய்யும் புத்தியானது மித்தையாம், சொல்லிய சீவர்களனைத்தும் நாநாவிதமான தீமையில் மயங்குவர். ‡—

ககஉ. கருமபல முதலிய யாவுமித்தையெனல்.

கற்றுணர்ந்த பெரியோர்க ளரிதாயிருப்பர், வர்ணாச்சிரமத்துக்குரித்தாய் நிறைந்த கிரியைகளும் துன்பத்தினால் சகலமு மில்லாததாம். எப்படி சீவித்திருப்பது, அப்படி சிறப்புள்ள நாள்களும் மேலான சம்பத்தும் அத்தொழில்களுமாகிய யாவுநசித்து நினைப்புமாத்திரமாய்த் தோற்றும் நாமுமந்த மார்க்கத்திற்செல்வோம். ¶—

ககங. உயர்வு தாழ்வு நிலையன்றெனல்.

துன்பஞ்செய்கின்ற வாபத்தும், சம்பத்தும், சநநமும், மரணமும், என்பனவனைத்தும், கணிதநூலிற் சொல்லுவதான க்ஷணத்தில் நசியாதவையில்லை. கொடியவீரன் வீரமில்லாத ஒருவனால் நசிப்பன். ஒருவனால் நூறுபேர் கொல்லப்படுவார்கள், வணங்கத்தகும் ஈனர்கள் மேலான ப்ரபுவாவார்கள். இவ்வண்ணம் வரம்பின்றிச் சக்கரமாகச் சுழலும். §—

ககச. இராச போகங்களி லிச்சையுண்டாகாதெனல்.

அப்படிப்பட்ட தோஷங்களென்னும் காட்டுத்தீயினால் மிகவும் வெந்த என்மனதில் ஜலத்தில் கானற்சலந் தோன்றாததுபோலப் பரவிய செல்வாபேக்ஷையுண்டாகாது, இராஜப்ரவிர்த்தியிற் செல்கின்ற ஆயுளும் இறப்புமாகிய இவ்விரண்டையும் இச்சிக்கேன், இப்படிப்பட்டதாகிய ஓர் துன்பமில்லாமல் இப்பொழுதிருக்கின்றபடியே இருக்கிறேன். *-

ககரு. சித்தத் தியாகம் விரும்பல்

அறிவின்வசமாய்வந்த உமது புத்தியினால் என்மனதை நிவிர்த்திசெய்யாமற்போல் நிவிர்த்திசெய்வது இனியெக்காலம்! ஆலகாலவிடம்விடமன்று விடயமே விடமாகும். துன்பஞ்செய்கின்ற விட்மா

---

† இ-ம். சார்வபூம னனுபவிக்குஞ் சுகமும் சம்சாரமும் மாயா சம்பந்தமாதலாற் கெடுமென்பதாம்.

‡ இ-ம். பிரமன் முதலிய யாவராயுளு மித்தையாதலால் அற்பாயுசுந் தீர்க்காயுசுமின்றென்பதாம்.

¶ இ-ம். நல்லதினங்கள் முதலியயாவு மில்லாதிருக்க நமக்கென்னகதியென்று விசனப்பட்டதாம்

§ இ-ம்: சுகதுக்கமுதலிய யாவுங் கணத்தி னசிப்பதுமன்றி வறம்பில்லாமற் சுழலுமென்பதாம்.

* இ-ம். முன்சொன்ன தனமுதலான தோஷாக்கினியினா லெரிக்கப்பட்டிருக்கின்ற நான், போக முதலியவற்றில் விரும்பாமற் சும்மாயிருக்கின்றேனென்பதாம்.

னது ஒருசரீரத்தைகெடுக்கும் விடயவிடமானது

௧௧௬, சீவன் முத்த ரிலக்கணம்.

இனிவருந் தேகங்களேயுங்கெடுக்கும்.‡— சுகமும், துக்கமும், பந்துக்களும், மித்திரர்களும், ஆயுளும், மரணமும் என்பனவனைத்தும் விளங்காநின்ற ஞானவான்கள் மனதைப் பந்தப்படுத்தாவாம். சொல்லாநின்ற வாயுளானது காற்றினுற் சிந்திய மேகசலத்திவலையை யொப்பாகும். சமானமில்லாத விடயபோகமானது மேகமிசையெழு முகிலுலுண்டாகாநின்ற

௧௧௭. ஆத்மஞானத்தை யபேக்ஷித்து விசனப்படுதல்.

மின்னலுக்கொப்பாம். †— மனிதர்களுடைய முத்திக்குச் சாதான எவ்வனம் நிலையில்லாதது இவையனைத்து மனத்திற் சிந்தித்து உபசாந்தத்தையுடையவறிஞர்களாகிய நீங்களனைவரும் சமாதிநிஷ்டையையடைவீர்கள், ஆராய்ந்தறிந்த என்மனமானது கூடஸ்தபிரம வைக்கியத்தை யடைவற்கே யிசைந்தது, நாயகனைப்பிரிந்த நாயகியைப்போல ஆத்மநிச்சயத்தி

௧௧௮. நிச்சயம் விசாரித்தல்.

லும் விடயவிச்சையிலும் சேராது.¶— ஆகையினுல் துன்பமும், பிழையும், உபாதிகளும், சந்தேகமுமில்லாமல் மோகமில்லாமல் பிரகாசித்த நிலையான பதமியாது, இச்சிக்கும் சுகமிருந்த விடயமாகிய வக்கினியில் விழுந்தாலும் அக்கினியில்வைத்த இரசகுளிகையைப்போல தீதடையாத நிலையான பதமியாது.§—

௧௧௯. மெய்யுணர் வினுவுதல்.

அலைவுள்ள ஜலத்தையன்றி சமுத்திரம் வேறில்லாததுபோல வாக்குவியாபாரமே யன்றி சம்சாரமானது வேறின்றும், ஒழுக்கமுள்ள சத்துக்கள் எப்படி குற்றமுள்ள துன்பத்தை நீங்கினுர்கள், தேவரீருணர்ந்திரா நின்ற தியாது, அந்நிச்சயத்தை அடியேனுக் கனுக்கிரகஞ்செய்வாய்.*— இந்நிலையிலலையா விஸ்ராந்தி

௧௨௦: விஸ்ராந்தி வருமளவும் ஒன்றையும் விரும்பேனெனல்.

பதமில்லையா! இருக்கின்றதென்றுல் எதார்த்தமாகவே யெனக்கொருவருஞ் சொல்லமாட்டார்களா? சொல்லுவார்களாயின் அவ்விஸ்ராந்திபதத்தை சுயம் நானே அடையமாட்டேன், அப்போதுசந்தேகமின்றி

‡ இ-ம். முன் சாதன சதுஷ்டயமுண்டாய் அதனுல் விடயதோஷ திருஷ்டியுண்டான இவ்விவேகமிருக்கும்போதே மனோநாசஞ் செய்யாவிடில் விடயமெப்போதும வருத்துமென்பதாம்.

† இ-ம். மித்தையான சுகதுக்க முதலிய யாவுஞ் சத்துக்களே வருத்தாதென்பதாம்.

¶ இ-ம். விஸ்ராந்தியடையு நிமித்த மனதை யடைக்கவேண்டு மென்பதாம்.

§ இ-ம். எவற்றிற்கும் விலக்ஷணமாயவைகளிற்கூடியுங்கூடாமலுமிருக்கின்ற வஸ்து யாதென்று வினுவினதாம்.

* இ ம். மஹான்களினது துக்க நிவிர்த்தியான தடையற்ற வானந்தத்தைப் பெற விரும்பினதாம்.

யும் அகங்காரமின்றியு மிருக்கின்ற யான்மேல்செய்வ தியாதென்னில், அன்னமும் விரும்பேன், மதுர மானசலத்தையும் விரும்பேன், அழகியவஸ்திரத்தை

கஉக. நித்திய கன்மங்கள் செய் யேனெனல்.

யும் விரும்பேன்.— ஸ்நாநந் தானமுதலான நித்திய கருமங்க ளனைத்தையும் செய்யேன் நன்மையான இராஜவிபகாரத்திலும் சுகாசுகத்திலும் செல்லேன், சரீரநழுவுவதையல்லாமல் மற்றொன்றையும் விரும் பேன், மௌனத்தையுடையவனாய் எழுதப்பட்டசித் திரத்தைப்போல இராகத்துவேஷங்களில் இச்சை

கஉஉ வசனியா திருத்தல்.

யற்றிருப்பேன்.¶—களங்கமற்ற குளிர்ந்த பூரணசந் திரனைப்போல இனிமையுள்ளவனும் இனிய வச னத்தினாலும் விசாரிக்கின்ற ஆத்ம விவேகத்தினாலும் விகசிதமான மனதையுடையவனுமிருக்கின்றஇராம ரானவர், அகங்களிக்கின்ற முனிவர்கள் முன்னே இப் படியாகச்சொல்லி கனமாகிய மேகத்தின் முன்னே கேகாவென்னுஞ் சத்தத்தைத்தவிர்ந்த மயிலைப்போல வசனியாமற் சும்மாயிருந்தார்.†—

---

## வயிராக்கியப்பிரகரணத்தில்
## சுகர்கதை.

---

### அவதாரிகை:

முன்கதையிற் சுயமாயுண்டான சாதனசதுஷ்டயத்தில் இரண்டாஞ் சாதனமான நிராசையினாற் சிவேஸ்வரசகங்களாகக்காணப்பட்ட யாவை யும் அனர்தசட துக்கமெனத் தேவத்தன்மைநிறைந்த சபையிற்சொல் லிய இராமனனுபவத்தினால் இவன் சகலபந்தங்களுநீங்கி சைதன்னிய மாத்திரமாயிருப்பதை யுணர்ந்தோரில் விசுவாமித்திரமுனிமேற் சர்வ வியாபகமான சாக்ஷாத்காரமே நீயென்று அறிவிப்பிக்கும்பொருட்டு இவ் வனுபவமுள்ள சுகமுனியின் கதையை நிரூபிக்கின்றார்.

---

களங்கமுள்ள மகாசம்சாரத்தை கெடுக்கப்பட்ட அதிசயமான இளவரசான இராமன் வசனங்களைக் கேட்டு தசரதன் சபையிலிருந்த சகலரும் இவ்வச னத்தைக் கேட்கவந்ததுபோல மயிர்க்குச்செழ களிப்

க. மகிட்சிய டைதல்.

---

¶ இம் கன்மங்களின் முயலாம னிஷ்கன்மனாயிருந்து தேகத்தை விடுவே னென்பதாம்.

† இ-ம் சபையில் இராமர் தனதபிப்பிராயத்தை முனிவர்களுக் கறிவித்து அவர்களபிப்பிராயந் தெரிந்துகொள்ளு நிமித்த மௌனமாக விருந்தாரென்ப தாம்.

பின்மிருந்தார்கள். ஒலித்தலையுடைய சித்தர்கணங்களும் ஆகாயத்தின்கண் மகிழ்ந்தார்கள்.¶— நல்லது நல்லதென்னும் வசனமும் நல்லபுஷ்பமாரியும் அரைநாழிகைநேரம் சபையில் நிறைந்தபின்பு சித்தர்கள் கற்பகாலம் வலிய துன்பத்தோடும் விண்ணிற் சஞ்சரித்து மனோமயக்கமுள்ள நாங்களனைவரும் இன்றையத்தினம் இராமன்வசனமென்கின்ற இனியவமுதங் கிடைக்கப்பெற்றோம். ‡-தெளியப்பட்ட சித்தத்தையடைந்தோம் இதற்கு மேன்மையான முனிவர்கள் போதிக்கும் வஸ்துவை மேலடைவோமென்று சித்தர்கணங்கள் ஆகாயத்தினின்று பூமியிலிறங்கவும், மகாசபையி. லிருந்தோரனைவரும் எழுந்திருந் ததிர் கொண்டுவந்து. o—சித்தர்களனைவர்க்கும் வசிட்டரும் விசுவாமித்திரரும் முந்தியாராதித்தார்கள்; பின்பிந்த முனிவர்களுக்குச் சித்தர்களும் பூசித்தார்கள், அரசனான தசரதனும் அச்சித்தர்களுக்கு பூசைசெய்தான், ஆக்கமுள்ள வவ்வரசனுக்கும் அச்சித்தர்கணங்கள் முகமன்வசனத்தினால் ஆராதித்தும், *—வணங்கி தங்கள் முன்னேயிருந்த செவ்வியகண்களையுடைய விராமருக்கும் முகமன்வசனங்களை பழுதற்ற புஷ்பவருஷத்தினாலும் அன்பான வசனங்களாலும், அன்புசெய்து முனிகளே நன்மையான மைத்திரியாதி குணங்களின் மிகுந்த இராமர் துறவாகச் சொல்லிய வசனங்கள் முற்றுங் கெம்பீரமுடையதாய் அளவற்ற வதிசயமுள்ளதாமென்று சொன்னார்கள். †—

தேவநிர்மாணமாய் அளவற்ற தீமையைச் செய்ய உற்சாகமிருந்த குற்றம்பொருந்திய சம்சாரத்தில் சுகம்வருவது அரியதாம், சிறந்த வயிராக்கியசித்தமுள்ள இராமனுக்கு அச்சம்சாரமிஷ்டமென் றுண

௨. சித்தர்கள் மகிழ்தல்

௩. சித்தர்கள் சபைக்கு வருதல்;

௪. சித்தரு நரருஞ் சந்தித்தல்.

௫. இராமனது நிராசையைப் புகழ்தல்.

௬. சித்தர்கள் தங்களை யிகழ்தல்

¶ இ-ம். ஆகாயத்திற் சித்தர்சபையும் பூமியிலிராசசபையும் இராமனது வைராக்கிய வசனத்தைக்கேட் டானந்தத்தை யடைந்தனவென்பதாம்.

‡ இ-ம். இராமன் வயிராக்கிய வசனத்தினாற் சித்தர்கள் மயக்கந்தெளிந்த தென்பதாம்.

o இ-ம். விஷயதோஷதிருஷ்டி நிரூபணத்தினான் மனந்தெளிந்த சித்தர்கள் மேலாத்மானுபவத்தையுந் தெரிந்துக்கொள்ள ஆத்மாராமன் சபைக்குவந்ததாம்.

* இ-ம். சித்தர்களுஞ் சபையிலுள்ளோரு மொருவருக்கொருவர் வணங்குங் கிரமமறிவித்ததாம்.

† இ-ம். இராமனது வயிராக்கிய வசன மாச்சரியகாமுள்ள வாழ்ந்த கருத்தாக விருக்கின்றதென் றதிசயித்ததாம்.

ரும் பகுதியதாயின், நமக்கு மிஷ்டத்தைக்கொடுக்குமென்று சொல்லப்படும்; அவரால் வெறுக்கப்பட்டவைகளை விரும்புதலின் தேவரிஷிகள் முதலிய யாங்களனைவரும் அறிவில்லாதவர்களென்று அச்சித்தர்கள் சொன்னார்கள்.

எ. இராமனுரைத்த வனுபவமே நிச்சயமெனல்.

○-விசுவாமித்திரர்சொல்லுவார், இராகவனை யன்பாகப்பார்த்து நீசுயமாகவே குற்றமற்ற வறிவினால் குற்றமற யாவையுமறிந்தாய், இனி தெளிவாயறியவேண்டியபொருள் வேறொன்றில்லை, ஞானநிறைந்த சுகமுனியும் நீரும்அறிவினாற் சமானமாவீர்கள்.†

அ. சுகமுனியினனுபவத்தை விசாரித்தல்.

எதிரற ஞானத்தைப்பெற்றவர்களும் விஸ்ராந்தியையடைய விரும்புவார்களென்றுசொல்ல, இதைக்கேட்ட இராமர் சொல்வார், என்னையனே? சுகமுனிக்கு அகம்பாவமற்ற வறிவுண்டாயிருந்தும் விஸ்ராந்தியானது முன்னில்லாமல் இன்பமுற பின் புண்டானதெப்படி என்றுகேட்க.‡

கூ. சுகமுனியினனுபவத்தை யுரைத்தல்.

—முனிவர் சொல்லுவார், எழுபிறப்பைக் கெடுக்கின்ற ஞானமானது நிறைந்த சுகப்பிரமரிஷியும் உன்னைப்போல முன்னுள்ளஜகசுபாவத்தை விசாரித்து நிலைபெற்ற விவேகமுள்ளவராய்களங்கமற்ற ஞானத்தையடைந்தும் அந்நிச்சயத்திற் சந்தேகமுள்ளவராய் விஸ்ராந்தியடைந்திலன்¶.

கo. மாயாஸ்வரூபம் வினவுதல்.

-விடுதற்கரிய சஞ்சலத்தை நீக்கி விடயபோகத்தினின்றும் திரும்பிய மனதையுடைய சுகரும் மகாமேருவில் வசிக்கின்ற தன்பிதாவான வியாசர் பக்கத்திலடைந்து இத் துக்கமயமான மாயையானது வந்ததெப்படி? நசிப்பதெப்படி? தொடர்ச்சியில் ஆரையுடையது? எவ்வளவுள்ளது? எப்போது ஈதுண்டாயிற்றென்று கேட்டார்.*

கக. அனுபவம் விளங்காமை.

— அந்தச் சுகரானவர் வினவினவனைத்தும் அவனறிவிற் பொருந்த உரைத்தபோது முன்பியானறிந்த பிரகாரமே சொன்னீரென்றுசொல்ல, அவ்வசனத்தினால் நன்னிச்சய மடையாமையைப் பார்த்து சுகபோதமானது எனக்குத் தெரியாது, அரசனாகிய சனகரென்பவர் குற்றமற்ற ஞானத்தில்

○ இ ம். மாயாரகிதரான இராமருக் கம்மாயாசகிதரான யாங்களறிவிற் சமானமாகோ மென்பதாம்.

† இ ம். சுயமாயுண்டான நிராசையே வாத்மானுபவத்தைக் கொடுக்குமென்பதாம்.

‡ இ ம். பரமசுகத்தைப்பெற விரும்பினதாம்.

¶ இ-ம். களங்கமற்ற ஞானத்தையடைந்தும் அநித்தியமாகத் தள்ளப்பட்டவஸ்து சேடங்கணீங்காதவதனால் விஸ்ராந்தியுண்டாகவில்லை யென்பதாம்.

* இ ம். மாயையின் றுற்பத்தி ஸ்திதிலயத்தை விசாரித்ததாம்.

௧௨. பக்குவ சோதனை.

மிருந்தவர். †— அவரைக் கேட்கக்கடவாயென்று கிருபையுடன் பிதாவானவரனுப்ப, மகாமேருவி னின்று பூமியிற்சென்று ஜனகராஜன் வாழாநின்ற பொன்மயமான வீட்டினது வாயிலிலடைந்தார், மே லான சுகப்பிரம ரிஷியினுடைய வரவைத்தூதர்களா ற்கேட்டு சோதிக்கும்பொருட்டு நினைத்து அரசன் காணச்சென்றானில்லை, விகற்பமின்றிய சுகமுனியான

௧௩. இதுவுமது.

வர் ஏழுநாளிருந்தார். ‡—பின்னுமேழுநாள் மற்றோ ரிடத்திலிருக்கும்படி வைத்தபின்பு, அந்தப்புரத்தில் ஏழுநாளிருத்தி சிறிய இடையையுடைய மடவார் களால் சந்தன புஷ்பமுதலான போகங்களையும் அறு சுவை யுண்டிகளையும் கொடுப்பிக்க புசித்தான், குளி ர்ந்த பூர்ணசந்திரனுக்கு சமானமுள்ள சுகமுனியான வர் இவ்விடயங்களின் குற்றத்தையும், குணத்தையும்

௧௪. சுகதுக்கங் களிலழுந்தாமை.

ஆராய்ந்திலர். ¶—அரசனாகிய ஜனகராற்கொடுக்கப் பட்ட போகங்களின் சுகமனைத்தும் அவன் முன்செய் யப்பட்ட அவமானமான துக்கமனைத்தும் இச் சுக முனியினது மனதை எவ்வளவேனு மசைக்கவில்லை, இளமையு மேன்மையுள்ள தென்றலானது அழகிய மலைகளில் பெரிதாகிய மேருவை அசைக்குந்திற

௧௫. சந்தித்து வினவுதல்.

த்ததோ. o—ஜனகராசன் அவ்விடத்தவ ரகமகிழ்ச்சி யைப்பார்த்து நமஸ்கரித்து துதித்து தாங்காநின்ற சகவியாபாரத்தை நீங்கி இலாபமனைத்தையுமடைந்த சுகப்பிரமரிஷியே இவ்விடத்திலெழுந்தருளியகாரியம் என்னவென்று கேட்க, எப்படி மாயையுண்டாயிற்று, எப்படிவளர்ந்தது, எப்படி நசிக்கும், உள்ளப்பிர

௧௬. சனகர் வாக்கியத்தை யொப் புக் கொள்ளுதல்.

காரம் குருவேயருளுமென்று,*— உண்மையாகக் கேட்கவேண்டிய கிரமத்தை சுகப்பிரமரிஷிகேட்க, ஜனகராசனும் வியாசர்முன் சொல்லிய அவ்வண்ணஞ் சொன்னமாத்திரத்தில், ஞானவானாகிய சுகரும் சுய விவேகத்தினால்முன்னமே இவ்வண்ணம்தெரிந்தேன்,

† இ-ம். ஆசாரியரறிவிப்பதெல்லா மக்தின்றிய வனுபூதியெனக் கொள்ள வேண்டு மென்பதாம்.

‡ இ-ம். சுகமுனிவரது சாந்தியாதிகுணங்களைச் சோதிக்கும்பொருட்டு முன் வாயலிற் றடைசெய்ததாம்.

¶ இ-ம். இடையேழுநாளோர் வாயலிற்றடுத்தலாற் குரோத சோதனையை யும் கடையேழுநா ளந்தப்புறத்திற் போகங்களைக் கொடுத்தலாற் காமசோதனை யையுஞ் செய்ததாம்.

o இ-ம். மனமானது போகாபோகங்களிற் சலியாமற் சமதிருஷ்டியிலிருந்த தாம்.

* இ-ம். ஸ்வரூபப்பிராத்தியக்ஷம் விளங்கும்பொருட்டு மாயாவுற்பத்தி ஸ்திதி லயங்கடெரியவேண்டுமென்பதாம்.

நீரும் என் பிதாவைப்போல அவ்வருத்தத்தையே சொன்னீர், நிறைந்தவேதாந்தசாஸ்திரங்களனைத்தும் சொல்லப்பட்ட வாக்கியார்த்தங்க ளேகமேயென்று

௧௭. சங்கற்ப மயமான மாயாரூபத்தைச் சுருதிப் பிரமாணமாயறிந்தும், வியாசர் சனகர் அப்படியே போதித்தும், தனக்கு விஸ்ராந்தி வாராததினாற் றனதனுபவத்தைச் சொல்லி, மேலதைப் பெற்றுக் கொள்ளும்பொருட்டு வினவின சுகருக் கப்பிரகாரமே விஸ்ராந்தியடையும்பொருட்டு அபேக்ஷானுபவத்தை யரச னுபதேசித்தல்.

சொன்னார்.*— ஆத்மாவில் ஸ்புரணரூபமாய் வேறுபட்டுதித்தமாயாவேற்றுமையானது உதித்தவிடத்தொடுங்குமாயின்கெடாதின்றமாயையினிடத்தில்பிரயோசனமோரணுவளவாகிலுமில்லை, அஃதித்தன்மைத்து, சகலருடைய மயக்கங்களையுங் கெடுக்கின்ற குருவே ஒப்பற்ற நிச்சயமானவாத்மஸ்வரூபத்தை சொல்லவேண்டும் என்றுகேட்க, அதற் கரசன் சொல்லுவான், சுகரே, நீரே வரையறுத்தறிந்தும் பிதாவாகிய வியாசமுனிவர்சொல்ல தடுத்துங் கேட்டாய், அந்தநிலையே சத்தியம், ஆனாலும் இவ்விடத்தில் பரிபூரணமான சிதாகாயமே சாக்ஷாத்கரித்த ஆத்மாவேயுள்ளது, வேறொருவஸ்துவுமில்லை.o-

௧௮. இதுவுமது.

அந்தஞானமானது தனது சங்கற்பத்தினாற் பந்தப்படும், அச்சங்கற்ப நீங்கினாற் பந்தநிவிர்த்தியாம், அப்படிப்பட்ட வாத்மஞானத்தை செவ்வையாக நீயிப்போதறிந்தா யாதலால் போகங்களிடத் தாசையையும் திரிசியதிருஷ்டி யாவையும்விட்டு நீங்கினாய், துன்பநீங்க பூரணமனதினால் பெறத்தக்க சர்வத்தையும் பிரம்மமயமாகப்பெற்றாய், காண்பதற் கசோசரமாகிய வஸ்துவினிடத்தில் இரண்டறக் கலக்கின்றாய் சீவன்முத்தனானாய், மனதிலுண்டான மாயாமயக்கமென்கின்ற கவலையொன்றினையும் விடுவாய்.¶- சனகனென்கின்ற நாமத்தையுடைய அரசர்க்கரசன் இந்தப்பிரகாரமுபதேசிக்க, தனக்குத்தானே யிடமாயிருக்கின்ற பரவஸ்துவில் விஸ்ராந்தியடைந்து, களங்கமற்றசுகப்பிரமரிஷியானவர்சநநவச்சந்தவிர்ந்துமரண துன்பநீங்கி, மனவருத்தமற்று, விசாரிக்குந் தொழிலொழிந்து, அனுபவத்திற்சந்தேகநீங்கி, மகம்மேருவினுச்சியிற்சென்று, நிருவிகற்பமாகிய நிச்சலமான சமாதியில், சூரியனைக்கொண்ட கணக்கினால் ஆயிரம்

௧௯. விஸ்ராந்தி யடைதல்.

* இ-ம். மகாவாக்கியார்த்தங்கள் அபேதமென் றறிந்ததாம்.

o இ ம். ஆத்மஸ்புரணத்திலுதித்த திரிஸ்யத்தை ஆத்மசாக்ஷாத்காரமாகவறியின், விஸ்ராந்தியுண்டாமென் றுபதேசித்ததாம்.

¶ இ-ம். யாதொன்று தனது விஸ்மரணத்தான் மறைப்பட்டதுபோலவும் அதன் விடுதியில் வெளிப்பட்டதுபோலவும் விளங்குகின்றதோ, அச்சைதன்னியமே சர்வமாய் விளங்குகின்றதென் றறிந்தாற் சந்தேக நீங்குமென்பதாம்

வருடத்தில், திரியுநெய்யுஞ் சுவறி வியோமாக்கினியி னசித்த விளக்குக்கொப்பாக, ஞானகாசத்திற் கலந்தான்.‡— சிந்தையாகிய குற்றநீங்க பரிசுத்தனய் அலைகளையுடைய சமுத்திரத்தில் சேர்ந்தொன்ருகின்ற துளிகளைப்போல, தன்னிடத்துண்டான ஸ்புரணம் தன்னிற்கரைந்து பிரமத்தி லிரண்டறக் கலந்தான், மாயாசம்பந்தமான மோகம்விட்டு விஸ்ராந்தியடைந்தான், அம்மார்க்கம் உனக்குமாகும், அறியத்தக்க சகலமும் அறிந்திருக்கின்ற மனதுக்கு உரிமையான கிரமமியாதென்ருல், சதாகாலமும் களிப்புமிகுந்த போகங்க ளனைத்தும் எனதென்கின்ற சுதந்தர பாவத்தை விட்டிருக்கையாம்.¶—விடயபோகத்திற் பொருந்திய பாவனையினுல் அனுத்ம வஸ்துவில் உண்டாகாநின்ற பந்தமானது நிலைபெற வலிமையாகும், துன்பமிகுந்த பாவனையானது நீங்கினுல் துன்பமயமான பந்தமானது குறைந்துநாசமடையும், இராமா? வாசனுக்ஷயமே மோட்சமாம், இகத்திலுள்ள விடய வஸ்துக்களின் வாசனையினுல் கெட்டிப்படுவதே பந்தமாம், வாசனையின் வலிமையற ஜெயித்தவர்களுக்கு தபசு விரதமுதலியகாரணமின்றி போகசமுகங்களில் வெறுப்பாகின்ற மகான்களே சீவன்முத்தரென்று கௌசிகர்சொன்னுர்.*—மகான்கள் வசனத்தினுல் ஸ்ரீராகவன், மனதினுற் றீர்ப்பாயறிந்த வஸ்துவே வஸ்துவாம், வேருெருபொருளில்லையென்று வசனிக்கக்கேட்டு மஹாமனதில்விஸ்ராந்தியடைந்து, சந்தேகந்தீராநின்ற மஹாத்மாவாயிருக்கின்ற இந்த இராமனுக்கு வரையறுத்துச் சொல்லுபவன், மயக்கமுள்ள மூன்றுகாலங்களையுந் தெளிந்தறிந்தவராயும், இப்பூலோகத்தின்கண்ணுள்ள மானிடர்களுக் காசாரியராகியும், சர்வஞ்ஞராயும் நாமரூபமுள்ள சகலத்திற்கும் சாட்சியாகியு மிருக்கின்ற நல்ல வசிட்டனேயென்று, அரசன்சபையில் விசுவாமித்திரர் சொன்னபின்.†— விசுவாமித்திரமுனி வசிட்டருடைய வதனத்தைப்பார்த்து ஞாபக மிருக்கின்றதா, முன்னம நம்மிருவருடையவிரோதந்தீரவும், நன்மார்க்கமுள்ள

௨0. விஸ்வாமித்திரமுனி யனுபவ விலக்கண முரைத்தல்.

௨௧. பந்த முத்தியி னிலக்கணங் கூறல்.

௨௨. அருளி றை யறிவித்தல்.

௨௩. பக்குவர்க் குபதேசிக்க வேண்டுமெனல்.

‡ இ-ம். சீவன்முத்தித்தன்மையில் விதேகமுத்தியடைந்ததாம்.

¶ இ-ம். அனுபவிக்கு யானெனதென்னு மகம்பாவமற்றிருக்கவேண்டு மென்பதாம்.

* இ-ம். வாசனையுதயலயமே பந்தம் வீடென்பதாம்.

† இ-ம். சீடனறிந்த வறிவினுல் அவனமைதிபிறர் தனுபூதி யடையும்பொருட்டு அறிவிக்கத்தக்க ஆசாரியரை யறிவித்ததாம்.

சகலரும் பழயசஞ்சிதம் விடுபட்டு மோட்சமடைய வும்தாமரையில்வசிக்கும்பிரமாவினுல் ஆத்மசாக்ஷாத் காரம் விளங்கும்படி யனுக்கிரகித்த ஒப்பற்ற ஞானத் தின் கதைகளனைத்தும், அறிவுமிகுந்த இராகவ னுக்கு போதிக்கவேண்டும், ஆசைநீங்கிய சீடனு டைய மனதில் அனுக்கிரகிக்கின்ற பிரமவுபதேசம் யாதொன்றோ, அவ்வுபதேசமே செழுமையாகிய ஞானத்தையுணர்த்தும் சாத்திரத்தின் அருத்தமு

உச. அபக்குவனுக் குபதேசிக்கலாகாதெனல்.

மிது சிறப்புமிதுவேயென்று சொன்னுர்.‡— ஆசை மிகுந்த துஷ்டசீடனுக்குப்போதித்த வுபதேசமா னதுகரியசுணங்கன் சருமத்துள்வைக்கின்றமேலான பாலைப்போல சுத்தமாகாதென்று மேலான விசுவா மித்திரர் நானாவிதங்களாலுஞ் சொல்ல, தீமை நீங்கிய நாரதரும், வேதவியாசர் முதலான திரண்ட முனிவர்களும் இதைக்கேட்டு இதுவே நல்லதென்று அவ்வசனத்தையே சிறப்பித்தார்கள். கௌசிகரைப் பார்த்து பிரமாவுக்குச்சமானமான பிரமபுத்திரரான வசிட்டமுனி இவைகளைச் சொல்லத் தொடங்கி னுர்,¶-கலைஞானங்களை யுணர்ந்த விசுவாமித்திரரே?

உரு. உபதேசிக்கத் தொடங்கல்.

நீர் சொன்னபடியே யுபதேசிப்பேன்; அறிவை யாரா ய்ந்தறிந்த மகான்கள் வசனத்தைக் கடக்கப்பட்டவ ரெவர் நிலையில்லாத சநநமயக்கந் தீரும்பொருட்டு தாமரையில் வசிக்கும் பிரமாவாலே நிடதமலைமேலி ருந் தனுக்கிரகஞ்செய்த நிருமல ஞானக்கதைகளா னவை சஞ்சலமில்லாத பரிசுத்த மனதின்கண் ணிருக் கின்றதை சொல்லுவேனென்றுசொல்லி, அஞ்ஞானக் குழாங்கணசிக்க பூரணஞானமான பரமபதமானது யாவருக்கு முதயமாம்பொருட்டு, பரிசுத்தமான தரு மத்தோடுஞ் சொல்லத்தொடங்கினுர்.§—

சுகர்கதை

முற்றிற்று.

---

‡ இ-ம். ஆசாரியருபதேசம்பெற் றனுபவமான மார்க்கத்தைச் சீடனுக் குப தேசிக்க வேண்டுமென்பதாம்.

¶ இ-ம். பக்குவனுக் குபதேசிக்கவேண்டுமென்பதை வற்புறுத்திச் சொன்ன தாம்.

§ இ-ம். பிரமவுபதேசமான வகண்ட சாக்ஷாத்காரானுபவத்தை இராமனிமித் தஞ் சகலருக்குந் தோன்றும்படி போதிப்பதாம்.

# முமுட்சுப்பிரகரணம்.

## அவதாரிகை.

முதற்கதையிற்சுகமுனியறிந்த வறிவைக்கொண்டேயவர் சுவானுபூதிசாக்ஷாத்காரமாகும்பொருட்டு அரசனருளியபடியே இராமனறிந்த வறிவைக்கொண்டு அவர் சுவானுபூதி சாக்ஷாத்காரமாகும்பொருட்டு அவர்க்குதயமான முத்திவிருப்பத்தை வற்புறுத்த வசிட்டமுனி முமுட்சுப் பிரகரணங் கூறுகின்றார்.

௧. சாஸ்திரிய முயற்சியே முத்தி சாதனமெனல்.

இராமா? நீயிதைக்கேட்பாய், இச்சநந்தில் எப்போதும் ஒழுக்கமுள்ள சாஸ்திரயுக்தமானது நல்ல வெத்தனத்தினால் எவர்க்கும் புருடார்த்தமுள்ள சகலமும் வரும்; ஆத்மஞான சாஸ்திரியமான எத்தனமொன்றாகும்; சாஸ்திரிய வெத்தனமாவது ஒன்றாகும்; மற்றிவ்விரண்டில் துன்பமின்றிய ஞானசாஸ்திரிய மார்க்கமானது மோக்ஷநிமித்தமாம்; அசாஸ்திரிய மார்க்கமானது பந்தநிமித்தமாம்; பாலப்பருவத்திற்றானே தொடர்ந்துவருகின்ற இந்த ஞான சாஸ்திரங்களினாலும் மயக்கமில்லாத சத்துக்கள் சங்கத்தினாலும், மைத்திரியாதி சற்குணங்களினாலும் முயற்சிபெற்ற சத்துக்களுக்கு மோக்ஷவிலாபமுண்டாகுமென்றார்.¶—

௨. பூர்வ வாசனையே முக்கியமாயிருக்கின்றதெனல்.

இராகவன், முற்சநநவாசனையின் வசத்திலிருந்தேன், சன்மார்க்கவெத்தன மில்லாதவனானேன், யானென்னசெய்வேன் எனதாசிரியரே யென்றுசொல்ல, குணாதிசயமுள்ள இராமா? தனது சுயப்பிரயாசமான எத்தனத்தினால் பிரமபதத்தைப்பெறலாம், இதைத்தவிர வேறொன்றுமின்று, சொல்லப்பட்ட வாசனாசமுகத்தின் வேற்றுமையைக்கூறில், சுபவாசனை, யசுபவாசனையென்றிரண்டுவிதமாம் அவ்விரண்டில் சொற்பமாகியசநநங்களிலெல்லாநட்புற்றுவந்த வாசனையெதுவோ அதொன்றுமே பொருந்தியிருக்கும்.‡—

௩. சுபவாசனையையடையவேண்டுமெனல்.

சுத்தவாசனைதொடர்ந்தால் அதினாலே மிருதுவாக பரிசுத்தமாகிய பரமபதத்தையடைவாய், பரிசுத்தமாகாத பந்தவாசனைதொடர்ந்

---

¶ இம். புருடார்த்தத்தை விரும்பினவன் சாஸ்திரியமுயற்சியையே செய்யவேண்டுமென்பதாம்

‡ இ-ம். மதிவிதியென்றிரண்டு, முற்பிறப்பின் வாதனையென்பது விதியெனவும், தன்முயற்சியென்பது மதியெனவுங்கொண்டு, அவ் விதிவருவதுங் கெடுவதும் இம்மதியினாதலின் அதனா லாத்மவிசாரமான சுத்தவாசனையைக்கொண்டு அவ்விதியினால்வரும் அசுத்தவாசனையைக்கெடுத்து அபரோக்ஷ. சாக்ஷாத்காரமாகவேண்டுமென்மதாம்.

தால் துக்கத்தைவிளைக்கும், மிகவும் வருத்தமுற்றாயி னும் இவ்வாசனையை நீக்கவேண்டும், விதித்தநன்மை தீமையென்கின்ற இரண்டுமார்க்கத்தினால் வாசனையா கிய வெள்ளமதிகரிக்கும், பிரமவித்தையிற்பயிலும் ப்ரயாசத்தினால் மெத்தமுயற்சித்து தீயவிடய வாச னையை நீக்கி நன்மையுள்ள ஸ்வரூபவாசனையில் பொ ருந்தி யிருப்பாய்.¶— முயற்சித்து வருத்தப்படாமல் சமத்துவமாகின்ற வேண்டுகையினால் தனது முயற்சி யினால் நயமான விளையாட்டினால் மனமென்னும் சிறு குழந்தையை அசுபவாசனையிற் செல்லாமற்றடுத்து சுபவாசனையி னிறுத்தவேண்டும், முன்னெடுத்த நாநா விதமான சநநங்களில் பழகிய வசுத்தவாசனைகளை நீங் கச்செய்து மகத்தான சுத்தவாசனையுதயமாயின் முய ற்சிக்குப் பிரயோசனமாம், சுபவாசனை யென்செய்யு மோவென்னுஞ் சந்தேகம்வரினும் சுபவாசனையையே யடைவாய், அச்சுபவாசனையின் மிகுதி கொடிதல்ல, விளங்குகின்றமனஞ்சென்று பிரமஸ்வரூபத்தைதெளி கின்றபரியந்தம் ஆசாரியரும், வேதங்களும், பிர மோபதேசத்தையு மகாவாக்கியார்த்தத்தையும் போதி க்கின்ற மார்க்கத்தில் அனுபவமாயனுஷ்டிப்பாய்.‡—

௪. சுபவாசனையிற் செல்லுதலினுண்டான பலனுரைத்தல்.

பரிசுத்தமாயும், இப்பிறப்பி னினிமையாயும், சத் துக்கள் விரும்பப்பட்டதாயு மிருக்கின்ற சுபவாசனை யினால் மனதை களங்கமுந் துக்கமுமில்லாத ஆத்ம பதத்தை யடைவித்து அச்சுத்தவாசனையையும் விடு த்து, சாக்ஷாத்கார நிலையிலிருப்பாய், அவை திரும்பி வாராத முறைமையாக மாயாபாவனையைநீக்கி பூரண சாந்தத்தையும், ஆநந்தத்தையும் தவறாமல் விடய வாசனாத்தியாகமுள்ள அறிவினாலடைந்து சிறந்த தத்துவமசி யென்னும் வாக்கியத்தின்பொருளை கூட ஸ்த பிரமமென்னு மிரண்டையும் விசாரிக்கும், மனதை ஆனாயென்னும் பிரமத்தி லமரும்படி யயிக்கியஞ்செய்து, இராமா; நீயனுசந்தானஞ்செய்

௫. ஆத்மானுசந்தானக் கிரமமுரைத்தல்.

¶ இ-ம். ஜநநாந்தரங்களிற் றொடர்ந்துவருகின்ற வாசனைகளின் பலாபலங் களையும் அதிற்றள்ளுவதையுங் கூட்டுவதையு மறிவித்ததாம்.

‡ இ-ம். மனது செலுத்துமிடத்திற் செல்லுவதாகையால் அதனை யபரோட்ச ஞானமடைகின்றபரியந்தஞ் சுருதிகுரு சுவானுபவமான மார்க்கத்திற்செலுத்த வேண்டு மென்பதாம்.

சு. குரு பரம்பரையை யறிவித்தல்.

வாய்.¶— மதுவையுடைய தாமரைப்பூவில் வீற்றிரா நின்றபிரமதேவன் சொல்லிய வாக்கியத்தைக்கேட்பா யென்று சொல்ல, அவர்சொல்லிய காரணம் என்ன வென்று இராகவன்கேட்க? வசிட்டமுனி அனுக்கிர கஞ்செய்வார். அந்தமற்றதாய், எவ்விடத்திலு நிறை ந்திருப்பதாய் சகலத்திற்கும் இருப்பிடமாகி சகல வஸ்துக்களிலும், பிரகாசமாய் விளங்கிய உள்ளசிதா காயத்திலிருந்து விஷ்ணுவுதயமாயினர், அவருடைய இதயதாமரையில் பிரமனுதயமாய் பூமிமுதலிய வேறுபாடுகளை மனத்தின் கற்பனையைப்போல் சிருட்

எ. இதுவுமது

டித்தார்.— ஜகத்தையுண்டாக்கின பிரமதேவனே நாநாவிதமாக உயர்வாகிய பார்தவருடத்தி லுண் டான சீவர்களியாவும், அளவில்லாத துன்பமுறுவ தைப்பார்த்து, புத்திரரது துன்பத்துக்கு இரக்கப் படுகின்ற பிதாவைப்போல இரக்கப்பட்டு, அவ்வுயிர் கள் மோட்சமடையும் பொருட்டுச் சிந்தித்து செப முதலான நாநாவித கிரியைகளும், தேகத்தை வருத் துந் தபசுகளும், சமஸ்ததானங்களும், கங்கைமுத லான தீர்த்தங்களும், பிறவுமாகிய வனைத்தினுலும், சநநதுக்கந்தீராது, ஆத்மஞானத்தினல் சநநதுக்கம் விடுமென்று கலக்கமற்றமனதினல் தன்னைப்போல கமண்டலத்தையும் செபமாலிகையையும் கரத்திற்

அ. இதுவுமது.

காணும்படியாக நன்மை உண்டாக்கினர்.— அப்படி பிறந்து நமஸ்கரித்த வடியேனை தான்மகிழ்ச்சியுடன் வசிக்கும் தாமரையினது உத்தரதிசையில் ஒரு தளத் தின்மேலிருத்தி என்னுடைய மனதை ஒருமுகூர்த் தம் மாயையடையக் கடவதென்று சாபமிடவும், கலக்கமடைந்து புத்தியோடும் உண்மைஞானத்தை மறந்து கல்வியில்லாத மூடர்களைப்போல புலம்பா நின்ற வென்னைப் பிரமன்பார்த்து, வெவ்வியதுக்க மென்னவென்று கேட்க, சம்சாரமானது உண்டான மார்க்கமும் அது நீங்கி மோக்ஷமடையு மார்க்கமும் வினவ, அதுநன்றாய் விளங்கும்படி யனுக்கிரகஞ்

கூ. இதுவுமது.

செய்தார்.— ஞானுத்மஸ்வரூபத்தை யறிந்து சலன மற்றிருந்த வென்னை, பிரமதேவன் பார்த்து நாமே நின்னறிவைமாற்றி ஈனமான மாயையைக்கொடுத்து பின்பதை யறிவினல் நீக்கினேம், ஆத்மாக்களியாவும் நின்னுபதேசம்பெற்று, மோக்ஷமடைய உபாயஞ்

¶ இ-ம். சுத்தவாசனையாற் சித்தசுத்திவந்து அச்சித்தசுத்தியா லறிவுதய மாய், அவ்வறிவுதயத்தாற் கூடஸ்தபிரமைக்கிய நிரதிசயாநந்தானுபவ சாட்சாத் காரந்தாளென் றனுஷ்டானஞ் செய்யவேண்டுமென்பதாம்.

செய்தோம், ஞான முதிர்ந்தபின்கெடுகின்ற கிரியைக
ணிறைந்த சம்புத்தீவில் மேவிய பாரதவருடத்தில்
சீக்கிறத்திற்சென்று நானென்னு மகநீங்காத கிரியா
காண்டிகளுக்குக்கிரமமாக கருமகாண்டத்தைப்போதி
த்து, சாதனசதுஷ்டய முள்ளவர்களுக்கு ஆத்மஞா
னத்தை யுபதேசஞ்செய்யென் றருள் செய்தார்.†—

௧௦. சற்குருசற்சீட ரிலக்கணமறிவித்தல்.

அப்படியே பாரதவருடத்தில் வந்து ஆத்மாக்க
ளிருக்கின்ற காலங்களிலெல்லாம் இருப்பேன்,இவ்வி
டத்தொருகிரியைகளிலும்விருப்பமில்லை,இவ்விடத்தி
லிருந்து நனவிற் சுழுத்தியையடைந்த ஒழுக்கத்தி
னுல் துன்பமுள்ள மனதைத்தாண்டி தொழில்க
ளனைத்தையுஞ்செய்வேன், அபிமானத்தைக்கிரிகிக்
கின்ற என்து செய்கை யாதொன்றுமில்லை, சூரனுன
இராமா? ஆசாரியர் ஞானபூர்த்தியையும், அஞ்ஞான
த்தையும், ஆசாரவிவகாரங்களால் பகுத்தறிவோடும்
விசாரித்து உயர்வான சற்குருவைப்பெற்று ஆத்
மாவை யறிபவர்கள் அறிவில் மிகுந்த சீடர்கள்.‡—

௧௧. ஆசாரியர் அபக்குவனக்கு உண்மையை யுபதேசியாரெனல்.

ஆசாரியரனுக்கிரகஞ்செய்கின்ற அருத்தங்களியா
வையும் துவக்குங் கருத்தையு முடிக்குங் கருத்தை
யுஞ்சேர்த்து அறிபவர்க்கேயன்றி பார்த்தவிடய மய
மாகும் பசுத்தன்மையை ஒப்பான சீவத்தன்மையை
யுடைய சகலருக்கும், குற்றமற்ற வாசிரியர், தத்துவ
ஞானத்தைச்சொல்லார், பிரகாசியாநின்றசாந்தியும்,
விசாரணையும், சந்தோஷமும், சாதுசங்கமும் என்று
சொல்லப்பட்ட மோக்ஷத்தின் வாயலை காக்கின்ற
நான்குபேர்களும் இஷ்டமானுல், மோக்ஷமடைதற்கு
விக்கினம் வேறுண்டோ, பூமியைக்காக்கின்ற அரசர்
களின் வீட்டின் வாயலைக் காப்பவர்கள் இராஜதரிச
னத்துக்கு விடுவதுபோல மோக்ஷத்தில் அவர்கள்

௧௨. சாந்தியாதி குணங்களிலொன்றையாவது அடையவேண்டுமெனல்.

விடுவார்கள் ¶அந்தநால்வர்களில்ஒருவனன்பனுனல்
நால்வருமொத் தன்பராவார்கள்; ஆகையினுல், சதா
காலமும் முயற்சித்து அதற்கிடானவைகளில் எதா
னுலுந்தள்ளி அவர்களில் ஒருவரையாவது பிடித்துக்
கொண்டு பழக்கஞ் செய்யவேண்டும். நிலையில்லாத
சநநத்தைக்கெடுக்கசத்துக்கள்சங்கத்தினுலும்,ஆத்ம

† இ-ம். உலகத்திலுள்ள ஜீவர்கள் தமதாத்மஸ்வரூபத்தில் ரமிக்கச்செய்யும் பொருட்டு ஆசிரியர் திருவடி சூட்டியனுப்பின குறிப்பை யறிவித்ததாம்.

‡ இ-ம். பாரம்பரியமான மரபிலுள்ள வாசாரியரிடத்திற் பிரமோபதேசம் பெற்று ஆத்மானுசந்தானஞ் செய்யவேண்டுமென்பதாம்.

¶ இ-ம். முமுட்சுக்களுக்குச் சாந்தி முதலிய நான்கு குணங்களும் வேண்டுமென்பதாம்.

ஞானசாஸ்திர விசாரணையினுலும், மகாநிஷ்டையினுலும், அறிவை முதன்மையாக விருத்திசெய்யவேண்டும், துன்பமாகிய சம்சாரமென்கின்ற விஷமானது ஞானமென்கின்றகருடமந்திரத்தினுல்திரும்பும்.¶—

கங. விஷயத்தைக் கெடுத்தவிடத்து உண்டான நன்மையையும், அதைக் கெடுக்காவிடத்துள்ள விபரீதத்தையுங்கூறல்.

அம்புவருஷங்கள் ஆம்பல் புட்பவருஷத்தை ஒப்பாகும்; அக்கினிப்படுக்கைபன்னீர்தெளித்த மெத்தையையொப்பாகும்; சிரசையறுப்பதுசுகப்பொருந்திய சுழுத்திநித்திரையை ஒப்பாகும்; உடலையறுப்பது சந்தனம்பூசுதலைஒப்பாகும்; ஒழுங்காகியகணக்கற்றசலாகைகள் மார்பிற்றைப்பது நீண்டவேனிற்காலத்தில் துருத்தியினுல் வீசும் குளிர்ந்த சலத்தையொப்பாகும்; சேரக்கூடாத விஷயமென்கின்ற விடவிடுசியானது விவேகஞான மதிகரித்தவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்கு விலக்கக்கூடாது.†—

கச. ஆத்மவிசார விலக்கணங்கூறல்

குறைவில்லாத ஆத்மஞான சாஸ்திரங்களின்தெளிவான விசாரணையினுல் மேலான நிருவானசுகமுண்டாகுமென்பது உள்ளதல்லவா, நானறிகின்றவனுபவமும் ஆத்மஞான சாஸ்திரங்களின்முடிவான வாக்கியார்த்தங்களும், சற்குருவினுபதேச வாக்கியார்த்தங்களுமாகிய இந்தமூன்று பிரிவும், தம்மிடத்திற் பொருந்தியபிரகாரம் அனுஷ்டிக்கில் ஒன்றையும்விட்டு நீங்காத ஆத்மஞானம் பிரகாசிக்கும், அற்பவறிவையுடையவர்கள் அப்பியாசித்த அரியஞானசாத்திரமானது இழிவுள்ள வஞ்ஞானத்தைக் கொடுக்கும், இந்த ஞானநூலைப்போல பத்திகாண்டங் கருமகாண்டமுதலிய யெச்சாத்திரங்களும், அஞ்ஞானத்தைக் கொடாது §—

கரு. அஞ்ஞான விழிவும் முத்திக்குச் சகாயவசகாயமுமுரைத்தல்..

இப்படிப்பட்ட அஞ்ஞானத்தோடு வாழ்கின்ற வாழ்விலும் சண்டாளர்கள்வீடுகடோறும் ஒட்டிற் பிச்சைவாங்கிச் சுழல்வது சீரான வாழ்வாகும்; மிகுந்த திரவியங்களும் மித்திரர்களும், பந்துக்களும், காசிமுதலான புண்ணியதேசங்களும், கங்கைமுதலானதீர்த்தங்களும், முனிகளின் வாசஸ்தலங்களும், சரீரத்தை வருத்துந் தபசுகளுமாகிய எல்லாவற்றுலும், எப்பொழுதும்பரகதியைத்தொட

---

¶ இ-ம். சாந்தியாதி குணங்களைப்பெற்று சுருதி குரு சுவானுபவங்களினுல் வளரு ஞானத்தினுல் மாயையைக் கெடுக்கவேண்டுமென்பதாம்

† இ-ம். மனதைப் புலன்வழியிற் செலுத்தாமல் ஆத்மவிசாரத்திற் செலுத்துவதானுற் சுகமுண்டாய் அம்புவருட முதலிய வுபத்திரங்கள், புட்பவருடங்கள் முதலியவைபோலச் சுகமாய்ச் சகிக்கத் தக்கவைகளா மென்பதாம்.

§ இ-ம். ஆத்மஞானம் பிரத்திபட்சமாவதற்குச் சுருதிகுரு சுவானுபவமொத்து விசாரிக்கவேண்டும் அஃதின்றேற் துன்பமுண்டாமென்பதாம்.

ரத்தகுந்த சகாயங்களில்லை, மனவருத்தத்தால் பரிசுத்தமான பரமபதமுண்டாகும், மோக்ஷவாயற்காக்கின்ற நான்குபேர்களுக்கு எப்போது நீங்காமலிருக்கின்ற குணங்களை இராமா? நீ கேட்பாய்? மேலான சாந்தங்கிடைத்தால் ஆசையும், துக்கமும், சூரியன் முன்னே இருளைப்போலநீங்கும்.¶— சிஷ்டர்களும், துஷ்டர்களும், தாயைப்போல நம்புதற்குத் தகுந்ததாகி அமுதமானது தான்புசிக்கும்படி கிடைத்தாலும், வளப்பமுள்ள பங்கயமலரிலுறையும், இலட்சுமியானவள் வந்துபொருந்தினபோதிலும், சமானமாகாத ஆனந்தத்தைக் கொடுக்கின்ற சாந்தியையுடையவர்கள், நசித்தலும், வாழ்தலும், கொலைசெய்கின்ற யுத்தங்களும்வந்தாலும், சஞ்சலியார்கள்; பஞ்சவிடயங்களினாலும், அசுபத்தையும், சுபத்தையும்புசித்து துக்கியார்கள், சந்தோஷியார்கள், முதிர்ந்தவறிவுள்ளவர்கள், யாகதீக்ஷதர்கள், கலைமறையோர், பலத்தையுடைய வரசர்கள், பரிசுத்தமுள்ளவர்கள், மற்றெவர்களிலும், இச்சாந்தகுணமுள்ள பரிசுத்தவான்கள் மேன்மையாகப் பிரகாசிப்பார்கள் *— அறிவையுடையவர்கள் விரும்புவதாகி ஏனையோரனைவர்க்குமுரிய தாயிருக்கின்ற சாந்தாமுகத்தைப்புசித்து மகான்கள் சிறப்பாகிய மோக்ஷத்தையடைந்தார்கள். இராமா? நீயும் அவ்வொழுக்கத்தின்படி செய்யக்கடவாய், நல்ல ஞானசாத்திரத்தினால் தெளிவான பரிசுத்தமுள்ள நுட்பவறிவினால் ஆத்மவிசாரணையை பூரணமாகச்செய்க. அவ்வாத்ம விசாரணை பூரணமானால் சமானமில்லாத வறிவானது அதிகநுட்பமாக பரமபதத்தையறியும், இவ்விசாரணையே, காரியகாரணங்களைக் குறித்தறியும் அறிவுள்ளவர்களுக் குண்டான கொடிய சநநவியாதிக்கு அறிதான மருந்தாம். †—

கசு. சாந்தியும் அதை யடைந்தவனிலக் கணமுங் கூறல்.

கஎ. சாந்தியை யடைதலும் ஆத்மவிசாரமு முரைத்தல்.

கஅ. விசாரணையின் பலமுஞ் சந்தோட விலக்கணமுங் கூறல்.

கறுத்த அந்தகாரத்தில்மறையாததாயும், பிரகாசத்துக் கொளிமழுங்காததாயும், பார்ப்பதற்கரிய வஸ்துக்களியாவையும் பார்ப்பதாயு மிருக்கின்ற விசாரதிஷ்டியினால் தெளிவுற, யானெப்படிப் பட்டவன், சகத்தான சம்சாரமுண்டான கிரமமென்ன, மிகுந்த

¶ இ-ம். அறியாமையையுந் தபமுதலான கிரியைகளையு நீக்கி சாந்தியைப் பெற்று மனதை யாத்மாவிற் கரையும்படி சிந்திக்கவேண்டு மென்பதாம்.

* இ-ம். சகல செல்வங்களும் வலியவரு மகிழ்ச்சிக்கு மேலான மகிழ்ச்சியைக் கொடுக்கின்ற சாந்தியுள்ளவன் ஒன்றினாலுஞ் சுகதுக்கமடையாமல்; அறிஞர் முதலான சகலருக்கு மேலாவனென்பதாம்.

† இ-ம். சாந்தியையடைந்து ஆத்மவிசாரஞ்செய்தாற்சநநங் கெடுமென்பதாம்.

சம்சாரம் யாரையுடையது என்கிற பரிகாரயுத்தியோ டும் விளங்கிய ஆபத்திலும், விசாரிக்கத்தக்க விசா ரணையானது, அஞ்ஞானுந்தகாரமான ஆபத்தென் னும் வியாதிக்கு மருந்தாம். [இனிச்சந்தோடம்.] அதன்பின்பு மேலாகிய சந்தோஷமானது யாதென்று சொல்லில், நன்மைதீமையான வஸ்துக்களில் விருப்புவெறுப் பில்லாமற்புசித்து வாராதவஸ்துக் களில் துயரமில்லாத ஆநந்தந்தான்.¶— சமானமில் லாத அச்சந்தோஷாமுதத்தைப் பொருந்தப்பெற் றால் விடயபோகம் விஷமாகும், அப்பூரண மகிழ்ச்சி நீங்க விடயகத்திலழுந்துகின்ற மனது ஆத்மஞா னத்தைப்பார்க்கில், அழுக்குறு கண்ணுடியில்காணும் முகத்தைப்போலத் தோற்ருமல் சந்தோஷகுண த்தையடைந்த புருடசிரேஷ்டனை, மகாதவசிகளும் நரேந்திரரும் வணங்குவார்கள். [இனிச்சாதுசங்கம்] உலகமென்னு மாயையை ஜெயிக்கத்தக்க சகலருக் கும், சாதுக்கள் சங்கமானது, தவிராத சகாய மாகும். †—மிகவு மற்பமானவறிவை பூரணமாக்குவ தாயும் விடயங்களால்வரு மாபத்துக்களை சம்பத்தாக் குவதாயும், ஒன்றிலுஞ்சுகியாத அமங்கலத்தை சர் வத்திலுஞ்சுகிக்கின்றமங்கலமாக்குவதாயுமிருக்கின்ற சிறந்த மகான்கள் சங்கமென்கின்ற கங்கையினது குளிர்ந்த சலத்தில் ஸ்நானஞ்செய்தவர்களுக்கு, அக் கினிகாரியமான யாகங்களும், கெடாததவசுகளும், மஹாதானங்களும், புண்ணியதீர்த்தங்களும் வேண் டுவதில்லை, துக்கமாகிய பந்தநாசஞ்செய்து யாவர்க்கு மினிமையுள்ளவராயும் சநநமென்னுஞ் சமுத்திரத் தைக்கடப்பதற்கு கப்பலாயுமிருக்கின்ற அறிவுநிறை ந்த மஹான்களை, எவ்விதத்தினும் விரும்பவேண் டும்.‡— நெருங்கிய சம்சாரத்தைத் தீர்க்கின்ற சாத னங்கள் நால்வகையாம்; இந்நால்வர்களுடன் மிருந்த வன்புள்ளவர்கள் சநநசாகரத்தைக் கடந்தார்கள், அச்சாந்தியாதி குணமுள்ள இராமா! இளக்கின்ற மனமையக்கந்தீர்க்கின்ற இக்கதையைக் கேட்பாய். இதன்குணத்தை விரும்பாமல் இக்கதையைமாத்திரம்

௧௯. சந்தோடத்தின் பலமுஞ்சாதுசங்கமுங் கூறல்.

௨௦. சாதுசங்கத்தின்பலன் கூறல்.

௨௧. சாந்தியாதியுள்ளோர்க்குரிய இந்நூலின் பயனுரைத்தல்.

¶ இம். விசாரஞானத்தினற் சிந்தையுஞ்சடத்தையுஞ் சிற்சடமானமாயையும் விசாரித்து அஞ்ஞானத்தைக்கெடுத்துஆநந்தத்தை யடையவேண்டு மென்பதாம்.

† இ-ம். முமுட்சுக்கள் சகலபோகங்களுங் கைக்கும்படியான சந்தோஷத்தை யும் சம்சாரத்தை வெல்லத்தக்க சாதுசங்கத்தையு மடையவேண்டு மென்பதாம்.

‡ இம். ஞாநாநந்தச் செல்வத்தைக் குறைவற நிறைவுசெய்கின்ற சாதுசங்க மெவ்விதத்திலுஞ் சேரவேண்டுமென்பதாம்.

குறிப்பாகக் கொண்டவர்களுக்குவேதத்தின்முடிவாகிய ஆத்மஞானமானது தானேவரும், இராகத்துவேஷமுதலான மயக்கங்கள்தீரும், சரற்காலத்தில் தடாகசலத்தைப்போல களங்கமற்று சித்தந்தெளியும், வச்சிரகவசந் தரித்தவர்களை பாணங்கள்போல தரித்திரமுதலாகிய துன்பம்தாக்காது.‡—நடுக்கம் வரச்செய்கின்ற மாயையினால் விசாரமுள்ள மனம் வருந்தாதாம், அலையில்லாத சமுத்திரம்போல சமத்துவத்தை அடையும், விசாரணையினால் மிகுந்தவரனைவர்க்கும், சமுத்திரத்தினுழம்போல கெம்பீரமும் மகாமேருவின்வலிமையைப்போல வலிமையும், சிறப்பாகியபூரணசந்திரனைப்போலசீதளமும்வரும், ஆத்மஞான சாத்திரத்தின் ஒழுங்கில் நற்குணமுள்ளவர்கள் அறிவானது தனக்கனுகூலமான சமாதிமுதலிய கன்மத்தில், களங்கமற்ற கற்புள்ளவள் தன தந்தப்புரத்தில் தனது நாயகனையே தெய்வமாகக் களிக்குமாறுபோல இன்பமடைவன்.§—ஆச்சரியங்க ளியாவுமில்லாத இராகமுடைய விவனுக்கு முன்சொன்ன வறிதான சீவன்முத்திஸ்தானம் கிரமமாகமுதிருங், வசனத்துக் கெட்டாதவனாய் உலகத்தாரைப்போலக் காணப்படுவான், அறிவில் ஓர் கருமங்களினும் பிடிப்பற்றவன், நல்லபிரயோசனத்தினாலும் பொல்லாத பிரயோசனத்தினாலும், சுகமுந் துக்கமு மில்லாதவன் கிடைத்ததை அன்பாக அனுபவித்து சுகாசனத்தி லிருப்பவன், அழகிய சத்துக்களொழுக்கத்துக்கு வேறாகிய போகங்களிடத்தில் எவ்வளவுஞ் சம்பந்தப்படாதவன்.¶— ஒருக்ஷணமும் நீங்கா இன்பத்தையுடையவனாகியும் தேகஸ்மரணம்வரும்படி யதிக்ரமியாமல் சத்துக்களிடத்தில் வினவுதலினால் வளர்ந்த இம் மோக்ஷமார்க்கத்தை விசாரிப்பவன், சநநந்தீர்க்கின்ற ஆத்மஞானத்தை யடைந்தவனாய் மயங்குகின்ற மறுசநநத்தை அடைந்து மாதாவி னல்குலி

௨௨. விராசையுள்ள விசாரணையின் பலன் கூறல்.

௨௩. சீவன்முத்தனாசாரச் சிறப்பு.

௨௪. சீவன்முத்தி விசாரணையினுயர்வு மஃதின்றியவிடத் திழிவுங் கூறல்.

‡ இம். சாந்தியாதி குணங்களை யனுசரித்தவர்களுக்குக் காமாதி தோஷங்களைத் தீர்த்து ஆத்மஞானத்தை வலிதிற் கொடுக்கின்ற யிக்கதைகளை அவசியஞ் சிரவணஞ் செய்யவேண்டு மென்பதாம்.

§ இம். ஆத்ம விசாரமுள்ள மனது மாயையினாற் கெடாமற் சமபாவம் பொருந்தி கெம்பீரமுதலான குணங்களோடு சத்கிரித்தியத்தில் மகிழ்ச்சியை யடையுமென்பதாம்.

¶ இ-ம். விசாரத்தினாற் கிரமமாக ஜீவன்முத்தி பதத்தைப் பெற்றவனும் மஹான்கள் ஆசாரங்களுக்கும் பிறிதானபோகங்களைவிரும்பக்கூடாதென்பதாம்

னுல் வேதனையைப்பொருந்தான். அற்பமாய்விளங்குகின்ற விடயானுபவத்தில் மயங்குகின்ற மனதையுடைய பாவிகளாய் முன்சொன்ன உபாயங்களில் மருட்சியுடையவர்கள், மாதாவினுடைய கருப்பத்திலிருக்கின்ற மலத்திற்புழுத்த கிருமியென்றே சொல்லுந் தன்மையையுடையவர்.0—

உ௫. விசாரணையினளவு கூறல்.

அறிவிற்றகுந்த அச்சத்துக்கள்சங்கம் இல்லாதசமயத்தில், தருமத்துடன் தான்சம்பாதித்து அடையப்பட்ட திரவியங்களால் சேகரிக்கும் ஆகாராதியைச்செய்யுந் தொழிலையுடையோராய்குற்றமற்றவாத்மாவில் விஸ்ராந்தியடைந்து நீங்காத துரியமென்கின்ற உபசாந்திநிச்சயம் உதயமாகிறபரியந்தம் ஆத்மஞான சாத்திரங்களும் உபசமனமும், நன்னடையும், உயர்ந்தவறிவும், சாதுக்கள் சங்கமுமாகிய இவைகளினல் ஆத்மவிசாரஞ் செய்யவேண்டும், சமானமில்லாத விசாரணையினல் உண்டாயிருக்கின்ற நிருமலமான துரியநிச்சயத்தை சொல்லுந் தன்மையையுடையது.¶—

உ௬. துரிய நிலை பெற்றவன் அனுபவமுரைத்தல்.

பாவனைநீங்கிய துரியத்தில் விஸ்ராந்தியடைந்து சநநமென்கிற சமுத்திரத்தைத் தாண்டி மோக்ஷதீரத்தை யடைந்தவன், சீவத்தன்மையோடிருந்தாலும், சீவத்தன்மைதீர்ந்து சிவமாயிருந்தாலும், குடும்பத்தில் பொருந்தினுலும், தனிமையான துறவியாயிருந்தபோதிலும் விளங்குகின்ற சுருதி ஸ்மிருதிகளின் பிரமையினல் கட்டுப்பட்டாலும், அனைத்தையும் செய்தாலும், தவிர்ந்தாலும், அவற்றுலாகிய பிரயோசன மொன்றில்லை, இமோத்பர்வத மில்லாத சமுத்திரம்போல ஆத்மசுபாவத்திலிருப்பான்.‡—

உ௭. தன்னையறியு முத்தியுந் திருஷ்டாந்தமும் வேண்டுமெனல்.

சுருதிகுரு சுவானுபவமென்னு முத்தியிலிருக்குமாயின், குழந்தைகள் வசனத்தையுங்கொள்ளக்கடவாய் அந்தயூகமில்லாததை பிரமதேவன்சொன்னுலும், துரும்புக்கொப்பாகத் தள்ளுவாய், பிரமஞானம் எளிதி லுதயமாம்பொருட்டுசொல்லப்பட்ட காரணமுள்ளவுவமைகளியாவும் ஏகதேசமென்று கருதுவாய், உருவமற்ற வுண்மை

0 இ ம். சத்துக்கள் சகாயமாய் ஆத்மவிசாரஞ் செய்வதேஞானசுகம்,இதன்றிப் போகத்திற் செல்வதே ஜநநதுக்கமாதலால் இதை நீக்கி அதைப் பெறவேண்டுமென்பதாம்

¶ இ ம். துரியஸ்தானமான விஸ்ராந்தி யுண்டாகிற பரியந்தம் விசாரணை வேண்டுமென்பதாம்.

‡ இ-ம். ஜநநசாகரத்தைக் கடந்து பாதஞதீதமான துரியத்தை யடைந்தவனுக்கு வன்னுச்சிரம வுசிதவாசாரங்களால் வருந் தருமாதருமங்க ளொன்றுமில்லை யென்பதாம்.

ஞானமானது நாமரூபாகாரமாகிய திருஷ்டாந்தத்துக்கு பொருந்தாதென்று சொல்லும் மூடர்கள் பிரத்தியக்ஷ ஞானமில்லாத தனதுபேதஞானத்தினல் சொல்லுகின்ற குதர்க்கயுத்தியானது ஞானவிசாரஞ் செய்யு மறிவைக்கெடுக்கும்; இராமா? அதில் முயற்சிக்காதே.‡—நரம்பிலுண்டாகும் நாதம்போலசாந்தி முதலாகிய சற்குணங்களில் ஆத்மஞானமுதயமாம், ஞானத்தினற் சற்குணங்களும் அச்சற்குணங்களால் ஞானமும் விளங்குவனவாம், இவ்விரண்டும் தடாகமுந் தாமரைப்பூவும்போல நன்ருய்வளரும், சற்குணமு ஞானமுமாகிய விவ்விரண்டையும் சமமாக அப்பியாசஞ் செய்யில் பிரமப்ரயோசனம்வரும், வேறுவேருக இவ்விரண்டையு மப்பியாசிக்கில் வருகின்ற ப்ரயோசன மொன்றுமில்லாததாம், இவ்வுண்மையான கதையின் கேள்வியானது முதலான சகலத்தியாகமென்னுந் தருமமும் அழிவற்றபொருளும் நித்தியாநந்தமும் சத்துக்களாற் புகழ்ச்சியும், சுகசீவனமுமாகிய யாவையுங்கொடுக்கும், அதுவன்றி மனத்தினது தெளிவினல்நிரதிசயானந்தமென்னுமோக்ஷத்தையுங் கொடுக்கும்.¶—

உ௮. ஞானமுண்டாவதற் கேதுவறிவித்தல்.

முமுட்சுப்பிரகரணம்.

முற்றிற்று.

---

உற்பத்திப்பிரகரணத்தில்

## ஞானவிண்மகன் கதை.

---

### அவதாரிகை:

முற்பிரகரணத்திற் சாதனசதுஷ்டயத்தில் மூன்றுசாதனமு நிறைந்து, நான்காஞ் சாதனமான முமூட்சுவி லதிதீவரனன இராமனுக்கு அத்துவித ஸ்வரூபத்தையும், அஃதடையு முயற்சியையும், அதற்குக்

‡ இ-ம். அனுபவயுததியின லுவமிக்கப்படாத வஸ்துவை யுவமானங்களைக் கொண் டறியக்கூடாதென்னுங் குதர்க்கயுத்திகளைத் தள்ளவேண்டுமென்பதாம்.

¶ இ-ம். சற்குணத்தையு ஞானத்தையு மொன்றுக்கொன்று சம்பந்தமாக கற்கின்றதனலுண்டாகும் இந்த வபரோக்ஷானுபவமுள்ள கதைகள் சீவன் முத்தியையும் விதேக முத்தியையுங் கொடுக்கு மென்பதாம்.

கருவியான சுத்த வாசனையையும், அதற்குச் சகாயமான சாந்தியாதி குணங்களையுஞ்சொல்லி, அத்துரியஞானம் பிரசன்னமாம்பொருட்டு சிருஷ்டிக்குமுன் சத்தாமாத்திரமாகியும், சதோதயமாகிவும், சதாநந்தமாகியும், பிரகாசிக்கின்ற பிரமத்தின் லீலாசங்கற்பத்திற் பிரதிபலனமான சைதன்னியமே, சகத்துற்பத்தியென்றும், அதன்விளக்கமே சகஸ்திதியென்றும், அதனடக்கமே சகசாந்தமென்றும், இம்மூன்றிலுமொருதன்மையவாகவிளங்கு மதிஷ்டானசைதன்னியமே நிருவாணசுகமென்றும் சொல்லிய வின்னுன்கு பிரகரணத்தாற் சர்வமும் பிரமமயமென்பதை யுபதேசிக்கவேண்டி, ஒன்பது கதைகளானிறைந்த வுற்பத்திப் பிரகரணத்தில் சைதன்னியத்தி லுண்டான சங்கற்பஞ் சைதன்னியமேயென்பதுதோன்ற முந்தின ஞானவிண்மகன் கதையை சைதன்னிய வுருவமாக நிரூபிக்கிறார்.

---

க. ஆத்ம ஸ்வரூபப் பிரத்தியக்ஷ நிருபணம்.

மோக்ஷமடையவிரும்பின மூமூட்சுக்களின் ஆசாரத்தை நீயனுசரிக்கும்படி கிரமமாகச் சொன்னோம், இனி யுலகங்களுண்டாகின்ற காரணத்தை நன்றாகச் சிரவணஞ் செய்யக்கடவாய்; சுவாநுபூதியாகியபெருமையினை பொருந்தினதாயும்ப்ரத்யக்ஷமென்று மதஸ்தர்களிடப்பட்ட நாமங்களை பெற்றதாயுமிருக்கின்ற அபரோக்ஷஞானமே நமது சீவன், இச்சீவனை பிரமஞானத்துடன் கூடஸ்தனென்றும், கருத்தத்துவ வீஸ்வரனென்றும், பிரத்தியக்ஷ சிதாபாசனென்றுஞ் சொல்வர். ‡—சீவனானவன் எந்தவழிவோடும் ப்ரகாசிக்கின்றானோ அந்தஞானமே வியோமாதியான வஸ்துக்களாம், தோன்றியழிதலிற் றுவாகின்ற நானாவிதமான சங்கற்பவிகற்பங்களை பொருந்தியிருக்கின்ற மயக்கத்தினால், பரவியசலமே திரையானதுபோல, சொல்லிய சீவனானவன் பூமிமுதலான சகலவஸ்துக்களாய் பிரகாசித்திது.¶— சிருஷ்டிக்கு முன்னமே சொல்லப்பட்ட அகாரணமான சத்தாமாத்திரமே சிருஷ்டிக்க வேண்டுமென்கிற லீலாசத்தினால்பொருந்தின காரணமாய் ப்ரத்யக்ஷமான சாமானியதிருஷ்டியே பொருட்கூட்டங்களாகியிருக்கின்ற உலகமாய் தனது வியாபகத்திலுண்டாய் ஞானத்தில் வாயுவினிடத்திற் சலனசத்தியைப்போல தங்கியிருக்

உ. ஆத்மாவே சகமாக விளங்குகின்றதெனல்.

ங. ஆத்மாவே ஜகத்தாயின் அதற்குக் காரண மியாதெனல்.

---

‡ இம். சுயம் சைதன்னிய பிரத்தியக்ஷப் பிரகாசமே நான்கு சைதன்யமாகவுந் திரிபுடியாகவுந் தோற்றுகின்றதென்பதாம்.

¶ இம். ஆத்ம சங்கற்பமே சகம்போலத் தோற்றப்படுகின்றதாம்.

ச. பிரமங்காரணமாயில் ஜகங்காரியமாம், அதனுற்றுவிதமும் அதன் வியாபகத்துட் சகம் விளங்குகின்றதெனில், விசிட்டாத்துவிதமும் ஆமே யெனின்.

ரு. அப்படியாயில் ஜகந்தோற்றப்படுகின்றதேயெனின்

கும். ¶— அளவில்லாத திக்குகளும் காலங்களும் பிரத்தியேகமென்கின்ற இச்சர்வாத்ம ஞானத்துக்கு இசைந்த நாநாவித வடிவங்களாய் எவ்விடத்தெப்படியுண்டாயிற்றோ அவ்வண்ணம் அவ்விடத்தாகும். நடக்கின்ற விவ்விதத்தினால், இவ்வுலகமென்கின்ற பிரமகற்பிதமானது வேறுகாரண மில்லாத வஸ்துவென்று அறியக்கடவாய். †— இச்சகத்தை பிரத்தியக்ஷமாகிய ஆத்மசைதன்யமே நொடியளவில் சிருஷ்டித்ததாகும்; அனுமான முதலிய பிரமாணங்களியாவும் அதன் வடிவாகி விளங்கும், நாநாவிதமாகிய திரிஸ்யத்தி னுண்மையே பந்தமாம்; அஃதில்லாமையே மோக்ஷமாம்; திரமில்லாத வித்திரிஸ்யமானது நீங்கும்படி சொல்லுவோம், நன்றாய்த் தெரியக்கேள். ‡-

சு. அப்படிப்பட்ட பிரமம் எப்பொழுது வெளிப்படுமெனின்

மிகுந்த சுழுத்தியவத்தையில் வாராநின்ற சொற்பனங் கெடுவதுபோல, காணப்பட்டனவாகிய சகங்களியாவும் கற்பாந்தத்திற்கெட், எண்ணத்திலுண்டான சஞ்சலமும் உருவமும், நாமமுமாகிய இயாவுமில்லாமல் கெம்பீரமாய் தடையற்ற அஞ்ஞானந்தகாரமும், விருத்தி ஞானபிரகாசமும் இல்லாமல் தானேதானுயிருக்கின்றதாகிய ஒப்பற்ற தத்துவஞானமானது மிஞ்சியிருக்கும். o— வாக்கினால் விபகரிக்கும்பொருட்டு சத்தியமும், பிரமமும், ஆத்மாவும், பரமும் முதலாகிய இத்தன்மையவாகிய நாமங்களை, சத்துக்களாற் றரிக்கப்பட்ட இவ்வாத்மாவானது அதிசயமாகத்தான்றானே மற்றொன்றுபோற் பிரகாசித்து குற்றம்பொருந்தி, இனி வருவதான சீவநாமத்தைப் பொருந்தினதுபோலவாகும்.*— சீவனென்கிற சுத்தமும்; அதனருத்தமுமாய் நிறைந்த வாத்மாவானது பாவித்தலுள்ள சங்கற்பத்தினால் தடித்தெழா நின்ற மனமாம்; அகோசரமான பிரமத்தில் சமுத்திரத்தின்

எ. இப்படிப்பட்ட சுயஞ்சைதன்னியத்திற்குச்சத்தியாதிநாமம்வந்ததென்னெனின்.

அ. அச்சைதன்னியமே மனமாயதனுற் சகமெப்படியாயிற்றெனின்.

¶ இ-ம். பரமப்ரகாசமே சகத்தாதலின் அதற்கதுவே காரணமானதாம்.

† இ-ம். எவ்வெவ்விடங்களி லெப்படி யெப்படி ஸ்புரிக்கின்றதோ, அப்படியப்படிதானே விளங்குகின்ற படியாற்சகங்காரியமாகாது, அதனாற்பிரமங்காரணமாகாது இக்காரியகாரண மின்மையினாற் றுவிதமும், காரணத்துட்காரியம் வேறுபடாமலபேதமாயிருத்தலின், விசிட்டாத்துவிதமுமின்றித்தானே சகலமுமாய் விளங்குவிதலின், அத்துவிதமேயா மென்பதாம்.

‡ இ-ம். பிரத்தியக்ஷ சைதன்னியத்தைத்தவிர வெறுவஸ்து தோற்றவில்லையென்பதாம்.

o இ-ம். அத்யந்தப்பிரளயத்திற்சங்கற்பரூபமான சகலசகங்களுநீங்கி, ஞானஞ்ஞான ரகிதமான சுயஞ்சைதன்யமேவிளங்குமென்பதாம்.

* இ-ம் ஆத்மாவானது, மகான்களால் விவரிக்கும்பொருட்டு பரியாயநாமங்களைப்பெற்றுத்தானே சீவனைப்போல விளங்குமென்பதாம்.

க. அப்படியாயின் வேறுபாடாமேயெனின்.

௰. அசத்தாகியமனதினாற் சகத்தெப்படி யுண்டாயிற்றெனின்.

௧௧. பந்தரூபமும்அதனிவிர்த்தியும்ஞானேதயமும் யாதெனின்.

௧௨. திருஷ்டாவிற்றிரிஸ்யம் எப்படி யிருக்கின்றதெனின்.

௧௩. திருக்குவினுடன் சகலமுந் திருக்குவேயென்பதற்குத்திருஷ்டாந்தமியாதெனின்.

திரையைப்போல உண்டாக்கி, சஞ்சலிக்கின்ற மனது தானே தனது சங்கற்பப்படியே உலகத்தை யுண்டாக்கும். ¶— நினைக்கப்பட்ட மனோசங்கற்பத்தினாலே சகமென்னு மிந்திரசாலமானது உண்டாயிருக்கும், ஆபரணமென்னுஞ் சத்தத்துக்கு அருத்தமானது கனகத்தையல்லாமல் வேறின்று கனகத்தினால் ஆபரணமென்று சொல்லவேண்டாம், சொல்லிய சகமென்னுஞ் சத்தத்துக்கு பிரமமேயல்லாமல் அருத்தம்வேறில்லை.‡—ஓடாநின்ற கானலாற்றிற்றோற்றும் அலைகளைப்போல, அசத்தான மனதில் உண்டாகாததாயிருந்தும் உள்ளதுபோலத் தோற்றுகின்ற இச்சகமானது, துன்பத்தைச் செய்யாநின்ற மோகமென்றும், பந்தமென்றும், தமசென்றும், மலமென்றும், அவித்தையென்றும், மாயையென்றும், சம்சாரமென்றும், அறிஞர்களால் சொல்லப்பட்டன.†— நான் சொல்லாநின்ற பந்தஸ்வரூபத்தை நீ கேட்டறிவாயானால் மேதாகிய மோக்ஷஸ்வரூபம் இனி நன்றாய் வெளிப்படும், இவ்வுலகத்தையும் நீ நான் முதலாகிய விப்பேதங்களையும் உள்ளதென்பது பந்தரூபமாகும், அச்சங்கற்பமான திரிஸ்யமிருக்கின்ற பரியந்தம் மோக்ஷமானது அரியதாம், விதையினிடத்தில் அடங்கியிருக்கின்ற விருக்ஷத்தைப்போல திருஷ்டாவினிடத்தில் திரிஸ்யங்களியாவும் உண்டாகாமலடங்கியிருக்கும்.○— பிரிவுள்ள வடபீசமுதலிய காரணவஸ்துவின் கருப்பத்தில் அதற்குள்ளிருந்த பத்திரபுட்பாதிகளான பேதப்பிரகாரமே, சிருட்டியின் ஆச்சரிய சத்தியானது கெடாமல் உண்டாயிருப்பது போல, ஞானத்மாவென்னும் வஸ்துவினுடைய வியாபகமான கருப்பத்தில் முளையாகி, முறையாகப் பொருந்திய உலகத்தினுருபமான சகலமும், நீங்காமல் சுபாவமாக நிறைந்திருக்கும்.*— பக்குவமான காலதேசங்களில் வித்தானது முளைக்கின்ற தன்மையைப் போல திரிஸ்யத்தை சங்கற்பிக்கின்ற மனதும் தேவதிரியக்கு முதலிய வடிவமாம், ஞானகாயத் துதயமானவன் சரிதையினால் அந்த காரமயமான சகசிருஷ்டி லகுவா

¶இ-ம். சீவசப்தார்த்தமான வாத்மஸ்மரணமேமனமாய்,அதின சங்கற்பமே,சகமாயிற்றென்பதாம். ‡ இ-ம். சகம் பிரமப்பிரகாசமேயன்றி வேறின்றென்பதாம்.

†. இ-ம். இல்லாத கானற்சலத்தி லலைதோன்றுவதுபோல இல்லாதமனதினாற் சகந்தோற்றுகின்றதாம். ○ இ-ம் விசாரிக்குமட்டுஞ் சகமாயிருந்து, உடனே கெடுக்கின்ற பந்தாகாசத்திற் சுயஞ்சைதன்னியம் பிரகாசிக்குமென்பதாம்.

* இ-ம். வித்தில்விருக்ஷமிருப்பதுபோல, திருஷ்டாவிற் றிரிஸ்யசத்தி யடங்கியிருக்குமென்பதாம்.

யுனக்குப் பிரகாசிக்கும், இக்கதையை நீ கேட்கக் கடவாய். சிறந்த பிரமவமிசத்தையுடையவன் வியாபகமான ஞானகாசமே தானுண்டாவதற்குக் காரண

௧௪. ஞானபுருடன் சரிதையை வினவுதல்.

மாக ஞானவிண்மக னுண்டானன். ¶— அவன் பிரிவற்ற சமாதியும் சீவகாருண்யமும் தருமமுமாகிய விவைகளை யுள்ளவ னனேககாலஞ் சீவித்திருக்குமளவில், ஈனமாகு மிச்சகத்தைப் புசிக்கின்ற யாம் இவனைப் புசிக்காமலிருந்ததென்ன, அனைத்தையும் நசிப்பிக்கு மெனது வல்லபம், பாடாணத்தி லழுந்துகின்ற கத்திமுனையைப்போல மிகவு மழுங்கிப் போயிற்றென்று நினைத்து காலனனவன் அவனூரிற் சீக்கிரத்திற்

௧௫. அப்புருடன் அகப்பட்டானோவெனின்.

சேர்ந்து,†—ஒருதொழிலில்முயற்சிப்பவர்கள் தனது தொழிலை விட்டுவிடுவார்களோ வென்று பிராமணனுடைய வீட்டுவாயலில் காலனனவன் புகுந்தமாத்திரத்தில், மிகுகின்ற கொடிய வூழித்தீயைப்போல சத்தியாகின்ற அவரது மகிமையென்னுங் கொடிய தீயானது எரிக்கவும், அதைப் பிளந்துகொண்டு பிரவேசித்து பார்த்த வப்புருடனை பனைக்கொப்பாகிய ஆயிரங்கைகளினாலும் பிடித்திழுத்து பிரயோசனம்

௧௬. இயமனுத்தியுரைத்தல்.

பெறாதவனாயினன். ‡— அந்த ஞானவிண்மகன் சங்கற்பத்தையே வடிவமாயுள்ள புமானைப்போல அசையாமலிருக்க வெல்லக்கூடாமல் இக்காலனவ்விடத்தினின்று நீங்கி யமனிடத்திற்சென்று இங்கே நடந்தப் பிரகாரஞ்சொல்ல, அதற்கு யமன் சொல்லுவான், கன்மத்தினுண்டாகிய சகத்து கன்மத்தினலல்லாமல் நசியாது, நமக்குச் சகாயமான வஸ்துக்கள் மரிக்கும்படி முன்செய்த கன்மங்களேயாம், அக் கன்மங்களையே கொல்வதற்குச் சகாயமாகக் கொண்டுபோ

௧௭. கருமமகப்பட்டதா வெனின்.

வென்று சொன்னான். ○— கால னிவ்வசனத்தைக் கேட்டு அப்பிராமணன் முன்செய்த கருமங்களைத் தேடி தீர்த்தங்களிலும், தடாகங்களிலும், பூமண்டலத்திலும், திக்குகளனைத்திலும் அலைந்தும் அகப்படாததாக திரும்பிவந்து அறிவுள்ள யமனுக்குச் சொல்ல, வெகுநேர மாலோசித்து அந்த யமனும் சொல்லுவான், கேவலாகாயத்தில் உதித்ததினால் நசிப்பில்லாத அப்பிராமணனும் ஞானகாயமல்

¶ இ-ம். ஆத்மவல்லாசத்தில் அதன்சுபாவமாயுண்டான சகலமும்ஆத்மசாக்ஷாத்காரமாக வெளிப்படுத்தற்கு, இஞ் ஞானவிண்மகன் கதையேதிருஷ்டாந்தமென்பதாம்.

† இ-ம் காலன் வேறுபடாதவனை வேறுபடுத்தச்சென்றதாம்.

‡ இ-ம் காலாதீதனுகையாற் காலனாற்பிடிக்கப்பட வில்லையென்பதாம்.

○ இ-ம் தேகத்தைக்கெடுத்தற்குமுன்னுள்ள சஞ்சிதகன்மத்தானியமித்தமரணகன்மத்தைப் பரிசோதித்து, அதைக்கொண்டு செல்லவேண்டுமென்பதாம்.

கஅ. ஆனலவன் காரியப்படுதலின்றேவெனின்.

லவோ. †— ஞானகாயத்தை துதித்த பிராமணன்
ஜககாரிநிமித்தங் காரணத்தை பொருந்தாததனால்,
கருமங்களைச்செய்துஞ் செய்தானில்லை. காரணமே
யில்லையாயின், அவன் செய்கின்ற கருமங்களுள்ள
தாமோ, நீ நினைப்பதற்கு உரித்தான அவனது சஞ்சி
தத்தால் விதிக்கப்பெற்ற மரணகருமமென்னு முதவி
யானது உனக்கில்லையென்று தருமராஜன் சொல்ல,
அவனைக் கிட்டக்கூடாதென்று மேன்மையாகிய கால
னவன் தனதிடத்தில் மிகவு மதிசயித்துப் போயி

கசு. பிரமாவை இப்புருடனாகக் கூறிற்றேவெனின்.

னன்.¶— இப்படியென்று சொல்லிய வசிட்டமுனி
யின் வதனத்தைப் பார்த்து இராகவர் சொல்லுவார்.
தேவரீ ரனுக்கிரகித்த அந்த ஞான்விண்மகனை தானே
யுண்டானவனையும், விஞ்ஞானமே வடிவமானவனை
யும், ஒன்றாக நிறைந்திருக்கின்றவனையு மிருக்கின்ற
பிரமாவாக நிச்சயித்தேனென்று சொல்லவும், பரிசுத்த
மாகிய வசிட்டமுனி முன்னுஞ்சொல்லியது பிரமா
வையே சொல்லிய கதையின் முறைமையை இராமா?

உ0. காலன்பிரமனையழிக்கத் துணிந்தானேனவெனின்.

நீ கேட்பாய். ‡— நாசத்தொழிலை செய்யாநின்ற கால
னவன், யமனுடனே சொல்லும் ஞாயங்களை யாமறி
ந்தேம், மேலான மனுவினுடைய முடிவில் சகங்க
ளனைத்தையும் புசித்தெழுந்த சோம்பலில்லாத கால
னவன், பிரமாவையும், செகுத்தற்கு எத்தனஞ்
செய்த அச்சமயத்தில், துக்கமில்லாத காலனது முக
த்தைப்பார்த்து உயர்வாகிய இயம னிவைகளைச்

உக. ஆனலவர் ஸ்வரூபமியாதெனின்.

சொன்னான்.*— சமானமில்லாத பிரமாகாயமே நிரு
மலாகாரமாயிருக்கின்றனதிரில்லாத பிரமாவை அழித்
தற்கென்று நினைக்கின்ற நினைவு எளிதின் முடி
யுமோ, பிரகாசிக்கின்ற ஆகாயமே வடிவமாய் பூத
வடிவமில்லாதவனாய் முன் சொல்லிய சங்கற்ப புமா
னைப்போல நசியாமல் பிரமதேவனும் பிரகாசிப்

உஉ. ஆயின் வேறுவடிவமின்றேவெனின்.

பன். o— சிதாகாயமாகியும், தனிமையாகியும். முத
லும், மத்தியும், அந்தமும், இல்லாததான சுயம்பா
யிருக்கின்ற பிரமமானது, அடுத்திருக்கின்ற தனது
சங்கற்பவசனத்தினால் பிரமாணமான சரீரமுடையது

† இ-ம். சஞ்சிதவினை காரணமாகவுதியாமல் ஞானங் காரணமாகவுதித்தலாற் பூர்வ கன்ம மகப்படவில்லையென்பதாம்.

¶ இ-ம். சிதாகாயத்தி னிமித்தகாரணமுஞ் சககாரி காரணமுமின்றி யுபாதான காரணமாத்திரமா யுதித்தவனாதலாற் காரியமும், காரணமும் காரண காரியமும் மரணகன்மமுமின்றி நித்தியனாயிருப்ப னென்பதாம். [தாம்.

‡ இ-ம். பிரமத்திலுண்டான பிரமனையே யோர்புருடனாக வுருவகப்படுத்தின

* இ-ம். பிரமனது ஸ்வரூபத்தை யுணராமற் கெடுக்க நினைத்ததென்பதாம்.

o இ-ம். பஞ்சபூதவடிவமின்றிச் சிதாகாயமே வடிவமாகப் பிரகாசிக்கின்றதாம்.

போலவும், நிலையாகிய புருடனைப்போலவும், இஃ துண்மையினல் பிரகாசிக்கும், பிரசவியாத வந்தியா புத்திரனைப்போல வடிவில்லாததாம். †— இப்படி யென்று மிருத்துவுக்கு நமன் சொன்னன் என்று கூறிய வசிட்டரது வதனத்தைப் பார்த்து நின்றதான ஆதிவாகிய சரீரமாயும், பிரகாசித்த ஆதிபௌதிக சரீரமாயும், பொருந்திய சரீரங்கள் ஆத்மாக்களனைத் திற்கும் இரண்டுவிதமாயிருக்க, பிரமாவுக்கு ஆதிவா கிய சரீரமாகிய சூட்சுமசரீர மொன்றுன தென்ன வென்று இராமன்கேட்க,—பிரமப்ரகாசத்தினு லுண் டாகிய வுலகமுண்டாகுஞ் சீவர்களுக்குக் காரணமா கப் பொருந்துகின்றதனல், சீவர்களனைத்திற்கும் பொருந்திய சரீரம் இரண்டேயாம்; மேலான பிரம ஸ்வரூபத்தைத்தவிர சொல்லப்பட்டகாரணம் வேறில் லாததினல் வேறுகவுதியாத பிரமனுக்கு ஆதிவாகிய மானது ஒரு சரீரமாகப் பொருந்தும்.*— உலகத்துக் குக் காரணமாகிய பிரமனிடத்தில் சுயமாக வுண்டா கின்ற மனதின் ஸ்வரூபமா யுலகமுண்டாகிப் பரந்த படியால், அப்படி பரவிய சகங்களியாவு மனே ரூபமேயென்று அன்போடு சொன்ன வசிட்டமுனி யைப்பார்த்து, சகமென்னும் மாயையை மகா மனதி னது உருவத்தைப் பகுத்துச்சொல்லுமென் றிரா மன்கேட்க, வசிட்டமுனி சொல்லுவார். ¶— அவித் தைமயமாயும் உருவமில்லாததாயும் எவ்விடங்களி லுஞ் சேர்ந்திருக்கின்ற தனித்தமனதுக்கு, ராமமாத் திரமேயன்றி அனைத்துடனுகின்ற ஆகாயத்தைப் போல அகத்திலும், புறத்திலும், வடிவமில்லாததாம்; குற்றமற்றமெய்யும், பொய்யும் என்கின்றவஸ்துவில் பொருந்திய தோற்றமே மனதாகும், தொடர்ந்த சங் கற்பமானது எங்கேயுள்ளதோ உண்டாகின்றமனதும் அங்கே யுண்டானதாம்,— மனதினது வடிவம் சங் கற்பமேயாம், இவ்விரண்டு மொன்றேயாம், அநர்த்த மும், மோகமும், மலமும், பந்தமும், அவித்தையும், மாயையும், தமசும் முதலான கூட்டமாகிய நாமங்கள் சங்கற்பத்துக்குத் தகுந்த நாமங்களாம், இச் சங்கற்ப

௨௩. பிரமனுக் குச் சிருஷ்டியாதி தொழில் இருக்க, பௌதிக சரீரமில் லாத காரணமியா தெனின்.

௨௪. இதுவுமது

௨௫. சகத்தைச் சிருஷ்டிக்குமனே ரூபமியாதெனின்.

௨௬. இதுவுமது

௨௭. இதுவுமது

† இம். ஆதிமத்தியாந்த ரகிதமான சுயஞ்சைதன்னியமே தனதுல்லாசசத்தி யினல் வடிவமுள்ளதுபோலத் தோற்றினலும், அது பிரமமேயன்றி நாமரூப மனறென்பதாம்.

* இ-ம் உயிர்களுக்குப் பிரமமுபாதான காரணமாகையா லாதிவாகிய சரீரமும் சகத்து சககாரிகாரணமாகையால் ஆதிபௌதிக சரீரமுமாக இரண்டாம்பிரமாவுக் குப் பிரமமே காரணமாகையா லாதிவாகிய சரீர மொன்றேயா மென்பதாம்.

¶ இ-ம். சகமாகத் தோற்றுகின்ற பிரம சங்கற்பத்தை விசாரித்ததாம்.

உஅ. ஆத்மாவெங்ஙனந் தெரிந்துவிடத்தெப்படி விளங்குகின்றதெனின்.

உகூ. மனோநாச முண்டாகுங் காலமியாதெனின்

ஙூ. ஆத்மஸ்வரூப விலக்கண மியாதெனின்.

ஙக ஆத்ம விலாசமியாதெனின்.

நசிக்கில், பருத்த திரிஸ்யதிருஷ்டியு நீங்கும், பிரமஸ்வரூபமானது ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்.†— சராசரமென்கின்ற சமஸ்தத்தின் சாயையானது புணர்ந்தும் புணராமல் கேவலமாயிருக்கும், கண்ணாடியானதெப்படியோ அந்தப் பிரகாரமே சைதன்னியமாத்திரம் பிரகாசிக்கும், கற்பனை பொருந்திய நீ நானென்பது முதலாகக் காணப்பட்டனவாகிய வேற்றுமைகளனைத்து மடங்கி, அற்பமாகிலும் திரிஸ்யமானது சேடமின்றி நசிக்கில், அந்நசிப்பே ஒப்பற்ற கைவல்ய நிச்சயமாம்.‡— சொற்பனங் கொடுக்கின்ற சொற்பனத்தைப்போல, பார்ப்பதற்கு வுருவமில்லாத மனது இல்லாத திரிஸ்யவஸ்துக்களனைத்தையும் காட்டும், ஒன்றிலுந்தரியாத மனமானது சஞ்சல சத்தியினால் பிரகாசிக்கும், சஞ்சலிக்கும், கலங்கும், செல்லும், திரும்பும், வீணாகப் பொருந்திய களிப்பின் மிகும் அகங்காரத்தையடையும் வேறு வடிவமாகிய மகாப்பிரளயம் பொருந்துங் காலத்தில் ஆகாய முதலிய சகல வஸ்துக்களும், ஒருங்கேயழிந்து பூரணமான சாந்தமே மிச்சமாம்¶— அத்தமானமாகாத சுயஞ்சோதியென்னும் சூரியனாயும், எல்லையற்றதாயும், அற்பதுன்பமு மில்லாததாயும், உற்பத்தி யில்லாததாயும், எவ்விடங்களிலும் எக்காலத்திலும், சகலமுமாய் சகலத்தையு முண்டாக்கியும், சகலமும் விடுபட்டதாயும், வியாபித்திருக்கின்ற முதன்மையான பிரமஸ்வரூபமான தொன்றுள்ளது. o— வசனாதீதமாயும், சத்துக்களால் வசனிப்பதாயும் பிரமமுதலிய கற்பிதமாகிய பல நாமங்களிடப்பெற்று, மிகவு மறிவுள்ள சாங்கியர்கள் ஆத்மாவென்றும் பரிசுத்த வேதாந்த ஞானம் விளங்கினவர்கள் பிரமஸ்வரூபமென்றும், குற்றமற்ற விஞ்ஞானிகள் விஞ்ஞானஸ்வரூபமென்றும், சூனியவாதிகள் சூனியஸ்வரூபமென்றும், உரைக்கப்படுவதுமன்றி, சூரியப் பிரகாசத்துக்கும் பிரகாசமாயிருந்து யாவற்றிற்கும் பிரகாசத்தைக் கொடுத்து பிர

† இ-ம். சங்கற்பரூபமாய்ச் சடசித்துக்களிற் சஞ்சரிக்கின்ற மனதுக்குமோக முதலிய நாமமாத்திரமேயன்றி யுருவமின்றென்பதாம்.

‡ இ-ம். சகமுதலான பேதபாவனை நீங்கியவிடத்தில் தானாய் விளங்குகின்ற வனுபவமே சுயம்பிரகாச மென்பதாம்.

¶ இ-ம். மித்தையான மனது மித்தையான ஜகத்தைக்காட்டிக்கொண் டிருந்து அத்தியந்தப் பிரளயத்தி னசிக்குமென்பதாம்.

o இ-ம். உதயாத்தமனமின்றி சுயமாய்ப் பிரகாசிக்கின்ற பிரமம் சர்வ வியாபகமான சத்தாமாத்திரமா யிருக்குமென்பதாம்.

௩௨. ஆத்மவிவகாரமியாதெனின்

காசிப்பித்துப் பிரகாசரூபமாய் விளங்கும். ‡— வசனிப்பவனும், ஆராயபவனும், கேட்பவனும், பார்ப்பவனும், புசிப்பவனும், நினைப்பவனும், சகத்தில், தேகத்தில், திடமாகப் பொருந்தியும், பொருந்தாததாயு மிருக்கின்ற வஸ்துவினின்றும், சூரியபபிரகாசத்தைப்போல ஞானப்பிரகாசமுண்டாகும், ஆகாயத்தினின்றும் வாசனைபொருந்தியமனதேவேராகவும்இந்திரியங்களேபுட்பங்களாகவும்,அண்டங்களேகாயாகவும், உதயமாகும், மாயையென்னும் வல்லியை அசைக்கும் நிலமாயும், குற்றஞ்செய்யாநின்ற சரீரசம்புடங்களுக்குள்இரத்தினமாயுமிருக்கும் புரியட்டகசரீரத்தை, சித்தானது போக்குவரவைச் செய்விக்கும்.†-

௩௩. ஆத்மசுபாவமியா தெனின்.

பரிசுத்த ஞானமாதலால் அதுநிறைந்த வாகாயமாம், அப்பிரகாரமே எவ்வஸ்துவையும், பாவனைசெய்தபோது அவ்வஸ்துக்களே உளதாயிருக்கும், அந்த ஞானத்தில் திரிபுவனமும், கானற்சலம்போல எப்போதும் உண்டாகிகெடும், இவ்வளவையுஞ் செய்தும் தானிவ்வளவையும் செய்யாமல் இருந்தபடியிருக்கும்.¶-

௩௪. ஆத்மதரிசனத்தில் யாதடங்குமெனின்

நிருவிகற்பமான ஆத்மஸ்வரூபத்தில் உலகத்தினுற்பத்திலயமான இவைகள் நேரேயுண்டாகவில்லை, விகற்பபேதம் பொருந்தாத பராபரமாகிய அவ்வஸ்துவை பிரகாசிக்கத் தரிசித்தால் பெரிய மனோபந்தமறும், சந்தேகங்கெடும், சகல கருமங்களுங் கெடுமென்று முனிவர்சொல்ல, இராமர், ஓர் கடுகுக்குள்ளே மஹாமேருவானது நுழைந்தாலல்லவோ பிரமாண்டமானது அணுவுக் கணுவான பிரமத்தி லடங்குமென்று கேட்க.*-அரிய தவத்தையுடைய வசிஷ்டர் சொல்லு

௩௫. அதிசூட்சுமமானபிரமத்திற் சகத் தெப்படி யடங்குமெனின்.

வார். ஆத்மஞான சாஸ்திரங்களினாலும், சாதுக்கள் சங்கத்தினாலும், மாதத்தினாலல்லாமல் தினங்களினால் இச்சங்கைக் குத்தரந்தெரியும, பலசாஸ்திரங்களினது நிச்சயமும் இதுவேயாம், இவ் வருத்தமுள்ள இக்கதையை விசாரிக்கில் நிட்டையோடும் பூரணஞானத்தை வியாபகமா யறிபவர்களுக்குக் கற்பித்த சகமானது இருக்க, ஒடுங்கும் மேலான சீவன்முத்திபதத்தை யடையலாம, இச் சீவன்முத்தியே விம்தக

‡ இம். அகோசரமான பிரமம் அவரவர் நிச்சயித்தபடி விளங்குவதன்றியும் யாவையும் பிரகாசிப்பிக்கின்ற ஸ்வயம்பிரகாசமாய் விளங்குமென்பதாம்.

† இ-ம். யாவுமாய் விளங்குகின்ற பிரமன்தனது சிற்சத்தியிலுண்டான மாயை முதலிய வனைத்தையு மாட்டிவிக்கு மென்பதாம்.

¶ இம். சித்தானது பாவித்தம்யமாய் விளங்குவதன்றியுஞ் சிருட்டியாதிகளைச் செய்துஞ் செய்யவில்லையென்பதாம்.

* இ-ம். பிரமதரிசனத்திற் சங்கற்பமுதலிய வண்டங்க ளடங்குமென்பதாம்.

௩௬. சீவன்முத்த னிலக்கண மியாதெனின்.

முத்தியாம் என்றார். ¶— இராமர் விதேக முத்தியையும், சீவன் முத்தியையும் நல்ல பழமையான சாஸ்திர மார்க்கத்தில் யான் முயற்சிக்க சொல்லுமென்று கேட்க, வசிட்டர் சொல்லுவார். வலிமையான பல விபகாரங்களில் கூடியும், சிதா காயமானது பிரத்தியக்ஷமாய் திரிஸ்யந் தோன்றாததான வகையையுடையவர்கள், சதாநந்தம் பொருந்தவருகின்ற சீவன்முத்திப் பதத்தை அடைந்துயர்ந்த சுபாவமுடையவர்கள். §—

௩௭. இதுவுமது

வாராநின்ற ராகத்துவேஷாதிகளினால் உண்டாகின்ற விவகாரஞ் சேர்ந்தும் ஆகாயத்தைப்போல மிகவுஞ் சொச்சமானவர்கள், அகம்பாவமென்பதில்லாமல் தொழில்களைச் செய்தாலும் விட்டாலும், அதிலழுந்தாதவர்கள், உலகாசாரங்களைச்செய்தாலும், பிறரைப்போல அதைப்பார்த்து குளிர்ந்த தன்மையைச் சார்ந்தவர்கள், பிரகாசிக்கின்றமனமும், கருத்துமிருந்தும், அற்பமும் பற்றில்லாதவர்களும்: †— துன்பங்களில்

௩௮. இதுவுமது

மூழ்கி இன்பங்களில் மேற்கொள்ளாத அறிவினிச்சயமே இயல்பானவர்களும், அடைந்த கழுத்தியவத்தையில் சாக்கிரமாகி சாக்கிரத்தில் அஃதில்லா திருக்கின்ற வாசனையிறந்தசுழுத்திஞானத்தை பொருந்தினவர்களும் மேலான சமமாகி, சகத்தினால் பயப்படாமல் சகத்தையும் பயமுறச்செய்யாத மகான்களும் சம்சார பந்தமற நற்சிந்தனையிருந்தும் சிந்தனையில்லாதவர்களுமாகிய இவர்களே, சீவன் முத்தர்களாம். ‡— நிச்சய

௩௯. விதேக முத்தி யிலக்கண மியாதெனின்.

மாகிய இந்தச் சீவன் முத்திபதத்தை நீங்கி சரீராசித்தால், பூரணமான காற்றானது அசைவற் றாகாயமாயிருப்பதுபோல, விதேக முத்தியையடைவன். அதனியல்பானது, நசியாது மறைவுபடாது தோற்றாது சமீபமன்று, சேய்மையன்று, நடுங்காதது, முடிவில்லாதது, யானன்று, பிறனன்று, ஒன்றுமன்று.—

௪௦. இதுவுமது

இருளுமல்லாமல், ப்ரகாசமுமல்லாமல், அலைவுமல்லாமல் பிரமாணமு மில்லாமல் ஒருகுணமு மில்லாமல், ஒன்றுக்கொனறு பொருதுகின்ற பஞ்சபூதங்களும் நாநாவிதமான வஸ்துக்களும் அல்லாமல், நிறைந்திருக்கின்ற பூரண ஸ்வரூபமாயும் உருவமு

---

¶ இ-ம். அணுவுக்கணுவான பிரமமகத்துக்கு மகத்தென்கின்ற சுருதியுத்தியனுபவத்தாற் பரோக்ஷ ஞானமுண்டாயதனாற் சமாதியைக் கொண்டு அபரோக்ஷஞான முதிக்கிற் சுகமிருந்து மில்லாமற் சீவன்முத்தி யுண்டாமென்பதாம்.

§ இ-ம். அபரோட்சானுபவமுள்ளதே சீவன் முத்தித்தன்மையென்பதாம்.

† இ-ம். யாவுங்கூடியுங் கூடாமற் சித்தியாயிருப்பவனே சீவன் முத்த னென்பதாம்.

‡ இ-ம் சீவன்முத்தர் சககானுபவமாய் விபகரித்ததாம்.

மில்லாமல் அருவமுமில்லாமல் சத்துமல்லாமல் சத்த சத்துமல்லாமல் ஏகமாயும், வாராநின்றஞாதுரு ஞான ஞேயங்களின் மத்திற்றோன்றுவதை நீ மறவாமல்
௪௧. வஸ்துவினிலக்கண மியாதெனின்.
வரையறுத்தறிவாய். ¶— அத்தன்மையாகிய சிதாநந்தமான பிரமஸ்வரூபத்தை, ஞானம் பூரணமாம் பொருட்டு விபரமா யனுக்கிரகஞ் செய்வாயென்று கேட்ட அழகுள்ள இராமருக்கு, வசிட்டமுனிசொல்லுவார்; மகாகற்பம்வந்தபோது எவ்வகைப்பட்ட காரணங்களுக்கும் காரணமான பிரமஸ்வரூபமே ப்ரகாசிக்கும், விடையங்களைக் கிரிகிக்கின்ற மனோவிருத்தியை நீக்கி அகங்காராத்மாவைக் கொடுத்தால் நாமமற்ற பிரமவஸ்துவாகும்.†— எதிரிட்டறிகின்ற சகத்
௪௨. இதுவுமது.
தைப்பாராத சீவசைதன்னியத்தை அப்பிரமமாகச் சொல்லலாம், பரவிய விடயங்களை யனுபவித்தும் அனுபவியாதமனதை அப்பிரமமாகச் சொல்லலாம்; உண்டான விடையஞானமும், சூரியாதிப்ரகாசமும், மனமும், திரிஸ்யமுமாகிய இவைகளின் சர்வசாக்ஷியாகிய அறிவை அப்பிரமமாகச் சொல்லலாம்; கருமங்களைச் செய்தாலும் மலைபோலிருக்கின்ற நிச்சயத்தை அப்பிரமமாகச் சொல்லலாம்.o— அந்தமும், சொற்
௪௩. இதுவுமது.
பனமும், சடமுமில்லாத நீண்ட யோகநித்திரையானது அவ்வஸ்துவாகும், மூன்றாகி நெருங்கிய ஞாதாவும் அறிவும் விடயமென்னும் திரிபுடியானது உண்டாகி யடங்கும் ஸ்தானமானது அவ்வஸ்துவேயாம்; பூதாகாயம் அல்லாததாயிருந்தும், ஞாநாகாயமான நிலைமையானது, அவ்வஸ்துவாகும்; சித்தமும், புத்தியும், மனமுமாகிய விவைகள் நீங்கி மரங்களைப் போல பெற்ற உள்ளுணர்வானது, அப்பிரமஸ்வரூபத்தை ஒக்கும்.‡—பிரமாவோடும் விஷ்ணுவும், உருத்
௪௪. இதுவுமது
திரனும், சதாசிவனும், தேவேந்திரனும், சூரியனுமாகிய விவர்கள் உபசாந்தர்க ளாகின்றகாலத்தில்

¶ இ-ம். சர்வமும் பிரமமயமான வபரோக்ஷ ஞானாத்ம சாட்சாத்காரமாய் விளங்கு மனுபவமே விதேக முத்தியென்பதாம்.

† இ-ம். அத்தியந்திகப் பிரளயத்திற் சத்தாமாத்திரமாய்ப் பிரகாசிக்கின்ற பிரமம் அகம்பாவமற்றவிடத்தி லகோசரமாய் விளங்குமென்பதாம்.

o இ ம். திரிஸ்ய திருஷ்டியின்றித் திருக்கு திருஷ்டியிற் சீவிக்கின்ற சீவனும், விடயானுபவமின்றி யாத்மானுபவமா யனுபவிக்குமனமும்: திரிபுடிக்குச் சாக்ஷியானவறிவும், ஸ்வானுபவத்தினாற் கன்மங்களைச்செய்துஞ் செய்யாமலிருக்கின்ற நிச்சயமும் பரமார்த்த ஸ்வரூபமே யென்பதாம்

‡ இ ம் அறிதுயிலும் திரிபுடியினாதாரமும் ஞாநாகாசமும்அந்தக்கரணஞானமின்றி சுழுத்தி ஞானமுள்ள தாவரவறிவும் பிரமஞானத்துக் குவமானமாகச் சொன்னதாம்.

மேன்மையில்லாத உபாதிகளியாவையும் விடுபட்டுப் பிரயோசனமில்லாத உலகமென்கின்ற இச்சைவிட்டு ஞானமயமாகிய பிரமஸ்வரூபமானது, மேலான நிர்விகற்பஸ்வரூபமாய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கின்ற சிவஸ்வரூபமாய் அத்துவிதமாயிருக்கும்.¶—

ஞானவிண்மகன்கதை
முற்றிற்று.

---

# லீலைகதை.

## அவதாரிகை.

முற்கதையில், சுயஞ்சைதன்னியனுன பரமாத்மாவே சீவேஸ்வரசகமாகத் தோற்றப்பட்டாலும், அவை அப்பிரமத்துக்குப்பின்னப்படாமையைக் காட்டி, அச்சைன்னியவல்லாசமாயுண்டான பனே மாயையின்பலவான துற்கடனு கடனுசாமர்த்தியங்களைப் பிரகாசமாயறிவித்து, அம்மாயையை நிவிர்த்திப்பிக்கும்பொருட்டு லீலைகதையைச் சொல்லுகிருர்.

க. லீலைபதுமன் குண நிரூபணம்.

இவ்வருத்தத்தில் சந்தேகந்தீர்ந்துவிஸ்ராந்தியடையும்பொருட்டு; ஒரு பழமையான கதையை இராமா? நீ கேட்பாய்? பூமியின்கண் சத்துவகுண முதிர்ந்து விவேகம் பெற்றவன், விசயலட்சுமிவசிக்கின்ற புயத்தையுடையவன், பதுமநாமத்தையுடைய் வோரரசனுளன்; அவ்வரசன் மனைவியானவள் அவர் மனதுக்கினிமையான குணத்தையுடைய லீலாநாமத்தையுடையவளாம்— அவ்வரசனது சாயைப்போலவும், மனதைப்போலவும், பிரிவற்ற அந்த லீலையானவள், நல்லகணவன் சராமரணமில்லாமல் நல்ல எவ்வனமுள்ளவராய் எப்போதுங் கூடிச்சுகிக்க என்னவுபாயமென்று பழமையான சதுர்வேதப் பிராமணர்களுக்குச் சொன்னுள். அதற்கு.‡—செபங்களுந் தபசுகளும் முதலியவனைத்தும் சித்தியைக்கொடுக்கும், உலகங்களில் மரித்தலை யாவருக்கும் நீக்கக்கூடாது என்றந்தணர்கள் சொல்ல, இந்தலீலை சிந்திப்பாள்,

உ. லீலைசுகிக்குமுபாயம் விசாரித்தல்.

ங. லீலை சிந்தித்தல்.

¶ இ:ம் சீவேஸ்வரசகமென்னும் வாசனுக்ஷயமே நிருவிகற்ப ஞானமாசிவஸ்வரூபமென்பதாம்.

‡ இ:ம. சத்தத்தைவிட்டு நீங்காத சுகத்தை விரும்பினதாம்.

நமது நாயகனிறத்தற்கு முன்பு நாமரித்தால் நமக்கோர் வருத்தமுமின்றி, நிர்வாணசுகமானது கிடைக்கும்.— எனது நாயகன் முன்னேயிறந்தால், அச்சீவாத்மாவை, இம்மனையில் வசிக்கும்படிசெய்து அச்சீவன் என்னைச் சந்தோஷித்துப்பார்க்க பூரணாநந்தத்தை அடைந்திருப்பேன்; இந்நிலை வரும்பொருட்டு வேதார்த்தங்களைப் போதித்த சரஸ்வதியினது பாதங்களை துதித்து, தோத்திரஞ்செய்வேன் என்று நினைத்து.†— தன்னரசனுக்குச் சொல்லாமல் நல்ல மந்திரங்களிலும், நல்லசாஸ்திரங்களிலும், வல்லமையுடைய பெரியோர்கள் அனுக்கிரகஞ்செய்த மார்க்கத்தினின்று, தேவரையும், பிராமணரையும், ஆராதித்து, அசனத்தை திரிராத்திரி நீங்கிய நான்காந்தினத்தில் ஓர்போது கொஞ்சமாகப் புசித்து இனிதான நிஷ்டையினல் பத்துமாதஞ் சென்றகாலத்தில்.— ஆகாயத்திற் றோன்றிய பூர்ணசந்திரனைப்போல நிறத்தையுடைய சரஸ்வதியானவள், சந்தோஷித்துப் பிரத்தியக்ஷமாய், லீலையே? நீ விரும்பிய காரியமென்னவென்றுகேட்க? நீண்ட சநநமாகிய அக்கினிக்கு நீங்காத சந்திரகிரணமே, மனோதுக்கமென்கின்ற இருட்டைநீக்குகின்றசூரியப்பிரகாசமே என்று பதத்தைத் துதித்து,— என் கணவனிறக்கில் அந்தச்சீவன் இவ்வீட்டிலிருக்கவும், பிரத்தியக்ஷமாகும்படி உன்னை நினைக்குஞ்சமயத்தில், என் முன்னே பிரத்தியக்ஷமாகவும் ஆகிய விரண்டு வரங்களையும் அனுக்கிரகிக்கவேண்டுமென்று லீலைகேட்க; நல்லசரஸ்வதியானவள் கிருபையுட னனுக்கிரகித்து சுகமாயெழுந்தருளினுள்.‡— பக்ஷத்துடன் மாதமும் ருதுக்களுமாகிய வண்டில்களுங்கூடி, தினங்களாகிய மேற்பரப்புகளுஞ் சேர்ந்தவருடமாகிய வொப்பற்ற வச்சும் கணப்போதாகிய அதனடுவும், ஆதிமுதலான விவைகளையுடைய காலசக்கரமானது வேகமாகச் செல்லவும் — ஆநந்தமானது எல்லையறும்படி லீலையானவளிருந்தகாலத்தில், தனதுநாயகன் சிறிதுதினத்தில் மரணமடைந்தான். ஒதிமத்துக் கொப்பான லீலையானவள், சோகாக்கினி யெரிக்கின்ற வெப்பம் பொறுக்கமாட்டாளென்று சீவன் பிரிவதற்கு முன்னமே பிரத்யக்ஷப்படாமல் ஆகாயத்தி னின்றுக்கொண்டு சரஸ்வதியானவள் இந்தலீலையின் மோகத்தைக் கெடு

ச. இதுவுமது.

ரு. சரஸ்வதியை மூர்த்தியாகக் கொண்டு உபாசித்தல்.

சு. பிரசன்னமான வுபாசனமூர்த்தியைத் துதிசெய்தல்.

எ. தேவியனுக்கிரகித்தல்.

அ. காலசக்கிரத்தினுல் ஆயுணீங்கல்.

கூ. சத்தன் பிரிந்த விசனத்தைத் தேவி மாற்றுதல்.

† இ-ம். சத்தைவிட்டு நீங்காத சித்தே யாநந்தமாதலால் அஃதைப் பிறிவற்றிருக்கும் புத்தியைக்கருதினதாம்.

‡ இ-ம். விரும்பினவண்ண மடையும் வரத்தைப்பெற்றதாம்,

௰. சத்தன் பிரிந்த விடத்தும் பிரியாதிருக்கு முத்தியுரைத்தல்.

த்து.—மரணமடைந்தவரசனை புட்பங்களினால் மூடி வைப்பாய், பொருந்திய புட்பங்கள்வாடாமல், சரீரங் கெடாது சீவனீங்காமல் சொன்னமயமான அந்தப் புரத்தை அடைந்திருக்கும், இவ்வரசனது புரத்தை பொருந்தி சீக்கிரந் துக்கந்தீரக் கடவாயென்றருளி சரஸ்வதி மறைந்தனள்.*— அசரீரியான சரஸ்வதி

௧௧. விசேடத் தோடுஞ் சேர்ந்திருக்க விரும்புதல்.

யின் வசனப்படிக்கு அரசனைப் பூவினால் மறைத்து வைத்தாள்; பிரியாத வுயிரையுடைய லீலையானவள் உள்ளத்தின்கட்சிந்திக்க, சீக்கிரத்தில் வந்தவளாகிய சரஸ்வதியைநோக்கி எனதுநாயகனை பிரிந்துவாழ்வது கூடாது, அவர் சேர்ந்தவிடத்தில் சீக்கிரத்திற் சேர்ப்

௧௨. விரும்பினதடைய த்தேவி மத்தியகத ஞானத்தை யுபதேசித்தல்

பாயென்று லீலைசொன்னாள்,— மனோகாயமும், பூதாகாயமும், களங்கமற்றஞானகாயமும் என்கின்றமூன்றுகாயத்தில், முந்தின விரண்டாகாயமு மில்லாமலிருக்கின்ற மகத்தான சிதாகாயமானது, காணப்பட்ட வொருவஸ்துவில் அடைதலைவிட்டு, மிகவுந் தெளிவாக பக்கத்திலிருக்கின்ற வொருவஸ்துவை யடைந்தால், அப்போது மத்தியகதமான சிதாகாய

௧௩. மத்தியகத ஞானம் விளங்கு முத்தியுரைத்தல்.

மாம்.○— சங்கற்பசமுகங்கள் ஒழிந்தால், சாந்தமாகவும், பரிசுத்தமாகவும், சகங்களை த்துமாகவும்விளங்குவதாகிய சிற்ப்ரகாசமுதயமாம். இவ்விடத்தில் எவ்வளவும் திரிஸ்யங்களில்லையென்று வெறும்பொய் யென்றறிந்தால், அச்சமயத்தில் அந்த ஞானத்தினால்

௧௪. நிஷ்டை கூடல்.

அச்சிதாகாயத்தை யடையலாம்.‡—நமது கிருபையினால் அச்சிதாகாயத்தை யடையக்கடவாயென்று சரஸ்வதி யனக்கிரகித்துச்செல்ல, பின்வந்த லீலையானவள் நிர்விகற்ப சமாதியையடைந்து, தங்களால் வசிக்குங் கூட்டைவிட்டு நீங்கிய பறவைகளைப்போல அவாவுகின்ற மனமானது, களங்கமும் விருப்பமுமுள்ளசரீரத்தை அந்தக்ஷணத்தில்நீங்கினபின்பு.¶—

௧௫. சத்தன் பேதபாவனுருபத்தைத் தரிசித்தல்.

தான் ஞானகாயமத்தியில் ஒருபெரிதான பட்டணத்துக்கு விருப்பமுள்ள புருடனானவன், பதினாறு வயதுள்ள வீரமுள்ளவரசனாய் அரியணையின்மேல் நெருங்கிய வரசர்களும், நான்குபடைகளும், மிகுந்த வாசையையுடைய ஸ்திரீகளும், புகழும்படி வீற்

* இ-ம்: பிரிந்த விடத்தும் பிரியாதிருக்கு நிலையைப்பெற்றதாம்.
○ இ-ம். சத்தனது பேதஞானமறிவித்தற்குஅபேதஞானத்தைப் போதித்ததாம்.
‡ இ-ம். பேதபாவநீங்கிச் சர்வம் பிரமமயமாய்விளங்கும் ஸ்வயம்பிரகாசமாயின் சங்கற்ப நிறைவேறுமென்பதாம்.
¶ இ-ம்: தேவியனுக்கிரகத்தின னிட்டைகூடி, சாமான்ய ஞானத்தினின்றும் விசேடஞானம் வெளிப்பட்டதாம்.

௬௬. தரிசித்து மீண்டு தேவியைச் சிந்தித்தல்.

றிருக்கவும்,—தனது பிராணநாயகனைப்பார்த்து அவனிருக்குஞ்சபையையடைந்தாள்; மிகவுமதிசயித்தாள்; சபையைச் சூழ்ந்திருக்கின்ற மேற்குவாயலி லரசர்களும்; கிழவாயலில் முனீஸ்வரர்களும், வேதங்களில் வல்லமையை யுடைய பிராமணர்களும், தென்வாயலில் ஸ்திரீகளும், உத்தரவாயலில் சதுரங்கசேனைகளும், ஏனையோரும், நல்லபூமியும், மலைகளும், நகரங்களும், நாடுகளும், நதிச்சமுகமும், பலவஸ்துக்களுமாகிய விவைகளை போய்ப்பார்த்து, மின்னற்கொடிக்கொப்பாகிய லீலையானவள், திரும்பி தனதந்தப்புரத்திலுள்ள சரீரத்திற்புகுந்து, வெண்ணிறத்தையுடைய சரஸ்வதியை பிரியத்தோடும் சிந்தித்தாள்.—

௬௭. சிவன் மரித்தவிடத் திருக்க மறுபிறப்புற்றதியாதெனின்.

ப்ரத்தியக்ஷமான மேலான சிங்காசனத்தெழுந்தருளிய சரஸ்வதியை நமஸ்கரித்து, எனதுநாயகனுக்கு இறந்தபின், இத்திரிஸ்யமான சர்க்கத்தைக் காட்டிஅம் முன்போலவே பந்தமுள்ள பிரமாத்மகமாகியும், அமூர்த்தமாகியுமிருக்கின்ற வேறான சர்க்கமானது உண்டானபிரகார மிப்படிப்பட்டதென்றும், இச்சர்க்கத்தினுடைய சத்தியத்துவபிரமை நீங்கும்பொருட்டும் அருள்வாயென்று லீலைகேட்கவும், சரஸ்வதியுரைப்பாள். முன்னுயர்வான பிராமணசிருட்டியின் அரசப் பிராந்தியினளவே பதுமனென்னும் வடிவமான இந்தச் சிருட்டியானது வேறாகத் தோன்றினதாகும்.¶—அவ்வண்ணமே உனது நாயகனுக்கு இரண்டாவதான விடூரதசநாம உண்டாயிற்று,

௬௮. முன் சிருட்டியையறிவிக்கத் தொடங்கல்.

இதனது வரன்முறையைச் சொல்லத் தெரிந்துகொண்டு சங்கையுண்டானாற் கேளென்றுரைப்பாள், களங்கமற்ற நின்மலமான சிதாகாயத்தில், ஓர்பக்கத்தில் மாயாமண்டபமானது ஒன்றுண்டாயிருக்கின்றது; அதிற் சொல்லுதற்கரிய ஆகாய மென்கின்ற மயிலிறகின் றிரையினால் மூடியிருக்கும் மகமேருவாகிய கிளைகளையுடைய சொன்னஸ்தம்பத்தில் வசிக்கின்ற இந்திரன்முதலிய வுலக பாலர்களுடைய இந்திராணிமுதலிய ஸ்திரீகளென்னுஞ்சித்திரப்பதுமைகள்

௬௯. இதுவுமது.

பதித்திருக்கும்,—ஒருபக்கத்தில் பிருதிவியென்னும் புற்றுகளும், அவ்விடத்தில் வசிக்கின்ற சத்தகுலாசங்களென்கின்றஓடுகளுமுண்டாயிருக்கின்றன; ஆசையுள்ள மரீசிமுதலான புதல்வர் சூழ்ந்திருக்கின்ற,

¶ இ-ம். அபேதஞான மிருந்தவிடத்திருக்கபேதஞானமான முன்சிருட்டியின் மனோமயக்கமே இச்சிருட்டியாகி, இச்சிருட்டியின் மனோமயக்கமே மேற்சிருட்டியானதை யறிவித்ததாம்.

வார்த்திகமும் பரிசுத்தமுமுள்ள பிரமாவாகிய ஒரு புருடன் வசிக்கின்ற இடமாகும், பெருமைபொருந்திய ஆகாசமென்னும் வேணுவில் சஞ்சரிக்கின்றஅழகிய விமானத்தையுடைய தேவகீடங்களினது கூட்டங்களைப்பொருந்தும்,சமீபமாகிய ஆகாயத்தில் வசிக்கின்ற சித்தர்குழாமாகிய மசகங்கள் சப்திக்கின்ற

உ0. இதுவுமது. கும்மென்கின்ற சப்தம்பொருந்தியிருக்கும்,—தேவர்களும் அசுரர்களும் என்கின்ற துஷ்டப்பிள்ளைகளினது செருக்குற்ற விளையாட்டிலுண்டாகிய சப்தமாருமவிருக்கும், இப்படியான ஒப்பற்ற மகாமாயா மண்டபத்தில் அவ்விடத்தொரு பக்கத்தில் ஒருதிக்காகிய ஒருகிரகமத்தியில் பெருமைமிகுந்த வரையென்கின்ற ஒருபூமியில், மலைகளினாலும், நதிகளினாலும், கானகங்களினாலும், மேலாகிய வளப்பநிறைந்த கிரிக்கிராமமென்னு மொருபட்டணமுண்டு, அதனிடமாக வாழ்கின்றவன் அக்கினிஹோத்ரத்தை யுடையவன் பிராமணர்களில் மிகவு மேன்மையானவன்.¶—

உக. முன் சிருட்டியி ஞமங்களும் அவர் குணங்களுமுரைத்தல். அழகிலும், செல்வத்திலும், வயதிலும் அடக்கத்திலும், செய்கையிலும், கல்வியிலும், வசிட்டனுக்குச் சமானமானவன்; அவ்வசிட்டனென்று சொல்லும்படியான குணம்பொருந்திய வறிவையுடையவனல்லன் நாமத்தினால் இப்பிராமணனையும் வசிட்டனென்று சொல்லலாம்; அவனதுபதத்தைப் பணிகின்ற அருந்ததிக்குச் சமானமாவாள், அவ்வருந்ததியினது, அறிவையுடையவளல்ல பொருந்தியநாமத்தினால் உயர்ந்த வருந்ததியானவள், இவ்வசிட்டனுக்கு நாயகி பூலோகத்திலிவளும் தெய்வலோகத்தி லவளுமாம்; இவர்களுக்குச் சமானம்வேறில்லை.—இவ்வருந்

உஉ. அவாபிராந்தி நிரூபணம். ததிபுருடன் என்றுசொல்லிய இவ்வசிட்டனவர், அவ்வரையில் விளங்குகின்ற தாழ்வரையில் முன்னொருநாளிருக்க, வேட்டை நிமித்தம் அவ்விடத்தில் ஒருகிரீடத்தையுடைய அரசன் படைகளுடன் முன்னேவர, அவ்வரசனைப்பார்த்து வசிட்டன் யோசிப்பான். அரசர்கள் செல்வம் மிகவுநன்மையாம். அழகானவுலகத்துக்கு இராசாவாய் படைகள் சூழ்ந்துவர இரண்டுசாமரங்களைவீச எக்காலத்தில் சுகத்தை

உங. இதுவுமது. யடைவோம்.—வெற்றிக்கொடிகள் நெருங்கும்படி வெண்கொற்றக்குடைநிழலில் வாழ்ந்துமகளிருடைய செஞ்சாந்தணிந்த தனங்களில் படிந்திருப்ப தெந்த

¶ இம் முன்சிருட்டியை யறிவிக்கு நிமித்தம், செல்லுமார்க்கத்தி லுண்டான வதிசயங்களைச் சொல்லியதாம்

நாள், முடிவில்லாத இப்பிரயோசனத்தை எப்பொழு தடைவோமென்று நிறைந்தவாசை அரசனைக்கண்ட வன்றுமுதலாக உண்டாயிருக்கின்ற மனதையுடை யவன், இப்படி கெடாததனது கன்மத்திலிருந்தான். வார்த்திகமானது, தாமரையைச்சேர்ந்த பனியைப் போல அவனுக்குண்டாக, அவர்தேவியானவள் உன்னைப்போல பாதத்தை வணங்கி எனைவிரும்பிக் கேட்ட சீவனவ்வீட்டினின்று நீங்காதவரத்தையும் கொடுத்தேன்; பிராமணனாகிய வசிட்டனும் இராச போக விச்சையோடும் மரணமடைந்து.‡—அவ் வசிட்டனனவன், கிரகாகாயத்தில் சீவாகாயவடிவமா யிருந்தான். ஞானகாயவடிவமான வசிட்டனை முன் னாளில் இராசசெல்வத்திலழுந்திய மனோசங்கற்பத்தி னால் அரசனாய்பொருந்தி யிருந்தான். தவத்தை யுடைய பிராமணன் பிரேதமானதைக்கண்ட நாயகி யானவள், துன்பமடைந்து தன்மனதில் இரண்டுவித யாக நினைத்து தனது தூலசரீரத்தை சமானமாகிய நாயகனுடன் பிரேதமாகத்தள்ளி, மேலான சூட்சும சரீரத்தோடு அந்தநாயகனுடன் போய்ச்சேர்ந்தாள்.-

உச. இச்சித்த வடிவமாதல்.

இத்தன்மையவான பிராமணனுடைய புத்திரரும், வீடும், பூமியும், வனங்களும், மலைகளும், சகலமும், அவ்விடத்திலிருக்க, அவருக்கு பொருந்திய சீவன் பிரிந்து எட்டுநாளாகும், சிதாகாயரூபமான சீவனும் அந்தவீட்டிலிருக்கும், முன்சநநத்தில் உனக்கு நாயக னாகிய அப்பிராமண னரசனாகி பொருந்தினன். அப் போது பரிசுத்தமாகிய அருந்ததியென்னு நாமமுள்ள பிராமணஸ்திரீயாகி, அவன் மனைவியாகிய அந்த மட மயில்போன்ற பெண்ணனவள் நீ தான்.¶— புதுமை யான சக்கரவாகப்புள் சேர்க்கைபோலவும், பூமியின் கண் இடதுபாகத்திற்சேரும் பார்வதி பரமேஸ்வர ரைப் போலவும், நன்குள்ள ஸ்திரீபுமானாக இருவரு மாய் இவ்விடத்தி லரசாட்சி செய்கின்ற நீங்கள் அந்த அருந்ததி வசிட்டரே; ஆகையால் மூன்றும் பிறைபோன்ற நெற்றியையுடைய லீலாய்? முன் பிராமண சிருஷ்டியின் இராசாவாகநினைந்த பிராந்தி யைக் கூறினோம், இப்பதமசிருஷ்டியும் பிராந்திமாத் திரமேயாம், சலப்ரதிவிம்பாகாயம்போல வடிவமான

உரு. இதுவுமது.

உசு. மூன்று சிருஷ்டியி லுள்ள வடிவமும் பிராந்தி யெனல்.

‡ இ-ம் சீவனதபேதஞான மவ்விடத்திருக்கவும், பேதஞானமான மனது செல்லுழித்தான் செல்லவும் வரம்பெற்றன ளென்பதாம்.

¶ இ-ம். பிராமணனது சாமான்ய ஞானமவ்விடத்திருக்க, விசேடஞானமே யாசசிருட்டியை யடைந்ததென்பதாம்.

விரோதசநநம் உனக்கு ப்ரகாசமாகத்தோற்றியது என்று லோகமாதாவாகிய சரஸ்வதிசொன்னாள்.†—

௨௭. வசிட்டரது சீவனங்ஙனநிற்க, இங்ஙனம் பத்மனைரென்பதெங்ஙனமெனின்

இந்தவசனத்தைக் கேட்டவளவில் லீலையுரைப்பாள், தேவீ? அசத்தியமேசொன்னாய், ,இஃதெப்படி பொருந்தும், பிராமணன் மனையில் வசிக்கின்ற சீவனெங்கேயிருக்கின்றது? இவ்விடத்து வேறாகவிருந்த நாங்கள் சேர்ந்ததெங்கே? முன்பொருந்திய அந்த வேறுலகத் திருக்கின்றவர்கள் அந்த நெருங்கியமலைகளும், பத்துதிக்குகளும், முழுதுங் கூடிவந்து இனிமையாக இவ்விடத்தில் நாங்களிருக்கின்ற வீட்டுக்குள் பொருந்தும்வழி யெவ்விதமென்று கேட்டாள் ?—

௨௮. இதுவுமது.

மதர்த்த இந்திரன்யானை யானது ஒருகடுகினுடைய வொருபக்கத்தில் கட்டுப்படுமோ? மகம்மேருவானது வந்து ஒருதாமரைவிதைக்குள் நுழைந்திருந்து ஓர்வண்டின்குஞ்சால் மிகவுநெரியுமா? மசகமானதுகோபித்துஅடித்து போர்செய்ய சிங்கங்கள் பலவற்றுடன் பயந்தோரணுவுக்கு ணுழையுமோ? சொல்லிய உனதுவசனம் இவ்வண்ணமே, ஒன்றுக்கும் பொருந்தாதென்று லீலைகூறவும்,தேவிகூறுவாள்.—

௨௯. சிருஷ்டிகளின் பிராந்தி நீங்க தத்துவமுபதேசித்தல்.

நாம்பொய்சொல்லவில்லை; இதனுண்மையை சொல்லக்கேட்பாய். என்னையொத்தவர்கள் ஈஸ்வரநியதியை சத்தியமாகக் கொள்ளுவதேயன்றி பேதிக்கார்கள், பிராமணனுடைய சீவனானது அவனகரத்திலுள்ள மனையில் அதிரிஸ்யமாய் வசிக்கின்றது இந்நாடுகளும், இப்பத்மவரசாங்கமும்; ஞானகாயரூபமேயாம், இவையனைத்தையும், மைதீட்டிய கண்களையுடைய லீலாய்? அச்சிதாகாயமே வடிவமாகிய அவ்வசிட்டனே சந்தோஷித்து மனகாயத்திற் பார்ப்பான்.‡—

௩௦ இதுவுமது.

பழமையாகிய அந்தநினைவு, இப்பொழுதுங்களுக்குத் தோற்றாமல், வேறாகித் தோன்றும், நாநாவிதமான சாக்கிரஸ்புரணம் சொற்பனத்திற்றோற்றாத தன்மையைப்போல, அந்தவசிட்ட ஸ்புரணத்தின்றன்ம தோற்றாமல் இப்பதும ஸ்மரணத்தின்றன்மை தோற்றும், தானாகியசத்தினால் ப்ரகாசிக்கின்ற முற்கூறியவியாபகமானஞான காயத்தில்,ஒரு தனித்த பக்கத்தில் மனோசங்கற்பததிலும் கண்ணாடி

† இ-ம் முன் வசிட்ட பிராந்தியே பதுமனாகவும், அப்பதுமப் பிராந்தியே, விரோதனாகவு மானதேயன்றி, எதார்த்தமா யிவர்களுக்கோர் வடிவமு மின்றென்பதாம்.

‡ இ-ம். சர்வமுந் தானாய் விளங்குகின்ற சைதன்யமே, தனதபேத ஞானத்தினாற் பேதஞானத்தைத் தானாகப் பார்க்குமென்பதாம்.

யில் அடுத்தசாயைப்ரகாசிக்கின்றதுபோல, கடினமா
௩௧. இதுவுமது. யிருக்கின்ற இவ்வுலகமானது தோற்றும்†—ஒளி
யுருவாய் பொருந்திய உலகங்க ளனைத்தும் தெளிந்த
பரமாணுவாகிய ஞானஸ்வரூபத்தில் ப்ரகாசமாக
உள்ளுக்குள்ளே நெருங்கியிருக்கும், ஆதலினால் முற்
கூறிய பிராமணனிருந்த பூமி முதலானவைகளும்
ஞானத்துள் தோற்றும், ப்ரத்தியக்ஷமாக இதைத்
தெரிவாயென்று சரஸ்வதி சொல்ல, அப்பிராமணன்
எட்டாந் தினத்தில் மரித்தானென்று சொன்னாய்,
எளிதாக வெங்களுக்கு அநேக வருடங்கள் சென்
றன, என்னவென்று கேட்ட லீலைக்கு, திரும்பவும்
௩௨. எண்டின மநேக தினமான தெங்ஙனமெனின் தேவியுரைப்பாள்.¶— முன்சொல்லிய சித்துவிலாச
மாய் விளங்கிய தேசத்துக்கு விபுத்துவமில்லாதது
போல காலத்துக்குமற்பமும் விபத்துவமில்லை,மாயா
விகற்பமில்லாத ஞானப்ரகாசமானது தோற்றுதல்
மாத்திரமின்றி காலதேசத்தினளவு வேறில்லை, பொ
ருந்திய மித்தியாமரணத்தினால் ஒருகண மெய்மறந்
திட சீவன் பிரிந்துபோனது, முன் சரீரபாவனையை
மறந்து இச்சநநத்திற் பொருந்திய பாவனையை யடை
௩௩. இதுவுமது யும்.—இவ்விடத்தில் இது நம்மைத் தாங்குகின்றது,
இதனால் மிகவுஞ் சுமக்கப் படுகின்றவனும், ஈதுபருக்
கின்ற நமதுசரீரம், இவன் நமதுதந்தை, இறப்பது
இத்தனை வருடத்தில், இது இங்கு விருத்தியாகின்ற
நமதுபந்துக்கள், இது பிரியமாய் வசிக்கின்றஸ்தான
மென்று பொய்யாகிய மரணமூர்ச்சையின் றன்மைதெ
௩௪. இதுவுமது. ளிந்தபின்பு சீவன்சிந்திப்பன்,—ஆகையினால் முற்
செநநமறைபட்டு இப்பிறப்பு அறியப்பட்டதென்று
சரஸ்வதிசொல்ல, ஞானமாகிய கண்ணை நீ யனுக்கிர
கஞ்செய்யப் பூர்ணமாகத் தெளிந்தேன், இச்சை
தீரும்படி இவ்வசிட்டாதிகள் வசிக்குமிடத்தைக்
காண்பியென்று இந்த லீலை சொல்ல வேதஸ்வரூபி
யாகிய சரஸ்வதி சொல்லுவாள், அதைக் காண்பத
ற்கு இவ்வினை வடிவமான தூலசரீரந்தடையாகும்.*-

---

† இம். சத்தாமாத்திரமாகவிளங்குஞ்சைதன்னியத்தின் ஏகதேச ஸ்புரணமே உலகமுதலிய யாவுமென்பதாம்.

¶ இ-ம்.சைதன்னிய வியாபகத்திற் ப்ரதிபாமாத்திரமாய்த்தோற்றுகின் றசகல சகத்தும், அதன் சுப்ரகாசமே யென்பதாம்.

* இ-ம். சீவனானவன் விஸ்வனுய்நனவினின் றுநித்திரை மயக்கத்தாற்கனவிற் சென்றநிலைமறந் திலிலோர்கடிகையி லநேகங்கடிகையின் சங்கதிகளைச் சத்திய மாகக் காண்பதுபோலச்சித்தானது பிராணனாய் முற்பவத்தினின்று மரணமயக் கத்தாற்பிற்பவத்திற்சென்ற நிலைமறந்திலில்விழித்துச்சிந்தித்த சங்கற்பஞ்சத் தியமாகவேண்டின வெகுதினமாகத்தோற்றினதேயன்றி வேறின்றென்பதாம்,

நடு. முற்பவத்தை யறியவேண்டுமென்றதற் குபதேசித்தல்.

இச்சரீரத்தை மறந்து வேறாக அறிவதின்றி விளங்காநின்ற ஞானப்பிரகாசமாகியும் சத்தாகியு மிருக்கின்ற அவ்வாநந்த போதமே ஸ்வரூபமாய் மாயா மலத்தை நீக்குவையாயின் அவ்விடத்தைப் பார்க்கலாம், தங்களுக்கென் றோருருவம் பிரமத்தையன்றி வேறில்லாத சகங்களாக, பொன் ஆபரணமாய் வந்த வகையைப்போல, உங்கள் மயக்கத்தினுல் அறியப் படும்.§—

நசு. இதுவுமது.

உண்மைஞானத்தைப் பயிற்சிசெய்கின்ற சுத்தவாசனையைத்தவிர உலகங்க ளாத்மஸ்வரூபமாகாது, மிருதுவாகச் செய்கின்ற ஜகவிருத்தியை நீக்கினுயில்லை, ஆகையால் உன்னுலடையப்படாது. பரிசுத்தமான பிரமத்தில் எம்போன்றவர்க ளிருப்பது உன்போன்றவர்களுக்கு மனோரூபமாக வைத்திருக்கின்ற சூட்சுமசரீரம் மிகுந்த பாவனையினுல்வளர்ந்து தூலசரீரமாகும்,‡—

நஎ. இதுவுமது.

பனிக்கட்டியானது சூரியகிரணத்தினுல் கரைந்து சலமாகின்ற முறைமைபோல உனது மெய்ஞ்ஞானத்தைக் குறித்துப் பார்ப்பதினுலும் வாசனையை விடுதலினுலும் ஸ்தூலசரீரத்தை விட்டு சூக்குமசரீரம் நிலையாக நிற்கும் சீவன் முத்தியுமாம், பூர்ணஞானமே நிறையும், உனதிச்சரீரத்தை யந்தமட்டுநிறுத்தி ஆதிசூக்கும சரீரத்தால் முந்தினசிருஷ்டியைப் பார்ப்பாய்.†—

நஅ அஃதடையுமப்பிமாச விலக்கணமியாதெனின்

இப்படியென்றனுக்கிரகித்த சரஸ்வதியை அந்தப்பிரகாரம்வரமுயற்சிக்குந்தன்மை யென்னவென்று இந்த லீலையானவள் கேட்க, சிரவணமும் மனனமும்நிறைந்த நிதித்தியாசனமும், அப்பழமையான வஸ்துவினிடமான நிஷ்டையாய் நிலையானவானந்தமும், சகலத்தியாகமும், நிராசையும் பூரணமாய் நீண்டவுலகமென்பது எப்பொழுதும் ஒன்றுமில்லையென்று வேதநூல் மார்க்கத்தினுல் யுத்தியாய் அப்பியாசியானவர்கள் அனுபவமா யறிவார்கள்,*—

நகூ. இதுவுமது.

நானிது வென்னுஞ் சகங்கள் இந்தச் சிருட்டியாதியில் உண்டாகாதபடியினுல் எப்பொழுது மில்லவே யில்லையென்று, தெளிந்த ஞானமும், திரிஸ்யதிருஷ்டி நீங்கி

---

§ இ-ம். திரிஸ்யநீங்கித் திருக்குவடிவமாயிற் றெரிசிக்கலா மென்பதாம்.

‡ இ-ம். சாதனமன்றிச்சாத்தியங்கூடாதென்பதாம்.

† இ-ம். ஞானதிருஷ்டியினுலாதிபௌதிக சரீரங்கரைந்தாதிவாகிக சரீரமாகிச் சங்கற்பித்ததைப் பார்க்கவேண்டு மென்பதாம்.

*இ-ம். இந்திரியமுதலியகரணங்களியாவையுமகமுகப்படுத்தியதனுற்சகசென்னியமானவிடத்திற் றிரிஸ்யமில்லையென் றனுஷ்டிப்பதே சாதகமென்பதாம்.

ப்ரகாசிக்கின்ற ஞானத்தினல் ராகத்துவேடாதிக ளென்னுஞ் சத்துருக்கள் பிரிந்திட, இன்பமும் வந் தடையுமென்று, இவை அப்பியாசமாகவே தொடர் வார்கள், பிரமாப்பியாசிகள்.§— திரிஸ்ய ஸ்மரண மில்லாத அறிவே ஞானமும் மேலடைகின்ற ஆத்ம லாபமுமாய் சிந்தித்து, அப்பிரம நிச்சயத்தை அப்பி யாசஞ் செய்வதே முத்தியென்று அதிலப்பியாசிப்ப தே பரிசுத்தமான ஞானேயமென்று, அவ்விராத்தி ரியில் பேசின சரஸ்வதியும் லீலையும் சரீரவாதனை யின்றி ஸ்வரூபசமாதியிற் பொருந்தி நிச்சலமாயிருந் தார்கள்.†— பத்தங்குலப் பிரமாணமென்னும்படி ஞானகாரயான லீலையோடும் முன்புள்ள ஞானசரீரத் தால் ப்ரகாசித்த சரஸ்வதியும், உயர்வாகிய ஆகாயத் தில் எழும்பினர்கள், வெகுதூரம் நீங்கும்படிசென்று பொங்காநின்ற பிரளய மகாசமுத்திரத்துக்கு ஒப் பாகிய ஆகாயத்திற்சென்று அடியில்வரும் அவை களைப்பார்த்தார்கள்.—அளவில்லாததாயும் தெளிந் திருக்கின்ற மிருதுவாயும் தென்றற்காற்றினது சுகம் தடையில்லாததாயு மிருக்கின்ற சிதாகாயத்தில், மனோவேகத்திலும் வேகமாய்ச்சஞ்சரிக்கின்ற சித்தர் கணங்கணிறைந்து எட்டுத் திசைகளிலும் இராட்ச தர்களும், பிசாசர்களும், கணக்கற்றிருக்கின்றஞாளி யைப்போலவும், காக்கையைப்போலவும், ஒட்டை யைப்போலவும், கழுதையைப்போலவு மிருக்கின்ற வதனங்களையுடைய யோகினிகள் வரிசையாக ஆகா யத்தில் சுழன்று— களிப்புள்ள நிருத்தத்தையுடைய இடாகினிக் கூட்டங்களும், வேகமுள்ள வாயுவினுற் சஞ்சரிக்கின்ற வெண்மையான கங்காநதியும், சுவரில் லாத வீட்டிற்பொருந்தி வீணகானத்தில் தெளிகின்ற நாரதர், தும்புரு கானங்களும், எழுதப்பட்ட சித்தி ரத்தைப்போல, சத்தமில்லாமல் வருஷிக்கின்ற கற் பாந்தமேகங்களும் மகளிர்கூட்டங்களும் உண்டாகி.-

அளவில்லாத பதின்கடிகை தூரங்களில் எவர்க்கு மடையக்கூடாத தாகியும் கல்லுக்கொப்பாய் மிகவும் கெட்டியாகத் திரண்டிருக்கின்ற கருமையான விருளை

சO. சாதன முதிர்ந்து சாத்திய மாதல்.

சக. தனது வியாபகத்தி லுண்டாயிருக்கின்ற பிரம சிருஷ்டியை யாதிவாகிக சரீரத்தாற் காணச்செல்லுதல்

சஉ. இதுவுமது.

சங. இதுவுமது.

சச. இதுவுமது.

§ இ-ம். சகலமுமத்தியந்த பாபமென் றெதிரற்றறிந்தஞானத்தினல் ஆனந் தத்தையடைய வனுஷ்டிப்பதே சாதகமென்பதாம்.

† இம்முன்போதித்திருந்தபரோக்ஷஞானம்அபரோக்ஷமாம்பொருட்சொதக ரிலக்கணம் போதிக்கும்போதே சாதனமுதிர்ந்து சாத்தியமாயாதி பௌதிகங் களைந் தாதிவாகிகஸ்வரூப மாயபேதமான தென்பதாம்.

யுடையதாயும், சீக்கிரமாகச்செல்கின்ற இரதத்தை யுடைய சூரியனும், அக்கினியும்,சமானமாகிய ப்ரகாசத்தை யுடையதாயும், சொல்லப்பட்ட இக்கூட்டங்களியாவையுமுடைய பலபலவிடங்களிலும் தொடர்ந்து.—

௪௫. இதுவுமது.

கொசுகின்பெருங்கூட்டங்கள் அத்திக்கனியிடத்தில் சப்திப்பதுபோல, எவ்விடங்களிலும்பிரமனுண்டாக்கிய சீவர்களியாவும் சேர்ந்திருக்குங் குணமுள்ள திரிபுவனங்களையுடைய ஆகாயத்தைத் தாண்டினர், திரும்பவும் ஒருபூமியைச் சேரச் சிந்தித்து பிரமாண்டத்தைக்கடந்து வசிட்டனிருந்த லோகத்தில் கிரிக்கிராமமென்னும் பட்டணத்தை யடைந்தார்கள்.‡—

௪௬. புத்திரரைக் காண்டல்.

அங்கே ஏவற்காரரும், உறவினரும், புத்திரரும், துன்பமாகவாடுகின்ற அப்பிராமணனது வீட்டிலுழைந்தவர்கள் அவர்களுக்கு அதிரிஸ்யமாயிருக்கும் சமயத்தில், சத்திய சங்கற்பத்தை அடைந்த லீலையானவள் வீட்டின்க ணுள்ளவர் எங்களைப்பார்க்கக் கடவார்களென்று சங்கற்பஞ் செய்தாள்.—

௪௭. துக்கநிவர்த்திசெய்தல்.

இலட்சுமியையும் பார்வதியையும் ஒத்த லீலாதேவிகளை வனதேவதையைப்போலவிருக்கின்றதென்று தாங்கள் தரிசித்துப் பூசித்தார்கள், அதில் முந்தினகுமாரன் பார்த்து எங்கண் மாதாபிதாக்கண் மரிக்க, நாங்க ளடைந்திருக்கின்ற துக்கத்தை நீக்குவீர், மேலானவர்களை தரிசித்தவர்களுக்குக் கிடையாதபயனென்றுண்டா, பேரறிவை யுடையவர்களேயென்றுசொல்ல, ப்ரகாசிக்கின்ற லீலையானவள் சிரசைத்தொட்டு அவர்கள் துக்கத்தைநீக்கி—

௪௮. லீலையை முற்றுவினவுல்.

சரஸ்வதி லீலையென்னுமிருவரும் அவ்விடத்தில் அந்தரத்யானமானார்கள். சகத்சத்தை இவ்வண்ணமாய் நினைத்ததை பார்த்துமுடித்தோம், மேலுன்னுடைய கருத்தென்னவென்று சரஸ்வதிகேட்க, அடைந்திருக்கின்ற சமாதியினிடமாய் பார்த்த வரசசபையிலுள்ளவர்கள் என்னைக்காணாதவகையும், இவ்வழகிய வீட்டிலுள்ளவர்கள் பார்த்தவிதமும், என்னவென்று தெய்வத்துக் கொப்பான லீலையானவள் சொல்லென்று கேட்டாள்.—

௪௯. தேவிலீலையினையுநீங்கப் போதித்தல்.

ஞானப்பியாசத்தினலல்லாமல் துவிதமத்துவிதமாகாது, நானென்னும் பாவனையைப் பிரியாமல் ஞானத்தை யடைந்தபடியால் மெய்ச்சங்கற்பமானது உனக்குண்டாகவில்லை, ஆதலால் அச்சபையிலுள்ளவர்க ளுன்னைப்பாரார், இப்பொழுது நா

‡ இ-ம். ஆத்மவியாபகத்திலுண்டான ஸ்புரண விசித்திரங்களை யதுதானே பார்த்ததிசயித்ததாம்.

னென்னும் பாவனையிறந்த ஸ்வரூபஞானத்தைஉணர்தலினல் பேதமாக நீசங்கற்பிக்க இப்புத்திரர் முதலாயினோர் பார்த்தார்களென்று சரஸ்வதிசொல்லியவுடன்,¶-சரஸ்வதியே? உனதுகிருபையினல் வெட்டவெளியாக எனது பூர்வசென்மம் யாவையுமறிந்தேன், திரிகுணங்களினலுண்டான பாவமுநீங்கினேன், பிரமத்தினின்றும் வேறுருவமாய்நீங்கி யெண்ணூறு சரீரம் நாநாவிதங்களா யெடுத்தேன், முன்னமே, மாயாவிகற்பத்தினலுண்டாகிய உலகங்களாகிய தாமரைபுட்பத்தில் வசிக்கின்ற வண்டுகளைப்போல, சகலவுலகங்களிலுஞ்சஞ்சரித்த வித்தியாதரஸ்திரீயாகவும் வாசனையின்றீமையால் நரவடிவாகவுமானேன்.—

ருo. முற்பவங்களைக் காண்டல்.

ருக. இதுவுமது.

மற்றொரு மாயாவிகற்பமான லோகத்தில், இந்திராணியாகவும், பத்திரவஸ்திரத்தைத் தரிக்கின்ற வேடஸ்திரீயாகவும், வலையை அறுத்த பறவையாகவும், சவுராஷ்டர்தேசத் தரசனுகவும், கொசுகாகவும் பிறந்து, இவைமுதலாகிய பலசநநங்களி லுழன்றுவாடி, சமுத்திரத்தினலையி லலைகின்ற துரும்பைப்போல மாயாவசத்தில் ஊர்த்தகதியும் அதோகதியுமாகக் கலங்கினவென்னை, முத்திதீரத்தி லேற்றுவித்தாயென்று இந்தலீலை தோத்திரஞ் செய்தபின் இரண்டுபேர்களும் ஆகாயத்தி லெழும்பினர்கள்.†—

ருஉ. பின் சிருஷ்டியைக் கண்டதிசயித்தல்.

யோகமார்க்கத்தினல் ஆகாயத்திற்சென்று பதுமவரசனிடத்திலடைந்து அவனது சரீரத்தைப்பார்த்து பின்பு அப்புறஞ்சென்று இப்பதுமனிரண்டாஞ்சனனமாகிய விடூரதவரசனை அடையவும், அத்தருணம், அவ்வரசன்மே லெதிர்த்துவந்து கடுமையான போரையுடையவனும் ஒப்பற்றவேலையுடைய சிந்துவரசன்யுத்தத்தைத் தொடங்கி மிகவுமடிக்க, ஆகாயத்திலிருந்து மயிலையொத்த சரஸ்வதி லீலையானவர்கள் பார்த்தார்கள்,இரண்டுசேனையும் யுத்தம் பண்ணின.— அளவற்ற விருவர்சேனைகளும்நமனடுங்கும்படியாக கொடியசண்டை பொருதுங்காலத்தில், எட்டிலொருபங்காகும்படி எதிரியினல் இவன் படைமரித்தமாத்திரத்தில், மரித்தவர்களது பிரேதமலையினல், மறைந்தானே போரைக்கண்டு பயந்தானே

ருங. இதுவுமது.

¶ இ-ம். அகம்பாவத்தோடும் அஃஜ்ஞானமயோடும்பெற்ற ஞானத்தின் பலாபலனை யுரைத்ததாம்.

† இ-ம். பிரமத்தினின்று நீங்கினமுதலிதுபரியந்தம் வியாபித்திருந்த பூரணஞான முதயமானபடியினல் அதில்குமிளித்தவடிவங்களியாவுந்தனது வடிவமாகத் தெரிந்ததாம்.

வென்று சொல்லத்தக்கதாய்குற்றமற்றசூரியன்போக அந்தகாரம் நிறைந்தது, இரண்டு சேனையும் பிரிந்து போயின.— சத்துருவாகிய அரசன தசேனை நீங்க தனது சிலசேனையுடன் மனமுறிந்து திரும்பி, தளர் வையுடைய விரோதவரசன் மேன்மாடியில் நித்திரை செய்யவும், இந்தச் சரஸ்வதியும் லீலையும் அவ்விடத் தில்வர, பிரகாசம் பொருந்திய சந்திரனது அமுத கிரணத்தை யொத்த இவர்கள் தேயசினல், சிரமந் தீர்ந்து கண்களென்னும் தாமரைமொக்கு மலர விழித்தெழுந்து, தோத்திரஞ் சொல்லி வணங்கி முன்னேயிருந்த சரஸ்வதி லீலையை பூசித்தான்.—

௫௪. இதுவுமது.

இவ்வரசனுடைய நல்ல வமிச பாரம்பரையை லீலைக்குச் சொல்லும்படி நினைத்து, சரஸ்வதியான வள் அவனது சமீபத்தில் நித்திரைசெய்யு மந்திரி யானவன் விழிக்கக் கடவதென்று சங்கற்பிக்கவும், அம்மந்திரியானவ னப்பொழுதே தன்னைக் கவர்ந் திருக்கு நித்திரையைவிட்டு எழுந்திருந்து வணங்க, பார்த்த சரஸ்வதியானவள் அவனிடத்திற் கிருபை மிகுந்து இப்பூமிக்கரசராகிய இவன் குலத்தின் பூர்வ சரித்திரத்தைச் சொல்லென்று கேட்டாள், அதற்கு மந்திரி இவைகளைச் சொல்லத் தொடங்கினன்.—

௫௫. மாயாவிசித்திரத்தைக் காண்பிக்கப் பின் சிருஷ்டியின் வமிசாவளியை யறிவித்தல்.

அரசரில் மதிக்கப்பட்ட வைவசுத மனுவின் வமி சத்தில் அரசனுகிய கும்பரதனுனவன் இராசாதிராச னுகிய அவன் பத்திரரதனைப் பெற்ருன், இவ்வரசன் அகிலரதனைப் பெற்ருன், இவ்வரசன் பிறகத்தனைப் பெற்ருன், இவ்வரசன் சிந்துரதனை யீன்ருன், சொல் லிய வவ்வரசனது புத்திரன் சைலரதனும், அவ்வரச னுக்கு காமரதன்ருேன்றினன்.— இப்படிப் பட்டவ னுடைய புத்திரன் மகாரதனும், இவனுடைய புத்தி ரன் விண்டுரதனும், இவனுடைய புத்திரன் போர் மிகுந்த மனேரதனும், இவ்விடத்தி லிவன்பெற்ற விரோதனை ராசாதிராசனும், இவருக்கு தாயானவள் சுமுத்திரைபென்னும் பெயரையுடையவளாம், பத்து வயதில் இவருக் கரசாக்ஷியைக் கொடுத்து மனதடங் கிய பிதாவானவர் துறந்தவனத்திற்சென்ருர், இவனீதி மார்க்கத்தாற் பூமிபாலனம் பண்ணினன். —என்று மந்திரி சொன்ன மாத்திரத்தில், இராசாவை உனது முற்சநநத்தை ஞானக்கண்ணினல் இலேசாய்த்தெரிந்

௫௬. இதுவுமது.

௫௭. இதுவுமது.

௫௮. விரோதமயக்க நீங்கி ஞானமுதயமாம்பொருட்டு

முற்பவம் அறிவித்தல்.

துக்கொள்ளக் கடவாயென்று அன்பினுடன் தன தஸ்தத்தினுல் அவ்வரசனது சிரசை சரஸ்வதியானவள் ஸ்பரிசித்து அனுக்கிரகித்தவுடன், தனதுபகையாகிய மனதிலிருக்கின்ற மாயாந்தகாரநீங்கி, லீலையோடுங்கூடிச் சுகிக்கின்ற பதுமவரசன் தனதுவடிவமாகப் பார்த்தான், ஆநந்தம்பொருந்த வியப்புற்றுன், மகாமாயையானது இருந்தவிதமென்ன வென்று அதிசயித்து,†— மாதாவாகிய இவர்களால் மாயையைத் தெரிந்தேனென்று சிந்தித்து அவர்கள்பாதத்தைச் சிரசின்மேற்றரித்து, போன சநநத்தின் சரீரநீங்கி நாளொன்ருகவும் இச்சரீரத்தில் வந்தபின்பு அதிகமான வெழுபதுவயது நடந்தபடியால் நடந்த சகலமுந்தெரிந்தேன், இதென்ன மாயாவிசித்திரமென்று அரசன் கேட்கவும், கிருபையே வடிவமாயுள்ள சரஸ்வதி யனுக்கிரகஞ்செய்வாள்.— மரணமென்கின்ற பெரியமயக்கம்வந்தபின்பு, அக்காலத்தில் அவ்விடத்திலேயே சநநமென்கின்ற மகாமோகமானது மிகவுமுண்டாயிருக்கும், ஆகாயத்தைப்போல நிறைந்துபரிசுத்தமான சிறப்பையுடைய நின்மனதில், செய்கன்மமாகிய பிராந்தியே காண்கின்றதான எழுபதுவருடமானது உனக்கு நீங்கினதென்பதை நீ யறிந்துபாராய்.‡— ஒருமுகூர்த்தகாலத்தில் அநேககாலம் வருகின்ற சொப்பனததையொத்திருக்கும்.நீங்கியஆயுளானது, மாயையின் விகற்பத்தினுல் சாக்ரத்தில் நாநாவிதமாக விரிந்துதோற்றும், மிகுந்த சநநமரணங்கள் எப்போது முனக்கில்லை, உண்மைஞானமே உனக்கு ஸ்வரூபம், அந்தமில்லாத பரமபதத்தி லிருக்கின்ருய், உலகங்க ளியாவையும்பார்த்தும் ஒன்றையும் பாராய்.§— சமஸ்தமுமாயிருக்கின்ற சுபாவத்தினுல் உனதறிவினுல் உன தாத்மஸ்வருபத்திலிருந்து ப்ரகாசிக்கின்ருய், பேசத்தெரியாத குழந்தைகளைத் தொட்டிலிலிருக்கும் பருவத்தில்பிடித்த பிசாசானது மயானத்தி னீங்குகின்ற பழமையைப்போல, தீமையையுடைய மூடர்களுக்கு சகமானது சத்தியமாகத்

(மார்ஜின்: ருகூ. ஒருநாளெழுபது வருடமான மயக்கந்தீர விசாரித்தல். — சுo. மயக்கந்தீரப் போதித்தல். — சுக. இதுவுமது. — சுஉ. இதுவுமது.)

† இ-ம். தேவியனுக்கிரகத்தினுல் ஞானமுதயமாய் மாயாவிசித்திரத்தைப்பார்த்ததிசயித்ததாம்.

‡ இ-ம். இறந்து பிறக்கு மயக்கத்திலுண்டான மனோவிகற்பத்தாற் காலவளவு தோற்றினதேயன்றி எதார்த்தமாயின் றென்பதாம்.

§ இ-ம். ஆயுளானது மாயாவிசித்திரத்திற் றேற்றினதேயன்றி ஆத்மஸ்வருபமான சித்திலின்றென்பதாம்.

தோற்றும் சுவுணமென் றறியாதவர்கள் பொன்னல்ல
அப்பொன்னை ஆபரணமென்று சொல்லுவார்கள்,
௬௩. இதுவுமது. அவைபோல ஸ்வரூப திருஷ்டி யில்லாதவர்கள் சக
மென்பார்கள்.‡— யானெனதென்னு மகங்கார முத
லாக பாராநின்ற உலகங்களியாவும் நீண்ட சொப்பன
மாய் உலகத்தினிடத்தில் தோன்றுநின்ற இப்படிப்
பட்ட வஸ்துக்களும் சொப்பனத்திற் காணுநின்ற
வஸ்துக்களாமென்று உணர்வாய் அப்படிப்பட்ட
வஸ்துக்களுங் காணுத ஞானமே ஸ்வரூபமாய் எவற்றி
௬௪. இதுவுமது. லுங்கூடி தொழிலில்லாத நிறைவாய் மகத்தாய் பரி
சுத்தமாய் பரமாகாயமே யிருக்கும்.†— எல்லாமாயும்
எல்லாமுடையதாகியும் சத்திகளெல்லா மிருக்கின்ற
ஸ்வரூபமே பழுதுபடாமல் காலகன்ம பரிபாகத்தி
னுல எந்தவிடத்தி லெப்படி தோன்றுமோ அங் கவ்
வண்ணமே தோற்றும். குற்றமற்ற உண்மை ஞான
நிலையை லீலைநிமித்தம் நாமுபதேசிக்க நீயடைந்தாய்,
௬௫. முற்பவம் அடைதற்கு வினவுதலையும் அதற்குத்தரத்தையுங்கூறல். கெடாத தத்துவத்துடன் தெளிந்தாய்; நாங்க
ளேகுதுமென்று சரஸ்வதி சொல்லவும்,*— இவ்வனு
பவத்தைப் போதிக்க சிரவணஞ்செய்த விடூரதன்,
என்னை யாசகமா யடைந்தவர்களும் வேண்டியதைப்
பெறுவார்கள், புதுமையான சிந்தாமணியை யொத்த
வுங்களை வணங்கி தோத்திரஞ் செய்தவனுகிய நான்
அடையவேண்டிய தடைதல் ஆச்சரியமாமா, முற்
பதும சரீரத்தை யானடைவ தென்றென்றுகேட்க, நீ
இந்த யுத்தத்தின் மரிப்பாய், மரித்தால் அச்சரீரத்தை
யடைவாயென்று சரஸ்வதி யனுக்கிரகித்தபின், மேல்
௬௬. முற்டவம் அடைதற்கேதுவான சரித்திர முரைத்தல். வீட்டி லொருவன்வந்து சொல்லத்தொடங்கினுன்.—
அம்புவருடஞ் சொரிந்து வருகின்ற நிறைந்திருந்த
சேனுசமுத்திரமானது எவ்விடத்து நிறைந்திருக்க
வெம்மையாகிய அக்கினிச் சுவாலையினுல் அப்பட்
டணம் சாம்பலாக வேகின்றது, இவ்வதிசயத்தைக்
காணவில்லையோ பலம்பொருந்திய அரசனே என்று
௬௭. இதுவுமது சொல்லுஞ் சமயத்தில், பகைவர் படையானது
மூன்றுலகங்களு நடுங்கும்படி கெற்சிக்கின்ற சப்
தத்தை காதுசெவிடுபட வரசன் கேட்டான்.— சத்

‡ இம். திருக்கைத் தரிசித்தவர்கள் திரிஸ்யபேதமறியார்களென்பதாம்.

† இ-ம். சகத்தென்னுந் தீர்க்கசொற்பனத்தில் வஸ்துக்களென்னும் பேதந் தோற்றுவதேயன்றிச் சுயஞ்சைதன்னியத்திலின்றென்பதாம்.

* இ-ம். சைதன்னியஸ்பூரண மெக்காலத்தெப்படிதோற்றுவதோவப்படி சகலமுந் தோற்றுவதேயன்றி நெடிதுகுறிதென்னு மாயுளின்பேத மின்றென்பதாம்.

துருக்களின் படையினது சப்தமும், அலைவுற்றலராநின்ற பட்டணத்திலுள்ளவர்களின் சப்தமும், இடியைப்போல எதிர்த்தெழ வடவாக்கினியைப்போல சப்திக்கப்பட்ட அக்கினியினது புகை யெங்கு மூடிக்கொள்ள, நேத்திரமுஞ் சுரோத்திரமும் அழிந்தன, ப்ரகாசிக்கின்ற பட்டணமழிந்தது, இக்கேடனைத்தையும் ப்ரத்யக்ஷமாகலீலையும், சரஸ்வதியும், அரசனும், அமைச்சனும், பிரத்தியட்சமாகப் பார்த்தார்கள்.—

௬௮. இதுவுமது.

யுத்தத்தில் வீரமுள்ள அரசனுடைய மனைவியானவள் பிரமித்து நடுக்கமுற்றுவந்தாள், இவளுடன் வாராநின்றதோழியானவள், அரசனே? அரண்மனையிலுள்ள மாதர்களனைவரையும், மிகுந்ததனங்களையும், சத்துருக்கள் கொள்ளையிட்டார்களென்று சொல்ல அதைக்கேட்ட விடூரதவரசன் என்பக்கத்திலுள்ள தேவியானவள் உங்களடைக்கலமென்றுசொல்லி யுத்தத்துக்குப்போயினான்.—

௬௯ லீலைவடிவமாகவேவந்தபுதிய லீலையின் காரணம் வினாவுதல்.

கண்ணாடியி லெதிரிட்ட தனது சாயையைப்போலவந்த விடூரதன் மனைவியாகிய லீலையை, பதுமன் மனைவியான இந்த லீலையானவள் ஆச்சரியமடைந்து அருமையான சரஸ்வதியைப் பார்த்து நூதனமாக நானே யிவ்விடத்தில் வந்திருக்கின்ற வுண்மை யென்னவென்று கேட்டவுடன், சந்திரநிறத்தையுடைய சரஸ்வதியானவளம்மயக்கத்தை நீக்கிச் சொல்லத் தொடங்கினாள்.—

௭௦ தேகாந்தஸ்புரணமே இப்புதிய லீலையாயிற்றெனல்.

நினது புருடனாகிய பதுமன், உன்னிடத்திலிருக்கின்றவாஞ்சையினால் உன்னைப்பிரியாமற் சுகித்தற்கு மரணசமயத்தில் நினைத்தான், அந்நினைவின்படியே அவ்விடத்திலுன்னைப் பெற்றான், துன்பமிகுந்த மரணத்தில் யாவருக்கும் சிந்தித்து அடையும், தன்முன்னிருந்ததன்றி கண்ணாடியில் வேறுதோற்றுமோ.—

௭௧. இதுவுமது.

மரணமும், சநநமும், மனோமயக்கமும், சாக்கிரமும், சொப்பனமும், சுழுத்தியுமாகிய இவையனைத்தும் குற்றம்பொருந்த ஒன்றினிடத்தில் ஒன்றில்லாதபடியினால், இல்லையென்பது உள்ளதென்பது களங்கமுற்ற பிரமையினளவே, அளவின்றி விருத்தியாகின்றது, குற்றமற்ற வனுபவங்களானவை இரண்டுவிதமாம், அவைகளைக் கேட்பாய்.‡—

௭௨ இதுவுமது

முன் னனுபவத்துக்குத் தகுந்தமுறையாக சிலவுண்டாயிருக்கும், பின்புள்ள நூதனமாகி பேதமாகச் சிலவுண்டாயிருக்கும், ஆகையால் உனதுவடிவம் உனது ஆசாரம் உனது குலம் உனதுநடை என்னும்படி இந்த லீலையானவள் முன்றோற்றிய உனது —

‡ இ-ம் மயக்கத்திலுண்டான சத்தாவத்தையு நிலையற்றனவென்பதாம்.

எரு. புதியலீலை வினவுதல்.

நிழலைப்போல பேதமில்லாம லிருந்தாள்.¶— இராசாவினினைவினால் நின்னைப்போலவே இவளுமுண்டானாள், கலந்த இந்த யுத்தத்திலிறந்து விடூரதனனை வன் பதுமனென்கின்ற வரசனுவனென்று சொல்லிய சரஸ்வதியினது வாக்கியத்தைக்கேட்டு, நூதன லீலையானவள் வணங்கி யிதைச் சொல்லத்தொடங்கினாள்.—முற்காலத்தில் நான் பூசித்த சரஸ்வதியைப்போ லிருக்கின்ற நீயே, சத்துருவினால் எனது புருடனிறந்தால் எவ்விடத்தில் வசிப்பதோ அதைப்பார்த்து யானந்தவிடத்தில் இச்சரீரத்துடன்போய் வாழும்படி தடையில்லாத வரத்தை அருளெனக்கேட்க, அப்படியே கொடுத்தே னென்னவும்,— இப்படிசொன்ன சரஸ்வதியைப் பார்த்து பழைய லீலை சொல்லுவாள், எனதாதிபௌதிக சரீரத்துடன் செல்லாமல் இருந்த வேறான ஆதிவாதிக சரீரத்தைப் பொருந்தி, உயர்ந்த மறுலோகத்திலும் மேலான கிரிக்கிராமத்திலும் நானீங்கினவித பென்னவென்று கேட்க, வேதமாதா சொல்லுவாள்.*— ஒருவருக்கானாலும் யாமொன்றுங் கொடுப்பதில்லை நினைவின்படியே சீவர்களடையும், முன்னமே நினைத்து நீ ஞானத்தை யாசித்தாய் விரும்பின ஞானதிருஷ்டியைக் கொடுத்தோம், மிகுந்த வாசையினால் இந்தப்படி இப்பெண் விரும்ப இவ்வரத்தைக் கொடுத்தோம், மனதில் கருதினது எம்முடைய கிருபாநோக்கினால் யாவர்க்குங் கிடைக்கும் என்று சரஸ்வதி சொன்னாள்.†— பலமுள்ள விடூரதவரசன், கோபமிகுந்தவனாய் இரதத்திலேறி சேனாசமுத்திரத்துடன் யுத்தகளத்திற்சென்று இயமபுரிக்குச்செல்கின்ற மார்க்கமானது நெருங்கும்படி சத்துருக்களனைவருங்கெட அடித்தான். மரிப்பானென்று சிந்தித்து நாயகனிடத்திற் பிரியமாறாத லீலைகள் சரஸ்வதியினது பாதத்தைத்துதித்து, எமது தாயே? வீரத்தன்மை மிகுந்திருந்தும் உனது கிருபையிருந்தும் எமதரசன் இப்போரின் மரிப்பரோஎன்று கேட்க.— கல்வியையுடைய விடூரதனனவன், பரகதியை யிச்சித்தால் இரண்டற்ற பரமபதத்தை கலக்கும்படியாயினன், எதிர்த்துவந்த இச் சிந்துவரச

எச. புதியலீலை விரும்பின வரத்தைத் தேவி யனுக்கிரகித்தல்

எரு. பழைய லீலை வினவுதல்

எசு. தேவியுத்தரம்.

எஎ ஈஸ்வரானுக்கிரகம்பெற்ற மகான் மரிக்குங் காரண மியாதெனின்.

எஅ தேவியுத்தரம்.

¶ இ-ம். பாவனாப்ரகார முன்னனுபவத்திற்கொத்தவண்ணம புதியலீலை தோற்றினளென்பதாம்.

* இ-ம் எனக்குச்செல்லக்கூடாதென்னூர் தூலசரீரமிவளுக்கெப்படிசெல்லுமென்பதாம்.

† இ-ம் ஆத்மாக்கள்பாவனைப்படி யீஸ்வரன்கூட்டி விக்கின்றதென்பதாம்.

னென்பவன் தனது வல்லமையினு லிவனைச் செயிக்க
வேண்டுமென்று என்னைப் பூசித்ததினுல் நியமித்த
படியே செயித்து அவனரசனுவனென்று சொல்லுஞ்
சமயத்தில், உதயகாலமாகவும் அதிரும்படி யுத்தஞ்
செய்து மேனெருங்கிய வெம்மையாகிய யுத்தகளத்
தில் இரண்டிடத்திலுஞ் சேனையொன்று மில்லாம
லிறந்தது.¶— சிந்துவென்னும் பெயரையுடைய வர

எகூ முற்பவம் அடைதற்கேதுவா னயுத்தமுரைத்தல்

சனும் வீரமுள்ள விடூரதனுகிய சம்பத்துள்ள வரச
னும் வில்லுகளையெடுத்து, சந்திரனுஞ் சூரியனும்
திக்குகளும், ஆகாயமும், விடப்பட்ட அம்புகளினுல்
எவ்விடத்து நிறைந்தார்கள்; முன்னெதிர்க்கின்ற வெ
ப்பமான பாணங்களின் கூட்டங்களெரிந்து அக்கினிச்
சுவாலை வியாபித்து யுகமுடிவைப்போ லிருக்குமள
வில், தேரை நடத்தானின்ற சாரதியும், இரதமும்,
தனுசும், அறுபட்டு மேன்மையான விடூரதவரசன்
தனியனுக,— அர்த்தசந்திர பாணத்தினுல் வச்சிர

அ0 புதியலீலை புருடன் செல்லு மிடத்திற் செல்லுதல்.

கவசஞ் சிதறிவிழும்படி பிளந்து, தேகத்தி னவயவங்
கள்யாவும் பிளக்கப்பட்டுச் சின்னுபின்னமாய்ச் சிதறு
மளவில், வலிமைநீங்கி பூமியிற்சாய்ந்த விடூரதனைப்
பார்த்து, வெண்டாமரையாளை நூதனலீலை நோக்கி
என்னுயக னுயிர்பிரியுஞ் சமயத்தை யடைந்தான்,
இவரைப்பொருந்த யான்செல்ல அருளென்று சொ
ன்னமாத்திரத்தில், அத்தாயாகிய சரஸ்வதி யனுக்
கிரகித்தாள், அந்த லீலையும் ஆகாயத்தில் லேசாகிப்

அக. இதுவுமது.

போனுள்.—மேகமண்டலத்தைக் கடந்து, வாயுமண்
டலத்தைக் கடந்து, வெம்மையான சூரியமண்டலத்
தைக் கடந்து, சமீபமான நக்ஷத்திர மண்டலத்தைக்
கடந்து, மேற் சத்தியலோக முதலிய தேவலோகங்
களைக் கடந்து, பொருந்தாநின்ற இவ்வண்டத்தைக்
கிழித்துக் கொண்டுபோய் சலமுதலான யேழாவர
ணத்தையும் ஊடுருவி, அளவும், அந்தமும், இல்லாத
தான தத்துவ சிதாகாயத்தை சீக்கிரத்தி லடைந்

அஉ இதுவுமது.

தாள்.— அளவில்லாகாலம் வேகமாகக் கருடனுடி
னும் கடக்கக்கூடாததாயும், அத்திவனம் காய்த்திருக்
கின்றனபோல், உதித்த அளவற்ற பிரமாண்டங்கள்
ஒன்றையொன்று பார்க்கக்கூடாததாயு மிருக்கின்ற
அவ்வண்டங்களுக்குள், பெரிதாக ஆவரணபேதமா
னது அருகில் வளைந்துகொண்டிருக்கின்ற ஓரண்டத்
தினுள் ஞானுகாயத்தைக் கடந்துபோய் பதுமவரச
னது ப்ரேதமிருந்த அந்தப் புரத்தைச் சேர்ந்தாள்.‡—

¶ இ-ம். அவரவர்பாவனையே யிதற்குக்காரணமெனபதாம்.
‡ இ-ம். தேவியனுக்கிரகத்தினுற் புதியலீலை பதுமனிடஞ் சேர்ந்ததாம்.

அ௩. விரேதன் முற்பவ மடையச் செல்லுதல்.

பெருங்கானஞ் செய்யும் வண்டுகள் நிறைந்த புட்பங்களினால் மறைக்கப்பட்ட ப்ரேதேகமாகிய பூபாலனே? எம்முடைய கணவன், கிருபையுள்ள சரஸ்வதியினால் எப்படியோ முன்னமே யிவ்விடம்வந்தோமென்று நன்ருய்ச் சிந்தித்து, வெண்சாமரம் வீசிக்கொண்டு அவ்விடத்தில் தனது நாயகனுடைய வொருபக்கத்தில் அப்புதியலீலையிருந்தபின்பு, நின்மலஞானியான மகாஞன விரேதவரசன் பொருந்திய சீவனனது ஆகாயத்திற் சென்றது.— ஞான திருஷ்டியையுடைய லீலை, சரஸ்வதியென்னு மிருவர் அவ்விரேதசீவனைப்பார்த்து ஆகாயத்திற்சென்று பின்வருகின்ற சிறந்தமாதர்களைத் தானறியாமல் நீங்கின சீவனனது நகரத்திற்சென்று பதுமப்ரேத மிருந்த வந்தப்புரத்தை அடைய, உடன் சென்ற இவ்விரண்டு ஸ்திரீகளும் புதிதான லீலையை விரும்பிப் பார்த்தார்கள்.

அ௪. முற்பவத்திற் புகுவிக்கு நிமித்தம் அபேதஞானத்தாற் பேதஞானத்தைத் தடுத்தல்.

சுவணத்தினுற் செய்த மண்டபத்தில் பொருந்திய சீவனைத் தடுத்து திரும்பவும் நிருத்தினுள் மேற்செல்லாமற் றடுத்தாள். †-பழையலீலையானவள் தனதாதிபௌதிக சரீரத்தைக் காணுமல் சரஸ்வதியை வணங்கிக்கேட்கவும், கற்பனைமிகுந்த மனோநாசமாய் பூரணநிஷ்டையினுல் மரித்து கீழேவிழுந்த சரீரத்தை இறந்ததாமென் றெண்ணிக்கொண்டு மந்திரிகள் கொடிய வக்கினியினுல் தகனம் பண்ணினுர்கள். இவ்வாதிவாகிக சரீரத்துடன் நீயிப்பூமியின்கண் ணிருந்தால்தேவலோகத்திலிருந்து முன்மரித்த லீலையானவள் சரீரத்துடன்வந்தாளென்று யாவரும் வியப்பார்கள்.—ஆதிவாகிக சரீரத்துடனிருந்து வாசனையை நீக்கினபடியால் ஆதிபௌதிகசரீரத்தை நீ தள்ளத்தக்கதென்று இந்த லீலைக்குச் சொல்லி, அந் நூதனலீலையானவள் இப்போது நம்மைக் காணக்கடவளென்று சரஸ்வதியானவள் மனதிற் சங்கற்பித்த மாத்திரத்தில், தெரியாதிருந்தவர்கள் ப்ரத்தியக்ஷமான வளவில், தான் பெற்ற செல்வங்களைப்போல தெரிசித்த லீலையானவள் அத்தேவிகளின் பாதங்களை வணங்கித் தோத்திரஞ்செய்தாள்.*— ஞானஸ்வரூபியாகிய சரஸ்வதியும், புராதனலீலையும், நூதனலீலையும், கூடியிருந்தவிடத்தில், மிருதுவாகிய சாதிபுட்பமானது வாசனையை விட்டதுபோல சரஸ்வதியானவள் சீவன்றடை

அ௫. ஆதிபௌதிக சரீர மறைந்ததியாதெனின்.

அசு. இதுவுமது.

அள. முற்பவம் அடைந்து முத்தனுதல்

† இ-ம். விரேதஸ்புரண முன்னுள்ள பாவனுஸ்தானமடைந்ததாம்.
* இ-ம். பிரமாப்பியாசமுதிர்ச்சியா லாதிவாகிக சரீரம்பெற்றவர்களுக்காதிபௌதிகசரீர மறையுமென்பதாம்.

யை விட்டுவிடவும், பிராணரூபமாய் மூக்கினுட் சென்று உலர்ந்தசரீர மியாவும் பரந்து வியாபிக்க, குளிர்ச்சியாகி இரத்தமுண்டாய் கண்விழித்துமரித்த

அஅ. வினவிடை

வரசன் எழுந்தான்.†— இவ்விடத்தி லிருக்கின்ற வர்கள் யாரென்று பேரிடியின் சப்தத்துக் கொப்பாக இப்பதுமவரசன் கேட்கவும் அங்கிருந்த லீலையான வள் அரசனை நமஸ்கரித்து யான் இத்தேகத்துக்குத் தகுந்த மனைவி, உன்பக்கத்தில் வணங்கின இப் பெண் ணாரென்றுகேட்க, என் வடிவத்தைப்போல நீர் மனதி னினைத்ததினால் நீ சுகிக்கவந்தவள், இவ் விடத்திருப்பவள் பரிசுத்தமாகிய சரஸ்வதியென்று

அகூ. தேவியனுக்கிரகித் தெழுந் தருளுதல்.

பழையலீலையானவள் தெரியச்சொன்னாள்.— இப்படி யென்று லீலைசொன்ன மாத்திரத்தில், பாதத்தில் வணங்கிய இப் பதுமவரசனை சரஸ்வதியானவள், தனது ப்ரகாசிக்கின்ற வழகிய வத்தத்தினால் சிரசைத் தொட்டு நீ பாரியர்களோடும் சிறந்து வாழவும், நல்ல கீர்த்தியும் மேலானசம்பத்துவளரவும், சகத்திலுள்ள சனங்கள் விளங்கவும், தீமைகளனைத்து நீங்கவும், எவ்விடத்தும் ப்ரகாசிக்கின்ற மகான்கள் நிறைந் திருக்கவும், நீ சுகித்திருப்பாயென்றருள்செய்து, நின் மலமான சரஸ்வதி தனதிடத்திற் கெழுந்தருளினாள்.—

கூ௦ விதேகமுத் தனுதல்.

சரஸ்வதிவாழ்க, நாமகள்வாழ்க, கலைமகள்வாழக் கடவதென்று இனிமையாகத் தோத்திரஞ்செய்து, சக்ரவர்த்தியான பதுமவரசனும் பாரியர்களும் எண்பதினாயிரவருடம் பூபாலஞ் செய்தபின்பு, எழுவகையாகிய பெரிய சநநங்களை யிப்போதே கெடு த்து சரஸ்வதியானவள் முன் னனுக்கிரகஞ்செய்த சிவன் முத்திபதத்துடன் பூமியிலிருந்து பின்பு மகா கற்பமிறந்தாலும் அற்பமாகிலுங் கெடாத விதேக முத்தியான மோக்ஷத்தை யடைந்தார்கள்.‡—

லீ லை க தை.

மு ற் றி ற் று.

---

† இ-ம் சத்தாமாத்திரமாய்விளங்குஞ்சைதன்னியத்தின் அபேத ஞானத்திலுண் டானபேதஞானமானது, நூதனம் புராதனமென்னுமிரண்டிற் புராதன வடிவ மானதாம்.

‡ இ-ம் சுத்தவாசனை யோடுஞ்சீவன்முத்தர்களாயிருந்துபின் வாசனாக்ஷயமான விதேகமுத்தியைப்பெற்றதாம்.

# கற்கடி கதை.

## அவதாரிகை:

முன்பு சைதன்ய வுல்லாசமாய்த் தோற்றின ப்ரபஞ்சம் சைதன்ய திருஷ்டியால் நசிக்கும்பொருட்டு, அச்சகத்தை மாயா விசித்திரமென்பதைப்பூரணமாயறிவித்து, அதற்கதிஷ்டானமானசைதன்ய திருஷ்டி ப்ரசன்னமாம்பொருட்டு, அதன்விலாசத்தைக் கற்கடிகதையி னிரூபிக்கிறார்.



க. பிரமமே நித்தியமெனல்.

திரிஸ்யமென்கின்ற களங்கம் நீங்கச்சொல்லிய லீலையின்கதையினால் அற்பமாகிய சகமென்கின்ற தோற்றமுடைத்தாய் அபேதமாக மகத்தான சத்தும், சித்தும், ஆனந்தமுமே ஸ்வரூபமாய் ப்ரகாசிக்கின்ற பிரமஸ்வரூபமே யுள்ளதென்றறிந்து, கெடுதற்குரித்தாகிய உலகமென்கின்ற பெருப்பாரத்தை ஒருங்கே நீக்குவாய்.¶— அப்பிரமத்துக் கொப்பாகியும், வசனிப்பதற் கரிதாகியும், வியாபித்து, பரிபூரணமாய் கெம்பீரமா யிருக்கின்ற நின்மலமாகியும், சத்தையுணர்ந்தவர்களும் அதின் குணத்தைச் சொல்லக்கூடாததாகியும், உபசாந்தமாகியும், ஸ்திரம்பொருந்தி, அலைவற்ற சமுத்திரத்தைப் போலவும், காற்றில்லாத தீபத்தைப்போலவும், பிரகாசிக்கின்ற முதன்மையான பிரமப்ரகாசமே, முடிவில்லாதமேலான சீவனும்;†—

உ. பிரமமொன்றே நித்தியமெனில், சீவன் யாதெனின்.

ந. பிரமப்ரகாசமேசீவனாயின், மனமென்பது யாதெனின்.

அக்கினியை யுண்டாக்குகின்ற நீண்ட விறகினால் அற்பமான வக்கினி மிகுவதுபோல, சீவன் வெகுற் முகத்தில் விரிந்த வுணர்வினால் நானென்று பேதமாக வறிந்து சங்கற்ப நினைவினால் அகங்காரத்தையடையும், பூரணமான சீவனுக்கு இவ் வகம்பாவங் காரணமாக சிந்தனைசெய்கின்ற சித்தமும், மனமும், பிரகிருதியும், மாயையும் என்கின்ற நாமங்களை சத்துக்கள் பகுத்துச் சொல்லுவார்கள்.‡— சங்கற்ப விகற்பங்களினால் விரிகின்ற மனமானது, பிரமங் காரணமாய் இந்த ப்ரகார முண்டாகும், மனதினால் தோன்றிப் பரவிய வுலகங்களியாவும் மனோரூபமே வேறில்லை, மிகுதியினாலளவில்லாத விருத்தி ஞானமாகிய பேரலையையுடைய ஞானசாகரம் ப்ரகாசிக்கும், காலங்களினால் நெடியசொற்பனத்துக் கொப்

ச. பிரமப்ரகாசபேதமேமனமாயில் சகத் தென்பதியாதெனின்.

---

¶ இம் சகத்து ப்ரமாணிகமல்ல, அதுவாகவிளங்கு ஞானானந்தமே ப்ரமாணிகமென்பதாம்.

† இ-ம் பிரமப்ரகாசமானவபேதஞானமே சீவனென்பதாம்.

‡ இம் பிரமப்ரகாசத்தைப் பேதமாயறியுஞ் சங்கற்மே மனமென்பதாம்

பாக மனதின் வயத்தினுல் உலகமானது நிச்சய

௫. இப்படியாயில் பேதமாகாதோவெனின்.

மாம். ‡— கட்டையென் றறியாத வறிவினுல் கள்ளன் ஞேற்றுவதுபோல, சர்வம் பிரமமெனத் தெளிவுண் டாகாமையின் சகமுண்டாகும்; நாசமற்ற பிரமத் துக்கும், சீவனுக்கும், மறந்தவிடத்தும் பேதமில்லா ததுபோல, நீங்காத சீவனுக்குஞ் சித்தத்துக்கும் பேதங்களில்லை, இதைப்போல நிலையாதமனதுக்கும். உலகங்களுக்கும், அற்பமும் பேதமுண்டாகாது. †—

௬. இதற்குத் திருஷ்டாந்த மியாதெனின்.

இது காரணமாகிய ஒருகதை முன்னமே பலம் பொருந்திய இராட்சதியானவள் சொல்லிய முதிர்ந்த வினுவினுல் அறியவேண்டிய அருத்தங்களியாவையும் தெளியும்படி தெளியச்செய்வதாம், அதைநீ கேட்கக் கடவாய். இமயகிரிக்கு வடபக்கத்தில் இருப்பவள், கற்கடியென்னு நாமத்தையுடைய இராக்ஷதி பிறை போன்ற தந்தங்களும் பெரியவாயும் மின்போன்ற

௭. இதுவுமது.

விழியுமுடையவள்.— கறுத்த பருப்பதத்தையே பெண்வடிவாக கரசரணங்களாகச் செய்ததென்னும் படி சஞ்சரிப்பவள், இடியையொத்த புன்சிரிப்பை யுடையவள், ஓடாமற் சுழலு மச்சத்தைப்போல சுழலப்பட்ட கண்களையுடையவள், பெரிதான சரீரத் தைச் சுமக்கின்ற இரண்டு தொடையும் பேரீச்சமர மென்னும்படிபருமனுடையவள், வாராநின்றமுகிலைக் கிள்ளுகின்றநகம் வயிடூரிய முறத்துக் கொப்பாக

௮. கற்கடி சிந்தித்தல்.

வுடையவள்.*— விசாலமான பூமியின்கண்ணுள்ள பிராணிக ளனைத்தையும் பகலுமிரவுமாகப்பெய்யும் ஊழிக்கனல்போல்தணியாத உதராக்கினியினுல் மன நொந்து, கடினமாக ப்ரகாசிக்கின்ற சம்புத்தீவில் பார்க்கப்படுகின்ற பிராணிகளனைத்தையும் சமுத்தி ரத்தினிடத்தில் விழுகின்ற வாறுகளைப்போல புசிக் கில் அற்பாகாரமாக சீவன் மெலிவுற்றிருக்கும். ¶—

௯. மூர்த்திதியானஞ்செய்தல்.

வருஷத்தினுல் தணியுங் கானலைப்போல உதராக் கினியுங் கொஞ்சந்தணியும், குற்றம்வாராமல் இவ் வுதராக்கினியை தணிப்பதற்குத் தவஞ்செய்து பிரம தேவ னனுக்கிரகத்தினுல் பெற்றுக் கொள்ளுவோ மென்று, இமயமலைக்குப்போய் ஸ்நானஞ்செய்து

---

‡ இம் பிரமசங்கற்பாகாரமே சகம்போலத் தோற்றுமென்பதாம்

† இ-ம். பிரமப்ரகாசமே சீவன்முதலிய யாவுமாய் விளங்குதலின், அபேதமேயாமென்பதாம்.

* இம் கற்கடியின் வினுவை யறிவிக்கும்பொருட்டவளுடைய வவயவங்களை வருணித்ததாம்.

¶ இ-ம். போகங்கைக்கு நிமித்த மதை மிகவுமனுபவிக்கத் தோற்றினதாம்.

க.௦ உபாசனு மூர்த்திப்பிரசன்ன மாதல்.

ஒருபாதம் பூமியிற் பொருந்தநின்று கண்ணினல் ஆகாயமத்தியில் ப்ரகாசிக்கின்ற சூரியனை பகலில் நேரேபார்த்து. ¶— வருத்தமுற்றுநின்று மேலான தவத்தினல் ஆயிரவருடம் நடத்த, திருத்தமாகிய தாமரையில்வசிக்கின்ற பிரமன் ப்ரத்தியக்ஷமானர். தீமையை யுடையவராயினும் அரிய தவத்தினல் அடையக்கூடாத வஸ்துக்களுண்டோ, பிரமன் வரவும் முன்னிருந்தபடியேயிருந்து இராக்ஷதியானவள் மனதில்வணங்கி இதைச்சிந்தித்தாள்.— தாவுகின்ற

கக. கேட்கவேண்டு மபிப்பிராயத்தைச் சிந்தித்தல்.

பசி தணியும்பொருட்டு அற்பமான இரும்பால் உண்டான ஒருயிருள்ளஷூசிவடிவமானல், உலகத்திலுள்ளவர்களுடைய சரீரங்களில் நுழைந்து உணவுகள் வேண்டுமானவைகளை புசிக்கலாமென்று எண்ணுபவளை, ஆகவேண்டிய நினைவுகள் உனக்கென்னவென்றுகேட்டபிரமனுக்கு, இக்கற்கடி கூறுவாள்—

கஉ. விரும்பின வரங் கொடுத்து, அதை யடையுங் கிரம மருளுதல்.

தோத்திரஞ்செய்கின்ற அடியார்களுக்குச் சகாயமான வாண்டவரே? அடியேன் உயிரூசியாகவேண்டுமென்று கேட்க, நியமிப்பான், நீ யென்னு மட்சரத்தை முதற்கண்ணுள்ளதான விசூசியாகச் சரீரமெடுத்துக்கொண்டு பாய்வாய், துற்கிருத்தியமுள்ளவர்களும், மூடர்களும், துஷ்டர்களும், கொடிதானவிடத்தில் இருப்பவர்களும், மமதையினல் விரும்பக்கூடாத துற்புசிப்பைப் புசிப்பவர்களுமாகிய விவர்களுடைய மனதில் பிராண வாயுவோடுங்கலந்து,—

கங. இச்சையினுலற்ப வடிவமாதல்.

அறிஞர்களிடத்தில் நீ சென்ருல் நாம் நியமித்தவுனது சிகிச்சையென்னு மந்திரசெபத்தினல் கொலைசெய்யாதிருப்பாய், அறிவில்லாதவர்களைக் கொன்றுண்பாயென்று பிரமன்சொல்லி மறையுமளவில், முன்புவரைக்கொப்பானவள்சீவசூசியுருவமெடுத்து, மூர்க்கரும், மனதி லச்சமிகுந்தவரும் நசிக்கும் வண்ணம் அகத்திற் ப்ரவேசித்தாள்.—வாயுவடிவாகி பூமியிலும் ஆகாயத்திலுமுள்ள பல சீவர்களின் உள்ளே

கச. உணவின் இச்சைவெறுத்தல்

பிரவேசித்துஅவர்கள்வாணளைத்தையும் சீவசூசி, வாதசூசியென்னு மிரண்டுவடிவமாய் வெகுகாலம் புசித்தபின்பு தளர்ந்த மனதையுடையவளாய், வீணகவே சுழன்று, நைந்து, ஊசியுமாய்த் தோய்ந்து போகும்படி அவாவானது நம்மை அழித்தது, சீ, சீ, என்றுமயங்கினள். ‡-கொடியமன துடன்நாம்வீணை

கரு. நிஷ்காம தவஞ்செய்தல்.

அநேக வுயிர்களைப்புசித்தோம், அவ்வாசையைநீக்கி

¶ இ-ம். தவச்சின்ன முரைத்ததாம்.
‡ இ-ம். மிகவு மனுபவித்த புசிப்பிற் கைப்புண்டானதாம்.

னேமென்று இமயபருவதத்தில் அரிதான தவத்தை அடைந்து ஒரு சங்கற்பமு மில்லாமல் சலனத்தை நீக்கிபுசிப்பின்றி மனம் ஒன்றுபட்டு சகஸ்திரவருஷங் கள் நடத்தவும், கொடிய இருவினையும் நீங்கிற்று.¶—

கசு நிஷ்காமதப சினல்ஞான முண் டாகுதல்.

இப்படி தீமைநீங்கிய மனது தெளிவடைய பிர மத்தியானம் தனதிட்டமாகப் பொருந்தவும், இச்சக த்தை நிந்தித்து யாகத்துவேட மில்லாதவளாய் சகஸ் திரவருடம் தவசிலிருந்தபின்பு, பூரணஞானமுதித்த தென்று பிரமதேவன் தானேவந்து இக் கற்கடிக்கு ஒருண்மையைச் சொன்னான்.—

கஎ. பிரமா வ னுக்கிரகித்தல்.

நீ சீவன்முத்தியை யடைந்தாய், மனந்தெளிந்தாய் ஆகிலும் பழையவிரா க்ஷதி வடிவமாய் பூமியில் ஞானமில்லாதவர்களும், கொடியவர்களும், கீழ்மக்களுமாகிய இவர்களுடைய சரீரங்களை உனக்குணவாக சீவனஞ்செய்து சுகமா யிருப்பாயென்றனுக்கிரகஞ்செய்து பிரமன் மறைய வும், அத்துவிதப்பிரமமே பாவனையுற்று சர்வமென் னும் பாவனையைப்பொருந்தி நிஷ்கிரியையான தற் பதத்திலிருந்தாள்.†—

கஅ.சீவன்முத்தி தன்மையில் நின்று விதி யான வுண வைச் சிந்தித்தல்.

இப்படி நிர்விகற்ப சமாதியில் அநேககாலமிருந்து சமாதியினின்றுந் திரும்ப, நீங் காத ஆநந்தத்தோடும் மனதுடன் சேரவே பழைய பசியைநினைத்து நானென்னுந் தன்மை சகத்தின்க ணுள்ளபரியந்தம் சரீரத்துக்குண்டாகிய சுபாவம் நீங் காதபடியினால் உலகத்தில் இராக்ஷத வமிசத்துக்குத் தொழிலாயிருக்கின்ற மாமிசாகாரம் புசிப்பனென் றும்.—

கக. உபதேசி த்த புசிப்பெதி ரிடல்.

பிரமனனுக்கிரகித்ததும் அப்பிரகாரமாத லால் அவ்வசனப்படியே மூடர்கள் சரீரத்தை அமு தாகப் புசிப்பேனென்று மகிழ்ந்து இமயமலையின் சாரலிற்சென்று வெற்றிமிகுந்த வேடர்களின் நாட டைந்து அதிலுள்ள கானகத்தில் வசிக்குங்காலத்தில் நீதியுள்ள வமைச்சனோடும் அவ்விடத்தோரரசன் வந்தனன்.—

உ௦. கிடைத்த வுண வின்றன்மை யை விசாரித்தல்.

சோமசூரியாக்கினிக ளொன்றாகவந் தடைந்தாலும், அவைகளொளி மழுங்கத்தகுந்த மிகு ந்த விருட்டினால் மூடிக்கொண்டிருக்கின்ற இராத்திரி யில் பயப்படாத அரசமந்திரிகள், பசாசங்கள்முதல் துஷ்டர்களைப் பரிசோதித்துவரவும், அவ்விடத்து அந்தக் கற்கடி பார்த்தமாத்திரத்தில் பசுமையான புசிப்பாவர், இவர்கள் உண்மைஞானமில்லாதவர்கள் மூடராயிருக்கின்றவர்கள் இவ்வுலகத்தின்கண் சீவித்

¶ இ-ம்.நிர்விகற்பசமாதியினாற் சகலவினைகளு நீங்கினவென்பதாம்.
† இ-ம் பிராரத்தசேட நீங்கும் பொருட்டு விதியானபுசிப்பை யனுபவிக்க வதி வித்ததாம்.

௨க. துற்சனரோ வென்றாலோலிசித்தல்.

திருக்கின் இகத்திலும், பரத்திலும், மற்றெவ்விடத்தும் துன்பமாமென்று,— திரும்பவு நினைப்பாள், பிரமன் முன்னியமித்தது மிவ்வண்ணமே, தீங்கறக் கிடைத்தபலனைக் கொள்ளாதவர்கள் அற்பமனதுள்ளவர்களென்று மிகவும் ஆலோசித்து, தெளிந்த வறிவையும், நற்குணமுள்ள சுபாவத்தையும், அடைந்திருக்கின்றவர்கள் கெடும்படி கொலைசெய்ய மனமெழுமோ, அன்றியும் இவர்கள் வலிய துன்பமடைவரோ,—

௨௨. சற்சனரிலக்கண முணர்தல்.

தெளிந்த வறிஞர்கள் மெய்யான மிகுந்த கீர்த்தியையுடைய நீண்டவாயுளெல்லாம் பிரிக்கக்கூடாத சுகத்தைப் பொருந்தினவர்கள்யாவரும் வணங்கத் தக்கவர்களாவர்; குறைவில்லாத தனதுயிரைக் காட்டிலும் இனிமை யுள்ளவர்களாதலால் அக்குணவான்களுக்குத் துன்பம்வருமாயின் பயப்படாதேயென்று பிராணனையாவதுகொடுத்து இரட்சிக்கத்தக்கவராவர், தங்களிடத்தில் அன்பையுடையவர்களுக்கு வணக்கமாக யமனையும் உறவுபடுத்தும் சுபாவமுள்ளவர்கள்.—

௨௩. சற்சனர்க்கன்புசெய்பவ ரிலக்கணமறிதல்.

இராக்ஷதி யென்கின்ற நாமுதலாக சத்துக்களைப் பூசிக்கின்ற பக்தியைப்பார்க்கில், அன்பாக சுவணத்தைப்போல யார்தா னன்புவையாதவர்கள். இப்பூமியில் இரட்சிக்கவருகின்ற பூர்ணசந்திரனைப்போல அடுத்தவர்கள் மனதை சத்துக்கள் சுகிக்கச் செய்வார்கள், அவர்களைச் சாராதவர்களே மிகவு மிழிவுபட்டு மரித்தவராம்; சார்ந்தவர்களே மோக்ஷமுதலிய ப்ரயோசனத்தைப் பெற்றவர்கள்.†-

௨௪. பரிசோதிக்குறிமித்த மதட்டிப் பேசுதல்.

ஆகையால் இவர்களை ஞானிகளோ, அஞ்ஞானிகளோ யாரோவென்று ஆராய்ந்தறிகின்ற கேள்விகளைக் கேட்போமென்று நினைத்து, இடிகளும் திடுக்கென்று பயப்படும்படியாக ஆகாயத்தினின் றுரவாரித்து கொடிய இடியிடித்தபின்பு, மழைபொழியு மேகத்தைப்போலச் சொல்லுதற்கரிய கொடிதாகிய காடென்னும் ஆகாயத்துக்கு சந்திரசூரியர்களுக் கொப்பாவீர்களென்று;—

௨௫. நீங்களாரென்றுவினவுதல்

திரும்பவுஞ் சொல்லுவாள், மாயையென்கின்ற வெவ்விய விருண்டகல்லின் கீழ் விளங்கியழிகின்ற கூட்டமாகிய கிருமிக் கொப்பானவர்களே? எனக்குணவாகஇந்தக்ஷணத்தில் மரிக்கவந்தீர்கள், மேலானவர்களைப்போலு மிருக்கின்றீர், தீமையுடையவர்களைப்போலு மிருக்கின்றீர், நீங்களார் சொல்லுமென்று கற்கடி கேட்டமாத்திரத்தில்

† இ-ம். நேரிட்டவர்கள் சற்சனரோ துற்சனரோவெனப்பரிசோதிக்குறிமித்தமாலோசித்ததாம்.

ஜீவ இமிசையையுடைய விராக்ஷதியே கேட்பாயென்று வலிமையுள்ளவரசன் சொல்லத் தொடங்கினான்.—

௨௬. அரசனச்சமற்றுரைத்தல்.

எவ்விடத்திலிருக்கின்றாய்? நீயிவ்விடத்திற் சொல்லிய சகலமும் இளவண்டின் இரைச்சல்போல அழகாகக்கேட்டோமென் றரசன்சொல்ல, இராக்ஷதியும் நன்றாயிருக்கின்றதென்று எதிரேநின்று நகைத்த மாத்திரத்தில், கொடிய தந்தப்பிரகாசத்தினால் அவளது வடிவத்தைப்பார்த்து, எவ்வளவும் பயப்படாமல், மைநாகம்போல வாயைத்திறந்து வீணாக நீவருத்தப்படாதேயென்று அரசன் சொல்லுவான்.—

௨௭. அரசன்றமது வீர முரைத்தல்.

அடைகின்ற ப்ரயோசனத்துக்கு முயற்சியாதவர்கள் இல்லையென்று சொல்லியபோதும் அற்பகாரியத்தில் அற்பமானவர்கள் துரிதப்படுவார்கள், நொய்மமைதோன்ற துட்பவறிவினால் விஸ்ராந்தியடைந்த ஞானவான்கள் கனமானகாரியத்தைச் செய்வார்கள், கொடிதாயிருக்கின்ற உன்னையொத்த அநேகர்களை மசகம்போல எமது வீரக்காற்றானது தள்ளிவிடும்.-

௨௮. அரசன் கற்கடி கருத்தை வினவுதல்

ஆகையா லுனது துராரம்பவேகத்தை விடு, உனதெண்ணத்தைச்சொல், எங்கள் சமீபத்தில் வந்தவர்கள் ஆசையினாலியாசித்தபொருள்களை சொப்பனத்திலுங் கொடுப்போமென்று அரசன் சொன்னவுடன் ஞானமும், வித்தையும், வல்லமையும், சாந்தமுமாகிய இவைகளில் மட்டில்லாதவர்களென்று அறிந்து மேன்மையாகிய அவர்கள் வசனத்தை மிகவு மதிசயித்து குறைவற்ற வுண்மையைப்பார்த்து.—

௨௯. கற்கடியின் ஐயம்நீங்க நீங்களாரென வினவுதல்.

வசனத்தினாலும், வதனத்தினாலும், விழிகளினாலும், வேறுபடாமல் மேலானவர்களுடைய களங்கமற்ற மனமானது மிகவுமுயர்ந்திருக்கும், இக்குணங்களா லபிப்ராயத்தையுந் தெரியலாம். மகான்களே செல்வயபோலவரில் ஐயந்தீராதவர்கள் கீழ்மக்களாவர் ஆதலால் கடாவுமுறையினால் இவர்களை யறிவோமென் றுன்னி நீங்களார் கூறுமென்று,— கற்கடியானவள் கேழ்க்க மந்திரி சொல்லுவான்.

௩௦. மந்திரிசொல்லுதல்.

வேடர்களுக்கெல்லாம் இவர் அரசனுக்கும், மந்திரி நானுக்கும், இராக்காலத்தில் எவ்விடத்தும் பார்த்து உனக்கொப்பான துஷ்டர்களை ஆராய்ந்து அலைக்கவும், பிராணனையடக்கவும், சிஷ்டர்களுடைய பிராணனை இரட்சிக்கவும் வந்திருக்கின்றோம், இவ்விடம் வந்ததற்குச்சங்கற்ப மிதுவென்றுசொல்ல, திரும்பி அந்த இராக்ஷதி சொல்வாள்.-

௩௧. கற்கடிமறுநீதி சொல்லுதல்.

துஷ்ட மந்திரியினால் நல்லவரசனுந் தீயவரசனும், பொல்லாங்கில்லாத பரிசுத்தமான மந்திரியினால் தீய

வரசனும் நல்லவரசனுவன், இத்தொடர்வைப்போல நீதியுள்ள வரசரால் மந்திரிகளு மப்ப்டியேயாவர், ஆதலினுல் நல்ல விவேகமுள்ள மந்திரி உண்டாயிருக்கில் எந்தப்பிரயோசனமும் அரசர்களுக் குண்டாகும்.— அரசனெப்படியோ சகத்திலுள்ள பிராணி

௩௨. இராசமந்திரிக ளென்ருல் ஞானமிருக்க வேண்டுமேயெனல்.

களு மப்படியேயாகும், இராச மந்திரிகளென்பவர்கள் பெருமையும் நல்ல சமதிருஷ்டியும் ஞானசாஸ்திரங்களை ஆராய்ந்தவர்களுக்கே பொருந்தும், அந்த ஞானநூலை கல்லாதவர்களென்ருல் பொய்யராவார்கள், இத்தன்மையான ஞானநூலின் அப்பியாசம் இல்லையானுல் நீங்கள் எனக்குணவாக எவ்வனத்தினன்மைகளை இப்போதே இழந்தீர்கள்.—சிங்கமெனு

௩௩. விஞப்பஞ்சரத்தி லடக்கத் தொடங்கல்.

முங்களை நான் சொல்லுகின்ற கேள்வியாகிய கூண்டில் காவல்செய்கிறேன், உங்க ளரிவென்னுந் திறவுகோலினுல் அக்கூண்டின்வாயலை நீங்கள் திறந்தால் பிராரணனேடுஞ் சீவிப்பீர்களென்று இராக்ஷதி சொல்ல அதென்ன பிரித்துச்சொல்வாயென்று பரிசுத்தமுள்ள அரசன்சொல்ல, இராக்ஷதி நல்லவமுத வருஷங்களைப்போல அவ்விராச மந்திரிகளுக்குக் கூறுவாள். அவ்வாக்கியங்களனைத்தையும், இராமா? நீ கேட்பாயென்று வசிட்டமுனியனுக்கிரகிக்கத் தொட

௩௪ ஆத்மஸ்வரூபத்தை விஞவுதல்..

ங்கினுர்,— (௧) பரவிய சமுத்திரத்தில் குமிழிகள் போல் ஒன்ருன எந்தவணுவுக்குள் அளவிறந்தஅண்டபந்திகள் நானாவாகியும், உற்பத்தி ஸ்திதிலயமாம். (௨) ஆகாயமாகியும், (௩) ஆகாயமல்லாத தெது. (௪) வரையறவுள்ளதா யிருந்தும், (௫) இல்லாத தெது. (௬) சஞ்சரித்தும், (௭) சஞ்சரியாத தெது. (௮) காணநிற்காததாகியும், (௯) நிற்கின்றதெது.

௩௫. இதுவுமது.

(௧0) சித்தாகியும், (௧௧) கல்லானதெது—(௧௨) ஆகாயத்தில் சித்திர மெழுதுகின்றதெது (௧௩) விதையினிடத்தில் விருக்ஷங்களைப்போல குறைவில்லாத எந்தவணுவில் சகங்களியாவு மிருக்கின்றது. (௧௪) எதினிடத்திருந்தும் சமுத்திரத்திலுண்டான அலைநுரைகளைப்போல ஒருவஸ்துவும் வேறுபடாமல் நிறைந்த சலத்தையும் குறைவற்ற நெகிழ்ச்சியையும்போல உண்டாய், (௧௫)இரண்டும் எங்கொன்ருயிருக்கும்.¶-

௩௬. அனுபவ ஞெப்தி யுண்டாகு ம்படிக் கச்சமுரைத்தல்.

ஆகிய இக்கேள்வியின் பிரயோசனத்தை நும்முணர்வால் தெரியச்சொல்வீர்களாயின் வாசனை பொருந்த எனது கூந்தலின்மேல் எக்காலத்திலு

¶ இ-ம். பிரமஸ்வரூபத்தைச் சகசத்தினவாவமா யனுபவிக்கும்பொருட்டதைப் பதினைந்து சங்கையாகப்பகுத்து விஞவினதாம்.

மிருக்கின்ற மணக்கின்ற புஷ்பமாவீர்கள், அற்பமா கிய அறிவினால் பிரித்துச்சொல்லக்கூடாமல் கலங்கு வீர்களாயின் எரிந்த வுதராக்கினிக்கு விறகாவீர்க ளென்று இராக்ஷதி சொல்லவும் †— அமைச்சன்

௩௭. மந்திரி முதற்சங்கைக்கும் பதின் மூன்றுஞ் சங்கைக்கும் உத்தரங்கூறல்.

முன்பு சொல்லுவான், களங்கமற்ற பிரமவஸ்துவை பகுத்துக்கூறினாய் அஃதியாதெனின், மனமுதலாகிய ஆறிந்திரியங்களினாலும் எட்டுதற்கரியதன்மையினால் முடிவில்லாதஞானமாத்திரமாகியும், ஆகாயத்திலும், நுட்பமாகியும் பரமாணுவுக்கொப்பாகியு மிருக்கும். அந்த அணுவுக்குள் முந்தின பிரமாண்டங்க ளனைத் தும் உண்டாகிவளர்ந்து நசிக்கும். §— (௨) விசால

௩௮. ஆறுசங்கைக் குத்தரங் கூறல்.

முள்ள அப்பிரமத்துக்கு புறம்பில்லாத படியால் ஆகாயமாம். (௩) கேவலஞானமாக விருத்தலின் விரிந்த பூதாகாயமன்றும். (௫) இப்படியென்று சுட்டியறிதற்கரிய தன்மையினால் ஸ்திரமாகவில்லாத தாம். (௪) சத்தாயிருத்தலால் உள்ளதாகச் சொல்லப் படும். (௰) சொச்சமாக ப்ரகாசித்தலினால் ஞானமா கும். (௧௧) அறியுந்தன்மையில்லாத நிமித்தத்தினால் சடமாகிய கல்லைப்போலுமாம். ¶— (௧௨) மிகநொய்

௩௯. பின்னைந்து சங்கைக் குத்தரங் கூறல்.

தாம் சொச்சமாகியும் தானாகியுமிருக்கின்ற சிதாகா யத்தில் உலகபந்திகளாகிய சித்திரத்தைத்தானே யெழுதும். (௧௪) நீங்காத சகங்களனைத்தும் தனது ப்ரகாசமானபடியினால் அவ்வஸ்துவுக்கு அன்னிய மொன்றில்லை. (௧௫) நீநானென்கிறஉலகவேற்றுமை

௪௦. பின்பு இரண்டு சங்கைக்குத் தரங்கூற, மேலரச னுத்தரம்.

யுருவங்களும் இருக்கின்ற அச்சத்தினுருவமாய் எப் போதும்பிரியாதாம். (௬) நாநாவாகிய வஸ்துக்களின் சம்பந்தத்தினால் சஞ்சரித்ததாம். (௭) சஞ்சரிக்க வேறுஸ்தானமின்மையின்சஞ்சரியாததாம், ‡— (௮) தான் பொருந்துவதற்கு வேறோரிட மில்லாதபடி யால் நிற்கவில்லையாம். (௯) சதாகாலமும் சகல பொருள்களிடத்துஞ்சத்தாமாத்திரமா யிருக்கின்றதி னால் நிற்கின்றதென்று அரசனருகிலுறையும் நல்லறி வுள்ள மந்திரிசொல்ல, கற்கடியானவள்கேட்டு மிகவு

† இ-ம். இந்தப்பதினைந்து பிரிவையும் ஒருமைப்படுத்தவேண்டுமென்பதாம்.

§ இ-ம். அணுவுக்கணுவா யேகமாயிருக்கின்ற பிரமமே யண்டகோடிகளாகத் தோற்றுமென்பதாம்.

¶ இ-ம். இவ்வாறுத்தரத்தினானும் பிரமஸ்வரூப மெல்லாமாயும் அல்லவுமாயுமிருக் கின்ற தன்மையை விளக்கினதாம்.

‡ இ-ம். இவ்வைவந்துத்தரவினானும் பிரமஞ்சகத்தைத் தானாகவுண்டாக்கித் தானாகவிளங்கித் தானதுவென்னு மிருமையின்றித் தன்மயமாய் விளங்குகின்ற வத்துவிதத்தை விளக்கினதாம்.

மதிசயித்து அதற்குபின் இராசாவே? உனதறிவை சொல்லென்று கேட்க, அவ்வரசனுங் கூறுவான். சகமானதுஇன்றென்கின்றஉறுதியே, அகண்டாகார வஸ்து வுண்டென்னும் உறுதியாம், பிரமத்தின் றன்மையை மேலுஞ்சொல்லக்கேட்பாய்.*— மனதினால் சங்கற்ப விகற்பங்களனைத்தையும் கைவிடுவதே பிரமத்தைக் கைவசப் படுத்துவதாம், திருத்தமாகிய தனது சங்கற்ப முதித்தொடுங்குதலே சகமுற்பத்தி லயமாம், ஒன்றாகிய வேதாந்தங்களினது சர்வார்த்தங்கள்பொருந்தியமகாவாக்கியத்தினிடமாம், அச்சுருதி வாக்கியத்துக் கந்தரங்கமான வனுபூதியாகையால் புறம்புமாம், வடிவமாக விளங்குகின்ற சத்தசத் திரண்டிக்கும் மத்தியுமாம், அந்த விரண்டினது ஸ்வரூபமுமாம்— தாவரசங்கமான சகங்களெல்லாம் மனோசங்கற்பத்தினால் தானியற்றும் லீலையாம், உலகமாயிருந்தும் பழமையான ஏகத்துவத்தினால் பிரிவற்றதா யிருக்கின்ற பரிபூரண ஞானமாத்திரமாய் விளங்குகின்ற பிரமவஸ்துவையே யுரைத்தாய், இராகமனதை யுடையர்கள் உணர்கின்ற பிரமஸ்வரூபமே யிதுவென்று அரசன்சொல்ல, அரக்கியானவள் மனதிற் கிரிகித்து, கலந்த வமுதமழையை வருஷிக்க சகலமும் குளிர்ச்சியடைந்த தன்மையைப் போல மிகவுமகிழ்ந்து, உபசாந்தமடைய சொல்லத் தொடங்கினாள். ¶— அதிசயமாகியும் கெடாததாகியும் உதயமும் அஸ்தமனமும் இல்லாத ஞானசூரியனுக் கொப்பாகியு மிருக்கின்ற அழகுமிகுந்த அறிவையுடைய வுங்களுக்கொப்பான சத்துக்களுடைய அழகியபாதங்களை கிரீடமாக சகலருந் தரித்தார்களல்லவா, முத்தியுலகத்தை யாளாநின்ற அரசர்களாகிய ஆத்மஞானிகளைக் கூடினால் சோர்வுண்டாகுமோ ஆத்மலாபத்தைப்போல வராநின்ற வுங்களுக்கு இவ்விடத்திலெல்லாங் கிடைத்திருந்தாலும் யானியற்றுமுபகாரத்தை இன்னதென்று சொல்லுமென்று கேட்டாள்.— தனுசையுடைய விராட்சத வமிச

சக. பின்பாறுத்தரங்கூறல்

சஉ. பின்பிரண்டுத்தரங்கூறல்.

சங. சத்துக்கள் தரிசனத்தைப் புகழ்ந்து கைம்மாறு வினவுதல்.

சச. சிவகாருண்

* இ-ம். இவ்விரண்டு சங்கையினுத்தரத்தாற் பிரமஞ்சத்தாயும் அசத்தாயுமிருக்கின்ற பூரணஸ்வரூபத்தை விளக்கிப் பதினைந்து சங்கைக்கு மொருமையாகப் பதினான்குத்தரத்திற் சொல்ல, அஃதன்றி யரசனொருத்தரத்திற் பிரமநிச்சயத்தை விளக்கினனென்பதாம்.

¶ இ-ம் இவ்வெட் டுத்தரத்தால் ஆத்மாலீலாவுல்லாச விலாசங்களை விளக்கி அக்கற்கடி பதினைந்துசங்கைக்கு இவ்வொன்பதுத்தரத்தா லொருமைப்படுத்திச் சொல்லியதாம்.

யமே கைம்மாறெனக்கூறல்.

மென்கின்ற எட்டிவனத்தில்நெருங்கிய தீமாங்கனிக்கு ஒப்பானவளே? உலகத்தின்கண் ஓருயிரையும் கொல்லாமல் இருப்பாயென்று அரசன் சொல்ல, அப்படியே கொலை செய்வதை விட்டேனென்று இராட்சதிசொல்லவும், அளவற்ற மாமிசாகாரமுள்ளவளாகிய நீபசிக்குச் செய்யுந்தன்மையென்ன கூறென்று அரசன்கேட்க, முன்னுளில் நிர்விகற்ப சமாதியிலிருந்து எனது தராக்கினியைக் கெடுத்தேன், அவ்வண்ணமே இப்பொழுதும் சமாதியிலிருந்து தணிப்பேன்.— தெளிவாகிய அமுத தாரணையினுல் வேண்டிய காலமட்டும் சீவன் முத்தியிலிருந்து, அதற்குப் பின் விதேகமுத்தி யடைவேன். அகத்தில் பூரண ஞானத்தையுடைய நான் ஓருயிரையும் வதைம்யன், இது சத்தியமென்று சொல்லி போக நினைப்பவளை, பெறுதற்கரிய விஷ்டத்தை எளிதாகப் பெற்றேம், நீயெங்கள் குலப்பெண்ணுக எமதரண்மனைக்கு கூடவந்தால், கொலைசெய்யுங் கள்வருடைய சரீரத்தையுணவாகக் கொடுப்போம், இத்தேகம் நீங்குமளவும் நினைப்பு முதலாகிய வாதனைகள் நீங்காது.— ஆகையினுல் பாவிகளின் சரீரமென்னும் புசிப்பைக்கொண்டு அரிய யுதராக்கினி நீங்கி நிஷ்டையிலிருப்பாய், இவ்வண்ணம் அன்போடு எப்போது மியற்றுவாயென்று அரசன் சொல்லவும், இராக்ஷதி மகிழ்ந்துசெல்ல, சிங்கக்குட்டியை யொத்த இராச மந்திரிகள் தமது பட்டணம்போய் சுவணமயமாகிய வரண்மனையை யடைந்தார்கள். சூரிய னுதயமானுன், மூவாயிரம் பாவிகளை ஆறுதினத்தில் அரசன் கொடுத்தான், இராக்ஷதி பெற்றுக்கொண்டாள்.— இலட்சுமியைப்போல அவ்வரண்மனையிலிருந்த வடிவத்தை இராத்திரியில் நீக்கி, இராக்ஷதியாகி, மூடரான கொலைக்காரரை புயத்தின் மேல் வைத்துக்கொண்டு, அரசனுடன் மந்திரிக்கும் உபசாரங்களைச் சொல்லி கனகமயமான இமோர்ப் பருப்பதத்தில் நிஷ்டையி விருக்கப் போயினுள், இன்றையவரைக்கும் இவ்வண்ணமே அரசனும், கற்கடியும், சினேகமானுர்களென்று இராமனுக்குவசிட்ட முனியானவர் சொன்னுர்.‡—

சுடு. அமுத தாரணையே புசிப்பாமெனல்.

சுசு. மகான்களுக்கன்புசெய்தல்.

சுஎ. அன்பிற்பிறிவற்றிருத்தல்

கற்கடிகதை.
முற்றிற்று.

---

‡ இ-ம். ஆப்த்தர்கள் பிராரத்தகன்மசேடத்துக்குள்ள வுபாதியைநீக்கி யன்பிற்கலந்திருந்தனராம்.

# அயிந்தவர் கதை.

## அவதாரிகை.

---

முன் பிரபப்ரகாசமே சீவன்முதலான சகலமுமென்பதைச்சொல்லி, அது திடமாகும்பொருட்டு அத னுல்லாசமான மனதே சகமென்பதை யறிவிக்கவேண்டி அயிந்தவர் கதையைச் சொல்லுகிறார்.

க. மனமே சகத் தென்ப தற்குத் திருஷ்டாந்த முரைத்தல்-

சொல்லிய கற்கடி கதையினால் தத்துவமா யுயர்ந்த வசனாதீதமான பிரமஸ்வரூபமே உள்ளதாம், திரிஸ்ய வஸ்துவென்ப தொன்றில்லை, அளவற்ற சிருஷ்டிகளி லும் காரணமாக மனதே ப்ரகாசிக்கும். இது தெரியு நிமித்தம் குற்றமற்ற ஒரு கதையைக் கேளென்று வசிட்டமுனி இராமனுக்குச் சொல்லுகின்றார்.—

உ. மனஞ் சகத் தென்றவதனு லத ற்குக் காரணமான சிற்சத்தி வெளிப் படல்.

இக்கதையினால் ஞான சத்தியினுடைய விலாசமே சகமென்று சொல்லப்பட்ட நிச்சய முண்டாம், அவாவியெழாநின்ற மனமென்னுஞ் சிறுகுழந்தையும் அறியாமையினால், முழுது மித்தையாக உலகப் பிசாசம் வரப்பார்க்கும், அதனுருவத்தைத் தெரிவிக் கில் பிரமஸ்வரூபமாயறிந்து துன்பநீங்கும், இராகத்து வேடாதிகளென்னு நாநாவிகாரங்களை மனமடையின் சநநமாம், அவ்விகாரங்களை நீக்கி விடுதலே மோக்ஷ மாம்.¶— ஒருகாலத்தில் பிரமதேவன் சிருஷ்டிக ளனைத்தையுமடக்கி இராத்திரியில் நித்திரை செய்த பின்பு, உதயகாலத்தில் திரும்ப சகத்தை சிருஷ்டிப்ப

௩. நூதனசிரு ஷ்டியைப் பார்த் ததிசயித்தல்.

தற்கு ஆகாயத்தைப் பார்க்கவும், மனதினால் விரியு மாகாயத்தில் நாநாவித சிருஷ்டிகள் சமீபமானதைப் பார்த்தான், யார் சிருஷ்டித்தாரென்று வியப்புற்று.-

௪. சிருஷ்டியுண் டான காரணமுரை த்தல்.

அதிலொரு சூரியனை வாவென்றழைத்து எவருன் னையு மிந்தச் சகத்தையுஞ் சிருஷ்டித்தவர் என்று கேட்க, சூரியனமஸ்கரித்துச் சொல்லுவான், முடி வில்லாத சகத்துக்குக் காரணமாகிய பிரமாவாகிய நீர் இதை யறியவில்லையாயின் சொல்லக் கேட்பாய் வெள்ளியங்கிரி யிடமாகிய சம்புத்தீவில் விரிந்த விடத்தில் ஓர் பக்கத்தில்,— சிறப்புள்ள கனகசட

௫. தவத்துக் கேகல்.

மென்கின்ற ஒரு நாடு, உனது புத்திரர்களால் சிறந்த சிருஷ்டியைப் பெற்றது, அத்தேயத்தில் பாரம்பரிய மான காசிபனுடைய வமிசத்தில் உண்டான பிராம ணன், இந்துவென்னும் பெயரினாற்சிறந்தவன், புத்திர சம்பத்தில்லாமல் பரபரப்பான மனதினால் நாயகி

---

¶ இ-ம். சிற்சத்தியில் விருத்தியான மனோப்ராந்தியே திரிஸ்யமும், அதனிவிர் த்தியே திருக்குவமாமென்பதாம்.

யுடன் பரமேசுவரனுடையகயிலாயமலைக்குப்போய்.-

சு. தவத்தால்மகப்பேறுண்டாதல்.

தவமேற்கொண்டு விருட்சத்தைப்போல நீரையே பானஞ்செய்து வருந்துகின்ற காலத்தில், பரமசிவன் மனமகிழ்ந்துவந்து உமக்குவேண்டியதென்ன சொல்லுமென்றுகேட்க, சிரசினால்வணங்கிஎங்கள் துன்பந் தீரும்படி பதின்மர் கல்வியிற்றெளிந்த புத்திரர்கள் வேண்டுமென்றுகேட்க, அவரவ்விடத்தி லப்படியே யருளிச்செய்ய, இந்த ஸ்திரீபுருடாள் மகிழ்ந்துவந் திருக்கும்போது புத்திரர்கள் அவதரித்து,— வேத சாஸ்திராப்பியாச நிரம்பி வளர்ந்ததன் பின்பு, மாதா பிதாக்கண்மரிக்க, புத்திரர்கள், கைலாசமலையினிற் சென்று விசாரிப்பார்கள். நமது தரித்திரநீங்கும்படி மேலான சாமந்தர்களாவோம், அச்செல்வங் கொஞ்ச மானபடியால் பெருமையையுடைய வரசராவோம்,-

எ. உயர்வாராய்தல்

அ. உயர்வைப்பரோக்ஷமாகத் தெளிதல்.

அதுவுமற்பமாம், பூமிக்கெல்லாம் சக்கரவர்த்தியாவோம், அதுவுமற்பமாம், நவநிதிகணிறைந்த தேவேந்திரராவோம், சொல்லிய விச்செல்வமும் பெரிதல்ல, தாமரைமலரி லெழுந்தருளிய பிரமாவாகுதல் குற்றமற்ற செல்வமென்று நிச்சயித்தார்கள். தோன்றின மனதில் பத்துபேர்களு மொருமித்து மேலாகிய பத்மாசனத்திலிருந்து,— யாமே பிரமதேவன் சிருட்டிகளியாவும் உண்டாகுதல் நமதிடத்தென்று அகத்திற்சலனமற்ற மனதினல் தியானித்து தேகஸ்மரணமின்றி விருஷத்தைப்போல இருக்கவும், வருகின்ற காலங்க ளநேகமாகச்சென்று, மனோபாவனை முதிர்ந்து, அப்பதின்மரும் பிரமாவானார்கள், பத்துலகங்களுண்டாயின.—

கூ. உயர்வபரோக்ஷமாதல்.

கo. மனதே சகத்தென்பது திருஷ்டாந்தமாதல்.

மனகாயத்தில் இவர்கள் பத்துவிதமாக சிருஷ்டியைச் செய்தார்கள், கூட்டமாகிய வப்பத்து சிருஷ்டிகளில் நானும் ஒரு சூரியனென்று சொல்லி போயினன். கனமாகிய மனதினது விசாலத்தினல் பார்க்கப்பட்டவுலகங்கள் உள்ளனவாமென்று அன்னவாகனத்தையுடைய பிரமதேவன் மனதினற் சிருஷ்டித்தானென்று, இராகவருக்கு வசிட்ட ரனுக்கிரகித்தார். ‡—

அயிந்தவர்கதை

முற்றிற்று.

---

‡ இம். மனோபாவமே சகத்தென்பதை யறிவித்ததாம்.

# வஞ்சவிந்திரன்கதை.

---

## அவதாரிகை.

முன்சிற்சத்தி யுல்லாசமாயுண்டான மனோபாவமே சகமென்பதைத் திருஷ்டாந்தமாகவறிவித்து அக்காரணமானமனதைத்தவிர காரியமான தேகம் வேறின்றென்பதை பாகியேந்திரிய விபகாரத்தி லறிவிக்குநிமித்தம், விடயாநந்தாநுபவமுள்ளவஞ்சவிந்திரன் கதையைநிருபிக்கின்றார்.

க. மனோவிசால நிருபணம்.

ஒப்பில்லாத உலகங்களைச் சிருஷ்டிப்பவனும், ஆத்மாவும் சொல்லப்பட்ட மனதேயாம்; நினைக்கின்ற மனதினது தொழிலே தொழிலாகும்; தேகத்தின்றொழில்கள்தொழில்களல்லவாம்; முன்கதையில் சூரியன்சொன்ன நூதனமாகிய பிராமணர்கள் பதுமாசனத்தையுடைய பிரமதேவர்களாய் பூமியைச் சிருஷ்டித்தார்கள். மகாமனதினுடையமேலானசத்தியை வேறொருவரா லறிவதற்கு இலேசாகுமோ.—மனது சரீரத்தைப் பாவனைசெய்ய சரீரமாய், அச்சரீரத்தினால் மனம்வருந்தும் பூரணஞானிகள் அகத்திற் பொருந்துகின்ற பிரமபாவனையினால் நவத்துவாரமுள்ள சரீரத்தில் நன்மைதீமைகளை யறியார்கள்.

உ. பிரமாநந்தாநுபவிக்கு விடயாநந்தா நுபவமின்றெனல்.

முன்னாளில் சோரத்தொழில்செய்த அகலிகையென்பவளும், சோரவிந்திரனும் இதற்கொப்பாவார்கள்.0- என்றுசொல்ல, இவர்களாரென்று இராகவன் கேட்க? வசிட்டமுனி சொல்லுவார். முன்னாளில்,

ங. திருஷ்டாந்தமறிவித்தல்.

மகததேசத்தையுடைய இந்திரத்துய்ம்மனென்னும் பெயரையுடைய ஓரரசனும், அவனுக்குப் பிராணனைப்போல கூடிக்களிக்கு மனைவி அகலிகையென்னும் பெயரையுடையவளாம். முன்சொல்லிய பட்டணத்தில் ஒருவனுண்டு, அவனாமம் இந்திரனாகும்.— அக்காலத்தில் அவ்வகலிகையும், அப்புரந்தரனும், புணர்ந்த கதையைக்கேட்டு, இந்தநாளில் இவ்வரசியென்னு மகலிகையும், இத்தூர்த்தவிந்திரனை இனிமையாகக்கூடினாள், நெடுங்காலம் நீங்கினவர் கூடுங்கூட்டத்தைப்போல, விடசிரேஷ்டனுடன் சிலநாட்கழித்து ஏகமா யிருக்குங்காலத்தில், நீதியையுடைய வரசனுக்கு அறிவித்தார்கள்.—கேள்விப்பட்டவரசன்மிகவுங் கோபித்து அவர்களை மிகுந்த சலத்திலமிழ்த்தியும், தந்தங்களையுடைய மதயானையை நேரேவிட்டிடறவித்தும், கொடிய வக்கினிச்சுவாலையில் முழுகச் செய்தும், வருந்தாவின்றகுதிரைச்சம்மட்டிகளாலடிக்கச்செய்தும், இப்படி பலவருத்தங்களைச்செய்ய, அவர்கள் வருத்தப்படாமல் இருவர்கண்ணுமொன்

ச. இருதலைக்காமமுமொத் தேகமாதல்.

ரு. சிற்றின்பத்திற்பிரிவற் றிருத்தலின் றுன்பந் தோன்றாமை.

---

0 இ-ம் மனதைத்தவிர சரீரத்துக்கோர் சுகதுக்கமில்லை யென்பதாம்

௬. விடயானுப வமுரைத்தல்.

ஞுக்கொன் றெதிர்பார்த்து மனமொன்ருய் வருத்த மறியாதவர்களாய் நகைத்துக்கொண்டிருக்க,— இராசன் பார்த்து அதிசயித்து, மிகவுந் துன்பப்படுத்த துன்பப்படாத விதத்தைச் சொல்லுங்களென்று கேட்கவும், மனமகிழ்ச்சியையுடைய விருவரும் சொல்லுவார்கள், மலைபோன்ற தோள்களையுடையோனே? எங்கள் வதனமாகிய சந்திராமுதத்தை கண்கள்புசிக்க,தடைசெய்யக்கூடாத மகிழ்ச்சியினுல் உடலையே காணுத யாம் வருத்தங்களைப் பார்ப்போமோ.—

எ.மனவுறுதியின் பெருமையை யறிவித்தல்.

அறுத்தகாலத்திலும் சரீரவருத்த மறிந்திலம், ஒன்றிற் பிரியமாய் பிடிக்கின்ற மனத்திணுக்கு சரீர நசிக்கவந்தாலும் துன்பந்தோன்ருது; தெரிந்த வஸ்துவில் மனமுழுகினல் சரீரத்தினது செயலை, வேறே யாவர்பார்ப்பார்கள். வியாபித்த முனிவர்கள் சாபமும், பலகன்மங்களும் அதைத் திருப்பக் கூடாது.—

அ. மனதின் விசால மறிவித்தல்.

இறந்து வீணுகக்கழிந்த சரீரம் ஓளவில்லை, அச்சரீரங்களியாவும் தாவாநின்ற மனதினுற் ருேற்றும், நீரையன்றி வனமுண்டோ, சகலத்தையு நடத்தாநின்ற மனதே முதன்மையான சரீரமாம்,இத் தூலசரீர நீங்கினுலும், இச்சிக்கின்ற சரீரங்களை விரிகின்ற சொற்பனத்திற்ருேன்றுந் தொழிலைப்போல வேகமாயெடுக்கும்.—

௯. இதுவுமது.

இம்மனமாத்திர மடங்கினுல், சரீரமொன்றையு மறியமாட்டாதென்று தூர்த்தாள் சொல்லக்கேட்ட அவ்வரசன் பரதனென்கின்ற பக்கத்திலிருக்கின்ற முனிவரன் வதனத்தைப்பார்த்து, சித்தத்திற் காமமயக்க மடைந்திருந்தும் இவர்கள் ஞானபாவனையைச் சொன்ஞர்களென்று மனமகிழ்ந்து, பரதேயத்திற் போங்களென்று அவர்களைத் துரத்திவிட்டான்.‡—

வஞ்சவிந்திரன்கதை
முற்றிற்று.

---

# மனத்தின்கதை.

---

## அவதாரிகை.

முன்னகத்திற் சுகதுக்கவிருத்திரூபமான மனமேபுறம்பி விருப்பதெனக்காட்டி, அம்மன மகமுகப்படிற் சித்தாகவும், பகிர்முகப்படிற் சத்தாகவுமிருப்பதை யறிவிக்கும்பொருட் டதனுருவத்தை நிரூபிக்கிறுர்.

‡ இ-ம். பிரமாநந்தானுபவமுள்ள மனது விபகாரங்களிலு மவ்வனுபவமாயிருப்பதேயன்றிப் பேதிக்கமாட்டா தென்பதாம்.

க. உயிர்களின் தூல சூக்கும தேகத்தின் குணங்களை யறிவித்தல்.

பிரமாநந்தத்தைக் குறிப்பாலுணர்ந்து மிவ் வஞ்சவிந்திரன்கதையை, விடயானந்த மனுபவிக்கும் லீலையாகச்சொன்னேம். இயாவருக்கும் அம்மனதிற்குரிய சூட்சுமசரீரமொன்றும்; வேறான தூலசரீர மொன்றும்: அவ்விரண்டில், மனோசரீரமானது, சீக்கிரத்தில் தொழில்களனைத்தையுஞ்செய்து அதிற்றொந்தமாய்ச் சஞ்சலிக்கும், மற்ற தூலசரீரமானது ஒன்றையுமறியமாட்டாது.—இப்படியென்றுசொன்ன வசிட்டமுனியை, சடமாகவும் ஸ்வரூபமில்லாததாகவுமிருக்கின்ற இந்த மனதுக்குரிய வுருவத்தை விரித்து நன்றாகச் சொல்லுமென்று இராமன்கேட்க, பிரமன் வாக்கியப்படியே ஞானஸ்வரூபியான வசிட்டமுனி சொல்லுவார்.—சகல சத்திகளுமுடையதாய் முடிவற்றிருக்கின்ற வாத்மாவானது, சங்கற்பத்துடன் கூடுகின்ற உருவமே மனமாகும். வலியுள்ளசத்தும், அசத்துமாகிய இரண்டின் மத்தியிலுமுண்டாகி சொல்லப்பட்ட செயல்களோடும், பழகும்பாவனையும், அந்த மனதினுருவமே. †— எவ்விடத் துண்டாயினு முண்டாகட்டும், எந்தவுருவமாகத் தோற்றினுலுந் தோற்றட்டும், இப்படிப்பட்ட மனதை மோக்ஷமடையுங் குறிப்பில் உபாயங்களிலும், ஆத்மாவிலும் சேர்க்கில் நன்மையாம். பிரமதேவன் சொன்னதாகிய ஒரு புராதனமான கதையை நீகேள், கொடியதுன்பமும் பயங்கரமுமாயிருக்கின்ற முழுதுமித்தையாகிய ஓர் காடுள்ளதாம்.—அவ்வனத்தினது ஒருகடைப்புறத்தினளவு அளவற்ற காதமாம், இவ்வனத்தில் ஒருபுமான் நேத்திரங்களும், கைகளும், அளவில்லாததையுடையவன், பலவாகச் சிதறுகின்ற கருத்துடையவன், ஆகாயம் போன்ற விரிந்தவுருவமுள்ளவன், விரைவிற்செல்கின்ற வளைதடிக ளநேகங்களையும் கைகளிற்றரித்துக் கொண்டு,— தன்னைத்தானே சிதறும்படி யடித்து ஒடித்து வெகுண்டு கதறிக்கொண்டு எல்லாத் திக்குகளிலுமோடி வசந்தப்பி சகலத்திலுந்தாக்கி அந்தகாரமாகிய பயமதிகரித்திருக்கின்ற தீவினையாகிய ஆழமுள்ள பாழுங்கிணற்றில்விழுந்து வெகுகாலம் மெலிவான்.— திரும்பவு மெழுந்திருந்து வந்து சரீரத்தி லடித்து கதறிக்கொண்டு ஓட்டத்திற் சுழலுவான், நீண்ட முட்கணிறைந்த கருவேலங் காட்டில் முறியும்படி விழுந்து, அக்கினியில்

உ. அவற்றில் மனோ சரீரத்தின் குணங்களை விசாரித்தல்.

ந. அம்மனதி னுருவத்தைப் பகுத்துக்கூறுதல்.

ச. அம்மனதைச் சித்திற் சேர்க்கதிருஷ்டாந்தமுறைத்தல்.

ரு. இதுவுமது.

சு. இதுவுமது

எ. இதுவுமது.

† இ-ம். பிரமஸ்புரணமே மனமாம், அஃது சடாசடங்களிற்றோற்றி யதையேடாவித் தன்மயமா யிருக்கின்றதாம்.

விழுந்த விட்டிலைப்போல பதைபதைப்பான், இப்
படி வாடுதலை நீங்கி கதலிவனத்தில் களிப்புற்றிருப்
௮. அம்மனதைச் சித்திற்சேர்க்கதிருஷ்டாந்த முரைத்தல். பான்.— வாழை வனத்தை நீங்கி கருவேலங் காட்
டிற் சுழலுவன், விரைந்து கூபத்தில் விழுவன்,
இப்படி யநேகந்தரஞ் சுழலுதலைப் பார்த்து நடுங்கா
வண்ணம் நாம் பிடித்துக்கொண்டுவிருதாவாக வருந்து
கின்ற நீ ரெவர்? என்ன செய்கின்றாய்? உனது கருத்
௯. இதுமவுது. தியாதென்று கேட்க, அவனிதைக் கூறினான்.— நா
னென் றொருவனுமில்லை, இவ்விடத்தொருதொழிலை
யுங் கண்டிலன், நீ யிருந்திப்பேதங்களைச் சொல்ல
கருதி உன்னால் வாடுகின்றேன், ஈனம் பொருந்திய
வெமது சத்துரு நீ, நின்னாற் சுகதுக்கங்களை யானெ
னத்தெரிந்தேனென்று அடிபட்ட தனது தேகத்தைப்
௧௦. இதுவுமது. பார்த்து,—சப்திக்கின்ற மேகத்தினதுவருடம்போல
இரக்கமுற்று ஒவென்று அலறி கூப்பிட்டழுதான்,
ஒருகணத்தி லவ்வழுகையை விட்டு நுண்மையான
தனது ஸ்வரூபத்தைப் பார்த்து வெகுநேரமாக வயிறு
பிளக்கும்படி சிரித்தான், திரும்பவும எமக்கு முன்பு
பருத்திருக்கின்ற தனதுவடிவங்களையெல்லாம் தானே
௧௧. இதுவுமது. கிரமமாக நீங்கினான்.—விதியின் வசத்தால் இவனொ
ரிடத்தி லடைந்தான், எனக்கெதிராகவந்து ஒரு
புருடன் சமீபத்தில் முன் சொன்னவனைப் போல்
அடித்துக் கொண்டுபோக, முன் வந்தவனைப்போல
நாமுறுதியாகப் போதிக்க, அவ்வழிச் செல்வோனும்
௧௨. இதுவுமது. முன்வடிவம் நீங்கச் சென்றான்.—வேறு மொருவன்
வந்து அப்பெரிதான பாழுங்கிணற்றில் விழுந்தான்,
வெகுநாள் திரும்பி யேறிவரப் பார்த்திலம், கலக்க
மிகுந்த வக்காட்டில் மற்றொருவன் வரவும் அறிவோ
௧௩. இதுவுமது. மென்று தடுத்து கூடியமட்டுக் கூறினேன்.— சொன்
னதி லொன்றுங் கேளாமல் அதட்டி நிந்தித்து மேலு
மேலு மடித்துக் கொண்டு போயினான். மூர்க்கரும்
அவனையொத்தவர்களுமாகிய துன்பப்படுகின்றவர்கள்
மிகுந்து கூர்ந்த முட்களா னெருங்கி பயத்துக்கிடமா
யிருக்கின்ற அந்தகாரஞ் சூழ்ந்த மகாரணியமானது
௧௪. இதுவுமது. இப்பொழுது மிருக்கின்றது.— மிகவுங் கொடியதாகி
வெந்துபோன காடானாலும், ஞானிகள் வாசனை வீசிக்
குளிர்ந்திருக்கின்ற புஷ்பவனத்தைப்போல சந்தோ
ஷிப்பார்கள், என்று சொல்லிய வசிட்டரிஷியைப்
பார்த்து, இக்கதையை விளங்க வருள்வாயென்று

கடு.உருவகத்தை வெளிப்படுத்தல். இராமன்கேட்க, ¶-மகாமுனியான வசிட்டர்சொல்லுவார் (க) ஸ்தாபிப்பதற்கு ஆதிமத்தியந்தமில்லாமல் மித்தியாசங்கமாகியும், கெம்பீரமாகியும், கொடியதாகியும்; விகற்ப மிகுதியாகியு மிருக்கின்ற கூட்டமுள்ள சம்சாரசுபாவமே, நாமுன்சொல்லிய காடாம்.-

கசு.இதுவுமது. (உ) கோபாக்கினியின்புகை நிறைந்த உலகமென்னுங் காட்டில் புருடனென்றவன், துன்புற்றுச் சுழலாநின்ற மனமேயாம். (அ) தடுக்கின்றயாழும், ஒப்பற்ற விவேகமேயாம். (கடு) பகையாகிய விவேகத்தினால் மனமானது, பிரமத்தை யுணர்ந்து விஸ்ராந்தியடைந்ததாம். (கஅ) குற்றம்பொருந்திய மனங்கள், விவேகத்தை நிந்தித்து விஷயவாசனை வயத்திற்சென்

கஎ. இதுவுமது றன.— (டு) அடித்துக்கொண்டு செல்லாநின்ற மனங்களானவை வீழுங்கிணறென்றதுநரகமாம். (எ) கதலிவனமென்றது, போகநிறைந்த சுவர்க்கலோகமாம். (சு) முட்கணிறைந்த கருவேற்காடென்றது, யோகமுள்ள ஸ்திரீபுருடர்கணிறைந்த பூலோகமாம். (கஎ) சிதறிவீழ்ந்த கிணற்றினின்றும் திரும்பவேறுமற்கிடந்தவனென்றது, விரைவில் நகரத்திற் பிரவே

கஅ.இதுவுமது. சித்து பாவகன்மம்நீங்காத மனமாம்.— (சு) கூர்மைபொருந்திய முள்ளென்றது, காமாந்த காரத்தையுடைய ஸ்திரீபுருடர்கள். (கo) நிணக்கின்ற சுகதுக்கங்களை உன்னாற்பெற்றேன். (கக) நீயே யெனக்குச் சத்துருவாமென்றது, அறிவினால் நசிக்கின்றமனது துன்புற்றுச் சொன்னது. (கஉ) அவர்க ளழுதார்களென்றுசொல்லியது, இச்சையைக் கெடுக்கின்ற

கசு. இதுவுமது. அருத்தமாம்.— (கங) கூப்பிட் டழுதமென்றது, ஞானம் அரைவரிசையுண்டாகி ஞானநிறையாத மனமானது ஆசையை விடும்போது துன்பப்பட்டு வருந்துதல் அவ்வருத்தமேயாம். (கச) குளிர்ச்சியாகச் சந்தோஷித்து நகைத்திருந்தமென்றது, குற்ற

உo.இதுவுமது மற்றஞானத்தில் ஒன்றானவாநந்தமாம்.— (கசு) அந்தமில்லாத ஞானத்தினால் ஆசையைவிடுத்த மனமானது தனதுவுருவத்தை நாசஞ்செய்யும்பொழுது சந்தோஷிப்பதே சந்தோஷமாம். (கூ) மிகுந்தவலியினால் தடுத்துக் கேட்டோமென்றுசொல்லியது, அழிவற்ற ஞானோபதேச பலத்தினால் மனமொருமைப் பட்-

¶ இம். டாவித்தவடிவமாகிய மனது ப்ரவிர்த்திநிவிர்த்திகளிற் சடமாயுஞ்சித்தாயுமிருப்பதை யறிவித்தற்கு அதுசெல்லும் விடயப்ரபஞ்சத்தை வனமாகவும் அதிற்சஞ்சரிக்குமனதைப் புருடனாகவு முருவப்படுத்தி யதன்கிரியையைப் பதிணெண் விதமாகப் பகுத்துக்கூறினதாம்.

உக. ஆதலால் மனதைக் கெடுக்க வெனல்.

டது,— (ங) சரீரத்தி லடித்துக்கொண்ட தென்றது, மிகுந்த கற்பனைகளின் கெடுதிப்படுகின்ற வலிப தின் பங்களாம். (ச) நெடுந்தூர மோடின தென்றது, கெட்டத்தகுந்த வாசனையாலடிப்பட்டு மயங்கித் திரிவ தாம். ஆதலால், சங்கற்பங்களும் வாசனைகளும் தன்னைத்தானே வலைபைப்போல சிறைப்படுத்தும்.†-

உஉ. இதுவுமது

கோசகாரக் கிரிமையைப்போலத் தனது கொடிய சங்கற்ப வாசனைகளால் யாவரும் பாசத்தை யடை வார்கள் சொல்லிய இம்மனத்தின் சரித்திரத்தை களங்கமற்ற மனதினால் வரையறுத்தறிந்து, களங்க மனதைக் கெடுப்பாய், தெளிவையுடைய இராமா வென்று தெளிவுள்ள வசிட்டமுனி சொன்னார்.‡—

மனத்தின்கதை
முற்றிற்று.

---

# பாலன்கதை.

---

## அவதாரிகை.

முன் மனமானது சிற்பாவனையாற் சித்துஞ், சடபாவனையாற் சடமு மானதை யறிவித்து, அதன் சங்கற்பரூபமான சகத்தை யாத்ம விசார மில்லாதவர்கள், ஏதார்த்தமாகப் பார்ப்பதைப் பாலன்கதையி னிதரிசன மாகச் சொல்லுகிறார்.

---

க அறிஞர்கள் மனது பிரமமே யெனல்.

குற்றமற்ற ஞானிகளுடைய மனமானது, சகலசத்தி களையுடையதாயும், பரிபூரணமாயு மிருக்கின்ற எப் பொழுதும் நாசமில்லாத பிரமஸ்வரூபமாவது தான், அதைய‌ன்றி வேறின்று. பிரமஸ்வரூபமாகிய இத னிடத்தில் இல்லாதவைக ளொன்றுமில்லை, எழுது தற்கரியசிற்சத்தியானது சகலமுமாய்ப்பிரகாசிக்கும், இச்சத்திகளில் ஒருகாலத்தில் ஒரு சத்தியுண்டாம், குறைவில்லாத பிரமத்தினுடைய ஞான சத்தியானது

உ. இதுவுமது.

அழிகின்ற சரீரங்களிற்றோன்றும்.— வாயுவில் சலன சத்தியும், கல்லில் கடினசத்தியும், அக்கினியில் உஷ்ண சத்தியும், ஆகாயத்தில் சூனிய சத்தியும், சலத்தில் திர்வசத்தியும், நாசத்தில் நாசசத்தியும், வலியுள்ள வித்திலடங்கிய விருக்ஷங்களைப் போல பிரமத்தினு

---

† இ-ம். முன்சொருக்குத்துச்சொன்ன பதினெண் பகுப்பையு முறைப்படி யில க்கம்வைத்து வருத்துரைத்ததாம்.

‡ இம் மனதை யகமுகத்திற்செலுத்தி பகிர்முகத்திற் செல்லாமற் றடுக்கின் ஞானமயமாமென்பதாம்.

ளடங்கியிருக்கின்ற பிரமசத்திகளான இவைபலமிகுந்த காலதேச விசித்திரத்தினல் பூமியில் பயிர்களைப் போலத் தோற்றும்.¶— பிரமஸ்வரூபமே எவ்விடத்திலும் எப்போதும் உண்டாயிருக்கும். அப்பிரமமே சொல்லப்பட்ட மனனத்தினல் மனமாகவும், இழிவிற் சமானமில்லாத பந்தமுள்ள சீவாத்மாவாகவும், வீடுள்ள பரமாத்மாவாகவும், பெரிய வுலகமாகவும், சத்திகளெல்லாமாகவு மிருக்கும், ஸ்திரமில்லாத குழந்தைகளுக்குத் தாய் சொல்லப்பட்ட கதையைப் போல, சொல்லிய விக்கற்பனைக ளனைத்தும் நிலையாகும். கைகளென்னுந் தாமரை மலர்களையுடைய மேகமே என்று வசிட்டர் சொல்லவும், அச்சரித்திரத்தை இராமர்கேட்க,†— மனவஞ்சனைக்கு காரணமான கதையை இராமனுக்கு, அரிய தவமுள்ள வசிட்டர் சொல்லுவார். மெய்யறிவில்லாத வொருபாலனைவன் விருப்பமுற்று, தாயே நீ ஒரு கதையை யெனக்குச் சொல்வாயென்று கேட்க, உள்ளதுபோல முழுதுமித்தையான வோர்கதையைச் சொல்லுவாள். இராசகுமாரர் மூன்றுபேர்கள் பரிசுத்தமாகிய வீரத்தி லும் நல்ல குணங்களிலும் மிகுந்தவர்கள் சூனியநகரி லிருப்பவர்கள்,—மூன்றுபேர்களில் இரண்டு பேர்கள் பிறந்ததேயில்லை, ஒருத்தன் காரணமாகிய கருப்பத்திலுமில்லை இவர்கள் சகலலாபமு மெண்ணிச் சஞ்சரிப்பவர்களாய், ஆகாயத்தில் மட்டற்ற கனிகளையுடைய வனத்தில் பொருந்தவும், அதிற் செழுமையான பழவகைகளைப் புசித்து வெப்பமான பசி நீங்கி மேற்போயினர்கள், அக் கானகத்தின் பக்கத்தில் மூன்றாறுகளை கரையின் மோதாநின்ற அலைகளுடன் பார்த்தார்கள்.— வேகமாகச் செல்கின்ற நல்ல மூன்றாற்றினுள் இரண்டிற் சலமில்லை, ஒன்றுலர்ந்த வெண் மணலையுடையதாம், இந்த நதியில் ஸ்நானஞ்செய்து சலத்தை பானம் பண்ணினர்கள். சாய்ங்காலமாய் இனியுண்டாகும் பட்டணத்தைச் சேர்ந்து, அதில் மூன்றுவீடு கண்டார்கள், அம்மூன்றி லிரண்டல்லவே யில்லை, மேலே மரங்களுஞ் சுத்திச் சுவருமில்லாத வீடொன்றுசேர்ந்தவம்மனைகளில் சுவரில்லாமனையில் இராசகுமாரர்கள் குடியாகப் புகுந் திருந்தார்கள்.—

(ரு. அசத்தைச் சத்தாகக்காணுதல்)

(சு. அசத்தைச் சத்தாக வுரைத்தல்.)

(எ. இதுவுமது.)

(அ. இதுவுமது.)

¶ இ-ம். பிரமத்துக் கபின்னமான சிற்சத்தியுல்லாசமே, விசித்திரமான சகமாகத்தோற்றுகின்றதாம்.

† இ-ம். சத்தினுபாசமாகத் தோற்றுகின்ற மித்தையாரூபமான சகம். அறிவின்மையாற் சத்தாகப் பார்க்கப்படுகின்றதாம்.

எ. அசத்தைச் சத்தாகவுரைத்தல்.

ஒருவரும் பாராத பட்டணத்தில் ஆகாயபணேயிலி ருப்பவர்கள் மூன்று கனகபாத்திரங்கள் தனது பக் கத்திலிருக்கப் பார்த்தார்கள், அதிலிரண்டோடாகும் மிகவுந் தூளாயிருப்பதொன்று. உருவமில்லாத இப் பாத்திரத்தில் ஆறுமரக்காலில்தூணிபதக்கைத்தள்ளி யிருந்திருந்த பருத்த தண்டுலத்தை தாங்கள் பாகஞ் செய்து, வாயில்லாதபிராமணுள் அளவற்றவர்களுக்கு முன்பு பரிமாறினார்கள்.— அப்பிராமணர்க ளனைவ

அ. இதுவுமது.

ரும் பூரணமாகப் புசித்தபின்பு, சேடத்தை ப்ரசாத மாகப் புசித்து வேட்டைகள் செய்துக்கொண்டு, இம் மூவர்களும் அத்தலத்தில்வசித்தார்களென்று அன்னை சொல்ல, பாலப் பருவத்தினுல் குழந்தை எதார்த்த மாக நம்பினுன். சகத்தையும் இவ்வண்ணம் அஞ்ஞா னிகள் பார்ப்பார்கள், சொல்லப்பட்ட மனதின் விசா லமே சங்கற்பமாம், பகுத்துச் சொல்லுகின்ற இச்சங் கற்பத்தாற் சகமாம், இச்சங்கற்பத்தை நீக்கு, நீ நிரு விகற்பனுகக்கடவாய்.¶—

பாலன் கதை
முற்றிற்று.

---

# சித்தன்கதை.

## அவதாரிகை.

முன்பு திருக்குதிருஷ்டி யில்லாதவர்களுக்குத் திரிஸ்ய முண்டு போலத் தோற்றுமென்பதை யறிவித்து, அத்திரிஸ்யஞ் சுகதுக்கானு பவமா யிருத்தலாற் கேவல மித்தையன்றிச் சிற்சத்தி விலாசமாயிருக்கு மென்பதையும், அம்மனமே காலவளவா யிருத்தலையு மறிவிக்குநிமித் தம், சித்தன்கதையை நிரூபிக்கிருர்.

க. பிரமத்துக்கு பந்தமின்றெனல்.

அஞ்ஞானிகள் தமது சங்கற்பத்தினுல் மிகவு மய ங்குவார்கள், சுகஞானிகள்ப்ரகாசிக்கின்ற ஆத்மவிசார ஞானத்தினுல் மயங்கார்கள், அறிவினுல் மித்தையை நீக்கி பரிசுத்தமான வுண்மையை அறிந்துக்கொள்ளக் கடவாய், பந்தமில்லாதிருந்தும் பந்தமுண்டா யிருக் கின்றதென்று வேறுபட்டுத் தளராதே, நின்பலயா யும் நாசமில்லாததாயு மிருக்கின்ற பிரமவஸ்து கட்

உ. மனதுக்கே பந்த முத்தியுண் டெனல்

டப்படுமோ?†— தேசகால வஸ்துக்களால் முடி விறந்து ஏகமாயும் பேதமிறந்து சின்மாத்திரமாயு

---

¶ இ.ம். பிரமத்தி லாரோபிதமாகத் தோற்றினகற்பனைகளைநீக்கி அப்பிரமவடி வமான எதார்த்தமாய் சஞ்சரிக்க வேண்டுமென்பதாம்.

† இ.ம். சைதன்ய மொருதன்மையதாக ப்ரகாசிக்க அதற்குப் பந்தமெப்படி யுண்டாமென்பதாம்.

மிருக்கின்ற கெடாத பிரமவஸ்து விருக்க, பந்தத்தை யடைந்தவரியார்? வீடடைந்தவரியார்? சகலமும் பாவனுவிகற்ப விசாலமேயாம். நினைப்பின் விசாலமே பந்தமாகும், அதை விடுவதே மோக்ஷமாகும், மனதினது தொந்தமான விளையாட்டினுல் சமீபமுஞ் சேய்மையாம், வெகுதூரமும் சமீபமாய்த் தோற்றும்.‡—

ரு. மனமே தேசகாலமா யிருத்தலைத் திருஷ்டாந்தமாக வறிவித்தல்.

மனத்தின் வலியினுல் கற்பகால மொருக்ஷணப்போதாம் க்ஷணங் கற்பகாலமாம், இவைகளை தெளிவாயறிவிக்கின்ற ஓர் கதையாய், அக்கதையால் உலகமென்கின்ற இந்திரசாலமானது பெருமை பொருந்திய மனத்திலிருக்கின்ற தன்மையானது வெளியாகத் தோற்றுமென்று, வசிட்டர் சொல்லுவார். இப்பூமியிலொருபுருடன் அரிச்சந்திர வமிசத்திற் பிறந்தவன், உத்தரபாண்டவமென்னுந்தேயத்தையுடையவன்,*—

௬. சித்தன் மயக்குதல்.

இலக்குமியும் சரஸ்வதியும் துதிக்கின்ற இராசகுமாரன், விசயலட்சுமி வசிக்கின்ற புயங்களையுடையவன், லவணனென்னு நாமத்தையுடையவன், ஆலோசனைகள் மிகுந்த மந்திரிகள் தன்னைச் சூழும்படி நவரத்தினங்களினுற்செய்த சிங்காதனத்தில் வீற்றிருக்க, இந்திரசால வித்தையில் வல்லமையுள்ள வொருபுருடன்வந்து வணங்கிப் புகழ்ந்து, மதிக்கொப்பான கண்கணிறைந்த மயிற்றேகையின் சுழலினுல், அரசனே, இவ் வித்தையைப் பாருமென்று சுழற்ற,—

௭. குதிரைதோற்றல்.

பரிசுத்தமாகிய பிரமத்தினுல் நானாவிதமான சிருட்டிகளை தோற்றுவிக்கு மாயையானது தோற்றுகின்றதுபோல, சித்தனென்பவன் வித்தை முதலானவற்றைக் காண்பித்து சுழற்றுகின்ற மயிலிறகின் வட்டத்தை அரசன் பார்த்தான், அவ்விடத்தில் சயிந்தவதேசத் தரசனனுப்பிய ஒருதூதனுனவன், தாவாநின்ற ஒரு குதிரையைக் கொண்டுவந்து தேவேந்திரன் குதிரைக்கு சமானமென்று,— அரசனே, உமக்கென்றுளங்களரசனனுப்பியவெற்றிக்குதிரையென்று சொல்லவும், சித்தன் இக் குதிரையை யொத்தது கிடையாது நீ ரிதனிலேறுமென்று சொல்லினன்.

௮. அறிவுமயங்கல்.

இத்தன்மையுள்ள சித்தன் கூறியவைகளைக் கேட்டு, ஒவியம்போல குதிரையே நோக்காக அரசன் முகூர்த்தநேரம் ஞானிகள் துன்பமற்ற சமாதியிலிருந்தது

‡ இ-ம். மதிக்கின்ற மனதுக்கே சுகதுக்கமுண்டா மென்பதாம்.

* இ-ம். ஒன்றிற் பிரியம்வைத்ததிற் சுகிக்கும்போது கற்பங்கணமாகவும்அதையடைய முயற்சிக்கும்போது கணங் கற்பமாகவுமிருப்பது மனதேயன்றி வேறின் றென்பதாம்.

எ. அறிவுதெளிதல். போல, அங்கிருந்தான்.—இராசசபையிலிருந்தவர்கள் சந்தேகமும் அதிசயமிகுந்து, தடாகத்தில் குவிந்த தாமரைமலர் கூட்டத்தைப்போல முகஞ்சுருங்கி யிருந்தார்கள், அறிவுடனும் உபாதியுடனும் உழன்று நான்குகடிகை நீங்கினபின்பு,சிங்காதனத்தினது முன்பாகவிழுகின்ற இராசாவை, அருகிலிருப்பவர்கள் தாங்கிக்கொள்ள விரிந்துழல்கின்ற மனது தெளிந்தறிந்தான்.¶— அப்படிப்பட்ட வரசனை, நின்மலமான

அ. மனோராச்சியஞ் செய்த சரிதையையுரைத்தல். மனதையுடைய நீர் தளரும்படி வந்ததென்னவென்று வணக்கமுள்ள வமைச்சர் கேட்கவும், அரசன் விழித்துக்கொண்டு இதைக் கேளுங்களென்று சொல்லுவான். சமீபமாக மயிற்றோகையைச் சுழட்டி இச் சித்தன் சொல்ல அறிவுமயங்கி இக் குதிரையின்மேல் நினைப்புடனேறி வேட்டையாடுநிமித்தம் வெகுதூரம்

௯. இதுவுமது. சீக்கிரத்திற் போயினன்,— விவேகமில்லாத மனதினால் வருத்தத்தையுடைய செல்வத்தில் அஞ்ஞானிகள் மயங்கிச் செல்வதுபோல, வெகுதூரம் குதிரையினாற்போய் அக்கினியினால் சகலமும்வெந்து பொறிகள் சிதறுகின்ற பாலைவனத்தினுழைந்து, குதிரையும் நானும் சரீரநொந்து, சூரியன்மேற்றிக்கில் அடையும் பரியந்தம் துன்பத்துடன் மயக்கமுற்று மனந்

௧௦. இதுவுமது. தளர்ந்தேன்.— சம்சாரசுமையை ஞானிகள் துறந்து செல்கின்ற தன்மையைப்போல, பாலைவனத்தைத் தாண்டி, நீண்ட கிளைகளையுடைய சம்பு விருக்ஷமும் எலுமிச்சவிருக்ஷமும், கடம்பவிருக்ஷமும், நிறைந்தும் பக்ஷியின் சத்தங்களினால் மிகுந்துமிருக்கின்ற துன்பமில்லாதவனத்தில் போகவும், அவ்விடத்தில் ஓரிளங்கொடியானது எனதுகண்டத்தில் சுற்றிக்கொண்டது கங்காநதியின் முழ்கினவர்களுடைய பாவத்தைப் போல வேகமுள்ள குதிரையானது என்னைவிட்டு நீங்

௧௧. இதுவுமது. கிற்று.— கண்டத்திற் சுற்றிய கொடியால் ஊசலைப் போல தொங்கிக்கொண்டு, கானகத்திற் பொருந்திய தென்றற்காற்றினால் குளிர்வுற்று மயக்கத்தின் முழுகி மனந்தளர்ந்தேன், ஸ்நானமும், பூசையும், தியானமும் நல்ல புசிப்புகளும் இல்லாமல் இறவென்கின்ற வீண் காலம்வர, அவ்விரவில் இருட்டும், துக்கமும், குளிர்ச்சியும், பல்நடுக்கத்தினோசையும், சகாயமா யிருக்க,—மனோவிருளை நீக்குகின்ற ஞானத்தைப்போல

௧௨. இதுவுமது. அவ்விருட்டை சூரியனுதயமாகி நீக்க, கண்டத்திற்

¶ இம் லவணனறிவு தெளியும்பொருட்டு அவனுக்கு மனோமாயையின் வல்லமையைத் தெரிவித்ததாம்.

சுற்றிய வல்லியைதறித் தவ்விடத்திலிறங்கி சோலையு ளுழைந்து அவ்விடத் தொருவரையும் பார்த்திலன். கனமான வொருமத்தியானத்தில் மூன்றே முக்கா ழிகை கழிந்தபின்பு, நமதுகுலமல்லாத ஒரு நீசப் பெண்ணை இருளைச்சந்திரனெதிர்ந்ததுபோல, அவள்

௬௩. மனோராச் சியஞ் செய்த சரி தையையுரைத்தல்.

முன் னெதிர்ப்பட்டேன்.— கருத்தநிறமும் கருநிற முள்ள வஸ்திரமும் அஸ்தத்தில் அமுதுள்ளவாய் என்பக்கத்தில் வரவும், பசிநோய் தாங்காமல் அப் பெண்ணை, யான் அன்னநடையாளே அமுதைத் தருவாயென்று யாசித்தேன், உதராக்கினியினால் யாவருக்கும் இழிவுவருமென்பதை தெரிந்தேன், சிந் தித்தது . வரத்தக்க தவமியற்றுதவர்கள் இச்சித்த வஸ்துபோல, அப்பெண்ணனவள் அமுதை கொடுத்

௬௪. இதுவுமது.

திலள்.— தோப்புகடோறுஞ் சுத்தாநின்ற அவள் பின்னேதொடர்ந்து வாடுகின்ற என்பசியின் வருத் தத்தைச்சொல்ல கரியவள்சொல்லுவாள், நான் நீசப் பெண், உமக்கு என தமுதமாகுமென்றால் எங்களூ ரில் என்றந்தையின் முன்வந்து கலியாணஞ்செய்து என்னுடன் சேர்வையாயின், இச் சமயத்திற் கொடுப் பேன்என்று சொல்லவும் அதற்குச் சம்மதித்தேன்,

௬௫. இதுவுமது.

ஆசையோடும் அமுதைதகொடுத்தாள்.— கொடுத்த பாதியமுதையும் புசித்து, நாவற்பழ விரசமுங்குடி த்து, தளர்ந்த பசித்துன்பநீங்கி இருக்கவும், புறத் திற்சஞ்சரிக்கின்ற நற்பிராணியென்று என்னை கைகளி னாற் பிடித்து, சூட்சுமசரீரத்தை மிகவும் பயத்தைச் செய்கின்ற நரகத்திற் கொண்டுபோய் வருத்துவது போல மனம்வருந்தத் தன்றந்தைமுன் கொண்டு

௬௬. இதுவுமது.

போயினாள்.— எனக்கிஷ்டமுள்ள விப்புருடனை என் கொழுனனாக கொடுப்பாயென்றப்பெண்கேட்க, பிதா வுஞ் சம்மதித்து, குணப்பட விரண்டுபேர்களையும், பசாசபந்தனமுள்ள கானகத்தினின்று நீங்கி விழிக் குத்தோற்றுகின்ற எமபடனைப்போல, கரிய நீசனு னவ னழைத்துக்கொண்டுபோய் புசிக்கின்ற மாமிச வாசனைகள் பரிமளிக்கின்ற தனதூரிலடைந்து, ஒரு

௬௭. இதுவுமது.

மையான கலியாணம்செய்ய நினைத்து,— குரங்கும், குதிரையும், கோழியும், காக்கையும், பன்றியும் என்று சொல்லப்பட்ட மாமிசவகைகளை அரிந்தெடு க்கவும், மாமிசங்கள் நரம்பில் தோரணங்களாக காய வும், பக்ஷிகளுராய்ந்தலைக்கவும், நடக்கின்ற குழந்தை களுடைய கரத்திலிருக்கும் மாமிசங்களில்இழிவுள்ள வீக்கள் சந்திக்கவும், இரத்தமும், அஸ்தியும், அள வற்றிருக்கின்றபறைச்சேரியில்வந்து, வாழைகளையே

காலாக நட்டிருக்கின்ற பந்தலில் சந்தோஷத்தினால்
புதுமையான கல்யாணஞ்செய்யத் தொடங்கினார்
கஅ. மனோராச்சியஞ்செய்த சரிதையையுரைத்தல். கள்.— இழிவுள்ளமாமிசநெருங்கிய சிறியவிழிகளாற்
பார்த்து மருமகன் நல்லவனென்று, யமனிலுங்கறு
த்த கூனையுடையகிழமாமியானவள் களித்தாள், சண்
டாளரனைவருஞ்சேர்ந்து சத்திக்கின்ற வாத்தியங்க
ளடித்தார்கள், கள்ளையும் மாமிசங்களையும் பாகஞ்
செய்தார்கள், அப்பெண்ணை அழிவுசெய்கின்ற பாவ
மானது நரகத்தில் வருத்துகின்ற யாதனாசரீரத்தைக்
கொடுப்பதுபோல, அந்தநீசன் கன்னிகா தானஞ்
கக. இதுவுமது. செய்தான்.— கொடிய பாவங்களானவை வடிவு
கொண்டதுபோல, சண்டாளர்களுடைய விவாகமா
னது எழுதினத்தில் நிறைவேறவும், அந்த நீசப்
பெண்ணுடனிருந் தெட்டுமாதங் கழித்தேன், முலை
போன்ற தனங்களுடன் புஷ்பவதியானவள் என்னு
டன்புணர்ந்து சுகிக்குங்காலத்தில், கொடுமையான
வோராபத்து கொடுக்கின்ற துன்பத்தைப்போல,
ஒரு குழந்தையைப்பெற, அக்குழவியும் தன்னுருவு
கெட வெந்தவிறகைப்போலிருக்கின்ற கரிநிறத்தோ
உ0. இதுவுமது. டும் மூடர்களுடைய மனதைப்போல வளர்ந்தது.—
பின்பு மூன்றுவருஷத்தில், அறியாமையைக் கொ
டுக்கின்ற சநநத்தைப்போல, ஒரு புத்திரனையீன்றாள்.
அவள் திரும்பவும் துராசையிலுண்டாகிய அனர்த்
தத்தைப்போல ஒரு குழந்தையையும் பெற்றாள், இம்
மனைவி புத்திரர்களோடும் அநேககாலங் கூடியிருந்
தேன், சம்சாரத்தினது துன்பங்களாலும், அவர்கள்
படும் வருத்தத்தினாலும், நான் வருத்தப்படுகின்ற
உக. இதுவுமது. துன்பத்தினாலும், எனது சரீரம் மூப்படைந்தது.—
வருந்துகின்ற வயோதிகத்தினாலிளைக்கின்ற காலத்
தில், அவ்விந்தமலையின் அடிவாரத்தில் பசியமேகம்
வருஷியாமல் பூமியிற் சலமில்லாமற்காய்ந்து உதராக்
கினியினாலுயிர்களனைத்துந்துடிக்க, கிளைகளையுடைய
விருக்ஷங்களுடன் படர்கின்றகொடிகளும்புல்லுகளும்
எரிந்து, எவ்விடத்தும் வெய்யலினால் புழுதியாகும்
படி வரவும், எமது புதியவுறவினர்கள் வெகுபேர்
யிறந்தார்கள், பலர் பலதேயங்களிலுஞ் சிதறிப்போ
உஉ. இதுவுமது. னார்கள்.— புத்திரர்களி லிரண்டுபேர் புசங்களிலும்
மற்றொருவனை சிரசின்மேலும் இருக்கும்படி சுமந்
துக்கொண்டு, எனதுபாரியாளுடன்போய், சரீரத்தை
யுஷ்ணகிரண மெரிக்க இறவாமல் அத்தேயத்தைக்
கடந்து ஒருபனைமரத்தடி னிழலில் புத்திரர்களையிழி
த்து, தீவினைவடிவமான நரகத்தினின்றுங்கரையேறி

௨௩. மனோராச்சியஞ்செய்த சரிதையையுரைத்தல்.

பழைய நல்வினையுடன் பொருந்திய சுகத்தைப்போல சற்றுநேரம் சிரமந்தீர்ந்திருந்தேன்.— மூப்பினாலும் வழிநடந்துவந்த துன்பத்தினாலும் இரண்டு பிள்ளைகளையுங் கட்டிக்கொள்ள, களைதானோ நித்திரைதானோ வென்னும்படி எனது தலைவியிறந்தாள், அதைப்பார்த்து மனமுருகி யானிருந்தேன், இளையபிள்ளையுறங்காமல் என்மடியிலேறி யிருந்துக்கொண்டு இரண்டுகண்களிலுஞ் சலம்பெருகவழுது உண்டாகின்ற பசிக்குச் சகிக்கேன், இரத்தமும் மாமிசமும் யான் புசிக்கவேண்டும் இப்போது கொடென்றுகேட்க,—

௨௪. இதுவுமது.

பிரியமுள்ள இளைய குழந்தையானவன் என்கண் முன்னே துடிக்க, நான்செய்வ தொன்றுமின்றி பிராணன் பிரிந்திருக்கின்ற சவத்தைப்போ லிருந்தேன், அவன் ஓயாபலழுத கண்ணீரைப்பார்த்து, மிகவுங் கரைந்து, மிதத்தில் இவன் பிழையானென்றெண்ணி யானும் பிராணனை விடும்பொருட்டு காடாக்கினியை வளர்த்து அவ்வக்கினியில் விழும்படி சமீபத்திருந்து எழும்பினேன், இச்சிங்காதனத்தி லிருந்து கீழேவிழுகின்ற சமயத்தில். †— என்னைத் தாங்கினவர்களாகிய நீங்களனைவரும் சயசயவென்று சொல்ல, அடிக்கப்பட்ட சகலவாத்தியங்களுஞ் சத்திப்பிக்க, இவ்விடமறிந்தேன், சண்டாளனல்லாதவனுய் லவணனென்னுமரசனானேன், குற்றம்பொருந்திய சித்தனதுவித்தையினால் மயங்கினேன், சீவாத்மாவுக்கு அவத்தைகளானவை பலவுரிமையாக வுண்டாயிருக்கின்றனவென்று தெரிந்தேனென்று சொல்லுஞ்சமயத்தில், சாம்பரிகன் மறைந்தனன்.—

௨௫. சீவவவத்தைகளையறிந்தேனெனல்.

சபையிலிருந்த வமைச்சர்கள் சித்தனென்ற இவனாரென்று விசாரிக்கவும் கண்ணிமைக்குமுன் னொளித்தான், அடைந்த சகமானது மனமேயென்று பிரிவாகத் தெரியக்காட்டும் பொருட்டு அனுப்பிய தேவமாயையானது இதுவாகும்,

௨௬. சித்த னீங்குதல்.

சொல்லப்பட்ட இச்செய்கைகளினால் தீரமுள்ள வரசனே, பிரமத்தின் தற்ப்ரகாசமே மனமாகிய பெரிய சகமாம் என்று சத்துக்கள் சொன்னார்கள் என்று வசிட்டமுனிசொன்னார்.—

## சித்தன்கதை

முற்றிற்று.

† இ-ம். மனோராச்சியத்திலுண்டான கற்பனைகளை வியப்புற் ருசிரியர் முதலியோர்க் கறிவித்ததாம்.

# உற்பத்திப்பிரகரணம்.

## அவதாரிகை.

முன்பு சிற்பிரதிபலமான மனதுக்கே யற்பநேரம் அநேககாலமான சம்சாரம் வந்ததன்றிச் சித்துக்கின்றென்றறிவித்து, இம்மனதைச்சித்திற் கரைத்துச் சின்மயமாய் ப்ரகாசிக்குநிமித்தம், ஞானவிண்மகன் முதலிய வெண்கதையின் சாரமுள்ள உற்பத்திப் பிரகரணத்தைச் சொல்லுகிறார்.

---

க. மனோவல்லமையாதெனில்.

மனத்தினது தொழிலே தொழிலாம், அம்மனதினால் விடுபட்டதே விடுபட்டதாம், உண்டான மனோகாஞ்சல்யத்தை விடுத்தவர்கள் மிகவு முத்தமமான நிஷ்டையுள்ளவர்கள், பரிசுத்தமாக மனங்கெட்டால் மந்தரகிரியினால் அலைவுபடாத க்ஷீரசமுத்திரம்போல அறிவுநிச்சலமாய் சநநமரண மென்கின்ற சம்சார மயக்க நாசமாமென்று, வசிட்டமுனி திரும்பவுஞ் சொல்லுவார்,—

உ. இதுவுமது.

பந்தித்திருக்கும் நாநாவித போகங்களினது சங்கற்ப மடைந்திருக்கின்ற மனவிருத்தி யென்னும் முளையால், மகாமாயா மயக்கமென்கின்ற விஷவிருக்ஷமானது விருத்தியடையும், வளராநின்ற மனோவியாதிக்கு சத்துச்க ணியமித்த அவுஷதமானது, வருத்தமில்லாமற் சுளுவாக அம்மனதினால் செய்யப்படும், இதைக்கேட்பாயாக.§—

௩. அம்மனோநாசவுபாய மியாதெனின்.

இச்சிக்கப்பட்ட சகலவஸ்துக்களையும் விரும்பாமல் நீக்கினவர்கள் மனதைச்செயித்தவர்கள், சுகமாகவும், லெகுவாகவும், தனக்குரியதாகவு மிருக்கின்ற துக்கமற்ற வயிராக்கிய ஞானம் பெறாதவர்கள், உலகத்தின்கணுள்ள மானிடகிருமிக் கிணையாவார்கள்; அறிஞர்களுபதேசத்தாலும், ஈஸ்வரன்கூறிய சுருதிமுடிவாகிய மகாவாக்கியார்த்தத்தாலும் ஆத்மானுசந்தானஞ் செய்து, நானென்னுஞ்சங்கல்பமிறந்தமனதினால்பகிர்முகமாய் வருந்தும் மனதை அந்தர்முகத்திற்சுகிக்கத் திருப்பலாம்.‡—

௪. அம்மனதிறக்கிற்பலனியாதெனின்

இரும்பால் இரும்பு திருந்துவது போல்சன்மார்க்கத்தின்முயற்சிக்கின்றசுத்தமனதினால் அசுத்தமனந் திருத்தப்படும், மீளாத நிராசையுருவாகியும், தனது முயற்சியினால் சாதிக்கத்தக்கதாகியும், மோக்ஷவிச்சை யுடையவர்களுக்கு லோசாகியுமிருக்கின்றவெவ்வியமனத்தினொழிவே பெரும்பாரநீங்கிய

---

§ இ ம். மனோசங்கற்பமே மாயை முதலியவைகளாகத் தோற்று மென்பதாம்.

‡ இ-ம். சுருதியுத்தி யனுபவமுள்ள மனதினா லவையின்றிய மனதைக் கெடுக்க வேண்டு மென்பதாம்.

௫. அப்பரமசுகம் எப்படி யுண்டா மெனின்.

பரகதியாம், வேறே ஒருகதியு நன்மையாகாது. ¶— ஒன்றைவிட்டொன்றில் தாவிக்கொண்டிருக்கின்ற மனதை சங்கற்பரகிதமென்னுங் கத்தியினாற்கெடுத்தால், எவ்விடத்தும் பரிபூரணமாய் சகலமுந் தன்மயமாய் விளங்குகின்றவஸ்து ப்ரசன்னமாம். இம்மார்க்கத்திலிருந்து ஞானத்தினால் விரும்பத்தக்க மனதைப் புசித்து, அதற்கு மேலானதாய் சம்சாரவிகற்பமில்லாத சகலத்தியாகமான வறிவினால் ஆத்மஞானத்தை யடைந்து, மனதை ஐக்கஞ்செல்கின்ற ஸ்வரூபஞானத்தை யறிந்துக்கொள்வாய். †-சிரவணாதியில்வருத்தப்பட்டு அப்பியாசித்துமனதைக்கெடுத்துசத்தசத்தென்றுரைக்கக்கூடாமல் சுயமாயிருந்த பிரமபதத்திலிருப்பாய். துன்பமற்ற மோக்ஷசம்பத்தை துன்பமின்றிநைரியத்தினா லடையவேண்டும், இப்படிமனோநாசமானால் மூன்றுகாலமுந் திரணமாம், இனிமையென்று சொல்லப்பட்ட விஷயங்களியாவும் தீமையாகத் தோற்றினால் மனது நாசமாம் ‡—இருதயாகாயத்தில் ப்ரகாசிக்கப்பட்டஞானநிஷ்டையாலுண்டாகும்பரமஞானமென்கின்ற உரித்தாகிய சக்கராயுதத்தினால்சந்தேகங் கெட மனதைக்கெடுப்பாய், கெடுத்தபின்பு மிகுந்த துன்பநீங்கும். அவனுனென்றும் இவனுனென்றும் பொருந்தப்பட்ட சகலமும், அதுவெனதாகவும் இது வெனதாகவும் வைத்திருக்கின்ற இவைகளே மனமாகும். இம்மனதை அபாவனமென்னும் கத்தியினால் கெடுப்பாய். §— கூட்டமான மேகங்க ளனைத்தும் சண்டமாருதத்தால் நீங்குவதைப்போல, வராநின்ற கற்பனாக்ஷயத்தினால் மனமானது சித்திற்சென்று நசிக்கும், மனதுநசித்தபின் மோதாநின்ற வூழிக்காற்றும் பிரளயசமுத்திரமும் பூமிமுழுதும் உருகும்படி யெரிகின்ற பன்னிரண்டு சூரியர்களும் ஏககாலத்தில் வந்தாலும் துன்பமுன்டோ*— மனதைக்கொண்டே மனதைக்கெடுக்கில், தானாகி உலகங்களனைத்திற்கும் முதன்மையான சார்வபூமனைப்போல ஆநந்தமானது பூரணமாகப்பெருகி, கற்பனையற்ற மோக்ஷ சாம்பிராச்சியத்துக்கே நெருங்கி ப்ரகாசிக்கின்ற பிரம

௬. எம்முயற்சியினாலும் மனதைக் கெடுக்கலாமெனல்

௭. அவ்விடய திருஷ்டி யாதினாற்கெடு மெனின்

௮. மனமிறந்த தற் கடை யாள மியாதெனின்.

௯. பரமசுகத்திற்கு விக்கினமியாதெனின்.

¶ இ-ம், மனோநாசமானவிடமே பரமசுகமென்பதாம்.
† இ-ம் மனோசங்கற்ப மிறந்தவிடத் தப்பரமசுக முண்டாமென்பதாம்.
‡ இ-ம் விடயதோட திருஷ்டியினா லம்மனதைக் கெடுக்கவேண்டுமென்பதாம்.
§ இ-ம். ஞானதிருஷ்டியினா லவ்விடயங் கெடுமென்பதாம்.
* — ம் அநந்தவிடர்களுண்டாயினு மவ்விடரில்லாதிருப்பதை மனமிறந்த குறி யென்பதாம்.

பதத்தைச் சேர்ந்து நிரதிசயாநந்தத்தைப் பெறுவாய். நாநாவிதமாக நினைத்து மிருந்த மித்தையென்னும் சம்பத்துள்ள மனதே ஆத்மாவுக்கு விரோதமாம். ¶— மனமென்னுஞ் சத்துருவானவன், நாநா விதமாக விடயானுபவங்களால் உன்னைக்கெடுக்காமல் தெளிவாதற்குரிய சந்தோஷமென்கின்ற வாழ்வையுடைய இராகத்தினால், குற்றமுள்ள தனிமையான மனதைக் கெடுப்பாய்; அறிஞர்களுக்கும் பிரியமாகியும் நின்மலமாகியும் மிகவுங்குளிர்ச்சியாகியு மிருக்கின்ற பூரணபாவமானது அகம்பாவத்தினால் பின்னப் படாது §—குறைவு நிறைவு மில்லாத பூரணபாவத்தினால் சநநமில்லாத பரமாநந்தத்தைக் கொடுக்கின்ற பிரமபதமானது, அழிவற்ற பதமாகும்; சஞ்சலத்தினால் கெடாத மனமரியதாம்; உஷ்ணமானது அக்கினியை நீங்காததுபோல தாழ்வைச்செய்கின்ற சஞ்சலமானது மனதைவிட்டு நீங்காது. ஞானத்தினுடைய சலனசத்தியே மனமாம், ‡—சலிக்கின்ற அம்மனமே சகமாகும், சலனமற்றால் மனதுநசிக்கும், இந்நிச்சயமே நிட்காமதபசும், ஆத்மஞான சாத்திரத்தின் அந்தரங்கமும், நிருமலமான மோக்ஷமும், தெளிந்த வஸ்துவுமாம், மனத்தினது நீங்காதசலனமே மாயையென்றும், தொடராநின்ற வசுத்தவாசனையென்றும் அச்சலனசத்தியி னுமங்களாம், சலிக்கின்ற மனதும் அச்சஞ்சலசத்தியேயாம்; அம்மனோசலன சத்தியை நீங்காத வாத்மஞான விசாரணையால்கெடுப்பாய்.†—

௧0. அச்சங்கற்ப்ப மியாதி னாற் கெடுமெனின்.

௧௧. நிராசையான சமதிருஷ்டி யெண்தக் கொடுக்குமெனின்.

௧௨. சஞ்சலமான மனதைக் கெடுக்குமுபாயமியாதெனின்.

அற்பமாகின்ற இஷ்டவஸ்து தியாகத்தினால் பரமவின்ப முண்டாகும். உள்ளதாகிய பிரமத்துக்கும், இல்லாததாகிய சகத்துக்கும், நடுவிலிருந்து சித்தினும் சடத்தினும் பொருந்தி, மத்தியிற் சலித்துக் கொண்டிருப்பதே மனமாகும், இம் மனமானது அறிவின் முயற்சியால்ஞானஸ்வரூபமாம்,அறியாமையின் முயற்சியினால் சகத்தாம்*— முயற்சியுள்ளதாய் மனமானது ஒன்றிலமுழுந்தில் அப்பொருளேயாம், ஆதலால் விடயத்திற் பாய்கின்ற மனதைஆத்மஞான

௧௩. மனோவுருவமியாதெனின்.

௧௪. அம்மனதையாதினாலடக்கலாமெனின்.

¶ இ-ம். சங்கற்பவிகற்பாத்மகமான மனதே யாத்மசுகத்திற்கு விக்கினமென்பதாம்.

§ இ-ம். நிராசையா லவ்விகற்பங்களைக் கெடுக்கவேண்டு மென்பதாம்.

‡ இ-ம். பரமபதத்தைக் கொடுப்பதற்கு நிராசையே காரணமாம்.

† இ-ம். ஆத்மவிசாரத்தால் மனோசஞ்சலத்தைக் கெடுக்கவேண்டுமென்பதாம்.

* இ-ம். மனது செடசித்து வடிவமாமென்பதாம்.

மனதினல் நீக்கி, மேற்சென்று சோர்வில்லாமல் செல்வமென்னு மழிவற்ற பரமபதத்தை சீக்கிரத்திற் பெறுவாய்; சலனமுள்ளமனதை நிச்சலமானமனதினல், சார்வபூமனைவன் அரசர்களைத் தமதாக்கினையில்நிறுத்துகின்றநீதியைப்போல, நீக்கித் தன்னிலையினிறுத்தற்கு வல்லமையான தன்மையை யுடையதாம்.§—சமுத்திரமென்னுஞ் சமுத்திரத்தில் ஆசையென்கின்ற முதலையானது பிடித்திழுக்க, மரணமென்னுஞ் சுழலில் அகப்பட்டுச் சுழல்கின்றேமென் றறிபவர்களுக்கு மனமென்னுங் கப்பலானது எட்டும், வீரமுற்று மலினமனதை நிர்மலமனதினல் கெடுத்து, சமுத்திரத்தில் நையாமல் பரிசுத்தமனதை யுறவுசெய்து ஆத்மாவை நீ ஆனந்தவாழ்வி லடைவிப்பாய் ஆத்மாவுக்கு வேறொருவரால் வாழ்வுண்டாமோ.‡— எவ்வெவ்வாதனைகள் மனதின்கணுதித்தனவோ அவ்வாதனைக ளியாவையும், அந்தந்தவிடத்தில் கெடுக்கில் அந்நாசமே மாயாநாசமாம். முதன்மையான போகமென்றும் பேதமென்றும்சொல்லிய இவ்விரண்டு வாதனைகளையு நீக்கி, வந்திருக்கின்ற பாவாபாவமென்னுமிரண்டையுமாற்றி, நிருவிகற்பமாய் நீ சுகிப்பாய்.†—

௧௫. மனதினு லாத்மாவுக்குச்சகாயமுண்டோ வெனின்.

௧௬. மாயாமயமான மனதைக் கெடுக்குமார்க்க மியாதெனின்.

திரிஸ்யத்திலுள்ள இச்சைநீங்கினல், அவ்விச்சாத்தியாகமே அஞ்ஞானமும் மனதும் நசித்ததாம், விடயத்திற் பழகுகின்ற இச்சையே துன்பமாகும், நிராசையே சொல்லுதற்கரிய நிருவாணசுகமாம்,பிரிவற்ற தனதெத்தனத்தால் அதுண்டாகும் அறிவில்லாதவர்கள் உண்டென்பதாயும், நிறைந்த மித்தையாயும், பெயர்மாத்திரமாயு மிருக்கின்ற அறியாமையானது, சகலமுஞ்சைதன்யமென்றுணரில் மித்தையாம்.¶—

௧௭. விடயமான மாயாசங்கற்பமியாதினு னீங்குமெனின்.

இப்படியென்று வசிட்டர்சொல்லவும், இராமரானவர், அறியாமையினது செல்வத்திலுண்டாகிநெருங்கியிருக்கின்ற இவ்வறியாமையானது, இவ்விடத்தில் அற்பமுமில்லாமல் எப்படிபோய்விடும், நீ ரனுக்கிரகிக்க வேண்டுமென்று கேட்க; வலிமையானதவத்தை

௧௮. அஞ்ஞான திருஷ்டி நீங்குமுபாய மியாதெனின்.

§ இ-ம். சித்துருவமான மனதினுற் செடவுருவமான மனதைக் கெடுக்கவேண்டு மென்பதாம்.

‡ இ-ம். சித்துருவமான மனதைத்தவிர, ஆத்மாவுக்கு வேறுசகாய மின்றென்பதாம்.

† இ-ம். சங்கற்ப முதித்தவிடத் தொடுக்குவதே யதைக் கெடுக்குமார்க்க மென்பதாம்.

¶ இ-ம். நிராசைவடிவமான ஞானதிருஷ்டியா லச்சங்கற்ப நீங்குமென்பதாம்.

யுடைய வசிட்டர் சொல்லுவார். வலியதுன்பமென்னும் முட்கணிறைந்த கொடிதாகிய சநநமென்கின்ற மலைச்சாரிலில், நிலைபெற்ற வாத்மாவை பொருந்தத் தள்ளி, அவ்வாத்மாவுடன் கூடத்தானும் விழுகின்ற மாயையானது, உள்ளதென்று பார்க்கின் தத்துவ

கக. அஞ்ஞான திருஷ்டி நீங்குமுபாய மியாதெனின்.

திருஷ்டியில்லையாம்.— சநநமென்கின்ற அவித்தையின்முடிவாய் எவ்விடத்தும் நிறைந்திருக்கின்ற பரவஸ்துவானது உதயமாயின், நசிக்கின்றமாயைக்கு ஆசையே ஸ்வரூபமாம், இம்மாயாநாசமே மோக்ஷமாம். சிறப்பில்லாத சங்கற்பமானது நசிக்கில் இவ்வவித்தையானதுநாசமாம்; ஞானமென்கின்ற சூரியன் உதயமானால், இதயாகாயத்தில் வாசனையாகிய அஞ்ஞானாந்தகாரமானது நீங்குமென்று சொல்லுவாம்.*-

உ0. திரிஸ்யத்தை கெடுக்குந் திருஷ்டியாதெனின்.

காணப்பட்ட வஸ்துக்களியாவும் மாயையென்றே சொல்லினை, ஞானமென்கின்ற ஆத்மபாவனையினால் விக்கினமின்றி அந்தமாயையானது கெடுமென்று சொன்னாய், ஆத்மாவென்பது எதுவென் றிராமன் கேட்க, எண்ணத்தக்கதவகையுடையவசிட்டர்சொல்லுவார். திரிஸ்யத்தி னிடத்தில்போ யடையாததாகியும், எவ்விடத்திலும் பரிபூரணமாகியும், உள்ளதென்று சொல்லப்பட்டதாகியும், பெயரில்லாததாகியுமிருக்கின்றமேலானஞானமே, பிரமஞானமேயாம்.‡-

உக ஞானமெப்படிப்பட்ட தெனின்.

இவையென்று சுட்டப்பட்ட சகலமும் ஞானகாரமாகியும் நித்தியமாகியு மிருக்கின்றது பிரமமேயாம், எப்பொழுதும் குற்றமுள்ள மனமாகிய கற்பனையின்றும், மரணமும் சநநமு மென்று சொல்லப்பட்ட அவைகளனைத்தும்மூன்றுலோகங்களிலுமில்லை, அறுவகை விகாரமுமில்லை, இரண்டில்லாத பூரணமாகிய அடையாளம் பெற்றிருக்கின்ற சின்மாத்திரமே ப்ரத்யக்ஷமாயிருக்கும்.†—

உஉ. ஆயின்ஞானத்திற்கு வேறாக வொன்று மின்றோ வெனின்

தனிமையாகியும், தனிப்ரகாசமாகியும், அழிவற்றதாகியும், பரிசுத்தமாகியும், வியாபகமாகியும், பிரிவில்லாத ஞானமாத்திரமாகியும், துன்பஞ் சற்றுமில்லாததாகியும், உபசாந்தமாகியும், இனிமையான வஸ்துக்களனைத்துக்கும் கலந்து விகாரமற்றதாகியுமிருக்கின்றஞானத்மாவில், தாவுதற்கரிய தனது சங்கற்பத்தையேயிச்சித்து, தனதுவசத்தில் ஓரறிவு

---

* இ-ம். ஞானப்ரகாசவுதயத்தி லஞ்ஞானாந்தகார நீங்குமென்பதாம்.

‡ இ-ம். சமதிருஷ்டியான ஞானமே திரிஸ்யத்தைக்கெடுப்பதாம்.

† இ-ம். சுகாதிசவிசாதிசுகதபேதரகிதமான பரிபூரணமே ஞானமென்பதாம்.

௨௩. ஆயினப் போதம் வெளிப்படவில்லையோ வெனின்.

உண்டாயிற்று. ¶— சொல்லிய ஞானமானது அளவற்ற சங்கற்பத்தைச்செய்து அதிற்செல்லும் அவ்வறிவானது இந்தப்பிரமத்தின் மனமேயாம்; இப்பிரமத்துக்கு அளவற்ற சத்திகளுண்டா யிருக்கும், இரண்டில்லாமல் எவ்விடத்திலுஞ் சமமாகச் செய்கின்ற வேகமான விம்மனத்தில், சலத்திலுண்டான அலைகளைப்போல, நாநாவிதமாகிய வல்லபசத்தி யுண்டாகும்.

௨௪. ஆயினப் போதம் பந்தமாகாதோ வெனின்.

‡— உள்ளே பொருந்தப்பட்ட சங்கற்பத்தினாலுண்டாகிய மனோரூபமானது, அச்சங்கற்பத்தினால் மோதாநின்ற வாயுவினால் உண்டாகிய வக்கினிச்சுவாலையானது வாயுவினாலணைவதுபோல நசிக்கும் யான் மத்தியமாயிருக்கின்ற பிரமஸ்வரூபம் அல்லவென்று பார்ப்பதே மனத்திலுள்ள பந்தமாம்; எள்ளளவாகிலும் பிரிவில்லாத பிரமஸ்வரூபமே நாமென்கின்ற திடபாவனையே முத்தியாம்.

௨௫. ஆயின்மாயா காரியமின்றேவெனின்.

*— யான் அஞ்ஞானமும், துன்பமும் உறுப்புகணிறைந்த வுருவங்களுமாகிய இவைகளை உள்ளவனென்று பரவியிருக்கின்ற அவைகளுக்கிசைந்த நாநாவிதமாகிய நடைகளினால் ஆசையும் கட்டுப்படுதலும் உண்டாகும்; சடமாகிய விவைகளில் யாதொன்று நானல்லேன், ஊன்களும், நரம்புகளும், அஸ்திகளும்,புண்ணீரும், நானல்லேன், தேகத்தினதீதமாகிய பிரமஸ்வரூபமே யானென்கின்ற நிச்சயமுடையவர்கள் மாயையை யறுத்து தன்னை யறிந்தவர்கள்.

௨௬. அவ்வனுபவ மியாதினாலுண்டாமெனின்.

†— தானல்லாததாகிய சரீர முதலிய வஸ்துக்களில் நானென்கின்ற பாவனையாகிய ஈனமாகிய மாயையை, அறிவில்லாதவர்கள் உண்டென்று நியமிக்க உண்மையாம்; அறிவையுடையவர்களுக்கு அம்மாயை யில்லாததாம் மனதெண்ணினதை அரசர்களுக்கு மந்திரியைப்போல, சீக்கிரத்தில் பஞ்சேந்திரியங்கள் செய்யும், ஆகின்ற நல்லறிவினாலும் நன்முயற்சியினாலும், போகத்தின் அவாவென்னும்

---

¶ இ-ம். சின்மாத்திரமான பிரமத்தினின்றுந் தனது ஸ்மரணமான வோர் போத முதித்ததுண்டென்பதாம்.

‡ இ-ம். போதமானது மனோரூபமாய்ச் சகலசத்திகளோடுங்கூடிச் சகலத்தையும் பேதம்போலத் தோற்றிவித்ததாம்.

* இ-ம். போதமான துதித்தவிடத்தொடுங்கிச் சகலமுந் தன்மயமாய்ச் சிந்திக்கிற் பந்தமாகாதென்பதாம்.

† இ-ம் தானே பிரமமென்னு மனுபவத்தினாற் பாஞ்சபூதபௌதிக மனைத்தும் வேறின்றென்பதாம்

**உஎ. போகவிச்சையா தினனீங்குமெனின்.**

வாசனையை வேருடன்கெடுப்பாய். ¶— என்னுடைய புத்திரரென்றும், என்னுடைய திரவியமென்றும், யானென்றும், இவனென்றும், அவனென்றும், இதுவென்றும், அதுவென்றுஞ் சொல்லப்பட்ட வாசனையானது, மின்னலைப்போல அழிகின்ற நிலைமையுள்ள இந்திர சாலத்தைப்போல வளரும்; நன்மையுள்ள ஞாதாவாகி அஞ்ஞானமான குணத்தைப் போக்கி அழிவுள்ள திரிஸ்யத்தி லிருக்கும் நினைப்பைவிடுவாய் உன்னுடைய ஸ்வரூபமில்லாத புத்திராதியான அம்மாயாசம்பந்தங்களை நீயென்றெண்ணி அஞ்ஞானிகளைப்போல வருத்தப்படுவதென்ன.‡- மூடமாகியும்

**உஅ. ஆயினித்தேக நாமல்லவோவெனின்**

சடமாகியுமிருக்கின்ற தேகமென்பதார்? அதனிமித்தஞ் சுகதுக்கங்களில் அமிழ்ந்தி ஓர் பிரயோசனமுமில்லாமல் துன்பப்படுகின்ற நீயென்பதார்? ஆச்சரியமாச்சரியம்!!! இந்தவொரு விசித்திரமானது இருந்தப்ரகாரம்பாராய், ஒன்றாகியும் சத்தியமாகியும் ப்ரகாசித்த பிரமஸ்வரூபமானது எவ்விடத்திலுநிறைந்திருக்கவும், தோற்றாமல் துன்பமாகியும் மித்தையாகியும் விளங்குகின்ற மாயையானது உண்டாகாம லிருக்கவும் தோற்றும்.*— நல்ல படிகமணிகள் பற்றிப்

**உ௯. ஆயினிருக்கவேண்டிய கிரமமியாதெனின்.**

பாய்ந்திருக்கின்ற பஞ்சவன்னங்களை பற்றாமல் பற்றியிருக்குந்தன்மையைப்போல, அளவில்லாத செய்கைகளிலிருந்தும் பின்பதில் விருப்பமின்றி அத்தொழிலை நடத்தென்று அரியதவமுள்ள வசிட்டர் மிகவுஞ் சொல்லவும், பரத்துவாசரே? கேட்பாய்; நிறைந்த சாந்தகுணத்தையுடைய இராமன்கேட்டு குற்றமற்ற இதயதாமரை விகசிதமாய் வசிட்டரிஷியைப்பார்த்து இதைச்சொன்னார்.†—ஈதோரதிசயம்! இருந்தப்ரகாரமென்ன, தாமரைத்தண்டினாலினால் மலைக்கூட்டங்

**௩0. இல்லாதமாயைவருத்துவதும். அதனால் லவணன் றன்புற்றது மியாதென்கின்ற சங்கைகளிரண்டினுக்கு முத்தரங்கூறல்.**

கள் கட்டுப்பட்டு நெரிபடுவதுபோல, முழுது மித்தையாகிய மாயையினால் பிரபஞ்சமானது நாநாவிதமாகிய துன்பத்தனுபவிப்பதாம். துரும்பானது பருத்த வயிரத்திலும் வலிமையையடைவதுபோல, சகசிருட்டியானது மித்தையாய் விளங்கும், அம்மாயை

¶ இ-ம். விடயபோக விச்சாத்தியாகத்தாற் பிரமானுபவமுண்டாமென்பதாம்.

‡ இ-ம். ஈடணாத்ரயங்களை யானெனதென்பது நீங்கி னிராசையுண்டாமென்பதாம்.

* இ-ம். ஆத்மஸ்வரூபமே யாமன்றி யித்தேக மன்றென்பதாம்.

† இ-ம். ப்ரத்தியேகாத்மஸ்வரூபமா யொன்றிலும் பற்றற்று சொச்சமாயிருக்கவேண்டுமென்பதாம்.

யினுல் திடத்தைப்பொருந்தும் என்றுசொல்லி திரும்பவும் இராமர் சொல்லுவார்.— இதுவும் இன்னமொரு சந்தேகமும் என்மனத்தி லுண்டாயிருக்கின்றது, முன்சொன்னலவணவரசன் பெரியதுன்பமடைந்தது என்னகாரணமென் றிராமன்கேட்க, அக்கேள்விக்கு வசிஷ்டமா முனியானவர் சொல்லுவார். குற்றமற்ற மனதினுல் செய்ததினுல் அத்தொழிலின் ப்ரயோசனத்தை தேகமனுபவிக்கவில்லை; சொல்லப்பட்ட அவ்வரசன் ஒருதினத்தில் சிங்காரவனத்தில் தனியனுயிருந்துகொண்டு,— மனதிற் சிந்திப்பான் நமது பாட்டனுகிய வரிச்சந்திரன் தேகத்தோடுஞ் செய்த பெருமையான விராசசூயயாகத்தை நாமனதினுற் செய்வோமென்று நினைத்தமனதினுல், யாகத்துக்குரித்தாகிய உழுகின்ற கலப்பைகளையும் சகல திரவியங்களையும் சங்கற்பித்து, வேதசாஸ்திரமார்க்கமாக யாகசாலையிற்போய் முனிகளை நியமித்து பூசித்து வாருங்களென்று தேவர்களை வேதமந்திரங்களினுல் வரச்செய்து, மிகவு மக்கினியைவளர்த்தி,—

(ரு௧. இல்லாதமாயை வருத்துவதும் அதனுல் லவணன் றுன்புற்றது மியாதென் றின்றசங்கைகளிரண் டினுக் குமுத்தரங்கூறல்.)

(ரு௨. இதுவுமது)

தேவர்களுக்கும், தபசிகளுக்கும், அந்தணர்களுக்கும், ஆராதனைகளை ஒர் வருஷம் தொடர்ச்சியாக நடப்பித்து, தனது திரவியங்களையெல்லாம் தொலைய நீதியாகக்கொடுத்து, திடமுள்ள மனதினுல்யாகத்தை நிறைவேற்றினபின்பு, பகற்பொழுது நீங்கிற்று, அரசனகமுகமும்விட்டு விழித்தான், இக்காரணத்தினுல ஒன்றி லொதுங்கிய மனதே சுகதுக்கங்கள் அடையும்படி யனுபவிப்பதென்றறிவாய். ¶— சாம்பரிகனுடைய குணத்தை யான் சொல்லக்கேட்பாய், தெளிந்த லவணவரசனது சபையின்முன் னடைந்து இந்த்ரசாலவித்தையினுல் மயக்கத்தைச் செய்திருக்கின்ற சாம்பரிகனனவன், மறைந்தான், அவ்விடத்தில் இவ்வளவுகடையையும் பார்த்து கூடவிருந்த நம்மை இதென்ன காரணமென்று, அவ்வல்லமையுடையவரசனும் மந்திரிமுதலிய சகலருங்கேட்க, உள்ளத்திற் றிரிகாலத்தையுந் தெரிந்துகொண்டு,—இவ்விடத்துத் துன்பம்வந்த காரணத்தைச்சொல்ல, இராமாகேள்? இராசசூய யாகத்தைச்செய்தயாவரும், பன்னிரண்டு வருஷம்வலியதுன்பத்தினுல் தீயவருத்தமடைதலால், லவணனும் தனக்குரித்தான மனதினுல் இராசசூயங் கூட்டிச் செய்தபடிக்கு, இந்திரன் துன்பங்கொடுக்கு நிமித்தம் விண்ணுலகத்தினின்று ஒருத்தனையனுப்ப,

(ரு௩. இதுவுமது)

(ரு௪. சித்தன் றுன்பங்கொடுத்ததென் னெனின்.)

(ரு௫. இதுவுமது,)

¶ இ-ம். சுகதுக்கமனதுக்கேயன்றித் தேகத்துக்கின்றென்பதை யறிவித்ததாம்.

அத்தேவதூதன், சித்தனுய்வந்து யாகஞ்செய்த லவணவரசனுக்கு அரியதுன்பத்தைக் கொடுத்து திரும்பிப்போயினன், †— ஸ்ரீ ராமா? இன்னமொன்று சொல்ல நீ கேட்பாய் அஞ்ஞானபூமி ஏழுமார்க்க மாம், முடிவாகிய ஞானபூமியானது ஏழுமார்க்க மாம்; சொல்லிய இவ்விரண்டு மார்க்கங்களும் தம்மிற் ரும் பற்றுளவாகும், அவற்றி லொன்றுக்கொன்று சம்பந்தமாம், ஒன்ருே டொன்று வியாபித்து பொருந்துவனவாகிய மார்க்கங்களானவை அளவில் லனவாம்; ப்ரத்தியட்சமாகிய ஸ்வரூபநிச்சயத்தைப் பெறுவதே மோக்ஷமாம்; அச்சொரூபத்தை விட்டு நழுவுதல் தேகாதியை நானென்கின்றபந்தமாம். ¶—

ஙசு. முதற்சங்கைக்குத்தரந் தோன்றஞானஞ்ஞான பூமிகளைத் தொகுத்துக்கூறல்.

இப்பூமிகளைச் சுருக்கமாகச்சொல்லினம், அவ்வஸ்துவை யுணர்ந்தவர்களுக்கும் யுணராதவர்களுக்கும் நல்ல வடையாளங்களாவன, அநாதியான சத்தாமாத்திரமாயுள்ள ஞானஸ்வரூபத்திலிருந்து சலனமற்றவர்களே விடுதற்கரிய காமவெகுளிமயக்கமென்னு மூக்குற்றங்களையும் செயித்தவர்களாம், உண்மைஞான மில்லாதவர்கள் காமமுதலியவைகளைச் செயிக்காதவர்களாம், தேகேந்திரியங்களில் செல்கின்ற ஞானமே பார்த்தற்கரிய ஸ்வரூபத்தினின்று நீங்குதலாம்.—

ஙஎ. ஆத்மாவாயிருத்தலையு மனுத்மாவாதலையு மறிவித்தல்.

ஆத்ம ஸ்வரூபத்தைவிட்டு நீங்குமறிவே மோகமென்று சொல்லப்படும், வேறே மோகமுண்டென்று சொல்லப்படும் வேறே மோகமுண்டென்று சொல்ல முன்னும்பின்னு மில்லையாம்; ஒரு விடயவஸ்துவின் நினைவைவிட்டு மேலொரு புறத்திலிருக்கின்ற விடயவஸ்துவை நினைக்குமிடத்தில், அவ்விரண்டுவஸ்துவின் மத்தியிலும் சங்கற்பரகிதமாயிருக்கின்ற இந்தஞானமேஸ்வரூபத்தின்றன்மையாம். இந்தஞானம் கற்பனுரகிதமாய், சலனமில்லாத பாடாணத்துக் கொப்பாகிவருகின்ற நனவிலுள்ள விருத்திஞானமும் சுழுத்தி யவத்தையிலுள்ள அஞ்ஞானமும் தீர்ந்தஸ்வரூபமாய்,§—தேகம் நானென்கின்ற பிரிவும் சீவேஸ்வரபேத ஞானமுநசித்து, சுகபோதமாய் சலியாத மனோநிச்சயமே ஆத்மஞான ஸ்வரூபமாகும், முன்னுரைத்த அஞ்ஞானமாகிய பூமிகளைக்கேட்பாய், இழிவாகிய வித்துசாக்கிரமும், மேற்சாக்கிரமும், மகாசாக்கிரமும், அதிற் சாக்கிரசொற்பனமும், சொற்

ஙஅ. இதுவுமது.

ஙகூ. பிரமநிச்சயங்கூறி அஞ்ஞானபூமியினமைகளைப்பகுத்துரைத்தல்.

† இ-ம். லவணன் றன்பமடையு நிமித்தம் வந்த காரண முரைத்ததாம்.

¶ இ-ம். ஆத்மாவிபகாரம் ஞானபூமியென்றும், அநாத்மவிபகார மஞ்ஞானபூமியென்று மறிவிக்கப்பட்டதாம்.

§ இ-ம். ஆத்மாநாத்மா விலக்கண மறிவித்ததாம்.

பனமும் இச்சொற்பனசாக்கிரமும், சுழுத்தியுமென்று சொல்லப்படும்.—

௪0. அதன்முதற் பூமியினிலக் கணம் அறிவித்தல்.

இத்தன்மையையுடைய அஞ்ஞான பூமிகளேழும் ஒன்றேடொன்றுகலந்து இப்பூமிகளநேக நாமங்களையடையும், ஆத்மஞானத்திலிருந்து ஒருஞானமானது, நாமமில்லாததாயும், களங்கமில்லாததாகியும், இனியுண்டாகிவந்து விருத்தியடையாநின்ற மனது சீவன் முதலாகவருகின்ற நாமக்கிரிகைகளுக்கு ஆதாரமாகியும் பீசரூபமாகியும் நிற்கின்றவதனல், முதற்பூமியானதுவிந்துசாக்கிரமாம்.¶—

௪௧. இரண்டாம் பூமிமூன்றும் பூமியின் இலக்கணங் கூறல்.

இவ்விந்து சாக்கிரமானது பிரமஞானத்துக்கு முதன்மையான அவத்தையாம், சீவனுண்டான பின்பு இவனுனென்றும் இதென்னுடையதென்றும் முன்னில்லாததான இப்பொழுதற்பமாக உண்டாயிருக்கின்ற நிச்சயமே, சாக்கிரமாம். இதையன்றி இவனுனென்றும் அவனுனென்றும் இதுவென்னதென்றும் அதுவென்னதென்றும் சிந்திக்கப்பட்ட இதுமுதலாகிய சந்நாந்தரங்களில் தொந்தமாகபெருக்கின்ற இந்நிச்சயமானது மகாசாக்கிரமாம்‡— 

௪௨. நான்காம் பூமியினிலக்கணங் கூறல்.

முன்வாதனையினல்அறிந்ததானுலும், அறியாததானுலும், தோற்றினதிலழுந்த தானந்தமயமாகி சாக்கிரத்தில் மனோராச்சியஞ்செய்வது சாக்கிர சொற்பனமாகும், அலைகள் வீசாநின்ற கானலிற்சலமும் கிளிஞ்சிலில் ரசிதமும் இரண்டுசந்திரனுமாகிய இவைகள் முதலாக நாநாவிதங்களாக நீங்கின வேற்றுமைகளை சாக்கிரத்திலனுபவிக்கின்ற தன்மையால் சொற்பனம் நாநா வகைப்படும்.§—

௪௩. ஐந்தாம் பூமி யாறும் பூமிகளின் இலக்கணங் கூறல்.

க்ஷணகாலத்தில் அளவில்லாத தொழில்களை பார்த்துணர்ந்தோமென்னும் சொற்பனம் நீங்கி முன்னடைந்த சங்கதிகளை சிந்திப்பது சொற்பனமாம். முன்பார்த்தபொருளை அநேகநாள் கழிந்து பின்பு பார்க்கின்ற அவ்வஸ்துக்களை மறந்தவனுய்வெகுநேரம் அறிவுவரப்பார்க்கின்ற சொற்பனமானது சாக்கிரத்தைப்போல சாக்கிரத்திற்கேதோற்றுகின்ற இத்தொழிலே சொற்பனசாக்கிரமாம்.

௪௪. ஏழாம் பூமியினிலக் கணங் கூறல்.

ஆறுவிதமாகிய வவத்தைகளைநீக்கிய சீவனுனவன் பெற்றிருக்கின்ற அவத்தைகளின் றன்மையானது

---

¶ இ-ம். பிரமத்தி ஞமைரூபாகிதமா யுண்டான வறிவே சகலசிருட்டிக்கும்ஆதாரமாகையா லதுவிந்து நனவென நாமமிடப்பட்டதாம்.

‡ இ-ம். பொதுவாயுண்டான வறிவுக்கு முன்னில்லாதபேதஞ் சூட்சமமாயுண்டானவிடமேசாக்கிரமென்றும், அவ்வாசனை வளர்ந்தவிடமே மகாசாக்கிரமென்றுங் கூறப்பட்டது.

§ இ-ம். சாக்கிரத்தின் முன்பார்த்ததையும் பாராததையுங்கற்பித்து பயனின்றி வீணுக மனோராச்சியஞ்செய்வதே- சாக்கிரசொற்பன மென்பதாம்.

சடத்துவமாகி மேலுண்டாகின்ற துக்கமிகுந்த அறிவுள்ளதான விதுவே சுழுத்தியாம். உலகங்கள் இவ்வவத்தைகளி லுண்டான மாயாந்தகாரத்தில் உண்டாகி நசிக்கும்; இவ்வஞ்ஞான பூமிகளேழும் அடையப்படுவனவாகிய பேதங்கள் ஒன்று நூறுகும்; இந்தவேழும் அஞ்ஞானபூமிகளாம்.¶—

௨௫. மாயா விசித்திரத்தை யறிவிக்கு நிமித்தம் அஞ்ஞான பூமியைச்சொல்லி யதை நீக்கிச் சித்தைய டையும் பொருட்டு ஞானபூமி யைப் பகுத்துக் கூறல்.

ஞானபூமிகளை அளவில்லாத பேதங்களாகவா தஞ்செய்பவர்கள் சொல்லுவார்கள், அவைகளில், இப்படி சொல்லப்படுபவை நமக்கிஷ்டமுள்ளதாம், இந்த ஞான பூமியின் ஸ்வரூபத்தை யுணர்தல் ஆத்மஞானமாம்; அறிந்த விவைகளின் முடிவே அழிவற்ற நிருவாணமாம்; பிரமாணமுள்ள சுபம் விரும்பல், அடைதலாகிய விசாரணை, மனஞ்சிறுகல், உண்மையிற் பொருந்திநிற்றல், இழிவற்ற சங்கற்பமறல், பதார்த்தபாவனை யறுத்திடல், துரியம் என்று எழுவகைப்படும்.—

௨௬. முதற்பூமி இரண்டாம் பூமி களின் இலக்கணங் கூறல்.

இந்த ஞான பூமிகளை யுணர்ந்தவர்கள் மயக்கமென்கின்ற சேற்றி லழுந்தார்கள், இவைகளின் குணமாகிய மோக்ஷம்வருமாகுல் துன்பமானது இனியில்லை, குற்றம்பொருந்திய மோகத்துடன் யாம் பெறவேண்டியதென்ன; பிரமவித்துக்களாலும், ஆத்மஞான சாஸ்திரங்களினுலும், அனுபவஞான விரசத்தை அடைவோமென்று வயிராக்கியத்தினல் எப்போதும் நாடுகின்ற விருப்பமே சுபேச்சையாம்; இச்சுப விருப்பமுதிர்ந்து இரண்டில்லாத சத்துக்களினது குணங்களும், ஆத்மானு சந்தானங்களும், கைவசமாகுதலே விசாரணையாக நினைக்க வேண்டும்.†—

௨௭. மூன்றும் பூமி நான்காம் பூமி ஐந்தாம் பூமிகளின் இலக்கணங்கூறல்.

இப்படிப்பட்ட சுபேச்சையோடு விசாரணையென்று சொல்லிய இரண்டு பூமிகளின் சாதன நிறையவும் விடய வாசைகளைத் தள்ளி மனதொருமிப்பது சித்தஞ் சிறுகலாகும். சொல்லிய இந்த மூன்று பூமியின் சாதனத்திணுலும் மனதினிடத்தில் உண்டாகப்பட்ட அந்த நிராசையினல் தத்வஞானம்பொருந்துதலே உண்மைநிலை மருவலாகும். அத்தன்மையாவன இந்நான்கு பூமியி னப்பியாசத்திணுலும், மெய்ஞ்ஞான நந்தானுபவத்தில் அழுந்தி வேருகிய விடயசங்க மில்லாததே

¶ இ-ம் ஆத்மப்ரதிவிம்பமாயெதிரிட்ட விடயத்தைச் சுகமென்றறி லழுந்திப் போவதே சுழுத்தியென்பதாம்.

† இ-ம். எப்போதும் பந்தத்தைக் கெடுத்து முத்தியையடைய விரும்புவதே (சுபம் விரும்பல்) சுபேச்சையென்றும், அஃதடையுநிமித்த மாத்மாநாத்மவிசாரமே விசாரணையென்றுஞ் சொல்லப்பட்டதாம்

சஅ. ஆறாம்பூமி ஏழாம்பூமி களின் இலக்கண மறிவித் தல்.

சங்கற்பம் அறலாகும்.‡— இவ்வைந்து பூமியின் முதிர்ச்சியினாலும் தானாகிய ஆத்மஞானத்திலழுந்திய ஆநந்தத்து அமைதியால் புறம்பினு முள்ளினு மிருக்கின்ற விடயங்கள் விடுபட்டு, பக்கத்தி லிருப்பவர்கள் வலிமையினால் அறியவருவதே பதார்த்தாபாவனையாம். நிறைவாகிய இவ்வாறு பூமியினனுபவத்தினாலும் திரிஸ்ய வேறுபாட்டைநீக்கி திரமுள்ளதனது சுபாவஸ்வரூபத்தில் நிற்பதே மறைபட்டிருக்கின்ற தனதாத்ம ஞானஸ்வரூபத்தை ப்ரத்யக்ஷப்படுத்துந் துரியமாகும் களங்கமற்ற சீவன்முத்தர்களது மார்க்கமித்துரியமேயாம்.¶— துரியவாழ்வானது சொல்லிய சீவன்முத்தித்தன்மைக்கு மேலான விதேகமுத்தர்கள் பொருந்தாநின்ற துரியாதீதமாகிய பதமாம்; ஆத்மஞானத்தினால் தனது ஸ்வரூபத்தை யுணர்ந்த மகான்மியத்தையுடையபுருடனால் அடைகின்ற தன்மையையுடையதாம்; நிலைபெற்ற இத்துரிய பதத்தைபெற்ற சீவன்முத்தர்கள் சுகதுக்கங்களில் முழுகார்கள்; இம்முறைமையினால் பக்கத்திலுள்ள சீடன் முதலானவர்களால், தேகசம்ரக்ஷணையையு நித்திய கன்மங்களையுஞ் செய்யும்படி சொல்லுகின்ற மார்க்கத்தின்படியே நித்திரையைவிட்டு எழுந்தவர்களைப்போல நிகழ்காலத்துக்கடுத்த குணங்களைச்செய்துஞ்செய்யாதவர்களாய்நிருவாணசுகமாய்வாழ்வார்கள்.†—இந்த

சகூ. இவ்வேழாம்பூமியினி லக்கணங்கூறல்.

ருo. ஞானபூமியின் பெருமையை யறிவித்தல்.

ஞானபூமிகளேழும் பரிபூரணஞானமடைந்தவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்குத் தோற்றாது, இஞ் ஞானபூமிகளை யடைந்தால் அஞ்ஞானத்தையுடைய மிருகங்களானாலும், ஆசாரமில்லாதவனானாலும், சரீரத்தோடுகூடினவனானாலும், மரணமடைந்தவனானாலும், முத்தனென்பதற்குச் சந்தேகமில்லை; தத்துவஞானமென்பது தன்பனோபந்தம்விடுதலாம், இப்பந்தநிவர்த்தியைப்பெற்றால் இதுதானேமோக்ஷலாபமாம், அஞ்ஞானமானது, கானற்சலமுதலாகிய மயக்கங்களை பொய்யென்றுபார்க்கவதின்ப்ரார்ந்திபோம்;அறிவின்மையும் மித்தையென்றுபார்க்கில் அவைநாசமாம்.—.

‡ இ-ம். மனம் ஆத்மவிசாரத்திற்கறைவதே (மனம்சிறுகல்) தனுமாநசியென்றும், தத்துவஞானமாதலே (உண்மையிற்பொருந்திநிற்றல்.) சத்துவாபத்தியென்றும், அஃதொன்றிலும்பற்றற்றிருப்பதே (சங்கற்பமறல்.) யசம்சத்தியென்றுஞ் சொல்லப்பட்டதாம்.

¶இ-ம். திரிஸ்யதிருஷ்டிநீங்கி திருக்குவாயிருப்பதே பதார்த்தபாவனையென்றும், சுசாதிகவிசாதிக சுகதபேதரகிதமான சைதன்யமேதுரியமென்றுஞ் சொல்லப்பட்டதாம்.

† இ-ம். இப்பூமியான துரியமே துரியாதீதமாயும் விளங்குமென்பதாம்.

௫க. ஞானபூமியை யடைந்தவர்கள் பெருமையும் அடையாதவர்கள் சிறுமையு மறிவித்தல்.

தன தாத்மஞானஸ்வரூபத்தை யுணராநின்ற சமாதியுடையவர்களுக்கு அடையத்தகுந்த உண்மைஞானபூமிகளை உணர்ந்த முதன்மையான சத்துக்கள், சகலருந் தியானிக்கவும், வணங்கவும் உரியராம். இந்திரியங்களென்கின்ற வெகுகாலமாயுள்ள சத்துருக்களை செயித்தவர்கள் அழிவற்றநிலையி லிருந்தவர்கள், பலசீவர்களும்வணங்க மேன்மையாகவாழுகின்ற தேவேந்திரர்களும், சக்ரவர்த்திகளும், திரணமாகத் தோற்றுகின்ற அத்தன்மையான பரமபதத்தை அடைந்தவர்கள், அப்பூமிகளை யடைந்தவரேயாம். ஞானபூமியை யடையாதவர்கள் சநநசமுத்திரத்தில் மூழ்கிக்கிடப்பவர்களாவர்.—மனதடங்குகின்ற தந்திரமேஞானமாம்,

௫உ. அத்துவிதத்தையடையுமார்க்கமிந்த ஞானபூமியைத்தவிர வேறின்றெனல்.

ஞானபூமிகள் அம்மனமடங்கு முபாயமாம், மாட்சிமைமிகுந்த இந்த ஞானபூமிகளையல்லாமல், இப்பொழுதுசொல்லிய மகத்தாகியபிரமபதத்தை அடையக்கூடாது. மட்டின்றி, நீயென்றும், நானென்றும், தானென்றும், அன்னியமென்றுஞ் சொல்லப்பட்ட ஒன்றுமாகாமல் அபேதமாகியும், தோஷமில்லாததாகியும், காரணமில்லாததாகியும், ப்ரகாசிக்கு நிரதிசயாநந்தமாகியும், உபசாந்தமாகியும், ஞானமாகியும், ஏகமாகியும், நாசமில்லாததாகியும், நாமமில்லாததாகியும், உயர்வுதாழ் வில்லாததாகியும்.— பாவமும்,

௫௩. ஞானபூமியினு லுண்டானவஸ்துவி னிலக்கணங்கூறல்.

அபாவமும், ஆதியும், அந்தமும், பற்றுதலும், உள்ளதும், இல்லாததும், அநேகமும், ப்ரகாசமும், ஞானமும், அறிவின்மையும் என்று சொல்லப்பட்ட விவைக ளில்லாததாகியும், சிதாகாயத்தி லிருக்கின்றதாகியும், வியாபகமாகியும், சகலமுமாகியும், அல்லாததாகியும், மனதினலும், வாக்கினலும், தாவக்கூடாததாகியும், ஆநந்தங்களுக் காநந்தமாகியும், நீங்குதற்கரிய பூரணத்துக்குப் பூரணமாகியும், அவாவிறந்தவிடமாகியும், தானே தானு யறிவதாகியும் விளங்குகின்றவஸ்து ஒன்றேயாம். ¶—எழுவிதமாகிய ஞானபூமியினல், அடையப்பட்ட பிரமஸ்வரூபம் இத்தன்மையது. இனி மாயையின் பெருமையை,

௫௪. ஞானபூமியினு லுண்டான பிரமநிச்சயத்தைச் சொல்லி அஞ்ஞானபூமியி னுலுண்டான மாயாவிசித்திரம் ப்ரத்யக்ஷமானதறிவித்தல்.

இராமா நீகேட்பாய்? சிறப்புபொருந்திய லவணவரசனைவன், சரீரத்தைமறந்து மனமென்னுங் கண்ணுடியில் முன்னமே பார்த்த விந்தமலையினது பக்கத்திலுள்ள காடுகளை இச்சரீரத்துடன்போய்பார்க்குமிடத்தில் கண்ணிற் காணப்படுமென்பதை மந்திரிகளுட னுலோசித்து, படைகளோடும் அமைந்து.—

¶ இ-ம். மனதடங்கின விடத்துண்டானஸ்வானுபூதிவிலாசத்தையறிவித்ததாம்

௫௫. ஞானபூமியினாலுண்டான பிரமிச்சயத்தைச் சொல்லி அஞ்ஞானபூமியினாலுண்டானமாயாவிசித்திரம்ப்ரத்தியக்ஷமானதறிவித்தல்.

தெற்குத்திசையினடந்தான், திரும்பவும்திக்குகளை
வெல்ல நடப்பவனைப்போல எதிரிற் பிரகாசிக்கின்ற
விந்தமலைக்குமுன்வந்தான், வடதிசையல்லாத மூன்று
திசைகளில் காடனைத்தும் சுற்றிப்பார்த்தான், மிகவும்
வருந்தினான், குறிப்பானவோரிடத்தில் அப்பொழுது
நினைத்த நினைப்பு உருவெடுத்ததுபோ லிருக்கின்ற
முன்னனுபவித்த வனத்தைப்பார்த்து,— இயமபுரத்
தையொத்த அந்தக்கொடிதானகாட்டிற் சஞ்சரிக்கு
௫௬. இதுவுமது. மளவில், நீசர்கள் தொழிலைப்போல அந்தலவணன்
முன்சஞ்சாரஞ்செய்தபூமிகளையும், அவ்வூர்களையும்
நன்றாய்ப்பார்த்தான், மிகவுமதிசயித்தான், முன்கண்ட
நீசர்களையும் நீசஸ்திரீகளையும், குடிசைகளையும், தவி
ராதபடிக்கு பூமிக்கரசனான லவணன்பார்த்து அதி
௫௭. இதுவுமது. சயத்தினால் மனமயக்கமடைந்திருந்தான்,— மனந்
தளர்கின்ற துன்பங்கரைக்க கண்கரையும்படி நீர்
பெருகி சரீரமிளகி கதறியழுகின்ற மூப்புள்ள நீசமா
தர்கள் குழாத்தில், மிகுந்த விசனத்தினால் வாயைத்
திறந்து தேம்பித்தேம்பி ஒருஸ்திரீ முதனாள்மரித்த
தன்மக்கள் நாமங்களியாவையுஞ்சொல்லி மிகுந்த சத்
௫௮. இதுவுமது. தத்தினால் இப்படி நாநாவிதமாக அழுதாள்.— எனது
மடியிலிருந்து நீங்கி இறந்துபோகாநின்ற குழந்தை
களே! தீவினையினால்என்னைப்பிரிந்து எவ்வளவுதூரம்
போனீர்களோ! யார்முகத்தைப்பார்த்து பரதவிக்
கின்றீர்களோ! சரசமாகச்சிவந்த குன்றுமணி மாலை
யைத் தரித்திருக்கின்ற புயங்களினால் குளிர்ச்சியாகத்
தழுவி தணியாதா எனது விசனாக்கினியை, பெண்
ணே? தணிப்பாயோ, ஐயோவையோ!!.— யாங்கள்
௫௯. இதுவுமது. பூர்வத்திற்செய்ததவசினால் தேடாமற்கிடைத்ததிரவி
யத்தைப்போல எங்கள்முன்வந்தடைந்து, உலக்குமி
போன்றவராகிய உனதந்தப்புரத்து ஸ்திரீகளினது
மோகத்தைவிடுத்து, எனதுபெண்ணைக்கூடிச்சுகித்த
அரசனாகியமருமகனே? எங்களைமறந்துவிட்டாயோ!
சந்திரனையொத்த வுனதுவதனத்தை இவ்விடத்தில்
வந்து காட்டுவையா! இலக்குமிபோன்ற வெனது
பெண்ணுக்குநாயகனே? உமக் கெனதுபெண்செய்
கின்ற அற்பகுற்றங்களினால் மனம்வேறுபட்டாயோ!

வலியசநநமென்னு மகாநதியில் கொடிய வினைகளா
௬0. இதுவுமது. கிய வலைகளானவை வந்துபொருந்தி தனக்குண்டான
பூபாலனத்தைவிட்டு, எனதுமகளுக்கு நாயகனாகி,
அற்பமான சநநத்தையுடைய சண்டாளரைப் போல
நரேந்திரனும் சண்டாளத்தன்மையை யடைந்தான்,
மின்போன்ற சநந நிலையில்லாதது, ஊழானது மிக

௬௧. ஞானபூமியி னுண்டானபிரமிச்சயத்தைச் சொலிஅஞ்ஞானபூமியி னுண்டான மாயாவிசித்திரம் ப்ரத்யக்ஷமானதறிவித்தல்.

௬௨. இதுவுமது.

௬௩. இதுவுமது.

௬௪. மாயைவருத்து மென்பதையுமதனுற்பிரமத்தையடைந்ததையுமறிவித்தல்.

௬௫. சாக்கிரசொற்பனஞ் சத்தியமானதென்னவெனின்.

வுங்கொடியது, மிகவுங் கொடியது என் றழுதாள். இப்படியென்றழுது,— அவள் ப்ரலாபித்துச் சொல்லிய சகலத்தையும் கேட்ட லவணராசன், அவ்விடத்திற் கூடவிருக்கின்ற தனது பாங்கிகளால், அவளது துன்பத்தைத் தணித்து, அன்புடன் வருந்தின வுனது துன்பமென்ன? நீ யெவள்? உனது புத்திரி யெவள்? உனது புத்திரர்களார்? ஒன்றையும் விடாமல் சொல்லுவாயென்று அரசன் கேட்க, புலைக் கிழவியானவள் கூறுவாள்.—இதுபறைச்சேரி இதிலொருசண்டாளன் எனது புருடன், இச் சண்டாளனுக்கு இவ்விடத்தொருபெண்பிறந்தாள், அப்பெண்ணை தேவேந்திரன் போலு மிருக்கின்ற ஓரரசன் வந்து புணர்ந்தான், வெகுகாலம் கூட்டிய வூழினல் அப்பெண் மூன்று பிள்ளைகளை யீன்ருள், காரணமாகிய நல்ல வூழைப் போல கொடியவூழ்வந்து எனதுமக்கள் மரணமடைந்தார்கள்.— அநேககாலம் என்மகள் முதலானவர்கள் வாழ்ந்திருந்த பின்பு, கரிய மேகத்தினுல் மழையில்லாமல்நல்லசலம்வற்றி கொடியயமனையொத்த கருப்பினுல் திக்குதிக்காகச்சென்று சண்டாளர்களனைவரும் இறந்தார்கள், நடுங்குகின்ற துன்பத்தையும் தனித்திருப்பதையும் யாங்கள் சகாயமாகப் பெற்றேமென்று சொல்ல, வேலாயுதத்தையுடைய அரசன் தனது மந்திரிகளைப் பார்த்து, பரவசனுய் வியப்புற்று,†— அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுத்து இந்நீசஸ்திரீயினுடைய கொடிய துன்பத்தை நீக்கி அவ்வூரினின்றுந் திரும்பி தன்னகரில் வந்து நெடிய சகத்தின் தன்மைகளையும், மாயையினுடைய வல்லமையையும், அந்த லவணவரசன் நன்ருகப்பார்த்து, சத்துக்கள் தரிசிப்பதற்குரிய பிரமவஸ்துவையும் யாம் போதிக்கத் தெரிந்து அமைதிபெற்ருன் அருட்கொடையையுடைய ஸ்ரீராமா? இம் மகா மாயையானது தாண்டுதற்கரிய வலிய மோகத்தைக் கொடுக்கும் —இம் மாயை வல்லமையினுல் அசத்து சத்தாகும், சத்தசத்தாகும் என்று வசிட்டமுனி சொல்லவும், கலக்கமுள்ள மனோராச்சியத்தில் பார்த்தவனைத்தும் ப்ரத்யக்ஷத்திற்பார்த்ததென்ன, நமதுகுலத்துக்காசிரியரேயென்று கேட்ட, ஸ்ரீராமருக்கு, வசிட்டமுனி சொல்லுவார். கொடிதான மாயையானது அளவற்ற மயக்கத்தைச் செய்கின்ற காதி கதையினுலே

† இ-ம். சாக்கிரசொற்பனத்திலுள்ளமயக்கங்களைச்சாக்கிரத்திற்றெளிவாகப் பார்த்ததிசயித்ததாம்.

௬௬. சாக்கிரசொற்பன மெய்யாகத் தோற்றினதற் கனுபவஞ்சுக்குமமாயுரைத்தல்.

இம்மாயா விசித்திரத்தை இனியறியலாம்.§— காக்கையேற பனம்பழம் வீழ்ந்ததுபோல, வாசனுவயத்தில் மனமானது தமக்குள்ளே தாம் ஒன்றாகக்கலந்திருக்குமென்று அறிவி னிச்சயத்தி னின்றவர்களாகிய சத்துக்கள் சொல்லிக்கொண்டிருப்பார்கள், ஆகையினால் முன்னுளில் இந்தரசால வித்தையுள்ள சாம்பரிகனால் கடையனாராகக் காணப்பெற்ற மயக்கத்தையே யான் சொல்லி யிருக்கின்ற லவணவரசன் பின்றினத்திலுங் கண்டதேயன்றி வேறல்ல.—

௬எ. இதுவுமது.

அரசன் பார்த்திருக்கின்ற சாக்கிர சொற்பனத்தி லுண்டான அறிவின் மயக்கத்தையே, வரையின்பக்கத்தி லிருக்கின்ற அச்சண்டாளரும் நல்லறிவினால் அறிந்தார்கள். லவணவரசனென்னும் அறிவி னுதயமானது சண்டாளர்களின் மனங்களிற்றோன்ற, சண்டாளரென்று தோற்றுகின்ற வறிவானது இவ்வரசனுடைய மனதில் உண்டானபடியால், மகா மாயையான தென்னசெய்யமாட்டாது.‡—

௬அ. ஆத்மஸ்வரூபநிரூபணம்.

தோற்றப்பட்ட மாயா வஸ்துக்களானவை ஞானப்ரகாசத்தினால் உள்ளனவாகும், பஞ்சேந்திரியங்களுக்கும் சம்பந்தமா யிருக்கின்ற வஸ்துக்களியாவும் ஞானத்தினாலல்லாமல் உள்ளவைகளாக மாட்டாவாம், உண்டாகிவரு ஞாதாவும் ஞேயமுமாகிய இரண்டினுடைய மத்தியில் ஞானத்மாவுக்கு இசைந்தவடிவம், சார்ந்தறியப்பட்ட விடய வஸ்துக்களும் இவைகளையறியப்பட்ட ஞாதாவும், ஞானமும், இல்லாததாகியும், இவைகளைப் பொருந்துவதாகியுமிருக்கின்றதே, மேலான மோக்ஷமாம்.*—

௬௯. ஆத்மானுசந்தானநிரூபணம்.

ஒருவிடயத்தினின்று மற்றொன்றில் மனம் பொருந்தினால் அவ்விரண்டின்மத்தியில், சத்தாமாத்திரமாகியும், நாமமில்லாததாகியும், அறிவில்லாததாகியும், விடயமில்லாததாயு மிருக்கின்ற அதுவென்னும் பிரமமும், நீயென்னுங் கூடஸ்தரும், ஐக்கியமான சிதாநந்த ஸ்வரூபமாய் எக்காலமும் பிரிவற்றிருப்பாய்; மிகுந்த நுட்பமாகிய அறிவினால் யுத்தியாய் விசாரித்து, நான் சம்சாரியென்கின்ற கருத்தைக்கெடுத்து வேரோடே கெடும்படி மனதின்றோற்றங்களைக் கெடுத்து சுபாவமா

§ இ-ம். இவை மேற்கதையினன்றாய் தெரியுமென்பதாம்.
‡ இ-ம். ஒருவன் சொற்பன மற்றொருவனுக்குச் சாக்கிரமாகவும், ஒருவன் சாக்கிர மற்றொருவனுக்குச் சொற்பனமாகவு மாவதுபோல, அரசன் மனோராச்சிய முன்னுள்ள சண்டாளருக் கிதார்த்தமாகவுஞ் சண்டாளர் சாக்கிரமரசனுக்குச் சாக்கர சொற்பனமாகவுந் தோற்றிவித்தது, மாயாவிசித்திரமே யன்றிவேறின்றென்பதாம். *இ-ம் திரிபுடிக்கு விலக்ஷணமாகியுஞ் சலக்ஷணமாகியு மிருங்கின்றவஸ்து மத்தியகதஸ்வரூபமாய் விளங்குமென்பதாம்.

எ0. ஆத்மாநுபவ நிரூபணம்.

யிருந்தபடியே தெளிந்திருப்பாய்.*--சநநமரணமாகிய ஏற்றத்திற் கடங்களைகட்டிச் சுழற்றுகின்ற வாசனை யென்னும் பெருங்கயற்றை மிகவும் பெரிதான எத்தனத்தினால் அறுக்கக்கடவாய். மேலான வாத்ம ஞானத்தில் முன்னுண்டாகியிருக்கும் மித்தையாகிய மனது, உலகவேற்றுமைக ளென்கின்ற அசத்தியத்தை சிறப்பையுடைய ஆகாயமானது வடிவமில்லாததாயிருந்தும் இல்லாததாகிய நீலநிறத்தை பொருந்துவதுபோல காண்பிக்கும்.‡— துன்பம்பொருந்திய

எக. ஆத்மப்ரகாசநிரூபணம்.

சங்கற்பநாசத்தினால் மனதிறந்தால், பழமையாகத் தொடர்ந்துவந்த மோகமென்கின்ற மூடுபனியானது விட்டுநீங்கும், சரற்கால முதிரும்படிவந்தால் ஆகாயம் ப்ரகாசிப்பதுபோல, ஆநந்தபோதமாத்திரமாகியும், அழிவற்றதாகியும், ஒன்றானதாகியும், உருவமிலாததாகியும், சநநமரணமில்லாததாகியுமிருக்கின்ற பிரமமானது சொச்சமாய் ப்ரகாசிக்கும்.†—

உற்பத்திப்பிரகரணம்.

முற்றிற்று.

## திதிப்பிரகரணத்தில்

# சுக்கிரன்கதை.

---

## அவதாரிகை.

முற்பிரகரணத்திற் சைதன்னியத்திலுண்டான மனோவுல்லாசமே சகமென்பதற்கு அஞ்ஞானபூமியையும், அதை நிவிர்த்திப்பதற்கு ஞானபூமி யாதியையுமறிவித்து, அச்சகஞ் சைதன்னியமயமாக விளங்குமென்பதை யைந்துகதைகணிறைந்த திதிப்பிரகரணத்தி லறிவிக்குநிமித்தம், அவைகளின்முதலிலுள்ள சுக்கிரன்கதையிற் சைதன்னியத்திலுண்டான மனதிற் சகம்விளங்குவதை நிரூபிக்கிறார்.

க. சகஸ்திதியினிலக்கண மறிவித்தல்.

எழுதுகின்றவனும், எழுதுகின்றவிடமும், எதிராகக்காண்கின்ற திரவியங்களும், இல்லாமல் குற்றமற்றிருக்கின்ற சிதாகாயத்தில், சகமென்னுஞ் சித்திரமானது உண்டாகித்தோற்றும்,உண்மையாகத்தோற்றிய தன்னைத்தானே பார்த்துக்கொண்டிருக்கும்; ஆதலின்

---

* இ-ம் மனதை யாத்மாவிற் கரைக்கவேண்டு மென்பதாம்.

‡ இம். ஆத்ம ப்ரகாசத்தை யதின்சங்கற்பமான மனது, சகம்போலத் தோற்றிவிக்குமென்பதாம்.

† இ-ம. பிரமசங்கற்பமா யுதித்தமனதைப் பிரமத்திற்கரைத்துத் தானுமப்பிரமப்ரகாசமாய் விளங்கவேண்டுமென்பதாம்.

நாநாவித விந்திரியங்களும் நீங்குகின்ற நித்திரையி வில்லாமல் சகம்சாக்கிரத்திற் றேற்றும்சொர்ப்பனத் தை யொத்திருக்கும் *—சாட்சியாகியும், பரிபூரண

௨. ஆயிற்சகமின் றேவெனின்-

மாகியும், சொச்சமாகியும், வியாபித்திருக்கின்ற பேத மற்ற வாத்மஞானத்தினால் தாங்காநின்ற சகங்க ளனைத்தும் ப்ரதிபலித்தல், கண்ணாடியில்தெரிகின்ற நிழலைப்போலாகும், நெருங்கிய காரணகாரியசம்பந்த மில்லாமல் சொல்லாநின்ற சகங்களனைத்தும் பிரமத்தி

௩. ஆயிற்சகம்வே றுமேயெனின்.

னிடத்தில் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். ‡— சகங் களுக்கு வடிவமானது தோன்றுகின்ற ப்ரதிபலின மாத்திரமேயாம், பின்னமில்லாததாகியும், சர்வாத்மக மாகியும், பூரணஞானமாகியும், வியாபகமானசிதாகாச மாகியும், நிலைபெற்றிருக்கின்றபிரமஸ்வரூபமும் ஏக மேயென்று வருத்தத்துடன் முயற்சி செய்து, ஸ்ரீராமா? நீ சிந்திப்பாய் அத்தன்மையுள்ள நிச்சய மானது கைவசமாயின், மனமானது சலனமற்று நிச்

௪. ஆயிற்சகந்தனி யேதோற்றுகின்ற தேயெனின்.

சலமான ஆத்மஞானஸ்வரூபமாகும். ¶— சித்திரங்க ளனேகஞ் சேர்ந்திருக்கின்ற ஒருகல்லைப்போல ப்ரகா சிக்கின்ற வுலகங்களானவை ஒரு பிரமமானது தோற் றிக்கொண்டிருக்கும், இரண்டென்பதற்குசககாரிகார ணம் வேறில்லாதபடியினால் சகங்களென்று சொல்லு தற் கொன்றில்லையாம், ஆத்மஞானமே யுள்ளதாம்; சகலசகங்களும் நிச்சயமான பிரமனிடத்திற்ப்ரதிபா மாத்திரமாயிருக்கும், இவைதெளியும்பொருட்டுசுக்கி ராசாரியருடைய கதையை, ஸ்ரீராமா? நீ கேட்கக்

௫. இதற்குத்தி ருஷ்டாந்தம்பார்க் கவானு பவத்தை நிரூபித்தல்.

கடவாய்.†—முன்பொருகாலத்தில் பிருகுமுனியான வர், பழமையு முயர்வுமுள்ள மந்தரகிரியினதுபக்கத் தில், நிலைபெற்ற தவத்தைச்செய்யுமிடத்தில், அவ ருடையபுத்திரன், அறிவையுடையவன் சந்திரனை யொத்தவன் தன்பிதாவினுடைய பாதத்தினின்று நீங்காதவன் ஒப்பற்ற ஞானுஞ்ஞான மென்கின்ற இரண்டு பார்வையின்மத்தியில் விளங்காதிருக்கும் மகாபதத்தை யுடையவனான சுக்கிராசாரியார்.—

*இ-ம். ஓர்காரணமின்றி ஆத்மாவிற்றோற்றுகின்ற சகத்தானது ஆத்மப்ரகாச மாய் நிகழ்தலின் அச்சகந் தீர்க்கசொற்பனமென்பதாம்.

‡ இ-ம். பிரமத்தி லதின் ப்ரதிவிம்பமான சகத்தானதோரேதுவுமன்றிவிளங்கு மென்பதாம்

¶ இ-ம். சகமானது வேறாயிருப்பதுபோலத்தோற்றுவதேயன்றி வேறன்றென் பதாம்.

† இ-ம். கல்லைவிளக்கும் ப்ரதமை யக்கல்லாயிருந்ததுமுரூபதிருஷ்டியால்வேறா கத்தோற்றுவதுபோலச் சித்தைவிளக்குஞ்சகஞ் சித்தாயிருந்தும் திரிஸ்யதிருஷ்டி யாய் வேறாகத் தோற்றுமென்பதாம்.

சு. சிதாகாயத்தி லுதித்த சங்கற்பமே ஸ்திரவடிவமாதல்.

ஆகாயமத்தியி லிருக்கின்ற திரிசங்கு மகாராசனைப் போல அறிவறியாமையின்மத்தியிலமர்ந்திருக்கின்ற காலத்தில், அவருடைய பிதாவாகிய பிருகுமுனியானவர் நிருவிகற்பசமாதியிற் பொருந்தும்படியிருக்க, பிதாவைவிட்டு நீங்காத சுக்கிரனானவர்தனித்திருந்து சுத்தமாகியவாகாயத்தைப்பார்க்கவும், ஒருதேவஸ்திரீயானவள் வரப்பார்த்தனன்.— தென்றற்காற்றாலலைகின்ற மந்தாரபுட்பங்கணிறைந்த அளகத்தையுடையவள்; பெண்யானையைப்போலத் தனித்துவரவும், எதிரேபார்த்து சிந்தாக்கிராந்தனாய் அந்தப்பெண்ணினுருவத்தைச்சிந்தித்து இருவிழிகளையுமூடிக்கொண்டிருந்து, முந்துமாசையினால் அளவிறந்த மனோராச்சியத்தில் முயற்சித்து,— இந்தப்பெண் தெய்வலோகத்து ஸ்திரீயேயென்று நிச்சயித்து, அந்தத் தெய்வலோகத்தில் நானும்போயடைந்து, இந்தவுலகத்துக்குத் தேவர்களாகிய இவர்கள் துதிக்க, அழகுமிகுந்த சிங்காசனத்தின்மேல் மின்னல்கணிறைந்த மேகத்தைப்போல இவன் தேவேந்திரனும், இவ்வரசனைச்சூழ்ந்து சாமத்தினாற் களிக்கின்ற தெய்வமாதர்களின் கூட்டமிவையென்று மனதிலறிந்து,— தேவேந்திரனை இந்தச்சுக்கிரன்வணங்க, இந்தச்சுக்கிரனை அத்தேவேந்திரனும் வணங்கியபின்புகிடைத்தற்கரிய சுகத்தையுடைய தெய்வலோகத்தில் நீங்காமற்சஞ்சரிக்கின்ற அத்தருணத்தில், பருத்துங் கச்சணிந்துமிருக்கின்ற தனங்களையுடைய தெய்வப்பெண்களுள் முன்சொல்லிய அந்தப்பெண் முன்னேதோற்றின மாத்திரத்தில், சகித்தற்கரிய விச்சையினால் இரண்டு கண்களுங் களிக்கும்படி சுக்கிரன் பார்த்தான்; அத்தெய்வப்பெண்ணு மப்படியே பார்த்தாள்.— அவ்விருவருடைய கண்களும், மனங்களும், ஒன்றாகக் கலந்திருக்குகின்றசமயத்தில்சங்கற்பித்தகாரியங்களில் ஒன்றுந்தப்பாத பெருமையையுடைய சுக்கிரன், கரிய அந்தகார மூடிக்கொள்ளக்கடவதென்று சங்கற்பிக்கவும், கற்பாந்தகாலத்தைப்போலும் அந்தகார மூடிக்கொள்ள, அவ்விடத்திலுள்ள சகலரும் பலதிக்குகளிலும் நீங்கினார்கள்.— அத்தெய்வப்பெண்ணிந்தசுக்கிராசாரியரை வந்துபொருந்த, அழகுபொருந்திய கற்பகவிருக்ஷத்தினிழலில் ஒருபக்கத்தில் நெருங்கிச் சேர்ந்து, இருவருமோருயிராக இடையூறில்லாத விடயசுகத்தில் நல்லகாலமாக எட்டுசதுர்யுகமும் கழிந்தபின்பு, முன்னமேயாஞ்செய்ததருமங்களனைத்தும் முடிந்துபோமுடிந்துபோம் என்கின்ற சிந்தையி

எ. அச்சங்கற்பவடிவமாய் மனோராச்சியஞ்செய்தல்.

அ. விண்ணுலகமாகக் காண்டல்.

கூ. விண்ணுலகத்திற் சங்கற்பமாதைக்காண்டல்.

க௦. சுத்தசங்கற்பஞ்செய்தல்.

கக. விடயாநந்தமனுபவித்தெய்தல்

கஉ. தன்னை மறந்து பிராமண னுதல்.

னுல்,— தேவலோகத்தினின்று பூலோகத்தில் வந்து சேர்ந்தான்; தனது வடிவத்தை மறந்தான்; இந்தச் சுக்கிரனுடைய சீவனுனது மிருதுவாகியபூர்ணசந்திர கலையைச் சேர்ந்து குளிர்ச்சியையுடைய பனியாகி, அந்தப் பனியினல் நெல்லாகி அந்தச் செழுத்தாளை யுடைய நெல்லை தேசார்ண தேசத்திலுள்ள பிரா மணன் சமைபற்செய்து புசிக்க, உண்டாகின்ற விந் திரியரூபமாய் சுக்கிராசாரியர் வந்து இப்பிராமணன் மனைவியினிடத்தில் புத்திரனுகப் பிறந்தான்.—

கஙூ. புத்திரன் வடிவமாதல்.

அக் காலத்தில் தபசிகளின் றெடர்பினுல் அரிதாகிய தவத்தை, ஒருமனுவுள்ள பரியந்தம் கனகமயமான மகாமேருவை சூழ்ந்திராநின்ற வாரணீயத்தில் செய் தான்; அச்சுக்கிரனவ்விடத்தில் ஒருபெண்மானினுல் ஒரு புத்திரனை மனிதவடிவமாகப் பெற்றுன்; அப் புத்திரவாஞ்சையினுல் பந்தப் படுத்துகின்ற அறியா மையினுல்கெடாதவுண்மைநிலையினின்று நீங்கினுன்.-

கச. முனிவடிவ மாதல்.

பின்னும் அளவில்லாத ஜநநங்களில் மயக்கம் பொருந்திய வாசனையினுல், சனித்துமரித்து மேலா கிய கங்காதிரத்தில் ஒரு முனிபுத்திரனுய் தவத்தோ னுயினன்.முன்பற்றியவுயிரானதுநீங்கி சுக்கிராசாரிய ருடைய முந்தின சரீரமானது, காற்றினுலும், சூரிய கிரணத்தினுலும், ஈன்றுவளர்த்த பிதாவாகிய பிருகு முனியின்பக்கத்தில் மிகவுமுலர்ந்து அஸ்தியாகி,¶—

கரு. பிருகுமுனி புத்திரனைக் காணு மை.

பிதாவாகியபிருகுருஷியினுடையதவமகிமையினுல், விலங்குகளும் பறவைக் கூட்டங்களும், பக்கத்திலு நெருங்காமல், பூமியின்மேல் சரீர முழுமையும் அக் காலத்திலழியாதிருக்க, நிருவிகற்ப சமாதியி தேவ தாவருட மநேகமானபின்புஇரண்டுகண்ணும்விழிக்க, தவமுள்ள பிருகுமுனிவர் இஷ்டமுள்ள புத்திரனை எதிரே பார்த்து,—

கசு. புத்திரவடிவ த்தைப் பார்த்தல்.

தருமஸ்வரூபமாய் தொழுதுக் கொண்டு பக்கத்திலிருக்கின்ற புத்திரனைக் காணுத வராய் உலர்ந்த சரீரமானது முழுவெண்புகளாகவும், தரித்திரவுருவமாய் உண்டானதுபோலவும், தோற்று கின்ற நிர்ப்பாக்கியமே வடிவாகி இருப்பதுபோலவும் முன்னேயிருக்க, துறந்த மனதை யுடையவனுகிய பிருகுவென்கின்றபரிசுத்தமான தவத்தையுடையவன் தனியேபார்த்து,—

கஎ. புத்திரன் மரித்தா னென்று ன்னல்.

உலர்ந்துமெலிந்த சருமத்தினுல் மூடப்பெற்ற என்வீட்டில், நவத்துவாரங்களி னெல் லாம் சிச்சிலிக்குருவி நடந்தோடுவதையும், வயிருகிய குகையில் தவளைக்கூட்டங்கள் ஒன்றுட‌னென்று பாய்

¶ இ.ம். ஆத்மசங்கற்பமே விடயமாயதிற்சுகித்த சங்கற்பநீங்கிப் பூமியாயதிலௗ வற்ற வடிவமெடுத்து முடிவான வாசுதேவவடிவமான தென்பதாம்.

ந்து விளையாடுவதையும் பார்த்து, வந்தகாரணமென்ன
வென்று தனதறிவினால்நின் ருராய்ந்துபாராதவராய்,
அன்புள்ள புத்திரனை இறந்தானென்று நினைத்து—

கஅ. காரணந்தெ ரியாமற் காலனைச் சபிக்க நினைத்தல்.

நியமித்த காலத்தையல்லாமல் எனக்கரிதாகியபுத்தி
ரனை அகாலத்தில் கொன்ற யமனை ஒரு க்ஷணத்தில்
கெடுப்பேனென்று, இடபத்தை நடாத்துகின்ற வுருத்
திரன் பெருங்கோபங் கொண்டதுபோல பிருகுரிஷி
யானவர் கோபித்துச் சபிக்கும்படி நினைக்க; இவரது
கோபமுணர்ந்த யமனானவன் நடுநடுங்கி விளங்காநின்ற

கக. காரணந் தெரிவிக்கக் காலனெழுந்தருளுதல்.

பஞ்சபூத வடிவமெடுத்து;— ஆறுமுகங்களும், ஆறு
கைகளும், சத்தியும், பாசமும், குண்டலமும், பாது
காக்கும் வச்சிரகவசமுமாகிய இவைகளைப்பொருந்தி,
மிகுந்தசேனைகள் பக்கத்திற் சூழும்படி வியசனத்தை
யுடைய பிருகுமுனியினிடத்தில் வந்துசேர்ந்துவேண்
டிக்கொள்ளும் பொருட்டு மிருதுவாக சகலத்தையு
மழிப்பதற்கு காரணமென்று சொல்லப்பட்ட யம
னானவன், நின்மலனாகிய பிருகுமுனிக் கிவைகளைச்

உ0. கால னியதி வல் லமையையுந் தனது வல்லமை யையு மறிவித்தல்.

சொன்னான் †—உண்டாகப்பட்ட ஈஸ்வரனியதியை
பரிபாலனஞ் செய்கின்ற நாங்கள், உன்னை அளவற்ற
மாட்சிமைப்பட்ட தபசினால் துதிப்பமேயன்றி வே
றொன்றினாலின்று, ஆகையினால் பூரணமான தபசை
வெவ்விய கோபாக்கினியினால் எரிப்பது தகுதியல்ல,
உண்டாகின்ற பிரளயாக்கினியு மெங்களைச் சுடாது,

உக. இதுவுமது

உமது சொல்லா சுடத்தக்கது.—சம்சாரமாகிய வலை
யில் கட்டுப்பட்ட அளவில்லாத வுருத்திரர்களும்,
நெடியதாமரைக்கண்ணையுடைய மகாவிஷ்ணுக்களும்,
நிலையாகிய என்னால் நாசமடைந்தார்கள் துன்பமாகிய
சகங்களில் என்னைச் செயித்தவர்களில்லை, சகலரும்
எனக்குப் புசிப்பாவர், உண்டாகின்ற சகலவுயிர்களை
யும் நாமழிப்பது பரமேஸ்வரனாற் பகுக்கப்பட்ட

உஉ, ஞான நிச்சய முரைத்தல்

அநாதிநியமம்.¶— என்னுடைய நியதியல்ல, இந்த
நியதியானது என்றுமுள்ளபடியாகும்; நின்மலமான
ஞானதிருஷ்டியில் கருத்தாவும், போக்தாவும், இல்
லனவாம்; அஞ்ஞான திருஷ்டிக்கு இக் கருத்தாவும்,
போக்தாவுமிகவுமுண்டாயிருப்பர்;கன்மவசத்தினால்
சகல பிராணிகளும், தங்கள் சங்கற்பத்தினால் பிறக்

உங. முனியின் விசார மின்மையை

கும் கற்பாந்தத்தில் நசிக்கும் —அத்தியயனஞ்செய்வ
தாகியவேதங்களாற்கொடுக்கப்பெற்ற ஞானதிருஷ்டி

† இ-ம். பிருகுமுனியினது மனதைத்தெளிவிக்கக் காலனுபதேசிக்கத்தொடங்
கின னென்பதாம்

¶ இ-ம். அகாலமடங்குநிமித்தம்,நியதியின்படிநடக்குந்தனதுவல்லமையைக்காலன்
கூறினனென்பதாம்.

வெளிப் படுத்து நிமித்தங் காலன் கிருபையுடன்கோபித்தல்.

எங்கே, உறுதியாக இருப்பதெங்கே, உமது மகிமை எங்கே, பெரியோர்கள் ப்ரகாசிக்கின்ற இந்நெறிக்கு அற்பவறிவை யுடையவராகிய அந்தகரைப்போல நீர் தளர்ச்சியடைவதென்ன, உனது புத்திரன் தனது சங்கற்பத்தினால் உண்டான செய்கையை யுணராமல் கோபித்து நீ சபித்தற்குரியவனே!— மனமே? ஆத்மாவாம் வேறின்று, மனத்தினது தொழிலே தொழிலாகும்; சீவிக்கின்றதினால்சீவனுமாகும், கிரிகிக்கின்ற நிச்சயத்தினால் புத்தியுமாகும், சினக்குறிப்புடன் யானெனதென்னுமபிமானத்தினால் கொடிய அகங்காரமுமாம்; தனதுவேற்றுமை மிகுதியினால் தனித்தமனதே உலகமாகும் *— அதினால், உமது புத்திரனும் நிருவிகற்பமாகிய சமாதியைப்பொருந்தினகாலத்தில், ஆசையினால் சுக்கிரனென்னும் தனது சரீரத்தை இவ்விடத்தில்வைத்து, ஆகாயத்தில் விச்சுவாசியென்னும் பெயரையுடைய தேவலோகஸ்திரீயை மனதினாலடைந்தபின்பு, சொல்லும் பூமியில் தேசார்ண தேசத்திலுள்ள ஓரந்தணனிடத்திற் புத்திரனாகப் பிறந்தும்,—கோசலநாட்டில் அரசனாகப்பிறந்தும், விசாலமான காட்டிலுள்ளே வேடனாகப்பிறந்தும், கங்காசலம்பொருந்திய கரையில் அன்னமாய்ப் பிறந்தும், பௌண்டரதேசத்தில் உயர்ந்தசூரியவம்சத்திற் பிறந்தும், சொல்லற்கரிய அரசனாகியும்,— சாலுவ தேசத்தில் சூரியவம்சத்துக்கு ஆசாரியனானான் பின்பு மிகுந்த கற்பகாலவளவும் வித்தியாதரருக்கு அரசனானான், பரிசுத்த வறிவுள்ளவனாய் அவ்விடத்தில் ஒரு தபோமுனிவனுடைய புத்திரனானான்; சேற்கெண்டைகள் கமுகிற்றாவி தடாகத்திற்குதிக்கின்ற சவ்வீரநாட்டில் சாமந்தனாகப் பிறந்தான்;— திரிகத்தமென்னுந் தேசத்தினிடத்தில் சைவசமயத்துக் காசாரியனானான்; வாசனை சூழ்ந்த வேடுவர் பட்டணத்தில் மூங்கிற்காடானான்; சீரணமான சிறுகாட்டில் ஒரு மான்பிறப்பாய் அமர்ந்திருந்தான்; விரிவாகச் சூழ்ந்திருக்கின்ற தாலவனத்தில் வெவ்விய கோபத்தையுடைய மலைப்பாம்பாகவும் பிறந்தான்;— இந்தப் பிரகாரம் அளவில்லாத யோனிகளில், தாழ்வாகவும் மேலாகவுமிருக்கின்ற ஜநநங்களை அடைந்து, களங்கமுள்ள மனதினால் வாசனுவயத்தினின்று, மெய்ம்மையான கங்காநதியின்பக்கத்தில் ஒப்பற்ற வுண்மையான ரிஷிபுத்திரனாய், அசத்தியவடிவமான இந்திரியங்களென்கின்ற ஈனமாகிய சத்துருக்களைக் கெடுத்து வெற்றி

உச. காலனுபதேசித்தல்.

உரு. சுக்கிரன் மனோசங்கற்பத்சாலெடுத்த வடிவங்களை யறிவித்தல்.

உசு. இதுவுமது.

உள. இதுவுமது.

உஅ. இதுவுமது.

உகூ. இதுவுமது.

* இ-ம். பிர்மசங்கற்பமான மனதே சகலமுமாய் விளங்குமென்பதாம்

௩௦. சுக்கிரன் மனோசங்கற் பத்தாலெடுத்த வடிவங்களை யறிவித்தல்.

யடைந்து,—நீண்ட சடைகள்முதலிய அனைத்தையுந் தரித்து, வாசுதேவனென்னு நாமத்தைப் பொருந்தி, தபசில் எண்ணூறுவருடம்அமைந்திருந்தான். உனது புத்திரனாகிய சுக்கிரன், சுழலாநின்ற சொற்பனத்துக் கொப்பான மனதிலுண்டான மயக்கத்தை அன்பாகப் பார்க்க வேண்டுவையாயின், ஞான திருஷ்டியினாற் பார்ப்பாயென்று.௦— யமனானவன் சொல்ல கேள்வியுற்ற கல்வியுள்ள பிருகுமுனியானவர் தனது ஞானதிருஷ்டியினால் மேன்மையான ஞானப்ரகாசத்தினால் ப்ரதிபாபாத்திரமாக ப்ரகாசித்து, நல்லொழுக்கமுள்ள அறிவென்கின்ற தெளிவுற்ற கண்ணாடியிற் பிரதிபலித்ததாகிய தனது புத்திரனுடையவிருத்தாந்தங்களியாவையும் நொடியளவில் பார்த்து.— கங்காதீரத்திலிருந்தும் மந்தரகிரி பக்கத்தில் தனது சரீரத்தில்வந்து பொருந்திய உண்மையுள்ளபிருகுரிஷி, மிகவுமதிசயித்து, குற்றமற்ற காலனை பலவிதமாகிய வேண்டுதலினால் ஓராசையுமில்லாத முனியானவர் சொல்லுவார் †— சர்வஞ்ஞனாகிய காலனே? நீர் நியதிக்கு முதன்மையானவன் நீரொருவரே, திரிகாலங்களையும் தெளிவுடனறிவாய், எம்போன்றவர்கள்குழந்தைகளாய் பிரமஞானமானது ஒங்காத இளையோர்களாவார் என்று முனி சொன்னவளவில், உரிமையாகிய சகங்களைப் புசிக்கின்ற நாசமில்லாத நிலைமையுள்ள யமனானவர்.*— பிருகுமுனி கரத்தைப் பிடித்துக் கொண்டு மந்தரமலையின் குகையினின்றும் வெளியில் வந்து தேவநதியைப் பொருந்தி, இவர்களில் அவ்விடத்தில் வேறான வாசுதேவ நாமத்துடன் இருந்த புத்திரனை ஆசையினால் பிருகுரிஷிபார்த்தான் யமனுமிச்சங்கற்பத்தைச்செய்தார்.—இவ்விடத்திற்பொருந்திய சமாதியைவிட்டு இந்த வாசுதேவன் எங்களைப் பார்க்கக் கடவனென்று சங்கற்பித்த மாத்திரத்தில், புத்திரனான வாசுதேவன் சமாதியைவிட் டிவர்களைப் பார்த்து வணங்கவும், மிகுந்த வுயர்வையுடையவர்களாகிய மூன்று பேர்களும் ஒருவருக்கொருவர் விருப்பமுற்று ஒருகல்லின்மேல் கூடியிருந்தார்கள்.—

௩௧. வியாபக திருஷ்டியாற் பார்த்து மயக்கந் தெளிந்துரைத்தல்.

௩௨ இதுவுமது

௩௩. காலனைத் துதித்தல்.

௩௪. காலன் சுக்ரனிருக்கு மிடத்திற் சென்று முனிவருக்கறிவித்தல்.

௩௫. காலனானவர் தங்களைக் காணச் சங்கற் பித்தல்.

௩௬. வாசுதேவன்றுதித்தல்.

வாசுதேவனென்னும் புத்திரனானவன் மற்றிவ்விருவர்களையும் பார்த்து ப்ரகாசம் பொருந்திய வுங்களுடைய நற்றரிசனபலத்தினால், களங்கமற்ற தவத்தி

---

௦ இ-ம். சுக்கிரனிறந்தெடுத்த வடிவங்களின் காரணத்தை ஞானதிருஷ்டியாற் பார்க்கும்படி காலன் போதித்ததாம்

† இ-ம் மனோசங்கற்ப வடிவத்தை எதார்த்ததிருஷ்டியாற்பார்த்ததென்பதாம்.

* இ-ம் காலனெதார்த்தவடிவத்தை முனிவனுணர்ந்தனனென்பதாம்.

ஞனும், சாஸ்திரத்திஞலும், யாகங்களிஞலும், திரவியங்களிஞலு் நீங்காத குற்றம் பொருந்திய மயக்க நீங்கிமேனன், இதைப்பார்க்கிலும் அமுதவருடம் இன்பத்தைக் கொடுக்காது — என்றுசொல்லிய வாசுதேவனை, பிருகுமுனி யினிமையாகப்பார்த்து, உனக்கின்பம் பெருகும், ஞானமடையக் கடவது, குற்றமுள்ள அஞ்ஞானந் தீரக்கடவது, என் றனுக்கிரகிக்கவும், ஊனக்கண் ணிரண்டையு மூடிக்கொண்டு நாசமற்ற ஞானதிருஷ்டியினுல் முன்னடந்தவைகளை யெல்லாம் பார்த்தான்.— ஒரு நிமிஷத்தில் ஜநநங்களனைத்தையு நீக்கினன், ஞான திருஷ்டியினுல் பார்த்த பின்பு அதிசயித்துரைப்பான் பிரகிருதியான மிகுந்த மோகமானது மூடிய சகங்களாகி, கோரமாகிய என்மனத்தினிடத்தில் இஷ்டமாக வளருகின்றது இதுவொன்று, என்னவதிசய மென்னவதிசயம்!— அறியவேண்டுவன வெல்லாம் அறிந்தேன், காணவேண்டுவன வெல்லாங் கண்டேன், ஜநநத்தில் வெகுகாலஞ் சுழன்ற வெவ்விய துன்பமும் நீங்கினேன், நற்ப்ரயோசனமாகிய வாத்மாஞானத்தை யடைந்தேன், ஐயனே? நாமினிமேற்போய் மந்த்ரமலையிலிருக்கின்ற சரீரத்தைப் பார்ப்போம்.— கருமமே காரணமாகின்ற சரீரமாகிய என்புவடிவத்தை இரண்டு கண்களிஞலும் பார்த்து சுகத்தைபடையும்பொருட்டு சிந்தித்தவெனக்கு, யாதொருதொழிலிலும், விருப்புமின்று வெறுப்புமின்று வாருங்களென்று வாசுதேவன்சொல்ல, அம்மூவரும் மந்தரகிரியில் க்ஷணத்தில் வந்து சேர்ந்தார்கள்.¶—

௩எ. புத்திரனுக்கு ஞானம்வெளிப்படு நிமித்தம் முனிவர் ஞான திருஷ்டி வைத்தல்.

௩அ. சுக்கிரனுக்குஞான முதித்தல்.

௩கூ. ஆத்மாவிலுண்டான மனே சங்கற்பத் தாலெடுத்த வடிவங்களை ஞான திருஷ்டியாற்காண்டல்.

௪0. இதுவுமது.

முதன்மையாகிய சகத்தினுடைய பிரமாணத்தை தெளிந்த மூவர்களும் வந்தவிடத்தில், முன் பார்க்கவசநநத்தில் பொருந்திய சரீரத்தை புத்திரனுகிய வாசுதேவன் அளவில்லாத சந்தோஷத்திஞல் பார்த்து, அரியதவமுள்ள தந்தையைப் பார்த்து, இந்த வலிமையான முழுவென்மையா நீ பெற்று வளர்த்ததென்று கேட்டான்—பின்பும், எனது பிதாவே? பெறுதற்கரிய சுகங்களிஞல் முன்பு நீ வளர்த்த சரீரமானது துன்பமியாவு நீங்கி, துன்பமிகுந்த ஆசையும், சந்தேகமும், இதமும், அகிதமுமாகிய வனைத்துமில்லாமல், நிலைபெற்ற வாநந்தமாய் மனநசித்திருந்தது — மனமிறந்த நிலையையல்லாமல் சீவர்களுக்குச் சுகமுண்டாமோ, பேராநந்தாநுபவமாகிய சமுத்திரத்தில் முழுகப்பட்ட களங்கமற்ற வியாபஞானத்துக்கும், உப

௪க. சரீரத்தின் சடத்தன்மையைப் பார்த் ததிசயித்தோதல்.

௪உ. அமன்ஸ்கபாவத்தைச்சடத்தின் மேல் வைத்துத் துதித்தல்.

௪௩. சுகாதீதத்தைச் சடத்தின் மேல் வைத்துரைத்தல்.

¶ இம் சுக்கிரன் றனதுசங்கற்பத்தைநசிப்பித்தி ஞானவடிவமாய்முன்னுள்ள சுக்கிரவடிவமெடுக்கப் பற்றின்றிச் சங்கற்பித்தனனென்பதாம்.

சாந்தத்துக்கும், ஞானவான்கள் துன்பநீங்கி யிருக்கின்ற தனதுமேலான ஆத்மநிச்சயத்துக்கும் ஒப்பாக, இத்தனிமையான சரீரமானது சுகத்தை யடைந்திருந்தது.‡— அறிய தபோபலத்தினால் இந்த ஆச்சரியத்தைப்பார்த்தேனென்றுவாசுதேவன்சொல்ல,சமீபத்திலிருந்த அந்தக்காலனானவர்பார்த் திந்த வார்த்தையை தடுத்து, அடுத்திருக்கின்ற இச்சரீரத்தில், அரசர்கள் தனது பட்டணத்திற் ப்ரவேசிப்பதுபோலப் புகுந்து அவுணர்களனைவர்க்கும் திருத்தத்தையுடைய ஆசிரியக் கிரிகையைச் செய்வாய்,— என்று சுக்கிராசாரியருக்கு ஆக்யாபனஞ் செய்து, இந்தப்பிருகுமுனியையுஞ் சுக்கிராசாரியரையு மாசீர்வாதஞ்செய்து, காலனானவர் நின்றவிடத்தில்மறைந்துபோனார்; காலனைவிட்டுப்பிரிந்தவர்கள் வியசனமடைந்திருந்தார்கள். பின்பு, அந்த வாசுதேவனென்னு நாமத்தையுடைய நினைவைத்தள்ளி,வலியபெருமையையுடைய சுக்கிராசாரியரானவர் முன்பொருந்தியிருந்தசரீரத்திற்புகுந்தார்.--

சச. காலன்அச்சுக்ராசா ரியராகக் கடவதென் றனுக்கிரகித்தல்.

சடு. சுக்கிரனது வடிவத்திற்புகுதல்

விதியின் வசத்தினால் சுக்கிரனடைந்த சரீரத்தை தனக்குத்தானே சமானமாகிய பிருகுமுனிவர், கமண்டலத்திலுள்ளவேதமந்திரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்விக்க, நனையவும், நரம்புகளனைத்தும், நயத்தையடைய பிராணனைத் தரித்து அச்சுக்கிராசாரியரெழுந்து பிதாவின்பாதத்தை வணங்கி பக்கத்திநின்றான்.— பிதாவாகிய பிருகுமுனியும், புத்திரனாகிய பார்க்கவ முனியும், உயர்ந்த மந்தரமலையிலுள்ள வனத்தில் குற்றமாகிய மனமென்கின்ற தீமையான சத்துருவை தீர்ப்பாகக்கெடுத்து, அலையற்ற சமுத்திரத்தைப்போல குற்றமற்ற சீவன் முத்தனிலையில் வாழ்ந்தார்கள். கிருபைவடிவமான மகாமேகம் போன்றவரே யென்று கல்விஞானத்தையுடையவசிட்டமுனியானவர்சொன்னார்.*-

சசு. சுக்கிராசாரியராக வெழுதல்.

சஎ. சீவன்முத்தனாகச்சஞ்சரித்தல்.

சுக்கிரன் கதை
முற்றிற்று.

# தாமவியாளகடர் கதை.

---

## அவதாரிகை.

முன்பு சகமாத்மசங்கற்பமாய் விளங்குமென்பதையறிவித்து, அச்சகம் ஆத்மானுசந்தானவிவேகமின்றியநாத்மானுசந்தானமாகவிளங்கின்விருத்தியடையுமென்பதையறிவிக்குநிமித்தம்,தாமாதிகதையைச்சொல்லுகிறார்

‡ இ-ம். சங்கற்பநாசத்திலுண்டான பிரம்மசுகத்தை யறிவித்ததாம்.
* இ-ம். சுக்கிரன் அசுத்தசங்கற்பத்தை நீக்கிச்சுத்தசங்கற்பத்திலாசிரியத்தன்மையைச் செய்தனனென்பதாம்.

க. சத்துக்களனுபவ விலக்கணமறிவித்தல்.

வசிட்டமுனி பின்னுஞ் சொல்லுவார், முழுதும்
விசாரணையை யுடையவர்களும், மலினவிருத்தி நீங்
கின மனமுடையவர்களும், ஒப்பற்ற சங்கற்பத்தை
விடுத்தவர்களும், ப்ரகாசிக்கின்ற ஆநந்த போதத்தை
யுடையவர்களும், சங்கற்பத்தினுற் றரித்திருக்கின்ற
திரிஸ்யவஸ்துவில்போகவேண்டிய வனுர்தசடதுக்கத்
தைப் போக்கிக் கொள்ளவேண்டிய சச்சிதானந்த ஸ்வ
ரூபத்தைக் கொண்டவர்களும், திருஷ்டாவான ஆத்
மஸ்வரூபத்தைக் கண்டவர்களும், அதிருஷ்டாவான
அநாத்மஸ்வரூபத்தைக் காணுதவர்களும்,— சீவிக்

உ. இதுவுமது.

கின்றவனுக விருந்துபாராநின்ற ஞானமாகியபரதத்து
வத்தில் சாக்கிரத்தையடைந்தவர்களும், கொடிய சநந
மயக்கமென்னும் வழியில் நீங்காத நித்திரையை
யுடைந்தவர்களும், ஒப்பற்ற முதிர்ந்த பக்குவமான
நிராசையினுல் பாவிக்கப்பட்ட நன்மையிலும், தீமை
யிலும், பழகினவாசனையைக்கெடுத்தவர்களும்,— வா

ந. இதுவுமது.

சனையென்னும் வலையைக் கெடுத்து மனத்தினது
கட்டை அறுத்துவிட்டால் தேற்றுங் கொட்டையி
னுல் கலங்கிய சலமானது தெளிவதுபோல, மேன்
மையாகத் தெளிந்த மெய்ஞ்ஞானத்தினுல் உண்மை
யாகிய தற்சுபாவமே, முன்சொல்லிய குணங்களை
யுடையவர்களுக்கு துன்பமற்று நிரதிசயாநந்தமாகப்
பிரகாசிக்கும்,¶— விடயத்திற் சேருகின்ற இச்சை

சு. வாசனக்ஷயவுபாயமியாதெனின்.

நீங்கி சுகதுக்கமான விரண்டு நீங்கி ஒன்றையும்பற்று
மல், சிக்கஞ்செய்யும் கூண்டிலிருந்தும் ஆகாயத்திற்
செல்லுகின்ற பறவையைப்போல மகா மோகத்தி
லிருந்தும் பரிசுத்தமாகிய மனமானது வெளிப்பட்டு,
வேறுபாடாகிய சந்தேகநீங்க, ஆசையென்கின்றயாவு

ரு. அச்சகலத்தியாகம் மனதுக்கெப்படி யுண்டாகுமெனின்.

நீங்கும்.†— மாட்சிமையான அம்மனமானது, பரி
பூரணத்தைப்பெற்று களங்கமற்ற பூரணசந்திரனை
ஒப்பாகப்ரகாசிக்கும், இங்நிலையிற் ப்ரகாசித்தவர்கள்
மும்மூர்த்திகளாகிய தெய்வத்தன்மையின் முதன்மை
யானவர்களுக்கும் கிருபைசெய்வார்கள். உறுதியாகிய
விசாரணையினுல் மேன்மையாகிய பரமவஸ்துவை
அடையவேணடும்.‡— இந்தச்சக மெப்படிப்பட்டது
நானெப்படிப்பட்டவனென்று உறுதியாய் விசாரித்

சு. அவ்விசாரமியாதெனின்.

தறிகின்றபரியந்தம், கலகநிறைந்த சநநமயக்கமானது

---

¶ இ-ம் மனோநாசமும் வாசனக்ஷயமும்வந்த விவ்வனுபவத்தினுல் துவைதத்ஞானம் விளங்குமென்பதாம்

† இ ம். மனம் விடயசம்மந்தநீங்கித் தன்மயமாய்த் தனித்திருத்தலே வாசனக்ஷயமென்பதாம்.

‡ இ-ம். விசாரணையால் விடயபற்றுநீக்கம் வருமென்பதாம்.

அந்தகாரத்தைப்போலமூடிக்கொண்டிருக்கும். கணக்கில்லாத வுலகங்களும், ஆத்மாவும் அழிவில்லாத ஞானப்ரகாசமென்று சலனமற்ற ஞானக்கண்ணினாற் பார்த்தவர்கள் தத்துவநிச்சயத்தைத் தரிசித்தவர்

எ. அவ்விசாரமியாதெனின்.

கள்.— சகலசத்திகளாகியும், ஏகமாகியும், அளவில்லாததாகியு மிருக்கின்ற ஆத்மஞானமே, சமஸ்த பாவனைகளுக்கும் ஆந்தரியமாமென்று பார்த்தவர்கள் ஆத்மஸ்வரூபத்தைத் தெரிசித்தவர்கள் சொல்லப்பட்ட நானென்கின்ற ஞாதாவுமில்லை, அதற்குவேறாகியசகமெய்னுஞேயமுமில்லை, பிரமமேயுண்டாயிருக்கின்றதென்று இவ்விடத்திற்பொருந்த சத்துக்கும் அசத்துக்கும் மத்தியிற் பொருந்த பார்த்தவர்களே

அ. விடயசுகமனுபவிக்கலாமோவெனின்.

ஆத்மாவைத் தரிசித்தவர்கள்.‡— முயற்சியில்லாமல் தானேதோற்றுகின்ற திக்குகளிலுள்ள விடயவஸ்துக்களில் இச்சையில்லாமல் செல்கின்ற திருஷ்டியைப்போல களங்கமற்ற பிரமவித்துக்களுடைய புத்தியானது தொழில்களிற் செல்லுமென்று தெளிவுற்று பலபோகங்களைப்புசித்தால் அது துன்பஞ்செய்யாது,

கூ. அங்ஙனம்பாராவிடி லென்னவருமெனின்.

தெரிந்து சேரில்திருடருநட்பாவர். †— மார்க்கமத்தியில்வந்த கலியாணக்கூட்டங்களை வழியினடப்பவர்கள் காண்கின்ற தன்மையைப்போல, மிகுந்த போகவஸ்துக்களனைத்தையும் அறிவுள்ளோர்பார்ப்பார்கள்; ஆத்மஞானத்தினால் மனதைச்செயித்தவர்கள் அற்பபோகத்தைப் பெரிதாகப்பார்ப்பார்கள்; பின்பது துன்பமாமென்று நினைத்து விடயபோகத்தை விரும்

க0. துன்பநீங்குநெறியாதெனின்.

பார்கள். ¶— வருத்தமுற்ற சிறைச்சாலையி னின்று நீங்கின வரசன் தனதுபட்டணவளவிலும் மகிழ்ச்சியடைவன்; வெற்றிமாலையையும், வேலாயுதத்தையுந் தரித்த செயம்பொருந்திய வரசனானவன் பூமி முழுமையும் அற்பமென்று நினைப்பன். கலக்கம்பொருந்திய மனதைச் செயிப்பவர்கள் கரத்தைக் கரத்தினாலும், கால்களைக் கால்களினாலும், பல்லைப் பல்லினாலும் சரீரமுழுமையும் இப்படியே முன்சேர்க்கக்கட

கக. இதுவுமது.

வது.— சத்துருவாகிய மனோசயமேயன்றி சநநசமுத்திரத்தைக் கடந்துபோதற்கு கப்பலின்று, இருதயப்புத்தினிடத்தில் தொழில்களான விஷநிறைந்தபொல்லாங்காகிய மனச்சற்பத்தை செயித்தோரென்பவர்

‡ இ-ம் சிந்தையுஞ் செடத்தையும் விசாரித்துச்செடத்தைநீக்கிச் சித்தாயிருப்பதே ஆத்மவிசாரமென்பதாம்.

† இ-ம். பிரமானந்தவிலாசமே விடயானந்தமென்றுணர்ந்தனுபவிக்கி லதுவே சகாயமென்பதாம். ¶ இ-ம் ஆத்மதிருஷ்டியினின்று அநாத்மாவைப் பற்றறப்பாராவிடிற் றுன்பம் வருமென்பதாம்.

கள், வகையுள்ள மோக்ஷவுலகத்திற் போவார்கள் நல்லொழுங்குள்ளவர்கள் குற்றமற்றவர்கள் மிகவு மேன்மையான புமான்கள்புகழ் மிகுந்தவர்கள்,§—

கஉ. அம்மனோநாச மியாதினால் வருமெனின்.

மனமென்கின்ற பகையைச் செயித்தவர்களது தாமரைமலர்போன்ற பாதங்களைச் சிரசின்மேற் சூட்டுவாய்; கூட்டமாகிய நகரங்களென்கின்ற வுலகத்திலிருந்து சுகித்த முன்னுள்ளபாவமென்கின்ற காமவெகுளி மயக்கமென்னு மூன்றுமதங்களையுடைய யானையினாலும், பேராசையென்னுமாயுதங்களினாலும், கெம்பீரமுடைய விந்திரியமென்னுஞ் சத்துருக்களை செயஞ் செய்வாய்.‡— துன்பமுள்ள மனவகங்காரத்தைக் கெடுத்து தொடாநின்ற விந்திரியங்களென்னுஞ் சத்துருக்களைவென்றால், பனிதோய்ந்த தாமரைக்காட்டைப்போல, விஸ்தாரமான வாசனைக ளாசமடையும்.

கங. அவ்விந்திரிய நிக்கிரக மியாதினால்வரு மெனின்.

ஒப்பற்றஞானம் ஏகமேயென்று சாதித்து இந்தமனதைச் செயிக்கின்றளவும் பழுத்த இருட்டினிடத்தினெருங்கி யிருக்கின்ற பசாசைப்போல், மனதின் கண் வாதனையான்து வரமாட்டாது.*— துன்பத்துடன் சுழலாத மனமானது, சகலத்தையுந் தனஸ்வரூபமாகப்பார்த்த ஞானிகளுக்கு, தத்துவத்தையடைகின்ற விசாரணையினால் அமைச்சனென்று சொல்லப்படும். இந்திரியங்களென்கின்ற துன்பமென்னுஞ்சத்துருவைக்கெடுத்ததினால் உபாயமுள்ள சாமந்தனென்றுசொல்லப்படும். தனக்கிஷ்டமுள்ளவைகளைச் செய்கின்றதினால் பரிசாரகனைச் சொல்லப்படும்.¶—

கச. விவேகிகளுக்கு வாசனாத்தியாகம்வந்தமனதின் சகாய மியாதெனின்.

கரு இதுவுமது.

விவேகிகளுக்குபகுத்ததொழில்களில்லாதபரிசுத்த மனமானது களிக்கின்ற சுகத்தைக்கொடுப்பதினால் ஆசையுள்ள பாரியாளாகும்; இரக்ஷிக்குந் தன்மையினால்பரிசுத்தமுள்ளபிதாவாகும்; குணமுள்ளவிருப்பினால்தேடுதற்கரியநேயனுமாகும். †—சத்துக்களுக்கு, மனமானது நல்ல ஆத்மஞானசாஸ்திரங்களினால் நன்மையான மார்க்கத்தைப்பார்த்து நன்மையான வாத்

கசு. இதுவுமது.

§ இ-ம். மனோநிக்கிரகமே துன்பத்தை நீக்குதற் குபாயமென்பதாம்.
‡ இ-ம். இந்திரிய நிக்கிரகத்தான் மனோநாசம் வருமென்பதாம்.
* இ-ம் விவேகத்தாற்பெரும் வாசனாத்தியாகத்தா லவ்விந்திரியத்தியாகம் வருமென்பதாம்
¶ இ-ம். மனமானது ஆத்மவாசனுக்கெதிரற்ற பிரமாநந்தமுண்டாக்கு நிமித்தம் விசாரஞ்செய்தலின் மந்திரியும், அகமுகப்பட்டிந்திரியங்களைக் கெடுத்தலிற்றந்திரியும் ஓன்னுபின்னமான விடயசங்களைக்கிரகித்தபின்னமானபிரமரசமாக்கி யூட்டிவித்தலின் ஏவலாளுமாகுமென்பதாம்
† இ-ம். மனமானது ஆத்மாவை நீங்காதிருந்து நிருவாணசுகத்தைத் தருதலின் மனைவியும்,விடயத்திற் செல்லுவதைத்தடுத்து பிரமத்திற் செலுத்துதலின்பிதாவும்,உண்மையிற் றிறப்படுத்தலிற் சினேகிதனுமாகு மென்பதாம்.

கஎ. விவேகிகளுக்கு வாசனுத்தியாகம்வந்த மனதின் சகாயமியாதெனின்.

மத்தியானஞ்செய்து, நன்மையான வனுபவத்தை யடைந்து, நன்மையாகத் தனதுருவத்தைக்கெடுக்கும். நல்ல வொப்பற்றபிதாவாகி நல்ல ஞானசித்தியைத்தரும்.0—தெளிவுள்ள ஸ்திரயாக குற்றமின்றிப் பார்த்து எவ்வளவேனும் தடையில்லாமற்பார்த்து பூரணஞானத்தைப் போதிக்கப்பட்டால், இதயாம்பரத்தில் குற்றமற்ற தனதுசுபாவத்திஞல் களங்கமற்றமனது இரத்தினம்போலப் பிரகாசிக்கும்.‡—

கஅ. ஆயின்மனே களங்க நீங்குமுபாயமியாதெனின்.

மனமென்னு மிரத்தினமானது, வேறுபாடென்னு மலினவாசனையாகிய கும்பியில் மறைபட்டு ஒருவருக்குந் தோற்ருது, கனமான ஞானசலத்திஞல் சுத்திபண்ணிஞல் தனதுப்ரகாசமாகிய மோக்ஷத்தைக் காட்டும். சொல்லுகின்ற விவேகவலிமையால்யதார்த்தஞானத்தை அறிவிஞற்றரிசித்து அகங்காரமுள்ள விந்திரியத்தைச் செயித்து நீங்குதற்கரிய சகநத்தை நீங்குவாய்.— இக்காரணத்திஞ லிவனென்றும் நானென்றும திடமுள்ள நிச்சயம்விருதாவாம்; அத்தன்மையை அறிவிஞற் திடமாகத்தள்ளி அதற்குவேருகிய உள்ளகாரணத்தைப்பிடித்து உனதாத்மாவாகிய தற்பதத்திலிருந்து இச்சித்தபடி நடப்பாய். பொய்த்திறமான மனதோடுபுசித்த. அந்தவஸ்துக்கள் பந்தமாகா—* தாமனுடன் வியாளன் கடனென்றுசொல்லப்பட்ட வசுரர்கள் சார்ந்திருக்கின்ற ஞாயத்தை, இராமா! நீ யடையாமல் விட்டுவிடு. வீமன்பாசன் திடனென்னு மசுரர்களுடையஞாயத்தைப்பொருந்திதுன்பந்தீரக்கடவாயென்று சொல்லவும், இப்பெயர்களாற் சொல்லப்பட்ட அசுரர்கள்யாவரென்றுஞான வீரஞகிய இராமன்கேட்க, மகாரிஷியானவர் நாமதைச்சொல்ல ஆசையாயிருக்கின்ற தெதுவோ நீ யதிற்பொருந்துவாயென்று சொல்லுவார்.— சஞ்சாரஞ்செய்து உயர்வாகியபாதாளத்திற்பொருந்தியிருக்கின்ற சம்பரனென்னும் ஓரசுரன், வஞ்சனைமுதிர்ந்த மாயையிலே வாழப்பட்டவன் வலிய சேனைசமுத்திரத்திஞல் தேவேந்திரனை குறைவுசெய்ய, தேவர்களும் இவனித்திரையடைந்தபோதிலும், திசைகளி

கக. அம்மனதோடுங்கூடில் பந்தமாகாவோ வெனின்.

உ0. இவ்வனுபவம் வரும்பொருட்டு திருஷ்டாந்தங்கூறல்.

உக சுராசுரரின் யுத்தச்சிறப்புரைத்தல்.

0 இம் மனமானதுபுத்திரனுக் கிராசபோகத்தைக் கொடுத்திருக்கின்ற பிதாவைப்போல, ஆத்மாவுக் காநந்தராட்டிரசாங்கத்தைக் கொடுத்திறத்தலிற் பிதாவுமாமென்பதாம்.

‡ இ-ம். மனமானது ஆத்மாவுக் கதன் ஞானமாக விளங்குமென்பதாம்

† இம் மனது விவேக ஞானத்தான் மறைப்பு நீங்கிற் சுயமாய் விளங்குதென்பதாம் * இ-ம் மனமானது ஆத்மப்ரகாசமாதலா லஃதாத்மாநந்தமேயன்றி வருகாதென்பதாம்.

லடைந்தபோதினும், மிகவுங் கோபித்து அசுரர்கள்
உஉ. சுராசுரரின் யுத்தச்சிறப்புரைத்தல். கெடும்படி யடித்தார்கள்— இப்படியான தேவர்கள்
வல்லமையைசிறந்தசம்பராசுரன்தெரிந்து ஆகுவனுந்
திருமனும், பலத்தையுடைய முண்டிகனும் பொருந்
திய விவர்களுடையசேனைகள் முன்னேபோக அனுப்
பினன்; மிகவும் அவ்விடத்திலுள்ள யாவருமடிய,
தேவர்கள் சமயம்பார்த்துப்போர்செய்தார்களென்று
சொல்லவும், கோபமிகுந்த சம்பராசுரன் தெய்வலோ
கம்வர, மாபாவித்தையில் மிகுந்தவனென்று அவன்
உங. இதுவுமது. முன்பு தேவர்கள் நிற்கப்பயந்தொளித்தனர்.— மகா
மேருவினுடைய குகையில் தேவர்களடைந்தார்கள்;
வீதிகடோறும் தெய்வப்பெண்கள் நின்றழும்படியாக
சூனியமாயிருக்கின்ற தெய்வலோகத்தை, பரமேஸ்
வரன்செயித்ததிரிபுரங்களென்று சொல்லும்படிஎரிக்
கின்ற அக்கினியைவருஷித்து, சம்பராசுரன் திரும்பி
னன். வெகுதூரநீங்கியிருந்த தேவர்கள் மறுபடியும்
வானகரில்வந்தனர்களென்று மிகுந்தசேனைகளை ஒழி
வின்றி மாயாவித்தையால் அனுப்பிக்கொண் டிருந்
உச தாமாதி யசுரரை யுண்டாக்கினை தறிவித்தல். தான்—இப்படி அசுரர்கள் பற்றறும்படியாக ஆதி
யானதேவர்கள்அடித்தார்கள்,திரும்பவதுவேமிகுந்த
கோபமாய் சமபராசுரன் சிருஷ்டித்துள்ள தாமன்,
வியாளன், கடனென்று சொல்லப்பட்ட விம்மூவர்கள்
மாயையினுல் வந்தவர்கள், பலம்பொருந்திய மேரு
மலையானது உலாவுதற்குச் சமானமானவர்கள். பா
விக்கப்பட்ட வாசனைவசமாகாதவர்கள்; இச்சர்வபி
உரு இதுவுமது. மான நினைவில்லாதவர்கள்— இறத்தலும், சீவித்த
லும், இன்பமடைதலும், வாட்டமடைதலும், வெற்றி
மாலைபைத்தரித்த சயங்களும், அவசயங்களும், சண்
டைக்குப்போகுதலும், அவர்களுக்கஞ்சித் திரும்பு
தலுமாகிய யாவையு மறியாதவர்கள் யுத்தஞ்செய்ப
வர்களை முழுமையும் அழிப்பவர்களாதலினுல், இம்
மூவர்களும் சத்துருக்களுடைய சேனைகளை பாணப்ர
யோகங்களாற் கெடுப்பார்கள். இவர்களைசமடையார்
களென் ருலோசித்து, பாதாளத்தில் வசிக்கின்றசம்ப
ராசுரனவன் மலையிலுள்ளவசுரர்களையும், சமுத்தி
ரத்திலுள்ள வசுரர்களையும், பூமியிலுள்ள வசுரர்களை
யும், இவர்களுக்குப் பலமாக வனுப்பினுன்.— சம்ப
உசா. தொந்தயுத்த முரைத்தல். ராசுரன் அனுப்பிய மிகுந்த சேனைகளானவை கால்க
ளுடன் மலைக்கூட்டங்கள் வந்ததுபோலவும், மகஷங்
களையுடையசமுத்திரமானதுபூமியில்விரிந்ததுபோல
வும், கற்பமுடிந்ததுபோலவும், வந்துபொருந்தினர்
கள், விண்ணுலகத்தாரும் அவ்வசுரர்களைப்போலவே

வந்தார்கள்: வாயுவுடன் அக்கினிபொருந்துதல்போல இவ்விதமான விரண்டுசேனைகளும் ஒன்றுக்கொன் றெதிர்த்து யுத்தஞ்செய்தன; ஆகையால் மறுகற்ப முண்டாயிற்று— ஆயுதங்களானவை அக்கினியைக் கக்கிக்கொண்டு சமீபத்தில்வர சரீரங்களானவை எவ் விடத்தும் மலைகளைப்போல மடிந்து விழுந்தன, மாய் கின்றசரீரங்கள் சொரியாநின்ற இரத்தசமுத்திரத்தில் மலைகள் தத்தளித்தலைந்தன, கோபிக்கின்ற வஞ்சக ராகிய அசுரர்கள்நெருங்கித்துரத்தினர்கள், கொல்லப் படுகின்ற தேவர்கள் தளர்ந்தோடினர்கள்: ஓடாநின்ற தேவர்கள்பின் தாமனும் மற்றுமுள்ள வசுரர்களும் திக்குகள் முழுதும் தேடினர்கள்— தேவர்களோடி மறைந்ததைகாணுதவர்களாய், உயர்வானமூவர்களும் தெய்வலோகத்தினின்று திரும்பி சம்பராசுரனுக்கு முன்பாகவந்தார்கள்; கூட்டமாகியதேவர்கள் என்ன செய்வதென் றெண்ணிக்கொண்டு பதுமாசனனை பிரமன்முன்போய், அன்புடன் வணங்கி சுடுகின்ற வக்கினிக்கொப்பான சம்பராசுரனது கொடுமையை யும், கொடிய கண்களையுடைய தாமவியாளகடர் தொடர்ந்து துரத்தினதையுஞ்சொன்னர்கள்—இவை களைக்கேட்ட பிரமா சிந்தித்து பயப்படவேண்டா மென்று இந்த வாக்கியத்தைச் சொன்னர். ஆயிரம் வருடஞ்சென்றால் மெலியச் செய்கின்ற சம்பராசுரன் யுத்தத்தில் அசுரர்களை தேவேந்திரன் கொல்லுவான், அந்தமட்டும் நீங்கள் செய்யத்தக்கதைச் சொல்லு வோம்— மேற்சொல்லிய தாமன், வியாளன், கட னென்று சொல்லப்பட்டவர்களை போய்க் கூப்பிட்டு யுத்தம் செய்வதாகவும் மீள்வதாகவும் துவக்கினமுதல் நீங்கள் தொந்தமாகாடந்தால், அகங்கார வாசனை தொடர்ந்து இருந்த கண்ணுடியின் சாயைபபோல அவர்கள் மனதிலுண்டா யிருக்கும்.— நிலையையடை யும்படியாக நானென்கின்றவாதனையிருந்தால்: வலைக்கு ளகப்பட்ட பக்ஷியைப்போல, மூன்றுபேர்களு மாள் வார்கள்; கொல்லுதற் கெளிதாகும்; இச்சையே ஆத் மாக்களனைவர்க்குங் காலனுய் நீங்காத துக்கமாகும், இராகமேதுக்கமில்லாத வாநந்தமாம்— வாதனையென் னுங் காற்றினல் மிகுந்த பிராணிகள் இயாவுங் கட்டுப் பட்டு துன்பமடையும், அக்கயறுன தழுந்துமானல் துயரைக்கொடுக்கும், பற்றறவிடுமானல் துன்பமில்லை யாம். ஆசையினுல்குற்றமற்றவர்களாயினும், சர்வஞ்ஞர் களாயினும்தீரர்களாயினும்பந்தப்படுவார்கள்.—தளை பூண்ட கேசரியைப் போல, ஆசையில் மேன்மை

உஎ. தொந்தயுத்த முரைத்தல்.

உஅ. தேவர்கள் பிரமனிடத்திற் சென்று முறையிடுதல்.

உகூ. பிரமதேவன் ரூனவரைச்செயிக்கு முபாயமுரைத்தல்.

ங௦. வாசனையேறு முபாயத்தை யறிவித்தல்.

ஙக. உயிருக்கிச்சையே கூற்றெனல்.

ஙஉ. இச்சையானது யாவருக்கும் பர்தமாமெனல்.

ஙங. வானவர் யுத்தத்துக் காரம்பித்தல்.

யுள்ளவர்கள் தாழ்வையடைவார்கள். நீங்கள் கலங்காதிருங்களென்று பிரமாவானவர் பார்த்தவிடத்தின் மறைந்து போனபின்பு, ஐம்புலனு நிறையும்படியாக சகலத்தையும் கேட்ட தேவர்கள் தெய்வலோகமடைந்து பூமி பிளந்து அண்டங்கிழியும்படி பெரிய பேரிகையுடன் சத்தித்தார்கள்.— சத்தித்ததைக்

ஙச. அசுரருக்கு வாசனையேற்றல்.

கேட்டஅவ்வவுணர்கள், பாதாளத்திலிருந்தும் மிகுந்த வேகத்துடன் கோபித்துவந்து கொடிதாகிய வாயுதங்களை தேவர்களின்மேற் பொழிந்தார்கள்; காலத்தைக் கழிக்கின்ற தேவர்கள் யுத்தமுடைந் தோடிப்போய், மீளவும்வந்து யுத்தஞ்செய்து ஓடிப்போய், திரும்பவும்வந்து அந்த யுத்தத்தைச்செய்தார்கள்.— இந்தப்பிர

ஙரு. மனதுவாசனையிற் கட்டுப்படல்.

காரம் நாநாவிதவுபாயங்களால் கழிந்த வெகு காலமாக யுத்தஞ்செய்ய, கெடாநின்ற திரமாகிய நானென்கின்ற பழக்கத்தினுல் உண்மையாக நானென்று நினைக்கின்ற ஆசையை இச்சித்தார்கள்; அவ்விதத்தினுன் மனமானது பந்தப்பட்டிருந்தது.— அச்சம்வந்து பற்றிக்

ஙசா. தேகாபிமான முண்டாதல்.

கொள்ளவும், மிகுந்த மயக்கந் தளைந்துக்கொள்ளவும், வருந்துகின்ற மாயாபாசத்தின்மூழ்கி என்னசெய்வோமென்று துன்பம்வரமெலிந்து, தேகநாசமாகாமலிருக்கும் வண்ணமும், மயக்கம்பொருந்திய திரவியங்களினுல் சுகம் வருவதும் எவ்வண்ணமென் றாலோசித்தார்கள்.— எப்போது மிந்தப்ரகார நினைக்க பந்தப்

ஙஎ. மனோமயக்கமாதல்.

பட்ட மனதையுடையவராய் முடிவற்ற திடமில்லாமல் போரென்றுல் மிகவும் பயந்து மனம் நொந்து நசிப்போமென்றும், ஆதரவானவிடம் நமக்கெதுவென்றும், நினைவினுலாகிய தீயமனதினுல் கலக்குற்று வாடினுர்கள்— தங்கள் வல்லமைகளை யெல்லாம் போக்கி

ஙஅ. தானவரிறத்தல்.

தங்கள்முன் ஞெருவன்வந்து நின்றுலும், அழிவு செய்யமாட்டாதவர்களாய்நடுக்கமடைந்தார்கள்; சமித்தில்லாமற்போனுல்ஆகுதிகொடுக்கின்ற தேவருணவை அக்கினியானது புசிக்கும்படி வல்லமை யுண்டாமோ, சத்தமாகச்சொல்லியென்ன, பயந்தோடிஇறந்தனர்—

ஙகூ. அவிவேகத்தன்மையுரைத்தல்.

தாமனென்பவனும், வியாளனென்பவனும், கடனென்பவனும் முன் நடந்தவழியை குற்றமற்ற ஞானமுண்டாகும்படி உமக்குச் சொன்னோம்; விளையாட்டினுல் மகா மனமானது அஞ்ஞானத்தில் தடையில்லா மற்பழகினுல் அறிவின்மையாகிய பவத்துன்பமானது இப்படிப் பற்றுது.†— ஆதலால், இந்தத் தாமாதி

சo. தாமாதிகள்

† இ-ம். பிரமநிஷ்டையுள்ள சம்பராசுரனுலுண்டாக்கின தாமாதிமூவருந் தீரமுள்ளவராயிருந்தும் யானெனதென்னும் வாசனையாற் றேகாபிமான மடைதலின் மறிவிழந்தார்களென்பதாம்.

பிரமத்தி லுதித்த தெங்ஙனமெனின் அசுரர்களுடைய நீதிகளை, ஸ்ரீராமா? நீ இவ்விடத்திற் பொருந்தாதே என்று சொல்லவும், அவர்கள் பிரமத்திலிருந்தும் உண்டான தன்மையை அறிய வேண்டும், சொல்லுமென்று இராமன் கேட்கவும், வசிஷ்டமுனி சொல்லுவார். அச்சமுள்ள தாமன் முதலானவர்கள்பரத்தினது தோற்றமாத்திரமே சரீரமானவர்கள்.¶— எதிரே காணப்பட்ட தோற்றமே சரீரமாயிருக்கின்ற இத்தாமாதிகளைப் போல, இவ்விடத்திலுள்ள நாமும் உண்மையாக சிதாகாசத்திற்குப் புறம்பாக ஒன்றிலும் பொருந்திலம். சுத்தவீரனே? உனதறிவில் நானென்பதும், அசத்தியமே; நீயென்பதும் அசத்தியமே; தாமன் முதலிய வவர்களுண்டென்பதும் அசத்தியமே.*—

சுக. ஆயின்யாமெப்படிவிளங்குவமெனின். பிரமத்தினது விளக்கமே உருவமாய் வியாபித்திருக்கின்ற ஓராத்மா சத்தியானது, திரமுள்ள சம்பாராசுரனுடைய நினைவினாற் சலனமடைந்து தாமாதி மூன்று வடிவங்களாய்த் திரமான வுல்லாசத்தையடைந்து சொல்லிய இக்குணத்தினல்வராகின்றவர்களும்,யாமும் உண்மையாகவே எவ்விடத்துமில்லை,o—

சஉ. சம்பரனுற்ருமாதி களுண்டாயின கிரம மியாதெனின். யாவையுஞ் சாட்சியாயறிவதாகியும் போதாகாரமாகியும் நின்மலமாகியும்சமஸ்தமாகியும் உபசாந்தமாகியும் வேற்றுமை யுதயாஸ்தமனமும்இல்லாததாகியுமிருக்கின்ற பிரமஸ்வரூபமேயுள்ளதாகும்.

சங. ஆயிற்சகமித்தி யந்தானேயெனின். அப் பூரணவஸ்துவினுடைய சிற்சத்தியினது உண்டாதலே யுலகாயிருக்கும், இந்திரியங்களாலறியப்பட்ட நாநாவிதமாகிய திரிஸ்யங்கள் அசத்தியமே, பிரமவஸ்துவே சத்தியமென்றி நீசுகித்திருப்பாய்‡—

தாமவியாளகடர் கதை
முற்றிற்று.

# வீமபாசகிடர் கதை.

---

## அவதாரிகை.

முன்சம்பராசுரன் பிரமத்தியானத்துதித்தும் விவேகமிருந்தும்இந்த யுத்தத்தைத் தங்களனுபவவுல்லாசமாய்ப் பாராமல்வேறுபட்டு, யானெனதென்னும் பழக்கமேறத் தன்னை யிழந்ததைக்கூறி, எப்படிப்பட்ட இடறுவந்தவிடத்தும் வேறுபட்டு தேகத்தி லகம்பாவம்வாராமல், தனதுல்லாசமாய்ப் பார்க்குநிமித்தம் வீமாதியர்கதையை நிரூபிக்கின்ருர்.

---

¶ இ-ம். பிரம ப்ரதிபாமாத்திரமாய்த் தாமாதிகள் தோற்றினரென்பதாம்.
* இ-ம் யாமுமப்பிரமப்ரகாசமாய் விளங்குவமேயன்றி வேறன்றென்பதாம்.
o இ-ம். சம்பரனதாத்மவுல்லாசமே யிப்படிதோற்றின தென்பதாம்-
‡ இ-ம். சகலமும்பிரமப்ரகாசமாய் விளங்குதலிற் சகமித்தையேயென்பதாம்.

க. விடயவிருப்பத்திற்பயனின்றெனல்

இப்புத்திராதிகள் நமக்கென்றும் இப்பூமி முதலானவைகள் நமக்கென்றும் வாடுகின்ற நிர்ப்பாக்கியபத்தினுல், சகாயமானது ஒரு சாம்பரளவாவது கிடைக்காது, உதார மிகுந்திருக்கின்ற புருடர்கள் நாசமடைகின்ற சகங்களனைத்தும் திரணம்போல காண்பவர்களிடத்தில், மான்கள் வைக்கோலைத் தொடாதது போல, துன்பங்களியாவும் தொடாராவாம்.†— உள்ளத்திற் பொருந்த சமத்காரசத்தி சேர்ந்த பிரமத்தை அறிபவர்களை, அளவிடுதற்கரிய பிரமாண்டத்தைப் போல எண்டிசைப்பாலர் காப்பார்கள், சொல்லற்கரிய குணங்களில் அன்பாகியும் விசாரணையில் விருப்பமாகியும் தத்துவத்தை விளக்காநின்ற வஸ்துவில் பிரயாசமிகுந்தவர்களாயு மிருக்கின்றவர்களே புருடர்களாவர், மற்றவர் விளங்குகளாவர்.‡— செய்தற்கரிய துன்பமடைந்தாலும் செய்யக்கூடாத தொழில்களைச் செய்யக்கூடாது, ஒருங்கல்லாத மார்க்கத்தினுல் புசிக்க இராகுவென்பவனை அமுதமானது கொலைசெய்து, முயற்சிக்கின்ற சற்குணங்களினுல் மிகுந்தகீர்த்தியை அடைந்த சத்துக்களுக்கு வசமில்லாதவனைத்தும் வசமாகி, ஆபத்துக்களென்று சொல்லப்பட்ட சகலமு நீங்கி, எப்பொழுதும் அளவற்றசம்பத்துண்டாம்.*—

உ. உலகத்தை யணுவாகப்பார்க்குந்திருஷ்டி யாதெனின்.

ங. உண்மையையுணரு முயற்சியாதினு லுண்டாகுமெனின்.

நீங்காத முயற்சியினுலும் யுத்தியினுலும் மேலான ஞான சாஸ்திரங்களினுலும் குற்றமற நடப்பவர்களுக்கு எந்த ப்ரயோசன மெளிதிற் கிடையாது; வழிபாடாகிய ஆத்மஞான சாஸ்திரத்தை யனுபவிப்பவர்கள் வரப்பட்ட ப்ரயோசனத்தை விரைவிலடையச் சிந்தியாமல் கிரமமாக வனுசந்தித்தால் கெடாமன முழுதுமுதிர்ந்துமுடிவற்ற ஆத்மலாபத்தைக் கொடுக்கும்.¶— துன்பமில்லாமல் பயமும் சோம்பலும் செருக்குமில்லாமல் ஆத்மஞான சாஸ்திரார்த்தங்களின் பின்சென்று ஒருவரால் ஏவுதலில்லாமல் சஞ்சரிக்கக் கடவாய், கெடும்படி விரும்பாதே; திரவியங்கள் பயனில்லனவாம்; மிகுந்தபோகங்கள் துன்பமாம், செல்வமானது பெரிய பாவத்தையுடையதாம்; நிராசையே பேராநந்தமாம்.o— துன்பமிகுந்த கூட்டமில்லாமல் இயல்பான வொழுக்கமடைந்து சம்சாரமான

ச. அவ்விசாரமெதைக்கொடுக்குமெனின்.

ரு. ஆத்மாவின் ஸ்வரூப மியாதெனின்.

சு. அப்பேராநந்தத்தாலியாது வரு

---

† இ-ம். பயனின்றிய சகத்தை யற்பமாகப்பார்க்கிற் சுகமுண்டா மென்பதாம்.
‡ இ-ம். தத்துவத்தையறிகின்ற முயற்சியாற்சகமற்பமாகத்தோற்று மென்பதாம்
* இ-ம் மயித்திரியாதிகுணங்களுண்டாவதாற் றன்பம்வறினும் விசாரமுயற்சி யுண்டாகுமென்பதாம்
¶ இ-ம். சுருதியுத்தி யனுபவத்துடன் விசாரிக்கும் விசாரணையாத்மலாபத்தைக் [கொடுக்குமென்பதாம்.
o இ-ம். நிரதிசயமாகிய பேராநந்தமே யாத்மஸ்வரூபமாம்.

மெனின்.

துன்பத்தையுடைய விடயசுகங்களை கருதாதபெருமையையுடைய சத்துக்களுக்கு, மிகுந்த கீர்த்தியும் வாயுளும் செல்வமும் சற்குணங்களுமாகிய சகலமுமுண்டாகி, பிரமப்ரயோசனமானது வசந்தகாலப் பூங்கொடிகளைப்போலக் கிடைக்கும்.*— தபசுகளினுலும், புண்ணிய தீர்த்தங்களினுலும், நூல்களினுலும், நீங்காதசநநங்களை, மகான்களது திருவடியை வணங்கிப் பாசங்களைக் கெடுக்கவேண்டும். பயனின்மையான நானென்னுமோகமும், சினமும், மிகவுங் குறைந்து இயல்பாகிய சன்மார்க்கங்களிற்சென்று, ஆத்மஞானசாஸ்திர மார்க்கத்தினின்றவர்கள் மேன்மையான சத்துக்கள். †—நானென்பதற்கருத்தமாகிய பிரமத்தைக் காணுதவர்கள், சிதாகாயத்தைப் பாரார்கள்; நானென்பதி னருத்தமாகியபிரமத்தைக்கண்டவர்கள் சிதாகாயமாவார்கள், நானென்கிற வகங்கார மேகமானது ஞானுகாயத்திங்களைமறைக்கில் யானென்று சொல்லப்படாத பிரமமென்னும் அல்லிப் புட்பமானது மலராது. ‡— அளவற்ற துன்பமுள்ள வகங்காரமானது, அங்குரமாகமுளைத்து நீங்காத சநநமென்னும் தருக்கூட்டங்களானவை யானென தென்கின்றநீண்டகிளைகளாகவிரித்து நரகமென்னுங் காய்களைக்காய்க்கும்,அத்தருக்களானவைகுறைவற்ற ஞானுக்கினியினுல், வேருடனெறிந்துபோகும்.o—

எ. பவத்துன்ப நீங்குமுபாய மியாதெனின்.

அ, மகான்களாரெனின்.

கூ. நானென்பதியாதினுற் கெடுமெனின்.

என்று வசிட்டர் சொல்லவும் இந்த வகங்காரமானது என்னவடிவமுடையது, எப்படி செயஞ்செய்யலாம், தேகவாசனையைப் பொருந்தினவனுலும் பொருந்தாதவனுலுமிருந்து, ஒருபொழுது செயஞ்செய்தால் வருகின்ற ப்ரயோசன மென்னவென்று, இராமர்கேட்க,வசிட்டமுனிசொல்லுவார்.—மூன்று விதமாகியவுலகங்களில், இவ்வகங்காரமானதுமூன்று விதமாம்; அவற்றுள் எப்பொழுதும்இரண்டகங்காரநன்மையையுடையதாம்,ஓரகங்காரம்இழிவையுடையதாம்; சகலசகங்களும் பரமாத்மாவும் நாமேயாம், நாமுடிவிலம், நன்மையன்றி ஒருபாவனையு மில்லை என்று ஆராய்ந்தறிகின்ற ஞானமே மேன்மையாகிய வகங்காரமாம்,— நெல்வால் நுனியினுஞ் சூட்சுமமாகியும் சகலவுலகங்களுக்குப் புறம்பாகியும் நாம் எப்பொழுதும் நிலையாயிருக்கின்றேமென்று கொள்

௰. அகங்காரத்தின் ஸ்வரூபமும் அதை ஞானத்தாற் கெடுக்கு முபாயமும் அஃதுநீங்கினவிடத்துண்டாகும்பயனுமியாதெனின்

கக. அவ்வகங்கார மூன்றின் முந்தின வகங்கார விலக்கணங்கூறல்.

கஉ இரண்டாமகங்கார விலக்கணங்கூறல்

* இ-ம். பவத்துன்ப நீங்கி பரகதியுண்டா மென்பதாம். † இ-ம். மகான்களைப் பணிவதே பவத்துன்ப நீங்கு முபாயமென்பதாம். ‡ இ-ம். நானென்பதைநீக்கித் தானகி விளங்குபவர்களே மகான்களென்பதாம். o இ-ம். ஞானத்தினு லகம்பாவங் கெடுமென்பதாம்.

ளப்பட்ட ஞானமே இரண்டாவதாகிய அகங்காரமாகும், இந்த நிச்சயத்தையுடைய விரண்டகங்காரமும் சீவன்முத்தர்களிடத்திலிருந்து கரையேற்றி அடைதற்கரிய மோக்ஷத்தைக்கொடுக்கும், சுழலுகின்றபந்தத்தைக் கொடுக்கமாட்டாது.†— இப்படிப்பட்ட

கங. மூன்ருமகங்காரவிலக்கண மறிவித்தல்.

யான் பாணிபாதாதிகளாகிய சரீரமாத்திரமாம் என்றறிகின்ற உறுதியேமூன்ருவதகங்காரமாம். உலகத்திலுள்ள அனைவர்க்கும் உரித்தாகும், மிகவுங்கொடியது, சநநமென்கிற விடவிருக்ஷம் வளர்தலுக்குக் காரணமாம், வருத்தமுற்ருவது இதனைக் கெடுக்கவேண்டும்.— கொடியதுகொடியது மிகவுங்கொடியது, இவ்வகங்காரத்தின் கொடுமையினுல் அளவற்றவாத்மாக்களனைத்தும் மயக்கத்தையடைந்து அறிவிழந்தார்கள், சீக்கிரத்தில் முன்சொன்ன அவ்விரண்டகங்காரங்களாலும் இந்த மூன்ருவதான அகங்காரத்தைக் கெடுத்து இதை யெவ்வளவு நீக்கினையோ அவ்வளவே மேலான பிரமவஸ்துவானதுவரும்.¶—

கச. இவ்வகங்காரத்தைக் கெடுக்குமுபாயமறிவித்தல்

கரு. அகங்காரங் களைங்கின விடதுிக்கும்பயனுரைத்தல்.

மேலாகிய இரண் டகங்காரங்களினுல் பிரமத்தையடைந்து அவ்விரண் டகங்காரங்களையுந்தள்ளி மூன்ருவதான வோரகங்காரமுமில்லாமல் உறுதியாக நிற்பாயாகில், அந்நிலையே முதிர்ந்த பிரமபதமாம்; தோற்றுகின்றசரீரத்தைநானென்று சொல்லாமையே வேதங்கள் முறையிடுகின்ற நிருவாணமாம்,‡— இவ்வகங் காரங்களின் குணத்தை சொல்லக்கேட்பாய்,

கசு. இவ்வனுபவமறிவிக்க திருஷ்டாந்த மறிவிக்கத் தொடங்கல்.

முன்சொல்லி யிருக்கின்ற தாமன் முதலிய வசுரர்கள் அதமாக நசித்தபின்பு, மாயாவித்தையில் வல்லமையுள்ளவனை அச்சம்பராசுரனென்பவன்கோபித்துகெறுவித்திருக்கின்ற தேவர்கள் சேனையை கொல்லும் பொருட்டு தந்திரத்தை நாநாவிதமாக இந்தப்ரகாரம் சிந்தித்தான்.— அசுரர்களென்று சொல்லும்படி முன்பு யாஞ்சிருஷ்டித்த தாமன்முதலிய மூவர்களும்

கஎ. விவேகிகளைச் சிருஷ்டிக்க நினைத்தல்.

ஆத்மஞான மின்மையால், யானெனதென்று அசத்தியத்தை யுடையவர்களாய் தேவர்கள் யுத்தத்திலிறந்தார்கள். ஆகையாலினிமேல் ஆத்மஞானசாஸ்திரத்திற் றெளிந்தவர்களாகவும் ஞானத்தையுடையவர்களாகவும் பொருந்தியவெனதுமாயையினுல் சிருஷ்டிப்பேன்.— சத்தியஞானம் பொருந்துகின்றதினுல்

கஅ. விவேகிகளுதித்தல்.

முழுது மித்தையாகிய வகம்பாவத்தினுல் கெடமாட்

† இ-ம். இவ்விரண்டகங்காரமு மோட்சமடைவதற்குச் சகாயமாமென்பதாம்.

¶ இ-ம். இவ்வகங்காரஞ் சநநமரணத்தைக் கொடுக்குமென் றறிந்திதை யவ்விரண்டகங்கார ஞானத்தாற் கெடுப்பதே யுத்தியென்பதாம்.

‡ இ-ம். தேகத்தை நானென்பதொன்றும், பிரமத்தை நானென்பதிரண்டுமாகிய மூன்றுங்களைந்தாற் ருன்மாத்திரமான மோட்சலாபமுண்டாமென்பதாம்.

டார்கள், தேவர்களுடைய சேனையைக் கெடும்படி செயிப்பார்களென்று களங்கமற்ற மனதிற்சிந்தித்து மாயையினலவர்களை யுண்டாக்கினன்; பூமியைச் சூழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தி லுண்டாகப்பெற்ற குமிழியைப்போல மூன்றுபேருண்டானர்கள்.—

கக. அந்தவிவேகிகளியல்பைக் கூறல்.

சகலத்தையுமறிந்தவர்களும் தங்களைஞானவடிவமென்று ஞானத்தினற்கண்டவர்களும் சஞ்சிதவினைத்தொடர்பில்லாதவர்களும், ஒருவஸ்துவில் ராகத்துவேஷமில்லாதவர்களும், நினைக்கப்பட்டகாலத்தில் அடைந்த ஸ்திதியிலிருப்பவர்களும் தினையளவாயினும் சந்தேகமில்லாதவர்களும், தெளிவுள்ளவர்களும்,—

உ௦. தேவர்களிடத் தசுரர்சென்று யுத்தஞ்செய்தல்.

நாமத்தினல் வீமனென்றும், பாசனென்றும், திடனென்றும், தங்கள்செல்வத்தினற் சகங்களனைத்தையும்துரும்பாயறிகின்றபரிசுத்தர்களுமாகிய இவர்களை, தேவயுத்தத்திற் போங்களென்று சம்பராசுரன் சொல்லப்போய், ஒப்பற்ற தேவர்களுடன் பெரிதாகிய யுத்தத்தைச் செய்யத்தொடங்கி,— அளவில்லாதவருஷம் கொடிதாகிய யுத்தத்தைச்செய்தார்கள்;

உக. அநாத்மதிருஷ்டி வரினும் அதை நீக்கிநிற்றல்.

இவர்களுடைய மனதில் துணுக்கென்று யானெனதென்னும் தோற்றமுண்டானபொழுது சூக்ஷ்மவிசார ஞானத்தினல் நாமெப்படிப்பட்டவனென்று நன்ருகப்பார்க்கவும், தருமமில்லாதவர்களது செல்வம்போல, அந்த யானெனதென்னுந் தோற்றமானது அசத்தியமாய்ப்போம்;—

உஉ. அவர்களனுபவதிருஷ்டியைக் கூறல்.

பலவிதமாகிய ஆத்மவிசாரணையினல் விரிந்தவகங்கார மிறந்தவர்கள், பிறப்பிறப்புகள் வருமேயென்று பயப்படுஞ்சலனமில்லாதவர்கள், களங்கமற்றவர்கள், எளிதாய்க்கிடைத்தபொருளைக்கிரிகிப்பவர்கள், இப்பொழுது நடந்தவனைத்தும் பழமையாகிய புதுமையாகிய ஞானதிருஷ்டியினல் குற்றமறச் சமமாகப்பார்ப்பவர்கள்.—

உங. தேவர்கள் பயமடைதல்.

ஆகையினல் சூரர்களாயிருக்கின்ற அந்தபீமாதிகளால் தேவர்சேனையானது, ஆசையினல் புசித்துத்துலைக்கின்ற காமிகளது செல்வத்தைப்போல, ஓடிப்போதலையே விரும்பி திசைகளிற்போய் மறைந்து, பூமியைப்புசித்த திருமாலே அபயமென்று விஷ்ணுவிடத்திற்போ யடைந்தார்கள்.—

உச. அவர்களாத்மசித்தி யடைதல்.

சரணுகெதியென்றடைந்த தேவர்களுக்குபயப்படாதிருங்களென்று அபயங்கொடுத்து, கோபித்துவந்து யுத்தகளத்தில் அடிக்கின்ற விஷ்ணுவோடும் அரிதாகிய யுத்தத்தைச்செய்து, சக்ராயுதத்தையனுப்ப, அதினின்றும்பாயப்பட்டஅக்கினிச்சுவாலையெரிக்க யெரிந்து, துளபமாலையையணிந்த மார்பையுடைய விஷ்ணுவாழுகின்ற மேலான வைகுந்தத்தை

௨௫. மனோசஞ்சல நீக்கத்தை யறிவித்தல்.

யடைந்தார்கள்.¶- மேலிந்தப்ரகாரத்தினால்வாசனையினால் பாசமானது பிடித்துக்கொள்ளும்; அவ்வாதனையைநீங்கினால் பாசமானது நீங்கும்; விவேகஞானத்தால் இராமா? நீ நன்றாயறிவாய் அப்படி யறிகின்ற தத்துவத்தினால் உபாதியாகிய வாசனாக்ஷயம்வரும்; வாசனாக்ஷயம்வந்தால் அச்சமற்ற மனமானது நெய்யில்லாத தீபத்தைப்போல உபசாந்தமாகும்.*—

வீமபாசதிடர்கதை.
முற்றிற்று.

# தாசூரன்கதை.

## அவதாரிகை.

முன்பு அகங்காரத்தியாகம் ஆத்மார்த்தத்தின் பொருட்டாமென்பதையறிவித்து, அவ்வாத்மசங்கற்பத்தால் விளங்கிய சகஸ்திதியை விபரமா யறிவிக்குநிமித்தம், தாசூரன்கதையை நிரூபிக்கின்றார்.

———

௧. மாயையைக் கெடுக்கு முபாயமியாதெனின்.

நீங்காத துன்பத்தைக் கொடுக்கின்ற மாயையென்கின்ற ஆபத்தைக்கெடுக்க மனோநாசமே ஒப்பற்ற தந்திரமாகும்; குறைவில்லாத தத்துவஞானார்த்தங்களனைத்தையும் நான்சொல்ல இராமா? நீகேட்டுமறதியில்லாமல்உளத்திற்றரித்துக்கொள்வாய்குற்றமாகிய போகத்தினது ஆசையே பந்தமாகும், அவ்விச்சையை விடுவதே பிரமஸ்வரூபமான மோக்ஷமாம்; இதரமார்க்கமான பலசாத்திரங்களாலும் ப்ரயோசனமென்ன, வருத்தப்படாமல் இச்சாத்தியாசமுள்ள இந்தமார்க்கத்திலே வரவேண்டும்.†— ஈதின்பமாம்

௨. அம்மனதிறக்கு முபாய மியாதெனின்.

ஈதின்பமாமென்று சொல்லப்பட்டவனைத்தையும் அக்கினியைப் போலவும் விடத்தைப் போலவும், ஸ்ரீராமா? நீ நினைக்கக்கடவாய் உயர்வுதாழ்வாயிருக்கின்ற துன்பமுள்ள போகங்களைப் பலகாலும் விசாரித்து மனதிற்கலவாமல் இலேசாகப் புசித்தல் இன்பமாகவே யிருக்கும்; வன்மையாகச் சொல்லப்பட்ட மனதுண்டாகுதலே ஆத்மநாசமாம்; மனோநாசமே மகத்தான ஆத்மவுதயமாம்; நல்ல பிரமஞானிகளது மனது நாசத்தையடையும்; அஞ்ஞானிகளுக்

¶ இ-ம். சம்பராசுரனது பிரமத்தியானத்திலுதித்த வீமாதிகளென்றும் விவேகிகள் யுத்தத்திலுந் திரிஸ்யத்தி லசம்பாவமின்றித் திருக்குவாகவேயிருந்து முடிவில் வியாபகசாட்சாத்காரமென்னு ஞானப்ரகாசத்திற் கலந்தனரென் றறிவித்ததாம்.

* இ-ம். வாசனையுதித்தலே பந்தமும், அதனிவிர்த்தியே முத்தியுமாதலின் அவ்வகங்காரவாசனையை நீங்கல் ஞானசுகமாய் மனோசஞ்சல நீங்கு மென்பதாம்.

† இ-ம். விடயவாசனையுள்ள மனதைக்கெடுத்தலேமாயாநாசவுபாயமென்பதாம்

குக் குற்றமிருந்த மனமானது கால்விலங்காகும்.‡—

௩. ஞானிகள் மனதும் ஆத்மாவிற் சகத்தும் இருக்குந்தன்மையெப்படியெனின்.

ஆநந்தமும், ஆநந்தமில்லாததும் இவ்விரண்டுமில்லாதது அசைதலு மசைவில்லாததுமான அவ்விரண்டு மில்லாதது, குறைவில்லாத சத்து மசத்துமல்லாதது, இவைகளனைத்திற்கு நடுவுமல்ல, ஞானிகள் மனம் என்று சொன்ன மாத்திரத்தில், முடிவில்லாத வாத்மஞானமாகியும் சகத்துக்கு மேலாகியு மிருக்கின்ற தத்துவஸ்வரூபத்தில்சகமிருக்கின்ற தன்மையை அறிவானது வளரும்படியாக சொல்லுவாயென்று ஸ்ரீராமன் கேழ்க்க, வசிட்டமுனி சொல்லத்தொடங்கினர்.*—

௪. தத்துவவிலக்கண மறிவித்தல்.

வேருகாமல் எந்த விடங்களிலும் பொருந்தியிருந்தும் பொருந்தாமல் சூட்சுமத்தினுல் வேறுபடுகின்ற வாகாயத்தைப்போல, வேறுபடாத ஞானஸ்வரூபமானது எவ்விடத்திலும் பூரணமாக விருந்தும் வேறுபடுகின்ற அவ்வஸ்துக்களி லொன்றிலும் பொருந்தமாட்டாது பயனின்றிய சங்கற்பங்களியாவுமில்லாததாகியும், நாமமில்லாததாகியும், நாசமில்லாததாகியும், வேற்றுமையில்லாததாகியு மிருக்கின்ற வாத்மாஞானமானது, இடையூறில்லாத அம்பரத்தை நூறிலக்கம் பங்குசெய்து அவைகளிலொருபங்குக்கு சமானமாகச் சூட்சுமமாம்.—

௫. சத்தே சகத்தாகத்தோற்றுதல்

நன்மையைக் கொடுக்கின்ற ஆத்மா முதலாகிய நாமங்களிடப்பெற்றும், ஞானவான்களிடத்தில் நிருமலமாகிய ஞானமாகி, பொருந்து மஞ்ஞான ஸ்வரூபமாகிய சம்சாரரூபத்தோடும் ஏகமாயிருந்து, தன தாத்ம ஸ்வரூபத்தைத் தெரிவித்துக்கொண் டிருக்கின்ற ஞானமே, சத்தியமாய் தனக்குத்தானே யொப்பாயிருக்கின்ற ஞானமாத்திரத்துக்கு வேறில்லாமல் இச் சத்தாமாத்திரமேயாகாரமாயிருக்கின்ற உலகங்களனைத்தும், நெருங்கிய வலைகண்முதலாக உண்டாகிய சகலமும் சூழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தில் வேறுபடாமற் ருெடர்ந்து நின்றதுபோலவாம்.—

௬. சித்தெவரெவர்க்கெப்படியோ வப்படியேயிருக்குமெனல்.

ஆத்மாவையறியாத மூடர்களுக்கு, துன்பத்தைக்கொடுக்கின்ற நாநாவிதமாகிய சநநமாகியும் கொடிதாகியும் ஈனத்தன்மையாகியு மிருக்கும், எப்பொழுதுந் தனது ஸ்வரூபத்தைத் தெரிந்தவர்களுக்கு, ஞானப்ரகாசமாகியும், சகலமும் ஏகமாகியும், தானகவே யனுபவியாநின்ற சுபாவத்தினுல், கருத்துடன், கருத்தாவும் கருவியும் தொழிலுமாகிய விம்மூன்றையும் ப்ரகாசிப்பிக்கும் பாவனை செய்த நினைவுக

‡ இ-ம். விடயசுகந் துன்பமென் றறிவதே மனமிறக்கு முபாயமென்பதாம்.
* இ-ம். ஞானிகள் மனமானது ஒன்றிலும் பற்றற்று தன்மயமாய் விளங்குமென்பதாம்.

ளனைத்திற்கும் அந்தரசமாகவே யிருக்கும்; பிறவிச் செல்வத்தை யனுபவிப்பவர்களுக்கு அந்தப் பிறவிச் செல்வமாகவேயிருக்கும்.— உதயாத்தமான மில்லாத

எ. சகலமுஞ்சிற்ப்ரகாச மாகவே விளங்குதல்.

தாகியும், எழுகின்றதும், நிற்கின்றதும், பக்கத்திற் போதலும், வருதலுமென்கின்ற சகலமுமில்லாததாகியும், இவ்விடத்தில் இல்லாததாகியும், இருப்பதாகியுமிருக்கின்ற இக் குணங்களையுடைய ஞானமானது, களங்கமில்லாதவடிவமாய் பரிசுத்தமாகியவாத்மாவே ஞானாத்மாவினிடத்திலிருக்கும்; இப்பொழுது சொல்லிய மார்க்கமே உலகமென்று சொல்லப்பட்ட நாமத்தினால் நானாவிதவடிவமாகும்; தனதுசத்தி வியாபித்து எவ்விடத்தும் ஞானமெனனு நாமத்தாலொளிரும.¶—

அ. சித்திற்சகத்திருப்பதை யறிவிக்கத் தொடங்கல்.

இத்தன்மையானது ப்ரகாசமாகியும் நிற்கின்றவந்தகாரமாகியும், ஏகமாகியும், அநேகமாயுமிருக்கின்ற தனது செய்கையினால் தானே பூரண ஞான தத்துவ ஸ்வரூபத்தை விட்டு, இவனென்றும், அவனென்றும், நானென்றுஞ் சொல்லுகின்ற குணத்தை சிந்தித்த பாவனையினால், மெல்லச் சீவரூபியாய் சம்சாரியென்கின்ற நினைவினால் சொல்லியநானாவிதமாகிய சங்கற்ப விகற்பங்களிலழுந்தி பாவமும், அபாவமும், பற்றுதலும் விடுதலுமாயிருக்கின்ற பேதரூபமாகிய பதத்திலிருக்கும்.*— அந்தப் பேதமான விடத்திலிருந்து

௯. சீவனே மனமாய் அதுசகத்தாக விரிதல்.

புரியட்டகவுடலை அளவற்றவிகற்பங்களினால் செய்யும் செய்யாததாம்;இக்குணத்திலிருந்துசலிப்பமேதஸ்வரூபமாகிய சராசரமான வெழுபவவரிசையை எவ்விடத்தும் செய்யும், சமானமற்ற தானாகிய பிரமசத்தியினால் சொல்லிய யாவு முற்பத்தியாம், மீளவு நாசத்தையடையும், நிசவடிவமில்லாத பூதாகாயத்தில் கானற்சலம் பரவுவதைப்போல, மனோ சங்கற்பத்தினால் உலகம்பரவித்தோற்றும்.†—மிகுந்த மதத்தினால் தன்னை

க0. ஆத்மாவேயநாத்மாவாகத்தோற்றி விளங்குதல்.

யயலாரைப் போல தோற்றுகின்றது போல பிரிவில்லாத அந்த ஞானஸ்வரூபமே நெருங்குகின்ற பொய் போலத்தோற்றிற்று; சத்தமுதலிய பஞ்சவிடயங்களையும் யாதொன்றினாலறிகின்றாயோ, அதுவே ஸ்ரீ ராமா? முன்சொல்லிய இந்த ஞானாத்மஸ்வரூபமாம். தோற்றப்பட்ட சகலமும் தானாகவே நிறைந்திருக்கின்ற வியாபகமான பரப்ரமஸ்வரூபமானது இபபடி சொல்

¶ இ-ம். தத்துவவிலாசத்தைக் கிரமமாயறிவித்ததாம்

* இ-ம். சயஞ்சித் திருந்தபடியிருக்க வதன்சங்கற்பமே சீவனாகிப்பேதபாவத்திலழுந்தின தென்பதாம்.

† இ-ம். ஆத்மா தனது சங்கற்பமாகிய மனதினாலாதிவாகிக வாதிபௌதிக சரீரங்களை யுண்டாக்கிக் கெடுக்குமென்பதாம்.

லப்பட்டதேயாகும். இதற்கு இந்தப் பிரமமென்னு நாமமானது சுபாவமாம். இதற்கு வேறானதொன்று மில்லை.‡— சமுத்திரத்தில் அலைமுதலாக வுண்டான சகலமும் சலமாகி விளங்காமல் புழுதியாமா; அது போல ஒப்பற்ற வஸ்துவாகிய பிரமஸ்வரூபமாத்திர மேயல்லாமல், இரண்டென்கின்ற ஆகாசாதி கற்பனா நாமங்கள் ஒன்றுகிலுமில்லை. அக்கினியினிடத்தில் உஷ்ணமாத்திரமேயன்றி இரண்டுண்டாயிருக்குமோ, அத்தன்மையைப் போல எப்போதும் பிரமசுபாவ மான சகம் பிரமத்தி லபின்னமேயாம்; சரிதைகிரியா யோகமென்கின்ற மார்க்கங்களில் முதிர்ந்து நான்கு சாதனங்களு நிறைந்தவர்களுக்குச் சொல்லவேண் டும்.*— முன்னமே சீடனது இயல்பான பக்குவங்க ளைப் பரிசோதித்து பின்பு சர்வமுமாய்விளங்கிய பிர மஸ்வரூபமே நீயென் றுபதேசிக்கவேண்டும். அதி சயிக்கும்படி விருப்பத்திற் சுழலுபவர்களுக்கு இந்த ப்ரகாரஞ் சொன்னால் திரும்பாத நரகாக்கினியில் தள்ளி விட்டதாம். கலக்கம்பொருந்திய செல்வத்தி னது பிரியத்தைவிட்டு அறிவு தெளிந்திருக்கின்ற உனக்குச் சமானமானவர்களுக்கே ப்ரகாசமாய்த் தோற்றும். மயக்கமில்லாமல் அறிவிக்க வல்லமை யுடைய வாசாரியரைகிட்டி வருத்தமுற்றுவது தனது பவத்தை நீக்கிக்கொள்ளும் சீடனும் முன்சொன்ன பிரகாரமே யிருக்கவேண்டும்.†— தீபமும், சூரிய னும், புஷ்பமும், உண்டாயிருக்கும்போதே வீசப் பட்ட ப்ரகாசமும் பகற்காலமும் வாசனையும் உண் டானதுபோல, சித்துண்டானால் சகமுண்டாயிருக் கும்; தோற்றுதல் மாத்திரமே அதற்கு வடிவாயிருக் கும்; சொல்லிய விதார்த்தத்தால் இல்லையென்று வசிட்டமுனிசொல்ல, ஸ்ரீராமன்கேட்டு க்ஷீரசமுத்தி ரத்தைப்போலகெம்பீரத்தால் அளக்கக்கூடாததாயும் குளிர்ச்சியாயும் நிருமலமாயு மிருக்கின்ற தேவரீர் வாக்கியம் அதிசயமாகுமென்று சொல்லுவார்.o—

இந்தவசனங்களினால் இமைநேரத்தில் மறைப்பாகி யும் திரும்ப இமைநேரத்தில் வெளியாகியுமிருக்கின்ற

கக. திரிஸ்யவிலக் கண மறிவித்தல்.

கஉ. பிரமவுப தேச விலக்கணங் கூறல்.

கங. சிற்சுபாவ மே சகத்தெனல்.

கச. சர்வமுமாய் விளங்குகின்ற வா தமாவுக்குச்சங்கற்

‡ இ-ம். ஆத்மா தனது சங்கற்பத்தினாலதிஷ்டான மாயுண் டாகிய தன்னைமறந்து ஆரோபிதமான சகத்தாகத் தோற்றப்பட்டாலும் தானாகவே விளங்கிக்கொண் டிருக்குமென்பதாம்.

* இ-ம். பிரமத்திலுண்டான சகம் அப்பிரமப்பிரகாசமாய் விளங்குமென்பதாம்.

† இ-ம். சர்வம் பிரமமயமென்கின்ற உண்மையைச் சாதன சதுஷ்டயமுள்ள ஞானாதிகாரிக்கே யுபதேசிக்கவேண்டு மென்பதாம்

o இ-ம். சகமானது, சிற்சங்கற்பத்தாற்றோற்றி யச்சிற்ப்ராகாசமாகவே விளங்கு மென்பதாம்.

பம் வந்தகாரணமி யாதெனில்.

இந்தப்ரகாரமாய் கறுத்த மேகத்தினல் அற்பமாக வெய்யிலுங் குளிர்ச்சியும் அடிக்கடி வருவதும் போவது மாயிருக்கின்றகார்காலத்துக்கொப்பானேன். உண்மை யான வசிட்டமுனியே? முடிவில்லாததாகியும், அநேகமாகியும், ஏகமாகியும், கெடாத சத்தியை யுடையதாகியும், அளக்கக் கூடாததாகியும், ப்ரகாசத் தையடைந்து பெருமையுள்ள குணத்தை யுடைய தாகியு மிருக்கின்ற ஆத்மஞானத்துக்கு, இக்கிரிகைக ளானவை உண்டான ப்ரகாரம் சொல்லுமென்று இராமன் கேட்டார்.— மெய்யானப் பொருளுடைய மஹா வாக்கியத்தினது தத்துவார்த்தமாய், முன்னுக் குப் பின்விரோதமில்லாமல் பிரத்தியக்ஷமாகக் காட்ட வல்லமையுடைய நாம், இவ்விடத்திற் சொல்லிய வனைத்தும் உறுதிவசனமேயாம், உண்மையான ஞான திருஷ்டியானது, ப்ரசன்னமாய் அறிவு வியாபகமாக வுதயமானல், எனது வாக்கியமென்கின்ற ஞானத்தை கையிற் பொருந்தும்படியாக வலிதென்றும், எளி தென்றும், உள்ள ப்ரகாரமாய் கலக்கமின்றி நிலையாக விருந்து பார்ப்பாய்.¶— தனதுருவமானது கெடுவ தற்கே எத்தனஞ்செய்வதாய் அந்தகாரத்தை நீக்கிய உத்தமமாகிய வவித்தையினல், சகல துன்பமும் பொருந்திய குற்றமற்ற ஞானம்வரும், எய்யாநின்ற அம்புகளை அம்புகளாலும், நஞ்சைநஞ்சாலும், நெருங் கிய சத்துருவைச் சத்துருவினலும், தீயவழுக்கைத் தீயவழுக்கினலும், கெடுப்பதுபோல், அஞ்ஞானத் தைக் கெடுக்கவேண்டும். கருதி விசாரித்துப் பார்த்த வளவில்இவ்வவித்தையினதுசுபாவநீங்கிதனதுஅவித் தாநாசத்தினல் ப்ரமாநந்தத்தைக் கொடுக்கும்.†—உண் மையாய் மாயையில்லையென்று இந்தப்ரகாரஞ் சிந்திப் பாய். ஞானத்தை யுடையவனுய்சீவேஸ்வர வைக்கிய மான ஸ்வரூப ஞானத்தைப் பெற்றல், துன்பத்தைச் செய்கின்ற இந்த வவித்தையின்சுபாவத்தையறிவாய்; குற்றமற்ற சுகஞானமானது உதயமாகுமளவும் நடுக்க ஞ்செய்யு மாயையானதில்லை யென்பதை, எனதுவாக் கியத்தினல் தவறில்லாத நிச்சயமாக பிடித்திருப் பாய். சகலமும் பரிசுத்தமுள்ள பிரமஸ்வரூபமே யென்று அறிவினுற் றரிசித்தவர்கள் மோக்ஷ மடைந்தவர்கள்— பேத முள்ள ஞானமேமாயை யாம்; மிகவும் வருத்த முற்றுவது இம்மாயையைக்

கரு. அக்காரண மனுபவத்திற் றேற்று மெனல்.

கசு. மாயாநாச நிருபணம்.

கஎ. மாயையான துஎதார்த்தமாகவே யின் றெனல்.

கஅ. மாயையைக் கெடுக்கு முபாயத் தை யறிவித்தல்.

— ¶இ-ம். சங்கற்பமுதித்த காரணம் அச்சங்கற்ப மொடுங்கினவிடத் தொளிரு மென்பதாம்.

† இ-ம். அசுத்தமாயையைச் சுத்தமாயையாற் கெடுக்கவேண்டு மென்பதாம்.

கெடுக்கவேண்டும் ; ஞானமுள்ள வாத்மலாபத்தாலல்லாமல் மாயையென்னும் அலைகளடிக்கின்ற வாற்றின் கரைதோற்றுவாம் ; நன்றாகத் தோற்றினால் குற்றமற்ற வப்பதமே நசியாத நிருவாணமாம் ; இந்த மாயையானது உண்டாகிய தெந்தவித மென்று விசாரிக்க வேண்டாம். கெடும்படி கெடுக்கின்ற மார்க்க மெது வென்று ஸ்ரீராமா ? விசாரித்தறிவாய், கெடுமானால் இம் மாயையுண்டான குணந்தெரியும். ‡ —

கக. பிரமத்தில் பின்னமான வாத்ம சத்தி யுண்டானதறிவித்தல்.

இந்தமாயையான தெதிலுண்டான தென்றும், இதெப்படிப்பட்ட தென்றும், ஈதிறந்தமார்க்க மெது வென்றும் ? நசித்தாற்றென்றும். ஆகையால் வலியதுன்பத்தினிருப்பிடமான அஞ்ஞான மென்னும் வியாதிக்கு மருந்தாகிய ஞானத்தைப் புசிக்கக் கொடுத்தால், தீமையுள்ள சநநமென்கின்ற சமுத்திரத்தில் ஸ்ரீராமா ? நீ யமுழுந்தமாட்டாய் நெருங்கிய வாயுவானது தனக்காதார ரூபமான விண்ணிலுண்டாகிச் சஞ்சரிப்பதுபோல, பிரமத்திலுதித்த சிற்சத்தியால் ஆத்மசத்தை விளங்கும்.—

உ0. ஆத்மசத்தியிற் பின்னமான காலதேசகிரியாசத்தி யுண்டாதல்.

சொச்சமாய் வியாபித்திருக்கின்ற ஞானசாகரத்தில் அற்ப வசையினால் சீவேஸ்வரசக மென்னுங் குழாங்கள் ப்ரகாசிக்கும், சூட்சுமஞான திருஷ்டியினால் சந்தேகமின்றி பிரமஸ்வரூப மொன்றையுமே அகண்டாகார மென்றெண்ணி அந்த ஞான சமுத்திரத்தில் முழுகுவாய் ; சற்றேயசைவுற்று வியாபகஞானமாகிய ஞான சத்தியானது க்ஷணநேரத்தில் சர்வ சத்தியினாலும் ஒலிக்கவுண்டாகி, அய்ய இடமுங்காலமும் தொழில்களுமாகிய மூன்று பரிசுத்தமுள்ளசத்திகளை சகாயமாகச் சேர்த்துக்கொள்ளும் —

உக. இதுவுமது.

தனது ஸ்வரூபத்தை யறிந்து முடிவில்லாத பிரமபதத்தி லிருந்தும், ஞானசத்தியானது எனதுவடிவ மிவ்வளவு ப்ரமாணமுள்ள தென்றும் அறிந்ததுபோல பாவிக்கும். இந்தப்ரகாரம் இந்த சிற்சத்தி தனது ஸ்வரூபத்தைப் பாவனை செய்யில் தொடர்பாக அக் காலத்தில் நாமங்களின் அளவு முதலிய நோக்கானவை வந்தடையும் ; மிகுந்த விகற்பங்களை கொடுக்கு மாகாரமாய் சிற்சொரூபமானது கிரிகிக்குமிடத்துக்கும், காலத்துக்குஞ் செயலுக்கும், சேர்ந்தபந்தமாம்.—

உஉ. ஆத்மாவில் அகங்கார முதலிய பேத முண்டானதறிவித்தல்.

இவ்விடத்திற் சொல்லாநின்ற ஞானத்தினதுஸ்வரூபத்தை சகலரும் சீவனென்று சொல்லுவார்கள் ; அச்சீவனும் வாதனையைச் செய்துகொண்டு அகம்பாவனையை அடைந்திருக்கும்; வணங்

‡ இ-ம். மாயையிலிருப்பவ னம்மாயையைக் கெடுக்காவிடி னம்மாயாதீதம் வெளிப்படா தென்பதாம்.

கக் கூடாதவகங்காரமும் நிச்சயிக்குந் தொழிலையுடையதாய் களங்கமுள்ள புத்தியாம் களங்கநிறைந்த புத்தியானது மிகுந்த கற்பனாகாரமாய் மனனமுள்ளமனதாம்; விகற்பமிகுந்த மனது மெதுவாகவந்த இந்திரியங்களாம். — பஞ்சவிந்திரியங்களே பாணிபாதாகாரமான சரீரமென்று சொல்லுவார்கள். இப்படியல்லவா, கலந்திருக்கின்ற சீவனை வன்கலந்த சங்கற்பமென்கின்ற கயற்றினாற் கட்டுப்பட்டு துக்கமென்னும் வலையினாலெறியப்பட்டு தரமின்றி யிழிவை கிரமமாகவடையும். சத்திமயமாகிய மனமானது இவ்வண்ணமாய் பொருந்துதற்கு அகம்பாவத்தைப் பொருந்தி கோசகாரக்கிருமியைப்போல தனதாசையினால் பந்தத்தைத்தரிக்கும்.— தானே யுண்டாக்கி யிருக்கின்ற பஞ்சதன்மாத்திரையினால் தனித்தவலையாகிய உள்தொழில்களானவை தன்னைப் பந்தனஞ்செய்ய, காட்டிலிருக்கு மாண்சிங்கமானது காலிற் றளை பூண்டதுபோல, துன்பத்தினால் மனங் கரைந்துவாடும். நீங்காத மனமென்றும், புத்தியென்றும், ஞானமென்றும், தொழிலென்றும், அகங்காரமென்றும், யாதனாசரீரமென்றும், பிரகிருதியென்றும், மாயையென்றும், இழிவாகிய மலமென்றும், கன்மமென்றும், பந்தமென்றும், சித்தமென்றும், சொல்லப்பட்ட வவித்தையென்றும், ஆசையென்றும், பெரியோர்கள்சொல்லுவார்கள்.‡— அந்தப்பிரகாரம் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொன்றாகஆசாபாசங்களினால் உண்டாக்கிச் சொல்லிய சமானமில்லாத உலகத்தினது மிகுதியான இவைகளியாவையும், அகத்திற் றரித்திருக்கின்ற மனதுக்கு ப்ரயோசனமானது இதனிடத்தி லொன்றுமில்லை. கிளைகளையுடைய நீண்ட வாலவிருக்ஷத்தை ஆலம்விதையானது ஒளித்துவைத்திருக்கின்றதுக்குச் சமானமாம்; துன்பாக்கினியினால் வெதுப்ப மிகுந்த சினமென்னு மலைப்பாம்பினால் எடுத்துவிழுங்க ஆசையென்கின்ற சமுத்திரத்தலைகளால் மனந்தளர்வடையும்.†— இத்துன்பங்களினால் தனது வசந்தப்பி தன் பிரமஸ்வரூபத்தை மறந்துமிகுந்ததுன்பத்தையடைந்துதீதனுற்ற இந்தமனதை, சேற்றிலழுந்திய யானையை கரையிலெடுத்து விடுவதைப்போல மாயையினின்றுங் கரையேற்றுவாய்; பயங்கரமுள்ள மூப்பு மரணமென்கின்ற விஷாக்கினியினாற் றகிக்கப்பட்டு, நன்மைதீமைகளென்னும் சத்து

௨௩. ஆத்மசத்தி பந்தமடைவ தறிவித்தல்.

௨௪ இதுவுமது.

௨௫. மனத்தினது துன்ப மறிவித்தல்.

௨௬. மனதை இரக்ஷிக்க வேண்டுமெனல்.

‡ இ-ம். ஆத்மா தனது சங்கற்பசத்தியினாற் பஞ்சபூதபௌதிகமாயதனாற்றான் மறைப்பட்டதுபோலத் தோற்றுமென்பதாம்.

† இ-ம். தனது சங்கற்பரூபமான விடயங்களி லகம்பாவஞ்செய்வதனால் மனம் வருந்துமென்பதாம்.

ருவினல் தளருகின்றமனதுக்கு கிருபைசெய்யாதமனி தர்கள், கிருபையே வடிவமாயிருக்கின்ற ஸ்ரீராமா! நரவடிவமாயிருக்கின்ற இராக்ஷதர்கள்; ¶-இந்தப்ரகார

உஎ. மனம் வெளி முகப்படுதலி லுண்டான சிருஷ்டிக்கிரம மறிவித்தல்.

மேசித்துவிலாசமாயிருக்கின்ற சீவனனவன், வேற்றுமையானவாகாரமாய்ப்பிரமத்தி னிடத்திலிருந்து, மேருமலையினின்று வருகின்ற அருவிநீர்த்துளிகள்போல, தாங்கொண்ட பாவனையால் வந்திருக்கின்றவைகள் அளவில்லனவாம், வருகின்றவைகள் அளவில்லனவாம்; இனிவரப்பட்டவைகள் அளவில் லனவாம், வந்தவர்களிற்சிலர்சநநத்தைஒன்றை இரண்டைமூன்றை அடைந்தார்கள் துன்பத்தைக் கொடுக்கின்ற சநநங்கள் சிலர் நூற்றிலுமதிக்கப்பட்டார்கள்; அளவிடுதற்கரிய பிறவிகளைசிலரடைந்திருந்தார்கள். சிலர்கின்னரராக

உஅ. இதுவுமது.

வும்சிலர்கந்திருவராகவுமானூர்கள்சிலர்வித்தியாதரர்களாகவும், சிலருரகர்கள்கூட்டமாகவுநின்றூர்கள்; சிலர் சூரியராகவும், சிலர்பனிக்கிரணத்தையுடையசந்திரராகவும், சிலர்வருணனுகவுமானூர்கள்; சிலர்பிரமாவாகவும் சிலர் விஷ்ணுவாகவும், சிலர் சிவனுகவும் நின்றூர்கள்; சிலர் பிராமணர்களாகவும், சிலர் அரசராகவுநின்றூர்கள்; சிலர் வைசியராகவும், சிலர் உபகாரத்தொழிலையுடைய சூத்திரராகவுநின்றூர்கள்; சிலர் மிருகங்களாகவும், சிலர் பட்சிகளாகவும், சிலர் ஊர்வனவாகவும் வந்தார்கள்; சிலர் பத்திரமாகவும், சிலர் காயாகவும், சிலர்கனியாகவும், சிலர்வேராகவும், சிலர்துரும்

உகூ. இதுவுமது.

பாகவுமானூர்கள்,— சீவரானவர்கள் சிலர்கள் மயேந்திர பருப்பதமாகவும், சையபருப்பதமாகவும், மகாமேருவாகவும், பொதியமலையாகவும், மந்தரமலையாகவும், சிறப்பாக நின்றூர்கள்; சிலர்கள் கடம்பவிருக்ஷமாகவும், எலிமிச்சமரமாகவும், பனைவிருக்ஷமாகவும், ஆச்சாமரமாகவும், பச்சிலைமரமாகவும்நெருங்கி நின்றூர்கள்; சிலர்கள்உவராகவும், ததியாகவும், நெய்யாகவும், பாலாகவும், கருப்பஞ் சாறுகவும், தேனுகவும், சுத்தசலமாகவு மிருக்கின்ற பெருங்கடலாகவும், அடைந்திருந்தார்கள்; சிலர் திக்குகளாகவும், சிலர் ஆறுகளாகவுமிருந்தார்கள்; சிலருயர்ந்தவர்களாகவும்,

கூ௦ இதுவுமது

சிலர் தாழ்ந்தவர்களாகவுமிருந்தார்கள்—கையினலடிக்கப்பட்ட பந்தைப்போல் காலனலடிக்கப்பட்டு அளவற்றசரீரத்தில் ப்ரவேசித்து சலித்து விவேகமடைந்தும், அறிவில்லாத சிலபேர்கள் சநநத்திற்றிரும்பவும் விழுந்தார்கள், அஞ்ஞானத்தினல் திரிலோகமான சிருஷ்டியைச் செய்து உற்பத்திஸ்திதிலயமா

¶ இ-ம். மனதைவிடயத்தினின் றுதிருப்பிப்பிரமத்திற்சேர்க்கவேண்டுமென்பதாம்.

குப்படிவிரிந்து சமுத்திரத்தின் அலைகளைப்போல் பிரமபதத்திற்சொல்லிய மாயையானது வீணாக மித்தையினால் மிகவும் விஸ்தாரமாம்.‡— சகலமுந் தெளிந்தறிந்த வசிட்டமுனியானவர் இவ்வண்ணஞ் சொன்னமாத்திரத்தில், சீவனானவன்மனதினிடத்திற் சேர்ந்திருந்தும் பிரமாவென்று நாமமடைந்தது எவ் வண்ணமென்று விரிவாகச்சொல்லுமென்று ஸ்ரீராமன் கேட்கவும், வசிட்டமுனி சொல்லுவார். ஸ்ரீராமா? அந்தமார்க்கத்தை நீ கேட்டவளவில் சகலசகங்களும் உண்டான மார்க்கத்தையறிவாய், இதன்குணங்க ளனைத்தையும் அறிவிற்பொருந்த கேட்டு அறிவை யடைவாய்.— திக்குகள் காலங்கள் முதலானவை களால் கெடாத வாத்மாவானது, தனது சிற்சத்தியி னால் இச்சாவிளையாட்டாகவும், திக்குகாலங்கண் முத லிய விவைகளோடு கூடிய சரீரத்தை இசைந்திருக் கின்றபொழுதே சீவாத்மாவுக்கு பரியாயநாமமென்று சொல்லப்பட்டகுற்றமுள்ள வாசனையின் வசத்தினால் சஞ்சலமுள்ள மனமுண்டாகித்தோற்றும்.—தொழில் களும் தொழிலில்லாமைகளுமாகிய இவ்விரண்டு மொருமித்தெழுந்த மனோசத்தியானது, தொழிலை யடைந்து சுபாவமாக ஆதியிற்சூட்சுமமாய் சத்ததன் மாத்திரைக்கு விடயமான பாவனையினால் உண்டாகிய மேலான வாகாயபாவனையைபாவிக்கின்றக்ஷணத்தில், அப்பொழுதே அச்சலனமார்க்கத்தினால் அந்த மன மானது ஆகாசமென்னுங் கனத்தைப்பொருந்தும்.—

மனமானது பரிசதன்மாத்திரையென்னும் பாவனை யினால் உண்டாகாநின்ற வாயுவினது சலனத்தை பாவனைசெய்து காற்றாக நிறையும், ஆகாசமும்வாயுவு மாகிய இந்தவிரண்டின்வடிவு நெருக்கத்திலிருந்தும் வெப்பம்பொருந்திய வக்கினியாகவுண்டாகி இரண் டாகிய சத்தமும் பரிசமும் திடமாகப் பழக்கஞ்செய் கின்ற குணத்தினால் உருவதன்மாத்திரையாகி, இம் மூன்றுதன்மாத்திரைகளோடும் பொருந்தும்.— ஒரு க்ஷணத்தில் இரசதன்மாத்திரை பாவனைசெய்யஅப்பு வென்னும்ஞானம் அம்மனதிலுண்டாகும், இந்நான்கு குணங்களையும் அக்குணங்களோடும் கூடுகின்ற மன மானது, ஒருக்ஷணத்தில் கருதித்தேடி கந்தத்தை பாவிக்கவும், பாவிக்கின்ற கந்ததன் மாத்திரையினால் பிருதிவென்னு ஞானமுண்டாம்; இவ்வண்ணமே பிரி வாகிய பஞ்சபூதங்களும், பஞ்சதன்மாத்திரைகளும்,

ருக. ஆத்மசங்கற்பமான மனது பிரமமான தெங்ஙனமெனின்

ருஉ. ஆத்மாவில் மனமுண்டானதறிவித்தல்.

ருரு. மனஞ்சத்ததன் மாத்திரையாகத்தடித்தல்.

ருச. மனமானதுபரிசதன் மாத்திரையாகவும், உருவதன் மாத்திரையாகவுந் தடித்தல்.

ருரு. மனமானது ரசதன் மாத்திரையாகவும்கந்ததன் மாத்திரை யாகவுந்தடித்தல்.

‡ இ-ம். சைதன்யத்தில் பின்னமாகவுண்டாகிய சிற்சத்தியே பின்னமான ப்ர கிருதிமுதற் சீவேஸ்வர சகங்களாகத் தோற்றினதையறிவித்ததாம்.

௩௬. மனமானது புரியட்டகமாக விளங்கல்.

தன்னைச்சுற்றிச்சுற்றிபருத்தவாகாரமாய்பிரபஞ்சமா
கத்தோற்றும்.—ப்ரகாசித்திருக்கின்ற வக்கினிப்பொ
றியைப்போல விளங்காநின்ற சரீரத்தை ஆகாயத்திற்
றெரியப்பாவிக்கும், அகம்பாவனையான கிரியைப்பொ
ருந்தி புத்தியுடனும் பஞ்சதன்மாத்திரைகளோடும்
பொருந்தி அப்படிசொல்லப்பட்ட சகலமுங்கூடி புரி
யட்டக சரீரமாய் ஆத்மாக்கள் இதயகமலங்களில்
வண்டாகும், மிகுந்தவாசனைகளினால் சரீரத்தை பா
வனைசெய்யும்.†— சித்தமானது பாவனைமுதிர, வில்

௩௭. மனமானது சமஷ்டி பௌதிகசரீர மாயினதறிவித்தல்.

வக்கினியைப்போல தூலசரீரமாய் கருவிற்பாய்ந்த
தங்கநிறத்தைப்போல மிகவும் ப்ரகாசித்து, நிமலா
காயத்தில் வடிவுண்டாயிருக்கின்ற அந்தப்ரகாசமா
னது தனதுசத்தியினால் தனிமையாக மேலேசிரசும்,
கீழேபாதமும், பக்கங்களிற் கரங்களும், மத்தியில்
வயிறுமாக ப்ரகாசித்தோனாகும்.— முதன்மையான

௩௮. மனமானது பிரமனாயினதறிவித்தல்.

காலசத்தியினால் வெளிப்படையாய் நினமலமானவடி
வையுடையதாய், புத்தியுடன் சாமர்த்தியமும், வலி
மையும், உயர்ச்சியும், மெய்ஞ்ஞானமும், செல்வமும்
பொருந்திய அவ்வவயவங்களையுடையவனே விஸ்வத்
தையுடையவனாய் யாவையுந்தெளிந்த பிரமாவாம்.
அப்பிரமாவே அழகாகியும் உத்தமமாகியும் விளங்கா
நின்ற தனதுஸ்வரூபத்தை நன்றாகப்பார்த்து.*—
கெடாத சற்குணங்களையுடையபகவானாகியும், திரி

௩௯. பிரமசந்நிதியிலுண்டாகிய விசேடத்தை யறிவித்தல்.

காலங்களையும் வெளியாகப் பார்க்கின்றவனாகியுமிருக்
கின்ற பிரமாவானவர், ஏகமாகியும், ஞானாகாரமே
வடிவமாகியும், எல்லையற்றதுமாகியுமிருக்கின்ற பர
மாகாயத்தில் முன்னுண்டானது என்னவென்று சிந்
தித்தான். களங்கமற்ற பூரணஞானதிருஷ்டியையுடை
யவனாய் அப்போ துதயமான பிரமன் அநேககோடி
சிருஷ்டிகளை முன்புசெய்யப் பார்த்தான்.०— வரு

௪०. புருடார்த்த சாதனங்கூறல்.

ணங்களும், குலங்களும், தருமங்களுமாகிய யாவையு
மறிந்து அவைகளை விளையாட்டினா லுண்டாக்கினான்.
சொல்லுதற்கரியவிளையாட்டினால் அழிகின்றகந்தர்வ
நகரத்தைப்போல சங்கற்பத்தினால் உண்டாகப்பட்ட
வாத்மாக்களனைத்தையும், தருமார்த்த காமமோ
க்ஷத்தி லடைவிக்க மேலான அளவில்லாத வேதசாத்

---

† இ-ம். மனமானது பஞ்சதன்மாத்திரை யகங்காரம் புத்தியென்பவைகளோடுங்கூடிப் புரியட்டகசரீரமாக விளங்குமென்பதாம்.

* இ-ம. மனமானது வீராட் புருடரூபமாகத்தடித்துத் தனக் காதாரமா யிருக்கின்ற சிதாகாயத்தைப் பார்த்ததென்பதாம்.

० இ-ம். சித்தினது விலாசத்தைக்கொண் டளவற்றசிருஷ்டியைச்செய்யச் சிந்தித்த தென்பதாம்.

திரங்களை அவ்வாத்மாக்களுக்காக பிரமாவானவருண்டாக்கினர். ¶— அயனுருவமான மனதினுல் இப்பஞ்சபூதசிருஷ்டியிலிருந்தும், பௌதிகசிருஷ்டியுண்டாகிற்றல், கட்டவிழ்ந்துமலராகின்ற புட்பங்களைத்தும்வசந்தகாலத்தில் மலர்கின்றதையொத்திருக்கும். வேறுபாடாகிய தேவர்கள் மானிடர்முதலாகிய யாவரும் தங்கள்தங்கள் சங்கற்பத்தினுல் சநநத்தையடைந்தார்கள்; இப்படியுணர்ந்து அச்சங்கற்ப நசிக்கில், நெய்யில்லாத விளக்கைப்போல சநநமடையார்கள். *— ஆகாயத்தையொத்த சகலமும் சங்கற்பமாத்திரத்தில் விருதாவாகவளரும். இப்படி யுண்டாகிய வுலகமானது சாக்கிரத்திலுண்டாகுஞ் சொற்பனத்தைப்போல, ஸ்ரீராமா! நீ யறிந்துகொள்வாய். எந்த விடங்களிலேயும் எப்பொழுதும் ஈனமாகச் செனித்ததுமில்லை, மரித்ததுமில்லை, ஏகமான பரமார்த்த ஞானத்தினுல் இவையாவு மித்தையாகச்சாரும். §—

சுக. சங்கற்பமே சநந மாமெனல்.

சஉ. சகமுமித்தை யென்றுரைத்தல்.

ஆசையென்னு மகாசர்ப்பமானது நெளிகின்ற புற்ருகிய சம்சாரபாரமானது முழுதுமசத்தியமென்று சம்சாரபாசத்தை முழுதுங்கெடுத்து அளவற்ற பிரமபதத்தில், ஸ்ரீராமா! நீ நிலைபெற்று வாழக்கடவாய், அழகாகத்தோற்றுகின்ற கந்தருவநகரமானது இருந்தென்ன நாசமடைந்தென்ன, அதனுல் நன்மையோ தீமையோ, வேறுபாடாகிய பாசமாயையான மனைவி புத்திரர்கள் வாழ்ந்ததினுலென்ன, கெட்டதினுலென்ன.— மனைவியிடத்தும் பொருளினிடத்தும் பாசமிகுமாகில் விலங்காகும்; அவ்வாசையைக்கட்டிக் கொண்டால் ஆரதைக்கெடுத்து நீக்குகின்ற உபாயமுடையவர்கள். அஞ்ஞானிகள் இச்சைமிகுந்து மிகுதியான அந்தப்போகத்தில்சுழன்று, கலக்குகின்ற கொடியதுன்பத்தை நினைத்தபோது, தீரமுள்ள ஞானிகளுக்கு நிராசையுள்ளதாய் மனமானது தெளிவையடையும். †— இப்படியான நன்மையினுல் சம்சாரபாரமாகிய தொழிலினெருங்குங்காலத்தில், நீங்கின பொருளுக்கு துன்பப்படாமல் வந்தடைந்த பொருளை மாத்திரம் அனுபவித்து சீவன்முத்தனுக வாழக்கடவாய். இப்போதில்லாமையாக இனி வரு

சங. சம்சாரமித்தையெனல்.

சச. தனதுசங்கற்பமே துன்பமாமெனல்.

சரு. தத்துவத்திற்சகத்திருக்கின்ற தன்மையைக் கூறி அத்தத்துவமுணர்ந்த மகான்களிலக்கணங் கூறல்

¶ இ-ம். சங்கற்பவடிவமாயுள்ள சீவகோடிகள் தங்கள் சங்கற்பங்களை நீக்கி யாத்மஸ்வரூபமடையும்பொருட்டு வேதாகமங்களை விதித்ததென்பதாம்.

* இ-ம். சங்கற்பநாசமே சநநமரண நாசமென்பதாம்.

§ இ-ம். பிரமசங்கற்பத்தி லுண்டாயிருக்கின்ற சகலமும் அப்பிரமதிருஷ்டியில்லை யென்பதாம்.

† இ-ம். மித்தையாகிய சம்சாரத்தைச் சத்தாகப்பார்த்து வருந்து மூடர்களைப் பார்த்தாவது தான் றெளியவேண்டு மென்பதாம்.

கின்றபொருள்களை நினையார்கள்; வந்தபொருளைக் குற்றமாக நினையார்; பூரண ஞானத்தை யுடையவர்களுக்கு, தாமரைக் கண்ணனே? இதுவே யியல்பான

*௬௬. சத்துக்களிலக்கணங்கூறி யநுபவ முண்டாகுஞ்சாதனங் கூறல்.*

குணம்.— காணப்பட்டவனைத்தும் மித்தையேயென்று மனதில் சகலவிடயங்களிலும் வெம்மையான வாசனையை நீக்கின பண்டிதரான சர்வமுந்தெரிந்த சத்துக்களை, பாசமாயையானது வாதிக்கமாட்டாது. சத்தசத்தென்று சொல்லப்பட்ட அவ்விரண்டின் மத்தியில் பரிசுத்தமான பரமபதத்தில் அறிவைத் திடமாகவழுத்தி வேறான சரீரத்துக்கு உள்ளும் புறம்புமான சகத்தை, ஸ்ரீராமா? நீபிடித்தலும், விடுத்தலும்

*௬௭. இராகத்துவேட நீக்கத்தின் பலன் கூறல்.*

வேண்டாம்.— எந்த தொழில்களிலும் இராகத்துவேஷ மில்லாமலிருந்து ஆத்மஞானத்தை யடைந்தவர்களுக்கு, அத் தொழில்களில் தாமரையிலையிற் சேர்ந்திருக்கின்ற சலத்தைப்போல அறிவானதுபற்றமாட்டாது. தேகவிந்திரிய விடயங்களின் நன்மையான விரசத்தைவிடும்படி ஸ்ரீராமா? உனது மனம்பொருந்தவுண்டானால், அறியத்தக்கவாத்மஞானத்தை யறிந்தவனாய் சம்சாரசாகரங்களைக் கடந்து அப்போதே பவ

*௬௮. வாசனையுள்ள மனதைக் கெடுக்க வேண்டுமெனல்.*

த்தைநீங்கினாய்.—மேலானபரமபதத்தைவிரும்பினால் சகலவாசனைகளிலுமிருந்தமனதை மெய்யாகிய ஆத்மஞானத்தினால் புட்பத்தினின்றும் வாசனை நீங்குவதுபோலப் போக்குவாய், ஈனமுள்ள வாசனையாகிய அலைகளையுடைய சலநிறைந்த சநநசாகரத்தில் அமிழுபவர்க்கெல்லாம் பயமின்றி சுகபோதங் கப்பலாகிக் கரையேற்றுமே யன்றி வேறொன் றுண்டாமோ.—

*௬௯. சகநிஷ்டையறிவித்தல்.*

ஆத்மஞான ப்ரத்யக்ஷமானவர்கள் சகலத்தையும் அநுசரிப்பார்கள்; சகத்தின்குணங்களைப் பொருந்தார்கள்; நீங்கார்கள்; சுவர்க்கத்திலுள்ள புட்பவனத்தையும் இச்சிக்கார்கள்; சூனியமான விடத்திலும் துன்பமடையார்கள்; சூரியனைப்போல நியதியையுந் தள்ளமாட்டார்கள்; மேன்மையானசத்துக்கள்சகலத்தையு மநுசரிப்பார்கள். ஸ்ரீராமா? இந்தப்ரகாரம் நடப்பாயென்று வசிட்டமுனி சொன்னவளவில்.‡—

*௭௦. அநுபவத்தில் மகிழ்தல்.*

வான்மீகர் பரத்துவாசரே? கேளென்று சொல்லுவார்; இந்தப்ரகாரம் வசிட்டமுனியானவர் பிரமபதத்தைச் சொல்லக்கேட்டு திரமாகப் பூரணமானவரைப்போல ஸ்ரீராமர் களங்கமற்றவராய் மனது நீங்கி வலிமையிற் சமானமில்லாத தத்துவஞானமென்னு நல்லவமிர்தத்தினானிறைந்து குளிர்ச்சியாய் திரமுற்று

‡ இ-ம் திருக்குதிருஷ்டியினாற் றிரிஸ்யதிருஷ்டியைக் கெடுக்கிற் சிற்சுபாவமாய் விளக்குவரென்பதாம்.

வளராநின்ற பூரணசந்திரனைப் போல பூரணத்தை யடைந்தார். வசிட்டமுனி திரும்பவுஞ் சொல்லத் தொடங்கினர்.—சகங்களனைத்தையும் ஒருகாலத்தில், சிவன்சிருஷ்டிப்பார்; ஒருகாலத்திற் பிரமன்சிருஷ்டிப் பார்; ஒருகாலத்தில்விஷ்ணுசிருஷ்டிப்பார்; ஒருகாலத் தில் முனிவர் சிருஷ்டிப்பார்கள்; மேலான பிரமாவான வர் ஒருகாலத்திற் ருமரையிற் பிறப்பார்; ஒரு காலத் திற் சலத்திற்பிறப்பார்; ஒருகாலத்தில் அண்டத்திற் பிறப்பார்; ஒருகாலத்திலாகாயத்திற் பிறப்பார்.—ஒரு சிருஷ்டியில்வலிமையான தருக்களேநிறைந்திருக்கும்; ஒருசிருஷ்டியில் மானிடரே நிறைந்திருப்பார்; ஒரு சிருஷ்டியில் பலமலைகளே நிறைந்திருக்கும்; ஒரு சிருஷ்டியில் மிகுந்த மண்ணுகவே நிறைந்திருக்கும்; ஒரு சிருஷ்டியில் கல்லுமயமாய் நிறைந்திருக்கும்; ஒரு சிருஷ்டியில் மாமிசமாய்ப் பார்க்கப்படும்; ஒரு சிருஷ்டியில் தங்கமயமாயிருக்கும் பூமியானது இவ் வண்ண நானாவிதமா யிருக்கும்.—ஆகாயமுதலாகும், பிரிதிவுமுதலாகும், அப்புமுதலாகும், அக்கினிமுத லாகும், காற்றுமுதலாகும், இவ்வண்ணமேசிருஷ்டிக டோறும் ஒவ்வொன்று முதன்மையாகும். நான் முதற்கண் ஒரு பிரமசிருஷ்டியை சுருக்கமாக உனக் குச் சொன்னேன்; இத்தன்மையால் முன்பு உதிக்கு நியமமானது இச்சிருஷ்டிக்கொருவிதமாகவில்லைநானா விதமாகத் தோற்றும்.— கிருதமுதலிய நான்குயுகங் களும் திரும்பித் திரும்பிப் பிறந்துவரும், சகத்தின்க ணொருவஸ்துவாவது வளைந்துவளைந்து அநேகந்தரம் பிறந்து சுழலாததில்லை; அந்தகார மிகுந்த மஹா மாயையினது வர்ணிப்புக்கு, முன்னிலையான அரிய வேதங்களையாராய்ந்தறிந்த தாசூரமுனிவன்கதையை நாமிவ்விடத்திற் சொல்ல, ஸ்ரீராமா? நீகேட்கக்கடவா யென்று வசிட்டமுனி சொல்லுவார்.¶— இந்தப் பூமிக்குள் அழகு நிறைந்த புட்பவனத்தில் குளிர்ந்த தென்றற்காற்று பரிமளிக்கின்ற மகததேசத்தில் கருப் பூரமாசனை பொருந்திய வாழைகளும், கடம்ப விருக்ஷங்களும், கோங்கு விருக்ஷங்களும், நெருங்கி யிருக்கின்ற கருத்துக்கினிமையான ஒரு சிறந்தமலையி னிடத்தில்,— மோக்ஷவுலகத்தை யடைவதற்கான தவத்தைச்செய்து பிரமாவைப்போ லுயர்வாகிய சர லோமாவென்னும் பெயரையுடைய முனிவனது புதல்வனுகிய தாசூரனென்னும் நாமத்தையுடைய முனிவன், தேவலோகத்திலுள்ள பிரகஸ்பதிபகவா

டுக. சகஞ்சங்கற்பவடிவமா மென்பதை வைப்புறுத்து நிமித்தஞ் சிருஷ்டிகளி லொவ்வொன்றுக்கு நியம மின்றெனல்.

டுஉ. இதுவுமது.

டுங. இதுவுமது

டுச. இதுவுமது.

டுரு. இவ்வனுபவத்துக்குத் திருஷ்டாந்தங் கூற வேண்டி மலையின் சிறப்பு கூறல்.

டுசு. தாசூரமுனிவன் பெருமையைக் கூறல்.

¶ இ-ம். சிருஷ்டிக்குஞ் சிருஷ்டிப்பவருக்குஞ் சிருஷ்டிக்கப்பட்டவைகளுக்கும் பிரமசத்தியி னியமப்படியேயன்றி யோர் வரன்முறையான நியமமின்றென்பதாம்.

னுடைய குழந்தையாகியகசனுக்குச்சமானமானவன், மானிடலோகத்தின் மேலானவன், குற்றமற்ற தவத்தினுற் பெரியவன்;— ஒரு புத்திரனுடன் சரலோமாவென்னு முனியானவன், அந்த மலையின்கண்ணுள்ள கானகத்தில் பலயுகங் கழிந்தபின்பு; செய்த கூண்டைவிட்டு பறவைசெல்வதுபோல, வினையியற்றுஞ்சரீரநீங்கிப்போய் தேவரூபங்கொண்டான்,—தனியனுக அக்கானகத்தில் தாசூரனென்னும் புதல்வனுனவன், யினிமையானபிதாவின்மரணத்துக்கழுது,நீராற்செய்கின்ற பரிசுத்தமாகிய பிராமணுள் பூசை முழுவதுஞ் செய்யாம லிரங்கிய மனதுடையவனுய் புருடனைப் பிரிந்த அன்றில் பட்சியானது கதறுகின்றதுபோலக் கதறிக்கொண்டு.— மாதா பிதாக்களின் பிரிவினுல் மிகவும் வெப்பத்தோடுந் தளர்வுற்ற புத்திரனுகிய தாசூரனை, கிருபையினுல் வனதேவதை பார்த்து கிருபைசெய்து ப்ரத்தியக்ஷமாகாமனின்று, மகாமுனியின்குமாரனே? முனியானவரே? மனந்தெளிந்தவரே? தெளிவில்லாத மூடர்களைப் போல துன்பமுற்றுத் தளர்ச்சியடையாதே;— அநித்தியமாகிய சம்சாரத்தினுடைய பொய்யை நீயறியாத தென்னகாரணம், பிறந்தபொழுதே மரண மெவ்வளவுந் தப்பமாட்டாது, கண்ணீர் சொரிய வழுகின்றவனே ? சூரியனுதயமானுல் மேற்றனது நிலையான அஸ்தமானத்தை அடையமாட்டானென்று சொல்வாருண்டோ. ¶ — வீணுகத் துன்பமடையாதேயென்று மறைந்திருந்து வனதேவதை சொல்ல; கேட்டறிந்து சோருகின்ற துன்பத்தைக் கெடுத்து, ஸ்திரமாய் வேதவசனத்தின்படியே உதகபூருவமாய்ச் செய்யவேண்டிய கிரிகைகளைச் செய்து திரும்பாத மோக்ஷத்திற் சேர்க்கின்ற தவசில் மிகவும் விருப்பமடைந்து,— தனக்குரிய வேத சம்பந்தமான கருமத்தினுல் தவத்தைச் செய்யும்பொருட்டு, மிகுந்த சங்கற்பத்தினுல் பரிசுத்தமான வாசாரத்தின் மிகுந்தான். பூரண ஞானமில்லாதவன் பரிசுத்தமுள்ள பூமியில் போனவிடங்களியாவுஞ் சீலமல்லவல்லவென்று,— விருட்சத்தினது முனையே சுத்தயென்று அழகிய பட்சியைப்போல அவ்விடத்தில் தவத்தை செய்யத் தொடங்குவோமென்று மனதிற் பொருந்தச் சிந்தித்து வெவ்விய அக்கினியை வளர்த்து தேவ கணங்களைக்கருதி,— தனதுதேகத்தை யரிந்தெடுத்து யாகஞ்செய்த மாத்திரத்தில், தேவர்களுக்கு எனதிடமாக கலை ஞானத்தையுடைய பிராமணன் சரீரத்தி

(௫எ. பிதாபூரணமாதல்.)
(௫அ. தாசூரன் வியசன மடைதல்.)
(௫கூ. வனதேவதை தெளிவித்தல்.)
(௬0. இதுவுமது.)
(௬க. சாதனசதுஷ்டய முதித்தல்.)
(௬உ. ஏகாந்த ஸ்தானம் விசாரித்தல்.)
(௬ரு. தேவர்களைக்குறித்து யாகஞ் செய்தல்)
(௬ச. அக்கினி தேவன் வெளிப்படுதல்.)

¶ இம். மாதாபிதாக்கள் பிரிவுக்காற்றுமல் வியசனப்பட்டு தெளிவுற்றதென்பதாம்.

னுள்ள மாமிசங்களால் கண்டமும் தோள்களு முத லானவைகள் வேகவேண்டிய தென்னவென்று ப்ர காசமுள்ள அக்கினிதேவனினைத்து மறையவர் முன்பு உதயமாய்,— நீ ரெண்ணிய காரிய மென்னவென்று கேட்க, கரங்களைக் கூப்பிக்கொண்டு தோத்திரஞ் செய்து பரிசுத்தமானவிடத்தை இப்பூமியிற் கண்டில னுதலால், விருட்சத்தினது நுனியிலிருக்கின்ற துளி ரின்மேல் இடங்கொடுத்தனுக்கிரகஞ் செய்வாயென்று தாசூரமுனி கேட்க, வரத்தை முழுதுங்கொடுத்து அக்கினிதேவன் சமுத்திரத்தினலையைப்போல மறை ந்தனர்.— காட்டினிடத்துள்ள ஒரு கடம்ப விருக்ஷ மானது, மேகமண்டலத்தைத் தாண்டி ஆகாசத்தை யளாவியிருக்கின்றது; அந்த விருக்ஷத்தின்மேல்வளரு கின்ற தளிரென்கிற வாசத்தினது இடத்தில் சந்தேக மின்றி தாசூரமுனிவரிருந்து நல்லதவஞ் செய்ய மிகவும் விரும்புகின்ற மனதுடையவன்.— ஒருக்ஷண நேரத்தில் திக்குகளையெல்லாம் பார்த்து சொல்லப் பட்ட பத்மாசனத்திலிருந்து விரிந்த திக்குகளைத் திலுமின்று நீங்கி, பிரமஞானத்தை யறிதற்கரிதானவ னுய் கருமமட்டிவிருப்பதாய் ப்ரயோசனமாகிய காற் பண்ணியத்தை விரும்பாத மனதினல் பன்னிரண்டு வருடம் யாகங்களைச் செய்து தேவர்களுக்கு அவிர்ப் பாகங்கொடுத்தான்.— கோமேதகங்களாலும், அசுவ மேதகங்களாலும், நரமேதகங்களாலுஞ் செய்யாநின்ற குற்றமற்ற யாகங்களை யெல்லாம் வேதவிதிப்படி செய்து, வெகுகாலம் விக்கினமின்றி நடந்ததினல் ஸ்திரமாகிய மனமானது மிகவுந் தெளிவுற்று பூரண மானதினுலும், அவ்விடத்தே கண்ணுகிய ஞானமா னது நல்லமனதில் தானே வந்தடைந்து பூரணமாயி ற்று.‡— சநந மறைவானது நீங்கி வாசனைகளின் நாம மும் மிகவுங் கெடுத்துள்ள மகானுகிய தாசூரமுனி, தேன்கூடுகளுள்ள கிளைகளின் றுளிரின்மேல் இருந்த காலத்தில், ஒரு தினத்தில் நிருமலமாகிய கண்களுக்கு முன்னேவர விரிந்த புஷ்ப வஸ்திரங்களைத் தரித்த உயர்ந்த வனதேவதையானவள் தோற்ற, ஞானவா னுன முனிவனும் பார்த்து நீயாரென்று கேட்க, அழ குள்ள தெய்வப்பெண் சொல்லுவாள்.— மகான்களி டத்தில் பெறுதற்கரிய அன்படைந்தவர்கள் ஆசித்த வணத்தும் அருமையானுலும்கணத்தில் இலகுவாய்க் கிடைக்குமென்று சந்தேகமற் றுணர்ந்தேன், ஞானு

சுகூ. அக்கினி தேவன் வரங்கொடுத்தல்.

சுசு. பரிசுத்தமுள்ள ஸ்தானத் திருத்தல்.

சுஎ. யாகமான சிகமாகச் செய்தல்

சுஅ. ஞான முதித்தல்.

சுகூ. வனதேவதை தெரிசித்தல்.

எ0. வனதேவதை யுரைத்தல்.

‡ இவன், நிட்காமயாகச்செய்த கிரியாபலத்தினுற் பூரணஞானமுதித்த தென்பதாம்.

னுக்கிரகஞ்செய்கின்றமுனியே? நீரெழுந்தருளியிருக்கின்ற இவ்வாரணியத்தின் வனதேவதையாம்; இவ்விடத்தில் மலர்ந்த புட்பக்கொடியாகிய விநோதமுள்ள வீட்டினிடத்தில் யான்பிரியத்துட னிருக்கின்றவள்.-

எக. வனதேவதை தனது சிறுமையை யுரைத்தல்.

சித்திரைமாதத்தில் சந்திரனானவன் பதின்மூன்று கலையைப்பொருந்திய திரயோதசியில் பார்த்தற்கரிய மன்மதனுடைய மகோச்சவகாலத்தில், புஷ்பவனத்தில்வந்துசேர்ந்த வனதேவதைகளினது கூட்டத்தை நெருங்கினேன்; தோழிகளனைவரும் தேடுதற்கரிய புத்திரர்களுடன் களித்திருந்தார்கள்; குழந்தையில்லாத நான் தளர்வானேன்.— இச்சித்தவர்களுக்கு எண்ணியதைக் கொடுக்கின்ற கற்பக விருக்ஷத்தையொத்த நீயிருக்க, நாதனே? இரட்சக ரில்லாதவர்களைப்போல யான் புத்திரனுக்கு வியசனப்படுவது நன்மையோ, புத்திரனை நீர் கொடுக்கவேண்டும், அப்படியல்லாமல் உமது கிருபை என்னிடத் தில்லாமற்போனால், புத்திரனில்லையென்னுந் துக்கத்தை சிவந்த வக்கினியில் ப்ரவேசித்து நீக்குவேன்,— என்று வனதேவதை சொல்லவும், தாசூரமுனி சிரித்து ஒரு பூவைக்கொடுத்து ஒரு மாதத்தில் இலேசாக, அன்னம் போன்றவளே? புத்திரனைப் பெறுவாய் நீ முன்பு அக்கினியிற் ப்ரவேசிப்பேனென்று சொல்லிய துன் பத்தினால் வலிமையாக புத்திரனை வேண்டினபடியால், இனிமையாக நீ பெற்றிடும் புத்திரனும் பின் வரப்பட்ட வருத்தமான மார்க்கத்தினால் ஞானத்தையடைவானென்று மகானாகிய தாசூரமுனிசொன்னார்.-

எஉ. வனதேவதை புத்திரனைவேண்டல்.

எங. வனதேவதைக்குப்புத்திரனை யளித்தல்.

எச. புத்திரனை வளர்த்தல்.

கேட்ட அந்த வனதேவதையானவள் புத்திரன் செனித்ததென்று ப்ரகாசிக்கின்ற முகமென்னுஞ் சந்திரன் ஒளிவிளங்க திரும்பவு மந்த முனியைப் பார்த்து, உமது பணியை யிச்சித்து இவ்விடத்தில் வசிப்பேனென்று சொல்ல, தாசூரமுனியானவர் சம்மதிக்காமலனுப்ப, தெய்வப்பெண்ணானவள் தனதிடத்தில் வந்தாள்; உயர்வுள்ள புத்திரனைப் பெற்றாள்; கிரணங்களினா னிறையப்பெற்ற சந்திரனைப் போல வளர்த்தனள்.— வருஷமென்கின்ற குறிப்பினால் பன்னிரண்டு வருடம் கழிந்தன; பின்பு அழகிய முனிவருடைய பாதத்தை புத்திரனுடன் சேர்ந்து வணங்கி முன்னாகநின்று உயர்வையுணர்ந் தனுக்கிரகஞ் செய்கின்ற சுவாமியே? நீ ரனுக்கிரகஞ்செய்ய நானீன்ற இப்பெரிதான குணத்தையுடைய புத்திரன், அரிய வேதசாஸ்திரங்க ளியாவையும் யானே யறிவிக்க தனதறிவினாற்றெரிந்து கொண்டான்.— கலைக்கியானங்க ளியாவும்

எரு. புத்திரனோடு முனியைத்தரிசித்தல்

எசு. புத்திரன்

குருபணியினிற்றல்

பூரணமா யறிந்தும் ஜனிக்காத வாத்ம ஞானத்தைத் தரிசித்திலன், சமுத்திரத்தையொத்த சநநதுன்பத்தினுல்சலனமடைகின்றுன், தன்னையரிகின்ற ஞானத்தை அனுக்கிரகஞ் செய்வாயென்று வனதேவதைசொல்ல, இவனை எமக்கு நிலைத்தசீடனுக்கி நீ நீங்குவாயென்று முனிசொல்ல, அந்த வனதேவதையானவள் புத்திரனைவிட்டு நீங்கினுள். பெருமைபொருந்திய முனிவருடைய உபயபாதங்களை விடாமல் சற்குணசீடனு மிருந்தான்.†—

எஎ. ஞானத்தை யுபதேசித்த தெனல்.

வருத்தப்பட்டு, தத்துவஞானத்தைப் பெற்றுய்யும்படி, தாசூரமுனிவனது கிருபையினுல் மெதுவாக திருத்தமானகதைகளும், ப்ரமாணங்களும், இதிகாசங்களில் சொல்லிய காரணங்களும், மிகவுஞ்சகாயமான வேதாந்தத்தில் தெளிந்துசொல்லிய மகாவாக்கியார்த்தங்களும், இன்னுஞ் சேர்ந்திருக்கின்ற மார்க்கங்களுமாகிய விவைகளை பலவாகவிரித்து பூரணஞானத்தையே சொன்னுர்.—

எஅ. அந்தஞானுேபதேசத்தைப் போதித்தல்.

யாம் கங்காஸ்நானஞ் செய்ய அந்தமார்க்கமாக வானிலேமறைந்துபோய் ஒருதினம் சத்தரிஷிகளுடைய இடத்தினின்று தாசூரன் வாழ்கின்ற கடம்பவிருக்ஷத்திற் சேர்ந்து, இராக்காலத்திலிருந்து முனிவர் சீடனுக்கனுக்கிரகித்த ஞானுர்த்தங்களைக் கேட்டோம்; அதை யாமுனக் குள்ளப்ரகாரஞ் சொல்லுவோம்.§—

எகூ. பிரமசங்கற்பத்தை யரசனுகவுருவகப்படுத்தல்.

சநநமில்லாத பிரமஸ்வரூபமானது ஈதென்று நிச்சயமுண்டாவதாகிய இந்த வொரு கதையை நீகேட்பாய். சிறந்தவனுகிய வொருமஹாராஜன், வீரத்திலுங் கீர்த்தியிலும் சிரேஷ்டமானவன், தெளிஞனெனு நாமத்தையுடையவன், நாசமடைகின்ற ஜகரக்ஷகராயுள்ளவர்கள் அந்தத்தெளிஞருடைய பணியை சிரசின்மேல் பிரகாசிக்கின்ற விரத்தினத்தைப்போல தரிப்பார்கள், யாவர்க்கும் திரமாக நிறுத்தற்கரிய வியாபகன்,—

அ0. அரசனது வலியைக்கூறல்.

மெய்மாத்திரம் விரும்புகின்றவன்; நாநாவிதமாகிய அதிசயத்தை விளைக்குஞ் செயலையுடையவன்; துன்பவின்பமுங் கொடுக்கப்பட்டதாய் முயற்சிக்கின்ற தொழில்களின் கூட்டத்தை அளவுசெய்யில்; பெரிய சமுத்திரத்தினலைகளை யெண்ணிலு மெண்ணக்கூடாது; விளக்கமுள்ள ஆயுதங்களும், காற்றுகளும், அக்கினிகளுமாகிய விவைகளில்ஒன்றும் இத்தெளிஞனை நெருங்கக்கூடாததாம் இருகரங்களாலாகாயத்தை யென்செய்யலாம்.—

அக. அரசன் முயற்சியின் பெரு

அளவின்றிப்பரவிய விளையாட்டினுற்செய்கின்ற அளவற்ற

† இ-ம். தமது கிருபையினுல் வனதேவதைக்குப் புத்திரனைத்தந்து சீடனுக்கிக் கொண்ட தென்பதாம்.

§ இ-ம். தாசூரமுனி சீடனுக்குப்போதித்த நெறியை இராமருக்குப் போதிக்கத் (தொடங்கின ரென்பதாம்.

மையையறிவித்தல்

எத்தனங்களியாவும் நிலைபெற்றிருக்கின்ற தேவர்களாகிய மும்மூர்த்திகளாலேயும்எவ்வளவும் பின்றொடர்வதற்குக் கூடாதாம். மகத்தாயிருக்கின்ற இவனுக்குத் தேகங்களாய் யாவையுஞ் சுமக்கத்தக்க மூன்றுபேர்களுண்டு, அவர்கள் வலிமையுள்ளசகத்தையதிக்கிரமித்திருக்கின்றவர்கள்; உத்தமன், மத்திமன்,அதமனென்றுஞ் சொல்லப்பட்ட பெயரை யுடையவர்களாம்.—

அஉ. அரசன்சநபூமியையும் அவனால மைக்கப்பட்ட நகரச் சிறப்பையுங் கூறல்.

ஞானகாயத்தில் உதித்தவவ்விடத்தில் வசிப்பவன் மூன்றுவிதமாகிய சரீரத்தையுடைய தலைவன், அந்த ஞானகாயத்தில் அவனுண்டாக்கிய பட்டணத்துக்கு நீளமான தெருவுகள் பதினன்காம்; கெடாதமூன்று வகைகளோடும் அழகுள்ள சிங்காரவனங்கள்சோலைகள் லீலாபருப்பதங்கள் கொடியையொத்த முத்துமாலைகள் ஏழுதடாகங்கள் குளிர்ச்சியுஞ் சூடுமுள்ள இரண்டுவிளக்காம்.—என்றுசொன்னவைகள் நிறைந்

அங. அரசனது லீலாக்கிரகங்களின்சிறப்பு கூறல்.

திருக்கின்ற இந்தப்பட்டணத்தில், இவனுண்டாக்கப்பட்ட கூடாரங்கள் முன்புள்ள கீழ்மேல் நடு என்கின்ற சொற்கமத்திய பாதாளமென்னு மிடங்களெல்லாம் சுழலும்படியுண்டாக்கின அவற்றிற்கு வலிமை பொருந்திய தூண்கள் மூன்றிருக்கின்றன; அஸ்திமரங்களினால் நெருங்கியிருக்கின்றன ; உதிரத்தினாலு மிருதுவாகப் படர்ந்திருக்கின்ற சருமத்தினாலு முடைந்து விரிந்த மயிர்க்கற்றையினாற் பரப்பப்பட்

அச. அம்மனையின் காவலாகிய பேய்களைக்கூறல்

டன.— எப்பொழுதுமில்லாத மாயையினால் அந்தத் தெளிஞான வரசன் உண்டாக்கின பாவறைகளானவை தென்றற்காற்று, சூழாநின்ற பலகணிவாயிலொன்பதாம்; பஞ்சேந்திரியங்களென்னும் அழகிய தீபங்களினால் ப்ரகாசிக்கின்றன; இரண்டு புயங்களென்னும் தோற்றங்களையு முடையன; முடிவில்லாத பிரமபாவனைக்குப் பயப்படுகின்ற அகங்காரமென்னும் பேய்களானவைகாத்திரட்சிக்கப்பட்டன.

அரு. அக்காவலரோடும் மனையில் விளையாடல்.

சஞ்சரியாநின்ற பாவறைக்கூட்டத்தில் அகம்பாவமென்னும் பசாசுடன் விளையாடி, சந்தோஷத்தைத் தருகின்ற விளையாட்டுகளை நாநாவிதமாகநடத்தி, கூண்டில் வாசஞ்செய்யும்பறவையைப்போலஇருந்து, வேகத்தினாலந்தப்பாவறையை விட்டுநீங்கிபக்கத்தில் மேல்வருகின்ற பாவறையையுண்டாக்கி, ஆசையுடன் போய் பேயாவேசத்தை யடைந்தவர்களைப்போல

அசு. புது வீட்டிற் குடிபுகுந்துலாவுதல்.

அவ்வரசனனவன் நடனஞ்செய்வான்.— இப்பாவறையைவிட்டு அதையடைவோமென்று நினைக்க அவ்வண்ணமடையும் அதிலிருந்து மரணமடைவோமென் றெண்ணுகின்ற எண்ணத்தினால் அப்படியே

மரணத்தை யடையும்; மனமானது வருத்தத்தினுற் சுழல, சனித்து மரித்துச் சுழலும் ஞானுகாசமே யிவைகளுக்கு ஸ்தானமாம்; மரணத்தையடைந்து தவழ்கின்ற அலைசலத்திலுண்டாவதுபோலதிரும்பவு முண்டாகும்.—

அஎ இவ்விளையாட்டினுற்சுகதுக்கமடைதல்.

மூன்றுசரீரங்களையுடையவன்சிறப்பு பொருந்திய கந்தர்வநகரத்தையொத்த தனதுநகரத்தில் தானினிமையாகவிருந்து நீங்காமல்மேலுமேலுந் தழைக்கின்ற தொழில் வயப்பட்டவனுய் ஒருதரங் குறைவாவன்;ஒருதரநன்மையாவன், ஒருதரம்என்ன செய்வோமென்பான், ஒருதரம் அபிமானியாவன், அநேகந்தரம் மயங்குவன், தெளிவான், துன்பப்படுவான், சந்தோஷிப்பன்,¶— யான் றளர்ச்சியானேனென்பன், பருத்தேனென்பன், தாழ்ந்தேனென்பன், உயர்ந்தன னென்பன், வளர்ந்தன னென்பன், குறைந்தே னென்பன்;

அஅ. தெளிஞனென்பவனுருவத்தை யறி விக்கவேண்டுமெனல்.

பெருங்காற்றடிக்கின்ற சமுத்திரத்தைப்போல மனதினுல் அவ்வரசன் சுழல்கின்றதை சொல்லுவதெவ்வாறென்றுமுனிசொன்ன மாத்திரத்தில், புத்திரனவன், சொல்லியபிதாவை நீர்தெளிஞரென்று சொல்லிய கீர்த்தியையுடையவனுரென்று கேட்டான்.—

அகூ. மாயாவிலாசத்தை யோர்கதையாகச் சொல்லியதெனல்.

உண்மையினுல் அவ்வரசனைச்சொன்னுல் வருகின்ற சநநமரணமென்னும் அசத்தியத்தின் உண்மையை நன்ருய்த் தெரிந்துக்கொள்வாயென்று தாசூரமுனிவன் நன்மையாகிய சீடனுக்குச்சொல்லுவார். சங்கற்பமாய் அசத்தியமாயுண்டாய் விஸ்தாரமாக விரிந்து முயற்சியையுடையதாய் அறிவின்மயக்கமான சநநத்தின்றன்மையை உறுதிமொழியாக முன்சொன்னேம்.—

கூo. பிரமசங்கற்பமேயரசனெனல்.

பரமாகாயத்தில்உதயமாகிய சங்கற்பமேமுன்சொன்ன தெளிஞனென்னுமரசன், பலபல காலமும் தானேயுண்டாகியும்; தானேமறையும் விரிவாகிய சகமானது அதன் ஸ்வரூபமாம்; அற்பமாகிய சங்கற்பமானது உண்டாறுற்சகமுண்டு; அதில்லையானுல் சகமில்லையாம்; முதன்மையாகியமும்மூர்த்திகள் முதலானதேவர்களும்,அச்சங்கற்பத்துக்குநெருங்கிய சரீரவுறுப்புகளாவர்.—

கூக. சங்கற்பத்தினுலுண்டான மூவுலகச்சிறப் புறைத்தல்.

ஆத்மாவினது புத்தி பாச்சல் மாத்திரத்தால் பிரமாவென்னும் பாவனையைப் பொருந்தினதாகிய சங்கற்பமானது, ஞானுகாயத்தில் உண்டாக்கினது மூன்றுலகமென்னும் பட்டணமாம்; உலகபாலரென்பது பதினுன்கு மனுக்கள்பெயராம்; மேலாகிய பட்டணத்திலுள்ளபதினுன்கு வீதிகளென்றதுபதினுன்குலகம்; பரிசுத்தமான பூமிகள்நெருங்கிய

¶ இ-ம். வீடுகட்டுவது மதைக்கெடுப்பது மதிலொன்றைவிட்டொன்றிற் பாய்வதுமாகிய விவற்ருற் சுகதுக்கமுதவிய வருத்தமடைந்தன ரென்பதாம்.

பூந்தோட்டங்களும் ஊர்சூழ்ந்த சோலைகளும் நந்த
கஉ இதுவுமது. வனங்களுமாம்.— மகம்மேரு மந்தரமுதலியகிரிகள்
அந்நகரத்திற் பொருந்திய லீலாபருப்பதக்கூட்டங்க
ளாம்; சூரிய சந்திரர்கள் வாயுவினுற் சலியாத தீபங்க
ளென்பதாம்; சலநிறைந்த நதிக்கூட்டங்களையே
முத்துமாலை யென்பதாம்; வடவாமுகாக்கினியை
தாமரையாகமலர்ந்திருக்கின்ற பெரியவேழுகடலையு
மே சொல்லிய தடாகங்கள் ஏழெனப்பட்டவைக
கங. உடலைப் ளென்பதாம்.— இப்படிப்பட்ட மகாநகரமாகிய சகத்
பாவறை யெனல். தினிடத்தில் மூன்சொல்லிய சங்கற்பவரசனுல் வினை
களினுல்வந்தசரீரங்கள் பாவறைகளென்பதாம்;தேவர்
களையே மேலோகபத்மென்றும், நரகர்களையே அலங
காரமாகிய பாதாள லோகத்திலென்றும், மனிதர்களை
யே மத்தியலோகத்திலென்றும், அச்சந்தரும் உயி
ரென்னுஞ் சூத்திர வேகத்தினுல் மாமிசச்சுவரான
கிரகங்கள் சூழன்றிருப்பன.— பலவிதமாகவே உலா
கச. தேகோக விய சரீரமாகிய பாவரைதோறும் அவ்வரசன், நன்
மென்பவனை யகங் மார்க்கமுள்ள ஆத்ம ஞானத்தை பார்க்க நடுங்குகின்ற
காரப் பேயெனல். நன்மையில்லாத அகங்காரமென்கின்ற இந்தப் பசா
சங்கள் மித்தைகளாயிருந்தும் வந்துண்மையைப்
போலத்தோன்றும்; அதனோடு துவளாநின்ற வினை
யாட்டைச்செய்யும் க்ஷணத்தில் உள்ளதாகியும், இல்
கரு. சநந மரண லாததாகியுமிருக்கும்.-சரீரமென்றுசொல்லியகிரகங்க
த்திற் சுழன்றுவரு ளோறும் சமுத்திரத்தின் திரைகளைப்போல உண்டா
ந்துவதைச் சுகதுக் யழியும்; மேற்செய்யப்பட்ட கிரகங்களிலும் இடை
க மடைதலெனல். விடாமல் வருகின்ற இந்தச் சங்கற்பராசனுனவன்
சங்கற்பித்த சகலமும்பொருந்திய ஒருக்ஷணத்தில்
வினுக நாசத்தையடையும்; வினுகச் சஞ்சரிக்கப்
பட்ட இந்தச் சங்கற்பவரசன் உண்டாகிய தன்சங்கற்
பத்தினுல் உண்டாயிருக்கும்; அந்தபட்டும் அரிய
கசு. மூன்றுசரீர துன்பத்திலுழைக்கும்.— சற்றுமொருசுகமில்லாமல்
த்தை முக்குணமா விப்சனப்படுவன், தானுண்டென்பதாகிய ஒருபாவ
கக் கூறல். னையினுல் மிகுந்த வுலகத்தையுண்டாக்கும், தானில்
லையென்று கருதினுல் அந்தக்ஷணத்திற் சகமிறந்து
சூரியன்முன்பு அந்தகாரத்தைப்போல நீங்கும்; கரு
திய விடய வின்பத்தை யடைந்தழுந்திய வாசஞ்செய்
கின்ற இச்சங்கற்பபுருடனுக்கு சரீரங்கள் உத்தமமத்
கஎ. சங்கற்பவி திம மதமமென்று மூன்றுள்ளனவாகும்.¶— மூன்று

¶ இம். பிரமமயமாய் விளங்கிய வறிவானதுபிரமமென்றறிய வந்தவவசாத்திற் சங்கற்பமாய்த் தனக்காதாரமான பிரமத்தை மறந்ததின் ப்ரதிவிம்பமாயிருக்கின்ற சிவேஸ்வர சகங்களா யதனை யானெனதென் றபிமானித் தவ்வகம்பாவத்தோடு விடயவுன் முகனுய்ச் சநநமரணமென்னுந் துக்கசாகாத்திலழுந்தினதென்பதாம்.

லக் கணங்களைக் கூறிய வற்றைநிவிர்த்திக்கும் பொருட்டதற்குப் பலமாயிருக்கின்ற முக்குணங்களை நிவிர்த்திக்கவேண்டிய வற்றின் குணங்களைக் கூறல்.

கூஅ. முக்குணங்கள்முதலியயாவையுநீக்கி முத்தியையடையு முயற்சியறிவித்தல்.

குணங்களே மூன்று சரீரமாய் மூவுலகங்களுக்குக் காரணமாம்: அந்தக்குணங்களில் தாமதகுணத்தையுடைய சங்கற்பமென்பது, ப்ரகிருதியின்செயலினால் துன்பத்துடன் வருத்தமுற்று பாதாளக்கிருமிகளாம். பரிசுத்தமாகிய சாத்துவித குணத்தையுடைய சங்கற்பமென்பது, நல்லதருமங்களையும் ஞானங்களையுமுடைய மோக்ஷத்தை யுடையதாய் சக்ரவர்த்தியைப்போல ப்ரகாசிக்கும் — இராசதகுணத்தை யுடைய சங்கற்பமென்பது, இச்சகத்தில் இயல்பாகிய சம்சாரத்தையுடையதாய் விளங்கும். சேர்ந்திருக்கின்ற இம் மூன்றையும் நீங்கி உண்மையாக சங்கற்ப மில்லையாயின், வருத்தமில்லாதவனாக அச்சங்கற்பமானது நின்மலமாகிய பரமபதத்தை யடையும். துராசையாகிய திருஷ்டிகள் யாவையும் விடுத்து குற்றமுள்ளமனதை சுத்தமானமனதினா னிலைப்படுத்தி,— அகத்திலும் புறத்திலும் உதயமான சங்கற்பத்தை ஒருமிக்கக் கெடுக்கச் சிந்திப்பாய். நிந்திக்கப்படாத தபசுகள் கற்பகோடிகால நீ செய்தாலும் பாதாளத்தையும், பூமியையும், நீங்கற்கரிய சுவர்க்கத்தைப் பொருந்தினாலும், உனக்குச்சொல்லிய சங்கற்பநாசத்தையன்றி தெளிவான பரமபதத்தை யடைய கலக்கமின்றிய யுத்தியானது வேறில்லையாம்,— துன்பங்களும் வேற்றுமைகளுமில்லாத, பிரமாநந்தத்தைச் செய்கின்ற சங்கற்பத்தைக்கெடுக்க முயற்சிப்பாய். சங்கற்பமான பாசத்தில் அளவற்றபாவனைகளனைத்தும் இயல்புள்ள சரமாயுண்டாகும், அப்பாசத்தை இலகுவா யறுத்துவிட்டால் மயக்கத்தையுடைய பாவனைகள் எப்படி துகளாய் நசிக்குமோ, புத்திரனே? தெரிகிலேம்.—

கூகூ. சங்கற்பநாசமே முத்தியாமெனல்.

சOO. பிரமானுபவத்திற் சங்கற்ப நீங்கின வதிசய முரைத்தல்.

துன்பஞ் செய்கின்ற சங்கற்பமில்லாமல் எதிரே வந்துதோற்றிய தொழிலின் மார்க்கத்தி லிருப்பாய். சங்கற்பமானது இறக்குமாகில் ஞானமானது திரிஸ்யங்களனைத்திலும் பற்றமாட்டாது ஒப்பற்றுயர்ந்திருக்கின்ற பிரமபதத்தைச்சேர்ந்து சகவேறுபாடான விகற்பங்களியாவையும் நீக்கி இனிமையுடையவனாய் சுழுத்திமனத்தை யடைந்து அத்துவிதத்தில் பரமசுகத்தையேயடைவாய்.† — என்று சொல்லவும் சங்கற்பமாவதேதென்றும், அதுஉண்டானதும், விருத்தியானதும், மாய்ந்துதேய்ந்ததும், எப்படி யென்றும், தாசூரமுனியை சீடனானவன் விபரமாய்க் கேட்க; அதற்கவர்சொல்லுவார். மேலானதாகியும், உண்டெனல்வடிவாயும், விளங்கிய சமமான வாத்மஞான

சOக திருக்குதிருஷ்டியாற் றிரிஸ்யஸ்வருபங்களாயிருக்கின்ற சங்கற்பத்தைக் கெடுத்துச் சுகத்தி லிருப்பாயெனல்.

சOஉ. சங்கற்பத்தைக் கெடுக்கு நிமித்தம் அதினுற்பத்திநாச மியாதெனின்.

† இ-ம் சங்கற்பமுதித்தவிடத்தொடிக்கித் தன்மயமாக நிற்கவேண்டுமென்பதாம்.

மானது, திரிஸ்யத்தில் உண்டாதலே சங்கற்பமாம்.--

க0௩. சங்கற்ப வுதயங் கூறல்.

சிறிதாக உண்டாய் தாளுெரு முதலாயிருக்கும், கிரமமாக மெல்லமெல்ல வளர்ந்து பரமாத்மாவாகிய தெளிவைமறைத்து சடபாவமானது, திரமாயுண்டாகும்படி உதித்த மேகத்தைப்போல வளரும். குழந்தாய்? அறிவானது திரிஸ்யத்தை பாவித்திருக்கின்ற தனக்கு வேற்றுமைபோலப்பார்த்து நடந்து சங்கற்பமாய் விளங்கும்.— ஞானமென்னும் வித்தானது சங்கற்பமென்னு மங்குரமாம்; அந்தச் சங்கற்பமானது, தன்னை வேற்றுமையாக தானே யுண்டாக்கி தானுண்டாகும் தானே பெரிதாகவளரும், இதுமிகுந்ததுன்பமேயன்றி இன்பமாவ தொன்றுமில்லை, ஆகையால் சொல்லிய சங்கற்பத்தின் மார்க்கத்திற் செல்லக்கருதாதே. நிற்கின்ற சகத்திநிலையில் கணமும் பாவனை செய்யாதே— இவ்வளவாகிய பாவனையினுல் பரமசுகமாம்.

க0௪. பாவனுதீதமாக வேண்டு மெனல்.

க0௫. சங்கற்பம் வருத்த மின்றிக் கெடு மெனல்.

இப்படிப்பட்ட சங்கற்பமானது, தவறுடையமிருந்தவெத்தனங்கள் வேண்டுவதில்லை; தாக்காநின்ற பாவனைகளியாவையுங் கெடுத்தலாகிய அவ்வகையால் தன்மனது நசிக்கும், விகசிதமான புட்பத்தைக் கசக்கவேண்டுமானுல் கரத்திற்கோர் வருத்தமுண்டாயிருக்கும்; சொல்லிய விந்தச்சங்கற்ப நாசத்துக்கு அவ்வளவு வருத்தமும் வேண்டுவதில்லை.— உண்டாகிய சங்கற்பமானது பாவனையை விட்டுவிட்டால் நாசமடையும்; இந்த பகிர்முகசங்கற்பத்தை இவ்விடத்தில்வந்த அந்தர்முகசங்கற்பத்திஞல் திடமாகக் கெடுத்து பரிசுத்த மனதிஞல் அசுத்த மனதைக் கெடுத்து உனதாத்மஞானத்தில் நீ நிலையாயிருப்பாய்; கடத்தின்பின் வைந்தவுளுந்து பிறமூநேரத்திற்கூடும், இதரியகோ, முழூது மசத்தியமாம்; அஞ்ஞான விகற்பத்திஞல் உதித்தவையன்றி முன்பில்லாததிஞல் சகமும் ஆகாயமும் ஒத்திருக்கும்.‡— அரிசிக்குமியும், தாம்பிரத்துக்குக் களிம்பும், சுபாவமாயிருந்தும் கருமவிசேடங்களினுல் நீங்கிப்போம்; அதைப்போல ஆத்மாவும், அஞ்ஞானத்தையடைந்து விசாரத்தா னீக்கிக் கொள்ளுத லியல்பாம் கொண்டசந்தேகத்தை விட்டு ஆசாரியன் வல்லபமான விளக்கத்தால் நீ முயற்சி செய்வாய்; கண்டோமென்று சொல்லப்பட்ட சகலமும் வீணும்; குருவுஞ்சீடனும், பரமப்ரகாசமாகவே தரிசித்தோம்.— இப்படியென் றந்தத் தாசூரமுனி சொல்லிய யாவையுங்கேட்டு, அவ்விரவில் அவ்விடத்

க0௬. சங்கற்பவடிவமான மனதைக்கெடுத்தாத்ம ஞானமாக விளங்குவா யெனல்.

க0௭. அத்துவிதானுபவங் கூறல்.

க0௮ உவமானத்தை முடித்தல்.

‡ இம். சங்கற்பத்தினுற்பத்தி நாசத்தையும், அஃதுபிரமப்ரகாசமாய் விளங்கின வனுபவத்தையுமறிவித்ததாம்.

தில் அம்முனியை யானடைய, மனமகிழ்ச்சியாய்ப் பூசித்து என்னுடன் அத் துளிரின்மே லிருந்தான், நாங்களிருவரும் உண்மையான வநேக கதைகளினால் விடப்புருடர்களைப் போல இரவை க்ஷணநேரமாகத் தள்ளி அத்தாசூரனைப்பிரிந்து யான் கங்காநதியை யடைந்தேன், இவ்வுலகமானது அவன் சொன்ன கதையையொக்கும்.¶—

தாசூரன் கதை

முற்றிற்று.

# கசன் கதை.

---

## அவதாரிகை.

முன்கதையிற் சித்துவிலாசமான சங்கற்பமே சீவேஸ்வரசகங்களாக விளங்குவதை நிரூபித்து, இவைகள் சித்தேயாமென்பதையனுபவமாயறி விக்குநிமித்தங் கசன்கதையை நிரூபிக்கிறார்.

க. கணமுநிலையின்றிய வாயுளின் விடய விச்சையைக்கெடுக்க வேண்டுமெனல்.

அளவில்லாத காலத்தில் சொல்லப்பட்ட நூறு வருடமும் நொடிநேரமென்றாலும் போதாது; இதை நெடுங்காலமாகப்பார்த்துகெடாத மிகுந்த வாசையை பொருந்துவதென்ன, விடயங்களைச் சிந்தித்து விரிவதாகிய மனதினிச்சை பற்றில்லாமற் கெடுத்திருப்பாய்.—

உ. விடயவிச்சை கூடாததேனெனின்.

ஆசையிறந் தெத்தன்மையனாய் நின்றாயோ அத்தன்மையனாகவே நீ வாழக்கடவை; பூமியின்கண் அழகிய நல்லமணிகள் விரும்பாதிருந்தும் நெருங்கிப் பாய்கின்ற நல்லொளியைப்போல, சத்தா மாத்திரமாக உண்டான வுலகமும் பிரமத்தினிடத்தில் நன்றாகத் தோற்றும்.§—

௩. சகத்திற்றுன்பமின்றிச்சஞ்சரிக்குநெறியாதெனின்

ஆதலினால், பிரமத்தினிடத்தில் அகர்த்தாவென்றும் கர்த்தாவென்றும் பாவனைகளுண்டாம்; ஆசையில்லாததினால் உண்டாகாத அகர்த்தாவாம்; சன்னதான மாத்திரத்தினால் மேன்மையான கர்த்தாவாம்; இந்த விரண்டையல்லாமல் ஆத்மாவில் வேறொன்று மடையாவாம்.—

௪. இதுவுமது.

அகர்த்தாவிலும் கர்த்தாவிலும் உனக்கிசைந்ததெதுவோ அதனிடமாயிருப்பாய்; ப்ரசன்னமான அந்தவிரண்டுமல்லாமல் தோன்றி வளராநின்ற மனதை விழுங்கி ஒப்பின்றித் திடமாயிருப்பாய். அகர்த்தாவாகவும் ஒப்பில்லாத நல்லகர்த்

---

¶ இ-ம் இக்கதை திருஷ்டாந்தமாக ஆத்மதிருஷ்டியிற்சங்கற்பமுதலியசகமித்தையென் றறியவேண்டுமென்பதாம்.

§ இ-ம். பிரமப்ரதிபலனமான சகத்தை வேறாகக்கண் டிச்சிக்கக் கூடாததாம்.

தாவாகவும் நின்றாலும் இதுவே நன்மையாம், துன்ப

௫. தேகோகநீக்கிற் பயனியாதெனின்.

மானது சற்றுமில்லை,†— நினைக்கப்பட்ட அகர்த்தாவாய் நான்சகத்தினொழுங்கின்படி நடக்கின்றேன், வேறான கருத்தில்லாமையால் அவ்வகத்தினில் வேறுபாடில்லை. என்னதென்றும், நீயென்றும், நானென்றும், செய்தேனென்றுஞ் செய்யவில்லையென்றும், மதித்தபோதே துக்கமாம்; சரீரத்தை நானென்பவரு முண்டோ.—

௬. தேகோகந்துன்பமாமெனல்.

சரீரத்தை நானேயென்று சொல்லில் இருபத்தொருநரகமுமதுவேயாம்; வெவ்விய வலியதுன்பமானாலும் உடலை நானென்று சொல்லவேண்டாம், சந்தேகமில்லாத நல்லகேள்வியையுடைய சத்துக்கள், நீசர் சகல மாமிசங்களையும் கைவசமாகப் புசிப்பவராயினும்,நாயினதுமாமிசத்தைபுசியார்கள்; அதுபோல, தேகநானென்று கருதுவார்களோ.—

௭. தேகோகத்தை நீக்கவேண்டுமெனல்.

சரீரமானது யாமென்னுங் களங்கத்தினால் ஞானதிருஷ்டி தெரியாததாகும், குற்றமிகுந்த அக்களங்கத்தை தூரத்தள்ளுவார்களாயின், ப்ரகாச ஞானமானது கருத்தமேகமில்லாவிடத்து விளங்கு நிலவைப்போலப் பிரகாசிக்கும். இப்படிப்பட்ட திருஷ்டியினால் மிகுந்த சநநசமுத்திரத்தின் அழகுள்ள முத்திரீர மெளிதாயுண்டாம்.‡—

௮. தேகோகத்தை நீக்குதற்கு பாய மியாதெனின்.

சகலத்திலும் நான் கர்த்தாவல்ல, அவனென்பதும் இவனென்பதும் யானல்லவென்று சிந்தித்து மனதிற்றிடமுண்டாய் அகர்த்தாவாயிரு. அப்படியில்லையாயின், சகலத்துக்குங் கர்த்தா நானே அளவில்லாத அப் பொருள்களும் நானென்று சிந்தித்து சலனமொன்று மில்லாமல் உறுதியாயிருப்பாய்.—

௯. இதற்குமூன்று நிச்சயங் கூறல்.

அப்படி யல்லாவிடின், இவ்விரண்டிலொன்று நானல்லயாம், வாக்கு மனாதீதமாகிய வொன்றேயாம், இருந்தவிப்பதங்களுள் உத்தமமாகிய உனதுபதத்தில் நீயிருப்பாய். ஏகமென்கின்றபரமபதத்தைத் தரிசித்த சத்துக்கள் தன்னிடத்தி லிருப்பார்கள். நெருங்கிய வாசனையே பந்தமாம்; அவ்வாசனாக்ஷயமே பழமையான மோக்ஷமாம்.¶—

௰ வாசனாத்தியாக மியாதெனின்.

சத்தமுதலிய விடயங்களிற் பழகி மனமான தரித்தவாசனைகளை முன்பு அலம்

---

† இ-ம். கர்த்தத்துவ வகர்த்தத்துவமென்னு மிரண்டி லொன்றேயு டிருக்கிற் றுன்பமின்றென்பதாம்.

‡ இ-ம். பஞ்சபூதவிகாரமான பௌதிகத்தை யானென்பதே பவத்துன்பமாமென் றறிந்ததை நீக்கிற் சுயஞ்சித் துதயமாமென்பதாம்

¶ இம் ப்ரகிருதிமுத லிச்சரீரபரியந்தமுள்ள சகலவிடயமும்யானல்ல வென்பதற்கு விலக்ஷணமே தானென்றும், அவை டாவுந்தன்மயமாய் விளங்குஞ்சலக்ஷணமே தானென்றும்; இவ்விரண்டு மின்றித் தன்மயமாய் விளங்குதலென்றுஞ்சொல்லப்பட்ட விம்மூன்றனுபவமும், தேகவாசனையை நீக்குதற்கு யுக்தியாமென்பதாம்

வரும்படி கெடுத்து மோக்ஷத்துக்கடுத்த சுத்தவாதனையையும் பின்விட்டுவிடுவாய், நன்மைபிரகாசிக்கின்ற அருளும், சந்தோஷமும், நட்பும், உதாசினமுமாகிய இந்நான்கும் மாசற்றிருக்கின்ற குணங்களாக அதன்றெழிலே மனதிற் பற்றுமற்செய்வாய்.¶— உள்ளத்தின்கண்ணுள்ள செயல்களை முழுதுங்கெடுத்து, ஒப்பற்ற சின்மாத்திர வாசனையைப் பிடித்துக்கொண்டு, மெல்லவவ்விடத்திலந்தச் சித்து வாசனையையும் அந்தக்கரணங்களோடுங் கெடுத்து, தள்ளப்பட்டயாவும் எந்த முயற்சியினு னீக்கினையோ அம் முயற்சியையுந் தள்ளி, தெளிவானவறிவும் மனதும் தொழிலும் ஞானப்ரகாசமும் அஞ்ஞானந்தகாரமுமாகிய சகலமு நீங்கி,— வாசனுருபமாகிய இப்பொழுது சொல்லப்பட்ட விவைகளும், இவைகளை வேற்றுமையாக பழகுகின்ற சிதாபாசனும் பிராணவாயுவின் சலனமும் எதுவும் காரணத்துடன் கெடுத்து, ஆகாயத்தைப் போல நிற்பாயாயின், சகலமுந்தீர்ந்த வுபசாந்தனுய் எதுவாயினையோ உண்மையாக அதுவே நீயாம்.‡— மனதிலுள்ள சகலவாசனையுங் கெடுத்து, உலகில் ஒருபற்றில்லாமல் அசைவற்ற நிலையினின்றவர்கள் குற்றமற்ற சீவன் முத்தராவார்கள். அச்சீவன்முத்தர்களே எண்ணுதற்கரிய உயர்வுள்ள ஈசராவார்கள்; சமாதியையும் கொள்ளுதற்கரிய கன்மத்தையுஞ்சேர்ந்தாலும் விட்டாலும் சீவன்முத்தர்களாம்.†— மனதின்கண் அவாவொன்றும் இல்லாமையால் குறிக்கப்பட்ட தொழில்களை செய்தாலும் விட்டாலும் கைவசமான ப்ரயோசனமொன்றுமில்லை; ஒரு மார்க்கமாய் அநேக காலமாய் மனதொருமைப் படுகையால் வளருகின்ற வாசனைநீங்கிய மனதில் சாஸ்திரங்களெல்லாம் வேண்டாவாம்.§— சுழலும் வாசனைகணீங்கிய மோன நிலையை யல்லாமல் பொருந்துதற் குரிய வேறொருகதியாவது தன்மையானதில்லையாம்; அறியத்தக்கதையறிந்தாகியும் பொருந்திய பத்துதிக்கும் சுழன்று திரும்பினதாகியும் பழமையாகிய சகத்தின் நிச்சயமாயிருக்

கக. பிரமசுபாவமாய் விளங்குவதெங்ஙனமெனின்.

கஉ. இதுவுமது.

கங. அங்ஙனம் விளங்கிய சீவன் முத்த ரிலக்கணமியாதெனின்.

கச. ஆயின்வேதத்திற் சிரத்தை வேண்டாவோவெனின்.

கரு. முத்தியடைபவ ருறுதியாதெனின்.

¶ இ-ம். பிரமசுபாவமாய் ப்ரகாசிப்பதே பெத்தமுத்தியின் வாசனுத்தியாகுமென்பதாம்.

‡ இ-ம். விருத்தி ஞானத்திலுள்ள வசுத்த வாசனையுஞ் சமாதிஞானத்திலுள்ள சுத்தவாசனையுமிறக்கிற் கூடஸ்தபிரம வயிக்கியமான அத்துவிதம் விளங்குமென்பதாம்.

† இ-ம். ஸ்வருபதிருஷ்டியாற் சகலத்திலும் பற்றற்றதிற்கூடியுங் கூடாததாயுமிருக்கின்றதே, சீவன் முத்தர்களுடைய விலக்கணமென்பதாம்.

§ இ-ம். மனமானது அனுபூதி வடிவாதலின், அதனுற்செய்யும் விதிவிலக்கின் ப்ரயோசனுப்ரயோசனம் விதிக்குஞ் சாஸ்திரவாசனை வேண்டாவாம்.

கின்ற தத்துவத்தைத் தெரிசித்தவர்கள் சிலர், மற்றவர்கள் அவ்வுலகமயக்கத்திற் கெடுக்கின்றவர்கள்.—

கசு. மோகத்தினீக்க முரைத்தல்.

சரீரத்தைப்பார்த்தல்லவா சகத்திலுள்ளயாவரும் சஞ்சரிப்பதேயன்றி ஒன்றான வாத்மாவைப்பார்த்தல்ல, எவ்விடத்தும் பஞ்சபூதமே யல்லாமல் தேவலோகத்திலும், பூலோகத்திலும், பாதாளலோகத்திலும், தேடியும் ஆறுவது பூதம்கண்டதில்லை; மோகத்தை விடுவோமென்று திரமடைந்தவர்கள் யாவையும் பற்றமாட்டார்கள்.—

கஎ. பவங்கடக்குஞ் சுளுவையும் பளுவையுங்கூறல்

அனுபவயுத்தியில்லாத மூடர்களனைவர்க்கும் சருநமானது, பிரளயகாலத்தில் வெப்பமான சமுத்திரயாம்; மயக்கமில்லாத வனுபவயுத்தியையுடையவர்களுக்குமுன்னிருக்கின்றபசுவின் குளம்படியாம்; துக்கமில்லாத ஞானவானுடைய மனதில்தொடர்புற்ற விடயசுகம்பற்றுது; போகமில்லாத குறிஞ்சிநிலத்திலிருக்கும் மிழிவானபெண்கள் ப்ரகாசிக்கின்ற பட்டணத்திலுள்ள புருடர்களுக்கென்ன பிரயோசனமாம்.—

கஅ. சர்வம் பிரமமயமாய் விளங்குதலாற் சகலமுமின்றெனல்.

பிரமமாகிய பரிசுத்தசமுத்திரத்தில் மலைகளியாவும் நுரைகளாம்; பிரமசூரியன்முன்பு சமுத்திரஞ்சூழ்ந்த பூமியானது பேய்த்தேராம்; திரமுள்ள விவ்வருத்தத்தை பிரகஸ்பதிபெற்ற வரபுத்திரனன கசனென்னுநாமத்தையுடையவன் முன்னே சொல்லினன்; அதைஸ்ரீராமா? நீகேட்பாய். †—

கக. சமாதியனுபவ முரைத்தல்-

கசமுனியானவர் மேலாகிய சமாதியினின்றும் பிரிந்து ஒருபோது களிக்கின்ற மனதையுடையவன், பரவசனுகதழுதழுத்தவசனத்தையுடையவன், எதைச்செய்வேன், திக்குகளிற்பொருந்தஎங்கேபோவேன், விடப்படுவதெது, கிரிகிப்பதெது, மேலாகவளர்கின்ற பிரளய சமுத்திரத்தைப்போல உலகமெவ் விடத்தும் எனது ஸ்வரூபமே நிறைந்திருக்கின்றது.—

உ0. இதுவுமது

சரீரத்தினது புறம்பிலும், உள்ளிலும், திக்குகளிலும், ஆகாயத்திலும், பூமியிலும், எவ்விடத்திலும் எனது ஸ்வரூபமல்லாமல் வேறென்றுமில்லை; எனது ஸ்வரூபமில்லாத விடங்களுமில்லை; எனது ஸ்வரூபத்தி லில்லாதவைகளுமில்லை; தானேவிளங்குகின்ற வஸ்துக்கள் வேறேயில்லை; சச்சிதானந்தஸ்வரூபமே ப்ரகாசிக்கின்றதென்று கசமுனிசொன்னார். ‡—

கசன்கதை
முற்றிற்று.

---

† இ-ம். சீவன்முத்தர்களப்பியாசத்தையு மாரூடத்தையு மறிவித்ததாம்.

‡ இ-ம். சமாதியிலிருந்து சாக்ஷாத்காரமான மனதினுற் பார்க்குமிடத்திற் சர்வம் பிரமமயமாம் விளங்குகின்ற தென்பதாம்.

# திதிப்பிரகரணம்.



## அவதாரிகை.

முன்கதையிற் சர்வம் பிரமமயமாய் விளங்குமென்பதையறிவித்து, அவ்வனுபவம்வரும்பொருட்டவ்வைந்துகதைகளின் சாரங்களைச்சுருக்கி உபதேசப்ரகாரந் திதிப்பிரகரணஞ் சொல்லுகின்றார்.

---

க. அனுபவிகளி லக்கண மியாதெனின்.

பெருதற்கரியசாத்துவிதகுணமானபிறப்பையுடையவர்கள், பூமியினிடத்து பிரமப்ரகாசமாக வாழ்கின்றது; ஆகாசத்திற் பிரகாசிக்கின்ற பூரணச்சந்திரனை யொப்பாகும். வருத்துகின்ற துயரத்தில் அவர்கள் வாடார்கள், இராத்திரிவந்தாலும் சிறப்பான சுவர்ன

உ. இதுவுமது.

தாமரைமலர் சற்றுங்குவியுமோ.— ப்ரகிருதமாகிய தொழில்களையல்லாமல் வேறான செய்கைகளிற் பற்றார்கள்; அறிவாகிய சத்துக்களுடைய மார்க்கத்தில் நடப்பார்கள்; பூரணமாகநிறைந்து சலனமற்ற மனதினால் மேன்மையாவார்கள்; நட்பு அருள்முதலாகிய

ங. இதுவுமது.

சற்குணங்களினாற் ப்ரகாசிப்பார்கள்.— இயல்பாகிய குணத்தையுடையவர்கள், தாழ்வு உயர்வென்னுமிரண்டையும் இச்சியாதவர்கள், சமத்துவமுடையவர்கள், சன்மார்க்கத்திற்செல்பவர்கள், தனதெல்லையைத்தாண்டாத சமுத்திரத்தை யொத்தவர்கள், மோகமில்லாதவர்கள், சூரியனைப்போல நியதியைவழுவாதவர்கள்.§—

ச. அனுபவமுதிப்பதற் கப்பியாசங்கூறல்.

கொள்ளத்தக்கது துன்பமற்றவர் குணத்தை, சுருங்கும்படியாகத்தள்ளத்தக்கது கொடியவர்களுடைய மார்க்கமென்னுங் குற்றத்தை, உலகமெப்படிப்பட்டதென்று விசாரித்துநிந்திக்கத்தக்கது; யாமெப்படிப்பட்டவனென்று ஆசாரியராலும் தன

ரு. இதுவுமது.

தறிவினாலும்தீரவிசாரித்துதெளியத்தக்கது;—வருத்தப்படுவது ஆத்மாவையறிகின்ற மார்க்கத்தில்; மனதினாற்றிருத்தஞ்செய்வதுவியவகாரத்தில் அழுத்தமற்ற தொழிலை, அடையத்தக்கது தீமையற்ற நல்லோர்களிடத்திற்கலத்தல், புசிக்கத்தக்கது நானென்பதுண்டாகின்ற அகத்தை;— நீக்கத்தக்கது நரம்பு என்

சு. இதுவுமது.

பென்கின்ற சரீரமயக்கம்; காணத்தக்கது சகலவாத்மகோடிகளுண் ணிறைந்திருக்கின்ற பிரமம் பச்சைப்புரவியினை விழுக்கத்தக்க இரதத்தையுடைய சூரியனிடத்திலும், பூமியிற் றள்ளத்தக்கதாக கிருமியினிடத்திலும், ஞானமொன்றே நிலையாயிருக்கும்.¶—

எ. அனுசந்தானத்திற்குரிய குணத்தை

தாமதகுணமென்றும், இராசத குணமென்றும், சாத்துவித குணமென்றும் பெயரையுடைய மூன்று

---

§ இ-ம் ஸ்வானுபவமாய்ச் சஞ்சரிக்கும் விளக்கத்தைக் கூறினதென்பதாம்.

¶ இ-ம். பிரமானுசந்தானங்களின் சாரங்களைச் சுருக்கமாகக் கூறினதாம்.

யறிவித்தல்.

குணங்களாகிய சநநமும் முயற்சியாலடையும். பரம சுகமான மோக்ஷத்தை சாத்திகத்தொழிலானதுசெய் விக்கும். உத்தமமான ஸ்ரீராமாவென்று சொல்லி, திரும்பவும் வசிட்டர் சொல்லுவார்.†—

## திதிப்பிரகரணம்

முற்றிற்று.

---

## உபசாந்தப்பிரகரணத்தில்

# சனகராசன்கதை.

### அவதாரிகை.

முற்பிரகரணத்திற் சித்துவிலாசமே சகமெனவிளங்கு மென்பதை நன்குயுணர்த்தி, அச்சித்தேசகமாகவிளங்குதலா லச்சகமெப்போதுமின் றெனத்தெரிவிக்குநிமித்தமொன்பது கதைகளானிறைந்த உபசாந்தப்பிர கரணங் கூறத்தொடங்கி மனவுபசமனுர்த்தஞ் சனகராசன்கதையை நிரு பிக்கிருர்.

---

க. சர்வம் பிரமம யமென்பதைப்போ தித்து அச்சர்வந்தி ரி குணுத்மகமென் றுரைத்தல்.

தேவகுருவின் புத்திரனுகிய கசமுனி சொல்லிய ப்ரகாரமே இச்சகங்களனைத்தும் ஆத்மஞானஸ்வரூப மாம்; சநநமரணமென்னும் மாயையானது, இராசத தாமதமென்னுங் குணங்களைபொருந்திய புருடர்கள் தரிக்கத்தக்கதாய் தூண்கள் தாங்குகின்ற மண்டபத் தைப்போல நிலையாயிருக்கும்; திரமான சாத்துவித குணத்தையுடையஉன்னையொத்தவர்கள், பிறவியச்ச நீங்கியிருப்பார்கள்.— குறைவற்ற சாத்துவிதகுணத் தையுடையவர்கள், சருமத்தையுரிக்கின்றசர்ப்பததை ப்போலமாயாபாசத்தினின்றுநீங்குவார்கள்; சமஸ்த மும் பிரமம் நாமுமந்தப் பிரமமேயென்று சிந்தித்து யாமும் வேறுசகல சகங்களையும் வேறென்கின்றமயக் கத்தைக்கெடுப்பாய்; காரணமான பிரமஞானத்தில் உண்டாகின்றனவாகிய கற்பனைகளியாவும், சமுத்தி ரத்திலுண்டாகிய திரையைப்போல உண்மையாக வில்லை— துன்பமுமில்லை, இன்பமுமில்லை, சநநமு மில்லை; சநநமரணமென்னுஞ் சுழலிற் சுழல்பவர்களு மில்லை, ஒன்றென்று எப்போது மிருக்கின்றவஸ்து வே யிருக்கின்றது, வியசனப்பட வேண்டுவதில்லை, அனுபவயுத்தி பொருந்தும்படி, வருபவைகளையும்

உ. பிரமத்திலே தார்த்தமாய்ச் சர்வ மு மின்றெனல்.

ங. பிரமமே யுண் டென்றறிந்து வே றுண் டென்பதை ச்சத்துவகுணத்தா ற்கெடுப்பாயெனல்

† இ-ம் பவமாய் விளங்குங் குணங்களை நீக்கிச் சிவமாயிருக்குங் குணத்தை யறிவித்ததாம்.

போனவவைகளேயும் சிந்திக்காதே, இராகத்துவேஷ மென்னுந் துவிதங்களொன்றுமில்லாத மேன்மையாகிய சாத்துவிதகுணத்துடன் ஏகனுய்துக்கங்களனைத்தையும் நீக்கிநிற்பாய்.— சர்வத்திரசமமாய் ஆத்மஞான ஸ்வரூபத்தில் நிச்சயமுடையவனுய் திடஞானமுள்ளவனுய் உபசாந்தனுய் பொருந்தின மனதையுடைய மௌனியாகி, இரத்தினத்தைப்போலத் தெளிவையடைந்து, துன்பங்களியாவையும்விடுவாய்; நிருமலமானது பொருந்த தொழில்களனைத்திலும் இச்சையில்லாமல்செய்வாய், எனதென்றுகொள்ளுதலும் விடுதலும் இவ்விரண்டு மில்லாமல் துயரனைத்தையும், ஸ்ரீராமா! நீகெடுப்பாய்.†— மேற்சனனமில்லாத அந்தமான சநநத்தில் ஆத்மஞானமானது எளிதிலுதயமாம்; ப்ரகாசத்தையுடையுவெண்முத்துகள், உத்தமமான மூங்கிலல்லாமல் உண்டாவதுண்டோ. பிறந்தவர்களில் மேன்மையுள்ளவர்களாகியும், நன்மையுள்ளவர்களாகியும் அன்புள்ளவர்களாகியும், தெளிந்தவர்களாகியும்,நித்தியமானசீவன்முத்தர்களாகியும்ஆத்மஞானிகளாகியுமிருக்கின்றகுணங்கள் அம்முடிவான பிறப்புள்ளவர்களேச் சேரும்.— மிருதுவான நடையுள்ள அச்சத்துக்களே சகமனைத்தும் விரும்புகின்ற குணமானது, கானகத்தில் ஒருகொத்தில் வேணுவினுற்செய்த பிள்ளாங்குழலினதிராகத்தினுல்களிக்கின்றபசுவின் கூட்டம்போலும், இக்குணமானது சகலருக்கும்பொதுவாக சொல்லியதாம். இக்குணங்களிற் றனிமையாக எழுவகைப்பிரப்பையுங் கெடுப்பவர்களுக்கு மோக்ஷமார்க்கமிரண்டு; அம்மார்க்கஞ் சொல்லக்கேளும்.— ஆசாரியருபதேசவாக்கியங்கள் தவருமலப்பியாசஞ்செய்யில், மெல்லமெல்ல மயக்கம்விட்டு ஆசாரிய ரனுக்கிரகஞ்செய்த சென்மத்திலாவது அதற்கடுத்த சிலசநநங்களிலாவது வீடானதுண்டாம் களங்கமற்ற விற்பன்னமானது கொஞ்சமுண்டாகிய மனதினுல் தான் மனனஞ்செய்வதினுல் ஆகாயக்கனியானது விழுவதைப்போல, உண்மைஞான மெளிதிற்கிடைக்கும்.*— இந்த விரண்டுமார்க்கத்தில் ஆகாயக்கனியைப்போல தத்துவஞானமானது பொருந்தியகுணத்தை, நல்லவுதாரத்தையுடைய இராமா! முன்னடந்த வொருகதையினுல் நான் சொல்லமனந்திருந்தும்படிகேள், சகத்தில்

ரு. பிரம மாய் நின்றுயானெனதென்கின்ற துன்பத்தைக் கெடுக்க வேண்டு மெனல்.

கூ. பிரமானுபவ முதிக்கும் பக்குவ மறிவித்தல்.

சு. பாவந்தீர்ப்பதற் கிரண்டுமோர்க்க முண்டெனல்.

எ சத்மார்க்க மிரண்டிற்சுளுவென்பதை யும் பளுவென்பதையும்பகுத்துக் கூறல்

அ. ஞானஞ்சுளுவிலுதித்த ற்குத் திருஷ்டாந்த மறிவிக்கத் தொடங்குதல்.

† இ-ம். சர்வம் பிரமமயமாய் விளங்குவதேயன்றி வேறன்றென்பதாம்.

* இ-ம். ஆசிரியர் வாக்கியப்படி யனுசந்தித்தலும், அவ்வாக்கியத்திற் சுயவிற்பத்திபுண்டா யனுசந்தித்தலுமாகிய விரண்டையு மறிவித்ததாம்.

சத்துருவினால் ஆபத்தென்ப தொன்று மில்லாதவன்,
உ.தாரத்தை யுடையவன், செல்வத்தில் மிகுந்தவன்,
பொறுமையில்லாத விதேகமென்னும் பூமியை அர
சாட்சிசெய்பவன், சனகனென்னும் பெயரையுடைய
விராசராசன்,— சற்குணத்தில் சமுத்திரத்துக் கொப்

௯. சனகராசன் பக்குவமறிவித்தல்.

பானவன், விஷ்ணுவைப்போல பூமியை இரட்சிக்
கின்ற குணத்தையுடையவன், நல்லகுணங்களைச்செய்
கின்ற வசந்த காலத்தில், வாசனையுள்ள புட்பங்க
ணிறைந்தசிங்காரவனத்தில்சந்தோஷத்துடன்போய்,
தனக்குரிய மந்திரிமுதலிய சேனைகள் வெளியினிற்க
தனித்துச் சஞ்சரிக்கின்ற சமயத்தில், சித்துக்குரித்
தான மனதையுடைய சித்தர்குழாங்கள் பாடுங் கீதங்
களை காதிற்கேட்டான்;†— வாசனை நிறைந்த மலையி

௰. இருக்குவேதமகாவாக்கியார்த்த நிருபணம்.

விருப்பவர்கள், நேத்திரவிடயத்திற்பொருந்தாத சித்
தர்கணங்கள் தங்களனுபவத்தைப் பேசாநின்றகீதை
யை நீதிகணிறைந்த சனகராசன் கேட்டவண்ணமே
யாஞ்சொல்ல, ஸ்ரீராமா? நீமனதிற்றரிப்பாய். ஞாதா
வும் திரிஸ்யமும் கூடுங்கூட்டத்திலுண்டாகின்ற ஞான
சுகமானது, பிரிவுபடாத ஆத்மஞானத்தி லுண்டான
தாம்; அவ்வாத்மஞான சுகத்தை, விரும்பவேண்டு

௧௧. எசுர்வேத சாமவேத மகாவாக்கியார்த்த நிருபணம்.

மென்றொரு சித்தர்சொன்னார்.—காண்பனவும் ஞான
மும் வாசனையோடு நீங்கச்செய்து, உயர்வான பார்
வைக்கு முதற்பிரகாசமாகிய அவ்வாத்மஸ்வரூபத்தை
தியானஞ்செய்வோமென் றொருசித்தரும், நிலையான
குணமுடைய சத்தசத்தென்னும் இரண்டினடுவான
வியாபகத்தை யடைந்து முடிவில்லாததாய் மாட்சி
மையான ப்ரகாசங்களுக் கெல்லாம் ப்ரகாசஞ்செய்
விப்பதாகிய வாத்மஞான ஸ்வரூபத்தை சிந்திப்போ
மென்றொரு சித்தர்சொன்னார்.—நானென்று சகல

௧௨. அதர்வணவேத மகாவாக்கியார்த்த நிருபணஞ் செய் திவைகளைத் தவிர வேறனுபவங்கூடாதெனல்.

வாத்மாக்களிடத்துமிருந்து சதாகாலமுஞ் சொல்லுவ
தாய் ப்ரகாசமாக விளங்காநின்ற ஆத்ம ஞானமாகிய
வஸ்துவை சிந்திப்போமென்றொரு சித்தர்சொன்னார்.
விளங்காநின்ற தனதுளத்தி லெழுந்தருளி யிருக்கும்
தெய்வத்தைவிட்டு வேறான தெய்வந்தேடுதல், கையி
லிருக்குங் கவஸ்துவரத்தினத்தை யெறிந்த சங்குமணி
தேடுகின்ற ஆசையை யொத்திருக்கும்.— முடிவில்

௧௩. நிராசையுள்ளவர்க் கிவ்வனுபவங் கிடைக்குமேயன்றி யஃதில்லாதவர்க் கின்றெனல.

லாத வாசை யென்கின்ற விடவல்லியின் காட்டை யெ
ரித்து மிகுந்த விச்சைகளியாவையும் கெடுத்தவர்
களுக்கல்லவா இவ்வாத்ம விலாபமானது கிடைக்கும்;
தீமையான வஸ்துக்களனைத்திலும் முன்னும்பின்னு
மின்பமில்லாம லிருக்கின்ற குற்றத்தைப் பார்த்திருந்

† இ-ம். மகான்களனுபவஞ் சனகனுக்குச் சிரவணமாயிற் றென்பதாம்.

தும் திரும்பாத பாவனையினல் பந்தப்படுவர்கள் கழுதையே யல்லாமல் வேறொன்றுமல்ல— எழும்பியெழும்பிச் சீறுகின்ற இந்திரியமென்னுஞ் சர்ப்பங்களை, மனதினிடத்தில் உறுதியானவிவேகமென்னுந் தண்டினல் தேவேந்திரன் வச்சிராயுதத்தைக்கொண்டு மலைகளைப் புடைப்பதுபோல, கெடும்படியாக வடிக்க வேண்டும். உபசாந்தத்தினுற் சம்பாவத்தை யடைந்து துன்பமில்லாத மனமானது, முழுதுஞ் சுகாகாரமான தனதாத்மஸ்வரூப ஸ்திதியைப் பெறும்; இதுவே மோக்ஷமென்று பலசித்தர் சொன்னர்கள்.†— தெளிவுடைய சித்தர்குழாங்கள் விளக்கமாகப் பேசிய வனுபவார்த்தங்களை தெளிவாகக் கேட்டு, செருக்குகின்ற கொடிய கோபமுள்ள கருடனது சத்தத்தைக்கேட்ட சர்ப்பத்தைப் போல சனகராசன் கலக்கமுற்று, குளிர்ச்சி பொருந்திய சிங்காரவனத்தி லிருந்து தனதரண்மனைக்குவந்து, மந்திரிமுதலிய யாவர்க்கு முத்தரவு கொடுத்து, தனது வீட்டிற்புகுந்து குளிர்ந்த சுன்னச்சாந்தினுற்செய்த மேலுப்பரிகையில்தனியனுயிருந்து முன் சிரவணமான அருத்தத்தை மிகவும் விசாரிக்கத்தொடங்கினன்.¶— பறக்கின்ற பக்ஷிகளினிறகைப்போல சதாகாலமும் பதைத்தலைந்து நசிக்கின்ற சகத்தினடையைப் பார்த்து வாய்விட்டழுது சொல்லத் தொடங்கினன். மிகவுறைந்து அவத்தைகளிற் சுழன்று சஞ்சலப்படு மிச்சகத்தினிடத்தில் நான் அதிகரிக்குமயக்கத்தினல் பெருங்கல்லின் மத்தியிலுற்ற பொடிக் கற்களைப்போல், அந்தோ! சுழன்று வருந்தினேன்.— ஒருகாலமு முடியாமலிருக்கின்ற காலதத்துவமான இதனிடத்தில் எண்ணிக்கையுள்ள எனதாயுளென்னு நூறு வருடமானது ஒருக்ஷணநேரமுமில்லை; இந்த வாயுளை மிகவும் பெரிதாக நிச்சயித்து வலிமையுள்ள வாசையினிடத்தில் விழுந்து, யான் றளர்ச்சி யடைவதென்ன, தூல புத்தியினுற் கெட்ட என்னைப்போல இழிவுள்ளவர்களார். ஒழுங்கில்லாத ஆயுளை கனமாக கூறத்தக்கதோ சீ, சீ,—

கச. மனது விடயசுகத்தை நீக்கிப் பிரம சுகத்தை யடைய வேண்டுமெனல்.

கரு. அவ்வனுபவம் விளங்குநிமித்தம் விசாரத்திற் காரம்பித்தல்.

கசு. லோகாசார தூடணம்.

கஎ. ஆயுள் தூடணம்.

† இ-ம். நிட்காமபுண்ணிய பரிபாகத்தினுற் சித்தசுத்தியும், அச் சித்தசுத்தியாற் சாதன சதுஷ்டயமும், அச் சாதன சதுஷ்டயத்தால் முத்தியை யடைவதற் கதிதீவரமுமுண்டா யேகாந்தனு யிருக்குஞ் சமயத்து லாதிவாசிக சரீரியான சித்தர்களுச்சாவிக்கொண்டிருந்த மகாவாக்கியார்த்தங்க ளவனுக்குச் சிரவணமாய் அதனுன் மனன நித்தியாசனஞ் சமாதி சாக்ஷாத்கார முண்டாகும்பொருட் டாத்மவிசாரத்தை யறிவேசுருவாய் நின்றுணர்த்தியதாம்.

¶ இ-ம். ஆத்மாநாத்ம விசாரணைசெய்யத் தொடங்கினதாம்.

கஅ. இராசபோகதூடணம்.

அளவில்லாத அண்டங்களில் நானாளுகின்ற பூமியைப் பார்க்குமளவில் அணுவளவுமில்லை; துன்பம் பொருந்தாநின்ற இச்சகத்தை பெரியதாக விரும்பி, நிற்கின்றதே யாச்சரியமாச்சரியம், இமைப்பில் இனிமையாகியும், உதாரமாகியும், செய்யப்படாததாகியுமிருக்கின்ற பொருளிதுவென்று சொல்லும்படியான பழமையாகிய சகத்தில், ஒருவஸ்துவையாவது கண்டிலன்; இத்தொடர்பாகிய தன்மை என்னவதிசயம்.—

கக. போகதூடணம்.

மேலானவர்களுக்கு மேலாயிருப்பவர்களும் தினங்களினால் கீழ்ப்பட்டவர்களுக்குங் கீழாவார்கள், இப்படி நிலையில்லாதசெல்வத்தை உறுதியாக நினைக்கின்ற மனமே? இன்னினைப் பென்ன காரணம். நீங்காத மகா போகங்களும், மகான்களும், சுற்றத்தோடும் உண்டாகியுண்டாகி முற்காலம் சஞ்சலமுற் றிறந்தார்கள்; இப்பொழுதுஇவ்விதத்திலுள்ள வஸ்துக்களனைத்திலும் நிச்சயமென்ன.—

உ0. பிரமன் முதலியோர் பெருஞ்செல்வ தூடணம்.

பூலோகமும், அதையாளுமரசர்களும், அவரது செல்வங்களும், நசித்தவைகள் நுட்பமான மணலுக்கொப்பாகும்; தெய்வலோகமும், அதற் கரசராகிய தேவேந்திரர்களும், அவரது செல்வங்களும், மரித்தவைகள் ஆகாயத்தின் மீன்களையொத்திருக்கும்; எண்ணிக்கையுள்ள சகங்களும், பிரமர்களும், அண்டங்களும், சீவகோடிகளும், நசித்ததளவில்லை; வருத்து மனமே? பார்க்கப்பட்டவைகளெங்கே, உனது வாழ்க்கையினது நிலையெங்கே.—

உக. காலதூடணம்.

ஓர் பொருளாகச் செல்லாத மாயையென்னும் இருண்ட விராத்திரியில், தேகாகாரமயக்கமென்னுங் கொடிய நீண்ட சொப்பனமாகிய மித்தையில் ஆசையற்பம் வைத்தேனாயின் கற்காத கீழ்மகனானேன், சீ, சீ, யானெப்போதும் காண்கின்ற காலங்களனைத்தும் நசித்தேபோகும், நசியாமலொன்றாவது நன்மை பொருந்திய வழகுள்ள காலத்தைப் பார்த்திலேன்.—

உஉ. தனதூடணம்.

மத்தியிலாவது, அந்தத்திலாவது, ஆதியிலாவது, நன்மையாகிய வஸ்துக்களொன்றாவது, பூமியிலில்லை; உண்டான வஸ்துக்களியாவும் நாசமென்னு மலத்தினால் பூசப்பட்டதல்லவா, தினங்கடோறும் கடுமையான பாவவிருத்திகளையும் நாள்கடோறும் வருத்துகின்ற துன்பங்களையும், நாள்கடோறும் ஓர் வரம்பின்றிய தீமைகளையும், மூடர்கள் சரீர நடனத்தாற் செய்கின்றார்கள்.—

உங. புறப்பொருளை நியதிகளைந் திதற் காதாரமான புறம்பிலுள்ள தேகத்தை நியதிசெய்

பாலப்பருவனாய் அஞ்ஞானத்திலழுந்துவான்; நல்லவெவ்வனப்பருவனாய் ஸ்திரீகளால் மிகவும் வருத்தப்படுவான்; மூப்புப் பருவமுடையவனாய் சம்சாரத்தினால் தளர்ந்து மரணமடைவான்; மேலிவன்

வான் அதன் பருவங்களைத்தூடித்தல்.

எந்தக் காலத்தில் என்ன சற்கிருத்தியத்தைச் செய்வான்; மாயையினடன மிருந்தவிதமென்ன, சகங்களனைத்து நடன சபையாகவும், இந்திரியம் பலவாத்தியங்களாகவும், மனப்பசாசம் நடனஞ்செய்யும்.—சத்தினது சிரசின்மேல் அசத்து விற்றிருக்கும், சகத்திலெப்பொழுதும் தெளிந்த நல்ல தருமத்தின் முடியில் சதாகாலமும் பொல்லாங்கு வாழ்ந்து கொண்டிருக்கும்; இகழ்ச்சியற்ற வின்பத்தினது சிரசின்மேல் துக்கங்களிருக்குமேயானல், இக்குறிப்புள்ள எனக்கு கொள்ளத்தகுதியான குற்றமற்ற வஸ்துவெது— கண்விழிக்கின்றதும், மூடுகின்றதும், சகத்தினுற்பத்திலயமாகப்பெற்ற மேலானபிரமாதிகளுண்டாயிருக்கின்றதால் நிந்திககப்படாத அத்தன்மையுள்ளவர் கண்முன்பு, என்னையொத்தவர்கள் என்னவென்று சொல்லப்படுவார்கள்; இழிவுசொல்லுதற் கரிதாயிருக்கின்ற அதிசயமான சம்பத்துகளும் மனது வருந்தினுல் ஆபத்துக்களாம், நீக்குதற்கரிய அதிசயமான வாபத்துகளும், மனது விரும்பினுல் சம்பத்தாகும்.— வெப்பமுள்ள சம்சார வாழ்க்கையல்லவா துன்பங்களனைத்திற்கும் உற்பத்தி ஸ்தானமாய் சொல்லப்படுகின்றது; அம்மா! இந்தச் சகத்தினிடத்தில் முழுகுகின்ற வுயிர்களுக்கு இன்பமுண்டாவதெப்படி, அஞ்ஞானமாகிய சம்சாரமென்கின்ற விருக்ஷமானது கிளைபத்திர புட்பக் காய்கனிகளாலும் அளவில்லாமல் வளரும்படியாக இந்த மயக்கஞ் செய்கின்ற மனமே வேராகும்; இம்மனதுதான் சங்கற்பமென்று சொல்லப்படும்.— சங்கற்ப நாசத்தினுல் சுளுவாக மனோநாசம் வலியவரும்; கேடுற்ற வேரான மனமானதிறந்தால் பிறப்பிறப்பென்கின்ற விருக்ஷமு நாசமாகும்; இவ்விடத்தில் ஆத்மரத்தினமான வென்னைத்திருடுகின்ற சோரனைப் பார்த்தேன், பார்த்தேன், இவனுமமானது மனமாம், வளராநின்ற இந்தமனதினுல் வெகுகாலந் துன்பப்பட்டேன், இப்போது கெடுப்பிப்பேன்.— இவ்வளவு காலம் மனமென்கின்ற முத்தைச் சிகிச்சையென்னுந் தமர்செய்கிலன், இப்போதுசிகிச்சைசெய்துபொருந்திய வனுபவமென்னுஞ் சூத்திரத்தினுல் அழகாகக் கோவைசெய்து தரிப்பன். சகலமு முணர்ந்த சித்தர்களான வாசாரியரால் யாவையுந் தெரிந்தேன்; சுத்தமான பிரமாநந்தத்தைத் தெரிவிக்கின்ற சுகபோதமாகிய ப்ரகாசத்தை யடைந்தேன்; மெதுவாக இவனென்னும் நானென்னும் இவ்விடத்திவைகளென்னதென்னு மசத்தியத்தை மனதிற்கெடுத்தேன்; திரும்ப

உச. அறம்பொருளின்பத்தைநோக்கி யாவையுங் குற்றமுள்ள வஸ்துக்களெனத்தள்ளுதல்.

உரு. மனமேசுகதுக்கமாமென்பதை விசாரித்தல்.

உசு. மாயாகாரணமனதே யாமென்பதை மன்னித்தல்.

உஎ. மனதைகிநித்தியிற் காக்ஷிப்படுத்தல்.

உஅ. மனதை யடக்குங் காரணந் தெரிதல்.

௨௯. சுகபோதந் தானா யிருக்கின்ற சமாதியடைதல்.

வுந் தேடேன்;— என தாத்மஞானத்தைப் பேதஞ் செய்யுமனமென்கின்ற பெரிதானசத்துருவைமிகுந்த பலத்தினால் பிளந்து வெற்றியடைந்தேன்; என்னைவாதனைசெய்த துன்பங்களனைத்தையும் போக்கினேன்; உபசாந்த வாழ்வையடைந்தேன்; இப்படிசாதிக்கப் பட்டவிவேகஞானமே உன்னைத் தொழுதேனென்று, சனகராசனானவன் என்னைக்கெடுத்தமனோசஞ்சலங்களனைத்தையுங் கெடுத்து தானே சித்திரப்பதுமையைப்போலச் சமாதியிலிருந்தான்.—

௩௦. சமாதியிற் சுகம்பெற்றுச் சகசத்தில் வெளிப்படல்

மௌனமாய்ச் சித்திரத்தைப்போல வெகுநேரஞ் சமாதியிலிருந்து, சனகராசன் நாசமானமனதை திரும்பாத நல்லவுபசாந்தமுள்ள பூரணமனத்தினால் சகத்தின்குணத்தை பொருந்திப் பார்த்தான், முயற்சியாற்செய்யப்பட்ட பொருளியாது, கைவசமாகத்தக்க பொருளியாது, குற்றமுள்ள கற்பனையாது, குறிக்கும்போதெனக்கியாவுஞ் சுபாவஞானமாம்.—

௩௧. சாக்ஷாத்காரவனுபவ விலாசங் கூறல்.

பரிசுத்தமாய் ஆத்மஞான ஸ்வரூபமாகிய எனது ஸ்வரூபத்தை யல்லாமல் வேறுபொருள் தோற்றக்கண்டிலன், நான்வாராதவஸ்துக்களை விரும்பேன், வாராநின்ற வஸ்துக்களியாவையும்வெறுக்கேன், சதாகாலமும் தன்னிலையி லிருக்கின்ற எனதாத்மஞான ஸ்வரூபத்தில் திரமாயிருப்பேன், சொன்னபடி யெதுவருகின்றதோ அது வரக்கடவதென்றுசொல்லி பிரமாநந்தத்தின்முழுகி சனகராச னொருமைப்பட்டான்.—

௩௨. சகசநிஷ்டையிற் சீவன்முத்தனாய்ச் சஞ்சரித்தல்.

ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற ப்ரகாசத்தையுடையசூரியன் தினங்களைஇச்சாவெத்தனமில்லாம னடப்பிக்கின்றதுபோல, அடிக்கடி வந்து தானேயுண்டாகிய கிருத்தியங்களை பற்றில்லாமற் செய்வோமென்று சனகராசன் சிந்தித்து, தீமையே நேயமாகவருகின்ற எதிர்காலத்தையும், இறந்தகாலத்தையும், அற்பமாகிலுஞ் சிந்திக்காமல், ஈனமுள்ள வர்த்தமானகாலத்தின் றொழிலில் ஒருநிமிடநேரத்தில் நகைத்தலோடு சஞ்சரிக்கத் தொடங்கினான். ¶—

௩௩. சனகரனுபவத்தைக்கூறியிவ்வனுபவம் வருவதாத்மவிசாரத்தாலன்றியேனையவற்றாற் கூடாதெனல்.

சித்தர்களாற் சொல்லப்பட்ட ஆத்மவிசாரணையினால் சனகராசனானவர் அடையத்தக்க வாத்மலாபத்தை அடைந்ததேயல்லாமல், உபசாந்தமுள்ள மனது வேறொன்றினால் வந்ததன்று. தாமரைக்கண்ணையுடைய ஸ்ரீராமா? குற்றமற்றதாகியும் அழகாகியுமிருக்கின்ற தனதாத்ம விசாரணையினால் பரமபதத்தை யடைவதேயன்றி, ஆசாரியரில்லாத ஈனர்

¶ இ-ம். சனகராஸ்மீகமா யாசிரியர் வாக்கியங்களைக் கேட்டுச் சுளுவாகப்பெற்ற ஸ்வானுபவத்தாற் சர்வம் பிரமமயமாமென்பதை யுணர்ந்ததுவாக விளங்கினரென்பதாம்.

செய்யுங் கிரியையால் ஆத்மஞானஸ்வரூபத்தை யடையலாகுமோ.— ஆத்மாவுக்குப் புறம்பான பதப்பிராப்திகளைவிரும்பி முயற்சிக்கின்ற கருமத்தை பூமியின்கண் ணுள்ளவர்கள், விசேடமான சுகபோதமானது மிகவுமுண்டாகவேண்டுமென்று முன்புசெய்தாலாத்மலாபமாம், அச்சமாகிய வாபத்துக்கள் விளைகின்ற பூமியாயிருந்து துன்பசமுத்திரமாய் பவமான விஷவிருக்ஷங்களுக்கு விதையாயிருக்கின்ற அஞ்ஞானத்தைக் கெடுக்கவேண்டும்.— ப்ரகாசிக்கின்றசிந்தாமணியாகிய இருதயமென்னும் பொட்டியில் இருக்கின்ற ஞானமானது, கலக்கமில்லாத ஞானிகளுக்கு, சிந்திக்கப்பட்ட பொருள்களை கற்பகவிருக்ஷத்தைப்போல க்ஷணத்திற்கொடுக்கும், ப்ரகாசிக்கின்ற ஆத்மவிசாரணையைப்பெற்று அறியாமைகெட்டு சுகபோதமுதயமானவர்களை, ப்ரகாசிக்கின்றவச்சிரகவசந்தரித்தவர்களை பாணங்களைப்போல, இராகத்துவேடமுதலியவிகற்பந்தாக்காது.- பிரமசூரியனை மறைத்துகளங்கமாயறிவின்றிமதர்த்துவிரிந்து திரும்பவுரமாகியிருக்கின்ற அகம்பாவமென்னு மேகமானது, ஞானமென்னுஞ்சண்டமாருதத்தினல் சின்னபின்னமாகும்,மேன்மையான பரமபதத்தை விரும்பினல் தனது மனதின்கண்ணுள்ள விச்சையைமுன்னங் கெடுக்கவேண்டும்; பலமானபூமியை முந்தினதாகவுழுதல்லவா விளையாநின்ற தானியலாபத்தை யடைகின்றார்கள்.‡—

நசா. நிட்காம கன்மம் வேண்டு மெனல்.

நடு. அந்நிட்காமத்தாலுண்டாயின விசாரணையின் பலனைக்கூறல்.

நசு. அவ்விசாரணையால்அகங்கார நீங்கி ஞான முதிக்குமெனல்.

சனகராசன்கதை.

முற்றிற்று.

# புண்ணியபாவனன் கதை.

---

## அவதாரிகை.

முன்கதையிற் சிதானந்தாகாரமேயாவுமாமென்பதனு லெளிதிற்சித்தோபசாந்தியைக்கூறி,இவ்வனுபவங்கொஞ்சம்வருத்தத்திலும்வருமென்பதை யறிவிக்குநிமித்தஞ் சகநாந்தரங்களைப் போதித்த வதனு லனுபவமுதித்த புண்ணியபாவனன்கதையை நிரூபிக்கிறார்.

மோகமென்னும் வற்சனபிக்கொடியானது உண்டாகி வளர்தற்குக் காரணமாகியும், துக்கமென்னுஞ் சர்ப்பமானது தனித்திருந்தரசாக்ஷிசெய்வதற் கொப்பற்ற விடமான தேகாதிகளை நானென்றுபார்க்கு மஞ்ஞானமானதுஒன்றுனவாத்மஞான முதயமானுல்நசிக்

க. இப்பிரமானுபவமாயாநாசத்திதிக்குமெனல்.

‡ இ-ம். ஞானமுதிக்குங் கிரமங்களை முறையே புணர்த்தியதாம்.

௨. மாயாநாச வுபாயங்கூறல்.

கும்.— இந்தவுலகம் அசத்தென்பதை எப்பொழு துங்கண்டு நீக்கி நுண்மையாகப் பார்க்கின்றவர்கள், சனகராசனைப்போல சூட்சுமவறிவினால் தனிமையான பரமார்த்தத்தை பருவகாலத்திலறிவார்கள். அஃ தன்றி, திரவியங்களினாலும், மானிடர்களினாலும், கிரியைகளினாலும், வானவர்களினாலும், வரமாட் டாது.— பிறப்பிற் பயந்தவர்களுக்கு தங்கள்முயற்சி யே கதியாம்; இவ்விடத்தினாலோறும் இவனுனென் கின்ற அற்பவுணர்வுகெடுமானால் களங்கமில்லாததாய் சகத்தனைத்துமான விசாலஞான முண்டாயிருக்கும், மனது விசாரணையைப்பொருந்த தனதுமேலான வாத்மஞானந் தெரிசிக்கவரும்.— பற்றுதலும் விடு தலுமென்று சொல்லப்பட்ட விரண்டில் பற்றுவதும், விடுவதும் பொருந்தின வவ்விரண்டும், மனதின்வடிவ மாய் அதுவே மகாபந்தமன்றி வேறேயில்லை, முதிர் ந்த விராகத்துவேடங்களால்வரு மாசையையுந் துன் பத்தையுநீக்கி நிறைந்த விருப்புவெறுப்பை கெடுத் துச் சலியாதிருப்பாய்.— மயக்க மில்லாமையும், அநித்தியமில்லாமையும் அஞ்ஞான மில்லாமையும், துன்பமில்லாமையும், வேண்டுந்தொழிலில்லாமையும், நீக்குந் தொழில்லாமையும், தியக்கமில்லாமையும், ஒருவிகற்பமுமில்லாமையும், அச்சமில்லாமையும், வாட்டமில்லாமையும், பகையில்லாமையும், குறை வொன்றுமில்லாமையும், கீழ்மையில்லாமையும், கொடு மையில்லாமையும், வஞ்சகமாய்ப்பேசவில்லாமையும்,-

௩. முயற்சியாற் பேததிருஷ்டிநீங்கி ஆத்மதரிசன முண் டாமெனல்.

௪. விருப்பு வெ றுப்பறில் பேதநீங் கி யசைவற் றிரு க்குமெனல்.

௫. அச்சம திரு ஷ்டியின் குணமு ணர்த்தல்.

வீடுபற்றிரண்டை நீக்கின சத்துக்களிடத்தில், நீண்டவாதனைகளில்லாமல் முன்சொல்லிய குணங்க ளானவைபொருந்தியிருக்கும். வலிமையுள்ளசிந்தனை யென்னுஞ்சூத்திரத்தால் கட்டுப்பட்டு, பவசாகரத்தி னிடையிற்பொருந்த மயக்கமென்னு மச்சங்களைப் பிடிக்கின்ற பெரிதாகிய வாசனையென்று சொல்லப் பட்ட வலையாம்.— வாதனையென்கின்ற இந்தவலையை ஞானமென்னுங் கத்தியினாலறுத்து, அடிக்காநின்ற சுழற்காற்றினால் சிதறுகின்ற மேகத்தைப்போல மன மிறந்திருப்பாய். விருக்ஷத்தை கோடாலியினால் கெ டுப்பதுபோல களங்கமானமனதை பரிசுத்தமனதினால குற்றமில்லாமற்கெடுத்து, மேலான பரமபதத்தில் திடமாகவிருப்பாய்.‡— போதல், வருதலும், உறங் குதல், விழித்தலும், இருப்பதும், நிற்பதும் ஆகிய சகத்தொழிலனைத்து மித்தையென்று அழுத்தமாய்

௬. விருப்பு வெ றுப்பறும்படி வாச னாத்தியாகம் வர வேண்டுமெனல்.

௭. வாசனா நாச வுபாயங்கூறல்.

௮. பின்னும் வா சனையை நீக்கவே ண்டி வைப்புறுத் திக் கூறல்.

‡ இ-ம். ஸ்வானுபவ முதித்தற் சஞ்ஞான முதலிய வாசனையை நீக்கு முபா யத்தை யறிவித்ததாம்.

அகத்திச்சையை விட்டுவிடுவாய்; அலைகின்ற மனமா
னது, இயல்பான வாசனையினால் ஞானத்தின்பின்
செல்லுதல், மாமிசவாசனையினாற் கேசரியைத்தொட

௯. மனோநாசத்தில்வாசனாக்ஷயமுமுத்தியு முண்டாமெனல்

ருகின்ற பூனையையொப்பாகும்.— சிம்மத்தின்வீரத்தி
னால் கிடைத்த வூனத்தினுகின்றபூனையைப்போல,
தொடர்பாகச் செல்லுகின்ற மனதும் அறிவினாலுண்
டாகிய விடயவஸ்துக்களைப் பிடித்துக்கொள்ளும்
விஸ்தாரமாகக்காணப்பட்ட திரிஸ்யத்தை பிடிக்கில்
மனநாசமாகாது, பந்தநீங்காது, திடங்கொண்டதிரிஸ்
யத்தைநீக்கினால் மனோநாசம்வந்து நிருவாணமாகும்.

௧௦. ஆத்ம தரிசன மறிவித்தல்.

நான் இவைகளென்பதாகிய இரண்டுமில்லையென்று
சிந்தித்து மகாமேருவைப்போல ஸ்திரமாயிருப்பாய்,
களங்கமற்ற வாகாயத்தைப்போல நின்மல மன
துடையவனாய், நன்மையான மனதில் ஆத்மாவும்
சகமுமாயிருக்கின்ற ஞாதாவும் ஞேயங்களின் மத்தி
யில் மேலாகவிளங்கிய ஞானமென்கின்ற வுனதாத்ம
ஸ்வரூபத்தை, நீ விடாமற் றெரிந்துகொள்வாய்.—

௧௧. இதுவுமது.

இனிமையான வஸ்துவும் இனிமையைக் கொள்
கின்றவனுமாகிய இவ்விரண்டையுநீக்கி, இவைகளின்
மத்தியில் தனிமையாகப் பிரகாசிக்கின்ற இன்பத்தை
யாராய்ந்துஆத்மஸ்வரூபமாயிருப்பாய்; பலவற்றைப்
புசிப்பவனும் பொசிக்கப்பட்டவஸ்துவும் இரண்டின்
மத்தியில் எப்போதும் பற்றில்லாம லிருக்கின்ற
அதைப்பிடித்து அதற்குள்ளிருப்பாய்— ஆசையினாற்

௧௨. இச்சையையுமகம்பாவத்தையுநீக்க வேண்டுமெனல்

கட்டுப்பட்டா லுயிர்வாழமாட்டார்கள்; கயற்றினாற்
கட்டி லுயிர்வாழ்வார்கள்; ஆகையினால் இச்சாபந்தத்
தை சங்கற்பநாசத்தாற்கெடுப்பாய். நானென்றுசொல்
லப்பட்ட பாவனையை நானென்று சொல்லப்படாத
வொருகத்தியினாற்கெடுத்து குற்றமற்ற ஆத்மபாவனை
செய்து ஏழுபிறப்பில்லாத மோக்ஷத்தையடைந்து,§-

௧௩. அகங்காரத்தியாகத்திலும் தேகத்தியாக நன்றெனல்.

சகலவுயிர்களுக்கும்பயமில்லாதநிலையில், ஸ்ரீராமா?
இருப்பாயென்று வசிட்டர்சொல்ல, தொழில்கள்
தொடர்ந்திருக்கின்றநானென்னும்பாவனையின் ஆசை
யைத் தீர்ப்பாயென்று சொல்லிய வுமதுவாக்கியத்தை
கருதுமிடத்தில், மிகவுமாழமாம்; நெடியவகங்கார
நாசத்தை செய்வதைவிட சரீரமென்னுங் காரண
மொழிக்கின்றேன்.— நானென்பதைக் கெடுத்தால்,

௧௪. அகங்காரத்தியாகத்துக் கிரண்டுபாய முண்டெனல்

சரீரமும்வேரோடறுத்தவிருக்ஷத்தைப்போல நசிக்கு
மென்று, உயர்வான ஸ்ரீராமன்சொல்ல, வசிட்டமா
முனி சொல்லுவார். ஸ்ரீராமா? அகங்காரவாசனையை

§ இ-ம். மனோவாசனை யகம்பாவமென்னு மிரண்டினையுநீக்கி வீடடையவேண்டுமென்பதாம்.

நீக்கும்விதம் ப்ரகாசிக்கின்ற தேயமென்றும் ஞாய
மென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டுவிதமாக ஓதி
௧௫. அவ்விரண்டில் தேயத்தியாகமறிவித்தல். யுணர்ந்தவர்கள் சிந்திப்பார்கள்.— இந்த நமது
பொருளுக்கு சீவிதநாம், இந்தவஸ்துக்கள் நமக்கு
சீவிதம், செல்வமான விப்பொருளையல்லாமல் நா
மென்பதில்லை, நம்மையல்லாமல் கிடைத்த விப்பொ
ருள்களில்லை என்னுமனத்தி னிச்சயத்தைநீக்கிபுத்தி
யால் விசாரித்து நாமும் விடயங்களும் வேறுவே
௧௬. இதுவுமது. றென்று.— யாமும் பொருள்களுக் குடையோமல்ல
பொருளு நம்முடைய தல்லவென்று தெளிவடைந்து
உள்ளங்குளிர்ந்து, யாவையும் லீலையாகசெய்கின்ற
மனதினாலும், மயக்கமில்லாத நிச்சயத்தினாலும், வாச
னையைவிடுகின்றமே, அருளை வருஷிக்கின்ற மேகத்
துக்குச் சமானமான ஸ்ரீராமா? தேயத்தியாக மென்
௧௭. நேயத்தியாகங் கூறல். றுணர்வாய்.‡— தன்னுடைய வாசனைகெட்டு அனைத்
தையும் சமமான புத்தியினாற்பார்த்து நானென்று
சொல்லப்படாத சரீரத்தைத்தள்ளினால் இவ்வாசனா
க்ஷயமே களங்கமில்லாத ஞேயமாம். அகங்காரவடிவ
மான சொல்லப்பட்ட வாசனையை முதிர்ந்தலீலையாக
௧௮ இவ்விரண்டு தியாகத்தின் பெருமை கூறல். விட்டவர்கள் மேலானசத்துக்கள்.¶— தீரானவவர்
களே தேயத்தியாகத்தைச் செய்கின்ற சீவன்முத்தர்
களாம். கிரியைகளோடும் மூலங்கெடும்படி வாசனை
யைக் கெடுத்து மனஞ்சாந்தமடைந்து சேய்மையான
ஞேயத்தியாகஞ் செய்தவர்கள் குற்றமற்ற விதேக
முத்தராம். வெற்றியையுடையஸ்ரீராமா? இந்தவிரண்
டினுடைய தியாகமும் ஒன்றுக்கொன்று சமான
௧௯. இதுவுமது. மாகும்.— தேயத்தியாகமும், ஞேயத்தியாகமும்,
சீவன்முத்தர் விதேகமுத்தரிடத்தில் நெருங்கியிருப்
பன; தேயத்தியாக ஞேயத்தியாகங்கள் பிரமத்தை
யடைந்தன; தேயத்தியாக ஞேயத்தியாகங்கள் துன்ப
மனைத்தையு நீங்கின; தேயத்தியாக ஞேயத்தியாகங்
௨௦. சீவன்முத்தரிலக்கணங் கூறல். கள் தேடுதற்கரிய மோக்ஷமாம்*— சூழ்ந்திருக்கின்ற
சுகதுக்கங்கள் தன்னைத்தொடர்ந்தால், ஒருபோதிலும்
அழுந்துதலும் மிதத்தலுமில்லாத அவர்களே சீவன்
முத்தர்களாம். மேலானகளிப்பும், பயமும், கோப
மும், தரித்திரமும், அழுக்காறும், துன்பமுமாகிய
ஊழினிலையையு மிவைகளைப்பாராத மனத்தோரே

‡ இ-ம. செடசித்தின் சம்பந்தங்களைப்பிரித் தச்செடவாசனாநாசமே தேயத்
தியாகமாம்.

¶ இ-ம். தேகோகவாசனையைக் கெடுப்பதே நேயத்தியாகமென்பதாம்.

* இ-ம். தேயத்தியாக ஞேயத்தியாகமென்னு மிரண்டுமே, சீவன்முத்தி விதேக
முத்திக ளாகுமென்பதாம்.

உக சீவன்முத்தரிலக்கணங் கூறல்.

சீவன்முத்தராம்.— சுழுத்தி யவத்தையைப்போல சாந்தமான பாவனாவிருத்தியினால் பக்குவமானமனதினால் தீர்க்கசொப்பனத்திற் பழகுபவர்கள், எப்போதும் சிறந்த கலைகணிறைந்த பூர்ணசந்திரனைப்போல, சத்துக்கள் விரும்ப முழுதும் பிரிவில்லாதவர்களே சீவன் முத்தர்களென்று சொல்லத்தகுந்தவர்கள்.—

உஉ. இச்சையை முழுதுங் கெடுக்க வேண்டுமெனல்.

புறம்பிலுள்ள வஸ்துக்களின் பற்றை விடுத்தால், அசப்பற்றை திருஷ்டனியென்று சொல்லுவார்கள்; மறப்பின்றி வஸ்துக்களிலிருக்கிற சகல இச்சையையு நீக்கினால், முத்ததிருஷ்டனியென்றுசொல்லுவார்கள் திரமாயெனக் கிதுவாகுமென்று உண்டாகின்ற பாவனையே திருஷ்டனியாகும். விடுக்கக்கூடாதசொன்ன விலங்காகிய இத்திருஷ்டனியைத் தொந்தமறக் கெடுக்கவேண்டும்.—

உங. இதுவுமது

உள்ளதில்லதென்று சொல்லப்பட்ட சமஸ்தபாவனைகளிலும் எப்பொழுதுமிகாமல் இச்சையைக்கெடுத்து, பூரணமானமனதுடையவனாய் பந்தவிச்சையு மோக்ஷவிச்சையுமாகிய விவைகளையும் சுகதுக்கங்களையும்முழுமையுந்தள்ளி, பரிசுத்தமுள்ள நல்லகெம்பீரமாகிய ஆத்மஞான ஸ்வரூபத்திலிருப்பாய்.†— நுரையுமலையு மின்றிய பெருங்கடல்போல அசைவற்றிருப்பாய், மனித வடிவமுடைய ஸ்ரீராமா?

உச. ஆத்மவிசாரமுடையவர்க்குரிய ச-நிச்சய மறிவிக்கத்தொடங்கிக-வது நிச்சயத்தி னிலக்கணமறிவித்தல்.

வேறொன்றை யாஞ் சொல்லக்கேட்பாய், குற்றமற்ற விசாரணையுள்ளவர்களுக்கு ஆகிய நிச்சயங்கள் நான்குண்டாகும்; பாதமுதற் சிரசந்தமான சரீரம் நான் மாதாபிதாக்கள் என்னைப்பெற்றவர்கள் என்பதொரு நிச்சயம்.—. உண்மையை நினையாதபடியினால் இந்நிச்சயம் கொடியபந்தத்தை யுடையதாம்;

உரு. இரண்டாவது நிச்சயத்தினிலக்கண மறிவித்தல்

இருக்கின்ற சகலவஸ்துக்களினும் அதீதனாகியும் நெல்லினது வாலினுஞ் சூட்சுமமாகியு மிருக்கின்றவனே? யானென்றுசொல்லப்பட்ட இரண்டாவதாகிய நிச்சயமானது அடையுமானால் மோக்ஷமுண்டாகும்; இது சத்துக்களுக்குள்ளதாகும்.—

உசா. மூன்றாவது நிச்சய நான்காவது நிச்சய மென்னு மிரண்டி னிலக்கணமறிவித்தல்

சகங்களனைத்துமெனது ஸ்வரூபமும் யானழிவில்லாதவனென்று சங்கோசமில்லாமற் காண்பது மூன்றாவது நிச்சயமாம்; அது குறைவற்ற மோக்ஷமாம். கெடுதலடைகின்ற சகமும் அறிகின்ற யானுமாகிய சகலமுமசத்தியமே; ஆகாயம் போல யாமெப்போது நீங்கிலமென்பது நான்கா நிச்சயமாம்; ஈதொப்பற்ற மோக்ஷமாம்.—

உஎ. இந்நான்கு நிச்சயத்தின்பலாபலனைக் கூறல்.

முன்பு சொல்லப்பட்ட நிச்சயமென்னும் பந்ததிருஷ்டனியை யுடையதாம்; பரிசுத்தமுத்த திருஷ்டனியையுடைய மூன்றுஞ்சொச்சமாய் குற்றமற்றசீவன்முத்தர்களிடத்

† இ-ம். முத்தர்களின் சிறப்பையும் பெத்தவிதியையுங் கூறினதென்பதும்

திற்ப்ரகாசிக்கும். இம்மூன்றுக்குள்சகலமுநானென்று
வொப்பற்ற நிச்சத்தைப்பொருந்துவனாயின், பின்பு
௨அ. ஆத்மாநாத்ம விலக்கணமறிவித்தல். மனமானது சுகதுக்கங்களை யடையாது. †— சூனிய
மும், ப்ரகிருதியும், மாயையும், பிரமமும், சிற்ப்ரகாச
மும், அறிவும் குறைவில்லாத புருடனும், ஆத்மாவும்,
ஈசானனும், சிவமும், நித்தியமுமான விவைகளை
பிரமமென்று சொல்லலாகும்; ஒன்றென்னு மிரண்
டென்னும் விரிந்த வேற்றுமையினால் உயர்வானசகத்
தையுண்டாக்குகின்ற விளையாட்டினால் பிரமசத்தி
௨௯. ஒன்றிலும் பற்றற்றிருக்க வேண்டுமெனல். வளரும் — ஏகமென்கின்ற பிரமஸ்வரூபத்திலுள்ள
ஒப்பற்றசத்தியானது, அதனொருமையினால் இருந்து
வளருகின்றது ஸ்ரீராமா! உனதென்றும், அன்னியர
தென்றும், இறந்ததென்றும், இருப்பதென்றுஞ்
சொல்லப்பட்ட விடயங்களிலும் தொழில்களிலும்,
எப்போதும் சுகதுக்கங்கள் மனதிற் றரிக்கவேண்
௩0. செனியாவரிலக்கணங் கூறல் டாம்.— எல்லாவற்றிலு மதீதமாய் பரமபதத்தைப்
பிடித்து மனமானது எப்போதுங் குளிர்ச்சியாய் சுக
துக்கங்க ளடையாதவர்கள் பிறவியையடையார்கள்;
சற்குணமுள்ளமித்திரனிடத்திலும், துற்குணமுள்ள
சத்துருவினிடத்திலும், சமத்துவமாகிதபாதாக்ஷணி
யங்களுள்ளவர்களே சொல்லிய முறையிற்செல்கின்ற
௩௧. இதுவுமது உத்தமர்கள் பவத்தை யடையார்கள்.—தாழ்வு
மேன்மையுமாகிய இரண்டையுநினையார்கள்; விருப்பு
வெறுப்படையார்கள்; கிரியாக்கிரியைகளைநீக்கினவர்
கள், செறிந்த பிறவியிற் சேரார்கள்; அழகாகப்ரகா
சித்து யாவர்க்கு மின்பமானவைகளை இனிமையாகப்
பேசுகின்றவர்கள், கெடாநின்ற பூதவஸ்துக்களிலெல்
லாவற்றின் குணத்தையறிந்தவர்கள் பவத்தை யடை
௩௨. அனுபவியினது லீலையை நிரூபித்தல். யார்கள்.— தேயவாதனையைவிட்டு பூரணமாகித்
தெளிந்த கண்மறையாமல் சீவன்முத்தியாகிய பாவ
னையினால், தனதாத்மஞான ஸ்வரூபமடைந்து சதா
காலமும் ஸ்ரீராமா! உலகத்தின்கண் விளையாடுவாய்.
பொய்யான இச்சையைவிட்டு பற்றுதலைக்கெடுத்து,
வாசனையைவிட்டு, உள்ளேசிதாகாசமாய் புறத்தி
லுள்ள வாசாரங்களனைத்துஞ்செய்து, எக்காலத்தும்
வேண்டின ப்ரகாரம், ஸ்ரீராமா! சகத்தில் விளையாடு
௩௩. இதுவுமது வாய்.—உலகத்தில் புறம்பிலுள்ள கிரியைகளிலாரம்
பஞ்செய்து, தனித்தமனதில் ஆரம்பமெவ்வளவு மில்
லாமல் உள்ளே செய்யாதவனாய் புறம்பிற் செய்பவ
னாய், ஸ்ரீராமா! உலகத்தின்கண்விளையாடுவாய். தேக

† இ-ம். முதனிச்சயத்துக்குப் பந்தமும் மற்ற மூன்றுநிச்சயத்துக்கு முத்தியும் ப்ரயோசனமாமென்பதாம்.

நானென்றுபகுத்தவகம்பாவங்கெட்டுமனந்தெளிந்து ஆகாயத்தைப்போல சொச்சமாய் களங்கமொன்று மின்றி பலசின்னங்களின்றி, ஸ்ரீராமா? வேண்டியபடி சகத்தின்கண் விளையாடுவாய்.— உரிமையுள்ளவுதாரத்தையுடையவனாய் கடினமான வாசாரமில்லாமல் ஆசாரங்களுக்கு எளிதாகப் பின்சென்று பலவிதமாகிய சகலவஸ்துக்களுக்கும் ஆதாரத்தைப்பார்த்து வேண்டிய ப்ரகாரம், ஸ்ரீராமா? சகத்தின்கண் விளையாடுவாய்; அறிவையுடையவனாய் நிராசையுள்ளே நிறைத்து வெளியில் காமக்கிரியைகளைத்தரித்தவன் போல அதனாலுள்ளே குளிர்ந்தவனாய் வெளியில் வெப்பமுள்ளவனாய் சதாகாலமும், ஸ்ரீராமா? சகத்தின்கண் விளையாடுவாய். †—இவனுறவன், இவன் பகைஞன், இவனுனென்கின்றஇந்தபொய்யை, ஸ்ரீராமா? நீசற்றுநினையாதே. பயனின்மையைப்பிடித்த வற்பனதுடையவர்களுக்கு இந்தப்ரகாரமாம்; அறிஞருக்கு உலகமுழுது நீங்காதவுறவாகும். ஓங்கியளவில்லாத சநமயக்கத்தினால் நீ பகைவனென்றும், நீயுறவென்றுஞ் சொல்லுவார்கள்; க்ஷணந்தோறும் களிப்புற்ற மயக்கமான திதுவேயாகும்; எதார்த்த திருஷ்டியினால் சகங்களனைத்தும் பகையுமாம் உறவுமாகும்.*—இவ்வனுபவம் விளங்கும்பொருட்டு முன்னுள்ளதாகிய ஒருகதையைக்கேட்பாய். கங்காதீரத்தில் இருடிபுத்திரரும், சமானமற்ற மயேந்திரமலையினதுபக்கத்தில்வாழுகின்றவர்களும்,அரியதவத்தையுடையவர்களும், தீர்க்கதவனென்னும் ரிஷியானவர் பெறவந்தவர்களுமாகியநான்குவேதங்களையுமாராய்ந்தறிந்த புண்ணியனென்றும் பாவனென்று நாமத்தையுடையவர்கள், பிதாவுடன் கங்காதீரத்தில் தவமியற்றுங்காலத்தில், நிட்காமியமாகச்செய்த தபோபலத்தால் காலமுதிர்ந்து புண்ணியனென நாமமுள்ள புண்ணியவான் ஞானமடைந்தான்.— அவன்றம்பியாகிய பாவனனென்னும் பெயரையுடையவன் ஞானமடைந்தது அரைவரிசையானபடியினால், சிவந்த கிரணங்களையுடைய சூரியனுதிப்பதற்குமுன்னம் அருணோதயமாக செந்தாமரைப்பூ சதங்கையின்வாய்க்கொப்பாய், அதிகமறியாமையும் உண்மைஞானமுமில்லாம லூசலைப்போல துவள்வுற்றுநின்றான். தவமுடைய தீர்க்கதவனென்கின்ற பிதாவானவர் விடய

௩௪. அனுபவியினது லீலையை நிரூபித்தல்.

௩௫. திருக்குதிஷ்டியிற் சகலமும் பிரிய வடிவமாமெனல்.

௩௬. இவ்வனுபவநிச்சயங் கூறியியைந்துறுதிப்படுத்து நிமித்தம் புண்ணியபாவனன் ஞானமடைந்ததைத்திருஷ்டாந்தமாகக் கூறல்.

௩௭ பாவனனது பக்குவங் கூறல்.

† இ-ம். வாசனுக்ஷயஞ்செய்து பூரணானந்தவேத்தியமாய் விளங்கிய ஸ்வரூபானுபவத்தினு லுலகத்திலிச்சையானபடி சஞ்சரிக்கலாம் [மென்பதாம்.

* இ-ம். சகலசீவர்களுந் தனதம்சமாயிருக்கின்றபடியா லவை தனக்குறவாகு

௩அ. விதேகமுத்தி யடைதல்.

போகத்தி லாசைகளனைத்தினும் புத்திநீங்கி.—காலங் காரணமாக சமுசாரவாழ்க்கையில் ஆசையைவிட்டு, தொழிலென்னு மகங்காரப் பக்ஷிகளுக் கிடமாகுங் கூடுபோன்றசரீரத்தை கங்காதீரத்திருக்கின்ற மலையினிடத்தில்தானே விட்டுவிட்டான். சங்கற்பத்தொரு சுமையைச் சுமப்பவன், குறித்தவிடத்தில் கொண்டுபோய்ப் போடுவதுபோல, சரீரத்தைவிட்டு ஆசை பொருந்தின பற்றுக்களொன்று மில்லாமல் புட்பவாசனை யாகாயத்திற் பொருந்துவதுபோல பிரமாநந்தத்தை யடைந்தான்.—

௩௯. புண்ணியபாவனனுபவங் கூறல்.

தொழிலில்லாததாகியும், சகமென்னுந் துன்பமில்லாததாகியும், பழமையான ஞானேயமாதற் கிடமாகியு மிருக்கின்ற தனதாத்மஸ்வரூபத்தைப் பெற்ற கெடாத சத்துவடிவமான முனியுடல் மரிக்கவும், அவனது பாரியானவள் தாமரைப் பூவிலிருந்து நீங்குகின்ற வண்டைப்போல சரீரத்தை நீக்கினாள். கண்களையொத்த மாதாபிதாக்கண் மரிக்கப்பார்த்துஇனிச்செய்யவேண்டியகருமங்களை விதிப்படி செய்யும் பொருட்டு வழிபடுகின்ற புண்ணியனெத்தனஞ்செய்தான்; பாவனனும் துக்கமென்னுஞ் சமுத்திரத்தி லழுந்தி மயக்கமடைந்தான்.—

௪௦. இதுவுமது

பாவனனானவன், என்னைப்பெற்றதாயே! தாயே! யென்பன்; பிதாவே! பிதாவே! யென்பன்; அய்யோ! வையோ! வென்பன்; இதென்ன! விதென்ன! வென்பன்; துன்பத்துக்குச் சகிக்கமாட்டாதவனாய் நெருப்பைமிதித்தவனைப்போல வனங்களெல்லா மோடுவான்; தனக்கெதிரிலிருக்கின்ற தமையனைப்பார்த்துத் தெளியான்; மிகவுந் தளர்வை யடைந்தான். தளர்ச்சியில்லாத தமையனானவன் மின்னலையொத்த சரீரத்துக்குமரிப்பதுசுபாவமேயென்று மற்றொன்றையுஞ் சிந்தியாமல் கருமத்தைவிதிப்படி செய்தான்.—

௪௧. ஞானோபதேசங் கூறல்.

வேதமார்க்கத்தின்படி கருமநிறைவேற்றினபின்பு, துன்பத்தினால் வாய்மூடாமலழுகின்ற தம்பியைவந்தடைந்து, பூரணஞானத்தையுடைய புண்ணியனானவன் பாவனனைப்பார்த்து மனதை வருத்துகின்ற துன்பத்தை குழந்தாய்? நீயே னீக்கவில்லை, பொறுமைமிகுந்தவுனது தந்தையானவர் உனது மாதாவோடும் அமைந்திருக்கின்ற இடத்தின் சிறப்பைக்கேட்பாய், குறைவுநிறைவு இல்லாதது எப்போதும் தனதிடமாய்த் தன்மயமாய் குற்றமில்லாததான மோக்ஷமென்னுஞ் சொல்லத்தக்கதாம்.—

௪௨. வீட்டினதிலக்கணங்கூறிய தோறுதிப்படி நிமித்தஞ் சகந பரம்பரையை யறிவிக்

யாவருக்கும் அடையத்தக்கவிடம் அப்பதமேயாகும்; அதுவே ஞானவான்களுக்குத் தத்துவ ஸ்வரூபமாயிருக்கும். தன்னைவிட்டு நீங்காத அப்பரமபதத்தில் வாழா

த் தொடங்குதல்.

நின்ற பிதாவைப் பார்த்து தம்பீ? நீ தளர்வடைவது ஞாயமோ, ஆற்றினீரோட்டத்துக்கு அடையும் பள்ளத்தின் றிரளைப்போல, சநநங்கடோறும் தொடர்பாய்நீங்கின பெற்றவுனது மாதாபிதாக்களுக்கு கணக்குண்டோ, மனைவி புத்திரர் முதலிய வுறவினருக்கு ஓரளவுண்டாமோ.—

௬௩. சநநத்தின் பந்துக்களுக்களவின்றெனல்:

காலங்கடோறும் பெரியவனத்தில் காய்க்கின்ற கனிகளைப்போல, சநநங்கடோறும் மிகுந்த வுறவினர்களை நினைக்கின்ற காலத்தில் மரணமடைந்தவர்களுக்கு வியசனப்படவேண்டினால் கற்பகாலமட்டுங் கதறினாலும், ஒரு வரம்புண்டா யிருக்குமோ. உருவமில்லாத அறியாமையென்னுங் கானற்றிடலில் வாசனையென்னும் வேனிற்காலத்தில் சுழலுகின்ற வெவ்விய கானற்ப்ரவாக சலமானது சுகதுக்கமென்னு மலைகளை யடித்துக் கொண்டு வேற்றுமையோர் வரம்பில்லாமற் பிரளும்.—

௬௪ பாவனையே சுக துக்க மா மெனல்

மனைவிமுதலிய பந்துவும், பகையும், சினேகமும், வெறுப்பு விருப்பும் தாழ்வு மேன்மை முதலியவைகளே உருவமாயுண்டான சகமானது, தனது பெயர் மாத்திரத்தினால் மிகுந்து பரவுகின்றதே யல்லாமல், வேறொன்றினாலுண்டாமோ; நல்லபந்துவாக நினைத்தால் நல்லுறவேயாவார்கள்; பகைவராக நினைத்தால் பகைவராவார்கள்; கொல்லுகின்றவிடமும் பிழைப்பிக்கின்ற வமுதமுமாகிய இரண்டின் குணங்களைப் போலவும் குறித்திடுகின்ற பாவனைபந்தமானது கெட்டாலுண்டாகுமோ—

௬௫. பேதபாவத்தையே பேதஞானத்தைக்கூறல்.

ஒன்றான ஆத்மாவினுண்டாய் சகல வடிவங்களுமாகிய அறிவுக்கு பகையொன்று முறவென்றும் சொல்லுவதெப்படி; இல்லாமல் கெடுக்கின்ற ஊண்களினாலும், உதிரங்களினாலும், சருமங்களினாலும், கட்டியிருக்கின்ற அஸ்திக்கூடான சரீரத்திலிருக்கின்ற நாமாரென்றும் விசாரிக்கில் இருந்தவனீயே; உன் மனதினால் சிந்தித்துப் பார்ப்பாய்; மாசற்ற பிரமதிருஷ்டியினது கிரமமாகப் பார்த்தால், நசிக்கின்ற துன்பமுள்ள நீயென்பதுமில்லை நானென்பதுமில்லை, புண்ணியனென்றும் பாவனென்றுஞ் சொல்லப்பட்ட நாமும்போய் ஞானந்தோற்றும்.—

௬௬. சநநமித்தையாமென் றறிவிக்கு நிமித்த மச்சநநாந்தரங் களைக் கூறல்.

போனதீவுகடோறும் நீசெனித்த சென்மமானது, எண்ணமுடியாது; இந்த நாவலென்னு மகாதீவில் முன்னங் குயிலாகப் பிறந்தாய்; பின்பு மிருகங்களும், மேகங்களும் மலைகளும் விருக்ஷங்களும், ஊர்வனங்களும், பறவையினங்களுமாகிய இவைகளிடத்தில் கழிந்தபிறப்பின் றிரளானது சொல்ல முடியாது. அவைகளில் உனதுறவினர்களா யிறந்து போனவர்களுக்கெல்லாம் நீ

வியசனப்படாததென்ன; அதுமட்டுந்தானே, இன்னமளவற்றதேசங்களிற்செனித்த பதங்களைச் சொல்லக் கேட்பாய்.—

௬௭. சநநமித்தையாமென் றறிவிக்குநிமித்த மச்சநநாந்தரங்களைக் கூறல்

கோசலதேசத்திலும், தேசார்ணவதேசத்திலும், பௌண்டர தேசத்திலும், குச்சர தேசத்திலும், துழார தேசத்திலும், கோகன்னதேசத்திலும், போசலதேசத்திலும், ஏகயதேசத்திலும், சாளுவதேசத்திலும், அரசனாகவும், குரங்காகவும், கிருமியாகவும், கலைமானாகவும், நீர்க்காக்கையாகவும், பக்ஷியாகவும், சற்பமாகவும், கழுதையாகவும், அளவற்ற பிறவிகளை நீ சமஸ்தவாசனைகளினால் செனித்தபோதிலுண்டாகிய உனதுறவினர்க்கு வியசனப்படாத ஞாயமென்ன.—

௬௮. இச்சநநமரண மற்ற வாத்மாவைத் தெரிசிக்கவேண்டு மெனல்.

அளவற்றசநநங்கடோறுஞ்செனித்தவர்க்கெல்லாம் மாதாபிதாக்களை யெண்ணுமிடத்தில் விசாலமானவனத்தில் விளங்கிய விருக்ஷங்கள்கொடுக்கின்ற சருகை எண்ணினத்துக்கொப்பாம். துன்பமடைய ஞாயமில்லை, கேள் குழந்தாய்? தளர்ச்சியில்லாமல் பாவமும்பாவமுமில்லாமல் சரையு மரணமுமில்லாத உனதாத்மஸ்வரூபத்திற் றடையின்றி மனம் பொருந்தப் பார்ப்பாய்; துன்பத்தைவிட்டு அறியாமையைநீக்கி யறிவில் உள்ளபடியாக வுனதாத்மஸ்வரூபத்தைக் காண்பாய்—

௬௯. தன்னைத் தெரிசிக்கி லாநந்த வடிவமாவா யெனல்.

அதை நீ காண்கின்ற ஞானதிருஷ்டியில் பலவான விச்சையென்னும் படலமுண்டாகும்; அதை நீக்கி, இருதயதாமரையில் சொச்சமான வுணர்வையுடைய உனதுமனதினால் உன்னுனது ஸ்வரூபத்தை இப்படிப்பட்டதென்று பார்த்து, மயக்கங்களனைத்தையும் இறையளவேனுமில்லாமற்கெடுத்து, நிருவாணசுகத்தை யடைந்திருப்பாய் தம்பியேயென்று தமையன் சொன்னானென்று ஸ்ரீராமனுக்கு வசிட்டமுனி சொன்னார்.†—

புண்ணியபாவனன்கதை.

முற்றிற்று.

---

# மாவலிகதை.

## அவதாரிகை.

முன்கதையில்திரிஸ்யத்திலகம்பாவனிவிர்த்தியையுந் திருக்குவில்அகம்பாவத்தையுஞ்செய்வதனாற்சர்வமுந் தன்மயமாய்விளங்குமனுபவத்தைக் கூறி, மேலிட்காம புண்ணியத்தினால் விடயாநந்தமிகுதி பிரமாநந்தத்தின் பொருட்டாகுமென்பதை யறிவிக்குநிமித்த மாவலிகதையைநிரூபிக்கிறார்.

---

† இம். மாதாபிதாக்கள் பிரிவிற்படுந்துன்பத்தைமுன்னிட்டவர்களும், நாமும் மித்தையே யாமென்றறிவித்ததையறிந்த ஞானமே சர்வமுமாய் விளங்குகின்றாமதாத்மஸ்வரூபமாமென் றுணர்ந்திருக்கும்படி யனுக்கிரகித்ததாம்.

க. பாவனன்ஞானமடைதல்.

புண்ணியமுனிவன் போதிக்க ஞானம் ப்ரகாசித்த பாவனனுடைய இருதயமானது, விடியற்காலங் கண்ட சகத்தைப்போல ப்ரகாசித்துத்தோற்ற திடஞானமுடைய விரண்டுபேர்களும் சித்தபுருடர்களாய் விவேகஞானத்தினது சிந்தித்த வாத்மஞானத்தை யடைந்து முன்சொல்லியவனத்தில் வசித்தார்கள்.—

உ. விதேகமுத்தி யடைதல்.

தங்களுக்குவேண்டிய காலங்களனைத்தும் விநோதமாக விளையாடி வெகுகாலஞ்செல்லவிதேகமுத்தியை யடைந்து திரியுநெய்யுமில்லாத தீபங்களைப்போல உபசாந்த மடைந்தார்கள். மரணமடைகின்ற சீவர்களனைவர்க்கும் குணங்க ளிம்முறையைப்போல வாகும்.‡— அளவற்ற சநநமடைந்தவர்களுக்கு சமஸ்தமும் பந்துவாயிருக்குமானால் பகைத்தலும் விரும்புதலும்வேண்டுவதென்ன; ஆகையினால்மிகுந்தவாசையின் பாரத்தை விடுவதேயன்றி பெருகவளர்க்கக் கூடாது மனதினு லாசையை வளர்த்தால், அது சிந்தனையென்னு மக்கினிக்கு விறகாகும்.— அவ்வாசையென்னு மவ்விறகுநசித்தால் சிந்தையென்னு மக்கினிநசிக்கும், இதுவுண்மையாகும். தேயத்தியாகமாகிய மகாரதத்திலேறி சகலருந்துதித்தவுதாரமான கருணாதிருஷ்டியினால் ஆசையினால் மிகவும் வாடாநின்ற அற்பமான சகத்தைப்பார்த்து, தீரத்தையுடைய ஸ்ரீராமா? குறைவில்லாம லிருப்பாய்.—

ங. சர்வமுந்தனதுபிரியவடிவாமென்றறிவித் தவ்வனுபவ முதிப்பதற்கிச்சாத் தியாகம் வேண்டு மெனல்.

ச. அவ்விச்சத்தியாகத்திற் சுகமுதிக்குமெனல்.

ரு. இதுவுமது.

ஸ்ரீராமா? சொச்சமாகியும், ஒருமயக்கமுமில்லாததாகியும், வியாதிகளனைத்து மில்லாததாகியு மிருக்கின்ற சத்தியமான பிரமமான நிச்சய மிதுவாகும். சந்தேகமில்லாமல் இந்தநிலையை யடைந்தால் அறிவில்லாதவர்களாயினும், மயக்கத்தை யடையார்கள். ஸ்ரீராமா? நீ இந்தப்ரகாரம் வாழக்கடவாய்,¶—

சு. இச்சை நீங்குதற் குரிய சகாயங் கூறல்.

நல்லறிவும் நல்லவிவேகமும் என்கின்ற விரண்டு நட்பினால் துன்பநீங்கும்; ஒருவரையாவ தடைந்தாலும் பலவஸ்துக்களையும் உறவுகளையும் தொடர்பில்லாமல் கெடுத்து, தனது தயிரியத்தினா லல்லாமல் துன்பங்களனைத்தும் நீங்காவாம்.— வைராக்கியத்தினாலும், ஞானசாத்திரங்களினாலும், மகத்துவமுதலான மேன்மையான குணங்களினாலும் வருத்தப்பட்டு மனதை யாத்மவாழ் வடையச்செய்தால் துக்கங்கள் போகும். மூன்றுலகங்களி லுண்டான

எ. நிராசையுள்ள மனதின் பெருமையைக் கூறல்.

---

‡ இ-ம். இவ்விருவருஞ் சீவன்முத்தராயிருந்து விதேகமுத்தியை யடைந்தனரென்பதாம்.

¶ இ-ம். விடயவிச்சையினது நீக்கத்திற் பிரமநிச்சயமுதிக்குமென்பதாம்

செல்வங்களும் தொகுத்து இலாபத்தைக் கொடுத்தாலும் கைவல்லியத்தை யடைகின்ற மனதுக்கொப்பென்று சொல்ல மாட்டார்கள்.— தன்பாதத்தி லிருக்கின்ற செருப்பானது, சகங்களனைத்தும் தோலால் மூடுந் தன்மையைப்போல, மனது பூரணமானல் சகமானது அமுதமாக நிறையும்.

௮. மனதிற்குரிய விச்சாவநிச்சையின் பலாபலனைக் கூறல்.

கனமுள்ள நிராசையினல் நிறைந்த மனமானது, ஆசையின் மூழ்காது; இச்சையினனிறைந்த மனமானது குறை யெப்போதுந் தீராது.—

௯, இச்சையாற் கெடாத மனதினுயர்வைக் கூறல்.

அகத்தியமுனி நுகர்ந்த வுததியைப்போல நல்லமனதைக் கெடுக்கின்ற ஆசையில்லாத மனதைப்போல பூரணசந்திரனும் ப்ரகாசியாது; சுகத்தைக்கெடுத்த பாற்சமுத்திரமு நிறைய மாட்டாது; வாசனை பொருந்திய தாமரையி லிருக்கின்ற இலக்குமி சிறப்புள்ளமுகமும் நன்மையாக வுண்டாகாது.—

௧௦ மனதிற்குஇச்சாபந்த நீங்கலே முத்தியா மெனல்.

சந்திரனை மேக மறைக்கின்றது போலும், வெண்மையான விடத்திற் றீற்றிய கன்னச் சாந்தைக் கெடுக்கும் மையைப் போலவும், நல்லமனதை இச்சாபசாசமானது தேயுசைக் கெடுக்கும்; அடைந்த வாசைகளனைத்தையுங் கெடுத்து வலிய சநநத்தினச்சத்தைக் கெடுத்து பக்குவமான மனத்தின் ஆசைக்கட்டானது நாசமானல் மோக்ஷம் வேறுண்டோ.¶— இத்தன்மை கூடாவிடின், ஸ்ரீராமா? மாவலியைப்போல நன்மையான புத்தியினல் ஞானத்தையே யடைவாய் அத்தன்மையதே நன்மையென்று சொல்லவும், மகாமுனியைப்பார்த்து அப்படிப்பட்டதெதுவென்று, ஸ்ரீராமர்கேட்க,-

௧௧. இச்சையை சுருக்கிக் கெடுப்பதையறிவித் திஃது பெருக்கிற்கெடுப்பதையு மறிவிக்கத் தொடங்கல்.

அரியதவத்தையுடைய வசிட்டமுனி சொல்லுவார்.

௧௨. மாவலியின் பெருமை யுரைத்தல்.

தனது புயங்களினல் ஜகங்களனைத்து நடுங்கும்படி சயஞ்செய்தவன்; ஈஸ்வரன் விஷ்ணுமுதலிய சகலரும் தாழும்படி பெருமையுள்ளவன்; அநாதியாமெனக் கூறப் பாதாளலோகத் தரசுசெய்யுஞ் சமானமற்ற வசுரராசன்;—

௧௩. மாவலிதனித்திருத்தல்.

மகாபலிச் சக்கரவர்த்தியென்னு நாமமுடையவன்; மேன்மையான விரோசனனுடைய புத்திரன்; வலிமையுள்ள பத்துகோடி வருடம் இராசாவானவன்; காவலினல் விளங்குகின்ற மகாமேருவினுடைய முடியிலிருக்கின்ற இரத்தினங்களைப் பதித்த மேவுதற்கரிய ப்ரகாசம் பொருந்திய பலகணி

¶ இ-ம். மனமானது சிற்சுகமாய்ச் சகவிச்சையைநீக்குதலேமோக்ஷமா மென்பதாம். (முன்கதையிற் கூறவேண்டிய இப்பத்து கவிதையை யின்னூலாசிரிர் இக்கதையைக் கூறினதென்னவெனிற், சமாதிக்கருளிய இவ்விச்சாத்தியாகஞ் சகசத்துக்கு வரும்பொருட்டெனக் கொள்க.)

கச அரசை வெறுத்தல்.

களையுடைய மேல்வீடடைந்து.‡— ஒருநாள் தனியே யிருந்தவனாய் இவைகளை யெண்ணினான். மிகுந்தபோகங்களை வெறுத்து சம்சாரத்தை நினைத்தான்; சமானமற்ற மூன்றுலகங்களிலுள்ள செல்வங்களை வெகுகாலமா யனுபவிக்கக்கொடுக்கின்ற நமது மகாராசாங்கத்தினால் என்ன ப்ரயோசனம்.—

கரு. போகத்தை வெறுத்தல்.

அடைந்த காலத்தில் இன்பமாய் எவ்விடத்திலானாலும் அற்ப நேரத்தினீங்குகின்ற இச் செல்வத்தினது இன்பத்தைச் சொல்லுமிடத்தில், அடையப் பார்க்கின்ற சுகமும் நேற்றைப்போல இன்றைக்கும் செய்ததைச் செய்வதேயல்லாமல் வேறு செயல்களைப் பார்த்திலம்.—

கசு. போக்கியத்தை வெறுத்தல்.

புசித்தசுகமே திரும்பவும் புசிக்கப்படுகின்றது; ஒருநாட் காணப்பெற்ற காட்சியே திரும்பவுங் காணப்படுகின்றது; மகிழ்ச்சியாகக் கொண்ட வலங்காரமே திரும்பவுந் தரிக்கப்படுகின்றது; என்று சொன்னால் சொல்லிய மேன்மையான சத்துக்கள் வெறுப்புற்று வெட்கப்படாமற் போவார்களோ.—

கஎ காலத்தை வெறுத்தல்.

புசிக்கின்றவளவும் இன்பமென்று சொல்லுவதையே திரும்பத் திரும்பப்புசித்து அறிவு திருத்தமில்லாத அற்பமான குழந்தைகளைப்போல ஒழுக்கந்தெரியாமல் வருத்தப்படுகின்றோம்; தினமும், பக்ஷமும், திங்களும், வருடமும், யுகங்களும் முன்பொருந்தி வந்ததேயன்றி புதிதாக வேறொன்றும் வராது.—

கஅ.நித்தியவஸ்துவை விசாரித்தல்

செய்யத்தக்கனவாகிய அனைத்தையுஞ் செய்தும் இச்செய்கையினால் உயிர் வாழப்பெற்றதென்ன. தொழில்கள் பின்பில்லாத ஒரு பொருளானது, சகத்தின்கண் சந்தேகமில்லாமல் எதினாற்கிடைக்கும், அவ் வஸ்துவானது மயக்கமுள்ள விடய போகத்தினால் விடுபட்டு மேலேவரு மார்க்கமெது.*—

கக. முன்பிதா போதித்தவனுபவம் ஞா முகப்பட்டல்.

அழிவற்றதாகியும் விடயத்துக் கயலாகியுமிருக்கின்ற அப்பொருளைச் சேருகின்ற மார்க்கமெதுவென்று சிந்திக்கும்பொருட்டு மனதிலொன்றைச் சிந்தித்து கண்கள்மலர புருவத்தைநெறிந்து அதிசயித்து ஒருகணத்தில் அறிந்தோமென்று,—

உ0. அஃதையாலோசனைசெய்தல்

தனதுள்ளத்திற் பொருந்த நினைத்ததை தானே சொல்லினன். எல்லாமுணர்ந்த முதன்மையான எனதரிய பிதாவாகிய விரோசனனை பூர்வமிவ்விடத்தி லியான் கேட்டேன்; இந்தப்ரகாரமே அவருஞ் சொன்னாரென்று மாவலி

‡ இ-ம். புண்ணிய பரிபாகத்தினாற் சித்தசுத்தியும், அச்சித்தசுத்தியாற் சாதனசதுஷ்டயமும், அச்சாதனசதுஷ்டயத்தால் முத்தியையடைவதற் கேதுவான வாத்மவிசாரமுமுதித்ததனா லனித்தியவஸ்துவை நிந்திக்கத் தொடங்கினதாம்.

* இ-ப். சகலமு மனித்தியவஸ்துவென்றறிந்து நீக்கி நித்தியவஸ்துவை விசாரிக்கத் தொடங்கினதாம்.

யானவ னிவைகளனைத்தையுஞ் சொல்லுவான்.—

உக. நித்தியவஸ்து யாதெனவிசாரித்ததனை மனனஞ்செய்தல்.

எனதுபிதாவே? துக்கமும், சுகமும் என்று சொல்லப்படுவனவாகிய சகலத்தினுடைய மயக்கங்களனைத்தும் இறந்த வொப்பற்றவிடமியாது; மனதின் கொடிய மோகமானது தீர்க்கின்றவிட மியாது; ஆசைகளனைத்தும் பறறற விடுபட்டவிடமியாது, தயவாக வனுக்கிரகஞ்செய்வாய்.—

உஉ. இதுவுமது.

ஆசையற்றதாய் இளைப்புக ளனைத்தும்விடும் விஸ்ராந்திஸ்தான மியாது; பேராநந்தம் வியாபித்திருக்கின்றவிட மியாது, பராபரத்தைதெளிந் தறிந்திருக்கின்ற நீர் என் மனதை அறுத்துக்கொண்டிருக்கின்ற துன்பத்தை விடுத்து இளைப்புகளனைத்து நீங்குதற்கு சொல்லென்று கேட்டேன்.‡—

உங. சித்தையபராங்கமாகத்தொகுத்துக்கூறத்தொடங்கித்தேய விலக்கணங்கூறல்.

எனது பிதாவானவர் அப்போது சொல்லுவார், யான்சொல்ல மகனே? கேட்பாய் முடிவில்லாமல் மிகவும் வியாபகமாகியும் மட்டின்றி விஸ்தாரமாகியும் அழகுள்ளதாகியு மிருக்கின்ற ஓர் தேயமுள்ளது, அண்டத்தினது கூட்டங்கள்வந்துண்டாகி விளங்கி நசிப்பதற்கு அதுவே யிடமாகப்பிரகாசிக்கும்.—

உச. அரசனிலக்கணங் கூறல்

இப்படியாகிய தேசத்தில் பஞ்சமாகபூதங்களுமில்லை; நீண்டமலைகளுமில்லை, காடுகளுமில்லை; தீர்த்தங்களுமில்லை; பரிசுத்தமுள்ள தேவர்கள்முதலாகிய பழமையான வாத்மாக்களுமில்லை; மகாப்பிரகாசமென்கின்ற அரசன் ஒருத்தனேயிருக்கின்றான்.—

உரு. அமைச்சனிலக்கணங்கூறல்.

அவன் சர்வஞ்ஞனுகியும், சர்வவியாபகனுகியும், சர்வகாரணனுகியும், குற்றமற்ற வுபசாந்தனுகியும், பரிபூரணமாய் மௌனமாயிருக்கின்ற குணத்தையுடையவன்; தவறில்லாத விவ்வரசனுலமைத்த மந்திரியினது வசமாக தொழில்களனைத்தையும் தானே நடத்திவிக்கும்.—

உசு. இதுவுமது.

மந்திரியானவன் சிந்தித்தால் நிமிஷத்தில் இல்லாததுள்ளதாகும்; உள்ளது மில்லாததாகும்; இந்தமந்திரிக்கு ஒன்றுகிலு மனுபவிக்க வல்லமையில்லை; ஒன்றையுமறிந்திலன், அரசனைவிடாமல் நடக்கின்ற குணத்தினுல் மிகவுஞ் சகலத்தையுஞ்செய்யும்†—

உஎ. இவ்வாசாங்கத்தைப் பகுத்து வினவுதல்.

இந்த மந்திரியானவன் இராசாவினுடைய சந்நிதியில் சகலத்தையுநடத்த, அந்த வரசனுனவன் எப்போதுந் தனிமையாகவே யிருப்பன், குழந்தாயென்று அருளிச்செய்த வெனது தந்தையை. யான் மகிழ்ச்சியுற்று அறிவினுல்முன்சொல்லப்பட்டவிதங்களனைத்தையும் துதித்துக்கேட்டேன்.—

உஅ. இதுவுமது.

மிகவும் விஸ்தாரமாய் ஆதிவியாதிக ளில்லாமலிக்கின்ற ப்ரகாச

‡ இ-ம. துக்கநிவிர்த்தியாய்த் தடையற்ற வாநந்தத்தையடைய விரும்பினதாம்

† இ-ம். பிரமத்தை யுருவகப்படுத்தி தொகுத்துச்சொன்ன தென்பதாம்.

மாகிய அந்தத்தேச மெப்படிப்பட்டது? அதை யடைகின்ற காரணமெது? அதெதினாற் கிடைக்கும்? அந்தத்தேசத்தில் நாசமில்லாத வந்தவரசனார்? மந்திரி

௨௯. மந்திரியின் வலிமைகூறல்

யெவன்? §— பூமிகளனைத்தையும் விளையாட்டினால் செயஞ்செய்த வெனதுபுயத்தினால் அவ்வரசன் அவ் வமைச்சனோடும் சயிக்கக்கூடாமல் வலிமையுண்டா யிருக்கின்றவனியார்? கிருபைசெய்வாயென்று நான் கேட்கவும், எனது தந்தையானவர் சொல்லுவார். வேகத்தையுடைய மிகுந்த வலிமைபொருந்திய மந் திரியினது கடுமை யை யார்தான் தாண்டதல்லவர்.—

௩௦. இதுவுமது.

தேவருமசுரரும் அளவற்றகோடிக ளொன்றாய்க் கூடி மேவினாலும் வென்றவர்களல்ல, சூலஞ் சக்கர முதலாகச் சொல்லப்பட்ட அரியவாயுதங்களனைத்தை யும் அன்மேல் விடுத்தால் கல்லில்மோதிய பூவைப்

௩௧. அம்மந்திரியை வெல்லுமுபாயங் கூறல்.

போல நுனியானதுகெடும்.— அவ்வமைச்சன் அவ் வரசனாலெளிதாகச்செயித்தால், அவனுக்கு வணங்கு வான், இல்லாவிடில் மகாமேருவை அசைத்தாலும இவனை யசைக்கக்கூடாததாம். அனுபவயுத்தியை யுடைய வறிவினாலல்லாமல், முழுதுஞ் செயிக்கப்

௩௨. சித்துருவகத்தை வெளிப்படுத்திச் சொல்லத் தொடங்கல்.

படான்.— அப்படி அந்தமந்திரியைப் பொருந்தினால் கோபத்தையுடைய சர்ப்பத்தைப்போல எரிப்பான்; அரசனோடும் மந்திரியானவன் தனியே யரசாட்சி செய்கின்ற அந்தத்தேசமுமதிலுள்ள சகலமும்உனது துன்பமறும்பொருட்டு கேட்பாயென்று பிரித்திதைச்

௩௩. தேயமுதலிய மூன்றையுங் கூறல்.

சொன்னார்.— முன்னமே யாஞ்சொல்லிய தேயமா னது ஒப்பற்ற முடிவிறந்த மோக்ஷமாகும்; இராசா வென்று சொல்லியது களங்கமற்ற விரத்தினத்தைப் போல ப்ரகாசிக்கின்ற தன்னிடத்தில் வேறுபடாத ஆத்மதத்துவமேயாகும்; அப்படிப்பட்ட வரசனால்

௩௪. யூகமென்பதைக் கூறல்.

படைத்த மந்திரியானவன் மனமாகும்.— விடயங்க ளனைத்தையும் ஒருமிக்கக்கெடுத்து நலவயிராக்கியத் தைஉடைய தாவதே மேலான யுத்தியென்று சொன் னோம்; மனமானது நிராசையினால் வெல்லப்பட்ட

௩௫. பிரமத்தை யரசாங்கமாக வுருவகப்படுத்தியதைச் செயிக்கு முத்தியை மூன்றுவிதமாகக் கூறத் தொடங்கி முதலுத்தியைக் கூறல்.

குணமானது, சண்டைசெய்கின்ற மதத்தையுடைய யானையானது தொழுவத்தினுள் அகப்பட்ட தன்மை யாம்.¶—ஞானநூலையுணர்ந்தறியாதவர்கள் மனதை நான்குபங்காகப்பிரித்து, அடைந்த விடயபோகங்களி லிரண்டுபங்கும், ஞானசாஸ்திரமார்க்கத்தி லொருபங் கும், அனுககிரகம்பெற்றவாசாரியாராதனையிலொரு

§ இ-ம். இத்தேயமுதலியவற்றைச் செயிக்கப் பகுத்துச் சொல்லும்படி கேட்டதென்பதாம்.

¶ இ-ம். தேயமுதலிய நான்கையும் யுத்தமுதலியநான்காகப்பிரித்துச் சொன்னதாம்.

டங்கி முதலுத்திரைக் கூறல்.

பங்காகவும் செலுத்தினல், நிறைந்த வஞ்ஞானந்தகாரம்போய் ஞானப்ரகாசமானது வந்துநிற்கும்.—

௩௬. இரண்டாவது யுத்தியைக்கூறல்.

கொஞ்சமறிந்தவர்கள் மனதை நான்குபங்காகச் செய்து, இந்திரியவசத்திற் செல்லுகின்றபோகங்களிலொருபங்கும், ஆசாரியவாராதனையிலிரண்டுபங்கும், விசாரித்தறிகின்ற ஞானசாஸ்திரார்த்தங்களைமனனஞ் செய்வதில் ஒருபங்காகவுஞ்செய்தால், செவ்வையான விவேகத்தினல் பரதத்துவமறியு ஞானமேநிறையும்.

௩௭. மூன்றுவது யுத்தியைக்கூறல்

ஞானத்தையடைந்தவர்கள் மனதை நான்குபங்காகநிறுத்தி, அயிக்கிய ஸ்வரூபத்தை யறிவிக்கும் ஞானசாஸ்திரங்களிலும் நிராசையிலும்ஸ்வாநுபவத்திலும் மகானுகிய சற்குருவாராதனையின் மார்க்கத்திலுஞ் செலுத்தினல், குற்றமற்றதா யிருக்கின்ற நல்ல மோக்ஷமானது எளிதாகவே வந்துகிடைக்கும்.—

௩௮. இவ்வுத்திக்குச்சகாயங்கூறல்.

மிகுந்தவறிவினுலும் விசாரணையினுலும் ஆத்மதரிசமுனம் இராகமும் நீயொருமிக்க எப்போதுங் கை வசமாக்குவாய். நிலையாகிய இராகத்தினல் தகுந்த ஆத்மவிசாரணையும் அவ்வாத்மவிசாரணையினுல்ஒழிவில்லாத இராகமும், ஒன்றுக்கொன்றுதொகுப்பாய்; நிறைந்தசமுத்திரமும் தொடர்பான மேகமும் அமைவதுபோலவாம்.—

௩௯. இச்சகாயத்தோடு முத்தியையடையுமாபு கூறல்

தேசாசாரந்தவறுமல் உறவினர்க்குரித்தான நல்லதிரவியங்களைச் சம்பாதித்து, அப்பொருளினுல் இனிமையான சாத்மீககுணத்தில் மேன்மையான சத்துக்களைச்சேர்ந்து, அவர்களால் வயிராக்கியத்தையடைந்து, அந்தவயிராக்கியத்தினுல் ஆத்மவிசாரணையைச்செய்து, அந்தவிசாரணையினுல் உண்மைஞானத்தைத் தெளிவுற்றுல், மோக்ஷமுண்டாகும்.—

௪0. முன்விசாரித்தவனுபவத்தை மனனஞ் செய்ததினுற் சுகித்தல்.

இப்படியென்று முன்னமே எனது பிதாவானவர்சொன்னர். தெய்வசகாயத்தினுல்ஒன்றையும் விடாமல் இப்பொழுதறிந்தேன்; ஞானத்தை யடைந்தேன்; போகத்திலிருந்த விச்சையை இப்போது நீக்கி இராகமென்கின்ற செல்வத்தினுனிறைந்து சொச்சமாய் உபசாந்தமென்னு மமிர்தத்தினுல் சீதளமான பரமசுகத்தை யடைந்தேன்.—

௪௧. நிதித்தியிற் காக்ஷிப்படல்

அகோவகோ! இவ்வனுபவத்தை வெகுநாள் அறியாதவனுனேன்; இப்போதறிந்த மகிழ்ச்சியை என்னவென்றுசொல்லுவேன்! எல்லாநினைவுகளு முபசாந்தமாய் சுகதுக்கங்களினுல் துன்பமுற்றவர்கள் வருந்தாமலிருக்கின்ற விடமிதுதான், ஆத்மவாழ்வையடைந்தவர்கள் பொருந்தாநின்றபதமிதுதான், உபசாந்தத்தின்மாக்ஷிமையிதுதான்.—

௪௨. பரோக்ஷார்த்தத்திற் சந்தேக

இப்படியென்று சொல்லி நானர் எனது ஸ்வரூபமியாதென்று விசாரித்து, நான் ப்ரகாசிக்கும்

நீங்கியபரோக்ஷமா யதனினிற்றற்பொருட் டாசிரியரைச்சிந்தித்தல்.

படி தனது ஸ்வரூபத்தை யுணர்ந்திருக்கின்ற நமது குருவாகியசுக்கிராசாரியரைவணங்கிவிசாரித்து உண்மையை நினைக்குமளவில், அஞ்ஞானங்கெடுமென்று நினைத்து சுக்கிராசாரியரை நினைக்கவேண்டுமென்று கண்களைக்குவித்து பூரணமானவன்பினுல் தியானித்தான்.‡— உண்மையான சச்சிதானந்தாகாயமே ஸ்வரூபமாயிருக்கின்ற சுக்கிராசாரியார், ஆத்மாவர்ழ்வையடையாநின்ற மாவலியின்முன்னே தோன்ற, அவ்வரசனுமகிழ்ச்சியோடுவணங்கி, கையினிறைந்தஇரத்தினங்களினுலும் நல்ல புட்பங்களினுலும் பாதத்திலருச்சனைசெய்து சொல்லுவான், எனதாசாரியரே? தேவரீரருளானது என்னைத்தூண்ட அடியேன் சொல்லுவதைக்கேட் டனுக்கிரகஞ் செய்வீராக.—

சரு. ஆசிரியரைத்தரிசித்துத்துதித்தல்.

சச. உலகமுதலிய வேழிலு மிருக்கின்ற தியாதென விசாரித்தல்.

இவ்விடத்தி லுள்ளதென்ன? அப்பாலிருக்கின்றதென்ன? அளவு சொல்லப்பட்டதென்ன? அளவில்லாததென்ன? பேசுகின்ற நானுர்? கேட்கின்றநீரார்? இந்தநிலைபெற்ற ஜகமியாதென்று மயக்கந்தீரும்படி யனுக்கிரகஞ் செய்வீரென்று கேட்க, அவன்கேட்ட சகலமுந்தெரியும்படி பகுத்து அந்த மாவலிக்குசுக்கிராசாரியானவர் நன்றுகத் தெரிவித்தார்.— நான்கற்பகவிருக்ஷத்தையுடைய தேவலோகத்துக்கு விரைவோடுஞ்செல்ல வந்தேன் பலவாகப்பேசியும் ப்ரயோசனமென்ன? சுருக்கமாகச் சொல்லுகின்றதைக்கேட்பாய். தோற்றமாக இவ்விடத்துள்ளதுவும் ஞானமே சமஸ்தமான புறம்பிலுள்ள விடயங்களும் ஞானமே; அளவுள்ளது ஞானமே; அளவில்லாமற் செறிவுள்ளதும் ஞானமே; சொல்லுகின்ற யானும் ஞானமே; கேட்கின்ற நீயும்ஞானமே; ஜகமும் பூரணஞானமே.

சரு. இவ்வேழு முதலிய யாவுஞ் சின்மாத்திரமேயென உபதேசித்தல்.

இந்நிலையே சுருக்கமாம். இச்சித்தாந்தத்தை மனதிற் றரித்துக்கொண்டு இவ்வகைகளுக்குரிய வழியினுல் உனது ஸ்வரூபத்தை நீயே சிந்திப்பாய்; திரிவின்றியறிந்து பார்ப்பாயானுல், அதினுல் முடிவான பரமபதத்தை யடையக்கடவாய். ஒப்பற்றவரியதவத்தையுடைய சத்தரிஷிகளும் நூதனமா யொருதெய்வகாரியத்தில்ப்ரவேசித்தார்கள்; நாமும்போவோம்.— என்றுசொல்லி சுக்கிராசாரியார்போனபின்பு, சகலமுஞானமாகிய சகத்தைப்பார்த்து நினைத்து, ஒவ்வொவ்வும்என்றனக்குசுக்கிராசாரியராற்சொல்லியது எதார்த்தமே; முதன்மையாகிய பூமியுஞானமே, திரிலோகமு ஞானமே, எனதுஸ்வரூபமு ஞானமே,

சசு. இவ்வனுபவத்தி லழுந்தென்றருளி யேகுதல்.

சஎ. இவ்வனுபவத்தை மன்னித்தல்.

சஎ. இவ்வனுபவ

‡ இ-ம்: முத்தியையடைதற் குத்தியுமவ்வுத்திக்குச்சாகாயமுமச்சகாயத்துக்குச்சாதனமுமாகிய விவைகளை யறிவித்ததாம்.

நல்ல நான்கு திக்குகளும் ஞானமே, ஸ்தாபிக்குங் கிரி

௬அ. நிதித்தியிற் காக்ஷிப்படல். யைகளனைத்தும் ஞானமே.— காணப்படுந் திரிஸ்ய மும் காக்ஷியும் ஒழிந்து களங்கமற்ற ஸ்வரூபமாய் விளங்குகின்ற சதோதயமாய் எப்பொழுதும் ப்ரகாசிக்கின்ற பிரம வஸ்துவானேன் பந்தப் படுத்துகின்ற விடயமில்லாத ஞானமே யுருவமாய் ஏககாலத்தில் எவ்விடத்தும் வியாபகமாகியும், உபசமனமான ஞானகாசமாகியும், அறிவாகியு மிருக்கின்ற மகத்தாகிய பூரணவஸ்துவே யான்—

௬௯. சமாதியடைதல். ஓங்காநின்ற ஞானமாத்திராத்தமாகிய ப்ரணவ ஸ்வரூபத்தை மனதிற் சிந்தித்து அறிதுயிலான தியானரூடனாய்ச் சங்கற்பங்களனைத்தும் விடுபட்டுக் கொள்ளாநின்ற செயல்களும், ஈடணைத்திரியமும். சந்தேகமும், மனனமும், அறிவும், விடயமும் இவைகளைத் தாங்குகின்ற ஞாதாவுமாகிய சகலமு நீங்க, தனித்த சித்திரத்தைப் போல வெகு நேரஞ் சமாதியி லிருந்தான்.—

௭௦. சச்சிதானந்தமாய்விளங்குதல் வாயுவில்லா விடத்துள்ள தீபப்ரகாசத்தைப் போல சலனமற்றிருந்த மாவலிச் சக்கிரவர்த்தியானவன், இராகத்துவேடநீங்கி பூரணமாய் சிந்தையென்கின்ற களங்கமில்லாமல் தோன்றுஞ் சத்தாமாத்திரத்தினை லொளிவிட்டுப் பிரகாசித்த விதத்தைக் கூறில், வலிமையுள்ள மேகங்களில்லாத சரற்காலத்தில் மிகவுந் தெளிந்த வாகாயத்தைப் போலுமாம்.—

௭௧. சகசத்துக்குவெளிப்படல். அவ்விடத் தந்தப்ரகாரமே அந்த மாவலியானவன் சமாதியிலிருக்க, அவனது பணியைச் செய்கின்ற அவுணர்கள் அரண்மனையினது மேல்வீட்டை யடைந்தார்கள், மேன்மையான மகாபலியுநீங்குதற்கரிய நிருவிகற்பமானநிலைமிருந்த சமாதியில் வெகுநேரம் தங்கிநின்று அதன் பின்பு விழித்துக் கொண்டு அறிந்து மடமையற்ற மன

௭௨. சாக்ஷாத்காரமடைதல். துடையவராய்.— நிராசை பொருந்திய மனத்தினல் இராசகாரியங்களை முழுதுஞ்செய்து, ஆபத்துக்களிடத்திலும் சம்பத்துக்களிடத்திலும் சமதிருஷ்டியாக குற்றமற்ற கருத்தினல் ஒருமைப்பாடாய் சுகதுக்கங்களில்லாவ்வளவேனும் மிகவாமலுமமியாமலும் சம்பாவனையிற் றுனாக விளங்கினன்.‡—

௭௩. மாவலிஞபன வர சனுய் மனதை மந்திரியாக்கிச் சகலமுந்தன்வசமாயசாக்ஷி செய்ததுபோலச் செய்வாயெனல். ஒழியாமல் அவனுடைய மனதிலுண்டாகிய இஷ்ட சிந்தனையும் அனுஷ்ட சிந்தனையும் அளவில்லாததாகவும், உண்டானதும் இல்லாததுமான பதார்த்தங்கள் அளவில்லாததாகவும், விரிந்திருக்கின்ற வனத்திலும் விஸ்ராந்தியடைந்து, பின்பு எந்தவிடத்தி லெதைப் பொருந்தினன், பரத்திலும் இகத்திலுமுள்ள ஆசைகளில்

‡ இ-ம். சிரவணமுதற் சாக்ஷாத்காரபரியந்தமுள்ள வனுபவத்தைக் கூறியதாம்.

௫௪. மனதைச் செயித்து முத்தியடைவாயெனல்.

பாயாமின்ற மனதை தனதிதயாம்பரத்தில் வைப்பாய்- எவ்விடத்தி லெவ்விடத்தில் மனதுசென்று குழந்தைகளைப்போல விடயங்களில் விழுந் தழுந்தாநின்றது, அவ்விடத்திலவ்விடத்திலிருந்து கிளப்பி அகண்டாகார ஞானத்தில் அடையசசெய்வாய். குறிப்பாய் இந்தப்ரகாரஞ் சாதனை செய்து மனமென்னு மதர்த்த யானையை கொடிய துன்பமறும்படி கட்டி சகல விசாரணையினாலும் மோக்ஷமடையப் படுவதாம்.‡—

மாவலி கதை
முற்றிற்று.

---

# பிரகலாதன் கதை.



## அவதாரிகை.

முன்கதையில் இச்சாத்தியாக பலத்தினாலுண்டான விசாரத்தாற் சடவரசாங்கஞ் சித்தரசாங்கமான வனுபவத்தையறிவித்து, இவ்வனுபவமீஸ்வர ரனுக்கிரகத்தினாலும் வருமென்பதை யறிவிக்கு நிமித்தம் பிரகலாதன் கதையை நிரூபிக்கிறார்.

---

க. பகையைவசப் படுத்த வாலேசித்தல்.

உ. பகைவன்வலிமையை யுணர்தல்.

௩. பகைவனைச் செயிக்கு முபாயமுணர்தல்.

பின்னும் ஒருகதையைச் சொல்லக் கேட்பாய். பிரகலாதனென்னு நாமத்தை யுடையவனும் தனதறிவினால் மெய்ஞ்ஞானமான தத்துவஸ்ரூபத்தை அடைந்தான்; அதைச் சொல்லுவோம் இரணியனென்னு நாமத்தையுடைய தானவர்களுக்கரசன், மரணமடைந்தமாத்திரத்தில், துன்பமிகுந்த அவனது புத்திரன் மனநடுக்கமுற்று இவை யெண்ணினான்.— என்னுடைய பிதா முதலிய தானவர்கள் என்குலத்திலுள்ளவர்கள் அளவற்றவர்கள், மகாமேரு வற்பமென்னும்படி சரீரநிலையை பெரிதாக வுடையவர்கள், தாமரையிடமாகப் பிறந்த பிரமாவி னதிகாரத்தை கெடுக்க வல்லவர்கள், கொடுக்கவல்லவர்கள், தரிக்கும் துளசிமாலையையுடைய விஷ்ணுவென்னும் அக்கினியில் இலவம்பஞ்சி கெடுதல்போல நசித்தார்கள்.— அவர்களுக் கொப்பான பெரிதான வவுணர்கள் கற்பாந்த சண்டமாருதத்தால் கெடுகின்ற சிறுமலைகளைப்போல இறந்தவர்கள், பொடி மணலைப்போல அளவில்லனவாம்; இக்காலம் அம்மாலுக்குப் பயப்படாதவர்கள் ஒருவருமில்லை; எமக்குப் பகையாகிய ஒளிநிறைந்த சக்கராயுதத்தையுடைய விஷ்ணுவை செயித்தற்கு,

‡ இ-ம். இவ்விதமாக மனோவிச்சையைநீக்கி ஞானம்பெறுவா யென்பதாம்.

௪. மூர்த்திபூசனை செய்யச் சிந்தித்தல்.

உபாயமீதொன்றே.¶—எந்தப்பிரகாரமாக நினைத்தாலும் இதற்கு வேருக மேலானகதியில்லை; திருப்பாற்கடலில் வசிக்கும் விஷ்ணுவினது அடைக்கலமன்றி வேறடைக்கலமில்லை; மனமானது இந்தக்ஷணந்தொடங்கி நாராயணனதுபதத்தைச் சேரக்கடவது, பத்தியையுடையவனாய் பாவனையினால் நானேயவனாகி பிரியாதிருக்கக்கடவன்.— இச்சித்த சகலமும் எளிதிற் கொடுக்கின்ற நாராயணாய நமவென்கின்ற மேலான திருமந்திரமானது,என் மனதில் ஆகாயத்தினிறையுங் காற்றைப்போலவிட்டு நீங்காம லுள்ளே சேர்ந்திருக்கக்கடவது.

௫. அஷ்டாக்ஷரத்தின் பெருமையையுணர்தல்.

விஷ்ணுவைவணங்கி ஆராதனைசெய்பவர்கள், இசைந்த விஷ்ணுவே தாமாக அந்தவாராதனையைசெய்யின் முத்திலாபமாம்; அல்லாவிடிலில்லை.—

௬. மூர்த்தியின் சகுணவுருவத்தைச்சிந்தித்தல்.

அந்தமார்க்கத்தினுல் விஷ்ணுஸ்வரூபமே நானாய் விஷ்ணுவை ஆராதனைசெய்வன். இச்சரீரமானது விஷ்ணுவினதுஸ்வரூபமாம், இந்தவடிவத்தில் பிராணவாயுவின் வடிவமாய் கட்டுப்படுவோன் பராபரனாகிய இந்தவிஷ்ணுவே பிராணவாயுவில் முன்செல்லுதலால் இரண்டாவது விஷ்ணுவாய் புறம்பில் வசிப்பான்.‡—

௭. அகத்திலாராதித்தல்.

அந்தப்ரகாரமாகிய இந்தவிஷ்ணுவை, சமஸ்தவுபசார வஸ்துக்களையும் மனதினுல்கற்பித்து எப்போதுமாராதனையைச்செய்வேனென்று நினைத்து, பூசாதிரவியமான பாரங்களனைத்தையு மெடுத்து மனதினுல் சிவந்ததான இரத்தினபாத்திரங்களும், தூபங்களும், தீபங்களும் வாசனுத்திரவியங்களனைத்தையு நிறைந்து,— இரத்தினுபரணங்களும் சொன்னவஸ்திரங்களும், வாடாத சொன்னபுஷ்பங்களும், நல்லமுதுமாகிய எண்ணிக்கையற்ற பூசாதிரவியங்களனைத்தையும் மனதினுற் பாவனைசெய்து ஆராதனைசெய்து

௮. புறத்திலாராதித்தல்.

தணியில்லாத வன்பினுல் முன்னேகொடுத்த புறம்பிலுள்ள திரண்ட திரவியங்களினுல் சர்ப்பசயனத்தையுடைய விஷ்ணுவை அகத்திற் பூசித்ததுபோல அன்புற்று புறத்திற் றேவக்கிரகத்திலு மாராதனைசெய்தான்.— அப்படியே அந்தக்ஷணந்தொடங்கி அகண்டாகார ஸ்வரூபமாகிய பிரமவஸ்துவான விஷ்ணுவினுடைய பதங்களை ஆராதனைசெய்தான்.

௯. அசுரரியாவருமாராதித்தல்

அப்பிரகலாதனைப்போல வாளாயுதத்தையுடைய அவுணர்களும் தீமையான குணங்களைநீக்கி சகலரும் அரிக்கு அடிமைப்பட்டார்கள். அரசனதுகுணமல்லவாபரந்த

¶ இம் முன்னுள்ள யாவு மனித்தியமாய்ப்போனது காரணமாகச் சித்தசுத்தியுண்டா யதனு னித்தியத்தையடைய விவேக முதித்ததென்பதாம்

‡ இ-ம் மூர்த்தியைத் தியானிக்கு முறைமையை யுணர்ந்ததாம்

| | |
|---|---|
| கo. தேவர்கள் ஜய முறல். | சிவர்களின்குணங்கள்.§— அப்படியே, திதிபுத்திரர்களாகிய வசுரர்களும் அவர்களுக்கரசாகிய பிரகலாதனும் சிவந்த கண்களையுடைய விஷ்ணுவினிடத்தி லிருக்கின்ற கோபம்விட்டு, நூதனமான பக்தியினால் அடிமை புகுந்தார்களென்று தேவேந்திரனும் தேவர்களும் கேட்கவும் அச்சத்துட னாச்சரியமடைந்து, மிகுந்த பாவத்தையுடையவர்கள் எமதுபெருமானுக்கன்பாகியது என்னவென்று சந்தேகமடைந்து,— |
| கக. தேவர்கள் வினவுதல். | க்ஷீரசமுத்திரத்தில் நித்திரைசெய்கின்ற விஷ்ணுவின் முன்னேபோய்ச் சேர்ந்து தோத்திரஞ்செய்து, தேவேந்திரன்முதலிய தேவர்கள் மேகநிறத்தையுடைய விஷ்ணுவைப்பார்த்து, அக்கினியான சுபாவத்தையுடையதயித்தியரனைவரும்; உம்மைப்பாவனைசெய்து உமதுருவமா யிருப்பார்களானால் இதை மாயையென வெண்ணினோம், இதென்ன!— கொடிதான கொலை |
| கஉ. இதுவுமது | யைச்செய்யும் வல்லமையுள்ள அவுணர்கள் குணங்களெவ்விடம், பெறுதற்கரிய முடிவாகிய சுகமெவ்விடம்; விஷ்ணுவின்பத்தியைப் பெறுவதெவ்விடம்; கொடிதான தீமையையுடையவர்கள் சற்குணங்களை கலந்தார்களென்று சொல்லுவது சொல்லேயல்லாமல், வியாபகமுள்ள விஷ்ணுவே? உனது பத்தியானது சண்டாளருக்கெல்லாங் கிடைக்குமோ!— என்று |
| கங. சுவாமியானவ ருண்மையைக்கூறல். | சொல்லிய தேவர்களுக்கு எமது பெருமானாகிய விஷ்ணு, தேவர்களே? அச்சப்படாதிருங்கள், சயஞ்செய்கின்ற பிரகலாதனனைவன் திரும்பவுஞ் சனியாத சுகத்தையடைந்தான்; கொலைசெய்கின்ற துன்பநீங்கி தத்துவஞானதிருஷ்டியினால் மோக்ஷத்தையடைவன், ஆகையால் ஒன்றும் இதனில் வஞ்சகமென்று அறியத்தக்கதில்லையாம்.— நன்மையுள்ளவர்கள் பொல் |
| கச, தேவருமசுரரு முறவாதல் | லாங்கைப் பொருந்தினாற் கெடுதலாகும்; தீமையுள்ளவர்கள் நன்மையைப்பொருந்தின னன்மையேயாகும்; சகலரும் போமினென் றனுக்கிரகித்து எமதுமகானாகிய விஷ்ணுவும் அவ்விடத்து மறையவும், பேரலை சூழ்ந்திருக்கின்ற திருப்பாற்கடலிலிருந்தும் விண்ணுலகத்தையடைந்து தேவர்களனைவரும் பகைவரென்று சொல்லப்பட்ட தானவருடன் குற்றமற்ற வுறவானார்கள்.¶— அஸ்திகுளிர்கின்ற பரபத்தியினால் |
| கரு. நிராசையுண்டாதல். | இமைநோமீங்காமல், சதாகாலமும் அன்புபெருக |

§ இ-ம் பிரகலாதன்முதலிய யாவரு மூர்த்தியையுபாசித் தம்மூர்த்தி வடிவமானார்களென்பதாம்

¶ இ-ம் அரியினாற் றேவர்களு மசுரர்களுந்தமதிடத்திலுள்ள ஐயநீங்கி யன்பிற்கலந்தனரென்பதாம

வியாபகமுள்ள விஷ்ணுவை அவுணர்க்கரசனுகிய பிரகலாதன், ஆராதனைசெய்தான். வலிமையிற்சுழலுகின்ற திரிகரணங்களுந்தவறாத பூசாபலத்தினல் முதன்மையான விவேகமும் ஆநந்தமுதிர்ச்சியும் வயிராக்கியமும் உண்டாய்வளர்ந்தன.—

௧௬. போகப்பற்று நீங்கல்.

நான்குசாதன முதலிய குணங்கள் உண்டாய் இவன்மனது ஆசையாகியபோகங்களில் வருந்துகின்றபற்றுக்கள்நீங்கின. குளிர்ச்சியையுடைய முத்தானது தாளத்தோடுஞ்சேரில் பற்றுதலுண்டாகுமோ, ஆதலினல் போகங்களிலழுந்தாமல் மனது விஸ்ராந்தியடைந்தது,—

௧௭. மூர்த்திப்பிரசன்னமாதல்.

பூரணவடிவையுந்தரிசியாமல் போகத்தினிடத்திலுமழுந்தாமல் தொங்கின ஊசலலைவதுபோல நன்மையுள்ள பிரகலாதனுடைய மனமானது சுழலுவதை, மூன்றுலகத்துக்குஞ் சாக்ஷியாகிய திருமாலானவர் திருவுளத்திலறிந்து, அறிவான குணத்தையுடையவனாராதிக்கின்ற ஏகாந்தமான பூசாக்கிரகத்தில் தான் வந்துசேர்ந்து,§—

௧௮. ப்ரத்திய க்ஷமானமூர்த்தியையாராதித்துத் துதித்தல்.

மும்மூர்த்தியாய்நின்ற முதன்மையான காரணமானது வந்தடைந்த விதத்தைப்பிரகலாதனறிந்து, தேவதேவனுகிய விஷ்ணுவை முன்னேசெய்ததிலும் இரட்டித் தாராதனைசெய்து, எவர்களாலுந் தரிசிப்பதற்கரிய எமது சுவாமி ப்ரசன்னமானுரென்று அன்பினல் அசுரேசன் அந்த விஷ்ணுவைத் தோத்திரஞ்செய்தான்.—

௧௯. இதுவுமது.

அண்டமென்கின்றவொப்பற்றவீட்டில் அரிதான பொருள்சேர்ந்திருக்கின்ற பண்டாரமே? சூரியனைப்போல உதயாத்தமனமில்லாமல் ப்ரகாசிக்கின்ற பிரமமே? தரிசித்த வாத்மாக்களனைவர்க்கும் கருணைக்கண்ணுகிய பாவஸ்துவே? இலக்குமிக்கு நாயகனுனவரே? வந்தனம் வந்தனம், மிகவும் வந்தனம்.—

௨௦. இதுவுமது

மேலானவனுய் உலகத்தையுண்டாக்குகின்ற லீலையையுடைய ஞானமுடையவனே? பதினுன்கு உலகத்திலும் சாரமேலானநல்லவஸ்துவே? ஆலிலையின்கண் ணுள்ளவனுய் நித்திரைசெய்த கடவுளே? தத்துவமே? தயாஸ்வரூபமே? பூலோகங்களுக்குநாயகனுனவரே? வந்தனம்வந்தனம். மிகவும் வந்தனம்.—

௨௧. இதுவுமது

துன்பமிகுந்த அவுணர்களென்கின்ற கிளைகளையுடைய தாமரைப்பூவிற்கு நீண்ட பனியானவரே?வேதமார்க்கத்திற்செல்லுந்தேவர்களென்கின்ற விகசிதமான தாமரைப்பூவுக்கு சூரியனுனவரே? வேற்றுமையைக் கெடுத்தவர்களிருதயமென்கின்ற பெரிய காமரைப்பூவிற்கு வண்டானவரே? ஆத்மாக்களுக்கெல்லா நாயகனுனவரே? வந்தனம் வந்தனம்,

§ இ-ம் பக்குவிக்கனுக்கிரகஞ்செய்ய வுபாசனுமூர்த்தி யெழுந்தருளினதாம்.

உ௨. பிரமானந்தம்வேண்டல்

மிகவும் வந்தனம்.— இப்படி பலதோத்திரங்களைப் பிரகலாதன்சொல்ல, மனங்களித் தருள்செய்து அன்பையுடைய பிரகலாதனே? திரும்பவும் சனியாததான வரத்தைக்கேளென்று விஷ்ணுவானவர்சொல்ல,சகலரிருதய கமலங்களிலும் வசிக்கின்ற முதன்மையான வஸ்துவே? துக்கமற்ற மேலான வாநந்தமியாது, அதையே யனுக்கிரகஞ் செய்வாயென்று பிரகலாதன் சொன்னார்.—

உ௩. அனுக்கிரகஞ் செய்தல்.

மனதிலுள்ள மயக்கங்களனைத்துநீங்கி தெளிவான பிரமாநந்தத்தை யடைந்து, சுத்தப்பிரமத்தில் விஸ்ராந்தியை யடையும்பொருட்டு, முடிவான வாத்மவிசாரம் உண்டாகக்கடவதென்று கரகமலத்தைச் சிரசின்மேல்வைத் தனுக்கிரகஞ்செய்து, நின்மலனான விஷ்ணு வெழுந்தருள, அவனைத் தோத்திரத்தினால் மிகவும் வணங்கி புட்பத்தைவருஷித்து விவேகிகளுக்கு மேலான பிரகலாதன் வணங்கினான். ¶—

உ௪. தனித்திருந்தாத்ம விசாரத்துக் காரம்பித்தல்.

குளிர்ச்சிபொருந்திய நீண்டசமுத்திரத்தில் அலையைப்போல புருடோத்தமன் மறைந்ததன் பின்பு, இனிய பதுமாசனத்தி லிருந்து கடவுளினது தோத்திரங்களை துதித்தபின் பிறவியைக்கெடுக்கின்றவொப்பற்ற சுவாமியானவர், பிறவாத வாத்ம விசாரணையை கொடுத்திரட்சித்தார், யான் நாமாரென்று உள்ளே விசாரிப்போமென்று சிந்திப்பான்.—

உ௫. பஞ்சபூத வடிவமான சகத்து இயானென்றெனல்.

முன்னமே எவனாயிருந்த யான், இந்தப்புவியாடம்பரத்தில் நீங்காமலிருந்தும், நின்றும், ஓடியும், அழுதும், நகைத்தும், களித்தும், வருந்தினவனாகிய நானெத்தன்மையன்; நாநாவிதமாகியஉலகம்நானல்லன்; மலைகளும், கற்களும், திரணங்களும், மண்களும், மரங்களுமாகியும், புறம்பாகியும், சடமாகியுமிருக்கின்ற இச்சகத்தை யானென்றுசொல்லத் தகுந்ததோ,—

உ௬. பௌதிகமாகிய தேகமுஞ்சத்தவிடயமு மியானன்றெனல்.

அசத்தினிடத்தி லுண்டானதாகியும், மூடமென்பதாகியும், பிராணவாயுவினாற் சஞ்சரிப்பதாகியும், அற்பகாலத்தில் நசிப்பதாகியுமிருக்கின்ற சடமான சரீர நானாவேனோ; நிலையில்லாததாகியும், சூனியத்தி லுண்டானதாகியும், ஆகாரமில்லாததாகியும், அறிவில்லாததாகியும், அற்பவுணர்வில் காதுக்குப் புசிப்பாகியுமிருக்கின்ற கெடுக்கின்ற சத்தவிடயமியானாகுமோ;—

உ௭. பரிசவிடயமும் ரசவிடயமு மியானன்றெனல்.

தொக்கினாலல்லாமல் அறியக் கூடாததாகியும் தனித்து தோற்றமில்லாமல் கணநேரத்தில் நசித்து வியாபகஞானத்தினாலறிந்து தனக்கறிவில்லாமலுமிருக்கின்றபரிசவிடயநானாவேனோ;காற்றில்லாமற்

¶ இம். உபாசித்தவன் வேண்டின பரமசுக முதிப்பதற்கேதுவான விசாரமுதிக்கக்கடவதென்றருளினரென்பதாம்

சஞ்சலமாகியும், சடரூபமாகியும், ஆசைமிகுந்த தாகியும், க்ஷணத்தி லிறக்கின்றதாகியும், நாவிற்குப் புசிப்பாகியும், பதார்த்தங்களி லுண்டானதாகியு மிருக்கின்ற சடமான ரசவிடயமான தியானாவனோ;—

**௨௮. உரூபவிடயமுங் கந்தவிடயமு மியானன்றெனல்.** கணத்தி லிறக்கின்ற சகத்திலும், பார்வையிலும், புணர்ந்தும் புணராத ஞாதாவினிடத்தி லிறக்கின்ற சடமான வுரூபவிடய நானாவனோ; விளைவான மூக்காகும் அறிவில்லாமையினால் குறிக்கப் படுவதாகியும், சடமாகி தனக் கறிவில்லாததாகியும், வாசனையி லற்பமுறைமைகளைப் பொருந்தினதாகியு மிருக்கின்ற சடமான கந்தவிடயநானாமோ;—

**௨௯. ஆத்மதரிசன மாதல்.** மமகாரமிறந்து சங்கற்பமனைத்தும்விட்டு இளைப்பில்லாமல், பஞ்சேந்திர மயக்கம்விட்டு, மாசற்ற ஞானமாகியும், செயலின்றி, அறிகின்ற விடயநீங்கிய ஞானமாத்திரமாகியும், கனமான வுள்ளிலும், புறம்பிலும், நிட்களமாகியும், சத்தாமாத்திரமாகியும், பிறப்பிறப் பில்லாததாகியு மிருக்கின்ற எனதுஸ்வரூபத்தை ப்ரகாசிக்கக்கண்டேன், இதுநிச்சயம்.†—

**௩௦. ஆத்மவியாபகமான பிரமத்தைத்தரிசித்தல்.** ஆ! ஆ! இந்தவேளையி லென்னைத் தெரிந்துகொண்டேன்; உள்ளப்ரகாரமாய் அறிகின்றமார்க்கத்தில் நீங்காத வேற்றுமைகெட்டு அறிவுக்குள் ப்ரகாசமான ஆத்மஸ்வரூப மிதுதானோ; சலனமின்றி யெங்கும் வியாபகமாயிருக்கின்ற யானாகிய தத்துவஞானத்தில் உலகங்களனைத்தும் பொருந்தாநின்ற சூரியன் முதல் கடபரியந்தம் ப்ரகாசித்தது.—

**௩௧. சுயஞ்சத்தைத்தரிசித்தல்.** உள்ளேயிருக்கின்ற ப்ரகாசத்தினால் அக்கினிப்பொறிக ளானவை ப்ரகாசிப்பதுபோல, பஞ்சேந்திரியமும் தெளிவாக வறிகின்ற வென்னால் மிகுந்த விசித்திரமாகி ப்ரகாசித்தன; தள்ளப்படாத பிரமாமுதலான தனிமையான கற்பமுடிவில் சீவர்களெல்லாம் வெட்ட வெளியான வப்பிரளய காலத்திலும் எனது ஸ்வரூபமே திரும்பாமற் ப்ரகாசிக்கும்—

**௩௨. சுயஞ்சித்தைத்தரிசித்தல்.** இவனென்று மியானென்றும் மனதிற் பற்றுகின்ற நினைப்பெங்கே; அளவில்லாமலிருக்கின்ற சகங்களனைத்தும் பூரணமாய் ப்ராகாசிக்கின்ற ஞானஸ்வரூபமாகிய எனக்கு, கிரிகிக்கின்ற மனோபாவனை நினைக்கு மிடத்துண்டோ! முடிவில்லாத ஆநந்தமுடைய சமானமில்லாத உபசாந்தஞானமாகிய எனது திருஷ்டியே சகங்களனைத்திலுமாம்.—

**௩௩. ஒன்றான தன்னை மனனஞ்செய்தல்.** பார்க்கப்பட்ட பார்வைக ளனைத்தும் சூட்சுமவறிவாகிய பார்வை யொன்றேயாம். உண்டாக்கப்பட்ட சீவர்களியாவையும் அகமாகியும் தி ஸ்ய சம்பந்தமில்

† இ-ம் அநாத்ம வஸ்துவை நியதிகளைக் தாத்மவஸ்துவான கூடஸ்தரைத் தரிசித் ததுவாயினா ரென்பதாம்

லாத ஞானமாகியும் தாக்குதற்கு வேறொருவஸ்து வில்லாத ப்ரத்திய காத்மாவாகியு மிருக்கின்ற என்னை யன்றி நீக்கப்பட்டதில்லாத எமது நிமித்தம் வந்தித்துத் துதிப்போம்.—

௫௪. ஆத்மாவிற் சத்திக ளனைத்து முண்டாதல்.

மிகவுஞ் சொச்சமாய், சமத்துவமாய், விகாரமில்லாததாய், அதீதமாய், செல்கால நிகழ்கால வருங்காலமென்று நினைக்கின்ற மூன்று காலமுமில்லாததாய், வேருக நினைக்கின்ற நினைவில்லாமல் அபேத ஞானத்தினுல், மாக்ஷிமையான நாநாவித சத்திகளனைத்து நேரே யுண்டாக்கப்பட்டன.—

௫௫. அதீததரிசனம்.

ஒன்றிலும் பற்றில்லாதிருக்கின்ற ஞானத்திற்கு சமமேயல்லாமல் வேறு காணப்பட்டதில்லை; வசனத்திற் கெட்டாதபடியினுல் வார்த்தைகளினுற் சமமான ஆத்மா தோன்றமாட்டாது; பார்ப்பதற் கரிதாகியும் மித்தையாகிய வஸ்துவைப்போல சொச்சமாகியுமிருக்கின்ற கெடாத நிராசையை நிறைத்தால் சமபாவனையானது அலையில்லாத சமுத்திரத்தைப் போல மிஞ்சும்.—

௫௬. பந்தமடையு முயிர்களுக்கிரங்கல்.

தொழிலுந் தொழிலில்லாமையுமாகி மயங்குகின்ற தொழில்களில் சேர்ந்தவறிவானது வலையிலகப்பட்ட பக்ஷியைப்போலக் கட்டுப்படும். ஆகையினுல் இராகத்துவேடமாகிய விரண்டினுலும் வருகின்ற தொந்தமான மயக்கத்தினுல் சீவர்களனைத்தும் பூமிக்குள் ளிருக்கின்ற கிருமியைப்போல ஒன்றும் நீங்காமலாகும்.—

௫௭. தன்னைத்தானுய்த் துதித்தல்.

மிகவுந் தெளிவாக நிறைந்த வாத்மாக்களனைத்திற்கும் மனதிலுறைபவனே? வெகுகாலத்தின் பின்பு உன்னை யடையப்பெற்றேன்; இப்பூரண ப்ரயோசனத்தை யார்பெற்ருர்கள்; சுருதி குருவாக்கியங்களினுல் விசாரிக்கப்பட்டாய்; கூடஸ்த பிரம வயிக்கியத்தை யடையப்பெற்ருய்; வேற்றுமைகளனைத்தையும் நீக்கினுய்; சச்சிதாநந்த ஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்ருய்; எதுவானுய் யாதானுயோ அதுவாக நின்றவுன்னை மிகவுந்தோத்திரஞ் செய்வாம்.—

௫௮ ஐக்கியவஸ்துவான தன்னைத் தரிசித்தல்.

நானே நீயாகியும், நீயே நானுகியும், ஞானஸ்வரூபமாகியும், முடிவில்லாது, தான் மாத்திரமாகியும் அண்டத்திலுள்ள தேவர்களுக்கு தேவனுகியுமிருக்கின்ற பரமாத்மாவான இறைவனே? உன்னை வணங்குகின்றேன். மேகங்களில் மறையாத பூர்ணசந்திரனைப்போல ஈனமான நினைவுகளில் மறைபடாத ப்ரகாசஸ்வரூபமே? உன்னை வந்தனஞ் செய்வேன்.—

௫௯. பிரமாநந்தத்தி வியாவு மிருந்து மில்லையெனல்.

நினைவென்கின்ற மறைப்பொன்றும் இல்லாத சிதாகாயமாய் அத்தனையதா யிருச்கின்ற ஆநந்தஸ்வரூபத்தில் தானுகப்ரகாசித்து, தனது வசமாகிய வெனது ஸ்வரூபத்தை நான் வணங்குவேன். அசையாதிருந்தும் நடந்துஞ்

சாந்தமடைந்தும் அந்தந்தத் தொழிலில்லாததாம். சகலதொழில்களைச்செய்துமந்தப்பற்றில்லாததாம்.—

௪0. சகலமுமாத்மாவினால் விளங்குமெனல்.

தளிர்களையசைக்கின்ற காற்றைப்போல மனமுதலான நடக்கின்ற அந்தக்கரணங்களை இந்த ஞானாத்மாவானவன் அசைப்பான்; வல்லமையையுடைய சாரதி நடத்தாநின்ற குதிரைக்கூட்டங்களைப்போல, தன்னுடையதாகிய துன்பம்பொருந்த இந்திரியங்களனைத்தையும் சதாகாலமும் அவனேதாங்கும — இவனே

௪௧. எவற்றினுள்ளும் விளங்குகின்றதெனல்.

தேகேந்திரியங்களாற் றேடப்படுகின்றவன்; இவனே வாக்கினாற் றுதிக்கப்படுகின்றவன்; இவனே மனதினாற் றியானிக்கப்படுபவன்; இவனால் மரணமயக்கங்கணீங்கின; இவனே யெளிதிலடையத்தக்கவன்; இவனன்றோ யறியத்தக்கவன்; இவனியாவரது இருதய கமலத்தில் இராநின்ற கானத்தையுடைய வண்டாம்.—

௪௨. முன்மறைந்தபொருளிப் பொழுதுவெளிப்பட்டதெனல்.

விருப்பமுற்ற போகங்களில் இராகத்துவேடமுமெனக்கில்லை; எதுவரத்தக்கதுவோ அதுவரக்கடவது; எது போகத்தக்கதோ அதுபோகக்கடவது; பாவமிருந்த இந்த வஞ்ஞானமென்னுஞ் சத்துருவினால் விவேகமென்கின்ற வருத்தமற்ற வஸ்துக்களனைத்தையும் நீங்கினேன்; ஞானத்தினாலந்தவஸ்துக்களைப்பெற்றேன்.¶— சாத்திரங்களில் வருந்திய

௪௩. பிரமஸ்வரூபமே தனதுஸ்வரூபமாமெனல்.

விவேகமுள்ள மனதினால் சம்சாரத்திலழுந்திய மனதைக்கெடுத்து, துன்பஞ்செய்கின்ற வகம்பாவநீங்கி, அத்துவிததியானத்தினாற் றுவிதபாவனை விட்டு, அசைவற்ற நிலையில் ஒப்பற்ற கேவலமாயிருந்தேன். வினையான பாவனையற்று, அகம்பாவநீங்கி மனம்போய், ஒருசெயலுமில்லாமல் தனக்குத்தானே சமானமான கேவலமாகிய பரிபூரணமான ஞானாத்மாவில் எனதுஸ்வரூபமிருக்கும்.— ஆசையென்கின்ற

௪௪. அகம்பாவநீக்கியைக்கியமானேனெனல்.

பந்தத்தைக்கெடுத்து, சரீரமென்னுங்கூண்டை நீங்கி இறப்பைபடைகின்ற வகம்பாவமென்னும் தனித்த பக்ஷியானது எங்கே பறந்துபோயிற்றோ; குற்றமற்ற நீயே நானாகும் நானே நீயாகுமென்கின்ற ஒன்றிரண்டாக கூறும் நியதியினாற் றிரும்பவுமொன்றாய் மேலான நீயே நானாகவும் நானே நீயாகவும் அயிக்கியமானேன்.—

௪௫. ஆத்மாவை வாழ்த்துதல்.

நீங்காத சகத்தின் செல்வங்களனைத்தும் உடையதாயிருந்தும் நீயில்லாமற்போனால், கண்ணில்லாதவர்களுக்கு பெரிதான வழகுமிருந்த ஸ்திரீகளைப்போல ப்ரகாசிக்கமாட்டாது நாசமில்லாத தெய்வமே சய, உபசாந்தம்பொருந்துமிடமே சய. வேதங்க

—¶ இ-ம் பொருளெல்லாமென்பது, சமாதியின்கண் ணவநவமாய்விளங்காநின்றவாநந்த மெனக்கொள்க.

ளனைத்திற்கு மதீதமானதே சய வேதங்களுண்டான ஸ்தானமே சய,§— உண்டாகுங் காரணமே சய, எப்பொழுது முண்டாகாத காரணமேசய, எந்நாளு மிறக்கின்றகாரணமேசய, எப்போதுமிறவாதகாரணமேசய, இப்படியென்றி சிறக்கின்ற மனதிற் றியானித்து, இரணியனதழகிய புத்திரன்பரவிய பேதமற்ற மேலான நிருவிகற்பசமாதியில் ஆநந்தத்தை யடைந்தான்.— நிருவிகற்பமான சமாதியில் ப்ரகாசிக்கின்ற சித்திரத்தைப்போல திரமடைந்து ஐயாயிர வருடங்கழிய மாறுத ஒரேதிருஷ்டியிலிருக்க,மாணிக்கங்கள் சூழ்ந்திருக்கின்ற பாதாளலோகத்தில் வேந்தனில்லாமல் அவுணர்களனைவரும் கருடன்முதலான பறவைக்கூட்டங்கள் கிரிகிக்க, கலங்காநின்ற தடாகத்திலுள்ள மச்சங்களின் கூட்டத்துக்குச் சமானமானார்.‡— இப்படியானகாலத்தில், சகலமாகிய சகங்களினது நீதிகளியாவையும் இரக்ஷிக்கின்ற ஸ்ரீ விஷ்ணுவானவர்,திருப்பாற்கடலில்அறிதுயில்செய்து துளிக்கின்ற மழையையுடைய கார்காலத்திற்செய்யும் நித்திரையைநீங்கி, ஒருசால் இரட்சிப்புள்ள திருவுளத்தில் உலகத்தினடக்கையை ஆலோசனைசெய்தார்— வேற்றுமையில்லாத உபசாந்தபதத்தை பிரகலாதனடைந்திருக்க, பிரமதேவன் சிருஷ்டியானது அழிவுற்றன; கொடியவாளையுடைய நிசாசரர்கள் இல்லாததினுல் குற்றமுள்ள தானவர்களில்லையென்று போரற்று தேவர்களனைவரும் வுபசாந்தமாகிய ஒப்பற்ற மோக்ஷமடைவார்கள்.— அமரர்களுபசாந்தத்தை யடைந்தால், பூமியில் முன்னிட்டுச்செய்கின்ற யாகங்களும், தவங்களனைத்தும்,கெடுவதாய், ப்ரயோசனங்களனைத்தும் பொருந்தாமல் எல்லா நசிக்கும். ப்ரயாசமாகச் செய்யப்பட்ட யாகாதிகிரியைகளனைத்தும் நீங்கினுல் சகமான தடங்கிடும், தனிமையிற் சகமடங்கினுல் விளங்குகின்ற சிருஷ்டியழிந்துவிடும்.— இப்படிப்பட்டசிருஷ்டியில்லாமல் சூரியசந்திரர்களோடும் யாவுமிறந்தால், பின்பு நாமுமிந்தவுருவத்தைவிட்டுபேதமற்ற தற்பதத்தையடைவோம், நியமித்தகாலத்தை விட்டு மத்தியில் பழமையான சகங்களனைத்து நாசமானுல் நினைக்க நன்மையைக் கண்டிலம்; இதற்குத் திரமான வுபாயத்தை அறிந்தனம்.— அசுரர்கள் வாழக்கடவது; வாழ்ந்தால் யுத்தமுண்டாகும்; யுத்த

௬௬. சமாதியடைதல்.

௬௭. சமாதியனுபவத்தைக் காண்டல்

௬௮. திருமால்சகநீதியை யாலோசித்தல்.

௬௯. இதுவுமது.

௭௦. இதுவுமது

௭௧. இதுவுமது.

௭௨. இதுவுமது.

§ இ-ம் விசாரத்திலுதித்த ஸ்வானுபூதியை மனனஞ்செய்து அதைநிதித்தியிற் காட்சிப்பட்டுத் துதித்தனென்பதாம்

‡ இ-ம் ஸ்வானுபூதி மாத்திரமாய் விளங்கினுரென்பதாம்.

முண்டானால் தேவர்களுண்டாவார்கள்; தேவர்களுண்டானால் யாகமுந் தவசு முண்டாகும்; அவைகளுண்டானால் ஆகிய வொப்பற்ற சிருஷ்டியுண்டாகும்; இவைகளல்லாவிடில் சிருட்டியுங் கெடுமாதலால், குறைவற்ற அசுரேந்திரனாகிய பிரகலாதன் இச்சரீரத்தோடு மூழிகாலம் வாழக்கடவன்.—

௫௩. திருமால்சகநீதியை யாலோசித்தல்.

பரமேஸ்வரனால் இரட்சிக்கின்ற தெய்வ நீதியானது, ஸ்திரம் பொருந்தும்படி இந்தப்ரகாரஞ் செய்யவேண்டுமென்று சிந்தனைசெய்த சிவந்த கண்களையுடைய விஷ்ணுவானவர், சர்ப்பசயனத்தை விட்டு சத்தியலோகத்தை யொத்த பெரிதான பாதாளலோகத்தில் அசுரர்க்கரசனான பிரகலாதனது சமீபத்திலடைந்தார்.¶—

௫௪. சமாதியினின்றுஞ் சாக்ஷாத்காரத்துக்குவெளிப்படல்.

கருடவாகனத்தில் வசிப்பவனும், வெண்சாமரஞ் சேர்ந்திருக்கின்ற சிவந்த கரங்களையுடைய இலக்குமி வாழ்கின்ற வலது பக்கத்தை யுடையவனும், பஞ்சாயுதங்கணிறைந்த இருபுறத்தை யுடையவனுமாகிய தேவர்களு முனிவர்களும் வணங்க, அருள்செய்யுந் தலைவனான விஷ்ணு, பிரகலாதனை யறிவாயென்றனுக்கிரகித்து,—

௫௫. சமாதியினின்றும் வெளிப்படல்.

பாஞ்சசன்னியத் தொனியை யெழுப்பினான்; ஆகாயம் பூமி திக்குகள் பிளக்கும்படியாகவும், ஓங்கிய அதிராநின்ற பேரொலியினால் நன்மையை யுண்டாக்குகின்ற தற்பதத்திற் கலந்த நன்மையை யுடைய பிரகலாதன மெல்லமெல்ல அறிவுற்றான்.—

௫௬. இதுவுமது

சைதன்யசத்தியானது பிரமரந்திரத்தினின்றும் பிரிந்து முன்னுள்ளப்ரகாரம் நாடிகளினால் எவ்விடத்துமமைந்து கலத்தலை யுற்றனவாய் நவத்துவாரங்களிலும் பொருந்த பராபரத்தை யறிந்த பிரகலாதனது அறிவுண்டாயிற்று.—

௫௭ இதுவுமது

அறிவுண்டாய் உள்ளிற் பிராணனென்னும் கண்ணாடியின் சாயையாகப் பிரதிபலித்து விடய வஸ்துக்களைப் பார்த்து, அவ்வறிவானது வேறான விடயத்தில் பிரிவற்றமுகமானது, கண்ணாடியினால் இரண்டாதலை யடைந்ததுபோல, மனக்குணத்தையடைந்தது.—

௫௮. இதுவுமது

அற்பமாக மனது முளைத்த மாத்திரத்தில்,முகைவிரிந்தநீலோற்பலத்தைப்போல, அழகிய கண்கள் மெள்ள விழித்தன. நிற்பதாகியிருக்கின்ற நரம்புகளிலும், இந்திரியங்களிலும், உணர்வுகணிறைய நல்ல பிராணவாயுவு மபானவாயுவு மெங்கு நடந்தன.—

௫௯. இதுவுமது

அமைதியான தென்றற்காற்றி லகப்பட்ட தாமரைப் பூவைப்போல, பிரகலாதனசைந்தான்;

---

¶ இ-ம் சீவன்முத்தனான பிரகலாதன்விதேக முத்தியை யடைந்தாற் பரமேஸ்வரனியதி தவறிப்போமென் றாலோசித் தவனெப்போதுஞ் சீவன்முத்தனா யிருக்கும்படி மனதிற் சிந்தித் தவனிருக்குமிடத்துக்கெழுந்தருளினா ரென்பதாம்.

இமைநேரத்தினுள் மனது தடிப்புண்டாய் தெரிகின்ற கண்ணும், மனமும், பிராணனும், சரீரமும், ப்ரகாசிக்க, பெருமையின் மிகுந்த பிரகலாதன் அருள் வடிவமுள்ள விஷ்ணு காணும்படி ப்ரகாசித்தான்.—

சுO. சமாதியினின்றும் வெளிப்படல்.

விகசிதமாய் கண்கள் பார்த்தன; மனதும் பூரணமாக நிறைந்தது; அப்பொழுது அப் பிரகலாதனை விஷ்ணு வானவர் மிகுந்த கிருபையுடன் பார்த்து அனுக்கிரகஞ் செய்வார்; பரிசுத்தமான பிரகலாதனே? தேவேந்திரன் றுதிக்கின்ற உனது செல்வத்தை விரும்பிப்பார்ப்பாய்.‡— சரீரத்தைப் பார்ப்பாய், காலமல்லாதகாலத்தி லுனது சரீரத்தை விட்டுவிட நினைப்பதென்ன, பற்றுதலும் விடுதலுமாகிய சங்கற்பமானது வளராதவுனக்கு, அபாவமும் பாவமும் சரீரத்திற் றொடர்ந்தால் குறைவென்ன, சமாதியைவிட் டெழுந்திருப்பாய், பரிசுத்தமானபிரகலாதனே? சீவன்முத்திப் பதத்திலிருப்பாய்.— சீவன் முத்தனாகிய நீயிந்தச்சரீரத்தோடும் நீதியைக் காக்கின்றவனாய் சம்சாரபாரமில்லாமல் கற்பகளவு மிருக்கக்கடவாய். அக்கினியானதெரிக்க பன்னிரண்டு சூரியரெரிக்க சகமனைத்தும் கெடாமலிருக்க வீணாகமரண மடைவானேன்.-

சுக. சகச நிஷ்டையை யனுக்கிரகித்தல்.

சுஉ. சீவன்முத்தனுக்கு மரணஞ் சிறப்பன்றெனல்.

சுங. பெத்தனுக்கு மரணஞ் சிறப்பாமெனல்

ஆசையாகிய கயிற்றினால் கட்டுப்பட்டு வருந்துகின்ற அந்தக்கரணமானது அப்பாசமார்க்கத்திற் சென்று இளைத்து சம்சாரத்தைச் சுமக்கின்ற தொழிலினால் மனம் சஞ்சலமானவர்களுக் கல்லவா, தீமை பொருந்திய மரணமானது உலகத்திற் சிறந்திருப்பது.—

சுச. சீவன்முத்தனது ஆயுளேசிறப்பாமெனல்.

அகம்பாவத்தை நீக்கி ஓர் பற்றில்லாமல் சகலமும் சுகத்தைக்கொடுக்கின்ற சமத்துவமானவர்கள் ஆயுளே சுகமாம், மிகுந்த ராகமும் துவேடமுமில்லாமல் உள்ளே குளிர்கின்றவறிவினால் உலகங்களுக்குச் சாட்சியானவர்களுடைய ஆயுளேசிறப்பாம்.— பற்றுகின்றவனும் பற்றுகின்ற விடயங்களுமாகிய இவ்விரண்டும் சொல்லுகின்ற பந்தமாம்; அதறுபட்டபோது உபசாந்தமுண்டாகும், அவ் வுபசாந்த நிலையாக வடைந்தபோது மோக்ஷமென்னும் பெயராம். அந்த நிலையை நீயடைந்தபடியால் வெற்றியுள்ள வீரசிங்காசனத்தினிடத்தில் ப்ரகாசிக்கும்படியாய் இருப்பாய்.— ஒலியைச்செய்கின்ற சங்கத்தொனியினால் சத்திக்க, சுற்றமற்ற தேவர்கள் மங்கலத்தொழிலைச்செய்து துதிக்க, சீக்கிரத்திலிப்போது யானே உமக்கு மகா முடியைத்

சுரு. பட்டாபிஷேகஞ் செய்துக்கொள்ளெனல்.

சுசு. பட்டாபிஷேகஞ் செய்யத் தொடங்கல்

‡ இ-ம் சமாதியினின்றும் திரும்பினவனைச் சகத்திற் சர்வம் பிரமமயமாய் விளங்கா நின்ற நிரதிசயானந்தமான வுனது செல்வத்தைப் பாரென் றனுக்கிரகஞ் செய்தா ரென்பதாம்.

சு௭. பட்டாபிஷேகந் தரித்தல்.

தரிப்பன், கற்பகாலபரியந்தம் நீயரசாக்ஷிசெய்யக் கடவாயென்று அனுக்கிரகித்து,—மங்கலதீர்த்தங்களை கொண்டுவருகவென்று சொல்லி அபிடேகஞ் செய்வித்து, சங்குசக்கரத்தைத் தரித்திருக்கின்ற கரங்களினால் சுயமாக தேவர்குழாங்கள் தோத்திரஞ்செய்ய, அழகிய இரத்தினகிரீடத்தைத்தரித்து, விஷ்ணுவானவர் அசுரேசனான பிரகலாதனுக்கு இவைகளைச் சொன்னார்.—

சு௮. எப்பொழுதுஞ் சீவன்முத்தனா யிருக்கும்படியனுக்கிரகித்தல்.

அசைத்தற்கரிய மகாமேருவும் பூமியும், சூரியனும், சந்திரனுமாகிய விவர்கள் உள்ள காலங்களெல்லாம் அரசாக்ஷிசெய்து உயர்வாகக்கடவாயென்றனுக்கிரகஞ்செய்து, பொய்யாகிய மாயையினது ஒரு சிருஷ்டியானது மறைதலைப்போல க்ஷணநேரத்தில் மிகுந்த தேவர்கள் கூட்டத்தோடும் விஷ்ணுமறைந்தார்.¶—

சு௯. ஆத்மாவிற் கரைந்தமனம் எங்ஙனம் வெளிப்பட்டதெனின்.

என்று சொல்லி வசிட்டமுனியை இராமன்பார்த்து, அப்படிப்பட்ட வசுரர்களுக்கு இராசாவாய் மோக்ஷமடைந்த ஞானவான், அவனது மனம் உண்மையான பிரமத்தில் தன்மயமானபின்பு விஷ்ணுவினுடைய சங்கத்தொனியில் உண்டான தெந்தப்பிரகாரம்,—என்றுகேட்க,

௭0. மனதுருவநாசமாயருவத்தோடு மிலாபாலாபங்களின் றிச் சீவன்முத்தரிடத்திற்சுத்தவாசனையாகத்தங்கியிருக்குமெனல்.

இராகவருக்கு அரியதவமுடைய வசிட்டர் சொல்லுவார். அக்கினியில் வருக்கப்பட்ட விதையாமென்று சொல்லும்படி சுத்தவாதனையானது, சம்சாரபாரமில்லாத சீவன்முத்தர்களனைவர்க்கும், இருதயத்தினிடத்தில் சநநமென்னு முளையானது, திரும்பவில்லாததாகவே யிருக்கும்.—

௭௧. சுத்தவாசனையிருக்கின்ற கிரமத்தைபபோதித்தல்.

பரிசுத்தமாகியும்; பிரமமாகியும், தோற்றம்உண்டாதல்வுதாரமாகியும், சுத்தமான சாத்துவிதகுணத்தைப் பொருந்தி விட்டுவிடாமற் கலந்ததாகியும், பரிசுத்தமானஆத்துமத்தியானமயமாகியும்,ஓராரம்பமுமில்லாததாகியுமிருக்கின்றசுத்தவாதனையானது, எப்போதும் சுழுத்திவாதனையைப்போலச் சீவன்முத்தர்களிடத்திலிருக்கும்.-

௭௨. அடங்கியிருந்த சுத்தவாசனை வெளிப்படுமெனல்

ஆயிரவருடமானாலும் சரீரமானதிருந்ததானல் உள்ளம்மேவியிருக்கின்றதாகியஅச்சுத்தவாதனையானது,மிருதுவாக ஒருபக்கத்திலிருந்து சீரணத்தையடையாததாயுண்டாகும். மிகுந்த அவ்வசுத்தவாதனையினால் பரிசுத்தமான நன்மையையுடைய சீவன்முத்தர்கள்விழித்துக்கொள்வார்களென்று சொன்னார்.‡—

பிரகலாதன்கதை.

முற்றிற்று.

¶ இ-ம். வியதிப்படி இத்தேகத்தோடுஞ் சீவன்முத்தனுய்ச் சகசாநந்தாம் பதியாகச் சுகித்திருக்கும்படி யனுக்கிரகித் தெழுந்தருளினு ரென்பதாம்.

‡ இ-ம். சீவன்முத்தனது, பிராரத்த மனுபவிக்குநிமித்தம் பரத்திற்கலந்த மனது பரமாகவே வெளிப்படு மென்பதாம்

# காதிகதை.

## அவதாரிகை.

முன்கதையில் உபாசனாமூர்த்தி யனுக்கிரகத்திலுண்டான விசாரத் தாற் சுவானுபூதி ப்ரத்யக்ஷமாய்த் தன்னைத்தவிர சகமில்லையென் றறிந் ததையறிவித்து, இவ்வாத்மானுபவ முண்டாவதற் கிடரான மித்தையா மாயையைத் தரிசித்து அதைநீக்கவேண்டுமென்பதை யறிவிக்குநிமித்தங் காதிகதையை நிரூபிக்கிறார்.

---

**௧. மாயாவிசித்திர மறிவிக்கத்தொடங்கல்.**

சநநமரணமென்னும் நாமத்தையுடைய, இம்மாயை யினது பெருமையை முடிவுண்டாகச் சொல்லக் கூடாததாம். மிகவும் பெரிதாகிய தனது மனதைச் செயித்தால் நாசமாம்; அப்படியல்லாமல் மற்றொரு வகையினாலும் தள்ளக்கூடாது. சிறப்புள்ளவலிய சகத் மாயையின் மிகுதியிருக்கின்ற அதிசயந்தோற்றும்படி நினக்குச்சொல்லுங்காதையை, மறதியற்ற சித்தத்தை யுடையவனாய் கேட்பாயென்று, மனுகுலத்திறைவ னான ஸ்ரீ ராமனுக்கு வசிட்டமுனி சொல்லத்தொடங்கி னார்.—

**௨. காதிதவத்துக்காக மகாவிஷ்ணு ப்ரசன்னமாதல்.**

பூலோகத்தில் கோசலமென்னும் தேசத்தில் பிராமணசிரேஷ்டன் காதியென்று வழங்குகின்ற நா மத்தையுடையவன், ஒரு காரியத்தை மனதினினைத்து உறவினரைவிட்டு ஒருவனத்திற்புகுந்து ஒருதடாக சலமத்தியில் பொருந்தி அழகிய கண்டமட்டும் முழுக நின்று நல்லதவத்தைச்செய்து எட்டுமாதஞ்சென்ற காலத்தில், பெருமைபொருந்திய கிருபையினால் விஷ்ணுவந்து அக்காதியின்முன் ப்ரத்தியக்ஷமாய், உனதுகருத்தென்ன தருகின்றோமென்று சொல்ல வும்.—

**௩. மாயையைத் தரிசிக்க வேண்டல்,**

சலத்தினின்றுங் கரையில்வந்து காதியென் கின்ற தவத்தையுடைய பிராமணனானவன் நமஸ் கரித்து, உலகமென்னுமண்டலத்தில் அளவற்ற வாத் மாக்களுடைய இருதய தாமரையில் நீங்காதிருக்கின்ற பிரமமே! அச்சுதா! அநந்தனே யென் றன்பினாற் றுதித்து, நிச்சலமான பிரமத்திற் கலந்திருந்து பிறப் பிறப்பின் வடிவத்தினால் உலகங்களாய் சஞ்சலப்படா நின்ற வதிசயத்தை செய்வதாயிருக்கின்ற நீ படைத்த மாயஸ்வரூபத்தை தரிசிக்கும்படி யருள்வாயென்று,-

**௪. மாயையைத் தரிசித்ததை நீக்குவாயென் றருளியேகுதல்.**

பிராமணன் பிரார்த்திக்க, மாயையைக் காணக் கடவாய், நீ பார்த்தையேயானால் அதை நீக்கக்கடவா யென் றனுக்கிரகித்து, திருமாலானவர் கந்திருவநக ரத்தைப்போல மறையவும், பிராமணன், கருணாஸ்வ ரூபியை தரிசித்த சந்தோடத்தினால் எப்போது மகமகிழ்ச்சியடைந்து, அவ்வனத்தில் தவசுடன் சிறிதுநாளிருந்து, தானேயொருதினம் மனதில்,

விஷ்ணுவானவ ரருளிச்செய்த வாக்கியத்தைச் சிந்தித்து, தேனுள்ள தாமரைப்பூக்கணிறைந்த தடாகத்தில் மூழ்கும்படிசென்று,— தீர்த்தத்தில்மூழ்கி, அச்சலத்தில் செய்யப்பட்ட விதிப்படிக்கு வேதமந்திரங்களேயும், தியானங்களேயும், காதியானவன் மறந்துவிட்டு, பந்துக்களிருக்கின்ற தனதுவீட்டில், தன்னை வியாதியினல் மரித்தவனுகவும் பந்துக்களனைவரும் இரண்டுபக்கத்திலும் கூடிக்கொண்டு கதறவும், பாரியாள் காற்கடையில்விழுந்தலரவும், புத்திரவாஞ்சையையுடைய வன்னையானவள், தன்னியபானம்பண்ணக் கொடுப்பனபோலகட்டிக்கொண்டு அக்கினியை மிதித்தவள்போல பதைபதைத்துத் தளர்ச்சியடையப்பார்த்தான்.— இச்சமயத்தில், அதற்கடுத்த காரியங்களைச்செய்து அழாநின்ற வுறவினர்கள், அக்கினியை மூள்விக்க, சரீரமியாவும் சாம்பராகி மயானத்திற் பொருந்தப்பார்த்தான், அந்தத்தீர்த்தமத்தியில்இருக்கின்றகாதிதன்பனதிுள்குற்றம்பொருந்திய வருத்தமிகுந்த புத்தியினல் குற்றமற்ற தன்னிடத்தில்தன்னுவுண்டாகப்பார்த்த மயக்கம்பொருந்திய கிரியைகள், மேனடக்கின்றயாவையும், ஸ்ரீராமா! கேட்பாயென்று வசிட்டமுனி சொல்லத்தொடங்கினர்.— இந்தப்பூமியில் ஊணதேசத்தில் ஒரு நகரத்தின் முடிவில் இராநின்ற நீசனென்னும் நாய்க்கெரிப்பேர்கள் குலத்தில், கரியப்ரதமைபோன்ற வொருபெண்ணினது வயற்றிலொருகருப்பமாய் வருத்தமுற்றுவளர்ந்து சனிக்குமபருவம் வந்தபொழுது கைக்குழந்தையாகப்பிறந்து வளர்வுற்று, வெந்துபோன கரிக்கட்டையைபோலநிறத்தையுடைய ஆண்மகனுய், இழிவிற்றனக்குத்தானே சமானமாகி, நாய்க்கெரிப்போருடையவமிசத்தில்பிறந்த வொரு நீசப்பெண்ணை கலியாணஞ்செய்தொற்றுமையானுன்.- மலைகளிலும், வனங்களிலுமுதலிய எவ்விடத்திலும் மனதும் பிராணனும்போல் ஒத்துவாழ்கின்றகாலத்தில், பூமியின்மேல் தனதுவமிசம் விளங்கும்படி பிள்ளைகளைப்பெற்றுன். சிறுதுநாளில் மூப்புவந்தடைந்துநரைமிகவுண்டாகவும், தழையாற்செய்த வீடு தூரத்திற் கட்டிக்கொண்டு மகா தபசிகளைப்போல அதில் வசிக்கின்றகாலத்தில், தனது பிள்ளைகளுக்கும் மூப்புவந்து பொருந்திற்று.— பாரியாளுக்கும் பிள்ளைகளுக்கும் தனக்கும் ஒருமித்து மூப்புவந்ததைப்பார்த்து வருத்தப்படுகின்ற காலத்தில், தன்னை நீங்கலாக எல்லாரையுங் காலன்கொல்ல, எப்பொழுதும் வாய்விட்டழுது தனிமையிலிருப்பதைச்

(ரு. மாயையைத் தரிசித்தல்.)
(சு இதுவுமது.)
(எ இதுவுமது.)
(அ இதுவுமது.)
(கூ. இதுவுமது.)

சகிக்கமாட்டாமல் நினைவுகெட்டு ஓராசையுமில்லாத
ணுய் அளவற்றதேசங்களில் வெகுகாலஞ் சுழல்கின்ற
வன், கீரமென்கின்றநீதியையுடையதேயத்திலோரரச
னது ஓர் பட்டணத்திற்புகுந்து, விண்ணுலகத்திற்
சொன்னமயமானவீதியைப்போலிருக்கின்றவொருவீதி
௬0 மாயையைத் தரிசித்தல் யிற் செல்லும்போதில்,— இந்நகரத்தரசன் மரண
மடைந்தனன். பூமியையிரக்ஷிக்க வேருேரரசனை
எடுத்துக்கொண்டுவரத்தக்கதாக வழக்கப்படிசொன்
னங்களிணுலும்நிறைந்தஇரத்தினங்களிணுலும், அலங்
காரஞ்செய்து அனுப்பிய பட்டத்துயானையானது,
அரசனுரென்று தேடிக்கொண்டு நேரேவர, கறுத்த
வுருவத்தோ டிருக்கின்ற இந்தநீசனை அந்தயானை
பார்க்கவும், அதிக்கையினுன் மத்தகத்திலேற்றிக்
கொண்டு சூரியனேடுஞ்செல்லுகின்ற உதயமலைக்
௬௧ இதுவுமது கொப்பாய் பலவாத்தியங்கள்சூழ,— எட்டுத்திக்கு
களும் சயசயவென்று வணங்கும்படி வந்தவனை, இவ
னே அரசனென்று அழகையுடைய ஸ்திரீகள் அலங்
காரஞ் செய்தார்கள். பழயமந்திரிகளும் சேனதிபதி
களும் பணியைத்தலைமேற்கொண்டார்கள். பூமிபால
ணுய் பூமியெங்கும் நீதியை முறைமையிற்செலுத்தி
முறைமையினுல் கவலனென்கின்ற வளப்பமுள்ள
நாமந்தரித்து, கோவப்பழத்தையொத்த வதரத்தை
யுடைய மாதர்களிச்சிக்கும்படி, கீரதேசத்தில்
விளங்குகின்ற இரத்தினசிம்மாதனத்தின்மேல்விளக்
௬௨ இதுவுமது கத்தின் மிருந்தான்.— இப்படிஎட்டுவருடம்மேலான
கவலனென்னு நாமத்தையுடைய நாய்க்கொிக்கு நீச
ணைவன் நரேந்திரனுக வாழ்ந்துவருகையில், ஒரு
தினத்திற் றனித்தவனுய்சரீரத்திலுள்ளவாபரணங்க
ளணைத்தையுநீக்கி, தானே கால்நடையாக வீட்டினது
தெருப்புறத்தில் நீசவேடத்தோடு முலாவுஞ்சமயத்
தில், அவ்விடத்தில் கரியநிறத்தையுடையவர்கள்
வீணுகானத்தை நிறைக்கின்ற கையையுடையவர்கள்
நாய்க்கொிக்குஞ்சண்டாளர்கள் எதிரேவந்தார்கள்.—
௬௩ இதுவுமது அவர்களிலொப்பற்றகரியநிறத்தையும் சிவந்தநேத்
திரங்களையுமுடைய மூப்புள்ளவன்வந்து, விளக்க
முடைய நல்ல கீரநாட்டுக்கதிபதியானவனை பார்த்த
மாத்திரத்தில், ஆசையோடும் கடைஞ்சனென்கிற
விதியினுலுற்ற பழையநாமத்தைச் சொல்லி, பழைய
வுறவாயிருக்கின்ற நீ எங்கேபோனுய்! வாசஞ்செய்வ
தெவ்விடம்! நல்லவூழினுல் இப்பொழுது பார்த்தே
னென்று இவன்வம்சத்தின் கிரமங்களனைத்தையும்
௬௪ இதுவுமது உள்ளப்பிரகாரம் தெளியச்சொன்னுன்.—தனது நீசத்

தன்மையைச் சொல்லிய அந்த நீசனை, கவலனென்னு மன்னனானவன்நிந்தித்துப்பெருஞ்சத்தத்துடனதட்டி அவ்விடத்தினின்றும் சீக்கிரமாக அந்தப்புரத்துக்குச் செல்லுதலும், இவைகளனைத்தையும் கனம் பொருந்திய குண்டலத்தையுடைய இராச ஸ்திரீகள் பலகணி வாசலினின்றும் ப்ரத்தியக்ஷமாகப் பார்த்து, அதிசயத்து, அவ்விடத்திருந்த மந்திரி முதலியவர்கள் நின்றவிடத்திலேகண்டு, பூமிக்கரசனான இவன்கடையனாகிய சண்டாளனாகும், மேலென்ன செய்யத்தக்கது என்று திடுக்குற்று ஏக்கமுற்று துன்பத்தை யடைந்தார்கள். இவ்வரசன் கலங்காமல் மனதிற் சிந்தித்து.-

௧௫. மாயையைத் தரிசித்தல்.

அவைகளனைத்தையும் அறியாதவனைப்போல மறைத்துகொண்டு முன்னையைப் போல சிம்மாதனத்திலிருக்கவும்; அவ்வரசனை முன்ன நெருக்காகிய மாதரும், அமைச்சரும், மற்றுள்ளவர்களும், பரிசிக்கக் கூடாத பிரேதத்தைப் போல பார்க்காதவர்களாய், அவ்விடம்விட்டு நீங்காமலிருந்தார்கள், அந்தச் சனங்களோடு கூடியிருந்தும் வேற்றுமையாகி இவன்றனியேயிருந்த குணத்தைச் சொல்லில், அறிவு நிறைந்த வித்தையும் திரவியமும் எதுவுமில்லாமல் மறுதேயத்தில் பொருந்திய வழி நடப்பவனைப் போலுமாம்.—

௧௬. இதுவுமது

அத்தருணத்திற் சகலரும் புலையனாகிய நாய்க் கெரிப்போனென்பவனால் வெகுநாள் பாவத்தையே யடைந்தோம்; பாவம்போ யினிமேலொரு பிராச்சித்தத்தினாலும் கதியை யடையமாட்டோம், பரிசுத்தமாகும் பொருட்டு அக்கினியிற் ப்ரவேசிபோமென்று நிச்சயஞ்செய்து, அப்பட்டணத்திலுள்ள சகலரும் குழந்தைகள் முதலாக வார்த்திகர்கள் பரியந்தம் ஒருமிக்கக் கூடி, சண்பகப்பூவில் மொய்க்கின்ற ஞிமிறுகளைப் போல, அக்கினியிற் ப்ரவேசித்தார்கள். அரசனாகிய சண்டாளன் மிகவுந்துன்பமுற்று,—

௧௭. இதுவுமது

நன்மையான கூட்டத்தைச் சேர்ந்தத்தினால்மனந்தெளிந்துநன்மையுண்டானநாய்க்கெரிக்கின்றநீசராசன்சிந்திப்பான். கீழ்மையான நமது தொடர்ச்சியினால் இந்தத்தேயத்திலுள்ளவர்கள் கீழ்மக்களாகி அக்கினியிற் பிரவேசமாய் நாசமடைந்தார்கள்; துன்பத்தோடும் இனியிருந்தென்னவென்று,சிந்தித்து உயிரைவிடும்படி நிச்சயித்து அக்கினியிற் ப்ரவேசிக்கும்போது,அனலிற்பட்ட தளிரைப் போல சிவந்த வக்கினியானது கடைஞ்சன் சரீரத்திலெரிக்க, சலத்தின் முழுகியிருக்கின்ற காதியின் சரீரமானது பதைபதைத்தது.-

௧௮ இதுவுமது

மகாமாயையினின்று நீங்கி தெளிந்த காதியானவர்நான்குகடிகையில் மயக்கநீங்கி,

நாமார், என்ன பார்த்தோம், என்னசெய்தோமென்று சகலத்தையு மனதினினைத்து, நீரினின்றுங்கரையேறி, அம்மா! இப்படியல்லவா சீவர்களனைத்தும், காட்டினில்ளிருக்கின்ற கோபமுள்ள வியாக்கிரமத்தைப் போலவோடி, குற்றநிறைந்த பிராந்தியில் மனமயங்கி சஞ்சலப் படுகின்றாரென்று நினைத்து, துன்ப நீங்கினன்.¶— அந்த நினைவோடும் சிலதுநாட் கழித்து ஆச்சிரமத்துளிருந்தான். அவ்விடத்தில் ஓரதிதிவர, மிகுந்த மகிட்சியோடும் தேனும் பழங்களும் விருப்பத்துடன் புசிப்பித்து, சூரியாஸ்தமனமான சந்தியா காலத்தில் தங்கணியமங்களைச்செய்து, தகைமையான சயனங்களைச்சேர்ந்து, இரண்டுபேர்களும் ஆத்மஞான சாஸ்திரங்களிலுள்ளகதைகளை பேசுகின்றசமயத்தில், கூடச்சயனித்திருக்கின்ற அதிதியை காதி முனியானவர் பார்த்து, உத்தமமாகிய முனியே? உனது சீர முலர்ந்து தளர்வடைந்ததென்ன,— என்று கேட்ட காதிமுனிக்கு அதிதி சொல்லுவார். இப்பூமண்டலத்தில் வடதிக்கில் செல்வம் விளங்கிய தெளிவான புகழையுடைய கீரமென்கின்ற தேயத்தில் அன்புள்ளவர்கள் விரும்ப நாளொரு மாதமிருந்தேன், சிரமந்தீர யான் வசிக்கின்றவூரில் ஒருவனென்னிடத்தில் வந்து சொல்லுவான், இந்த நாட்டுக் கிராசாவாய் இந்தவூர் றுபட்டுப் போகாமல் எட்டுவருடம் இவ்விடத்தொருவன் அரசபோக மனுபவித்து, பின் பவனது நாய்க்கெரிக்கு நீசனென்கின்ற மரபு தெரிய.— அவ்வரசன் அக்கினியிற் ப்ரவேசித்து மரணமடைந்தான். அவ்விடத்தில் பிராமணர்கள் அக்கினியிற் ப்ரவேசித்திறந்தார்கள்ளத்தன்மையென்று சொல்வேன்!என்று சொல்லக்கேட்டு, அத் தேயத்தை விட்டுப்போய் அலைகளையுடைய தேவதீர்த்தமான பிரைகையென்னு நதிதீரத்தில் அப்பாவத்தை நீங்கும் பொருட்டு, தனக்குத்தானே சமானமான வேத விதியினால் பிராச்சித்தங்கள் செய்து ச்தராயண விரதஞ் செய்திளைத்தேன்.— இப்படியென்று அதிதி சொல்லவும், காதிமுனி நமது சரித்திரமிதுவென்று தனது தனிமையான மனதிலாச்சரிய மிகுந்து, தனக்குள்ள நீசனடையாய் விரும்பி, முன்விளங்கிய வியல்பைக் காண முன்னுள்ள தேசங்களை நீங்கிப்போய் ஊணமண்டலத்திற் புகுந்து, தான்பிறந்து வாசஞ்செய்த விடங்கடனைத்தையும்பார்த்து.—முன்பு தான்பார்த்த

கக. காதிமுனி கண்ட சாக்கிர சொற்பனந் தீர்க்க சொற்பனமாயறிவிக்கு நிமித்தம் வந்த அதிதியை வினவுதல்.

உ0. முனிவினுவுக்கதிதி யுத்தரங் கூறல்.

உக. இதுவுமது

உஉ. முனியானவர் நீசனுய்ச்செனித்த விடங் காண்டல்.

உ௩. முனியான

¶ இ-ம் காதிமுனி ஈஸ்வரானுக்கிரகத்தினன் மாயைநீங்கும்பொருட்டதன் முற்கடனுகடனு சாமர்த்தியத்தைத் தரிசித்தாரென்பதாம்

வர் நீசனா யரசுசெய்தவிடங் காண்டல்.

வண்ணம் சகலத்தையுங்கண்டு, நெருங்கிய சடாமகுடத்தை மிகவுமசைத்து மனதிலதிசயித்து பிரமதேவனது நானாவிதமான தொழிலைப்பார்த்தும் மேனடந்தான், அந்தவூணமண்டலத்தைக்கடந்து அழகுவிளங்கிய கீரநாட்டைநெருங்கிவந்து தான் முன்னரசுசெய்த சகலத்தையும் குறைவில்லாமற் கண்டுகேட்டுமுணர்ந்தான்.†—

௨௪. சாக்கிரசொற்பன மானது சாக்கிரமாயினதை விசாரித் தங்கனந் தோற்றிவித்த மாயையை நீக்கி ஞானமடையு நிமித்த மூர்த்தி யுபாசனை செய்தல்.

முன்சொல்லிய விஷ்ணுவானவர் எமக்குத்தெரிவித்த மகாமாயையானது இதுதானோ ஆச்சரியமானவிதை அறிவினால் நன்றாகத்தெரிந்தனனென்று நினைத்து, சீக்கிரமாக அத்தேசத்திலிருந்து நீங்கி பெரிய மலைச்சார்பில்வந்து ஒப்பற்றதவத்தையுடையவன், ஒரு உள்ளங்கைதீர்த்தம் புசிப்பாகி விஷ்ணுசந்தோஷிக்கின்ற அரியதவத்தைச்செய்தான்.

௨௫. மூர்த்திப்ரசன்ன மாய்மாயையைத்தெரிவித்தோம் மேல வேண்டியது இயாதென்று வினாவுதல்.

ஒருவருடஞ் சென்றமாத்திரத்தில் அந்த மலையினதுபக்கத்தில் அரியதவத்தையுடைய காதியினாச்சிரமத்தில், நெடுமாலானவர் நீலமேகத்தைப்போற் ப்ரத்தியக்ஷமாய் மிகுந்த தவத்தையுடைய காதிமுனியைப்பார்த்து, இவ்வண்ணமாக நிறைந்த வெம்முடைய மாயையினது மகிமையை சுபாவமாகப்பார்த்தாய், இனிமேல் வேண்டுவதென்ன? மலையிற்செய்கின்ற மெய்யானதவம் இயாது நிமித்தமென்று கேட்க,—

௨௬. சாக்கிரசொற்பனஞ் சாக்கிரமானவந்தரங்கம் இயாதெனமுனிவினாவுதல்.

தோத்திரஞ்செய்து வணங்கி நமஸ்காரஞ்செய்து கரியவுயர்வுள்ள மேகத்தைப்பார்த்து பூரித்த சாதகப்பக்ஷியைப்போல மகிழ்ச்சியையுடைய காதிமுனியானவன், அழகிய கிருபாதிருஷ்டியையுடைய விஷ்ணுவைப்பார்த்து, நியமித்து நீகாட்டிய கன்மாந்தகாரமான மாயையை ப்ரகாசமாக இப்படிப்பட்டதென்றறிந்தேன்; வரையறுத்தறிந்த வந்தமாயையினது, அந்தரங்கத்தை யானறியவில்லை; பிராந்தியானது சத்தியமானதென்னவென்றுகேட்டான்.—

௨௭. மாயையின் அந்த ரங்கத்தைப் போதிக்கத் தொடங்கல்.

விஷ்ணுவானவர் அதற்குச்சொல்வார். பிராமணா? இப்பூமிமுதலிய சகலமும் மனதினிடத்திற்பொருந்த இருப்பதேயல்லாமல் புறம்பிலிருப்பது ஒருகாலத்திலுமில்லாததாம். காரணமில்லாதசொற்பனமும், பிரமையும் மதமுமுதலாகிய மார்க்கங்களிலியாவரும் ஒழுங்காகப்பார்த்து அனுபவிக்கின்றார்கள், சித்தத்தினுள்ளே சகமிருப்பதாம்.¶—

௨௮. இதுவுமது

அளவின்றிப் பறந்

† இ-ம் முனியானவர்கண்ட சாக்கிரசொற்பனத்தைச் சாக்கிரமாக வதிதி சொல்லியதைக் கேட்டு அதை ப்ரத்தியக்ஷத்திற்பார்த்திதுதான் மாயாவிசித்ரமென்றறிந்தாரென்பதாம்

¶ இம் மயக்கத்திற்றோற்றிய ப்ரபஞ்சஞ்சத்தியமாகத் தோற்றினதை யறிவிக்கு நிமித்த மித்தையானமனமே ப்ரபஞ்சமாமென்றறிவித்ததாம்

திருக்கின்ற சகக்கூட்டங்க ளனைத்தும், தளர்வில் லாமல் அமர்ந்திருப்பதற் கிடமான மனதில், இக் கடையனான நீசத்தன்மையை வெளிப்படுத்தினால், இதி லதிசயமென்ன, மிகுதியான பத்திப்பாச்சலின் ப்ரதிபாமாத்திரத்தின் வசத்தினால் கடையான நீசத் தன்மையை அறிந்துளதாம்; முன்பு தொடர்ந்து வந்த அதிதியும் அந்தப்ரகாரமே மயக்கங்களனைத் தையும்பார்த்தான்.— பார்த்த வந்தப்ரகாரமேநாய்க்

உகூ. மாயையின் அந்தரங் கத்தைப் போதிக்கத்தொட ங்கல்.

கெரிக்கு நீசத்தன்மையை, காகதாலீய சம்பந்தத் தினால் வண்டுகள் வாசஞ்செய்கின்ற ஊணமண்டலத் தங் கீரமண்டலத்து முள்ளவர்களுடைய மனதிலும் பத்திபாய்ந்துள்ளது, எண்ணுகின்ற விரண்டு பத்தி பாச்சலும் ஏககாலத்தில் அளவற்றபெயர்களுக்கும் முன்னேதோற்றும், சொல்லப்பட்ட மனத்தன்மை யானது காகதாலீயஞாயத்தைப்போல அதிசயமான

கூO. இதுவுமது

நடையாம்.— அப்படியல்லவா: ஒரு சொற்பனத் தையே அளவற்றமனிதர்கள் தனித்தனிபார்ப்பார்கள் கைவசமான வொரு விளையாட்டினால் குழந்தைகள் பலர்களிப்பார்கள், சொல்லிய கடைஞ்சனாகிய அந்த நீசனானவன் ஊணமண்டலத்திலுள்ள அழகிய வீட் டில் தவறாமலக்குறிப்பினால் அந்தப்ரகாரமே முன்

கூக. இதுவுமது

னே பிறந்திருந்தான்,— அக்காரணத்தினால் உறவின ரனைவரு மரணமடைய அயலான நாட்டை யடைந் தான்.;வெண்கொற்றக்,கொடைநிழலைச் செய்ய கீர மண்டலத்தில் இராசாவாகி பின்பக்கினியிற் ப்ரவே சித்து, உத்தமமான உன்மனதில் வினைகளிணைக்கின்ற சம்மந்தமா யிருக்கின்றவதனால் நீசனியல்பானது அந்திப்ரகாரமாக ப்ரதிபலித்தது.‡— இவனென்றும்

கூஉ. இம்மாயை யின் மயங்கினவர் கள் அஞ்ஞானி யென்றும் மயங்கா தவர்கள் ஞானியெ ன்று மறிவித்தல்.

அவனென்றும், நானென்றும், இதுவென்றும், அது வென்றும், எனதென்றுஞ் சிந்திக்கின்ற அறிவில்லா தவர்கள் துன்பத்திலழுந் துவார்கள்; பூமி முதலிய வனைத்தும் யாமென்கின்ற வுண்மையை யறிந்தவர்கள் துன்பப்பட்டுத் தளர்ச்சியையடையார்கள்; பூமியில்

‡ இ-ம். சகலகற்பனையும்வைத்திருக்கின்றமனம்ஓர்காலத்திலொன்றைவெளிப் படுத்தி லதிலென்ன வியப்பென்றும். காகதாலீய ஞாயத்தைப்போல வுன்மனதல நீசத்தன்மை பத்திபாய்ந்தபடியேயதிமனத்தினுங் கீரமண்டலத்தார் மனத்தினும் ஏககாலத்திற் பத்திபாய்ந்தபடியால் விசித்திரமாகக் காணப்பட்டதென்றும்,அநேக ரொரு சொற்பனங் கண்டதுபோலச் சொல்லப்பட்டயாவருமேககாலத்திற்றீக்க சொற்பனமென்னு முனது நீசப்பிறப்பையு மரசாக்ஷியையுமக்கினி ப்ரவேசத்தை யுங் கண்டார்களென்றுஞ் சொற்பனங்கண்டதொருவன் ஏகதேசத்திற், சாக்கிரமா யக் காணப்படுவதுபோலவுனக்குத் தோற்றின சாக்கிரசொற்பனஞ் சாக்கிரமாகத் தோற்றினதென்று மறிவாயென்பதாம்.

நிறைந்த வஸ்துக்களில் வேற்றுமையுள்ள மனதினால் பாவனையோடு புத்தியிற் பொருத்தமாகி அதில் ஆசையை யடையமாட்டார்கள்;இவ்வஞ்ஞானிகளின் மயக்கத்தில் தத்துவஞானத்தை யறிந்தவர்கள் வருத்த மடையார்கள்.— ஞானமானது, பூரணத்தையடையாததினால் மனதில்பொருந்திய மயக்கத்தைப்பார்த்து; இழிவென்றுதள்ள வறிந்தாயில்லை; இதனாலிம்மயக்கத்தில் க்ஷணத்தில் நீ மிகவு மமிழ்ந்தினாய். இம் மிகுந்தமோகமென்னுஞ் சக்கரத்துக்கு மனதேயச்சாகும்; அம்மனதை விவேகவல்லமையினாற் கெடுக்கில் அம்மாயை வருத்த மாட்டாது.¶— நீயெழுந்திருந்து மலையின்குகையினிடத்தில் பத்துவருடம் தவத்தைச் செய்தால், பூரணமாய் முடிவொன்றுமில்லாதமெய்ஞ் ஞான முதிரக்கடவாயென் றனுக்கிரகஞ்செய்து, பின்பு விஷ்ணுவானவர் வணங்குதற்குரிய தோற்ற மானவடிவம் எழுந்தவிடத்தின்மறைந்துபோக துன் பம்பொருந்திய மயக்கங்கள் விடுபட்டு, குற்றமற்ற காதிமுனியானவர், கற்பனைகளனைத்தையும் பற்றில்லாமற்கெடுத்து, அரியதவத்தைச் செய்தார்.—பத்து வருடத்தில் ஞானத்தாற் பூரணமானவனாய் வாழ்ந் தான்; பின்பு தன்னதான ஒப்பில்லாத சற்பாவத்தை யடைந்து மேலானவனாய் அச்சமும், துன்பமுநீங்கி அனுபவிக்கின்ற போகத்தில் இச்சையில்லாமல் உள்ளப்ரகாரமாய், எப்போதும் ஆநந்தமே ஸ்வரூபமாகிய சீவன்முத்தியை யடைந்தவனாய் விஸ்ராந்தியடைந்து, பூரணச்சந்திரனைப்போல மனது பூரணமானான்.*—

ருரு. இம்மாயையின் மயங்கினவர்கள் அஞ்ஞானியென்றும் மயங்காதவர்கள் ஞானியென்று மறிவித்தல்.

ருசு. தவஞ்செய்யினிம்மாயை நீங்கிஞான முதிக்குமென்றனுக் கிரகத் தேகுதல்.

ருஎ. ஞானமடைதல்.

காதிகதை
முற்றிற்று.

---

# உத்தாலகன்கதை.

## அவதாரிகை.

முற்கதையில் மனோரூபமான மாயையைத்தரிசித்ததற்குக்காரணமான பிரமத்தைத் தரிசிக்கிற் சகமில்லவே யில்லையென்று சொல்லி, இவ்வனுபவ மாத்மவிசாரஞ்செய்தபடி சமாதிகூடியதனால்நவநவமாயனுபவிக்கு நிரதிசயானந்தத்தையறிவிக்குநிமித்தம்உத்தாலகன்கதையைநிரூபிக்கிறார்.

¶ இ-ம் மாயாரூபமான மனதைக்கெடுக்கி லஃது கெடுமென்பதாம்.
* இ-ம் சமாதியின்கண் ணுதிக்கு மனோவிசித்திரத்தைப்பார்த் தஃதை யதின் காரணமான சைதன்யத்திற் கரைக்க வச் சைதன்யமொன்றே ப்ரகாசிக்குமென் றறிந் தாநந்தித்ததனாற், பூரணமானா ரென்பதாம்.

க. மாயையானது ஸ்வானுபவமில்லாதவர்களை வருத்துமென்றறிவித்தல்.

இந்தப்ரகாரமே இந்தமாயையானது, மிகவும்விஸ்தாரமாய் சயித்தற்கரியதாய் உயர்ந்து, தாழ்ந்து, கொரடிய பகாமயக்கங்களை உண்டாக்கி பிரமத்திற்பொருந்தியிருக்கும். அந்தப்ரகாரத்தினல் சொல்லுகினறேன், சதாகாலமும் பிரமஸ்வரூபத்தை யடையாதவர்களை, சமுத்திரத்தைப்போல வருகின்ற துன்பத்தில் இந்த மாயையின்குணமானது அழுத்திவிடும்.-

உ. மாயாநாச வுபாயமானது மனோநாசத்தைத் தவிர வேறின்றெனல்.

மனோசய மாத்திரமான தெய்வமருந்தாலன்றி சநநமென்னுங் கொடியவியாதியானது சத்தியமே, மற்றெந்த முயற்சியினுலும் நீங்காது. சற்குணத்தின்மிகுந்த ஸ்ரீராமா? கிரமமாகவைத்த வர்த்தமானகாலத்தில் க்ஷணத்தில் வன்னுச்சிரம கிரமமாக வருகின்ற தொழிலை புறம்பிற்பிடித்து, வராநின்ற வருங்காலத்தையும், சென்றகாலத்தையும், மனதில்லாதவர்கள் உள்ளே நினைக்கமாட்டார்கள்,— சங்கற்பத்தையும் ஆசையையும், போனதை நினைப்பதையும் க்ஷணந்தோறும் ஒழிப்பாயானுல் கேடுற்ற மனோலயமானது அதுவேயாகும்; மனோநாசத்தைப் பொருந்துகின்ற ஞானமானது பிரிவில்லாத ப்ரயாகாத்மஞானமாம்; அந்த ஞானத்துக்கு மனோபாவமென்று சொல்லுவது அவ்விடத்திலில்லாமல் இயல்பையுடைய தாமாதலினுல் மனோவிகற்பமானது இல்லாமற்கெடும்-

ங. மனோநாசவுபாரம் ப்ரத்யாகாத்மஸ்வரூபதெரிசனத்தைத்தவிரவேறின்றெனல்.

ச. ஆத்மதரிசனத்துக்குபாயஞ்சுருதி குருவாக்கியத்தில் மனதைச் செலுத்துதல்.

மனோபந்தமானது, முழுது நீங்குதலே மறைவில்லாத உண்மையும், மேலானசிவமும், பிரமாவத்தையும், சர்வக்கியத்துவமும், பூரணாநந்தமும், களங்கமில்லாததுமாம். பொருந்திய வஞ்ஞானத்தைக் கெடுத்து திடவுச்சாகத்தினல் நிச்சயமாக குற்றமற்ற சற்புருடர்களிடத்திலும் குற்றமற்ற வாத்மஞான சாஸ்திரங்களினும் எப்பொழுதும் மனதைச்சேர்த்து.— சதாகாலமும் சொல்லுதலும், விடுதலும், பற்றுதலும், கண்மூடுதலும், கண்திறந்தலுமாகிய சகலதொழில்களையுஞ் செய்தும், சிந்தனையில்லாத ஆநந்தத்தையுடையவனுய் சற்சின்மாத்திரபரனுககுழந்தாய்? வாழக்கடவாய்? களங்கமாகிய திரிஸ்யத்தைநீங்கி, மனதின்களங்கத்தைக் கெடுத்து ஆசாபாசமென்னும் கோரையையறுத்து உனதாத்மஞானத்தில்பிரமஸ்வரூபனுயிருப்பாய்.— சுபாசுபமாகிய சங்கேதமான பொருள்களில் இச்சையென்கின்ற விடுசிகாவியாதியை பொருந்ாதவனுய் சலனம்பொருந்திய இராகத்துவேடமில்லாமல், ஞானரசமான பிரமமே தானுகவாழ்வாய். கணக்கின்றி நான், இவன், அவன், இது வதுவெனதென்று சொல்லுவதாகிய வாதனைகளைக்

ரு. அதனுல் விடய விச்சையைக் கெடுத்தாநந்தபோதமாவாயெனல்.

சா. அபேத திருஷ்டியினுற் சமாதிகூடிச் சின்மாத்திர மாவாயெனல்.

கெடுத்து, பிரம மொன்றேயென்று ப்ரகாசிக்கின்ற நிட்டையில் விஸ்ராந்தியடைந்து சற்சின்மாத்திர பரனுக ஸ்ரீராமா? நீ நிலையாக வாழ்வாய்.— என்னனும் அன்னியருதென்றுஞ் சொல்லப்பட்ட நினைப்பறும்படி உலகத்தின்கண் துவிதமிறந்து, அத்துவிதமாய் கனமுள்ள வயிரஸ்தம்பத்தைப் போல ஆத்மஞான ஸ்வரூபத்தைப் பிடித்து அந்நிலையைத் தரிசித்திருப்பாய். பாவமின்மையுடன் மாசின்மையாய் பூரணமாகிய தனது ஞானத்தில் பொருந்துத லெப்போ துண்டாகுமோ, அப்பொழுதே பிறவி மயக்கத்துக்கு மூலமாகின்ற பேதமானது நீங்கிப்போம்.— பேரானந்த விரசத்தின் நிலையினுடைய சுபாவத்தைப் பார்ப்பாய்; பின்பு நிற்கின்ற வருதற்கரிய நல்ல தேவாமிர்தமானது, வந்து பொருந்தினும் உயிரைப் பிரிக்க வரா நின்ற நஞ்சுக்கு சமானமாம் சோர்வில்லாத உண்மை ஞான முடைமையானது மனமானது பருத்து நெருங்குமானல் தூரமாகும்; கறுத்த மேகமானது சூழும்படி மறைக்கில் பூரணசந்திரன் கண்ணுக்குக் காட்சி யுண்டாகுமோ.§— தேகமட்டும் இச்சையையுடைய புத்தியினுல் தானல்லாத வனுத்மாவை ஆத்மாவென்று அன்பு பொருந்துவதால், புத்திரர்களும் இல்லாளுமாகிய சம்சாரமென்கின்ற நினைப்பினுல் மனமானது வளரும்; விஸ்தாரமாகின்ற அகங்கார வேற்றுமையினுல், மமதையான களங்க விளையாட்டினுலும் உரித்தான ஈதெனதென்கின்ற பாவனையினுலு மனமானது வளரும்.— ஆதி வியாதியினது விஸ்தாரத்தினுலும் அவைகள் மாறி சம்சாரத்தில விசுவாசித்துத் தங்குதலினுலும், நீங்குதலுக்கும், பிடித்தலுக்கும், இலாபமான வெத்தனத்தினுலும், சநநங்கடோறும் குழந்தையான ஸ்ரீராகவா? மனமானதுவளரும்.ஸ்திரீகள், இரத்தினங்கள்.திரவியங்கள் முதலானவைகளி லுண்டான ஆசையினுலும், இலாபத்தினுலும், வராநின்ற வுலோபத்தினுலும், வருகின்றகாலத்தில் இவைகள் நல்லனவாம், இந்நன்மையினுல் மனமானது, பெருத்து பூரிக்கும்.¶— துராசையென்கின்ற பாலைப்புசித்து பழமையான போகமென்கின்ற வாயுவினுல், தொடர்பான பலமுண்டாய் இச்

எ. சின்மாத்திர தரிசனமான போதேபவத்தைக்கொடுக்கும்பேத நீங்குமெனல்.

அ. பேதரூபமானமனந்தடிக்கா விடிற்பேரானந்த முதிக்குமெனல்.

கூ. மனந் தடிப்புற்ற தறிவித்தல்.

கo. இதுவுமது.

கக. பஞ்சவிடயங்களாற் பருக்கின்றமனம்ஃது கெடி

§ இம் மாயைக்கு மூலமான மனதைக்கெடுக்கி லப்பொழுதே சச்சிதாநந்தமாய் விளங்குவா யென்பதாம்.

¶ இ-ம். தேகோகமுதலிய வகம்பாவத்தினுலுண்டான வாதி வியாதி முதலிய சங்கற்பத்தான் மனம் விர்த்தியடையுமென்பதாம்.

னிஃதுங்கெடு மென்பதற்குத்திருஷ்டாந்தமறிவிக்கத் தொடங்கல்.

சிக்கப்பட்ட மார்க்கத்திற் சஞ்சரித்து மனதென்னுஞ் சற்பமானது, மிகவும் பெருக்கும். ஸ்ரீராமா? நீ கேட்பாய், பழைய உத்தாலக முனியைப்போல பஞ்சபூதங்களையும் தூளியாய்ப் போகச்செய்து வருத்தமுற்ற புத்தியினால்மன தில்விசாரிப்பாயென்று, வசிட்டமுனி சொன்ன மாத்திரத்தில்,¶— நீரருளிச்செய்த உத்தாலகமுனியானவர், எந்தமார்க்கத்தினால் பஞ்சபூதத்தையுங்கெடுத்து, தனக்குட் சிந்தித்த தென்னவென்று ஸ்ரீராமன்கேட்க,வசிட்டமுனியானவர் கிருபையுள்ள ஸ்ரீராமா? விரிந்த பஞ்சபூதத்தை ஆத்மவிசாரணையினால் கெடுத்து, பிரமத்தைபடைந்து அத்துவித நிலையையுடைய உத்தாலக முனியினது கதையை நாம் சொல்லக்கேட்பாய்.§- கந்தமாதன மென்கின்ற மேன்மைபொருந்திய மலையில் கருப்பூரம் பரிமளிக்கின்ற பூங்கொத்துகளையுடைய வனங்கள்சூழ்ந்த மலைச்சாரலில் வசிப்பவன்; உத்தாலகனென்னு நாமத்தையுடையவன்; குற்றமற்றவன்; முனி சிரேஷ்டன்; முன்பு கொஞ்ச வரிவையுடையவன்; விசாரணையுடையவன்; பரிபூரணவாழ்வில் மனதிற் றுன்பங்கெட விஸ்ராந்தியடையாதவன், புத்தியினது நன்மையைத் திருத்தமாகப் பெற்றவன்.†— பரிசுத்த மார்க்கத்தினாலும், நிட்காம தவத்தினாலும், ஞான சாஸ்திரார்த்தங்களினாலும், இயமமும் நியமமும் பொருந்துந் தன்மையினாலும், குற்றமற்ற நல்லவிவேகமானது வரவும், அந்த உத்தாலகன் இத்தன்மையாகச் சிந்தித்தான் துன்பமற இளைப்பாறும் இடமியாது, மறுசநநமென்னும் கெடுதலில்லாத மென்மையானபத மியாது, இதுவல்லவா முன்னுதாக சீக்கிரத்தில் அடையத்தக்கது.—

கஉ. இராமன் வினவுதல்.

கங. முனியின் முமுக்ஷப்பருவ முணர்தல்.

கச. விஸ்ராந்தியுள்ளபரமபதமியாதெனவிசாரித்தல்.

மனோசங்கற்பமில்லாத நிருமலமான பிரமபதத்தில் நெடுங்காலங்கலந்துஏகமாய் விளங்காநின்றமகாமேருவின் முடிவில் பொருந்திய மேகத்தைப்போல யான் இளைப்பாற எப்போது கிடைக்கும். தளர்வில்லாமல் இதைச்செய்து இனியெதை முயற்சிக்கத்தக்கதென்று சலனமாகிச்செல்கின்ற அளவற்ற போகசம்பத்துகள் எனது மனதின்கண் ணின்றும் எந்தக்காலத்தில் விடுபட்டுப் போகும்.— மனன மென்கின்ற அலையையடித்து மதத்தோடும் வளர்ந்த இச்சையென்னுஞ் சமுத்திரத்தில்பரிசுத்தம்பொருந்திய அறிவென்கின்ற வங்கத்தினால் முழுகாமல் எக்காலத்தில் கரையேறு

கரு. போகவிச்சையெப்போதெனதுள்ளத்தி னின்று நீங்குமெனல்.

கசு. ஆத்தசுகமெப்போது வருமெனல்.

¶ இ-ம். உத்தாலகமுனியைப்போ லிம்மனதைக் கெடுக்கவேண்டுமென்பதாம்.
§ இ-ம். உத்தாலக முனி ஞானமடைந்த மார்க்கமிதுவென் றறிவிக்கத் தொடங்[இனதாம்.
† இ-ம் சித்த சுத்தி வந்து விஸ்ராந்தி வரயில்லை யென்பதாம்.

வது. சதாகாலமுங்கிரியாக்கிரியைகளில்லாமைகளும் நீங்கி பற்றுதல் விடுதலில்லாமல் அகத்திற் சுப்ரகாசமான பதத்தைப் பொருந்தி எப்போது மனந்தளராமல் நின்று மகிழ்ச்சியையடைவேன்.—

௧௭. சமாதி யெப்போது கூடுமெனல்.

நினைக்கின்ற சங்கற்பத்தைக்கெடுத்து, ஆத்மாவிலடங்கி மேகஞ்சூழ்ந்த மலைக்குகையில் கருங்கல்லைப்போல நிருவிகற்பசமாதியினால் எப்போது சலனமற்றநிலையிலிருப்பன். ஒருமைபெற்ற தியானத்தினால், இளைப்பாறுகின்ற எனதுசிரசின்மேலுள்ள மயிரினால் பறவைக் கூட்டங்களானவை கூண்டுகட்டி எக்காலத்தில் குடியிருக்கும்.—

௧௮. சமாதிகூடவில்லையேயெனல்.

மனதிலிந்தப்ரகாரஞ் சிந்தித்து, உத்தாலகமுனியானவர், உள்ளே பரவசத்தையுடையவனாய் ஒன்றான பிரமத்தியானத்தைச் சாதிக்கும்பொருட்டு, இருந்தவிருந்தவிடங்கள்தோறும் வேகத்துடன் பாய்கின்ற மனக்குரங்கானது விஷயமென்னுங் கொம்புகளிற்றாவுதலால், துன்பத்தின்றன்மைகளில்லாத மகிழ்ச்சியை யடைகின்ற ஸ்வரூபசமாதியை யடைந்திலன்.¶—

௧௯. ஒன்றிலுந் தரி கொள்ளாமற் சுழலுதல்.

இப்படி கானகத்திலிந்தப்ரகாரம் நிலையில்லாமலலைகின்ற உத்தாலகன், பின்பொருநாளில் புறம்பிலுள்ள விஷயதிருஷ்டி தவிர்ந்தபடியால், பொல்லாதமனமாகிய குரங்கானது திடமான அந்தகார மூடினதுபோல சமாதிகளில் அகம் வருத்தமுற்று, தருமமிகுந்த மலையில் வருத்தத்தோடுஞ் சுழன்று மிகவுஞ்சோர்ந்து சுழன்றான்.†—

௨௦. நிருவிகற்ப சமாதியி னிமித்தம் ஆசனங்கட்டி யிருத்தல்.

ஒருவருமில்லாததாகியும் யாவராலு மடையக்கூடாததாகியுமிருக்கின்ற குகையானது, சேராநின்ற மோக்ஷவிடமென்று சொல்லப்படும், அக்குகையில் ஒருபொழுது தனித்துச்சென்று மலைக்குன்று மணித்தரையின்மேல் மான்றோலைவிரித்து அதின்மேல் ஆராயாநின்ற மனதினதுதொழிலைச்சுருக்கி புத்தனைப்போலத்தியானிப்பான்—

௨௧. இதுவுமது.

பத்மாதனத்தில் பௌத்தனைப்போல, வடக்குமுகமாய் இரண்டுபீசத்தையும், இரண்டு குதிகான்மேல்வைத்து, பிரமாஞ்சலிசெய்துவாசனையினால் மயங்குகின்ற மனதைத்திருப்பி, தடையில்லாத நிருவிகற்பசமாதியி னிமித்தம் இந்தப்ரகாரம் விசாரித்

¶ இ-ம். விடயசுகந் துன்பமென்று வருந்திப் பரமசுகங்கூடாமற் பாதவித்துக் கொண்டிருக்கின்ற தீவரதர முண்டாயினதென்பதாம்.

† இ-ம். மனமானதொருகாற்பாகிய வடிவத்தை விடுதலு மனோரத பரிகற்பிதமான வானந்தவிடயத்தை யடைதலு மொருகாலஃதைவிட் டிஃதை கிரகித்தலு மொருகாற்பயமடைந்த பக்ஷியைபோலத் துள்ளியோடுதலு மொருகா லிராசதகுணப்ரகாசத்தையுஞ் சத்துவகுணம்பரத்ஸதயுந் தமோகுண வந்தகாரத்தையும் பார்த்ததென்பதாம்.

உஉ. சமாதியி லசைவர விருக்குமிடத்துதித் தவாவிக்கொண்டு விடயத்திற் சுழலாநின்றமனதைக்கண்டதை வெளியிற் செலுத்த மற் றடுத்துத் தன்வயப் படுத்தும்பொருட்டு விசாரமுகத்தா லதன்குற்றங்களைக் களையத் தொடங்கிப் போகங்களைக்களைதல்.

தான்.¶— வாராய் மூடத்தன்மையுடையமனதே? உனதுபொய்வாழ்வுகளில் ப்ரயோசனமென்ன நீங்காத துன்பமேமுடிவிலுண்டாகின்றதொழிலில்சத்துக்களடைவார்களோதெவிட்டாதவமுதமாகிய உபசாந்தியை நீக்கிகெடாநின்றபோகத்தை யிசசிப்பவர்கள், அழகுபொருந்திய புஷ்பங்களையுடைய கற்பகவனத்தைவிட்டு கொடுமைமிகுந்த விடம்போன்ற வெப்பம்பொருந்திய பாலைவனத்திற் பொருந்துவர்போலாம்.—

உ௩. சாந்தியே சுகமாமென்று சரிதைகிரியைகளைக் களைதல்.

பிரமலோகத்திலடைந்தாயானாலும், பாதாளலோகத்திலடைந்தாயானாலும், சாந்தமென்னும் பெருமைநிறைந்த வமுதத்தைநீங்கி, அம்மேலான நிருவாணசுகத்தைக் கூடமாட்டாய். ப்ரயோசனயானதுபோல நாநாவிதமாய் உள்ளத்தில் அதின்மயரூபமேசுபாவமாயிருக்கின்ற இத்தொழில்கள் மகாதுன்பமாம்; எப்போது மின்பமாகமாட்டாது.—

உ௪. பஞ்சவிடயத்தின் றொழில்களைக் களைதல்.

சத்தமுதலிய விடயங்களிற் செல்லும் இச்செயல்களினால், தவளையைப்போலப் பயித்தியமுடையதாயிருககின்ற மூடமனதே? விடாமல் வீணாக ஏனுழலுகின்றாய். யாதினாற் கிஞ்சிற்றின்பமடைந்தாய், யாதிற் பரமசுகமடைகின்றாய், சதாகாலமுநிறைந்த வமுதமாயும் சமமாயுமிருக்கின்ற அந்தச் சாந்தத்தில் நீ நிலைபெறாதவிதமென்ன.—

உ௫. சத்தபரிச விடயங்களைக்களைதல்.

விரிகின்ற மூடத்தையுடைய மனதே? விருதாவாகவுண்டாய் பருக்காநின்ற காதின்றொழில்களைக்கூடி சத்தவிடயத்தைத் தொடாநின்றபுத்தியினால் அணபக்ஷியைப்போல மரணமடைய வேண்டாம். தொக்கின் வியாபாரத்தைப்பொருந்தி பரிசவிடயமான மூடத்தன்மையினால் துயரமேதுவாக, பெண்யானைக்காசையான ஆணானையைப்போல, எப்போதுந்தவிராத ஆபத்தை யடையவேண்டாம்.—

உ௬. ரூபரசகந்த விடயங்களைக் களைதல்.

ஒளிபொருந்திய ரூபவிடயசமுகத்தை பார்க்கின்ற கண்ணினுடைய தொழிலைப்பொருந்தி மனமே? நீ வெப்பம்பொருந்திய தீபமென்றறியாமல் மரணமடைகின்ற விட்டிற்பூச்சியைப்போல வெந்துபோகவேண்டாம். கொடியமனதே? நாக்கினுடைய தொழிலைப் பொருந்தி, அற்பம்புசித்து புசிப்புகளினது இரசவிடையவாசனையினால் இரையையுடைய தூண்டிலைக் கிரிகிக்கின்ற மக்ஷத்தைப்போல நாசமடையாதே தேனுக்காசித்த ஞிமிறைப்போல தாமரைமலர்போன்றிருதயத்துள்சுவாசமார்க்கத்திற்சென்றுவாசனைவிட

¶ இ-ம் சமாதியினிலக்கணங்களை யறிவித்ததாம்.

யத்தை தேடுதலினுல் மனமே? நீ கட்டுப்படாதே.—

உஎ. ஐந்துவிடயங்களேயுங் கூட்டிக்களேதல்.

சொல்லிய அசுணப்பக்ஷியும், யானேயும், பதங்கப்பக்ஷியும், மச்சமும், வண்டும்,சத்தமும்,பரிசமும், உருவமும் சுவையும், கந்தமும் என்று நேர்நிரையாய் வைக்கப்பட்ட விவற்றுள், ஒன்றினுலொன்று மரணத்தையடையும். நிலேயைக் கெடுக்கின்ற அப்பஞ்சவிடயமும் ஒன்ருகச்சேர்ந்து மெலிவு செய்யப்பட்டவர்களுக்கு அகமகிழ்ச்சி யெங்கே யுண்டாகும்; உன்னேக் கட்டுதலுக்கு இந்த வாசனேயென்பதே கயிற்ருற்பின்னின வலேயாம்; குற்றத்தோடு மெழாநின்ற மனமே? அவ்விடய வாசனேயே நீங்குமானுல், அதுவேயுனக்குசமானமில்லாத வெற்றியாம்.‡— யாது ப்ரயோசனமாக

உஅ. அற்பமான மனதில் அகண்டமானசித்து யெப்படியிருக்குமெனல்.

உனக்குஇவ்விடத்தில் இந்த ஆக்கினே நான் செய்கிறேன், முதிர்ந்த ஆத்மஞான விசாரணேயில் முதன்மையான சத்துக்களுக்கு ஒரு மனமுமில்லே; வியாபகமாகிய முடிவில்லாத ஞானத்துக்கு சூட்சுமமான ஸ்திதி என்மனதில் நியமமாயுண்டோ; களிறு, வில்வப்பழத்தில் நுழையுமோ.— மாமிசம் பொருந்திய

உகூ. தேகமுதலிய வைகளேக் களேந்ததற்கு விலக்ஷணமான வாத்மஸ்வரூபத்தைத் தரிசித்தல்.

சரீரத்தில் பாதமுதலாக சிரசுபரியந்தம் வேறுவேருக வாராய்ந்தும் நானென்பது அச் சரீரத்திலில்லே, நானென்னுந் தன்மையான தெவ்விடத்து லிருக்கின்றதெது; திக்குகளனேத்திலும் வியாபித்த மேலான ஞானஸ்வரூபமாகி காணப்படாததாகி சலனமில்லாமலெவ்விடத்துந் தானுக விளங்கினதென்று சகங்களனேத்தையும் பார்ப்பேன்.—மேன்மை பொருந்திய அந்த

௩௦. ஆத்மதரிசன மா யதிலுதிக்கின்ற மனதைக் கண்டிக்கத் தொடங்கல்.

ஞானத்துக்கு பெயர், கற்பனேயும், ஏகத்துவமும் அநேகத்துவமும், மகத்துவமும், அணுத்துவமும் என்று சொல்லுகின்ற நாநாவிதமாகிய அடையாளங்களேக் கண்டிலன், சுபாவமான ஞானமானதினுல் யான்காணும் என்னிடத்தில் வேற்றுமையுள்ள மனதே? நீயே துன்பங்கொடுக்குங் காரணமாக வுண்டானுய்.— முதிர்ந்த விவேகத்தினுலுண்டான ஞானுர்த்தவலியினுல் இப்படிப்பட்ட வுன்னே சீக்கிரமாகக்

௩க. மனதிற்கு உருவமின்றெனக் கண்டித்தல்.

கெடுக்கின்றேன், துன்பத்தையுடைய மனதே? நீ காணக்கடவாய். இது மாமிசம், இது விரத்தம், இது வஸ்தி, இவைகள் உள்ள பிராணனுய்நிறைந்தகாற்று: இவ்விடத்திலிவைகளில் நானென்பது பொருந்தினதெங்கே— மாமிசங்கள் வேறு, இரத்தம் வேறு,

௩உ. இதுவுமது.

அஸ்தி வேறு, சரீரத்தில் கன்மேந்திரியங்கள் வேறு, ஞானேந்திரியங்கள் வேறு; நானென்பது எவ்விடத்

‡ இ-ம், மனதைப் பிரமாநந்தத்திற் செலுத்தும்பொருட்டுப் பஞ்சவிடயவிய போகங்களிற் செலுத்தாமற் றடுத்ததென்பதாம்.

திற் பொருந்தியிருக்கும்; விசையாகிய கண்ணிது, தொக்கிது, பருத்த காதிது, நாசியிது பசைபொருந்தியநாக்கிது; இவ்விடத்தில் நானென்று சொன்னதெங்கே.— நானென்பதெங்குமாயிருக்கும், அற்பமுமிவைகளில் நானென்பதல்லாததாம், இப்படி விளங்காநின்ற இவ்வனுபவ திருஷ்டியே திருஷ்டியாம், வேறுமார்க்கமில்லை. குற்றமற்ற ஞானவடிவமாகிய வென்னை, அறிவில்லாத வஞ்சகமுள்ளமனதே? பசுவின் கன்றை வனத்திலுள்ள செந்நாயானது மருட்டுவது போல, மிகவும் வருத்தப்படுத்தினாய்.— தேவாதீனமாய் ஆத்மவஸ்துவை கைவசமாயபகரிக்கின்ற அஞ்ஞானமென்னுந் திருடனை இப்போது தெளிந்து கொண்டேன்; திரும்ப விவனைச்சாரேன். பஞ்சேந்திரியங்கள் ஒன்றிய வாசனையை விட்டிருந்தும் ஸ்பரிசிக்கின்ற புறம்பில் தங்கடங்கள் விடயங்களில் தாவுகின்றன.¶—வாசனையானது, இந்திரியங்களனைத்துக்கும் காரணமல்லாததாம்; ஆதலினால் மூடமாகிய பஞ்சேந்திரியங்களே? நீங்கள் உள்ளத்தினது குற்றமுள்ள வாதனைகளைக் கெடுத்து, தொழில்களனைத்தையுஞ் செய்வீர்களானால், வருத்தஞ்செய்கின்ற துன்பங்கள் ஒன்றானாலும் அற்பமும் எப்போதும் பொருந்தாது.-

நடு. சித்தைச் சட மயக்குமோ வெனின்.

நசு. இனிமனதின்வசத்திற் செல்லேனெனல்.

நடு. பொறிகளை மனோ வாசனையிற் செல்லாமல் நீக்குதல்.

கூண்டுசெய்கின்ற தனது வாயினூலினால் மரணமடைகின்ற கோசகாரப் புழுவினது கூட்டத்தைப் போல, திரிஸ்யத்திற் றாவுகின்ற இந்திரியங்களென்னுங் குழந்தைகளே? மயக்கத்தினால் வீணாகக் கெடுவீர்கள். இந்திரியங்களனைத்திற்கும் வசிக்குமிடமாகிய மனதே? அடங்கி இந்திரியங்களுடன் நீ வேறுபடாமல் ஆத்மஞானத்தை நேரேபார்ப்பாய். பற்றில்லாமல் ஏகமாய் நிருவாணசுகமா யிருக்கின்ற ஞானஸ்வரூபத்தை நிலையாகப் பொருந்துவாய்.—குற்றநீங்காத விடயமுள்ள விடேசியாகியும்,அளவில்லா ததாகியு மிருக்கின்ற யானென்கின்ற வாசனையானது, நீங்கும்படி களங்கமில்லாமல் விட்டு, ஆசைகளனைத்தையும் கெடுப்பதென்கின்ற மந்திரவுபாயத்தினால் மறுபிறப்பு நீங்கி, ப்ரகாசம்பொருந்திய பகவத்ஸ்வரூபமாய் மனதே? பயங்களனைத்துந் தீர்ந்தவிடமாவாய். சங்கற்பமே வீசப்பட்ட விருக்ஷமாகவும், ஆசையே கொடிகளாகவு மிருக்கின்ற நீயென்னும் வனத்தைத் தறித்து நீண்ட ஞானபூமியில் விளையாடுவேன்.— வேண்டின ப்ரகாரம் விளையாடல்செய்து பிரமபதத்தைப்பொரு

நசு. மனதைப் பொறிவசத்திற் செல்லாமற் றடுத்துப் பொறி வசத்திற் செலுத்துதல்.

நஎ. மனோசங்கற்பத்தைக் கெடுத்து ஆத்மசுகத்திற் சுகிப்பேனெனல்.

நஅ. மங்கலகரமான பிரமஸ்வரூப

¶ இ-ம். ஆத்மஸ்வரூபத்தைத்தவிர மனதிற்கோ ருருவமின்றெனத் தரிசித்ததாம்.

மாய்அதின்பின்சத்தியினியல்பைத்தரிசித்தல்.

ங்கினேன்; தனிமையானேன்; சயமடைந்தேன்; இவ்விடத்தில் உயர்ந்தமோக்ஷஸ்வரூபியானேன்; தொழிலில்லாதவனானேன்; பகுப்பற்றேன்; வேறிடமில்லாதவனானேன். மிகுந்த தெளிவுடைமையும், விளக்கமுடைமையும், தத்துவப்ரகாசமுடைமையும், ஞானமுடைமையும், நீங்காதவுண்மையும், சிறந்தசுகமுடைமையும், உபசாந்தமுள்ள குணமுடைமையும், சற்கருமத்தின் மகிழ்ச்சியுடைமையும், பூரணவுடைமையும், பெருமையுடைமையும், நற்குணமுடைமையும்,—

ருக. இதுவுமது.

மறைப்பில்லாமையும், உதாரமானகுணமும், கெடாதப்ரகாசத்தையுடைமையும், பூரணத்தன்மையும், சகலமுந் தன்மயமானகுணமும், பயமில்லாமையும், ஒன்றாகிய தன்மையும், சித்தசாஞ்சல்லியமில்லாமையுமாகிய ஒழிவில்லாமல் எனதுடன்பொருந்தி யிருக்கின்ற இந்தக் குணங்களென்கிறஉத்தமிகளாகியசுமங்கலிஸ்திரீகள் சமானமில்லாதவர்கள்; ஏகபாவனையான ஆத்மஸ்வரூபத்தையடைந்த வெனக்கு எப்போது மனைவியர்களாக மனதைக்கிரிகிக்கின்றஸ்திரீகளாம்.†—

சo. ஞானம்பெற்றுமசிச்சர்பிராரத்த கன்மசேடம்நீங்கும்பொருட்டுயோகம்வந்தடுத்ததை யறிவிக்கத் தொடங்கிப் பிரணவவுச்சாரண மறிவித்தல்.

அலையாமல் தன்வசப்பட்டு வியாபித்த புத்தியினது தொழிலினால் இந்தப்ரகாரம் வலிமையாகச் சிந்தித்து, கருங்குவளைப் புஷ்பமானது கொஞ்சம் விகசிதமானதுபோல பாதி திறந்தவிழியையுடையவனாய் பத்மாசனத்திலிருந்து, பிரணவத்தை உத்தமனான உத்தாலகன் உயர்ந்தசத்தத்தினால் உரிமையாகதடையில்லாமல் உச்சரித்தான்.— ஞானஸ்வரூபமாகிய

சக. பிரணவத்தின் முதற்கூறான வகரத்தை யுச்சரித்தல்.

பிரணவத்தை உச்சரியாநின்ற உத்தாலகமுனியின் ஞானமானது பிரணவஸ்வரூபமான பிரமத்தைப்பார்க்கவும், தனிமையான பிரணவமானது, சார்பில்லாமல்எந்தமட்டும்உயர்ந்து நின்றதோ வந்தமட்டும்உயர்வாகவும், வியாபகமாகவும், நிருமலமாகவு மிருக்கின்ற ஞானத்தினிடத்தில், மூன்றரைமாத்திரையையுடையதாகிய பிரணவஸ்வரூபத்தில் அகராத்மகமான முதற்பங்கு வெளிப்படவொலித்து, எவ்விடத்தும் மாக்ஷிமைப்பட்ட பிராணவாயுக்கள் சத்தத்தையெழுப்புகின்ற சரீரத்தில் மிகவும்ப்ரகாசித்து வொலிக்கின்ற

சஉ. இதுவுமது.

காலத்தில்,—இந்தப்பிராணவாயுவை புறம்பில் நீக்கவல்லமையாகிய இரேசகமென்னு நாமமுடைய கிரமமானது, சரீரமெல்லாவற்றிலும் நிறைந்துயர்ந்திருக்கின்றது; அகத்தியமுனியானவர், சமுத்திரத்தைஆசமனஞ்செய்து பாழாக்கினதுபோல, கொன்றுபாழாக்

† இம். சடிந்தியங்களையுங் கண்டித்து ஆத்மஸ்வரூபத்தைத் தரிசித்ததன் சுபாவ சத்திகளோடும் விளையாடிப் பரமசுகியா யிருந்தாரென்பதாம்.

கினது. பிரிவில்லாத ஞான இரசநிறைந்திருக்கின்ற பிரமாகாயத்தில் பிராணவாயுவுநிறைந்திருந்தன. இருதயமென்னும் பெரியவக்கினிநிறைந்து அந்தச்சரீரமியாவையு மெரித்திருக்கின்றது; பிரணவத்துக்கு இதுவே முந்தின கிரமத்தினவத்தையாம். †—அந்த ரேசகாவத்தையானது வேண்டியமட்டும் ப்ரகாசித்ததேயன்றி அடையோகத்தினாலல்லவாம்; அடையோகமானது கொடியதுன்பத்தைக் கொடுக்கின்றதல்லவா

சங. பிரணவத்தினிரண்டாங் கூறானஉகரமுச்சரித்தல்.

அதன்பின்பு பெருமைபொருந்திய பிரணவத்தினுடைய இரண்டாவதாகிய உகரத்மகமான பங்குதடையில்லாம லிருக்கின்ற சமநிலையான வவசரத்தில், அசைவில்லாத கும்பகமென்னும்பெயரை இடப்பட்ட தனித்தகிரமமான கூறும், இந்தப்பிராணவாயுவான

சச. இதுவுமது

சகலத்திற்குமுண்டானது—புறம்பிலும், உள்ளிலும், கீழிலும், மேலிலும், திசைகளிலும், ஆகாயத்திலும், முயற்சித்தசையாத பிராணவாயுக்களானவை பூரணமாகி, குவிந்திருக்கின்ற துருத்தியினிடத்தில் தடைப்பட்டவைபோல நிலையாயிருந்து உண்டாகி, முதன்மையாக சரீரத்தையெரித்த வக்கினியானதுப்ரகாசத்தினையுடைய இடியைப்போல க்ஷணநேரத்திலணைந்தது; பனியினது வெண்மையைப்போலசரீரமானது, வெண்ணீறாகி நன்றாகத்தெரிந்தபடியினால், அச்சரீரத்துக்கு, சரீர அஸ்திகளணைந்தும் வரிசையாகத்தோற்றி

சரு. இதுவுமது.

நரம்புகளுடனிருந்தது.- சுகமாயிருக்கின்ற கருப்பூர சயனத்தில் நித்திரைசெய்வதுபோல அஸ்தியின் வரிசைதோற்றினது. காற்றினால் அந்நீறானது வேகமாகக்கிளம்பி க்ஷணநேரத்தில் ஆகாயத்தைச்சுற்றிக் கொண்டது: ப்ரகாசமாகிய சரற்காலத்தில்செறிந்த பனிமேகத்தைப்போலஒரிடத்திற்போய்ச்சேர்ந்தன, எதிரில்லாத இந்த வவத்தையை வேண்டுகின்றபரியந்தம் இயல்பையுடைய பிரணவத்தின் இரண்டாவதிலான கிரமத்திலடைந்தது.*—இந்தவவத்தை ப்ரகாசித்தது அடையோகத்தினாலல்ல; அடையோகமா

சசு. பிரணவத்தின்மூன்றாங்கூறு

† இ-ம். ஞானதிருஷ்டியிலிருந் துச்சரித்த வகரநாதமானது வெளிப்பட்டுப் பிராணநாதஞ் சரீரமுழுது நிறைந்து சத்திக்குஞ்சமயத்தில், இரேசகக்கிரமத்திற் சிதாகாயத்திற் பிராணநிறைந் திதயத்திலுண்டான ஞானக்கினியாற் சரீரமுழுது மெரித்ததென்பதாம்.

* இ-ம். இரண்டாவதான உகரநாதமானது சமமாய்நிறைந்து பிராணன் கும்பகமாய்ச் சரீரமுழுது நிறைந்து அக்கினியையவித்துவெண்ணீறுவடிவமா யஸ்தி நரம்புசாடை தோன்றச்செய் தந்நீற்றை யெழுப்பிச் சிதாகாயத்திற் சேர்த்ததென்பதாம்.

மகா முச்சரித்தல்.

னது, மகாதுன்பத்தைக்கொடுக்கின்றதல்லவா. அதற்குப்பின்பு பிரணவத்தினது மகராத்மகமானமூன்றாங்கூறாகி அமைவான முபசாந்தத்தைக் கொடாநின்ற அவசரத்தில், பொலிவுள்ள பூரணத்தினால் பூரகமென்னு நாமமுள்ள கிரமமானது, பிராணவாய்வுகளுக்குண்டானது; வருத்தமில்லாத அந்தச்சமயத்தில் பிராணன்களனைத்தும் அறிவின் அமுதத்துட்போயின.

௪௭. இதுவுமது.

—சொரிகின்ற பனியிற்குளித்ததற்குச்சமானமாக அதிசீதளத்தைப்பொருந்திய பிராணவாய்வுகளனைத்தும், முறைமையினால் ஆகாயத்திற் பொருந்திய புகையானது, குளிர்ந்த மேகமானதுபோல, ஆகாயமத்தியிற்பொருந்த சந்திரமண்டலமாய் கலையின்கூட்டமானது, நிறைந்திருக்கின்ற அச்சந்திரமண்டலத்தில், அமுததாரையை பிராணன்கள் பொருந்தப்பெற்ற ப்ரகாசிக்கின்ற வாகாயத்திலிருந்து இறங்கியவமுததாரையானது, மிஞ்சினசரீரச் சாம்பவில்போய்விழுந்தது.

௪௮. இதுவுமது

—சிவனதுசிரசிலிருந் திறங்காநின்ற தேவகங்கையையொத்த அமுதவருஷத்தினால் களங்கமில்லாததாய், ஒப்பற்ற சதுர்ப்புயங்களோடும் சந்திரப்பிரகாசமாய்கிருபையையுடைய திருமால்வடிவத்தைப்போல காணத்தக்கதாய், பலமாக ப்ரகாசிக்கின்ற வுத்தாலகமுனியின் சரீரந்தோன்றினது; அமுதமயமாகிய பிராணன்களனைத்தும் அந்தச்சரீரத்தை நிறைவித்து வியாபித்து உள்ளேயிருக்கின்றகுண்டலி

௪௯. பஞ்சபூதகாரியமான வுடலைப் பிரணவத்தாற்கெடுத்து. ஞானவடிவமாக்கிப்பாகிய விடயங்களையுமதிற்செல்லு மனத்தையும் அப்படியேகெடுக்கத் தொடங்கல்.

சத்தியை ஆராதனைசெய்தசுற்றிநின்றன.‡—இந்தப்ரகாரத்தால் பத்மாசனத்திலிருந்த உத்தாலக முனியானவர், தேகஸ்திதிகெடாமல்செய்து, பின்புமதமுள்ள வண்டைப்போல சுழலாநின்ற மனதை பலத்தினாற்றடுத்தான், மௌனத்தையுடையவனாய் மிருதுவான பிராணபானன்களுடைய வேகத்தைப்பார்த்து மெல்லெனவுண்டாக்கினன்; விஷயத்தினின்றுதாவு மிந்திரியங்களைவருத்தப்பட்டு வேறுபடுத்தினான்; எவ்வளவேனுமில்லாமல் புறம்பிலுள்ள விடயத்தை நீக்கினான்.

௫௦. மூலவாசன் முதல் நவத்துவார பந்தனஞ் செய்தநர

—பற்றற்ற திடமுள்ள அறிவையுடைய வுத்தாலகன், உள்ளத்திற்றோற்றுகின்ற விடயங்களனைத்தையும் நீக்குகின்ற திருஷ்டியினால் இல்லாததாகச்செய்

---

‡ இ-ம்· உபசாந்திமயமான மகரநாதமானது நிறைந்து பிராணன்பூரகத்தினால் வாய்வுகளறிவின்முகத்திற்செல்லக் குளிர்ச்சியடைந்த பிராணவாய்வுகள் சிதாகாயத்திற் கலைகணிறைந்த ஞானசந்திரனுதயதினாலுண்டான வமுதமிரங்கித் தேகத்தைநனைக்கச் சுபேதவடிவமாயதிலமுதமயமானபிராண நிறைந்துகுண்டலி சத்தியைப் பூசைசெய்ததென்பதாம்.

விடயங்களைத்தள்ளிமனதை யிதயாம்பரத்திலடக்கல்.

தான். மூலவாசலைபடைத்து சரீரத்தி னவத்துவாரங்களிலுள்ள வாய்வுகளனைத்தையும் குற்றமின்றி முகவாசலையடைத்தால், புறத்துள்ள துவாரங்கள், கடத்துக் கடைபடுகின்றதுபோல மதித்தடைத்தான். இறந்ததென்னுந் தன்மையைச்சார்ந்த மனதைமேலான இதயாகாயத்திலடக்கினன்.—பலத்தையுடைய

௫௧. இதயாம்பரத்தினின்று மனோசங்கற்பமியாவையுங் கெடுத்தல்.

மதயானையை தந்திரத்தினல் மலையிலுள்ள படுகுழியில் சேர்ப்பதுபோல மனதையடக்கி, சரற்காலத்தாகாயம்போல நிருமலமானதெளிவையடைந்துப்ரதிபலிக்கின்ற குணத்தினல் உதித்துக்கொண்டிருக்கின்ற விகற்பங்களியாவையும் நீக்கினன். திரும்பத்திரும்ப வரத்தக்கன வேண்டியப்ரகாரமே வந்துண்டாக, சத்துருக்களை கத்தியினல் வீரன் கொல்லுவதுபோல கொடிய மனதால் விரிந்த விடங்களைக்கெடுத்தான்.—

௫௨ சமாதிக்கண்டோற்றினஐந்தவத்தையையுங் கெடுத்தல்.

விகற்பங்களனைத்து மிறந்தவுடன், இதயாம்பரத்தில் விவேகசூரியனை உலகத்திலுள்ளமையைப்போல மறைத்துப் பரந்த வந்தகாரத்தைப்பார்த்த வப்பொழுதே, தனக்குள்விளங்கிய விவேகத்தினல் அவ்விருளைக்கெடுத்தான். உள்ளத்தின்கண்ணுள்ள இருளானது, நன்றாய் நசித்தமாத்திரத்தில், ப்ரகாசம்வந்தடைய, அந்தமுனிவன் அதனையுங்கண்டுநீக்கிகெடுத்தான். அவ்வொளிநீங்குதலும் மனஞ்சுழல்வுற்று அர்த்தசாமம்போல் நித்திரையடைந்தது —நீங்காத நித்திரையையும் கெடுத்தான். நித்திரைநீங்கவும் சூனியவாகாசஞானம்வந்தது; அவ்வாகாயஞானம், அழிந்தமாத்திரத்தில் அவன்மனது மோகத்தைபடைந்தது; அம்மோகமானது, வருந்தாமல் மனதைவிட்டு நீங்கும்படி மேலான வாநந்ததிருஷ்டியிருந்த வுத்தாலகமுனியானவர், நீங்காத இராவைக்கொடுக்கின்ற விருளை, இந்தவுலகத்தின்கணின்று நீக்குகின்ற சூரியனைப்போல் தள்ளினன்.†—அத்தன்மையான காலத்தில் இருட்டும், ப்ரகாசமும் நித்திரையும், மோகமுதலான சகலத்தையு மறுத்துத்துறத்தி, நிலைபெற்ற ஒப்பற்ற நிருவிகற்ப சமாதியையடைந்து, ஒருக்ஷணநேரம்மனமானது விஸ்ராந்திபடைந்தது, துன்பம் விடுபட்டவுடன், சகலவடிவங்களாய் ப்ரகாசிக்கின்ற ஸ்வரூபஞானத்தை நன்மைபொருந்திய அணைதடுக்க நின்றெ

௫௩. இதுவுமது.

௫௪. மனஞ்சைதன்யத்தையடைதல்

† இ-ம். சமாதியின் மனோவிகற்ப நீங்கின பின்னந்தகாரந்தோன்றவதனை ஞான திருஷ்டியாற் கெடுத்து; அதன்பின் ப்ரகாசந்தோன்றவதனைச் சுயம்ப்ரகாசத்தாற் கெடுத்தபின் சுழுத்திதோன்றவதனை கனவிற் சுழுத்தியாற் கெடுத்தபின் சூனியாகாயபோதந் தோன்றவதைச் சிதாகாயத்தாற் கெடுத்தபின் மூலாங்காரமான மோகந்தோன்றவதைப் பரிபூரண திருஷ்டியாற் கெடுத்ததென்பதாம்.

௫௫. மனஞ்சின் மாத்திர மாதல்.

திர்வுற்று முன்னுள்ளவிடத்தி னிறைகின்ற சலத்தைப் போல அடைந்தது.- வெகுகாலப் பழக்கத்தினாலும் தன துண்மைஞானத்தி னனுபவத்தினாலும், தங்கமானது ப்ரகாசிக்கின்ற சிலம்பானதுபோல, மனது ஞானாகாரமடைந்தது. வஞ்சகமும் வலிமையுமுள்ள மனதின் குணநீங்கி சின்மயத்தையடைந்த மனமானது, மிகவுஞ் செவ்விதாக சேற்றினுள்ளிருந்த கடத்தைப்போல சீக்கிரமாகச்சித்தானது;— தங்காநின்ற விடயக்காக்ஷியை விட்டு நிருமலமாய் சிற்சாமானியத்தை, சமுத்திரசலமானது, அலைமுதலான பகுப்புகணீங்கி சாமானிய மடைந்ததுபோல, ஞானமானது சேர்ந்தது. எவ்விடத்திலு மொப்பற்ற ஞானமாய் ஞானத்தையடைந்த வுத்தாலக முனியானவன், அளவற்ற போகசிந்தனை விட்டு, அவ்விடத்தில் அண்டங்களைத்தாங்கி, மேலான வியாபகமாய் நிருமலமான ஞானாகாய வடிவமானான்.— அந்தச் சிதாகாரமான விடத்தில், திரிஸ்யமும், தரிசனமும், இல்லாமல் அளவில்லாததாகிய பரமசுகத்தையுடைய செவ்வையான வனுபவாநந்தத்தை, அமுதநிறைந்த தெள்ளிய சமுத்திரத்தில் முழுகினதுபோல பொருந்தினன், உண்மைதவிர மற்றவை நீங்கி அதீதத்தன்மையை யுடையவனாய் ஒப்பற்ற ஞானபதனு சேர்ந்தான்; சதாநந்த சாகரமானான்; எங்கு நிறைந்த சத்தா சாமானியமே வடிவமானான்; உத்தாலகனென்னும் பிராமணனுடைய அறிவென்கின்ற அன்னமானது, ஆநந்தமாகிய நிலையான தடாகத்தில் வந்து பொருந்தினது; சரற்காலத் தாகாயத்தில் ப்ரகாசிக்கின்ற பூர்ணசந்திரனைப்போலவும், காற்றில்லாத தீபத்தைப்போலவும்; சித்திரத்தினது வடிவத்தைப் போலவும், அலையில்லாத சமுத்திரத்தைப்போலவும், சலத்தை சூலாகக் கொண்டு வருஷியாத ஆகாயத்திலுள்ள மேகத்தைப் போலவும், ஆத்மாவிற் றிரமாயிருந்தான்.†— இந்த பெரிதானவுலகத்தில்; பிரமபதத்தி லிருக்கின்ற அந்த உத்தாலகமுனியைப் பார்த்து, சித்தர்கள், தேவர்கள் இன்ன மநேகர்களும்வந்து சூழ்ந்தார்கள்; தேவஸ்திரிகள் நிறைந்தார்கள், தேவேந்திரன் ஒப்பற்ற தெய்வலோகத்தை தயவோடுங் கொடுக்க, அவ்வுத்தாலக முனியானவர் அவ்விடத்திலுள்ள சகலத்தையும் விருப்பமில்லாமல் நீங்கினான்.— மாலையையணிந்த ஸ்திரீகள் இங்கிதரசங்களை குழந்தைப் பருவத்தில் அறியாதவனைப்போல எவ்வளவேனும் கலக்கமில்லாத ஆழ

௫௬. முனி பூரண ஞானத்தை யடைதல்.

௫௭. முனி ஆநந்த சாகரமாய்ச் சத்தா சாமானியமாதல்

௫௮. முனி சிதாநந்த வயிக்கியமாய் விளங்குதல்.

௫௯. தேவர்கள் முனியைப் பரிசோதித்தல்.

௬0. முனியானவர் ஆனந்தபோதராய் விளங்குதல்.

† இம் ஸ்வானுபவமடைந்த கிரமங்களை விவரமாயறிவித்ததாம்.

ந்த கருத்தையுடைய வுத்தாலகன், தேவர்களது மே லான போகக்கருத்தை நீங்கி, அத்தன்மையான தன தானந்தவீட்டில் ஆறுமாதம் உத்தராயன காலத்தில் ஓங்கிவிளங்கி ப்ரகாசிக்கின்ற சூரியனைப்போலப் பொ ருந்தினன்,— முதன்மையான மும்மூர்த்திகளும், தேவர்களும், சித்தர்களும் வாழாநின்ற சீவன் முத்தி யான பதத்தைப்பெற் றரியதவத்தையுடைய வுத்தா லகமுனி நிறைந்திருக்கின்ற வாநந்தத்தில் ஒழிதலில் லாத பூரணத்தினுல் ஆநந்தமுதிர்ந்த அதீதபதத்தை யடைந்தான். ஆவதாகிய போாநந்தமு மதுவில்லா ததுமாகிய அந்த ஞானத்தினுல் ப்ரகாசித்தான்.- ஒரு க்ஷணநேரமானாலும், நூறுவருடமானாலும், அப்பிரம பதத்தைப்பொருந்தின சத்துக்கள், வாாநின்ற சுகநத் தைக் கொடுப்பதற்கு காரணமா யிருக்கின்ற விட யங்களை யடையப்பட்ட இத் திருஷ்டியை விரும்பார் கள். மாட்சிமையான இச்சீவன் முத்தியில் உத்தாலக முனியானவர் ஆறுமாதங்களினுல் சமீபத்திற் பொரு ந்தாதபடி சுவர்க்காதிபதப் பிராப்தியை நீக்கி சமாதி யிற் பொருந்தியிருந்து விழித்துக் கொண்டான்.—

சுக. முனியானவர் ஆனந்த போதமாய் விளங்கல்.

சுஉ. முனியானவர் ஆறமாதம்ஸ்வரூபசமாதியி லிருத்தல்.

கண்விழித்து சித்தர்கணங்களைப் பார்த்தனன் அச் சித்தர்களும் மேலான இவ்வுத்தாலக முனியை அன் புடன் ஸ்தோத்திரஞ்செய்து, பகவானே? எமது வணக் கத்தை நீர் பாரும் தெய்வலோகத்தில் கொண்டுபோய் விடும் இத்தெய்வ விமானத்தில் சந்தோஷித்தேறுவாய் தேவேந்திர பதத்தின் சுகமானது உலகங்களிலெல் லாம் இல்லாதது ஒருகற்ப பரியந்தம் அந்தப்ரயோசு னத்தை யனுபவிப்பாய்,- பகவானே? செய்த தவங்க ளியாவும்சுவர்க்கத்தையடையுநிமித்தமேயென்று மன மலர்ச்சியாய் சொல்லிய சித்தர்களை மகான்களென்று பார்த்து முகம்விகசித் தாராதனை செய்தான்; மயங்கா தவன் முதன்மையான தேவபோகத்தை மிகவும் விரு ம்பாதவன் வெறுக்காதவன், திடமுள்ளவன், தேவர் களே? போங்களென்றுசொல்லி.*- தேவர்குழாத்தை விட்டவனுய் தனது கிரிகையில் முயற்சித்திருந்த வனுய் போகபந்த நீங்கியிருக்கின்ற இவ்வுத்தாலகனை அந்தச் சித்தர்களும் பின் சிறிதுகாலமனுசரித்து வரு வாரென்கின்ற மனதை விடுத்து தாங்களே நீங்கினுர் கள். சீவன் முத்தனுகிய வுத்தாலகமுனியும், காட்டி லும் உண்மையான மாதவர்களிடத்திலுமிருந்து நிரு வாணசுகத்தில் வேண்டியமட்டுஞ் சஞ்சரித்தான்.—

சுங. முனியானவர்சித்தர்கள் சோதனைக்குட்படாமை.

சுச. இதுவுமது.

சுரு. சாதுக்களோடுஞ்சஞ்சரித்தல்.

* இ-ம். அமரர் போகம் விடமாமெனக்கண் டாத்மசுகத்தி லமர்ந்திருந்ததாம்.

சுசு. சமாதியிலு ஞ் சகசத்திலுமா யிருத்தல்.

ஒருநாளளவும், ஒருமாதமளவும், ஒருவருடமளவும் அநேகவருடமளவும், அளவாகியவொவ்வொருகாலத்தில் அபேதசமாதியில் கூடிக்கலக்கும் விழித்துக் கொள்ளும் அந்நாள்முதற்கொண்டு வராநின்ற கிரியைகளில் பொருந்தியும் நிருவிகற்பசமாதியாகவே யிருந்தான்; ஒன்றாகி அவன்மனது ஏகத்துவத்தை யடைந்துநின்றது.—

சுஎ. சத்தாசாமானியமா யிருத்தல்

விரிந்தமனதினதுவஸ்து அயிக்கியமான கலத்தலை பழகுதலினால் பூரணஞானம் நிரந்தரமாகப்பெற்று, உலகத்தினிறைந்திருக்கின்ற சூரியகிரணத்தைப்போல எவ்விடத்திலுஞ் சமமாயிருந்தான் திறத்தைக்கொடுக்கின்ற சிற்சாமானியத்தின் அயிக்கியத்தை அநேககாலம் மிகுந்த பழக்கஞ்செய்ய துன்பநீங்கிய அதினால் சத்தாசாமானியத்தையடைந்தான்.—

சுஅ. சுயஞ்சித்தாய் விளங்குதல்.

சித்திரைமாதச் சூரியனைப்போல காண்கின்ற இந்தச்சகங்களில்தோன்றி மறையாத உத்தாலகன் மகத்தாயிருக்கின்ற பூரணாநந்தமானசீவன்முத்திபதத்தினது ப்ரயோசனத்தினால், உபசாந்தத்தை யடைந்த மனதை யுடையவனாய் சநநமும் சந்தேகமு நீங்கி, சரற்காலத்தாகாயம்போல வியாபகமாயிருக்கின்ற மாசற்ற வுபசாந்தமான உண்மையான ஸ்வயம் ப்ரகாசநிறைந்த ஞானஸ்வரூபமானான்.*—

சுகூ. உத்தாலக முனிபெற்றவனுபவஞ் சத் தா சாமானிய மென்றுரைத் தஃதி னிலக்கணஞ் சொல்லத் தொடங்கல்.

இப்படி சொன்னவசிட்டமுனியைஉதாரமுள்ள ஸ்ரீராமனவர் சத்தாசாமானியமானது யாதென்றுகேட்க அந்த வசிட்டமுனி சொல்லுவார். தன்மனது விபரீதபாவனையின்றி வியாபகமான சிற்சாமானிய ஸ்வரூபமாய் பொருந்திய பாவனையினது திடத்தாற்கரைந்துபோகுமானால் அச்சிற்சாமானியமே சத்தாசாமானியமாம்.—

எ0- இதுவுமது.

சொல்லுகின்ற முயற்கொம்பைப்போல நிச்சயமாக திரிஸ்யம் விடுபட்டும் ஆத்மசைதன்யத்தில் விருத்திஞானம் லயமானால் சொச்சமாகிய அச் சிற்சாமானியமே சத்தாசாமானியமாகும் தோற்றாநின்ற புறப்பொருளும் உட்பொருளுமாகி நாநாவிதப்பொருளுமாகியும், உடல்களுமாகியுமிருக்கின்ற இச் சகலமுங்கொடுத்து நீங்கிமனது சித்தாய்நிற்குமானால்அச் சிற்சாமானியமே சத்தாசாமானியமாகும்.—

எக இதுவுமது.

நேரே காணப்பட்ட விடயங்கள் நினைக்கப்படாமலும் ஒன்றுந் தவிராமலும், கூர்மத்தின் அவயவத்தைப்போல தாமே ஆத்மாவி விறக்குமேயானால் அவ்வாத்மாவே சத்தாசாமானியமாகும். முதன்மையான சீவன்முத்தர்களும் விதேகமுத்தர்களுமான இவ்விரண்டு

* இ-ம். சமாதிபின்கணின்றுஞ் சகத்திற் சத்தாசாமானியமடைந்த கிரமத்தை யறிவித்தோம்.

பேர்களுக்கும் எப்போதும் சேர்ந்திருக்கின்ற பரம
திருஷ்டி இச் சத்தாசாமானியமாம்; இதனுமம் துரி

எஉ. ஞானதிருஷ்டியி னருமையையுரைத்தல்.

யாதீதபதமாகும்.‡— ஆராய்ந்தறிந்து சமாதியைப்
பெற்ற வவர்களுக்கும், அநுபூதியிலிருந்து அதுவாய்
வெளிப்பட்டவர்களுக்கும் நிறைந்து தோற்றுவதாகி
யும் மூடர்களுக்குத்தெரியாத தாகியுமிருக்கின்ற இப்
பரமதிருஷ்டியானது முறிவுபட்டு சநநங்கெடாநின்ற
சீவன்முத்தர்களாகிய ஞானவான்களனைவரும் அந்தர
த்தில்வீசுகின்ற வாயுவும் பெரிதாகிய பூமியில் அறு

எங. மும்மூர்த்திமுதலி யோருக்குள்ள இந்த ஸ்வாநுபவத்தி லுத்தாலகமுனி யிருந்தாரெனல்.

சுவையும்போல பிரியமாட்டார்கள்.¶— மும்மூர்த்தி
முதலான தேவர்களும், என்னைமுதலாகவும், நார
தரைமுதலாகவுமுள்ள இரிஷிகளும் அடைந்ததுஇப்
பரமதிருஷ்டியேயாம். பேதமுள்ள பதங்களனைத்தை
யுங்கெடுத்து, ஒழிவில்லாத விச் சத்தாசாமானியத்
தில் ஆசைதீர்வ தெந்தமட்டுமோ, அந்தமட்டும
சகமானவீட்டி லுத்தாலகன் வசித்திருந்தான்.—

எச. உத்தாலகமுனிஞானமடைந்தபின்பு யோகத்தினுற் காய சித்திமெற்றுமஃதற்பமென் றகற்றி விதேகமுத்தியை யடைதற் கானசமாதிசெய்யத் தொடங்கல்.

அநேககாலங்கழிந்தபின்புசுந்தமாதனபருவ
தத்திலுள்ள அழகியகுகையில், அந்த உத்தாலக
முனியானவர், சரீரத்தைவிட்டு விதேகமுத்தித்
தன்மையனுய் இருக்கக்கடவேன்; இது தீர்ப்
பென்று சிந்தனைசெய்து மிகவு நன்மையுள்ள
பல்லவாசனத்தில் கட்டிய பத்மாசனத்தி லிரு

எரு சமாதியிலக்கணங்கூறல்

ந்தான்.—பாதிதிருஷ்டியாக பார்த்திருந்து, மூலவா
சலையடைத்ததினுல், உட்டுளையாகிய நவத்துவாரமு
மடைந்தது. மனதினுல் இந்திரியங்களையும் விடயங்
களையும் ஒன்றுக்கி அலையில்லாத சமுத்திரத்தைப்
போல தனது பூரணஞானத்தைத் தியானித்து,
நிரைந்திருக்கின்ற பிராணவாயுவின் விரைவை நிறு
த்தி சரீரம்வளையாமல் நெறிப்பாகிய கழுத்தையுடைய

எசு. இதுவுமது

வனுய்.— நாக்கினடியிற்சென்று உண்ணுக்கினடியை
யுடையவனுய், நீங்காத முகவிளக்கத்தை யுடைய
வனுய் உள்ளிலும், புறம்பிலும், மேலிலும், கீழி
லும், பாயாநின்ற விடயங்களிலும், சூனியாகாயத்
திலும், மனதுங் கண்ணும் பொருந்தாதவனுய், கெடு
வதாகிய தந்தபந்திகளைப் பொருந்தப்பெருதவனுய்,

எஎ. கைவல்ய

சரீரத்திலுள்ள பிராணவாயுவின் வேகத்தைத்

‡ இ-ம் சுயஞ்சித்தில் மனங்கரைதலும், சித்துக்கரைதலும், வேறுதிருஷ்டிநீங்
குதலும் யாவுஞ் சின்மயமாய் விளங்குதலுமாகிய சிற்சாமானியஞ் சதாநந்தமாய்க்
கரைந்த சத்தாசாமானியமே துரியாதீதமென்பதாம்.

¶ இ-ம். விசாரமுகத்தா லறிந்த வறிவு சமாதியினு லாநந்தமான வருக்கு மவ்
வாநந்தஞ் சகசத்தி லாநந்தாதீதமாய் விளங்கினவர்களுக்கு மிவ்வனுடவம் விளங்
குமேயன்றி மற்றவர்களுக்கு விளங்காதென்பதாம்.

சுகமாதல். தடுத்து, அதனுற் சொச்சமாயும், ப்ரகாசிக்கின்ற முகத்தையுடையவனுய், சரீரத்தி னுருவமானது, உள்ளஞானஸ்வரூபமாயும், உண்டாகுதலால் புளகாங்கிதமானவன் சரீரஸ்வரூபம் உள்ள ஞானஸ்வரூபமாகி, பழக்கமுற்று சிற்சாமானியமாகி, அவ்விடத்தில் அப்போது அச்சிற்சாமானிய வற்பியாசத்திஞல், மன

எஅ. அனுபவமரபை யறிவித்தல். திற் பரமானந்தத்தையடைந்தான்.— பரமானந்த வெள்ளத்தைப் புசித்ததினல் சிற்சாமானியநீங்கி, தானே முடிவில்லாமல் சகலத்தையுந்தரிக்கின்ற சத்தா சாமானியபதத்தையடைந்தான்; குறைவின்றிய சாந்தியுள்ளவனுமிருந்தான்; சித்தத்திலுள்ள வருத்தங்களனைத்தையும் விட்டான்; அளவைக்கொடுக்கின்ற ஆநந்தமில்லாத பேராநந்தத்திஞல் முகவிகசிதமா

எகூ. விதேகமுத்தனுதல். னுன் —மாசில்லாதபதத்தையடைந்து சரீரபுளகாங்கிதத்தைவிட்டு, வெகுதினத்தில் மனதுங்கரைந்து, சநநப்பிரமையுநீங்கி, மகாசத்துவமுள்ளவனுய், சித்திரத்தைப்போலவும், மேகமில்லாத வாகாசத்தில் பூர்ணச்சந்திரனைப்போலவும், ஸ்வரூபத்தில் சிலதுநாளிற்சேர்ந்து, சூரியப்ரகாசத்திஞல் மரத்தின் பசுமைகளானவை சோஷிக்கப்பட்டதுபோல, உத்தாலக முனி பிரமப்ரகாசத்தி லக்கியமானுன்.†—



உத்தாலகன்கதை
முற்றிற்று.

---

## சுரகுகதை.

---

### அவதாரிகை.

முன்கதையிற் சமாதியினிடமாயுண்டான வாநந்தத்திஞல்மனேரூபமான சகம விஸ்ராந்தியடைந்ததைச்சொல்லி, இவ்வனுபவமாத்ம விசாரணையிலுமுதிக்கு மவ் விஸ்ராந்தியே சீவன்முத்தி சாமியமென்பதை யறிவிக்குநிமித்தஞ் சுரகுகதையைச் சொல்லுகிருர்.

க சுருதிகுரு வனுபவதினல் விசாரிக்கவேண்டுமெனல் இம் மார்க்கத்திஞல் அறிவை அறிவிஞலறிந்து சகத்திற்சஞ்சரித்து முடிவில்லாத பரிபூரணப்பதத்தில் விஸ்ராந்தியடையக்கடவாய். பார்க்கப்பட்ட விடயங்களியாவு நசிக்கும்படி சதாகாலமுஞ் சாதனை செய்து, அப்பதத்தை யடைகின்றபரியந்தம், ஞான சாஸ்திரத்திஞலும், சற்குருவினுலும், தனிமையான மனதிஞலும் பந்தமில்லாத தத்துவஞானத்தை, தாமரைக்கண்ணையுடைய ஸ்ரீராமா! விசாரணைசெய்

† இ-ம். சீவன்முத்தி தன்மையினின்று நீங்கித் தானே விதேக முத்தியை யடைந்தாரென்பதாம்.

உ. சுருதிகுரு வனுபவத்தினல் விசாரிக்கவேண்டு மெனல்.

தே யடைய வேண்டும்.— வயிராக்கியத்தினுலும், திரிஸ்ய நீங்கும்படியான சாதனத்தினுலும், ஞான சாஸ்திரார்த்தங்களினுலும், அறிவினுலும், ஆசாரிய ருபதேசத்தினுலும், இயம நியமங்களாலும், ஆகா நின்றவிம்மார்க்கங்களினுல்,மேலானஸ்வரூபபதமடை யப்படும். அல்லாமலும்,அறிவொன்றினுல் பொருந்து தற்காகும். சுபாவமான சற்குரு உபதேசத்தைப் பெற்று அதிகநுட்பமாய் நிருமலமா யிருக்குமானுல், பெருமை பொருந்திய சாதனம் முற்றுமில்லாததா யிருந்தாலும் அவ்வறிவினுல் மோக்ஷமடையலாம்.§—

ங. ஞானவான் களது தாரதன்மியத்தை வினவுதல்.

இப்படி சொன்ன வசிட்டமுனியைப் பார்த்து, இகத்திலுள்ள விபகாரத்திலிருந்தும்சமாதியடைந்து, ஏகமாகிய ஞான மடைந்தவனைப்போல ஒருவன் றுன்பத்தை நீங்கினுன்; மற்றொருவன் தொழிலில்லாதவனுய் ஏகாந்த ஸ்தானத்தில், சமாதியை யடைந்தான்; இவ்விருவர்களில் மேலானவன் யாவன், செவ்வையாகச் சொல்லுவீரென்று ஸ்ரீராமர் கேட்ட மாத்திரத்தில், வசிட்டர் சொல்லத் தொடங்கினுர்.‡— மூன்று

ச. சமாதியினில க்கண மறிவித்தல்

குணத்தினுல் உண்டானவுலகம், அநாத்மாவென்று உணர்ந்த சத்துக்களுக்கு, உள்ளத்தில் தோற்றுகின்ற குளிர்ச்சியெதுவோ அதையே சமாதியென்று சொல்லப்படும். பற்றில்லாமல் சகத்தோடு சம்பந்த நமக்கில்லையென்று திடமாக குளிர்ச்சியாக மேலாயிருக்கின்ற ஸ்வரூபசமாதியில் ஒருவனிருப்பான்; ஒருவன் விபகாரத்தோடு மிருப்பான்;— இந்த விரண்டுபேர்க

ரு. இதுவுமது.

ளுடைய மனதும் குளிர்ச்சியாக விருந்தால், வேறுபாடு எவ்வளவுமில்லை; அம்மனதின்குளிர்ச்சியே அளவில்லாத தவப்ரயோசனமாம். இந்த வநுபூதியில் பற்றியிருக்கின்றவனது மனமானது, தொழிலிற் சஞ்சரிக்குமானுலும் துன்பம் வரமாட்டாது; செம்மையாகிய அதற்குச் சமாதானம் உன்மத்த நடையைப் போல மேன்மை யுண்டாயிருக்கும்.¶— துன்பமில்

சு. வாசனுக்ஷயத்திலிருவருஞ் சரியெனல்.

லாத உன்மத்த நடையை யுடையவன், வாதனையிறந்த மனதுடையவனுனல், அவனடையானது தெளிந்தன்வ சமாதிக்கு தீர்ப்பாகச் சமானமாம்; மிகுந்தவிபாரகமுடைய ஞானிகள், மகாராணியத்தை யடைந்த

§ இ-ம். பக்குவன் சமாதிமுதலியவற்றை வேண்டானுயினு மாசாரிய ருபதேசவிசாரஞ்செய்யு மறி வொன்றையாவது விரும்பவேண்டுமென்பதாம்

‡ இ-ம். விபகாரத்திலு மேகாந்தத்திலுஞ் சமாதியினுல் ஞானமடைந்தவர்களியாவர் மேலாவ ரென்பதாம்.

¶ இ-ம். மனமான தாகந்தத்தினுற் குளிர்தலே சமாதியாதவி னிவர்கட்கு வேற்றுமை யின்றென்பதாம்.

ஞானிகள், வேற்றுமையைத் தேடுமிடத்தில், ஒருவ
ரொருவருக்கு அதிகமாகார்கள்; இரண்டுபேருஞ்
சமானமாய்ச் சந்தேகமில்லாத மோக்ஷத்தை யடைந்த

எ. வாசனாக்ஷயம் வர வேண்டுமெனல்.

வர்களே.¶—வாசனை கெடுமானால், இந்தமனமானது,
செய்கின்றதொழிலைச்செய்தும்நல்லொழுக்கமுடைய
மனது வெகுதூர நீங்கில், பக்கத்தி லிருந்தவர்கள்
சொல்லுகின்ற வசனம் உணராததுபோல தான் செய்
யாததாம். தூலமானது செயலை விட்டாலும் வாதனை
நிறைந்திருக்குமானால் அழகையுடைய சரீரவசைவற்
றாலும் சொப்பனத்தில் மலையிலே நின்று பள்ளத்தில்
விழுபவர்களைப்போல தொழிலைச் செய்ததாகும்.‡—

அ. மனோசஞ்சல நீக்குதலே சமாதியாமெனல்.

நீங்காத விபகாரங்களை செய்கின்ற மனமானது,
விபகாரத்தைவிட்டு நீங்குமானால், அதுவே சுகசமா
தியும் சலனமற்ற நிருவாணமும் மேலான வாநந்தமும்
என்றே யறிந்துகொள்வாய். மனதினது சலனமும்
நிலையும் என்கின்ற விரண்டும் தியானுபாவமும் தியா
னமும் என்கின்ற விரண்டும் திருஷ்டிக்கும் நிலையுள்ள
காரணங்களாகும், ஆதலால் இந்த மனதுண்டாகின்ற

கூ. இதுவுமது.

குணத்தைக்கெடுப்பாய்.—சிந்தனாரூபமாகிய வாசனை
யில்லாமலிருக்கின்ற திடமாகிய மனதையே, தியான
மென்று சொல்லுவார்கள். அவ்வுபசாந்தியும் அக்கை
வல்லியமும் எப்போது மந்த மனமேயாகும். இம்
மேலான நிருவாணபதநிமித்தம் வாதனையானது,அற்
பமாகக் கரையவேண்டும் சதாகாலமும் வாதனையில்
லாத மனமானது, செயலிறந்த நிருவாணபதத்தை

க0. தத்துவஞானத்தினால் வாசனாக்ஷயஞ் செய்யின் வீட்டிலாவது காட்டிலாவதிருக்கலாமெனல்.

அவ்வாசனாக்ஷயத்தினா லடையும்.— வாசனையானது,
மனதினுடையதொழில் நீங்காததுன்பத்தை பருக்கச்
செய்யும்; ஆகையினால், வாசனையை மிகவுந்தேயும்படி
செய்வாய்.கூட்டமாகியவநேகவஸ்துக்களில்யானென்
கின்ற பாவனையை மனதினாற் கெடுத்து எவ்விடத்
திருக்கவேண்டுமோ, அவ்விடத்தில் மலைகளிலாவது
வீட்டிலாவது மற்றெவ்விடத்திலே யானாலும் நீவசிப்
பாய்.—இல்லறத்தி லிருப்பவர்களும், சமாதானமான

கக. அகப்பாவநீங்கினவர்க ளிருக்கும்வீடும், ஞான நிறைந்தவர்க ளிருக்குநாடுங்காடேயெனல்.

தையுடையவர்களும், அகங்காரமாகிய குற்றமற்றவர்
களுமாகிய விவர்கள் பொருந்தாநின்ற வீடானது,
ஏகாந்தமனமாகிய கானகமேயாம். கடைவீதியிற்போ
யறிகின்றவர்கள்போக்குவரத்தாக சஞ்சரித்தும்பற்று
ததினால் வழி நடப்பவர்க்கு கடைவீதியில் போகாத

---

¶ இ-ம். வாசனாக்ஷயம்வந்தவன் விபகாரியானாலு மேகாந்தியானாலு மேற்மற்
குறைச்சலின்றி யொருதன்மையராவரென்பதாம்.

‡ இ-ம் வாசனாக்ஷயம்வரின் றொழில்செய்துஞ் செய்யாதவன், அஃதிருந்தாற்
றொழிலைவிட்டும் விடாதவனென்பதாம்.

வர்களுக் கொப்பாவார்கள். சுகபோதம் பூரணமான
வர்களுக்கும், அந்தப்ரகாரமே, நகரமும் வனத்தையு
கஉ. அகத்திலுள்ளது புறத்திலுமுள்ளதெனல். மொத்திருக்கும்.§—நித்திரையும் விழித்தலும், படித்
தலும், போகுதலுமாகிய விவைகள் தொடர்ந்துவந்
தாலும், அந்தர்முகமாகிய தொடர்ச்சியினு லெப்போ
தும் வசிக்கின்ற வீடும், நகரமும், தேசமுமாகிய
அனைத்தும், காட்டைப்போல பார்ப்பவர்களே மே
லான வறிவை யுடையவர்கள். குற்றமற்ற அந்தர்
முகத்தினுல் சகலமு ஞானுகாயமாய்விடும். பிராண
னுக்குச்சமான மானவனே? மனதில் குளிர்ச்சியானது
வந்து அகநிறையுமானுல் சகங்களனைத்தும் குளிர்ச்சி
கங. இதுவுமது யாம்.— மனமானது, மயக்கத்தினுல் வேகுமானுல்
சகங்களனைத்தும் காட்டாக்கினியைப்போல வெந்து
தோற்றும். உண்டாகின்ற ஆத்மாக்களனைத்திற்கும்
அகத்திலிருப்பதே புறம்பிலு முண்டாயிருக்கும்.
அமிர்தமிருக்கின்ற சுவர்க்கலோகமும், பூமியும், வாயு
வும், ஆகாயமும், தொகுப்பாகிய மலைகளும், நீண்ட
ஆறுகளும், திசைகளும், சூழ்ந்திருக்கின்ற சகலமும்,
அழுத்தமாகிய அந்தக்கரண தத்துவத்தினுடைய
கச. சமாதியடைந்தவனிலக்கண மறிவித்தல். பிரிவுகளாக புறம்பினிற்பனவாம்.¶— ஆத்மஞானத்
தில் சுகத்தை யடைகின்றவனும், இந்திரியங்களால்
கிரியைகளை செலுத்துபவனும், நீக்காநின்றசுகதுக்க
வகத்தில் அடையாதவனுயு மிருக்கின்றவன், சதாகால
மும் சமாதியைப் பொருந்தினவன். சகலவுயிர்களும்
நினைக்கின்ற தனதுயிரைப்போலவென்று, பிறர் திரவி
யங்களை ஓடுபோலஇகழுகின்ற வுலகவச்சத்தினுலல்லா
மல் சுபாவத்தினுல் பார்த்தவனே சகலத்தையும் பார்
கரு. ஞானவானிலக்கணமறிவித்தல். த்தவன்.— மரணமானது இப்போது வந்தாலும்,
கற்பமுடிவில் வந்தாலும், ப்ரகாசிக்கின்ற ஞானவான்
கள், சேற்றிலழுந்தியதங்கத்தைப்போல களங்கத்தை
யடையார்கள். சகலமுமாயும், ஞானதிருஷ்டியாயும்,
விஸ்ராந்தியடைந்து, கெடுதலும் ஆதியந்தமில்லாமல்
ஏகமாகியும், ஆநந்தமாத்திரமாகியும் ப்ரகாசமாகியும்,
சகங்களில்லாததாகியு மிருக்கின்ற அடையாளத்தை
கசு. ஞானம்பெற்றவரில்லற ஞானிக்கிழிவுந் துறவற ஞானிக்குயர் யுடையதாமென்று வேதங்கள்சொல்லும்.†— எல்லா
மென்றது முதலாகச் சொல்லிய சகலமும் ஞானமறி
விக்கு நிமித்தமேயாம். பொருந்த வுரைத்த சொற்
களினு லென்ன ப்ரயோசனம், வீணல்லவா, ஆகை

§ இ-ம் வாசனுரூபமானமனே சங்கற்பமிறந்தலே சுகாகாரமான வேதாந்தஸ்தான[மென்பதாம்.
¶ இ-ம். மனதெப்படியோ வப்படியே யாவும் விளங்குமென்பதாம்.
† இ-ம் உள்ளும் புறம்புஞ் சிதாநந்தானுபவமாய் விளங்குகின்றவர்க டொழிலச்செய்துஞ் செய்யாவிடினு மபேதமேயென றறியென்பதாம்.

வுமின்றென்றறிவித்திதற்குத்திருஷ்டாந்தமறிவிக்கத்தொடங்கல்.

யால் இந்நாமங்களனைத்தையும் பிரமவாசகமான பிரணவமென்றே தெளிவாய், நன்மையையுடைய ஸ்ரீராமா? இவ்விடத்திந்த வனுபவத்துக்கு முற்காலத்தில் உண்டாகிய வோர்கதையை யான்சொல்லக் கேட்பாய். மலைச்சார்பில்வசிக்கும் புன்மையர்களென்கின்ற கிராதர்குலத்தில் சுரகுவென்னு நாமமுடையவன் சரித்திரமானது அதிசயமுள்ளது.—இமயமலையின் முடிவாகிய கைலாசபருவதத்தில் ஏமசடர்களென்கின்ற யுத்தஞ்செய்கின்ற நீண்டவிற்களைத்தரித்த வேடர்களுண்டு, அவர்க்கிராசாவானவன் சுரகுவென்கின்ற நாமமுடைய சலனமற்ற சுத்தவீரன் நடுநிலையினாலும், அரசநீதியினாலும் சிஷ்டபரிபாலனத்தினாலும், துஷ்டநிக்கிரகத்தினாலும், சகமார்க்கத்தைச்செய்கின்றகாலத்தில்,நமதுவல்லமையினால் சகத்தை வருத்துவோமானால் அவர்கடுன்ப நமக்கல்லவா.—

கள. சுரகுவேந்தற்கு விசாரமுதித்தல்.

கஅ சற்குருதரிசனமாய்த் துதித்தல்.

அப்படியல்லாமல் தருமசாஸ்திரப்ரகாரமான தண்டத்தின் முறைமையை செய்யாமற்போவமேயானால். பிராணிகள் காப்பவனில்லாமல் வீணாகக்கெடும். இந்தவரசாங்கம் கொடியதென்று உஞ்சலாடுகின்ற மனதையுடையவனாய் மனது வருத்தமடைந்தான். பலமிகுந்த புசத்தையுடைய சுரகுவினிடத்தில் மாண்டவியமுனியானவர் வரவும், சுரகுவானவர் வணங்கித் தோத்திரஞ்செய்து நன்மையையுடைய முனியே? உமதுவரவினால் யான் மிகவுஞ் சுகத்தையடைந்தேன், சத்துக்களின் அத்தில் நிலைக்கப்பெற்றேன்.—தருமங்களனைத்தையு மறிந்திருக்கின்ற பகவானே? நீர் வெகுகாலமாய் தளர்ச்சிதீர்ந்திருக்கின்றீர், அரியகருமமுடையேனது சந்தேகத்தைத் தீர்ப்பீர், சந்தேகத்தைப்போல துன்பமுண்டோ. பெரிதானபூமியில்எனதுசெங்கோலின்கீழுள்ளவர்கள்மனதனுக்கிரகத்தினாலு நிக்கிரகத்தினாலும் சுகதுக்கங்களைபொருந்தாநின்றதுன்பங்களைப்பார்த்து,ஆண்சிங்கத்தின்முன்புயானையைப்போல சுழலுகின்றனன்.—

கசூ தனதைய நீங்கும்படி வினாவுதல்

உ௦. இதுவுமது

சூரியனது ப்ரகாசத்தைப்போல எவ்விடத்து நிறைந்திருக்கின்ற சமமானது எனதறிவில் பொருந்தும்படி கிருபையினால்அறிவிப்பாயென்றவரசனுக்கு, மாண்டவியமுனியானவர் சொல்லுவார். ஒப்பற்ற ஆத்மவிசாரணையில், க்ஷணநேரத்தில், வராநின்ற சாற்காலமானது உண்டானமாத்திரத்தில் மூடுபனி கெடுவதுபோல, மனதின்களங்கமானது போகும்.¶-

¶ இ-ம். சுரதேவேந்தனுக் கிராசநீதிப்படிசெய்யு மனுக்கிரக நிக்கிரகத்தினுலுயிர்கள் வருந்துவதை முன்னிட்டாத்மவிசார முண்டானதென்பதாம்.

௨௧. ஞானமுபதேசித்தல்.

நானர், இவ்வுலகமெப்படி வந்தது, சநநமும் மரணமும் எப்படி வந்ததென்று உள்ளத்தின்கண் நீங்காமலிந்தப்ரகாரம் விசாரித்துப் பார்க்கில், மகத்தான பதத்தை யடையக்கடவாய். தானுகிய சுபாவத்தையுடையவனுய் இராநின்ற உன தாத்மவிசாரணையினுல் தனக்குத்தானே மனமானது நீதேடுகின்ற ப்ரகாரமுண்டாகி தனது வடிவத்தைவிட்டு விஸ்ராந்தியடைந்து துன்பத்தை நீங்கும்.—

௨௨. பவத்தை நீங்குதற்குச்சாந்தி வேண்டுமெனல்.

வாடுதனீங்கி குளிர்ந்த வுன்னுடையமனதுக்கு இந்தவுலகத்திலுள்ளகாரியங்கள், சிவந்தபுள்ளிகளையுடைய யானைக்கு பசுவின துகுளப்படியைப்போல தோற்றும்; இழிவுள்ளமனதுக்கு அழகிய பூமியிலுள்ள கிரிகைகள் அற்பமேயானுலும் கடத்தற்கரியதாகும்; கோவின்குளப்படியிலுள்ள அழகிய சலமும்வார்த்தீகமுள்ளமசகத்துக்கு அளவுங் கரையுங் காணக்கூடாத சமுத்திரமல்லவா.-

௨௩. ஆத்மதரிசன முண்டாகுமார்க்க மறிவித்தல்.

சகத்தைஎவ்வளவெவ்வளவு நீக்கினுயோ, பரமப்ரகாசமா யொளிவீசாநின்ற பரமாத்மாவானது, அவ்வளவவ்வளவுண்டாகும். எந்தநாள்மட்டுஞ் சகலமும் விடவில்லையோ அக்காலமளவும் உண்மையாகிய வஸ்து வந்தடையாது. சகலதிரிஸ்யங்களும் விடுபட்டால் மிஞ்சின திருக்குவே தானுகும், மனத்தொந்தமில்லாமல் பேதங்களனைத்தும் நீங்காவிடின் பூரணமாகிய பரமாத்மஸ்வரூபப்ரகாசந்தோற்றமாட்டாது.-

௨௪. சகலகற்பனையு நீங்கினவிடத்துஞான முதிக்குமெனல்

சாமானியமாயிருக்கின்ற கனகமுதலிய வஸ்துக்கள் ஒற்றுமை தோற்ருதானுல் ஆத்மஸ்வரூபத்தை அடைவதெப்படி, ஆகையினுல் ஆத்மாவையடையுநிமித்தமாகசகலவிடயங்களையுநீக்கவேண்டும். துன்பநீங்க யாவையும்விட்டாயானுல் மிஞ்சினதே நாசமில்லாத மோக்ஷமாம்; மேன்மையான பரமபத மதுவாகும். சுரகுவென்னு நாமத்தையும், கீர்த்தியையுமுடைய வேடராசாவே?—

௨௫ வாசனுநிவிர்த்தியே ஞானமாமெனல்.

சகலமான காரணகாரியங்களுடைய பாரம்பரியமான குணத்தையுடையதாகிய வுலகத்திற்பொருந்திய விடயங்களில் அஞ்ஞானவாசனையினுன் மிகவும்மோங்கிய மனதைக்கெடுத்துப்ரகாசிக்கின்ற சரீரவாசனையையும் மேல்விடுவையாயின்குற்றமற்றநன்மையானவஸ்துவுண்டாகும். கீர்த்தியையுடைய வரசனேயென்றுசொல்லிதனதிடத்திற்பொருந்ததவசிரேஷ்டனுன மாண்டவியமுனியானவர் போயினர்.¶—

௨௬ அரசனுமத்.

பின்பு, வேடர்க்கரசனுனவனேகாந்த

¶ இ-ம். இராசகாரியங்களைச்செய்து மனதல்வருஞ் சுகதுக்கங்கள் தாக்காததற்கு நித்தியானந்த சீதளமான வாத்மானுபவத்தை யடையும் விசாரத்தை யனுக்ரகித்தாரென்பதாம்

தரிசனஞ் செய்யும் பொருட்டுஅநாத்மாவானதேகத்தைநியதிசெய்தல்.

ஸ்தான மடைந்து, நல்லறிவினால் எப்பொழுதும் யானென்பதாரென்று விசாரித்தான். பாதிசிரசுபரியந்தமாகிய தனிமையான சரீரத்தை யானென்று சொல்லுவது அதிசயமாகும்; யான் சடமாகிய சரீரத்தை விசாரிப்பேன்; துன்பத்தைச்செய்கின்ற இச்சரீரமானது மாமிச மென்புமுதலானவைகணிறைந்திருக்குஞ் சடமாம்;

௨௭. அநாத்மாவான இந்திரியங்களையுஞ் சீவனையு நியதிசெய்தல்.

ஆதலினானல்ல.-பத்திந்திரியங்களு மெனக் கன்னியமாதலாலும் சடமென்கிறபடியினாலும் யானல்ல; சரீரமுதலிய இக்கூட்டமெனக் கில்லனவாதலால் யானல்ல; மிஞ்சினதெதுவென்றுபார்க்கில் கலந்திருக்கின்ற சீவனே மிஞ்சினதாம்; இச்சீவனும் ப்ரத்தியேகாத்மாவா லறியப்பட்டது திரமாகிய ப்ரத்யேகாத்ம சைதன்யத்தினால், தெரிகின்ற விச்சீவனும் மேலான வாத்மதத்துவ மாகமாட்டாது.—

௨௮. ஆத்மதரிசனஞ் செய்தல்.

இச்சீவனையும் நீக்குவன்; தெரிகின்றபொருளானவனே; மிஞ்சினதாய் விகற்பமில்லாமல் நின்மலமாகிய பூரண ஞானமே யெனது ஸ்வரூபமாம். திருமாலும், பிரமாவும், உருத்திரனும், தேவேந்திரனும், நமனும் இவர்கண்முதலிய விடங்கடோறும், உருட்சியையுடைய முத்துகளுக்குள் நூலென்பதைப்போலதோற்றாநின்றவிந்தமேலானஞானமானதிருக்கும்.*—

௨௯. ஆத்மவியாபகத்தைத் தரிசித்தல்.

பகவானாகிய இந்தவாத்மதத்துவமென்னும் மேலான ஞானசத்தியானது, உலகநடையென்னும் வியாதியில்லாமல் பயப்படுகின்ற ஒப்பற்ற உருவத்தையுடையதாகியும், திசைகளெல்லாம் வியாபித்தும் எந்தவஸ்துக்களிலும் பூரணமாயும், சூட்சுமமாகியும், பாவாபாவங்களுமில்லாமல், பிரமதேவன் வாசஞ்செய்கின்ற சத்தியலோக பரியந்த முண்டானதாகியும்,—

௩0. ஆத்ம சத்தியேசகல மாகவும் விளங்குகின்றதென்றறிதல்.

சத்திகளனைத்தினுக்கும் இச்சிற்சத்தியானது, வசிக்கப்பட்டஸ்தானமாம்; வேறுவேறுள்ளதாகி, பந்திபந்தியாகி, இவ்வுலகத்தில் காணப்பட்ட சகலமும் நாநாவிதமாக ஞானமகைகின்ற விஸ்தாரமேயல்லாமல், அற்பமும் வேறில்லையாம். தொந்தமான வாசனையில்லாமல் விடயங்களை விட்டு, எழுபிறப்பிலுந் தொடராநின்ற மயக்கமு

௩௧. ஆத்மஸ்வரூபமாதல்.

நீங்கி,—சுழுத்தியவத்தையில் நிலைபெற்றவனதுசெயலைப்போல், குற்றமற்ற சமத்தையுடையவனாய், திடமாகிய ஆத்மதத்துவத்தில் வசித்தேனென்று சகலமும் விடுபட்டு, விவேகத்தினது உண்மை நிச்சயத்தினால், அரியதபசையுடைய விசுவாமித்திர முனியானவர் பிராமணமுறைமையைப்பெற்றதுபோல, மேன்

* இ-ம். தேகமுதலிய சடவஸ்துக்களை நியதிகளைந்து மிஞ்சின சித்துருபத்தைத் தரிசித்தாரென்பதாம்.

௫௨. சகலமுமாத்மஸ்வரூபமென்றறிந்தரசாக்ஷிசெய்தல்.

௫௩. இல்லறத்திலிருந்து ஞானம்பெற்றசுரகுவேந்தற்கும் துறவறத்திலிருந்து ஞானம்பெற்ற பார்த்திபமுனிக்கு மெவ்வளவு முயர்வு தாழ்வின்றி விளங்கியவனுபவ சம்பாஷணையைச் சொல்லத் தொடங்கல்.

௫௪ பார்த்திபற்கு விரத்தியுண்டானவேதுவையுரைத்தல்.

௫௫ பார்த்திபற்கு ஞானமுண்டாதல்.

௫௬. அரசனுமுனியு மனுபவத்தையும் உசாவத் தொடங்கல்

௫௭. மூனுவானுபவம்பெற்றதறிவித்தல்.

௫௮. அரசனே

மையுள்ளபிரமபதத்தை, சுரகுவானவ னடைந்தான்.— மேன்மையான குணங்க ளொன்றுமில்லாததது சுழுத்தியடைந்தவனது மனோவிருத்திக்குச் சமானமாய் சுரகுவரசன், அலைவற்றகொழுந்தினால்ப்ரகாசிக்கின்ற சித்திரதீபத்துக்கொப்பானான். நல்லவனுக்கிரகமும், நிக்கிரகமும், விருப்புடன் வெறுப்பும், மச்சரமும், தொந்தமும், நல்லறிவுமறியாமையும்என்கின்றயாவையும் பழகாமல் பிரகாசித்தான். ¶— அத்துவிதபோதமுற்ற சுரகு என்னும் உத்தமனுக்கும், பன்னுதனென்னு நாமத்தையுடைய இராசரிஷிக்கும் நல்லவன்பினால் வராநின்ற நன்மையை இன்பமாகக்கேட்பாய், மலைபோலுண்டாகிய புயத்தையுடைய ஸ்ரீராமாவென்று வசிட்டமுனி சொல்லுவார்.—

பாரசீகர்குலத்தில் பரிகனென்னும் பூமிக்கரசனாகிய வீரகண்டாமணியையுடையவன், சுரகுவென்னு நாமத்தையுடைய அரசனுக் கிஷ்டமானவன், பத்து வருஷ மழையில்லாமையால் இயாவருமரணமடைய கொடிய வுதராக்கினி மிகுதலைப்பார்த்து நடுக்கமுற்று வாடினான்.— துன்பமாகின்ற தனது நாடுவிட்டுப்போய் ஆரணியத்திற்சென்று அன்னம் புசிப்பதிலாசைவிட்டு, தவத்தைச்செய்து உதிர்ந்த சருகு புசிப்பாக பன்னுதனென்கின்ற நாமத்தைப்பெற்று, தவத்தினதுகுணத்தினால் நலமான வாத்மஞானத்தைப்பெற்றான். அவனது நல்லதவத்துக்குச்சமானமான துண்டோ.— ஒப்பற்ற மூன்றுலகமென்கின்ற மடத்தில் ஒன்றுபட்டிருந்த பன்னுதமுனியானவர், வாய்மையைப் பொருந்தி யிருக்கின்ற சுரகுவென்னு நாமத்தையுடைய அரசனிடத்தில் வருபவனாய் எதிரே தோற்றவும், அச் சுரகுவானவன் அன்போடடைந்து இரண்டுபேர்களும் அன்பைப் பொருந்தியிருந்து, இத் தன்மையவாகிய வனுபவங்களைப் பேசத் தொடங்கினார்கள்.—உம்மை இத்தினத்தில் யானடைதலினால் நீங்கற்கரிய சுகம்மேற்று வினைநீங்கினதென்று சொல்லிய சுரகுவென்னு நாமத்தையுடைய விராசாவை, பன்னுதமுனியானவர் பார்த்து, உன்னிடத்தில்வந்து மாண்டவியமுனியானவர் போதித்த ஞானத்துக்குச் சமானமாக தன்னைவாழ்விக்கும் உண்மையான ஞானபதத்தை, நானும் அடைந்தேனென்று சொல்ல.— மிகவுந் தெளிவுற்று கெம்பீரமாக சம

¶ இ-ம். விசாரமுகத்தா லாத்மநிஷ்டனாய்ச் சர்வம் பிரமமென்னு மனுபவத்தினாற் சுகதுக்ககந்தாக்காமற் சுகவடிவாயிருந் தரசாட்சிசெய்தாரென்பதாம்.

முனி வினாவுதல்.

திருஷ்டியினால் இவ்வுலகத்திலுள்ள காரியங்களை, அரசனே செய்கின்றாயோ. பிரிவுற்ற காலத்தை அறியாநின்றஉனது சரீரமானது, கூட்டமாகிய மனோவியாதியும் வியாதியும் தொடரவில்லையோ.— அடைகின்ற காலத்தில், இன்பமாகிய செல்வத்திலழுந்தாமல் நடுவாக நிற்கின்றாயோ. சங்கற்பம் விட்டு விஸ்ராந்தியடைந்து தடையில்லாத உபசாந்தமாயும, கைவல்யமாகியும், சஞ்சலமொன்றுமில்லாத நடையைப்பழகி மேலானதாகியுமிருக்கின்ற சமாதியைப் பொருந்தினையோ.‡—

௩௯. இதுவுமது.

சும்மாயிருந்தாலும், இடைவிடாமல் தொழிலைப் பொருந்தினாலும், ஆத்மஞானி எப்போதுதான் சமாதியைவிட்டு நீங்கினவனாவன் நிறைந்தஞானமுண்டான மனதையுடையவர்கள், உலக விபகாரங்களைச் செய்தாலும், பிரிவில்லாத உண்மை நிஷ்டையையுடையவராய் சமாதியைவிட்டு நீங்க மாட்டார்கள்.*—

௪௦. சமதிருஷ்டியாலரசு செய்கின்றாயா வென்ற முதல் வினாவுக் குத்தரம்.

உதாரமுள்ளவனே? பூரணமான சாந்தியில்லாதவர்கள், பிரமாஞ்சலியுடனே பத்மாசனத்தைப் பெற்றாலும், சமாதியிற் பொருந்தார்கள். இச்சை யென்னுந் துரும்புக்குஅக்கினியாயிருக்கின்ற ஆத்மஞானமொன்றே மேன்மையான சமாதியாகும். சாந்தியில்லாமற் சும்மாயிருக்கும் அதுசமாதியல்ல.†— எப்போதும் ஒருவழிப்பட்டதாய் மனோநாசமடைந்து தத்துவஞானத்தையறியில், அந்தஞானமே மேலான சமாதியாக மனதிற் பூரணமானவர்கள் சொன்னார்கள்.

௪௧. பாவிக்கும்போதப்பாவனை சுகதுக்கத்தைத் தொடரவில்லையோ வென்ற விரண்டாம் வினாவுக் குத்தரம்.

௪௨. போகங்களிற் சென்று மதிலழுந்தாதிருக்கின்றாயோ வென்ற மூன்றாம் வினாவுக் குத்தரம.

மயக்கமில்லாத சத்துக்களறிவு அற்பமும் தராநின்ற தொழிலின்றிறத்தை மறவாதே, காலத்துக் கொப்பாக தனதாத்மஸ்வரூபத்தை நிமிஷமு மறக்கமாட்டாது.¶—

௪௩. நிருவிகற்பசமாதியை யடைந்தாயோ வென்ற நான்காம் வினாவுக் குத்தரம்.

செவ்வையாகச் செல்லுகின்ற வாயுவானது தனதுநடையினை மறவாத நீதியைப்போல, ஞானிகளறிவானது பேதமற்ற வாத்ம ஞானத்தையே மறவார்கள். பிரிவில்லாத வறிவில் ஒற்றுமையை யுடையவர்கள் சமத்துவத்தையுடைய சத்துக்கள் நெருங்கியவிபகார வேற்றுமையை நீங்கினவர்கள்பிரமபதத்தையடைந்த

‡ இ-ம். பார்த்திபமுனி தனதிஷ்டரான சுரகு சகசசமாதியினின்றும், அரசாக்ஷி செய்கின்ற வனுபவத்தை நான்குவிதமாகப் பிரித்துக் கேட்டனரென்பதாம்.

* இ-ம். சகலமுந் தனதல்லாசமாய்விளங்குஞ் சமாதிநீங்காதவறிஞர்சந்நிதியிற் சகலமுஞ் சேட்டிக்கு மென்பதாம்.

† இ-ம். பாவனை யென்னுமிச் சாத்துரும்பை பாவனாதீதமென்னும் ஞானாக்கினி யெரித்தலினது துன்பவின்பங்களை யெங்ஙனந் தொடருமென்பதாம்.

¶ இ-ம் உண்மைஞானமான தன்னைப் பிரியாம லாத்மாநந்தத்தை யனுபவிக்குமாபோகிகளெங்ஙனம் விடயபோகத்தி லழுந்துவாரென்பதாம்.

௬௪. பார்த்திப முனி சந்தோஷித்துரைத்தல்.

வர்கள்.*— ஆதலினுல் பலவாகவும் ஒன்ருகவு மிருக்கின்ற சரீரவிபகாரங்களனைத்திலும், காலம்போக்காத மேலான வாக்கியத்திஞற்ப்ரகாசித்த அறிவையுடையவர்கள், எவ்விடத்தி லிருக்கின்ருர்கள்; அதிசயமாக பேதமில்லாமல் அறிவை யறிந்தாய்; பிரமபதத்தை

௬௫. இதுவுமது

யடைந்தாய்.— பூரண சந்திரனைப்போல உள்ளே குளிர்ச்சியடைந்தாய்; மனதின்கண் அகம்பாவமென்னுந் துக்கங்கெடவும், களங்கமறவும் பூரணமானுய், நீக்கப்படாத வாத்ம நிச்சயத்தை அடைந்துதானே சுயமாக எவ்விடத்தும் ப்ரகாசிக்கின்ருய்; தெளிவையுடைய சுரகுவேயென்று கேட்ட பரிகரென்பவர்க்கு,

௬௬. பின்னுமரசன் றனதனுபவத்தைச் சுருக்கிச் சொல்லுதல்.

சுரகுராஜனனவர் மேற்சொல்லுவார்.o—விரிந்த வசனங்களினுல் இலாபமென்ன, ப்ரயோசனங்க ளனைத்தும் விட்டு எப்போதும் சமமாக மனமானது, தனக்குட்ப்ரகாசித்து உண்டான பிரமாநந்தமாய், ஒப்பற்றவோர் ஞானதிருஷ்டி யுண்டாய், திரமாக வாத்மஞானம் ப்ரகாசிக்கின்றது என்று சொன்னுன்.†—

சுரகு கதை

முற்றிற்று.

---

# பாசவிபாசன்கதை.

## அவதாரிகை.

முற்கதையில் நிரதிசயாநந்தமான குளிர்ச்சியை சமாதியாதலாலஃதுள்ளவர்க ளாராயினு மவர்களே சகத்விஸ்ராந்தியடைந்த ஜீவன்முத்தர்களென்று சொல்லி, யவ்வனுபவமில்லாவிடில் வெகுவிதமான வருத்தமுண்டாமென்பதை யறிவிக்குநிமித்தம், பாசவிபாசன்சம்வாதஞ் சொல்லுகிருர்

---

௧. சுகபோதமுள்ளவர்க்குத் துனபமொரு போதுமின்றெனல்.

இந்தப்ரகாரம் சுரகுபரிகனென்று சொல்லப்பட்ட இவ்விருவர்களு மூலகத்தினது முறைமையை விசாரித்து, அன்புசெய்து, ஒருவருக்கொருவ ராராதனை செய்து விரும்பி தங்கள் செய்கையி லிருந்தார்கள். எப்பொழுதும் அத்யாத்மஞானமே ஸ்வரூபமாகியும் அந்தர்முகமாகியும், மகிழ்ச்சியடைந்து ஆத்மஞானத்தைவிடாமல் அனுபவிப்பவர்களுக்கு எவ்வளவுமொரு

* இ-ம். பிரித்தறியும் போதும் பிரிவற்ற ஞானவடிவமாய்விளங்குதலின் ஸ்வரூப சமாதியைப் பெற்றவரென்பதாம்,

o இ-ம். சுரகுவேந்தன்சொல்லிய வனுபவத்தைக்கேட்டு அகம்பாவநீங்கியாநந்தசீதளமானஸ்வரூபசமாதியைப் பெற்ருயென முனி சொன்னு ரென்பதாம்.

† இ-ம். சித்தின்பநீங்கிப் போராநந்த திருஷ்டியாற் சஞ்சரிக்கின்றேனென்னவப்போதவ் விருவரு மாத்மசுகத்திற்கலந்திருந்தனரென்பதாம்.

உ. சீவனை எருதாக வுருவகப்படுத்தி அவன்படுந்துன்பத்தை யறிவித்தல்

வருத்தம்வராது.— இச்சையென்னும் வலியகயிற்றினினங்களினால் பந்தமுற்று, அரியவியாதியென்னும் ஈக்கடிக்குத் திடுக்குற்று, குற்றம்பொருந்திய போகமென்னும் தடிகளாலடிபட்டு, அஞ்ஞானமென்னும் தார்க்கோலினாலலைந்து, துற்கருமமென்னும் கும்பியிலமிழ்ந்திருந்து, கொடியசம்சாரமென்னும் கானகத்திற்சுற்றி, மகாமோகமென்னும்தழைநிழலில்வெற்றியையுடைய ஸ்ரீராமா? சீவனானவிடபம்நித்திரைசெய்யும்.—

௩. சீவனைக் கரையேற்றவேண்டுமெனல்.

அடையப்பட்டதுக்கமென்னும் கனத்தசுமையைச்சுமந்து வருதல்போகுதலென்னும் இவ்விரண்டும் உடற்புண்ணாய் அளவற்றசநநமென்னும் பள்ளத்தில்விழுகின்ற சீவனாகிய விடபத்தை, இந்தக்குட்டையிலிருந்தும் ஒழிவற்றமுயற்சியினால் எடுத்தலேவல்லமையாம். மேலான ஞானவான்களது நட்புண்டானால், கப்பலையுடையவர்கள்வங்கத்தைக்கொடுப்பதுபோல, சநநசாகரத்தைத்தாண்ட யுத்தியைக் கொடுப்பார்கள்.†—

௪. சீவன்சிவமாதற்கு மகான்கள் சகாயமன்றியு மனதின் சகாயமுக்கியமாய் வேண்டுமெனல்.

ஆத்மஞானிகளாகிய இரசமுள்ளகனிகளும் புஷ்பங்களுநிறைந்த குளிர்ந்ததோப்பானது, எந்தவிடத்திலில்லையோ, அந்தவிடம்பேய்த்தேரையுடைய பாலைவனமாம்; அவ்விடத்தில் வாசஞ்செய்பவர்கள் அஞ்ஞானிகளல்லவா; செல்வமும், சிநேகமும், சாஸ்திரமும், உறவும்,கிரியைகளும் முதலிய யாவுஞ்சகாயமாகாது; ஒழுங்குள்ளமனமே? ஆத்மாவையடையத்தக்க பரகதியிலேற்றுதற்கு சகாயஞ் செய்யவேண்டும்.—

௫. மனமானது தேகத்தைச் சடமென்றறி யிற்சித்தைத் தரிசிக்குமெனல்.

செவ்வையாய் நீங்காமல் உடன்பொருந்துகின்ற சிநேகமாகிய மனதுமாத்திரத்தைச் சேர்ந்து கொஞ்சம் விசாரிக்குமளவில் சீவன் வாழ்வையடையும்; நஞ்சாகிய விம்மாமிசசரீரத்தை முறியாநின்ற விறகுக்கும், ஓட்டுக்குஞ் சமானமாக முதிர்ந்தமனதினால் பார்த்தறிந்தால், இந்தவளவினால் தேவர்களும் வணங்காநின்ற பூரணஞானத்தை உணர்ந்தடையலாம்.—

௬. சித்துதரிசனத்தாற் றுரிய திருஷ்டி வெளிப்படுமெனல்.

மகா சமுத்திரத்துக் கொப்பாகியும், வாக்கியங்களனைத்திற்கு மதீதமாகியும், சமானமில்லாததாகியும், பற்றற்றதாகியும், கேவலமாகியு மிருக்கின்ற நிறைந்த ஞானப்ரகாசத்தினது சுவாலையோடுஞ்சேர்ந்து, குற்றமறும்படியாகவும் அசைவறும்படியாகவும் விளங்காநின்ற மறைப்பில்லாத துரியதிருஷ்டியானது வெளிப்படுமாயின், அதனோடு அதுதானேசமானமான முறைமையினால் சுழுத்தியடைந்தவனுக்கு சமீபமாக

---

† இ-ம் சீவனது சிதாபாசத்தன்மையை நீக்கிச் சிவமாக்கும் பொருட்டு ஞானவான்களது சகாயம் வேண்டுமென்பதாம்.

எ. அகம்பாவநீங்கின அத்துரியமே பிரமாநந்தமாகவிளங்குமெனல்.

உவமிக்கத்தக்கதாய்தோற்றும்.— ஆகியவந்தத்துரியவவத்தையானது, உருவங்களனைத்தையுந் தரித்திருக்கும் ஆகாயத்தைப்போல வியாபகமுள்ளதாம். இழிவுள்ளமனதுடன்சேர்ந்த அகம்பாவமரித்தால் எவ்வஸ்துக்களிடத்திலுநிறைந்திருக்கின்றகுறைவில்லாத பிரமாநந்தமாகப்ரகாசிக்கும்;ப்ரகாசிக்கின்றபரமாத்மஸ்வரூபமாகும்; தான்மிகவு முயற்சிசெய்யிலபிக்கும்; சுழுத்தியையுடையவர்கள் குணத்தைப்போல தம்மிடத்தில் தேடத்தக்கதாம்.— சொல்லிய வத்துரியமானது வசனங்களுக்ககப்படாது; அகத்திலனுபவித்தால் பொருந்துவதாகும். வரம்பற்ற இவையெல்லாம் அவ்வாத்மஸ்வரூபமாகும். மிகுந்தவேறுபாடுடைய

அ. பிரமானந்த வடிவமான துரியமே யாவுமாய் விளங்குமெனல்

மனமானது, பிரிவில்லாமலடங்கினால்உள்ளும்புறம்புமாகிய எவ்விடத்தும் சராசரவடிவமாகிய குற்றமற்ற தேவதேவனான பிரமவஸ்து சுயமாகவேயனுபவப்படும்;— இவ்வனுபவம் வந்ததன்பின்புவிடயவாசனைகள் கெடுவதாம்; அதன்பின்பு பேதமில்லாதவஸ்துவினுடைய ப்ரகாசமுண்டாகும்; அதன்பின்பு கெடுந்தன்மையில்லாத சமபாவனையினால் ஆத்மஸ்வரூபத்தில் வேறுபாடழிதல் உரித்தாகவுண்டாகும் மகான்களுக்கும் இவ்வனுபவமே மதிக்கப்படாத ஸ்வரூமாம்.†— விடயசம்மந்தமான மனதை விவேகமுள்ள மனதினாற் கெடுப்பித்து, குற்றமற்ற ஆத்மவஸ்துவைத் தரிசிக்கார்களாயின், ஒருநாளும் சம்சாரதுக்கம் நசிக்காது. மனதிறந்தால் நிறைந்தஆநந்தத்தினால் வியாபகமுள்ள ஆத்மாவினது ஞானம் பிரகாசிக்கும். சொல்லாநின்ற விவ்வனுபவத்துக்கு ஒருகதையை குலத்தி லினிமையுள்ளவனே, கேட்பாயென்று ஸ்ரீராமனுக்கு வசிட்டமுனியானவர் சொன்னார்.—

க. சாக்ஷாத்கார வனுபவ முண்டாகுங் கிரம மறிவித்தல்.

௧௦. மனமானது வெளி முகத்தைக் கெடுத்தகமுகப்படிலாநந்த முண்டாமஃதின்றேலில்லையென்பதற்கு த் திருஷ்டாந்த மறிவித்தல்.

சையமென்கின்ற பெரியமலையின்மேல் தவத்தையுடைய அத்திரிமுனியானவர், வசிக்குமாச்சிரமத்தில் வாழும்படியாக இரண்டுமுனிவர்கள் ஓரிடத்தில் வாசஞ்செய்பவர்கள்; உண்மையாகிய அந்தவிரண்டுபேர்களுக்கும் பெருமைபொருந்திய புத்திரர்கள் விபாசனென்றும், பாசனென்றும், இரண்டுபேரவதரித்தார்கள்; நெருங்கிய சிநேகிதத்தையுடைய அவர்கள்,—

௧௧. முனிவரிருவருண்டெனல்.

கிரமமாக வளர்ச்சியடைந்திருந்தார்கள்; ஒன்றேயிரண்டாயினதுபோல சலனமற்ற மனமுடையவர்கள், அவர்கள் பிதாவுந்தாயும் மரணமடைய, துக்கத்துடன் இனிசெய்யவேண்டியமாதாபிதாக்களுக்குள்ள

௧௨. முனிவரிருவரும் பிரிதல்.

† இ-ம். ஜீவனானவன்சிதாபாசத்தன்மையைநீக்கிச சிவாகாரமாய்விளங்குமாறையறிவித்ததாம்.

கிரியைகளை முடித்து உள்ள பாசத்தினால் வருத்தத் துட னழுதுக்கொண்டு இரண்டு பேர்களு மிரண் டிடத்திற் பிரிந்து போனார்கள்.— அளவற்ற காலம் கானகத்தில் வாசஞ்செய்து, அருமையான தபத்தி னால் சரீரத்தை வாட்டி, நிறைந்த இச்சையை விட்டு நீங்கி, இருவருஞ் சேரப்பெற்றார்கள். நட்பினால் மன தும், நேத்திரமும், மகிழ்ச்சியடைந்து மேலான விபாசமுனி சொல்லுவான்; வளராநின்ற சகத்தில் எனக்கு நல்லுறவானவனே? நெருங்கிய எனதுபிராண னைப்போல வந்தாய்;—இது பரியந்தம் வெகு கால மாய் எவ்விடத்தில் வசித்தாய், மனோதுக்கந் தீர்ந்தா யோ, சமத்துவமாக உன தாத்மஸ்வரூபத்தை நீ யுணர்ந்தாயோ, பூரணஞானம் லபித்ததோ, சதுரை யுடைய பாசனே? சுகத்தைப் பெற்றாயோ, சொல்லு மென்று கேட்ட வசனத்தைக்கேட்டு, முதிர்ந்த வுண் மையினால் விபாசன் முகத்தைப் பார்த்து பாசனிவை களைச் சொன்னான்.— பிராணனைப்போ லிருக்கின்ற வெனதுறவானவனே? எனது விதிவசத்தினால் உம் மைத் தரிசித்தேன்; மனதிற் குளிர்ச்சியை யடைந் தேன்; குற்றமுள்ள சநநத்திற் சுழலுகின்ற வெனக்கு சிறப்புள்ள சுகமுண்டாகும் விதமெப்படி, அறியத் தக்கதை யறிகின்றமட்டும் மனது கெடாதமட்டும் சநநமானது நீங்காதமட்டும் மிகுந்த நன்மையுண்டா கும் விதமேது.— மனத்தில் முளைக்கும் இச்சைக ளனைத்தும், தீட்டிய கோடாலியினால் வெட்டப்படும் தருவைப்போல, பருத்த மூலத்தோடு கெடுகின்றமட் டும், ப்ரத்தியக்ஷ ஞானத்தை யடையுமட்டும், அனர் த்தமான வேறுபாடுநீங்கி சமமுண்டாகுமட்டும், பிரம ஞானம் வருமட்டும், பிறந்திறக்கின்ற துன்பமேயன்றி சிறந்த சுகமுண்டாகும்விதமேது.— அஞ்ஞானமென் னும் வியாதிக்கு மகா வவிழ்தமாய் வராநின்ற ஆத்ம தத்துவமென்னும்பயனை விடும்படியிருந்தவர்களுக்கு, கொடிய சநநமென்னும் விடூசிகாவியாதியானதுமேலு மேலும்வரும். சுகதுக்கத்தினதுநடுவில் அகப்பட்டும், சநநமரணத்தில்வீழ்ந்து சலனப்பட்டும், விசாலம்பொ ருந்திய சகத்தில் சுழலாநின்ற சீவகோடிகள்சருகைப் போல பயனடையார்களென்று சொன்னான்.*—

௧௩. முனிவரிரு வருங்கூடிமுகமனு ரைத்தல்.

௧௪. பாசனைப்பா ர்த்தாத்மானு டவத் தை விபாசன் வினு வுதல்.

௧௫. நீங்கவேண் டியதைநீங்கி யடை யவேண்டியதை ய டையாவிடி னெங் ஙனம்பரம சுக மு ண்டாகு மென ப் பாசனுரைத்தல்.

௧௬. இச்சைநீங் கிஞான முண்டா கும்பரியந்த மெப்ப டி சநநமரண நீங் குமெனல்.

௧௭. ஆத்மஞா னத்தை யடையாத வர்கள் பிறப்பிறப் பிற்சுழல்வார்களெ னல்.

பாபவிபாசன் கதை

முற்றிற்று.

---

* இ-ம். அடையவேண்டிய கிரமப்படி யாத்மசுகத்தையடையாவிடிற்சநநமரண மெங்ஙன நீங்கு மென்பதாம்.

# வீதகவ்வியன் கதை.

## அவதாரிகை.

முற்கதையில் சிற்சுகங்கூடாவிடில் சித்த விஸ்ராந்தி கூடாதென்பதை யறிவித்து, இஃதுண்டாதற் கேதுவான சித்தநிரோதனத்துக்குச் சங்கதியாகமும், பிராண நிரோதனமுங் கொஞ்சஞ் சகாயமாமென்பதை யறிவிக்குநிமித்தம் வீதகவ்வியன் கதையை நிரூபிக்கிறார்.

---

க. ஞானத்தாற் பவத்தைக் கெடுக்க வேண்டுமெனப் போதித்தல்.

இந்தப்ரகாரமே நல்லனுபவமாகிய வினுவுகளை தங்களுக்குள் தாங்களே பேசிக்கொண்டு வசிக்குமிரண்டு பேர்களுக்கும் சிந்திக்கப்பட்ட நல்லகாலத்தினுல் கைவல்யசுகத்தைக் கொடாநின்ற உண்மை ஞானமானது ப்ரசன்னமாயிற்று. அத்தன்மையினுல் சொல்லுகின்றேன்; கொடிய சநநத்தை ஞானத்தினுலல்லாமல் கெடுக்க ஆசையென்னுங் கயிற்றினுல் கட்டுப்பட்ட துயரான மனதுக்கு வேறொரு மார்க்கமில்லை.— பற்றில்லாமல் மாசின்றியமனது, தொழில்களைச் செய்தும் பந்தத்தை யடையாது; பற்றுள்ள மனது அளவற்ற தவத்தைப் பெற்றாலும் பந்தத்தையே யடையும், அகத்திலாசையில்லாமல் நல்ல செயலைச் செய்கின்ற சீவனுனது புறச்செயல்களைச்செய்தாலும், பற்றில்லாமற் செய்யாவிட்டாலும், செய்பவனும் புசிப்பவனுமாகிய விருவர்களுடைய குணத்தைப் பொருந்தாது;¶— என்று சொல்லவும், பற்றென்பதெவ்விதமான குணத்தையுடையது, எந்தப் பற்றினுற் பந்தமடையும், அடைதற்கரிய மோக்ஷத்தை எந்தப்பற்றினுலடையலாம், தொடாநின்ற பந்தத்தை கெடுக்கின்ற ப்ரகாரமென்ன, சொல்லவேண்டு மென்று கேட்ட ஸ்ரீராமனுக்கு, வசிட்டமுனி சொல்லுவார். சரீரத்தையும் சரீரியையும், பிறித்தறிவதொன்றையுஞ் சிந்தியாமல் சரீரத்தை நம்புதலே பற்றாகும். அப்பற்றாற் பந்தமுண்டாகும்.§—சகலமு மாத்மஸ்வரூபமே நானிவ்விடத்தில் எதை விரும்புவேன் எதை வெறுப்பேன் என்பது பற்றில்லாததாம். மிகுந்த துக்கந்தீர்ந்த விப்பற்றின்மையானது சீவன் முத்தர்களுடைய சரீரத்தில் பொருந்தும்; நானில்லை, பிறருமில்லை, மேன்மைபொருந்திய சுகங்களனைத்தும் பொருந்திற் பொருந்தக்கடவது, பொருந்தாவிடின் பொருந்தாத

உ. அந்த ஞானமியாதினு லுண்டாகுமெனில்.

ங. பற்றறுதியுண்டாவதற் கப்பற்றை நான்காகப்பகுத்து வினுவியவதிலிரண்டிற் குத்தரங் கூறல்.

ச. மூன்ருவதற் குத்தரங்கூறல்

---

¶ இம். மனுேசீவன்களுக்கு விடயப்பற்றறுதியுண்டானுல் ஞான முதிக்குமென்பதாம்.

§ இ. ().ஆத்மதரிசனமின்றி தேகமயமாயிருத்தலே பற்றாகும், அதுவே பவத்தைக்கொடுக்கும் பற்றென்பதாம்.

தாய்ப் போகக்கடவதென்று சொல்லிய ப்காரம், மன திற் பற்றின்மையுண்டானுல் மேலான மோக்ஷத்துக் கிது மார்க்கமென்றறிவாய்.¶— தொழிலின்மையை விரும்பமாட்டார்கள்; தொழிலையும் விரும்பார்கள்; வினைக்கின்றபயனைவிட்டுமுன்சொன்ன விரண்டையுஞ் செய்தால், சமானமானவர்கள் பொருந்திய பற்றில்லா தவர்களென்று சத்துக்கள் சொல்லுவார்கள். வரா நின்ற கருமத்தின்பயன் முதலானவைகளை கருமத்தி ஞல் நீக்காமல் மனதினல் சாமர்த்தியமாகத் தள்ளு தல் பற்றில்லாததென்று அறிவாய். இதனுல் வளரு கின்றசெயல்களியாவிலும் குற்றநீங்கி அடைதற்கரிய மோக்ஷத்தையும் இலாபமாகக்கொடுக்கும்.‡— கிருமி கீடமுதலாகிய அநேகசநநங்களில் உயிர்களியாவுமநே ககாலமும் உண்டாகி சமுத்திரத்தி னலையைப்போல கெடுகின்றதன்மை குற்றத்தைக்கொடுக்கின்ற பற்றி னுடைய பரப்பாகும். பற்றுனதிரண்டுப்ரகாரமாகும்; அவைகளிலொன்று நழுவாநின்ற அந்திப்பற்றென் றும், மற்ருென்று அவந்திப்பற்றென்றுஞ் சொல்லப் படும். சொல்லியஅந்திப்பற்றுனது, மூடர்கள்பொருந் தத்தக்கதாம்; குறைவற்றவாத்மதத்துவத்தைஅறிந்த வர்களுக்கு ஆபரணங்களாக அவந்திப்பற்றுனது பொருந்தும்.†— ஆத்மதத்துவ ஞானத்தினுலும் விவேகத்தினுலும், கிரமமாக வுண்டானதாகியும் திரும்பவும் பவமானதுநெருங்காததாகியுமிருக்கின்ற மேலாகிய அவந்திப்பற்றிதுவேயாகும். இதுவல்லா மல், அந்திப்பற்றெதுவென்னில், மேலாகிய ஞான மில்லாமல் சரீரமுதலாக பொருந்துகின்ற வஸ்துக் களினுல் உண்டாகிய சகத்தினிடத்தி லுண்டாகப் பட்ட பவங்களை திரும்பவுடையதாகும். குழந்தாய்? இவ்விரண்டுபற்றுகளையும் இப்படியென்று தெளிந்து கொள்வாய் §— சங்குசக்கரத்தைக் கரத்திற்றறித்த சிவந்த கண்ணையுடைய விஷ்ணுமூர்த்தி யானவர், அவந்திப்பற்றினது வயத்தினுல் மெலியாமல் பலவித மானசெயல்களினுல் சகலசகங்களனைத்தையுநன்மை

ரு. நான்கவதற் குத்தரங் கூறல்.

சு. முன்சொல் லியவிரண்டு பற்றி ருக்கு மிடத்தைச் சொல்லுதல்.

எ. பற்றுகளினி லக்கணமுரைத்தல்

அ வணங்கப்பா ற்றுன பற்றின்பெ ருமையை யுரைத் தல்.

---

¶ இ-ம் சர்வம் பிரமமயமாய் விளங்குதலின் விருப்புவெறுப்பின்றிச் சுயமான வணங்கற் பாற்றுன பற்றே வீட்டைக்கொடுக்கும் பற்றென்பதாம்.

‡ இ-ம். கிரியாக் கிரியைகளிற் பயனைக்குறியாமற் றற்பயனுய்ச்செய்வதே பற் றறுத்தலென்பதாம்.

† இ-ம். இவ்விரண்டுபற்றிற் பெத்தனுக்குரிய தொன்று, முத்தனுக்குரிய தொன்றுமா மென்பதாம்.

§ இ-ம் ஞானத்தைப்பற்றி யதன்மயமாக்குத லொன்றுந் தேகத்தைப்பற்றி யத ன்மயமாக்குத லொன்றுமா மென்பதாம்.

யாக கிருபையுட னிரட்சிக்கின்றார்; வருத்தமில்லாத மெய்ஞ்ஞானபதத்தைச் சேர்ந்திருக்கின்ற சித்தர்களும், சகரட்சகராய் முன்சொல்லியப்பிரகாரமேவிளையாடிக்கொண்டு அவந்திப்பற்றினால் பரந்திருக்கின்ற உலகரூபத்தில் பொருந்தியிருந்தார்கள். ¶—

௯. பயனிலிப்பற்றினிழிவையுரைத்தல்.

கேடாகியநன்றென்கின்ற பாவனையினாலும், ஒளிசெய்கின்ற போகவசத்தினாலும், மனமானது நெருங்கிவிடுதலில்லாத அந்திப்பற்றினால், வெறும்பிரேதத்தை மொய்க்குங் கழுகைப்போல போகத்தில்விழும். கேடாகிய அந்தியென்னும் பற்றையுடையவர்களுக்கு பலநரகங்களும் வீடாகச்செய்யப்பட்டன; சமானமாகிய அந்திப்பற்றுள்ளவர்களென்கின்ற இளவிறகால் நரகாக்கினியெரிந்துகொண்டிருக்கும். ‡—

௰. பற்றினிலக்கணத்தைசொல் சீவன்முத்தன்மனதினிலக்கணத்தைச் சொல்லத் தொடங்கல்.

ஞானமென்கின்ற நேத்திரமானது தெளிவாகவிளக்கமாய் கொடியமாயாகாரியமான திரிஸ்யத்தினின்றும் திரும்பி, விருப்பம் பொருந்திய பற்றென்பது எவ்விடத்திலுமில்லாத பெருமைபொருந்திய மனதுடனிருப்பவர்களேசீவன்முத்தராம். நிச்சயமாக எக்காலமும், எந்தவவத்தைகளிலும்இருப்பவனாகியும்,சகலவுயிர்களோடும் நிற்பவனாகியும், எத்தொழிலையுஞ் செய்பவனாகியு மிருக்கின்ற சீவன்முத்தனடத்திய இந்த மனதினுடைய சுபாவத்தைக்கேட்பாய்.—

௧௧ இதுவுமது.

செயல்களினும், நினைவுகளினும், பொருள்களினும், ஆகாயத்தினும், மேலினும், கீழினும், சூழ்ந்திருக்கின்ற திக்குகளிலும், புறம்பாகிய போகக்கூட்டங்களிலும், ஈனத்தைக் கொடுக்கின்ற பிராணனிடத்திலும், சிரசிலும், முகத்திலும், நாக்கிலும், கண்களிலும், நாசியிலும், புருவத்திலும், அகங்காரத்திலும், சீவனிலும், இருதயாம்பரத்திலும், சாக்கிரத்திலும், கனவிலும், சுழுத்தியிலும், வெண்மைமுதலாகிய பஞ்சவன்னங்களிலும் நாநாவித நிறங்களிலும்,—

௧௨. இதுவுமது.

சஞ்சலத்திலும், திடத்திலும், ஆதியிலும், மத்தியிலும், அந்தத்திலும், சமீபத்திலும், தூரத்திலும், சரீரத்தி னவயவங்களிலும், பல திரவியங்களிலும், ஆத்மாவிலும், சத்தபரிசமுதலியதன்மாத்திரைகளிலும், பெருமையாகச்சொல்லுகின்ற வாநந்தத்திலும், உலவுகின்ற வருதலிலும், போதலிலும், காலத்தினது குணங்களிலும், ஓரற்ப

---

¶ இ-ம். ஈஸ்வராதிகளும் வணங்கப்பாற்றான் பற்றின லுலகங்களிற் சீவன்முத்தித் தன்மையோடும் விளங்குகின்றன ரென்பதாம்.

‡ இ-ம். சிலர் பயனிலிப்பற்றின லுலகங்களிற் பெத்தத்தன்மையோடு பவாரகத்திலழுந்துகின்றன ரென்பதாம்.

மும் பற்றுமல் ஞானத்தில் விஸ்ராந்தி யடைந்து, ப்ர காசிக்கின்ற திரிஸ்யங்களில் கொஞ்சம் பழகினுலும், எவ்விடத்தும் விராகமடைந்து சீவன்முத்தன் மனது பிரமாநந்தத்திலிருக்கும்.¶— சொல்லிய அச்சீவன்

கஉ. சீவன் முத்தரதிலக்கணங் கூறல்.

முத்தத் தன்மையிலிருந்து பற்றென்றுமில்லாமல் சிதாபாசத்தன்மையைச்சேராத சீவன்முத்தரானவர் கள், இச்சகத்தில் தொழில்களனைத்தையுஞ் செய்யக் கடவன் தீரக்கடவன். ஆநந்தபோதனை சீவன்முத் தன் தொழிலைச்செய்தாலும், குற்றமில்லாமல் விட்டு விட்டாலும், கிரியைகளினுல்தரும் ப்ரயோசனங்கள், கறுத்தமேகங்கள் நானாவிதமாக வுண்டானபொழு தும், ஆகாயத்தில் சம்பந்தியாத தன்மையைப்போல எவ்வளவும் சேரமாட்டாது—அல்லாமலும் அந்த

கச. சிதாகந்த மடைந்ததிலக்கணங் கூறல்.

விடயாமிசத்தையும் தீர்ப்பாகத்தள்ளி விடயத்தினந்த மாகிய ஞானத்தினு னிறைந்து உபசாந்த முடையவ னுய் ஸ்படிகமணியைப்போல உள்ளே ப்ரகாசத்தைப் பொருந்தி சீவனுனவன் ஆத்மாவி லொன்று பட்டு நிற்கக்கடவன்.—ன்ரு யறிந்திருக்கின்ற ஞானசுகத்தை யுடையவராகியும், மகான்களாகியும், அறிவுள்ளவரா கியும், மேன்மையை நன்ருகப் பெற்றவர்களாகியும், இந்திரியவியாபாரங்களில் மயிலிறகைப்போல நின்று சஞ்சரிப்பார்கள்; மகாமேருவைப்போல மனதினிலை தளரார்.—விடயங்களைவிட்டு நீங்கினுல் மனமானது

கரு. ஆநந்தாதீதமுண்டாகுங் கிரமமுரைத்தல்.

கெடும்; அந்நிலையானது, தொழில்களனைத்துமில்லாத நிறைந்த நாளுச்சுழுத்தியாகும்; இதையெப்போதும் ஒழியாத பரிச்சயமே செய்யச்செய்ய, சத்துக்கள் பிரி வற்றமுதிர்ந்த துரியமாமென் றுரைப்பார்கள். குற்ற மற்ற இத்துரியானுபவத்தில் நிலையையடைந்துகுறிப் பில்லாத வாநந்தத்தையடைய தனித்த சுபாவக்கோட் பாட்டினுல் ஆநந்தாதீதங்கூடும்.—அந்த வானந்தா

கசு. ஆநந்தாதீதமே துரியாதீதமெனல்.

தீதமாகிய மகாநந்தமென்கின்ற ஞானுதீதத்தைபெற் றிருப்பவனை, இரண்டில்லாத யோகியென்று சொல்ல லாகும். துரியாதீதத்தையும் அடைந்தவனுகும். கட் டுப்படுகின்ற சஙகமான துநீங்கி, தாமசகுணத்தினுல் வந்த நானாவிதமான வபிமானங்கணீங்கி பரமசுகமா னது, கெடுதலில்லாத தனது ஸ்வரூபமாகிய சத்தி னிடத்தில், நல்லசலத்தி லுப்பைக்கலந்ததுபோல,

கஎ. வேதங்கள் மத்தியமத நிலையே பிரமமெனச் சொல்லுமெனல்.

நன்ருக வொன்றுபடும்.— சடாசட மென்கின்ற இரண்டு பார்வையின் மத்தியில் தனிமையாயிருந்த பரதத்துவமான ஸ்வரூபத்தை, மார்க்கமாகிய பிரக

¶ இ-ம். சீவன்முத்தனது மனமானது, கிரியைமுதலிய வெவற்றிலும் பற்றின்றி ஞானசுகமாகவே விளங்குமென்பதாம்.

தாரண்ய வுபநிடதமுதலாகிய சுருதியானது, ஸ்ரீ ராமா! எப்போதுஞ் சொல்லும் விடயங்களும், ஞானமும், பொருந்துங்காலத்தில் பரமார்த்தத்திற் பற்றுதலாய் சொல்லிய பரமசுகமானது, திடமாகிய வனுபூதியினது ஸ்வரூபமாகும். ஆதலினால் அதுவே ப்ரகாசிக்கின்ற பிரமரசமென்று சொல்லும்.—விடயங்களும் காக்ஷியுஞ்சேருகின்ற காலத்திற்சேர்ந்த வாநந்தபோதமானது, மிகவுஞ் சிறப்பானதாம்; விடயங்களால் கட்டுப்பட்டால் பந்தனமாம்; விடயத்தைவிட்டு நீங்கினால் திடம்பொருந்திய மோக்ஷமாம் விடயமும் காக்ஷியும் சேருகின்ற காலத்திற்சேர்ந்த வனுபூதியானது, துன்பநீங்கினதாம்; தெளிவாக வவ்விடத்தி னீயதைப்பிடித்திருப்பாய்; உனது தீரநிலையாகிய நனவிற் சுழுத்தியை அடைவாய்.—அச் சுழுத்தியே துரியஸ்தானத்தையடையும்; அடைந்தகாலத்தில் ஆத்மாவானது, தூலமன்று சூட்சுமமுமன்று திரமாகிய ப்ரத்யக்ஷமுமன்று அப்ரத்யக்ஷமுமன்று; சேதனமும், அசேதனமும், சத்தும், அசத்தும் என்கின்ற குணங்களுமன்று தோற்றுகின்ற நானுமன்று, இதரனுமன்று, ஏகனுமன்று, அநேகனுமன்று, உலகமன்று இதுவென்றெதிரே காணப்பட்டவைகளாய் மனமுதலிய வாறிந்திரியங்களுக்கும் ஸ்தானமாயிருக்கும். ¶—அதுவே யதீதபதமாதலினால் அதுவற்பமன்று எவ்விடத்துமதுவேயாகும். உரிமையாகிய மோக்ஷமென்று சொல்லப்பட்டது, தேவலோகத்திலும், பாதாளத்திலும், பூமியிலும்பார்க்கில் இல்லை; இச்சைகளனைத்தும் மரித்தகாலத்தில், பரந்தமன நசிப்பதே மோக்ஷமென்று சொல்லப்படும். உயர்வாகிய மோக்ஷமானது, எனக்குள்ளதென்று உள்ளே யெண்ணமுண்டாயின் திரும்பவு மனதுண்டாகும்.—மனதின் மனனமிருந்தால் இச்சிந்தனை யுள்ளவனுக்கு சநநமரணம் போகாது; வலியபந்தம் நிலையாயிருக்கும். சகலத்துக்கு மதீதமாகி வடிவங்களியாவுமாகி வியாபகமாகி ஆத்மதத்துவமாக நிற்குமானால், தீவினைத்தொடர்பாகிய பந்தமென்பதேது, நல்வினைத் தொடர்பாகிய மோக்ஷமென்பதேது, மூலத்தோடு மனனத்தைக் கொடுப்பாய். மேன்மையாகத் தன்னைத்தெரிந்து பூரணமாய் நின்மலமனதாய் நன்மையான உபசாந்தத்தைப் பொருந்தினவர்கள் ஒன்றையும் அற்பமு மிச்சியார்கள்.—எரிந்துபோகாநின்ற ஆபத்தென்னுங்கருவேல்

கஅ. நடுநிலையே நனவிற்சுழுத்தியாமெனல்.

கக. நனவிற் சுழுத்தியே துரியவியாபகமாய்விளங்குமெனல்.

உ0. மனதின்சங்கோச விகாச பலனை யுரைத்தல்.

உக. மனதைக் கெடுப்பதற்குச் சாந்தி வேண்டுமெனல்.

உஉ. சாந்தியுண்

¶ இ-ம். அனுபவத்தி னிலக்கணத்தையு மனதையடையுங் கிரமத்தையு மறிவித்ததாம்.

டாவதற்குநிராசை வேண்டுமெனல்.

வனத்தை வெட்டுகின்ற கோடாலியாகவும், பிரம சுகத்தை பொருந்தாநின்ற விடமாகவும், சந்தோஷஞ் சாந்தியென்கின்ற தருவுக்கு புட்பக்கொத்தாகவுமிருக் கின்றஇந்நிராசைவரின், தளர்ச்சிநீக்கும். நிராசையை யாபரணமாகத்தரித்தநீங்காத வலங்காரஸ்வரூபத்தை யுடையவர்களுக்கு, அந்தோ!! பூமியானது பசுவின் குளப்படியாகவும், மகாமேரு வற்பமுளையாகவும், திக்குகள் பறவைக் கூண்டாகவும், மூன்றுலகமும் ஓரற்பமான திரணமாம்.¶— சரீரத்துக்கு விலட்சண மாக ஆத்மஸ்வரூபத்தைத் தரிசித்தவன், சரீரத்தை யறிந்தபோது மறியமாட்டான்; கரும்பின் கட்டி யானது, அக்கினியிற் காய்ந்தகாலத்திலும், அரிந்த காலத்திலும், இரசங்கெடாத விதத்தைப் போல, தெளிவுற்ற ஞானவான் பொய்யாகிய மயக்கத்தினல் வேற்றுமையாகான். கூடிய பரபுருஷனிடத்தில் மனதையுடைய பெண்ணானவள், அன்பினல் கிரகக் கிருத்தியங்களை பண்ணுவதுபோல, செயலைச் செய் தாலும் பிரமத்தினது நிலைமையைப்பிரியான்.— விட யங்களில் இச்சையில்லாததினல் மனதில்பொருந்திய சாந்தியே மோக்ஷத்தைக் கொடுக்கும். சொல்லிய மோக்ஷமானது, சரீரத்துடன் கூடியிருந்தாலும், இல்லாமற்போனலும், ஆசையைக் கெடுத்த மகான் களுக்கு ப்ரயோசனப் படுமென்று சொல்லுவார்கள். விஸ்தாரமான விடய விச்சைநீங்க சுகிப்பவர்கள், ஆநந்தமுண்டான சீவன் முத்தர்களாம்; வளராநின்ற விடயவிச்சைகளினல் அடிமைப்பட்டு சுகிப்பவர்கள், பந்தமடைந்தவர்களாம்; சொல்லிய விருவர்க்கு மே லான மூன்றுவதானவனே விதேக முத்தனும்.‡—

உக. ஞானவான்கள்பர ஞானத்திலிருக்குமுறுதியைக்கூறல்.

உச. பற்றறுதியேவிதேக முத்தித்தன்மையாமெனல்.

உரு. சீவன்முத்தரது சகச நடையைத்தெரிவித்தல்

வருங்காலத்திலுள்ள செய்கைகளில் இச்சியான்; நிகழ்காலத்தில்வருகின்றதொழிலின்மார்க்கத்திலிருப் பான்; செல்காலத்திலுள்ள தொழில்களை மனதில் நினையான்; தொழில்களனைத்தையுஞ் செய்வான்; பந் தத்தில் கலந்தவர்களிடத்தில் மனது வையான் துன் பத்தின்மிகான்; ஒப்பற்றபத்திமான்களிடத்தில் பத்தி மானவன்; வஞ்சகரிடத்தில் வஞ்சகனுவன்; குழந் தைகளிடத்தில் குழந்தையாவன்; விருத்தர்களிடத் தில் விருத்தனுவன்; தீரர்களிடத்திலும் அப்படியே தீரனுக விருப்பான்.— எவ்வன முள்ளவரிடத்தி

உசு. இதுவுமது.

¶ இ-ம். நிராசையாற் சாந்தியுண்டாயதனு லாத்மதரிசனமாயதில் மனங்களை யின் யாவுமற்பமாமென்பதாம்.

‡ இ-ம். ஞானிகளடையும் விதேகமுத்திபரியந்தம் கிரமமாகச் சொன்னதென்ப தாம்.

லெவ்வன முள்ளவனுகவும், துன்பம் பொருந்தினவர்களிடத்தில் வெப்பம் பொருந்திய துன்பமடைந்தவனுக்வும், நிலைமையை விடாத வறிவையுடைய உண்மையுள்ள வானந்தமானது, பூரணமாகத் தோற்றுகின்றசெம்மையுள்ளவனுகவும், புண்ணியமான தனது சிறப்பைச் செய்பவனுகவும், அஞ்ஞானமில்லாத ஞானமுடையவனுகவும், தெளிந்தவனுகவும், இரசமுடையவனுகவும், இளைத்த மனமில்லாதவனுகவும், பரிசுத்தமாகவுமிருக்கின்ற சீவன் முத்தனுனவன், சூரியன் குளிர்ந்தாலும், சந்திரன் கறுத்தாலும், அக்கினி யதோமுகமாக நோக்கினுலும், அச்சமுற்றதிசயப்படான்.¶— இதுவென்று காணப்பட்ட சகலமும் ஞானஸ்வரூபமாம்; இந்தப்பிரகாரம் சகல சத்திகளும் ப்ரகாசிக்குமென்று அற்புதங்களில் சீவன் முத்தர்கள் அதிசய மடையார்கள். சலத்தினசைவினுல் வேருனதுபோலத் தோற்றுகின்ற பழமையான சுழியைப்போலவும், ஆகாயத்தில் மயிலினிறகை முன்பு சீக்கிரமாக வசைத்த மாத்திரத்தில் முத்தின்றிரளானது சத்தியம்போலத் தோற்றுதல்போலவும், பாரமாயிருக்கின்ற வுலகமானது மனே சஞ்சலத்தால் சீக்கிரமாகத்தோற்றும்.†— என்று சொல்லவும் எதினுலசையும், எதினுலசையமாட்டாது, மனதை திருத்தஞ்செய்கின்ற மார்க்கமெது, சொல்லென்றுகேட்ட ஸ்ரீராமனுக்கு, வசிட்டமுனி சொல்லுவார் எள்ளுக்கு ளெண்ணெய்போலவும், பனியினிடத்தில் நிறைந்த வெண்மையைப் போலவும், மனத்தினசைவானது கலந்து மிகவுந் தோற்றும்.§— மனேநாசத்தினது மார்க்கமிரண்டு, யோகமும் தெளிந்தஞானமுமாம; யோகமானது, மனதிற்பொருந்திய செயல்களை ஒருவழியிற்செல்லத் திருப்புதல், பரிசுத்தஞானமானது யாவுஞ் சுகமாகப் பார்ப்பதாம். மனமெதுவென்ருல் மேன்மையான வாகமத்தை யாபரணமாகத் தரித்தவர்கள் வேகத்தையுடைய பிராணவாயுவி னசைவாகுமென்று முன் சொல்லியது.‡— சொல்லப்பட்ட ப்ராணனுனது

உஎ. பிரமநிச்சயத்தைச் சொல்லியதன் சங்கற்பமான மனே சாஞ்சலியத்தைநீக்கும் பொருட்டு அச்சலனமே சகத்தாமெனத் தெரிவித்தல்.

உஅ. சஞ்சலநீங்கி நிச்சலமானபிரமத்தையடையமனதினசைவுமசையாமையுஞ் செவ்வையுமி யாதெனிலதற்குமுந்தின வினுவுக் குத்தரங்கூறல்.

உகூ. இரண்டாம்வினுவுக்குத்தரங் கூறல்.

௩௦. பிராணபந்தனசலன மென்பதாம்.

¶ இ-ம். யாதியாதெப்படி யெப்படியோ வதுவதப்படியாய்த் தானிருந்து நிரதிசயானந்தமாய் விளங்குவ னென்பதாம்.
† இ-ம். மனேசாஞ்சலித்தை நீங்குதற்குபாயஞ் சொல்லத்தொடங்கினதாம்.
§ இ-ம். சங்கற்பமேமனத்தி னசைவாமென்பதாம்.
‡ இ-ம். மனத்தசைவைக் கெடுப்பதற் கதன்விருத்தியை யொருவழிப் படுத்துகின்ற யோகமும், அறிவிலாநந்தானுபவமுள்ள ஞானமுமாம், அம்மனம் பிராண

யம் வுபா இயாதெனல்.

தடைப்பட்டால் மனதுங் கெடும்; மனோசஞ்சலங் கெட்டால், சூரிய னத்தமனமானால் சகத்தின்றொழில் நீங்குதல்போல, சகநம் நீங்கும் என்று வசிட்டமுனி சொல்லவும், சரீரமென்கின்றவீட்டில், இதயாம்பரத்தி லெப்போதும் வேகமாக வோய்வில்லாமல் சுழலுகின்ற பிராணன்முதலிய வாய்வுக்க ளசைவை மாற்றுகின்றவித மெதுவென்று ஸ்ரீராமன்கேட்க,—வசிட்டமுனிசொல்லுவார். ஆத்மஞான சாஸ்திரங்களுடன் ஞானிகளைச் சிந்தித்தடைந்து, வைராக்கியத்தை மிகவு முயற்சிசெய்து அற்பியாசித்த விவைகளினால்; சம்சாரமாகிய நடைவிலங்கைநீங்கி, ஒப்பற்ற நிராசையானது நிறையுமானால், அன்புற்ற பிரமநிஷ்டையினால், சதாகாலமும் ஒன்றாகவே விளங்கும்படி அதற்கடுத்த சாதனத்தினால்,— ஒன்றாகிய தத்துவத்தின் திடாற்பியாசத்தினால், இப்பிராணனனது தடைபடும் உடலிலுண்டாகும் பூரகமுதலான பிராணயாமஞ் செய்து திரமுள்ள வற்பியாசத்தினால், உச்சாகமாக தனித்தவிடத்திருந்து அசுத்திலறியாநின்ற ஞான பாவனையினால், ேகநிறத்தையுடைய ஸ்ரீராமா? பிராணனில் சலனமானது மாற்றப்படும்.¶— ஓங்காரத்தினது உச்சரிப்பினந்தத்தில் உண்டான நாதத்து வத்தி னுண்மையை, மிகுந்தவனுசந்தானத்தினால் சுழுத்தியடைபவனது விருத்தி ஞானமானது விடுபட்டால், பிராணனனது தடைப்படும். பரவாநின்ற நாக்கினடினெருங்கிய இதழை படர்ந்த நாவினாநீக்கி திடமுள்ள முயற்சியினால் ஊர்த்தரந்தரத்தில் உயிரைச்செலுத்தினால் பிராணன்றடைப்படும்.*— பார்க்கின்ற நாசிகாந்தத்தில் பன்னிரண்டங்குலவளவில் நீண்டவாகாயத்தில் விருத்திஞானங்க ளிறக்குமானால், பிராணன் றடைப்படும். தேடாநின்ற சாதனத்தினால் ஊர்த்தரந்தரமார்க்கத்தில் நாக்கின்மேல் பன்னிரண்டங்குல ப்ரமாணஞ்சென்று பிராணனனது, அந்த வளவினின்று விருத்திஞானம் விடுமானால் பிராணன் றடைப்படும்.†—புருவமத்தியில் சண்மணிப்பார்வையானது ஒப்பற்ற சாந்தத்தினால்கெட்டு, அறிகின்ற

௩௧. பிராணயாம வுபாயம்பத்து விதமாகவறிவிக்கத் தொடங்கல்.

௩௨. முதலாவது மிரண்டாவது முரைத்தல்.

௩௩. மூன்றாவது நான்காவது முரைத்தல்.

௩௪. ஐந்துமாறு மேழுமெட்டு முரைத்தல்.

௩௫. ஒன்பதும் பத்து முரைத்தல்.

¶ இ-ம். ஒன்றான வாத்மஞான வற்பியாசத்தினாலும்யோகாற்பியாசத்தினாலும் பிராணனடங்குமென்பதாம்.

* இ-ம். பிராணவாநந்தத்திற்சுகித்த ஞானத்தைத் தரிசிக்கும் யோசத்தினாலும் லம்பிகாயோகத்திற் கேசரிமுத்திரையினாலும் பிராணனடங்குமென்பதாம்.

† இ-ம். நாசியினின்று வாதசாந்தத்தி னிற்பதினாலு மதனந்தத்தினிற்குஞ் சாம்பவி முத்திரையினாலும், விசுத்தசக்கரத்தி னிற்பதினாலும், அநாகத சக்கரத்தி னிற்பதினாலும், பிராணனடங்குமென்பதாம்.

௯௬. இரண்டாம் வினவுக்குத்தரஞ்சொல்லி மூன்றாம் வினவுக்குத்தரங் கூறுதல்.

௯௭. யோகத்திலுண்மையைச் சொல்லி ஞானத்தினுண்மையைப் பிரிவாகச் சொல்லத் தொடங்கல்.

௯௮. முதலுமிரண்டு முரைத்தல்.

௯௯. மூன்றுநான்கு முரைத்தல்.

சவ்விகற்ப ஞானமானது அவ்விடத்தி லிறக்குமானுல் ஓடாமற் பிராணன் றடைப்படும். விளைக்காவின்ற இந்தமார்க்கங்களினுலும்.நாநாவிதசங்கற்பத்தினுலும் கற்பிதமான வேற்றுமையினுலும், அனுக்கிரகஞ்செய்கின்றவாசிரியரருளும் அநந்தவசனங்களினுலும்சலனமில்லாமற் பிராணன் றடைப்படும்.¶— இந்த யோகயுத்திகளனைத்தும் வருத்தமில்லாமல் செய்கின்ற சாதனத்தினுல், இப்பவத்தில்வந்து இனிச் சனியாதவர்களுக்கு தந்திரமாகவரும்,அற்பியாசத்தினுல் மேலான பிராணனது சலனங்கெடுமானுல், மனதும் விஸ்ராந்தியடையும். மனது விஸ்ராந்தியடையுமானுல் அடையத்தக்க பரகதி மிச்சமாகும் †—விகற்பமான வாக்கியங்களனைத்தும் தற்பதத்தை பார்த்தடையாமற் றிரும்புகின்றதோ, அந்தத்தற்பதமே வேறுபாடிறக்கில் மிஞ்சுமென்று வசிட்டர் சொல்லவும், வெற்றியையுடைய ஸ்ரீராமன், யோகமார்க்கத்தைசொல்லி மனமானது இந்திரியவழிகளிற் செல்லாத சமத்துவத்தைச் சொன்னீர்; இனிமேற் றத்துவஞானத்தையும் சொல்லுமென்றுகேட்க, அதற்கு முனிசொல்லுவார்.— ஆதிமத்தியாந்தரகிதமான தோற்றமே தனதுஸ்வரூபமாயிருக்கின்ற பிரமமானது, இவ்விடத்தில் சுயம்ப்ரகாசமா யிருக்குதென்கின்ற இந்நிச்சயமே குற்றமற்ற வுண்மைஞானமாம். பேதித்திருக்கின்ற கபடரூபமாகிய பதார்த்தங்களின் சகலசத்தியும் குற்றமற்ற வாத்மாவேயல்லாமல் வேறில்லையென்று அறிகின்ற திடமே யாத்மதரிசனம்.‡— மூன்றுலகங்களிலும் மெய்யானவஸ்துவை அறிகின்றகாரணமெதுவென்று சொல்லுமிடத்தி லுலகங்களனைத்தையும் பித்மஸ்வரூபமென்று ஸ்திரம்பொருந்துவதே பூரணமாம். உலகங்களனைத்தும் ஆத்மஸ்வரூபமேயாம் இவ்வாத்மஸ்வரூபமாகிய சகத்தில் விளங்குகின்ற பாவாபாவங்களெவ்விடம் உலகங்களினெருங்கிய பந்தம்வீடென்று மயங்குகின்ற பேதமெவ்விடம்.o—

¶ இ-ம். புருவமத்தியான வியோம சக்கரத்தினிற்கின்ற வயிரவிமுத்திரையினுலு மின்னுமாசாரியர் வைக்கின்ற குறிகளிலடங்கி நிற்குதலினுலும் பிராணனடங்குமென்பதாம்.

† இ-ம். இவ்வனுசந்தானத்தினுற் பிராணபந்தனமா மதனுன் மனுேசஞ்சலநீங்கு மதனுன் மனத்திருத்தமுற் ருத்மானுபவமே மிஞ்சுமென்பதாம்.

‡ இ-ம். சகோதயமான நமதாத்மஸ்வரூபமே யிங்ஙனம் ப்ரகாசிக்குமென்னு நிச்சயமும் திரிஸ்யங்கள்யாவுந் திருக்குவடிவமேயென்று நிச்சயமும் ஞானமென்பதாம்.

o இ-ம். மூவுலகு மாத்மாவென்கின்ற பாமார்த்த திருஷ்டியும் ஆத்மாவையன்றிப் பாவாபாவங்களின்றென்கிற நிச்சயமும் ஞானமாமென்பதாம்.

சo. ஐந்துமாறு முரைத்தல்.

சக. ஏழுமெட்டு முரைத்தல்.

சஉ. அத்தொய்த ஞானுனுஷ் டான த்தினுண் மையைச் சொல் லி யதைய டையும் பொருட் டனுபவஞ் சொல் லுதல்.

சங. அனுபவியின் றிடத்தை சொல்லுதல்.

சச. அனுபவரிச் சயங்கூறல்.

வேருகத்திரிஸ்யமென்பனவுமில்லை, மனமென்பதுமில்லை, உண்மையாகிய பிரமமே முன்சொன்னவைகளாகநிறையும்; இச்சகலமும் ஏகமாகிய ஞானுகாசமாகும். பந்தமும், மோக்ஷமும், எவ்விடத்திருக்கின்றன; இதுவென்று ப்ரகாசிக்கின்ற வாத்மஸ்வரூபமாய் அடையாளமின்றிய மகத்தாகியபிரமஸ்வரூபமே நிறைந்திருக்கின்றது; மனமானது சீரணமாய் நசித்தது.‡— ஒற்றுமையாக அறிவினுலறியக்கடவாய். ஆத்மஸ்வரூபத்தை நன்ருகப்பார்க்குமிடத்தில் விருட்சமும், மலைகளும், வஸ்திரங்கள்முதலிய வஸ்துக்களுக்கு எவ்வளவும்பேதமில்லை. சங்கற்ப மெங்கேயிருக்கின்றது, சிதாபாசனும் பூமியிலுள்ள வஸ்துக்களனைத்தும் ஆதியந்தமாகப் பார்க்குமிடத்தில் குறைவில்லாத வுபசாந்தரூபமடையும்.†— அவ்வுபசாந்தஸ்வரூபம் எக்காலமுநீயேபாவாய், ஸ்ரீராமா? இரண்டென்று மொன்றென்றும் சொல்லாநின்ற வேற்றுமையினுலும், சராமரணங்களென்று நினைக்கின்ற மயக்கத்தினுலும், தொந்தித்திருக்கின்ற மனதினுல் தானுகிய வொப்பற்ற பிரமஸ்வரூபமே. நீண்டவலையினுல் தன்னுற் சிதருநின்ற பலவானதிரை, நுரை, குமிளிமுதலானதாய் தெரிகின்ற நீரைப்போல, நாமரூபங்களாய்த் தோற்றுகின்றன.— பரிசுத்தமாகிய பிரமத்தைத் தழுவித்தொடர்ந்த அந்தர்முகவுணர்வினுல் பொருந்தியிருப்பவர்களை, எந்தப்போகமானது வந்து பந்தனஞ்செய்யத்தக்கது. மிருதுவான போகங்கண்முதலாகிய சத்துருக்களனைத்தும், விசாரணைமிகுந்தவர்களுடைய மனதை யெவ்வளவு மசைக்கமாட்டாது. தென்றலினுல் மலையசைவது முண்டாமோ.— அலையினுற் சத்தித்த நாநாவிதமானதடாகத்தில் அலைமுதலான வேற்றுமையில்லாம லிருக்கின்ற சலத்தைப்போல சொல்லப்பட்ட பலவிதமான நாமரூபங்கள் சங்கற்பத்திலுள்ளனவாகும்; அகத்தில் மெய்யாக வில்லாததாம். கரைக்கக்கூடாதிருக்கின்ற விந்த நிச்சயஞ்சேர்ந்த வறிவையுடையவர்கள் குற்றமற்ற மோக்ஷத்தையடைந்தவர்கள். குற்றமற்றதாய் சுகம் வரத்தரிசித்த அபரோக்ஷவஸ்தும் இவ்விடத்

‡ இ-ம் மனதுமுதலிய யாவுஞ் சிதாகாயமென்னு நிச்சயமும், பிரமானுபவத்தின் மனமில்லையென்னு நிச்சயமு ஞானமாமென்பதாம்.

† இ-ம் யாவையு மாத்மஸ்வரூபமாகப்பார்க்கி லொன்றும் வேற்றுமையின்றென்பதும் சீவனுஞ்சகத்து மாநந்தமாயிடின் றன்சங்கற்ப மில்லையென்பதும் ஞானமென்பதாம்.

௪௫. இச்சுவானுபவம் பெறுதற்கிஃதன்றி யின்னுமொரு மார்க்கஞ் சொல்லத்தொடங்கியதற்குத் திருஷ்டாந்த மறிவித்தல்.

௪௬. ஞானசமாதிக்காதனங் கட்டுதல்.

௪௭. மனதை நிறுத்தி விசாரித்தல்.

௪௮. மனநின்ற விடத்துதித்த தனதாத்ம ஞானத்தினின் றமனதுபிராண சலத்தினாற்சலிக்கின்றதெனக் காண்டல்.

௪௯. தனதறிவினாலிந்திரியங்களை நீக்குதல்.

௫௦. இதுவுமது.

திநிச்சயந்தான்.*— இதுமற்றொரு மோக்ஷத்தையடைகின்ற மார்க்கம் சொல்லுவோம். வீரத்தையுடைய ஸ்ரீராமா? கேட்பாய். வீதகவ்வியனென்னு நாமத்தையுடைய ஒரு மகாதவத்தன், விந்தமலையில் வாழ்பவன், ஆசையினாலுயர்ந்த கன்மகாண்டத்தில் வெகுகாலமிருந்து, துன்பமாகிய அந்தக்கரண வியாதியையும், தேகவியாதியையும், கொடிய சம்சாரத்தையும் கொடுக்கின்ற கிரியையினால் மிகவும் வருந்தினான்.§— நிருவிகற்பசமாதியினிமித்தம் முன்னடத்திய கிரியைகளனைத்தையும் நீக்கிவிட்டான்; பன்னசாலையினுள் பொருந்தினான், மான்றோலின்மேன் மருவுகின்ற கட்டிய பதுமாசனத்தை யுடையவனாய் குதிகான்மேல்வைத்த இரண்டுகைகளிற் றிரண்ட விரலையுடையவன், இந்தப்பிரகாரம் ஒருமைப்பட்டு சமாதியிலிருந்தான்.— விரிந்து திசைகளிற் செல்லுகின்றமனதை மெள்ளமெள்ளப்பார்த்து திருப்பி அகத்தினிரந்தரமாகச்செய்தான்; புறம்பிலுள்ளவிடய சம்பந்தங்களை கிரமமாகநீக்கிசெலுத்திய மனநின்றிடநிலையைவிரும்பி, குற்றமற்ற மனதினால் நிலைத்த நல்லதவத்தையுடைய வீதகவ்விய முனியானவர் தெரிய விசாரணைசெய்தான்.— ஈததிசயத்தையுடையது! திருப்பிவைத்திருக்கவும் பிராணனசைவைப் பொருந்தி அசையுமனமானது, திடமான நிலையில்லாமல் காற்றிலகப்பட்ட சிறுசருகைப்போல அலையும்; உண்டாகுஞ்சுகமில்லாத கடத்தினின்றும் படத்தைப் பொருந்தும், படத்திலிருந்து கடத்தையடையும், மயக்கம்பொருந்தியபலவிடயங்களில் விருட்சங்களிற் றுவு பர்க்கடம்போலத்தாவும்,—கண்முதலிய விந்திரியங்களாகியும், மனதுக்குவாசலாகியும்,ஞானேந்திரியமென்று நீங்காத வபிமானத்தைச்செய்கின்ற பஞ்சேந்திரியங்களை அறிந்து, பார்க்கின்றவனே நானும். இறவாநின்ற விந்திரியங்களே? வீணாக அய்யோ! நீங்கள்கலங்குவதேன்! கெடாதசிற்ஸ்வரூபமாயிருக்கின்ற பகவனாய் நானே சகலத்துக்குஞ்சாட்சியாகியிருக்கின்றேன்.— அத்தன்மையான குணத்தைப்பொருந்தி, அறிவினான்மிகுந்த நான்பார்க்கப்பட்டசக்ஷுமுதலிய பஞ்சேந்திரியங்களும் வேற்றுமையாகி சுவர்க்கலோகத்தை நீங்கின பாதாளத்துக்கொப்பாகும், சர்ப்பங்களும், பார்க்கத்திற்போகின்றவர்களும், சண்டா

* இ-ம். ஸ்வானுபூதி விலாசத்தை ப்ரசன்னமாய்த் தரிசிக்கும்பொருட் டனுக்ரகித்ததாம்.

§ இ-ம். கிரியையிற் சுகமின்றி வருந்தினதொன்பதாம்.

ளரும், அந்தணர்களும் போல, பயமடைந்து மேலா
கிய ஞானமானது பொறிகளின் சமீபத்திலும் வர
ருக. மனதைநீக்குதல். மாட்டாது.*— பரலோக பராமுகனுகியும், வேவு
காரனுகியும், விசாலம் பொருந்திய நான்குதிக்கிலும்,
பிச்சைவாங்கலுடாநின்றமனதே? வீணுகப்ரயாசைப்
படுதலில் ப்ரயோசனமில்லை; பூமியின்கண் நீயே விஸ்
ராந்தியடைந்து விளையாடுவாய், உன்னை ஞானமென்
றெண்ணுகின்ற வாசனை அசத்தியமாம். வேற்றுமை
யானது, மிகுந்திருக்கின்ற மனத்துடன், உண்மை
ருஉ. இதுவுமது. ஞானமானது ஒருமைப்படாது.— விடயங்களை நா
னென்னு மகங்காரமாகிய துற்புத்தியே? சுகமாயிருக்
கின்றே னென்கின்ற இதுகுற்றமாம். அகங்காரமதத்
தினுல் இவனுமவனு நானுகும் என்கின்ற இவ்வாரம்
பத்தை மிகவுநீக்குவாய்; உனதுருவ மெதுவென்றால்
விசாரணையில்லாததாம்; சூரியனுல் அந்தகாரம் கெடு
வதுபோல இப்பொழுது செய்கின்ற விசாரணையினு
ருங. இதுவுமது. லழிவாய்.— முன்னந் தோற்றுமல் இப்போதுனக்
கென் ருேருருவுமில்லாத இவ்வொழுங்கினுல் பின்புந்
தோற்றமாட்டாய்; என்னுடைய மனதே? நீயடை
கின்ற நன்மையானது பெரிதாம். துன்ப நீங்கிய
தெய்வசகாயத்தினுல் துன்பமில்லாத வாநந்தத்தைப்
பொருந்தி நான் எப்போதும் நிறைந்த சாந்தத்தை
யுடையவனுய், துரியமாகிய எனதாத்மஸ்வரூபத்தில்
ருச. விசாரமுகத்தாற் றத்துவங்களைநீக்கிச்சாம்பவி முத்திரையை முன்னிட்டு நிருவிகற்ப சமாதியிலிருத்தல். ஆநந்திக்கின்றேன்.†— இப்படியென் ருெருமையாகி
வாதனையிறந்த வீதகவ்விய முனியானவர் பொறிக
ளலைவில்லாமல் மனதை யுரத்தினு னிறுத்தினுன்;
விறகையெரித்த வக்கினிச் சுவாலையானது, தனக்குள்
ளே மிகவு மடங்குதல்போல இவர் பிராணனுனது
கிரமத்தில் நன்றுகவுள்ளேயடங்கின;நாசிகாந்தத்தில்
சூட்சுமதிருஷ்டியினுல்கண்களானவை கொஞ்சமலர்ந்
ருரு. இதுவுமது. திருக்கின்றதாமரைப்பூவுக்கு சமானமாயின.--சிரசும்,
கண்டமும், சரீரமும், அவயவங்களும், சமமாக கல்
லிற் செய்ததுபோலவும், வோவியத்தைப் போலவும்,
முன்னூறு வருடம் நிமிடமாக சமாதி யிருந்தான்.
மிகுந்த மழைகாலத்தின் வெள்ளத்தினு லுண்டாகிய
மணற்குன்றில் இவனதுசரீரம் புதைந்தது; திடத்தை
யுடைய வீதகவ்விய மகா முனியானவர், பூமியினுள்

* இ-ம். சின்மாத்திரமாய் விளங்குகின்ற யான் மனேவசமாய்ச் சஞ்சரிக்கின்ற
விந்திரியங்களிற் சேறேனென் றஃதை வேறுபடுத்தின தென்பதாம்.

† இ-ம்.பேதமாகிய மபேதமாகியவாத்மாவுக்குச் சம்பந்தமின்றுகியும் விசாரிக்க
லில்லாததாகியு மிருக்கின்ற மனதைச் சுகரூபியாயிருக்கின்ற வாத்மானுபவத்தினு
னீக்கினதென்பதாம்.

சரீர மசையவில்லையென்று சமாதியைவிட் டறிந்த னன்.*— பூமி மறைத்தபடியால் அறிவிலுண்டாகிய தேகத்திலுள்ள பிராணன்களனைத்தும் புரைகளிபா வையும் அடையப் பட்டபடியினால் அசையவில்லை; அகத்தி லறிவுண்டாகி வாசனையான தன் மனோரூப மாய் இருதயத்திற் பரவி சகலத்தையும் தெரிந்தது; ஒழுங்காகிய கனவைப்போல அந்த வீதகவ்விய முனி அவ்விடத்தில் மனதிற் பொருந்த விவைகளைப் பார்த் தான்.— கைலாச பருவதத்தின் சாரலில் தவசியாக நூறுவருடமிருந்ததும். குற்றமற்றசுகமுள்ளவித்தியா தரனாக நூறுவருடம் ஆகியதும் தேவர்கள் வணங் கும்படி தெய்வலோகத்தில் தேவேந்திரனாக ஐந்துயுக மிருந்ததுவும், சந்திரனைச் சடையிற் றரித்தபரமேஸ் வரனுக்கு அன்பாகிய கணேசனாய் ஒரு கற்பகால மிருந்ததும்,—மூன்றுகாலமுங் கலந்தறிகின்ற ஞான திருஷ்டியினால் இப்பொழுது சொல்லப்பட்ட சகலத்தையும் வீதகவ்விய முனி பார்த்து, பரமேஸ் வரனுக் கடிமையாகப் பணிசெய்த ப்ரயோசனத்தி னால் இறந்தகாலங்களைத் தெரிந்து தனக்கு வல்லமை யுண்டாகி பூரணமாக முற்சநநங்களில் முந்நசித்துப் போன தனது சரீரமுழுதையும் மறப்பில்லாமற் பார் த்து, வீதகவ்வியனென்னு நாமத்தையுடைய சரீரமாக வரப்பார்த்தான்.†—பூமியின்மறைந்திருக்கின்றவிந்த சரீரத்தைஎடுப்போமென்றுநினைத்து, நல்லபெருமை யையுடைய சூரியனிடத்திற் சென்று முறைமைப்படி செய்கின்ற பிங்கலனை யழைத்துவந்து எடுப்பதற்கு நிறைவேறுமென்று, ஒரு சித்த பானவனாய் வாயுவு ரூபமாய் புரியட்டக சரீரத்தோடும் சூரியனிடத்தில் சாந்தியையுடைய வீதகவ்விய மகா முனியானவர் வந்து சேர்ந்த மாத்திரத்தில், சூரியன் தனதிருதயத் தில்வந்த தன்மையைப் பார்த்து,— சூரியனானவன், முனியி னபிப்பிராய முழுதுந் தெரிந்து, அத்தன்மை யான வீதகவ்வியனென்னு நாமத்தை யுடையவனது சூட்சுமசரீரமும், தனதிடத்தினின்றும் விந்தமலைச் சார்பிலிருக்கின்ற அம்முனியின் சரீரத்தில் போய்ச் சேரும்படி சூரியனால் பக்கத்திலிருந்த பிங்கலனை வீத கவ்வியமுனியோ டனுப்ப, பிங்கலனானவன் முனி யோடும்வந்து கரத்திலுள்ள வுகிரினால் பழமையாகிய பூமியைப் பொருந்தக்கிழித்து,—பூமியைத் தோண்டி

௪௬. சமாதியினின் றுநீங்கின வறிவு மனோரூபமாயுண் டான சநநபரம் பரையைச் சொற் பனம்போலவறி தல்.

௪௭. இதுவுமது.

௪௮. இதுவுமது.

௪௯. மறைபட்டதேகத்தைவெளி ப்படுத்துமுபாயஞ் சிந்திததுச் சூரிய னிடத்திற் சொல் லுதல்.

௫0. பிங்கலன் வருதல்.

௫௧. மண்ணின்

* இம். தேகமுதலியயாவுந் தோன்ருத சிற்சமாதியி லிருந்தன னென்பதாம்.

† இம். பிரமத்தினின்று நழுவின முதலெடுத்தபவங்களை யறிந்தறி விப்போது வீதகவ்வியனெனத் தெரிந்த தென்பதாம்.

மறைந்ததேகத்தைவெளிப்படுத்தல்.

பிங்கலன்கொடுக்கசரீரத்தின்மௌனமுனியினதாகிய சூக்குமசரீரமானது, தூலசரீரத்திற் ப்ரவேசித்தது. முன்சொல்லப்பட்டபிங்கலனனவன்போயினன். இப்படியானவீதகவ்வியமுனியானவன், ஸ்நானஞ்செய்து செபம்பண்ணி சூரியனை ஆராதனைசெய்தான்; அறிவுடையமனதினுல் நிறைந்த சரீரமானது முன்னை னயப்போல திரும்பவும் நன்மை ப்ரகாசித்தது.¶—

௩௨. முனிசகசசமாதியை யனுஷ்டிக்கச்சிந்தித்தல்.

சமமும், மயித்திரியும், சாந்தமும், செல்வமும், பிரஞ்ஞையும், கிருபையும், சந்தோடமுமாகிய விவைகள் அமர்ந்திருக்கின்ற குணங்களையுடையவனாய் சகலத்திலும் மனதுபற்றில்லாமல் விந்தமலைச்சார்பிலுள்ள பூமியைப்பிளந்து செல்கின்றவிசாலம்பொருந்திய நதிக்கரையில் வெகுகாலங்கழித்து, நின்மலமனதினல் பராபரத்தையுணர்ந்த முனியானவர் சிந்திப்பார்.—

௩௩ யாவிலுங் கூடியுங் கூடாமற் சொச்சமாய்விளங்குவேனெனல்.

இந்திரியக்கூட்டங்களை முன்பே நிறுத்தல் செய்தோம், விரும்பி செவ்வையாகமிஞ்சின சின்மாத்திரத்தைச்சேர்த்து மலையைப்போல ஸ்திரமாக விருப்போம்; திரும்பஉதயமாகியும் மறைந்ததுபோலாவோம்; மறைபட்டும்உதயமானவனாய் சொச்சமடைந்து சமமாயிருப்போம்.—விருத்திஞான மிருந்தும், சுழுத்தியடைந்தவனுக் கொப்பாவோம், தணிவில்லாமல் சுழுத்தியையடைந்தும், விழித்தவனுக்கொப்பாவோம்;

௩௪. இத்தேகத்தினின் றுந் துரியவடிவாய்ப்ரகாசிக் குந் தன்மையைச் சிந்தித்தல்

பொதுவாய் அற்பமும் வேறில்லாமல் துரிய ஸ்வரூபத்தைப்பிடித்து இச்சரீரத்தில் சார்ந்திருந்தும் ஒருசலனமுமில்லாத சுயம்பிரகாசமாக நாமாவோம்.-

௩௫. சுகசமாதி பெற்றுச்சீவன் முத்தனு யிருத்தல்.

இப்படியென்று சிந்தித்து நல்லசமாதியில் ஆறு தினமிருந்து நித்திரைசெய்கின்ற வழிச்செல்பவனைப் போல சென்றிறந்தான். பொருந்திய சித்தியுள்ளவனாய் வீதகவ்வியன் நிறைந்திருக்கின்ற சீவன்முத்தி பதத்தைப்பெற்று வெகுகாலம் சுகித்திருந்தான்.*—

௩௬. சீவன்முத்தியில் விதேகமுத்தியைவிரும்பல்.

தீமைநன்மைகளின் விடுதலும் பற்றுதலும் கெட்டுப்போக, வீதகவ்வியமுனியானவர், இராகத்துவேடங்கள் மனதிலில்லாதவனாய் போதலும் வருதலுமாகிய சநநகன்மத்தையும் கெடுத்து, சொல்லாநின்ற விதேககைவல்யமான மோக்ஷமடையச்சிந்தித்தான்.-

௩௭. தத்துவங்களனைத்தையுந் தனதாத்மஸ்வரூபத்திற்

சித்தனாகிய வீதகவ்வியமுனியானவர், ஒருதினத்தில் மலைக்குகையையடைந்து கட்டியபதுமாசனத்தை யுடையவனாய் தன்னிடத்திற்றனே பேசுவார்.

¶ இ-ம். முன்புரியட்டக சரீரத்தோடும் வெளிப்பட்டுப் பின்றூலதேகத்தை யெடுப்பித் ததிற் புகுந்தனரென்பதாம்.

* இ-ம். சமாதியிலுஞ் சஞ்சரித்தலிலு மொருதன்மையவான சுவானுபவத்தோடு விளங்கினனென்பதாம்.

கரைக்கச் சிந்தித்து இராகத்துவேடங்களைக் கரைத்தல்.

மிருதுவானவாசையே, நிராசையைப் பொருந்தக்கடவாய். கோபமே சமமாகவுள்ளே சாந்தியடையக்கடவாய், உங்களோடு வெகுகாலம் விநோதத்தையடைந்தேன்,—போகங்களே? உம்மை வணங்கினேன், உங்களால் வெகுகாலம் சகத்தில்விளையாடினவிதம் போதும்போதும். துக்கமில்லாத இந்தமோக்ஷத்தை மறந்துபோகச்செய்த விடயசுகங்களே? உங்களை வணங்கினேன், துன்பங்களே உங்களால் சரீரமானது வேகுதலினலல்லவா அன்பினல் ஆத்மதத்துவத்தை யறிந்தேன் ஆதலினல் ஐக்கியங்கூடிய மோக்ஷத்தை நீங்கள் எனக்குக் கொடுத்தீர்கள் உபகாரஞ்செய்த வுங்களை வணங்குதல் உரியதல்லவா.—வெகுகாலமிஷ்டனை சரீரமே; உன்னைத்தள்ளுகின்றேன்! உண்மை ஞானமானது பூரணமாக வற்பியாசஞ்செய்து கெடுகின்றகேட்ட உன்னலே யுனக்கு சம்பாதித்துக் கொண்டாய் ஒளிசெய்கின்ற இச்சையென்னுமாதாவே? எனது வசனத்தைக்கேட்பாய். தடுமாறிமிகவும் வாட்டமுற்று தளர்வையடையவேண்டாம் உபசாந்தனுகிய நானுன்னை நீங்கினேன். சுகிர்தமே? நீகொல்லுங்கோரமுள்ள நரகம்விட்டு மோக்ஷத்தில் முன்னுகச்செய்ததா லுன்னையன்பினல் வணங்குவேன், வாழக்கடவாய்.—சகோதரமான இஷ்டராகிய சீவர்களே? உங்களை வழியாகத் தவிர்க்கின்றேன், சுகமாய் வாழக்கடவீர்கள். நான் நடந்துபோவேனென்று இந்தப்ரகாரம் அகத்தில் நசிக்கின்றமனது மீடணுத்ரயங்களும் நன்றுகவிட்டு, ஞானபூமியினிடமாகநின்று பிரணவத்தை மிருதுவாகவுச்சரித்து இவ்விடத்திலுள்ள வஸ்துக்களும், புறம்பிலுள்ளவஸ்துக்களும் மிருதயத்திலுள்ளவஸ்துக்களும், பருத்தஸ்தூலமும், சூட்சுமமாகிய மூன்றுலகத்திலு முள்ளதாகிய சங்கற்பத்தினல்வந்த சகலத்தையு நீக்கினன்.¶—பிரணவாந்தமாக நீண்டதாகிய சத்தமென்கின்ற நூலோடும் இந்திரியங்கள் பொருந்தின நிறையாத விடயங்களனைத்தையும், கந்தத்தை வாயுவு நீக்குவதுபோல நீங்கினன். ஆகாயத்தினிடத்தில் இருணீங்காததுபோல இருண்மாத்திர முன்னே யுண்டாகிவிளங்கவும் நீக்கினன். ப்ரகாசமுன்னே யுண்டாக அழகாக க்ஷண

சு அ. போகசுகதுக்கங்களைக் கரைத்தல்.

சு கூ. தேகமிச்சை நீதியான விடைவகளைக்கரைத்தல்.

எ ௦. பிராணங்களையுமனதையுங் கரைத்தல்.

எக. சுத்தவாசனையையாத்மாவினிடத்தடக்கும் போதுண்டானவனுபவமரபைத்தெரிவிக்குமிமித்தமதன் கிரமத்தைச்சொல்லத்தொடங்கல்.

¶ இ-ம். ஆசையை நிராசையாகவு முனிவைச்சாந்தமாகவும், போகங்களை மாபோகமாகவும், விடயசுகங்களைப் பிரமசுகமாகவும், துன்பங்களை யின்பமாகவும், தேகத்தை தேகிவடிவமாகவும், ஆசையைத் தற்பிரியமாகவும், பிராணனைப் பிராணியாகவும், மனதை யாத்மவிளக்கமாகவும் கரைத்து அவைகளையும் பிரணவஸ்வருபத்தைத் தாக்கத்தொடங்கின னென்பதாம்.

நேரத்தில் அந்தப்ரகாசத்தைப் பார்த்து நீக்கினான். சொல்லப்பட்ட அந்தகாரமும் ப்ரகாசமுமாகிய இரண்டுமில்லாமல் ஓடிப்போயின.— இந்த அவத்தையை மனதினாற் பிடித்துக்கொண்டு வுயர்வான வீதகவ்வியமுனியானவர், அவ்விடத்திலுண்டாகிய மனதை துரும்பைப்போல முழுதும் ஓரிமைநேரத்தில் ஒழித்தான். அதன்பின்பு அப்பொழுது பிறந்த குழந்தையறிவுக்கொப்பாகி மிகவுஞ் சொச்சமாய் உயர்ந்தொளிரும் ப்ரகாசத்தைப் பெறுகின்ற ஞானத்தைப் பெற்று, அரைநிமிடத்தில் கானிமிடத்தில் நினைவைத் தள்ளியிருந்தான். தொந்தத்தையுடைய வாயுவானது சலனத்தைநீக்குவதுபோல ஞானத்தில் குற்றமற்றவன் விடயத்தை நீக்கினான்,— சிற்சாமானியத்தைப் பெற்றான்; சத்தாமாத்திரமே ஸ்வரூபமானான், நனவிற் சுழுத்தியையடைந்து மகாமேருவைப்போல நின்றனன் நனவிற்சுழுத்தியி னுறுதியை யடைந்த பின்பு துரியஸ்வரூபத்தை யெளிதிலடைந்தான் சமீபமாயிருந்தது நிரானந்தமான நித்தியானந்தத்தையுடையவனாய் அசத்தாகியும் சத்தாகியும் நீக்சமுற்ற வாக்கியங்களுக்கு எட்டாததாகிய ஒப்பற்றவஸ்துவே சமானமற்ற வீதகவ்வியமுனியானவர் தானாகவிருந்தார்,¶— சூனியமென்பவர்களுக்கு அச்சூனியமாகியும், பிரமமென்பவர்களுக் கப்பிரமமாகியும் விஞ்ஞானமென்பவர்களுக்கு அவ்விஞ்ஞானமாகியும், சாங்கியற்குப் புருடனாகியும், யோகிகளுக்கீசனாகியும், குறைவில்லாத சைவாகமத்தாருக்குச் சிவனாகியும் காலமென்பவர்களுக்கு அக்காலமாகியும், மாத்தியாகட்கெல்லாம் பிரமாணமுள்ள மத்தியமாகியும் சமமாய்ப் பார்க்கின்ற மனதையுடையவர்களுக்கு யாவுமாயிருக்கின்றவஸ்துவே தானானான்.— சாஸ்திரங்களெல்லாவற்றின் சித்தாந்தமியாது, எல்லாராலும் பார்க்கப்பட்டதியாது, அறிந்ததியாது, சகலமுமானதியாது, பூமிகளனைத்திலும் வசிப்பதியாது, ஓரசைவுமில்லாத தன்மையுள்ளதியாது, ப்ரகாசங்களுக்குப் ப்ரகாசங் கொடுக்கின்றதியாது, உரிமையுள்ள தனதனுபூதியால் ஏகமாய்க்காணப்பட்டதியாது, ஏகமாகியு மநேகமா

௭௨, சுத்தவாசனையையாத்மா வினிடத்தடக்கும்போதுண்டான வனுபவ மரபைத் தெரிவிக்கு நிமித்தமதன் கிரமத்தைச்சொல்லத் தொடங்கல்.

௭௩. இதுவுமது.

௭௪. துரியாதீதமாய் நின்றுவிளங்குந்தன்மையையுரைத்தல்.

௭௫. இதுவுமது

¶ இ-ம். இந்திரியமுதலிய வனைத்தின் விருத்தியேயந்தகாரமாக வெளிப்படவதனையதைக்கண்ட சித்தினுற்றள்ள வசித்து ப்ரகாசமாய் வெளிப்பட வதனையதன் மயமாயிருந் ததன் விருத்தியைத்தள்ள அஃது சிற்சாமானியமாய் வெளிப்படவதுவு மதற்காதாரமான சத்தாசாமானியமாக வச்சத்துந் தன்விளக்கமான துரியமாய் வெளிப்பட வத்துரியமுந் தனதாநந்தமாய் வெளிப்பட்டதுவு மதீதமாய் வெளிப்பட்டதுவாக விளங்கினவென்பதாம்.

கியுமிருக்கின்றதியாது, மிகுந்தகளங்கத்தைபெற்றும் பெருமலிருக்கிறதியாது, எல்லாமாயல்லாததானதெ துவோ அந்தவஸ்துவே தானுனன்.— சநநமரணமில் லாததாகியும், அநாதியாகியும், ஆதியாகியும், ஏகமாகி யும், பலவாகியும், சகலநிட்களமாகியும், ஆகாயத்தி லுஞ் சொச்சமாகியும்,பரிசுத்தமாகிய நிலையையுடைய வீசனுகியும், திடமாயிருந்து இருபதினுயிரம் வருட மளவும் மகாமகிழ்ச்சியடைய விரும்பினப்ரகாரமே உலகத்திற் சஞ்சரித்து, மனதுதிரும்ப வுண்டாகாத வண்ணங் கெடுத்து வீதகவ்வியனென்னும் பரமஞா னியானவர் சீக்கிரமாக அத்துவிதமானுன்.*—

எ௬. துரியாதீத மாய் நின்று விளங் குந் தன்மையை யுரைத்தல்.

வீதகவ்வியன்கதை
முற்றிற்று.

---

# உபசாந்திப் பிரகரணம்.

---

## அவதாரிகை.

முன்கதையில் சித்தவிஸ்ராந்தியின்பொருட்டு பற்றறுதிமுதலியஅற் பியாசங்களைச் சொல்லி,அச்சித்தசாந்தியே செகத்சாந்த மென்பதை யுறு திப்படுத்துநிமித்தம், இவ் வொன்பதுகதைகளின் சாரங்களையெடுத்து உபசாந்திப்பிரகரணமாக நிரூபிக்கிருர்.

---

௧. சீவன்முத்தனுக் காகாயகமன முத லியசித்திகள் ஏனி ல்லை எனல்.

இப்படியென்று சொல்லிய வசிஷ்டமுனியை இரா கவன்பார்த்து சொல்லுவார்; சீவன்முத்தியையுடைய வர்களது சரீரங்களுக்கெல்லாம், ஆகாயகமனஞ்செய் தல் முதலிய சத்திகளைப்பார்க்கிலம என்னவென்று கேட்க அக்கேள்விக்கு உத்தரங்களை கிருபையுள்ள வசிட்டர் தெரியச்சொல்லுவார்.— பூரணஞானமில் லாத பந்தத்தையுடையவர்களும், அவிழ்தங்களினு லும், மந்திரங்களினுலும், தொழில்களினுலுங்காலங் களினுலும் யூகங்களினுலும், முயற்சித்தால், பரவிய வாகாச கமனுதிகளை பொருந்தியிருப்பார்கள் உண் மைஞான முடையவர்களுக்கு இச்சித்திக ளரித்தாயி னவல்ல அந்த ஞானவான்கள் தத்துவமான வாத்து மதிருஷ்டியை இடைவிடாமற் பொருந்துவார்கள்.—

உ. அணிமாமுத லிய சித்திகளு மா யாவிசித்திர மென் பதை யறிவிக்கு நிமித்தமவைகளைச் சீவன்முத்தன் வே ண்டானெனல்.

ஞானிகள் ஞானத்தினுல் ஞானத்தினிடத்தில் அமைவதேயன்றி ஆகாயகமனுதி யிச்சையின்பின் பிரிந்து செல்லார்கள் உலகத்திலுள்ள வஸ்துக்

௩. வேண்டினு ல் வருமோவெனி ன் முன்சொல்வி ய கிரமங்களால்

---

* இம் அதீதமேயாது யாதெப்படியோ வப்படியப்படி யெல்லாமாய் விளங்கு கின்ற சாக்ஷாத்காரமான விதேகமுத்தித் தன்மையை யடைந்தனரென்பதாம்.

ளால் வருமெனல்.

களின் வேற்றுமைகளனைத்தும் மாயாமயங்களாம்; அம்மாயையானது, கெடும்படி செயித்தவர்கள் திரும்பவு மம்மாயையி லழுந்துவார்களோ, ஞானவான்களு மிச்சிப்பார்களாயின், முன்சொல்லப்பட்ட கிரமத்தினால் சித்தியுண்டாம்.— அவிழ்தங்களும், மந்திரங்களும், தொழில்களும், காலங்களும், யுத்திகளுமாகிய விவைகளனைத்தும் நாட்டாநின்ற சித்திகளைக்கொடுக்கும்; நன்மையுள்ளமோக்ஷத்தைக் கொடுக்கமாட்டாது ஒருவருக்கு சித்தியொன்றிற் றேட்டமுண்டானால் அதைமுயற்சித்தால் கிடைக்கும்; பந்தப்படுத்துகின்றகமனுதியிச்சையானது, பூரணஞானத்தையுடையவர்களுக்கு வந்துபொருந்தாது.*— ஆசைகளனைத்தும் மரித்துநீங்கினால் கலக்கமில்லாத ஆத்மஞானமுதிக்கும்; ஆசையைவிளைக்கின்ற கமனுதி சித்திகளிடத்தில் முழுகுகின்றவர்களுக்கு அவ்வான்மலாபமுண்டாகாது என்றுசொல்லிய வசிட்டமுனியை, யோகியர்கற்பகாலஞ்சீவித்திருப்பதற்கு யாதுகாரணமென்று இராகவன்கேட்க, திரும்பவும் வசிட்டர் சொல்லுவார்.— பிராணவாயு வசைந்தாலசைவார்கள்; பிராணவாயுவடங்கினால் மலைக்கொப்பாவார்கள்; பிராணனைத்தரித்ததினால் யோகிகள் வெகுகாலமிறவார்கள். பிராணனிடத்திலும் மனதினிடத்திலுமுண்டாகின்ற அசைவானது உள்ளிலும் புறம்பிலுமடங்குமானால், மரணமும் வார்த்திகமுமாகிய விவ்விரண்டும் வெகுதூரத்தில் போய்விடும்.— உள்ளிலும் வெளியிலும் சலனமில்லாமல் பிராணனு மனதும் அடங்குமாயின், ஒருகாலத்திலும் தள்ளப்படாமல் தாதுக்களனைத்தும் தேகத்தில் வாசஞ்செய்யும். தெளிவாக வறியவேண்டிய வாத்மஞானத்தையறிந்து இச்சைநீங்கி புத்திதெளிவாகி மனதிற்கொள்ளுகின்ற பந்தங்களனைத்தையுங் கெடுத்தவர்களல்லவா தத்துவத்தை மதித்துணர்ந்தவர்கள்.‡—பின்னும் விவேக வுதயத்தினால் மனது ஸ்வரூபத்திலயிக்கமாயின், மயித்திரிமுதலாகிய நான்கு குணங்களும் எங்கேபொருந்தும் என்று கேட்ட ஸ்ரீராமருக்கு வசிட்டமுனிசொல்லுவார். அருவமுமுருவமுமென்று மனோநாசம் இரண்டுப்ரகாரமாம்.- சீவன்முத்தியில் உருவநாசமானது மனதுக்குண்டாகும், வருத்தமற்றவிதேகமுத்தி

௪. ஆயின் வேண்டலாமேயெனின்முத்தியின் மையால் விரும்பார்களெனில்.

௫. முத்திக்குச் சித்தி யிழிவா மென்பதைக் காட்டி மேற் சிரஞ் சீவிகளின் யோகமுமப் படியே யாமென்பதை யறிவிக் கத் தொடங்கல்.

௬. சிரஞ் சீவிக்குப் பிராணபந்தனமே காரணமாமெனல்.

எ. இத்தேகவாஞ்சையைநீக்கினவர்களே தத்து வத்தை யறிந்தவர்களாமெனல்.

அ. ஞானியின் மனமிறவாமல் மயித்திரியாதி குணங்களோடு விளங்குவதை யறிவிக்குநிமித்தம் அதனிறத்தலையிரண்டுவிதமாகச் சொல்லுதல்.

௯. மனதினுருவத்தை நசிப்பிக்க

* இ-ம் நிராசையுள்ள ஞானிக் காசையுள்ள சித்திகள் கூடாவென்பதாம்.
‡ இ-ம். சிரஞ்சீவத்துக்கான மனோபிராணபந்தனம் ஞானிக்குக் கூடாவென்பதாம்.

வேண்டு மெனல்.

யில் அருவநாசமுண்டாம். மனதுண்டானல்துன்பமாகும்; அதுமரிக்குமாயின் ஆநந்தம்பெருகும். பாவிக்கின்ற மனமானது எழும்பாத ப்ரகாரஞ்செய்து அம்மனதைக் கெடுப்பாய்.¶—

௧௦. உருவநசியாமற் பெத்தரிடத்திருக்கின்ற மனமேமாயைக்குக்காரணமாமெனல்.

ப்ரகிருதி மார்க்கத்தின் குணத்தின்சுமையை எனதென் றபிமானஞ்செய்தல் தகுதியான தத்துவத்தைத் தெரிந்துகொள்ளாமல் வருந்துகின்ற மனமாகும், அம்மனமே சீவனுமாகும், கூட்டமாகிய சுகதுக்கங்களை தொடர்ந்திருப்பதாயும் சுகமுதலானதுகளில் நிலையாயிருக்கின்றஇந்தமனமே மிகுந்தமாயை யுண்டாவதற்கு முளையாகும்.—

௧௧. சம திருஷ்டியிற்சலனமறுதலே மனத்தினுருவ நாசமா மெனல்.

மனதினுண்மையைச் சொன்னேம், மனோநாசஞ்சொல்ல நீ கேட்கக்கடவாய். மகாமேருவை மூச்சசைக்கமாட்டாத தன்மையைப்போல, சமத்துவமான தரிசனத்தில் இனமாகிய சுகதுக்கங்களினல் எவ்வளவுமசைவுபடாமல் இருக்கும் ஞானிகளுக்கு பயனின்றிய மனமானதுஅறிஞர்கள் நசித்ததென்றுசொல்லுவார்கள்.

௧௨. இதுவுமது

மகாசம்பத்து மாபத்தும், யுத்தியு மந்தமும், தரித்திரமும், மதங்களும், பொருந்தினவாய் யாவரை வேறுபடுத்தாதோ, அவர்களுக்கே மனமிறந்ததாம். எழுந்தஅறியாமையேமனமாகும்; அவ்வறியாமையே நீங்கில், வருத்தமில்லாமல் மனோநாசமென்கின்ற மூதறிவு உண்டாகும்,†—

௧௩. உருவநாசமாய்ச் சீவன்முத்தரிடத்தருவமாயிருக்கின்ற மனதினிலக்கணங் கூறல்.

உண்டான குணமாகிய மயித்திரி முதலிய நான்குஞ் சேர்ந்திருக்கும் சுத்தவாதனையைப்பெற்று, தீமையான மறுசநநங்களும் இல்லாததாகுமோ, அந்தமனது சீவன்முத்தர்களுக்குண்டாயிருக்கும். ஒய்ந்தமனதுக்குஉருவநாசமானது இதுவேயாகும்; இந்தன்மையான மனதில் நான்கு குணங்களும் வசந்தகாலத்தில் விரிந்த புட்பக்கொத்துகளைப்போல ப்ரகாசிக்கும்.—

௧௪. அருவநாசமாம் விதேகமுத்தரிடத்து விளங்கியவியல் பைக்கூறல்.

மனதினது அருவநாசமானது விதேகமுத்தனிடத்தில் களங்கமறப்பொருந்தும், மிருதுவாயுள்ள மயித்திரியாதிய சற்குணங்களைப்பெற்றும் மெய்யான சாத்துவிதமானது இறந்ததாய் விதேககைவல்லியமாய் பரிசுத்தமாய் முத்தர்க்செய்தும்; தொடர்ச்சியாக சாத்துவிதநாசமே வடிவமாய் மனதில் அருவநாசமென்னு நாமம்பெற்றிருக்கின்ற ப்ரகாசிக்கின்றபதத்தில் சொல்லுதற்கு வேறென்றுமில்லை.—

௧௫. இதுவுமது

குணகுணங்களும், செல்வாசெல்வமும், ப்ரகாசிக்கின்றவுதயாஸ்தமனமும், சந்தோடமு

---

¶ இம். மனமானது பெத்தர்களிடத் தருவமாகவும், முத்தர்களிடத் தருவமாகவும், விதேசமுத்தர்களிடத் திவ்விரண்டுவிதமின்றூகவும் விளங்குமென்பதாம்.

† இ-ம். மனதி னுருவநாசத்தைச் சொல்லியதாம்.

மசூயையும், இணங்குகின்ற ப்ரகாசமும், அந்தகார மும், இராத்திரியும், பகலும், மூன்றுசந்தியும் உள்ளது மில்லாததும், இவைகட்கு மத்திகளொன்று மில்லா மையே பிரமபதமாம். அதுவே சம்சாராடம்பரத்தை யும், புத்தியையும், சயஞ் செய்தவர்களுக்கு, கந்தத் தைக் கிரகிக்கின்ற காற்று முதலிய வனைத்தினுக்கும் பொருந்துதற்குஸ்தானமாயிருக்கின்றஆகாயம்போல தஞ்சமேயாம்.¶— துன்பங்களனைத்து நீங்கிஞானமே

௬௬. மனமிறந்த சுகத்தைச்சொல்ல வஃதிறக்கும்பொ ருட்டு அதன்காரிய மான மாயையின் மூலத்தை நான்கு விதமாகப்பிரித்து வினவுதல்.

ஸ்வரூபமாய் ஒன்றாகிய சுழுத்தியாய் தாமதராச தகுணந்தோற்றாது; ஆநந்த மிகுந்திருக்கின்ற அந்தப் பிரமபதத்தில், ஆகாசசரீரமாய் மகத்துக்களாய்ப்ரகா சிக்கின்ற பெரியோர்கள், மனதுகெட வசிப்பரென்று வசிட்டமுனி சொல்லவும், வளராநின்ற கொடிமுந்திரி யையொத்த மாயைக்கு முன்னே சொல்லப்பட்ட விதையாது, அவ்வித்துக்குவிதையாது, அதற்கெது விதை, சொல்லப்பட்டவதற்கெதுவிதை, இந்தநான்கு விதையும் சொல்லுவாயென் றிராமன் கேட்டான்.—

௬௭ முதல்வித்தி ரண்டாம் வித்தினி லக்கணங் கூறல்.

வசிட்டமுனி சொல்லுவார், சம்சார மென்கின்ற சூழ்ந்த கொடிக்கு உள்ளெழாநின்ற துவக்கமாகிய சுபமசுபமென்கின்றமுளையைக் கொடுக்கின்ற சரீரமே விதையாகும், நின்றதான சரீரமென்னும் விதைக்கு யாது விதையென்றால். சநநமரணங்கள் எப்போதும் மிகுந்து நைவிக்கின்ற துன்பமென்னு மிரத்தினத் துக்கு வைக்க விடமாகிய சம்புடமென்னும் இச்சை

௬௮ மூன்றாம்வி த்தினிலக்கணங் கூறல்.

யின்பின் செல்லுகின்றமனதேயாம்.†— இல்லதுள்ள தென்கின்றஇச்சரீரக்கூட்டங்கள் மனதினால் அளவில் லாமலுண்டாகும்; இச்சரீர விடயங்களையே கனவில் மனமனுபவிக்கும். சகத்தொழில்க ளென்னுங் கொடி களேசேர்ந்துச்சுற்றிக்கொண்டிருக்கின்ற துன்பத்தை யுடைய மனமென்கின்ற விருட்சத்துக்கு இரண்டு விதையாம்; பிராணனசைவு ஒருவிதையாகும்வாசனை யானது இரண்டாம் விதையாகும் என்று சூரியனது பழமையானவமிசம்விளங்கும்படியாகவந்தவரசனே? கொள்ளக் கடவாய்.‡— உதயமாய் எவ்விடத்திலும்

௬௯. பிராண னசைவான முத ல்வித்தினிலக்கண ங்கூறல்.

பொருந்தியஞானமானது, பிராணசலனத்தினால் திரி ஸ்யஞானத்தை யடையும், அந்த ஞானத்தை பெகுற் முகத்தின் மிகாமல் தடுத்தல்மிகுந்தசிரேயசாம். அறி வானது திரிஸ்யத்தை இச்சையினாற் பொருந்தும்;

¶ இ-ம். மனதினருவ நாசத்தைச் சொல்லியதாம்.
† இ-ம். மாயைக்குவித்துதேகமெனவு மதற்குவித்து மனமெனவுங்கூறியதாம்.
‡ இ-ம். பிராணனசைவுந் திரிஸ்யவாசனையுமே மனதிற்குவிதையாமென்பதாம்.

அத்திரிஸ்யங்களை மனதுக்கு எப்போதுமொழியாத துன்பமாம். அந்தத்தனிமையாகியவறிவானது திரும்பாத சுழுத்தியறிவைப்போல இருக்குமாயின், அதுவே நிருவாணமும், அதுவே ஆத்மலாபமும், அதுவே நிருமலமான பதமுமாம வேறொன்றுமில்லை.—

உ0. இதுவுமது. ஆதலினால் பிராண சலனத்தினாலும் வாசனையிடத்தில் பிரியத்தினாலும் விடய ஞானத்தை பரவச்செய்யாமற்போனால் ஜநநம் விடுபடும். அறிவினது பேதமிகுதியே மனமாகும்; அம்மனதினால் இச்சகலவுயிர்களும் வாழும்.. அறிவையுடைய யோகிகளனைவரும் பிராணபந்தனத்தினாலும், தியானத்தினாலும், அவிழ்தத்தினாலும், யுத்தியின் றிறங்களினாலும், வேற்றுமையுள்ள மனமடங்கு நிமித்தமல்லவா பிராணாயாமஞ் செய்கின்றார்கள்.—

உக. இதுவுமது. நன்மைபொருந்திய பிராணபந்தனமானது மனதைஅடங்கச்செய்யும் சமத்துவத்துக்கு மேன்மையான காரணமாகும். இன்பத்தை விளைக்கும். விடய சம்பந்தமான அறிவையெழாமற் செய்யுமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். தெளிவாகிய பலவஸ்துக்களை யறிகின்ற வறிவை விளக்கஞ்செய்து சேர்ந்திருக்கின்றவாசனையினால்உண்டாவதாய்வெளிப்படையாகக்கண் டனுபவிப்பதாகியமனத்துக்கு இனி இரண்டாம்வித்தையி னுற்பத்தியை சொல்லக் கேட்பாய்.¶—

உ௨. வாசனையான விரண்டாம் வித்தினிலக்கணங் கூறல். திரமாகிய பாவனையினால் முன்பின் விசாரணையைவிட்டு விடயங்களைச்சேரக்கைவசமாக்குதல் அறியாமையாகிய வாசனையாகும். அதிவேகத்தினால் சீக்கிரத்தில் ஒன்றைக் குறித்துப் பார்த்து உடனே யந்தவடிவமாய், வேறானநினைவுகளியாவையும் ஒழிக்கின்ற இந்த வாசனாலசத்திற்சென்று ஆத்மாவும்அவ்விடத்திலதுவே சத்தியமாய் தோற்றாநின்ற வஸ்துக்களை நல்லதென்று சலித்து மயங்கும்.—

உ௩. இதுவுமது. வாசனையினது வேகத்தின் பரவசத்தினால் தனது ஸ்ரூபத்தை விட்டு, சகலத்தையும் மயக்கத்தோடும் குற்றம் பொருந்துகின்ற புத்தியில் மதவசத்தினால் மயங்குதலைப்போல பார்க்கும். இந்த மனதை தெரியும்படியாகச் சொல்லில், குற்றம் பொருந்திய காட்சியாது, தானல்லாததை நானென்கிற பாவனையாது, வஸ்துவல்லாததை சொல்லுகின்ற வஸ்துவென்னுங் கருத்தியாது, அதுவேமனமாகும்; இம்மனதினாற்சநநமரண

¶ இம். பிராண னியக்கத்தாற் பூரணபோத மசைந் ததுவிடயமாக வெளிரிட்டதனாற் சுகதுக்க மனுபவிக்கு மனமுண்டாதலி னஃதடங்கும்பொருட்டு பிராணாயாமஞ் செய்யவேண்டுமென்பதாம்.

உச. வாசனையான விரண்டாம் வித்தினிலக்கணங் கூறல்.

மூப்புண்டாம்.— மிருதுவான திடப்பழக்கத்தினால்
பதார்த்தத்தில் பொருந்தாநின்றவோர்பாவனையினால்
மிகவும் சஞ்சலத்தையடையும்; மனதுண்டாயின் சநந
மரணமுதலியவைகளு முண்டாகும், விடுதலும் பற்
றுதலும் ரூபமாகிய கூட்டங்களிற் பொருந்துகின்ற
இவ்வளவையும் பாவனைசெய்யாமல் சகலமும்விட்டு
எப்போதிருந்ததோ அப்பொழுதே மனமுண்டா
காது. வாசனாக்ஷயத்தினால் கருத்தொழிந்தால் மேன்
மையான வுபசாந்தம்வரும், மனோநாசமுண்டா

உரு. விடயவாசனையே மனதுக்குருவமாமெனல்.

கும்.¶— உலகவஸ்துக்களில் ஓரிடத்திலொருநினைவு
மில்லையாயின், ஒப்பற்ற புனமென்னுஞ் சூனியாகாய
த்தில் மனமானது நிகழ்ச்சியுற உண்டாவதெவ்வண்
ணம். உதாரமுள்ள ஸ்ரீராமா? மனதுக்கு அவ்வளவு
தான் வடிவமென்று கருதுவேன், மேலான சுகத்தினா
லும் பொருளை யுண்மையென்பதினாலும், அகத்திற்
பொருந்திய பல வஸ்துக்களின் நினைப்பே மனதின
துருவமாம்; படர்கின்ற திரிஸ்யம் கிரியைக் காகமாட்
டாதென்று, நினைக்கின்ற ஆகாயத்திலுஞ் சொச்ச

உசு. விடயவாசனை நீங்கிப்பிரமவாசனை யுண்டாயின் மனதிற் குருவ நாசமுண்டாமெனல்

மானவர்களுக்கு எப்படி மனதுண்டாகும்.— சகத்
தில்லாததாகப் பற்றுதலும், அதையில்லாததாகப்
பாவித்தலும், விசாரணைசெய்து உண்மையாகிய வஸ்
துவைக் காணுதல் மனோநாசமென்று சொல்லுவார்
கள். சுபாவமாகும்படி சகலத்தையு முள்ளேதள்ளி
குளிர்ச்சியான வமிர்தத்தைப்போலும் இந்தமனது
சஞ்சரிக்குமானால், குறையாதசெயலைப் பொருந்தினா
லும் அம்மனமானது தன்னுருவமில்லாததென்று
சத்துக்களாற் சொல்லப்படும் கூட்டமாகிய மறுபிறப்
பைக்கொடாநின்ற வாசனையை நெருங்காதவர்கள்,
குயவன்சுழற்றிவிட்ட சக்கரத்தைப்போல, குறைவில்
லாத சீவன்முத்தர்கள் பிராரத்தமுள்ள பரியந்தஞ்

உஎ. மனதினுருவம் நசித்த சீவன்முத்தர்களின் சிறப்பைக் கூறல்.

சஞ்சரிப்பார்கள்.— வருத்தவித்மிக்குச் சமானமாய்
சுகமல்லாமலிருக்கின்ற மறுபிறப்பில்லாத சுத்தவாத
னையை அடைந்திருப்பவர்கள், துன்பந்தீர்ந்த சீவன்
முத்தர்களாம். தத்துவஸ்வரூபத்தைப்பெற்றமனதை
யுடையவர்களு மவர்களே; சமமாகவறிகின்ற ஞான
தீரத்தையடைந்தவர்களு மவர்களே; மனமில்லாதவர்
களு மவர்களே; நின்மலமாக சுமந்திருக்கின்ற சரீரம்

---

¶ இ-ம். பிரமாநந்த ப்ரதிபலனே சமான விடயாநந்தத்தைச் சுகமென்றனுபவித்தபருடன் றன்னையறந் தவ்வாசனாவடிவமா மவ்விடயமுண்டாயிருக்கிற சுகமும் அஃதில்லாவிடிற் றுக்கமுமாம், அக்கருதுங்கருத்தே மனமாதலி னம்மனதிற்கு வாசனைவித்தாயிற் றம்பேதவாசனைநீங்கி மனமிறக்கில் விடயாநந்தநீங்கிப் பிரமாநந்தம் வெளிப்படுமென்பதாம்.

விடில் சிதாகாசஸ்வரூபத்தை அடைந்தவர்கள் அச்சீவன்முத்தர்களேயென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.‡— உயிரினசை யொன்றாகவும வாசனை யொன்றாகவும் மனத்தின்வித்தானது இரண்டாகும்; இவ்விரண்டிலொன்று நசித்தால் இரண்டு முடனே நசிக்கும். வாசனையின்வசத்தினால் பிராணனசைவும், பிராணனசைவினால் வாசனையுமுண்டாகும்; அதனால் மனமென்கிற வித்துக்கு விதையும் முளையும் என்ற ஞாயமுண்டாகும். சொல்லாநின்ற வாசனையும் பிராணனசைவுமாகிய இவ்விரண்டும் நாநாவிதமான திரிஸ்யங்கள்மூலமாக விரியும்.¶— ஆகையினால், திரிஸ்யத்தை நீக்குதலினால் பிராணனசைவும் வாசனையுமாகிய இவ்விரண்டும் விருக்ஷம் வேரற்றதுபோல அடியோடுங் கெடும்; படராநின்ற விருத்திஞானமே திரிஸ்யத்துக்கு விதையாகும்; அறிவு தோற்றாதென்றால் திரிஸ்யமுமில்லை; எண்ணெயில்லாமல் எள்ளுண்டாயிருக்குமோ வேற்றுமையாக உள்ளிலும் புறம்பிலும் திரிஸ்யமென்ப தொன்றுமில்லை; உதிக்கின்ற ஞானமானது ஒருவிதமான சிருஷ்டியைச் செய்யும்.— சங்கற்பத்தினால் திரிஸ்யத்தை ஞானமானது தன்னிடத்திற்றானே பார்த்திடுஞ்சொற்பனத்தில் தனதிறததலும் அச்சொற்பனத்தில் சகல தேசங்களும் தன் சமத்காரத்தால் பொருந்துவது போல், திரிஸ்யத்தை விருத்திஞானமறியும். பகுத்து முன்னறிந்ததானாலும் அறியாததானாலும் அறிவுக்குயாது ப்ரதிபலித்ததோ' அதைப் பரிசுத்தம் பொருந்திய தமது ப்ரயாசத்தினால் விசாரணையுள்ளவர்கள் கெடுப்பதுவே கொடியசம்சாரத்தைக் கெடுத்ததாகும்.— அந்தப்ரதிபலமான திரிஸ்யத்தைக் கெடுக்காதிருப்பதுவே மகாசம்சாரத்தைச் சேர்ந்ததாகும்; அதைக்கெடுத்ததே முதிர்ந்த பரகதியென்றுசத்துக்கள் சொல்லுவார்கள். திரிஸ்யமல்லவா அளவற்றசஙந துன்பம். ஸ்ரீராமா? கலக்கமுற்ற திரிஸ்யமின்மையும், விடயவறிவின்மையும். கொடிய சஙநமில்லாத நிருவாணசுகத்தைக் கொடுக்கும் சதுரையுடையவ

௨௮. நான்காம் வித்தினிலக்கணங் கூறல்.

௨௯. திரியஸ்தினால்வாசனை யுண்டாகி அவ்வாசனையால் மனதுண்டாகி அம்மனதினாற் றேகமுண்டாகி அத்தேகத்தினாற் செனித்து மரிக்கின்ற சம்சாரமாயை யுண்டான வுற்பத்திக்கிரமமான கற்பனாவிதையாகிய நான்கையுஞ் சொல்லி.இதையொடுக்கிச்சுகபோத மாக்குதற்பொருட்டு இதார்த்தமானநான்கு வித்தையுஞ் சொல்லத்தொடங்கித் திரிஸ்யத்துக்கு வித்துசித்தென்ற றிவித்தல்.

௩௦. சித்தேசகத்தாய்விளங்குகின்றதென்றறியிற் சகத்தாகியமாயாரூபம் நசிக்குமெனல்.

௩௧. திரிஸ்யமகன்ற சித்திற் பிரமசுகமுதிக்குமெனல்

‡ இ-ம் அசுத்தவாசனை நீங்கிச் சுத்தவாசனையுள்ள மனமே யாத்மசுகம் பெற்றதாம்

¶ இ-ம் விடயானுபவத்தால் வாசனையும் அசை யனுபவிக்கும்பொருட்டு சலனமுமுண்டாதலால் அவ்விரண்டிற்கும் வித்து திரிஸ்யமென்பதாம்.

ணுய் சடமில்லாதவனுய் விடயாநந்தத்தைவிட்டு ஒன்றையுமறியாமல் சஞ்சலத்தைவிடுவாய்.¶— திரிஸ்யத்தை பாராமலிருக்கின்ற ஞானஸ்வரூபமாகிய அப்பரமாத்மாவே நீயாம். ஈதுண்மையாமென்று வசிட்டமுனி சொல்லவும், திரிஸ்யமில்லாமலிருக்கின்ற விடத்தில் அறிவில்லாதெப்படிவரும், ஞானமில்லாத விடத்தில் திரிஸ்யமெப்படிநீங்கும், செம்மையாகச் சொல்லவேண்டுமென்று கேட்ட ஸ்ரீராமருக்கு திரும்பவும் சொல்லுவார். எவ்விடத்திலு நிசழுகின்ற பற்றில்லாமல் அறிவின்மையான வொருவிடயத்தில் ஆறுதலும் அறிதலுமில்லாத வாத்மாவே, திரிஸ்யமில்லாததும் அறிவில்லாததுமாம்.†— திரிஸ்யத்தையடையாத ஞானத்தைப்பெற்றால் அளவற்றதொழில்களைச்செய்தாலும், திரிஸ்யமில்லாததும், விருத்திஞானமில்லாததும், அவ்வாத்மாவாகும்; திரிஸ்யத்தை எவ்வளவேனும்இதயாகாசம்|கிட்டாதாயின் அவனே ஞானவானும்; சடமாகாதவனும்; விடயவறிவில்லாதவனும்; அவனே சீவன்முத்தனும்; அவனிடத்தில் அறிகின்ற வாசனுநாசத்தினுல் ஒன்றையும் நினையாமல் குழந்தையறிவுக்கும் ஊமனறிவுக்கு மொப்பாயிருக்கும்.— அப்பொழுது, திரிஸ்யபாவனையைவிட்டு பூரணமாயிருக்கின்ற விருத்திஞானமில்லாத வாத்மஞானத்தை அடையலாகும்; அதனுல் திரும்பவும் ஞானமானதுஒன்றிலும்பற்றுமல் ஒருப்ரகாரமாயிருந்த சகலவாதனைகளும்விட்டு நிருவிகற்பசமாதியினுல் நிறைந்த வாகாயத்தி னீலநிறம்போல, பூரணுநந்தநிறையும்.— நன்மையாகிய அச்சமாதியைப்பிடித்து திரிஸ்யத்தைநாடாத ஞானஸ்வரூபமாகிய ஞானிக்கு, தன் ஸ்வரூபந் தானுனபடியினுல் தனித்தவாநந்தம்; அந்த வான்மாவி லபிக்கும். நிற்பதும், நடப்பதும், சத்திப்பதும், பரிசிப்பதும், இவைகள் தொடர்புற்றும் அவைகளிற் பற்றுதலில்லாதவன், வலிமையுள்ள திரிஸ்யமல்லாதவனும் ஆநந்தமில்லாதவனும், ஒன்றையு மறியாதவனும், பேராநந்தனுமாம். ‡— இந்தத் திருஷ்டியைப் பிடித்து இழிவான தொழில்களு

௩௨. சுயஞ்சித்தினிலக்கணங் கூறல்.

௩௩. முற்கூறிய சித்திற்கு க்ஷமுதிக்குமெனல்.

௩௪. இதுவுமது.

௩௫. இதுவுமது.

௩௬. இச்சித்துக் குவித்து சத்தாகு

¶ இ-ம். திரிஸ்யத்தின் காரணமான சித்தைத்தரிசித்து அத்திருஷ்டியினுலத் திரிஸ்யத்தைக் கரைக்கிற் சுகமுண்டாமென்பதாம்.

† இ-ம். ஸ்வரூபஞானத்தில் விருத்திஞானமுண்டாங் யஃதே விடயாகாரமாய்த் தடித்தலினவ்விடயத்தையும் அதைவிளர்க்கும் விடயஞானத்தையுமறியாத வாத்மஞானத்தை விளக்கிவித்ததாம்.

‡ இ-ம், இசசித்தே யாநந்தமயமாய் விளங்குமென்பதாம்.

மெனல்.

டன் பொருந்தினும் துக்கசாகரத்தினின்றுங்கரை
யிலேறி ஞானங்சிறப்பினது சமுத்திரமாவாய் அந்த
மேன்மைப்பொருந்திய சத்தாமாத்திரம் இந்தஞானத்
தின் விதையாகும்; அந்தஞானம் முதன்மையான சத்
திலிருந்து ப்ரகாசத்தில் ஒளியைப்போல வுண்டா

ருஎ. அச்சத்தி
க்கிரண்டிலக்க ண
ங்கூறல்.

கும்.—அந்த நிறைந்த சத்துக்கு இரண்டு ஸ்வரூப
மாகும்; ஒன்று பலவிதரூபமாகும், மற்றென்றாகிய
ஸ்வரூபமாகும், இவைகளைப் பிரித்துச் சொல்லக்
கேட்பாய். கடமென்பதும் படமென்பதும் உள்ளதெ
ன்று நீங்காமற்புற்றிப்பார்க்கின்ற பாவனைகளானவை
சத்தினதுஸ்ரூபத்தின் பிரிவினாலநேகவிதமானாலும்

ருஅ. மூன்றுசத்
தையுநீக்கியேகரூப
மான சத்தைக்கூற
ல்.

அது வொன்றே.—எவ்வளவேனும் விசேடமில்லாம
னீக்கி சத்தாமாத்திரமாகியும், பற்றின்றி ஏகரூபமா
கியு, மகத்வஸ்வரூபமாகியு மிருக்கின்ற வதுவே, சத்
துக்குப்பொருந்துகின்ற பதமாகும். இன்னும் கால
சத்தையென்றும், கலாசத்தையென்றும. வஸ்துசத்
தையென்றும், மூன்று சத்தையையும் நீக்கி ஏகமான
சத்தாமாத்திரத்திற் பொருந்துவாய்.— காலசத்தை

ருகூ. இதுவுமது.

கலாசத்தை வஸ்துசத்தையென்கின்ற மூன்றுசத்
தையும், நினைக்கின்ற வெவ்வேறாயிருக்கின்ற செயலை
விடுமானால், ஒருதன்மையில் உத்தமமான சத்தாஸ்வ
ரூபத்தை யுடையதானாலும், வாய்மையையுடைய
சத்தாகாவாம். அநேககருமங்களானவை உள்ளதான
விச் சத்தைகளில் பலவுக்கும் காரணமாதலைநோக்கி
அழகாக வெவ்வேறான பதத்தைக் கொடுக்குந் தன்
மையாதலால், அக்காலசத்தை முதலானவை எப்
படி பரிசுத்தமான சத்தையாமுறைமை.¶— அந்த

சு0. சுயஞ்சத்
துக்கு அதன் முடி
வான துரியமேவி
த்தாமெனல்.

சத்தாசாமானியமான வொன்றையும் தனிமையாகப்
பாவனைசெய்து, பரிபூர்ணமாயிருக்கின்ற சுயானந்தத்
தையுடையவனாய் திக்குகளனைத்திலும் நிறைந்துநிற்
பாய். சத்தாசாமானிய மாத்திரத்தின் முடிவானதெ
துவோ அவ்விடத்ததுவே பரிசுத்தாகாரமான விச்
சத்துக்கு விதையாம்; அச் சத்தாசாமானிய முடிவி
னின்று இச் சித்துமுதலிய சகமனைத்து முண்டாம்.-

சுக. அத்துரியத்
துக்குவித்து ஞான
நந்தவயிக் கியமான
வத்துவித மெனல்.

சொல்லப்பட்ட சத்தாசாமானியத்தினுடைய அந்
தத்தில் சங்கற்பிச்கு நினைவுகளனைத்து நீங்கி ஒழி
கின்றதெதுவோ அவ்விடத் ததுவே சுகபோகத்தி
னிடமாம்; முதன்மையாகிய வித்ததுவாகும். குற்ற
மற்ற அந்த ஞானானந்த பதத்துக்குவிதையில்லையாம்
அச்சுகபோதந்தி லயித்து வேற்றுமையில்லாமல்தழு

† இ-ம். ஏகரூபமான சுயஞ்சத்தை நிரூபித்ததாம்.

வாநின்ற ஞானமானது நிலைபெற்றிருக்கும்; அந்தப் பதத்தை யடைந்தவர்கள் திரும்பவும் துன்பமடையார்கள்.*— சகலத்துக்கும் அதுவே காரணம். காரணமான வதற்குக் காரணமில்லை. சகலத்திற்கும்அதுவே சாரமாயிருக்கும்; சாரமாகியவதற்கு வேறேசாரமில்லை. அதுவாகிய பெரியகண்ணுடியில் சகலபதார்த்தங்களின் பார்வைகளா யிருக்கின்ற அதுவிதுவென்கின்ற சகலமும், கரைகளி லிருக்கின்ற விருட்சங்கள் தடாகத்திற் ரோற்றுவதுபோல ப்ரதிபலிக்கும்.—

சஉ இதார்த்தமான நான்குவித்தையுஞ் சொல்லி அதுவே யாவுமாய் விளங்குகின்ற தெனல்

சங. இவ்வனுபவத்தினுல் மனது சாந்தமாமெனல்

அதுவே நின்மலமும், அதுவே மூப்பற்றதும், அதுவே யாத்மதத்துவமாம். ஸ்ரீராமா? அப்பதம் வந்து பொருந்துமாயின், மனது வுபசாந்தத்தைப்பெறும்; திரமாயுணர்ந்து அந்த வாத்ம ஸ்வரூபமாவாய், சநநமில்லாத நிருவாணபதத்தை, தலைவனே? அடையக்கடவாய் என்றுசொல்ல, ஸ்ரீராமனும், அந்த வசிட்டமுனியைப் பார்த்து சொல்லுகின்றூர்.†— அத்தன்மையுள்ள வித்துக்கள் இப்படிப் பட்டதென்று அணைத்து முரைத்தாய், முடிவில்லாததென்று சொல்லிய ஞானநந்தபதத்தை எந்தமுயற்சியினுல் சீக்கிரத்தில் அடையலாகுமென்று கேட்க, வசிட்டமுனி சொல்லுவார். துன்பத்துக்கு வித்தாகிய விவைகளின் விதங்களை மேலுமேலு மென்னவென்ன சொன்னேனே, அதினதின்முயற்சியினுல், சீக்கிரத்திலந்தப்பதமடையப்படும்.—சத்தாசாமானியத்தின் முடிவாகிய அதீத பதத்தை யடைந்து, ஒருகாலத்தில் திரளாகிய வாசனைகளை புருட வெத்தனத்தினுல் இடையூறில்லாமற்கெடுத்து, தனக்குரிமையான தத்துவஞானத்தை யறிந்து, நாசமில்லாத ஸ்வரூபமாகிய நிலையிலழுந்த க்ஷணப்போதாயினும் பொருந்தினுய்; அந்த க்ஷணத்தில் பொருந்தாநின்ற வவ்வத்துவித பதத்தை யடைவாய்.— சத்தா சாமானியத்தினது ஸ்வரூபமாகிய நிலையை அடைவாயானுல், அதில் கொஞ்சமதிகப்ரயாசத்தினுல் அந்தப்பதத்தை யடைவாய். சிற்சாமானியத்திற் பொருந்துகின்ற தியானஞ்செய்தால், அச்சத்தாசாமானிய முயற்சிக்கதிகமாக மிகவும் ப்ரயாசைப்படுதலினுல் அந்தஸ்வரூபமடைவாய்.§— முந்தி

சச. சுவாத்மானுபவமான பிரமஸ்வரூபத்தை நிச்சயித்து அதை யடையும் வருத்தாவருத்தமு நிரூபிக்கத் தொடங்கல்.

சடு. க்ஷணஞ் சத்தினதீத மாயின் உடனேயத்து விதானுபவஞ் சித்திக்குமெனல்.

சசு. சத்தாயிற் கொஞ்ச வருத்தத்தினுலுஞ் சித்தாயி லதிகவருத்தத்தினுலு மத்துவிதத்தை யடையலாமெனல்.

சஎ. முன் சித்து

* இம் சத்தின்வித்தான துரியத்தையு மதற்கு வித்தான வத்துவிதத்தையு மறிவித்ததாம்.

† இ ம். இச்சுவானுபவத்தினுன் மனமுதலிய சகங்களியாவுஞ் சாந்தமாமென்பதாம்.

§ இ-ப். பிரமத்தையடையுமார்க்கத்தின் சுளுவையும் பளுவையு மறிவித்ததாம்

பரியந்த மப்பியாசஞ்சொல்லிப் பின் திரிஸ்ய வனுசந்தானத்தா லவ்வனுபவ முதியா ததையும் வாசனைசத்தான்மன முதலிய யாவு நசிப்பதையுங் கூறுதல்.

சஅ. வாசனையு மனமும் பீசாங்குர ஞாயமாமெனல்.

ருக. ஞானமுதிக்குமளவு மனதும் வாசனையு நசியாது இவை நசிக்குமளவு ஞானமுதியா தெனல்.

கூ௦. திரிஸ்யவிச்சை நீங்கில் வாசனக்ஷயமுமனோநாச மூன் தத்துவஞானமு முண்டாமெனல்.

கூக. இம்மூன்றுங் காரணகாரியமாகாமற் சமமாய னுஷ்டிக்கிற் சிதாநந்தத்தை யடையலாமெனல்.

கூஉ. பிராணபந்தனத்தினாலும் வாசனை விடுதியினாலு மனோபந்த நீங்குமெனல்

கேவலமாகிய திரிஸ்யசிந்தனையால் மேக வண்ணத்தையுடைய ஸ்ரீராமா? அப்பதமுதியாது, இவ்விடய ஞானத்தின் உதயத்தினால் எப்போதும் எவ்விடத்தும் அனுபவ முண்டாகாது; துவிதமாகிய வாசனையை ப்ரயாசைப்பட்டுக் கெடுத்தாயானால், அதனால் வெப்பமுற்ற ஆதிவியாதியானசகலமுஞ்சீக்கிரத்தில்பொடியாகநீங்கும்.- முன்சொல்லப்பட்ட ப்ரயாசைகள் முற்றுஞ் செய்தாலும், மகம்மேருவை மூலத்தோடு பிடுங்கிடினும் தொடரும் வாசனையைவிடுதற்கரியதாம். நினைக்கின்ற மனது எந்தமட்டுங் கெடாதோ பொருந்தின வாசனையானது, அந்தமட்டுங் கெடாது; அந்தப்பிரகாரமே வாசனையானது எந்தமட்டுங் கெடவில்லையோ மனம் அந்தமட்டுங்கெடாது.— தத்துவ ஞானமானது எந்தமட்டும் வரவில்லையோ அந்தமட்டு மனங்கெடாது வலிமைபொருந்திய மனது எந்தமட்டுங் கெடவில்லையோ ப்ரகாசியாநின்ற தத்துவஞானம், அந்தமட்டு மடையமாட்டாது. இழிவாகிய வாசனையானது எந்தமட்டுங் கெடவில்லையோ அந்தமட்டு ஞானங்கிட்டமாட்டாது; மெய்ஞ்ஞானம் எந்தமட்டுங் கிட்டாதோ அந்தமட்டும் வருகின்ற வாசனையானது கெடமாட்டாது,—நிறைவாகிய தத்துவஞானோதயமும் மனோநாசமும், வாசனாக்ஷயமுமாகிய இந்த மூன்றும் வேறு காரணங்களைப்பெற்று சாதிப்பதற்கரியதாம்; செவ்விதான அந்த மார்க்கத்தினால் விவேகிகளினால் திடமாகிய புருடப்ரயெத்தனத்தினால் ஐம்பொறிகளாலுண்டாகிய போகபயக்கங்களை தூரத்தள்ளினால் இந்த மூன்றும் வந்தடையும்.— இத்தன்மையான மனோநாசம் வாசனாக்ஷயம் தத்துவஞானமென்னு மூன்றும் சமத்துவமாக எந்தமட்டும் முயற்சிசெய்ய வில்லையோ, அந்தமட்டும் அப்படிப்பட்ட ஸ்வரூப பதமானது, அநேக வருடமாயினும் அடையமாட்டாது. வினையில்லாத வெப்போதும் மூன்றுஞ்சமத்துவமாக வெகுகாலம் பழகில் ப்ரயோசனமாகும் மனதில் ஒன்றொன்றாக முயற்சி செய்தால், நிலைபொருந்தாமல் அப்ரயோசனமாகும்.— சமமாகச் செய்தால் இந்த மூன்றும் மனதிலுள்ள பந்தங்களனைத்தையும் கெடுக்கும். சிக்கல்லாம லிருக்கின்ற தாமரைநூலானது தாமரைத்தண்டு கெடுமாயின் கெடாதோ; சநநங்களோடும் தொடர்பாகிவந்த வாசனையானது, வெகுகாலத்தியானத்தின் பழக்கத்தாலன்றி யெவ்விடத்து நீங்

* இம் ஞானாப்பியாசத்தி னுண்மையை யறிவித்ததாம்.

௫௫. இதுவுமது.

காது.— புறம்பிலுள்ள வாசனையை விடுதலுக்குச் சமானமாம்; பிராணபந்தனமென்று திரமான ஞான வான்கள் சொல்லுவார்கள், திடமாக அந்த வெத்தன முஞ் செய்யத்தக்கதாம். வாசனையைவிட்டால் மன மும் மில்லாமையையடையும்; பிராணபந்தனஞ் செய்தாலும் மனோநாசமாம்; உனக்கெது விச்சையோ அதைச்செய்வாய்.—பிராணபந்தத்தின் வலிய பழக் கமும், ஆசாரியருபதேசிக்கப்பட்ட யுத்திகளும் ஆச னமும், புசிப்பும், தியானமுமாகிய விவைகளினால் பிராணனடங்கும். ஸ்ரீராமா? பற்றுள்ள வியவகார மில்லாமையும், சமசாரபாவனையில்லாமையும், ஒரு ருவமின்றி யருவமாய்ப்பார்ப்பதும், இவைகளினால் வாசனாக்ஷயமாகும்.— சத்துருவான வாசனாட்சயம் வந்தால், மனமுண்டாகாது; காற்றினசைவடங்கினால் அளவற்றபுழுதிகள் ஆகாயத்திலுண்டாமோ. முன் சொல்லப்பட்ட பிராணவாயுவின் சலனமெதுவோ, அதுதானே துன்பநிறைந்து மனதினசைவாகும் அத னாற் பிராணவேகத்தைத் தடுப்பது நற்குணமுள்ள வறிஞர்க்கு இயற்கையாகத் தவறாமற்செய்யத்தக் கது,—உத்திபி னன்மையினாலல்லாமல் மனமானது வெல்லப்படாது; கோபங்கொண்ட மதயானையானது அங்குசத்தினாலன்றி செயிக்கப்படுமோ. ஒன்றாகிய ஞானத்தையறிதலும், நன்மையுள்ள சத்துக்களுடன் சேருதலும். துக்கவாசனையை விடுதலும், பிராண சலனமில்லாம லடக்குதலும்,— இந்த நான்குவகை யும், மனதையடக்குகின்ற யுத்திகளாகும். குற்றமற்ற விந்தயுத்திகளுக்கு மனமடங்குதல் மேகவருடத்திற் பூமியிலடங்கியபுழுதிக்கொப்பாகும். சொல்லப்பட்ட யுத்திகளையல்லாமல், மனதை யடமாய்க் கெடுப்பவர் கள், விளக்கைவிடுத்து இருளை யிருளினாற் கெடுப் பவர்களுக்கிணையாம்.—பலத்தினால் வேகமாய் முன் சொன்ன யுத்திகளையல்லாமல் மனதைச் செயிப்பவர் கள், கெற்சிக்கின்ற மதயானையை தாமரைத்தண்டி னுள் ளிருக்கின்ற வொருநூலினால் கட்டுவர்களாவர்; இளைக்கின்ற அந்த மூடர்களுடைய மனது பயத்தோ டுந் துன்பத்தையடைந்து மிகவுஞ் சிறுமையாய் வரு த்துமென்று, பட்டணத்தில்வந்து பயந்தயானைப் போல ஒன்றையு நம்பமாட்டாது.*— தவசும், யாக மும், தீர்த்தங்களும், தேவதரிசனங்களும், ஆராதனை களும், தானங்களுமுதலிய பயனில்லாத மயக்கத்தி

௫௬. பிராணபந்தனத்துக்கும் வாசனாக்ஷயத்துக்குஞ் சாதனமுரைத்தல்

௫௭. மனத்தினசைவே பிராணனுதலால் லதைத்தடுக்கின் மனது நிற்கு மெனல்.

௫௮. மனதையடக்குதற்கு இன்னு நான்கு யுத்தி சொல்லுதல்.

௫௯. இந்நான்கு யுத்தியையன்றி மனதையடக்கக் கூடாதெனல்.

௬௦. இவ்வூகங்களை யன்றி மனதையடக்கின் வருந்து மெனல்.

௬௧. சற்கருமத்தையுநீக்கி ஞான திருஷ்டியால் இச்சாத்தியாகஞ் செய்

* இ-ம் இந்நான்குயுத்தியி னொன்றினாலாவது மனதையடக்கி னடங்கும் இங்கு இல்லாவிடி னடங்காதென்பதாம.

யவேண்டுமெனல்.

ஞல், வெகுகாலம் மிருகங்களைப்போல வீணர்கள் வாழ்வார்கள். சநநத்தைக் கொடுக்கின்ற இவைகளை விடுத்து பரிசுத்தமான பிரமஞானத்தை இரண்டில்லாமற்பிடித்து, சகலவிச்சைகளையும் கெடுத்திருப்பாய்.

சுO. திருக்குதிருஷ்டியில்மனதை நீக்கிச் சித்தியடையவேண்டுமெனல்

—பார்க்கின்ற விடயமற்று நன்ருகி முதன்மையாக சங்கற்பிக்கு நினைவின்றி ஞானபதமாகிய ஒன்றைப்பார்த்து, ஸ்ரீராமா! பந்தந்தையுடைய வெண்ணமில்லாமல் இதயத்திற் பொருந்துவாய். தொழிலைப் பொருந்தினுலும், இலாபங்கருதி அகர்த்தாவாகிய பிரமபதத்தை சமமாகிய செல்வம் ப்ரகாசிக்க அடையக்கடவாய்.

சுக மனதை விசாரத்தினுலுமடக்கலாமெனல்.

¶—தன்னுடைய மனதை ஏககாலத்தில் விசாரணையினுல் கெடுப்பித்த களங்கமில்லாதவன்; சநநத்தின் பலனையடைந்தவன் அற்பமானுலும் மனதில் வினவாநின்ற விசாரணையின் வலியைவிடாமல் பழகாநின்ற தியானத்தினுல் பருமனுய் நானுவிதமாகிய ஆயிரம் பணைகளோடும் அநேகமாகும்.

சுஉ. விசாரமுக்கியமாய் வேண்டுமெனல்.

—தகுந்த விசாரணையென்கின்ற புட்பித்த விருட்சமானது, பூபீடத்தில் ஒருவேருள்ளதாய் சிந்தையென்னுஞ் சுழற்காற்ருனது, அசைப்பதற்கரியதாய் துவளலில்லாத மிகவுந் திரமுள்ளதாம். நிற்பதும், போவதும், விழிப்பதும், உறங்குவதும், இவைகளையுள்ளவர்கள் மனத்திற்பொருந்திய விசாரணையில்லாதவர்களாயின், நசித்தவர்களாவரென்று சத்துக்கள் சொல்லுவார்கள்,

சுங சாதுசங்கத்தோடும் விசாரஞ்செய்யவேண்டுமெனல்.

— நசியாத ஞானதிருஷ்டியினுல் நீயேயாவது, மகான்களுடனேயாவது; இடைவிடாமல் இச்சகமியாது நாமாரென்று திடமாக மிருதுவாக விசாரணைசெய்வாய். தடைப்படாமல் உண்மைப்பொருளைத் தேடாநின்ற அத்தியாத்தும வித்தைக்குவிசாரணையேதனிமையாகிய ஞானமாம்; வினவியறியத்தக்கவஸ்து, பாலினிரசத்தைப்போல அந்த விசாரணையிற் காணப்படும்.

சுச அனுபவியினிலக்கணங்கூறல்

‡— சுகபோதசமத்துவ திருஷ்டியை யுடையவன், தேடாநின்ற வஸ்துவுக்கு சமத்துவத்தை முக்கியமாகத் தரித்தவன் ஈனமடையான், பனதிற்பயப்படான், ஒன்றுக்கும் வசமாகான் உச்சிட்டமானுலும், அபத்தியமானுலும், விஷஞ்சேர்ந்ததானுலும், நொந்ததானுலும், கெட்டுப்போனதானுலும், அன்னமானதுகறகண்டைப்போல அவன் புசித்தால், மந்தமில்லாததாய் கணத்திற் சீரணமடை-

¶ நடம் இச்சையைநீக்கி யாத்மஞானத்தான் மனோ ரூபமாகியதிரிஸ்யத்தைக் கெடுக்குமென்பதாம்.

‡ இ-ம் ஆத்மானாத்ம விசாரத்தால் அனாத்மாவாகிய மனதுநீங்கி யாத்மஞான முதிக்குமென்பதாம்.

சுடு. தேகாபிமான நீங்கினதைக் கூறல்.

யும்,— விஷமானாலும், ப்ரதிவிஷமானாலும், சிறந்த பாலானாலுங் கரும்பினிரசமானாலும், சாதமானாலும், பொசிக்கில், மனமானது பற்றாமல் உண்மையை யுணர்ந்தவர்கள் சமத்துவத்தை யடைவார்கள். சிரசை யரிந்தவர்களையும், சிரசைக் காத்தவர்களையும். பகைவ ரென்றுநட்பென்றார்கள் திடஞானமுள்ளவொப்பற்ற பார்வையினால் அகமகிழ்ந்துசமமாய்ப்பார்ப்பார்கள்.-

சுசு இதுவுமது.

சடமானபொறிகளை மோகத்தையுடைய திரிஸ்யத்தில் செல்லாமற்படிக்கு சத்துக்கள் மனத்துன்பமில்லாத அறிவினாற்றடுப்பார்கள் நாசமில்லாத தத்துவத்தையறிந்து மெலிவில்லாமல் ஞானஸ்வரூபமாகிய தன்னை அறியாத மூடர்களே, இந்திரியங்கள் நிலத்தி லுள்ள சிறியதுளிரை மான்கூட்டத்தைப்போலநசிக்குப்படி தின்னும்;‡— சங்கங்காரணமாக விடயவஸ்துக்க ளுண்டாகும்; சங்கங்காரணமாக ஆபத்துண்டாகும்; சங்கங்காரணமாக இச்சையுண்டாகும்; சங்கங்காரணமாக சம்சாரமுண்டாகும். சங்கத்தைக்கெடுத்தலே மோக்ஷமென்று சொல்லுவார்கள்.

சுஎ சம்சாரநீக்க மறிவிக்கு நிமித்தஞ்சங்கத்தி யாகக் கூறல்.

சங்கத்தைக்கெடுத்தலே சநநத்தைக்கெடுத்தல். விடயங்களின் சங்கத்தைக்கெடுத்து தனிமையான சீவன்முத்தியை, ஸ்ரீராமா? நீபெறக் கடவாய்.— என்றுசொல்லிய வசிட்டமுனியை, சகல சந்தேகமென்கின்ற பனிக்கு சரற்காலத்தின்கடுங்காற்றுக் கிணையானவரே? இந்தச் சங்கமென்பதியாது சொல்லுமென்றுகேட்க, வெற்றியையுடைய முனி சொல்லுவார். மிகுந்த பலவஸ்துக்களின் பாவத்திலு மபாவத்திலும் பொருந்தாநின்ற விருப்புவெறுப்பை யடைதலாகிய அசுத்தவாதனையாம்.- சொல்லுமசுத்த வாதனையே சங்கமென்பதாம்.

சுஅ விடயசங்கத்தைநீக்குதற் பொருட்டதனிலக்கணமுரைத்தல்

சுகூ மலினவாசனையே விடயசங்கமென்ல்.

சீவன்முத்தி யுண்டாகின்ற சரீரிக்கு மறுசநநமில்லாமல் சுகதுக்கங்களைக் கெடுத்த சுத்தவாசனையானது பொருந்தும், சீவன் முத்தரல்லாது திரமான அஞ்ஞானமன முடையவர்கள் அசுத்தவாசனையினது நாமமே சங்கமாம்.— சந்தோடமும், பொறுமையும், துன்பமும் ஆகிய விவைகள் வருத்தாமல் நிற்பாயாயின், விரிந்திருக்கின்ற விச்சையும் அச்சமும் குரோதமில்லாதவனாய் நீயே சங்கத்தைவிட்டவனாம்.

எ0. அச்சங்க நீங்குமுபாயமுரைத்தல்.

விடமாகிய துக்கத்தினால் மெலியாமல் கூடினவின்பத்தால் களிக்காமல் பந்தப்படுத்துகின்ற இச்சைவசத்திற் செல்லாமல் இருப்பாயாயின், நீயே சங்கத்தைப்போக்கினவன்.— சுகதுக்

எக.இதுவுமது.

‡ இ-ம். அனுபவி தேகவிந் திரியங்களை யடக்குந்திற முரைத்ததாம்

கங்களாகிய விரண்டிலும் நீ சமத்துவனுகி வந்ததை யனுசரித்தால்,நீயாசையின் பெருக்கமாகிய சங்கத்தை விட்டவன். எப்பொழுதும் இரண்டவஸ்துக்களில் சமத்துவமாக பிரிதிவிம்பமான விருதயத்தில் சாத்துவிதகுணத்தை யுடையவனுய் வராநின்ற காரியங்களைச்செய்து, இவ்விடத்திலுள்ள திரிஸ்யசங்கத்தியாகஞ்செய்து, இரகுநாதா! பிரமாநந்தத்தை யடைவாயென்று வசிட்டமுனி சொன்னுர்.*—

உபசாந்திப்பிரகரணம்
முற்றிற்று.

---

# புசுண்டன்கதை.

---

## அவதாரிகை.

முற்பிரகரணத்தில் சம்சாரமுதற் சத்தாசாமானிய முடிவின் மேலான துரியாதீதபரியந்தந் தெரிசிப்பித்து, இதிற்கற்பனையாகத்தோற்றினமனே சகத்தின் உபசாந்தத்தைச்சொல்லிஇத்துரியாதீதமே சாக்ஷாத்காரமாகவிளங்குவதை யபரோக்ஷமா யறிவிக்குநிமித்தம் பதினைந்து கதைகளினல் நிறைந்த நிருவாணப்பிரகரணஞ் சொல்லத்தொடங்கிக் காலாதீதமான ஞானத்தையும், அதுகாரணமாகச்செய்யும் யோகத்தின் விசித்திரத்தையுந்தெரிவிக்கப் புசுண்டன்கதையை நிரூபிக்கிருர்.

---

க யாதினுற்றிருக்குதிருஷ்டி யுண்டாய்த் திரிஸ்ய நீங்குமெனின்

திரும்பவும் வசிட்டமுனி சொல்லுவார். திக்குகளுங் காலங்களுமில்லாததால் மறைப்பில்லாமற் பிரகாசித்து, சலனமுமழிவும்; ஆதியந்தமின்றி ஏகமாகியும், சின்மாத்திரமாகியு மிருக்கின்ற நிலையான பிரமமேயுள்ளது, மற்றெருவஸ்துவுமில்லையென்று அகத்திற் சிந்தித்து, காணுநின்ற விடயங்களை நானென்னுமகம்பாவத்தை நீங்கி, ேதகப்பிரிவில்லாத சீவன்முத்தனுய்,—

உ. இதுவுமது.

அத்துவிதஸ்வரூபமாய் உபசாந்தமாகிய மௌனத்தையடைந்து, உனதாத்மஞானத்தில்துன்பமிறந்த ஆநந்தத்தை யடையக்கடவாய். தொடரா நின்ற வஞ்ஞான நினைப்பு எதுவளவுமாகி யிருக்கின்றதோ அதுபரியந்தம் பிரமபாவனையைப் பொருந்தாது;சகச்சாலத்தில் போகப்பிரமை யெந்தமட்டிருக்கின்றதோ, அவ்வளவும் மனமுதலியவற்றின் கற்பனை பொருந்தும்.—

௩. இதுவுமது.

சித்தமு மாயையு மனமுஞ் சீவனுமாகிய விவைகள் ஒன்றுயினுமில்லை; ப்ரகாசிக்கின்ற பிரமமானது சமத்துவமானவேகமாய் பெருங்கடல்

---

* இம் திரிஸ்ய முதற் சம்சாரபரியந்தமான விடயசங்கத்தை நீக்கிச்சமதிருஷ்டியாற் பிரமாநந்தத்தையடையவேண்டுமென்பதாம்

போல் உத்தமனுன ஸ்ரீராமா? பொங்கிவளர்ந்து
கொண்டிருக்கும். எதுபரியந்தம் நவத்துவாரமுள்ள
சரீரத்தை நானென்பது எதுவரையும் காண்கின்ற
இந்தத்திரிஸ்யங்களில் பொருளென்கின்ற பாவனை
யிருக்கின்றதோ, அதுவரையும் சித்தமுதலானவை

ச. யாதினுற்றிருக்குதிருஷ்டியுண்டாய்த்திரிஸ்ய நீங்குமெனின்

களின் மயக்கமுள்ளதாம்.— இதுவெனதென்கின்ற
ஆசையெவ்வளவோ அந்தமட்டும் சித்தமுதலான
மயக்கமாம் மாசற்ற வகமுமாகிய வதனுல் மூன்றுலக
மென்கின்ற பளுவில்லாத திரணத்தை ஞானக்கினி
யில் ஆகுதிசெய்தால், மேகவண்ணனே? சித்தமுத
லான பிரமைகள் அவனிடத் தெப்போதும் வரமாட்

ரு. அவ்வனுபவிக்கடையாளம்யாதெனின்

டாது;*— ஞானஸ்வரூபமாய் அகண்டனுய் அந்த
வரம்பும் இந்தவரம்பும் பற்றுதவனுய் திடத்தைப்
பொருந்தி யுனது வியாபகஸ்வரூபத்தைச்சிந்தி சங்
கற்பத்தை யடையாது கடனுக வுயிரைக்கொலைசெய்
கின்ற சத்துருவை, மனதில்வஞ்சகமில்லாத சினேகத்
தில் உறவானவனேயென்று பார்ப்பவனே பரிசுத்த

சு ஆயினுறவுகூடுமோவெனில்.

மாக ஆத்மாவைத் தரிசித்தவன்.§— கரையிலிருக்
கின்ற விருட்சத்தை வேரோடும் தள்ளுகின்ற ஆற்
றைப்போல, விடயவிச்சையும் நன்மையில்லாத மாச்
சரியத்தையும் கெடுத்தவர்கள் மகிழ்ச்சியினுலும்,
அழுக்காறுகளினுலும் குற்றத்தை கெடுத்தவருக்கும்,
ஒப்பற்ற தத்துவஞானசாஸ்திரங்களையுள்ளேபாவனை
செய்து ஆராய்ந்தறிபவர்கள் ஆசையைக்கெடுத்தல்,
உதயமானசூரியன்இருளைக்கெடுத்தலுக்கொப்பாம்.‡

எ. இச்சாசஞ்சலநீங்குவதெங்ஙனமெனில்

பிடிக்கத்தகுந்த வாக்கியார்த்தத்தைதன்மனதினுல்
பாவனை செய்தவர்களுக்கு சொல்லுகின்ற வாக்கிய
சமுகங்கள் வெந்தபூமியின் சலத்தைப்போல மனதி
லடங்கும், அப்பியாசித்து பிரமவஸ்துவை தரிசியாத
வர்கள் கண்ணுகிய ஞானத்தை தரிசியாதவர்கள்,
யாவருமனோவிருத்தியிலுலர்ந்த துரும்புபோல வீணு
கச் சுழலுவார்கள்.†— இப்படிப்பட்ட சகலரும் இந்த

அ யாவரும் என் விசாரணை செய்யவில்லையெனில்.

ஞானம் கெடாமலிருக்க இதையறியக்கருத்தில்லாமல்
மிகவும் வாடினார்கள்; வீணர்களுடைய மமதையும்
அதட்டுதலும் யுத்தகளத்தில் வில்லின் நாணைசை

---

* இம் ஒன்றினுலு மறைவுபடாமற் சுயமாய் ப்ரகாசிக்கின்ற ஞானமே பிரம மென்னுஞ் சுபாவ திருஷ்டியினுற் சுகிக்கிற், பிரமம் பிரத்தியக்ஷமா யஞ்ஞான முதலிய கற்பனைகள்யாவுங்கெடுமென்பதாம்

§ இ-ம பகையையுறவாகக் காண்பதே முறியென்பதாம்.

‡ இ-ம் பகையைபு முறவையுங்கெடுக்கி லிச்சாத்யாகம்வருமென்பதாம்

† இ-ம். மகாவாக்கியார்த்தங்களைக் குருமுகமய் விசாரிக்கின் ஞானமுதித்து மனோசஞ்சலநீங்குமென்பதாம்

யைப்போல மூடர்களிடத்தில் கெடுதற்கு கேட்கின்றது; அம்மூடர்கள் வீணாக காலத்தைக் கழிப்பதேயன்றி கெடாத ஞானத்தை யுணரார்கள்.§— அப்படி

௯ ஆசிரியர் அறியாமையை நீக்கலாமோவெனின்

யான மூடர்களுக்குகொடுத்த வாக்கியார்த்தம் சேற்றில்விழுந்த வஸ்துவுக்குச் சமானமாகும்; தீமையையுடைய அவர்களுக்கு சொல்லியவாக்யம் ஆகாயத்தைப்பார்த்து நாய்குரைத்தலாம்; பொருந்தியவஞ்ஞானம் ஆபத்திற் காதாரமாம; உண்மையையறியாதவர்களுக்கு எந்தவாபத்தும் வரமாட்டாது; இந்த மாயையானது அறிவில்லாதவர்களுக்குகிருபையினல் உண்டாகுவதாம்.¶— சகமானது ஞானிகளறிவுக்கு

௧0 விவேகாவிவேகியில க்கணம் யாதெனில்.

அற்பமானதாய் பசுவின் குளப்படியாகவாம்; அஞ்ஞானிகளுக்கு துன்பமாய் கரைகாணுத வாழமாம். அளவில்லாததாயும், விடயங்களினல் எண்ணுதற்கரிதாயும், உபசாந்தமாயும், சகலமுமாயும் நினைவுதோற்ருததாயு மிருக்கின்ற சச்சிதாநந்தஸ்வரூபமேயுண்டாயிருக்கும்.‡— சாக்ஷியான அச் சச்சிதாநந்தத்தி

௧௧ இச்சகத்துண்டாகுங்கிரமமியாதெனில்.

லிருந்து ஓரறிவானது தானே விகாரவடிவமாய் உண்டாகி, சூட்சுமமென்றும், நடுவென்றும், தூலமென்றும், மூன்றுவிதமா யுண்டாக்க, சத்துவமென்றும், இராசதமென்றும், தாமதமென்றும், மூன்றுகுணமாகும். அநேகசீவர்களுக்கும், இம்மூன்றுவிதமானவவித்தையான இதுதானே சநநத்தைக்கொடுக்கும்.-

௧௨ இதுவுமது.

இந்த அவித்தையினுசமே பிரமபதமாகும், அவித்தையினது குணரூபமேயாம். இயல்பாகிய மூன்றுகுணமும். ஒவ்வொன்று மும்மூன்றுவிதமாகவொன்பது பங்காகும். இந்தவவித்தையில் சாத்துவிதத்தின் பங்கு, விருடிகளும், முனிவர்களும், சித்தர்களும், நாகர்களும், வித்தியாதரர்களும், தேவர்கள்முதலிய நன்மையான சீவர்களாம்.— முன்சொல்லப்

௧௩. இதுவுமது

பட்ட இந்தச் சாத்வீகத்தின்பங்கில் தாமதத்தின் பங்கு வித்தியாதரரு நாகர்களுமாம் இராசதத்தின் பங்கு, உண்டான முனிகளுஞ்சித்தர்களனைவருமாம். குற்றமற்ற சாத்துவிதத்தின்பங்கு தேவரான சிவன் முதலானவர்களும் இது வவித்தையின் பங்கினிடத்தில் வித்தையின்தன்மை யடைந்தனவாம்.— குற்ற

௧௪ இதுவுமது.

மற்ற சுத்த சாத்துவிதகுணமான அவ்வித்தையின் பங்கு, வித்தையென்று சொல்லப் பட்டதுவாம்,

---

§ இ-ம் அறிவு ப்ரத்தியக்ஷமாயிருந்து மறியாமையால் விசாரிக்கவில்லையென் [பதாம்

¶ இ-ம் விவேகமின்மையாற் போதித்தும் பயன்படாவென்பதாம்.

‡ இ-ம இச்சக மவிவேகிக்கு கண்டமாயும்விவேகிகளுக்கற்பமாயுஞ்சச் சிதாநந்த மாயும் விளங்குமென்பதாம்.

இராசதகுணமும் பிரிந்த தாமதகுணமும் மூன்று மூன்றாக சிருஷ்டியை உடையதென்று சொல்லுவார்கள். மிகுந்த தாமதத்தையுடைய புத்தியை யுடையவர்களுக்கு இழிவான விருக்ஷமுதலிய நிறைந்த வஞ்

௧௫ அறிவு தருவா யஞ்ஞான மிகுந்த தெங்ஙன மெனின் தற்குத்தரங் கூறல்

ஞான சரீரத்தைப் பெறும்,¶—என்று வசிட்டமுனி சொல்லவும், விருக்ஷமுதலாகிய சரீரத்தைப்பொருந்தி அறிவு அஞ்ஞான மிகுந்திருப்பது எப்படியென்று ஸ்ரீராமர் கேட்க, வசிட்டமுனி சொல்லுவார். மனன மில்லாததுமிறந்து மனமுமிறந்து சத்தசத்தென்னும் மத்தியகதமென்கின்ற மூர்க்கவடிவத்தை இந்தவறிவு பொருந்தியிருக்கும்.—

௧௬ இதுவுமது.

முன்சொல்லிய ஞானமானது, விருக்ஷத்தில் நித்திரை செய்கின்ற புரியட்டக சரீரமுள்ளதாக, துன்பமில்லாமல் ஊமையன் குருடனென்று சொல்லுவதாய் சடத்தைப்போலாகி, நினைக்கின்ற சத்தாமாத்திரத்தினால் இருக்குமென்று சொல்லிய வசிட்டமுனியை திரும்பவும் இராமர், அன்புடன் விரும்பிக்கேட்பார்.—

௧௭ சத்திலறிவடங் கித் தாபரமா யிருத் தலின்அதுவேசீவன் முத்தனுமெனிலத ற்குத்தரங் கூறல்,

சத்தையின் ஒற்றுமையாய் ஞானமானது, தாபரங்களில் நின்றால் இதை மோக்ஷமென்று நினைக்கின்றேனென்றிராமன் சொல்ல வசிட்ட முனியானவர் சொல்லுவார். அறிவினால் இந்தச் சகத்தை விசாரணை செய்து நித்திய வஸ்துவினது தரிசனத்தில் சத்தா சாமானியத்தை அறிதலையடைதல் மேலான மோக்ஷமாம்.—

௧௮. இதுவுமது.

திரளான வாசனைகள் முழுதையும் குறிப்பாகவறிந்து நீக்கி சத்தா சாமானிய ஸ்வரூபமானால், அதுவேதனித்த மோக்ஷமென்று சொல்லுவார்கள். ஆசாரியருடன் ஆராய்ந்தும் ஞான நூலை யறிந்தும், ஆத்மஞான மொன்றை மாத்திரஞ் சிந்தித்து அதனால் சத்தா சாமானியமே தானாகும்; அப்படியானதுவே மோக்ஷமாம்.§—

௧௯ இவ்வறிவுவா சனையோமெடங்கி னிற்றலிற்பவமுள் டாமெனல்

வித்துக்குள் ளடங்கிய முளைபோல் வாசனைகளானவை அகத்தில் நித்திரையைப்பொருந்தும்மந்தமாம்; அதுவே சுழுத்தியவத்தையுமாம்; அநேக சநநங்களைத் தரும். குற்றஞ் செய்கின்ற சிந்தனையான துள்ளே

¶ இ-ம் சைன்யத்திலோர் ஸ்புரணமுண்டாக வப்போதறிவறியாமை கட்டியதின் மூன்றுகுணமுமுண்டா யதின்வித்தையின் சுத்தசத்துவத்தின் சிவன்முதலிய வீஸ்வரர்களும், அவித்தையின் சத்துவத்தி லிருடிமுதலிய சீவர்களும், அதனிராசசத்தின் முனிவாமுதலியோரும் அதன்றாமதத்தில் நரகர்முதலியோரும் இராசசதாமசமாரிற் றத்துவங்களும் தாமதத்திற் றாமதந் தாபரவுடல்களுமா யுண்டாமென்பதாம்.

‡ இ ம். அறிவு தன்னையறியாமையா லஞ்ஞானமயமா யதற்கடுத்த விருக்ஷவடிவம்பெற்றுச் சத்திலிருந்த தென்பதாம்.

§ இ-ம். வாசனைநீங்கிச் சுருதிகுரு சுவானுபவத்தினா லாத்மஞானத்தை யரிந்தது சத்தி லயிக்கியமாய் விளங்குமாயின் அதுவே முத்தியென்பதாம்.

யிறந்து குமிந்த வாசனைகள் நித்திரையான சுழுத்தி யவத்தையில் சடமாயடங்குங் காரணத்தினால், கொடிய சநநதுன்பத்தைக் கொடுக்கும்.— விருக்ஷங் கண்முதலிய விவைகளியாவும் சடத்தன்மையுள்ள தாம்; சுழுத்தியை அடைந்தும் மேலும் மேலும் செனித்தற்குரியதாகும்; வித்துகளிற்புட்பமும், மண்ணுக்குட்கடமும் பொருந்துவதைப்போல அவ்விடத் தவைகளில் ஒழிவில்லாதவாசனைகள்பொருந்திய விருக்ஷங்களிடத்திலிருக்கும்.— விசாலம்பொருந்திய வாசனையின் விதையாகிய அச்சுழுத்தியானது மோக்ஷத்தைக்கொடாது; சொல்லாநின்ற விதையல்லாத சுத்த வாசனையே துரியமாகும்; கெடாதமோக்ஷத்தைக் கொடுக்கும், பகையான வசுத்த வாசனையும், தீயும், கடனும், வியாதியும், விடமும், சத்துருவும், கோபமும், அன்புமாகிய இவைக ளதிகம் வேண்டியதில்லை; கொஞ்சமானாலும் மிகுந்த வருத்தத்தைக் கொடுக்கும்.*— அசுத்த வாசனையின் வித்தாகிய வஞ்ஞானத்தை யெரித்து சத்தா சாமானிய வடிவத்தை உடைத்தானவர்களுக்கு, சரீரமிருந்தும் நீங்கியும் பின்பு துன்ப நெருங்காது. அடையாநின்ற சிற்சத்தியானது வாசனாரூபமும் அதன்வித்தாகிய வஞ்ஞான வுருவமுமாம்; நித்திரையே அச்சிற்சத்திக் கியல்பாகும். முடிவில்லாத ஞானத்தைத் தரிசியாததே கலைஞானத்தில் வல்லமையையுடைய சத்துக்கள், அவித்தையென்று சொல்லுவார்கள்.— அவித்தையினது, முதலிலுள்ள சத்துவப்பங்கினால் அடுத்த விராசத தாமசமென்னு மிரண்டுபங்கையும், ஒப்பற்ற ஞானத்தினால் ஒழிந்துபோமளவு மெரித்து சஞ்சல மில்லாமல் ஏகமாவாய்; உயர்வுள்ளபிரமமானது, இச் சகமல்லவென்கிற நிச்சயமே நீண்ட வவித்தையாம்; மகிழ்ந்த பிரமமே இச்சகத்தென்னு நிச்சயமே அவித்தையொழிந்த வீடாம்.‡— சிவன்முதலாகிய தேவர்களுக்கும், நாரதர்முதலிய விருடிகளுக்கும் மேலாகிய நின்மலமனதில் பொருந்தாநின்றநிச்சயமானது:குழந்தாய்? உனக்குப் பொருந்தக்கடவதென்றருள, சங்கரர்முதலாகியவர்கள் துன்பத்தைப் பொருந்தாதிலையென்னசொல்லுவாயென்றுஸ்ரீ ராமன்கேட்க,வசிட்டமுனி சொல்லுவார்.— அற்பமாகியும் விஸ்தாரமாகி

உ௦ இவ்வறிவு வாசனையோடு மடங்கினிற்றலிற்ப வமுண்டாமெனல்.

உக. இதுவுமது.

உஉ, சுயஞ்சித்தாய் விளக்கிய வறிவைத் தரிசிக்க வேண்டுமெனல்,

உ௩. அவித்தையைக்கெடுக்கு முபாயமுரைத்தல்.

உச. விருக்ஷத்தின் சுழுத்தி யனுபவத்தை நீக்கிச் சிவன் முதலியோர் ஸ்வானு பவத்தைத் தரிசிப்பித்து அதன்மயமாக்கத் தொடங்கல்.

உரு. அவர்கணி

* இ-ம் அறிவானது முன்புள்ள விடயவாசனையோடுஞ் சுழுத்தியி னடங்கி நின்று வெளிப்படிற் பவமாதலா லச்சுழுத்தியி லடக்கியிருக்கும் அசுத்தவாசனையை நீக்கித் துரியமாகவிளக்கிடின் முத்தியேயாமன்றி யிஃதாகாவென்பதாம்.

‡ இ-ம். வாசனையைக் கெடுத்துச் சர்வம் பிரமமயமென்னு மனுபவத்தினாலஞ் ஞானங் கெடுமென்பதாம்.

ச்சயஞ்சர்வம்பிரம மயமாயிருத்தல்.

யும் உலகத்தின் கூட்டமாகி உண்டான விச்சகலமும் களங்கமற்ற பிரமமாம்; ஞானமும்பிரமமே; உலகமும் பிரமமாம்; ஐந்துபூதமும் பியமமாம்; யாமும்பிரம மாம்; நமதுசத்துரு பிரமமாம்; சினேகிதரும், சுற்றத் தாரும், பிரமமாமென்பது சங்கரர்முதலானவர்கள் சித்தாந்தம்.— சகமானது, குருடர்க்கு மிகுந்த விரு ளாகவும், கண்ணுள்ளவர்களுக்கு ப்ரகாசமாகவுமிருப் பதுபோல, ஞானிகளுக்கு ஆநந்தஸ்வரூபமாகவும், அஞ்ஞானிகளுக்கு துன்பரூபமாகவுமிருக்கும்; சகல மும் பிறிவில்லாத பிரமமென்று சிந்திக்கில், அவனே பிரமஸ்வரூபமாவன்; நல்லவமுதத்தைப் புசித்தவன் அமுதஸ்வரூபத்தை அடையாதிரான்.— சுயம்ப்ரகாச மட்டுமே நின்மலமாம்; யாவருக்கும் அறிவானது எவ் விதத்திலு முண்டாயிருக்கிறன்து, நீங்காத வுபசாந்த ஞானம். பிரமமென்கின்றது ப்ரத்யக்ஷமாகும். வழி யிற்செல்லுகின்ற தெரியாத ஒருபுருடனை மனதில்லா மற்பார்க்கில், அவ்விடத்தி லெந்தத்தெரிவு நிறைந் திருக்கின்றதோ அதுவே எவ்விடத்திலுமுள்ளதான ஞானமான பிரமமாம், அது யாமாகின்றோம்.— சங் கற்ப மனைத்திற்கும் பயனைக்கொடுப்பதாய் எல்லா ப்ரகாசத்துக்கும் ப்ரகாசமாய் எல்லாக்குணங்களு நீங்கியிருக்கின்ற தனிமையாகிய ஞானாத்மாவை துதிப் பாம். எல்லாச் சங்கற்பங்களுநீங்கி எல்லாச்சுகங்களு நீங்கி எல்லாவாரம்பங்களு நீங்கியிருக்கின்ற தனிமை யான ஞானாத்மாவை வணங்குவாம்.— இப்படி நிச்ச யத்தையுடையவராய் சகலவெண்ணங்களு மில்லாமல் நினைக்கின்ற வுண்மையை யுடையவர்களாய், அவர்கள் முழுதும் சத்தியமும், சாந்தமும், சமத்துவமுமென் கின்ற நிறைந்த பிரமபதத்தில் ஆநந்தித்திருப்பார்கள். சமத்துவமான நிராசையை தொடராநின்ற மனமுடை யவர்கள் நிலைபெற்ற ஞானமானது, பூரணமாயிருக் கின்ற தீரரானவர்கள், வாழ்விலுஞ் சாவிலும் விரும்பி வாடார்கள்.†— என்று சொல்லவும், மெய்ஞ்ஞான லீலையினாலாவது, நின்ற பிராணபந்தனத்தினாலே யாவது, விளங்காநின்ற வசுத்தவாசனையைவிட்டு துன்பநீங்கி மேலான சீவன்முத்தர்கள் இருந்ததைச் சொல்லவேண்டுமென்று ஸ்ரீராமன் வினவ, வேத முனிசொல்லுவார்.— உருகும் பவத்துன்பத்தைக் கெடுக்க யோகநாமமுடையதாகிய யுத்தியான திரண்டு விதமாகும். மெய்ஞ்ஞானமொன்று, பிராணபந்தன

உசு. மற்றுள்ள வறிஞர்களுக்குஞ் சகத்து பிரமாநந்த மாய் விளங்குமெனல்.

உஎ. யாவருக்குஞ் சுயஞ்சித்தே பிரமமென்ப தனுபவமா மெனல்

உஅ. பிரமத்தை வணங்குதல்.

உகூ. பிரமஞானியின் அனுபவத்தைச் சொல்லுதல்.

ஙo. ஞானயோகத்தின் முக்கியமாயிருந்தசீவன்முத்தரது இலக்கணஞ் சொல்லத்தொடங்கல்.

ஙக. யோகத்துக்குரியது பிராணயாமமெனல்.

† இ-ம். சர்வமும் பிரமாநந்தமாய் விளங்குதென்பதை மகான்களனுபவத்தோடும் ப்ரசன்னமாய் விளக்கிவித்ததாம்.

மொன்று, இந்தவிரண்டும் யோகநாமத்தைப் பொருந்துமென்றாலும், பிராணபந்தனத்துக்கு யோகநாமமானது மிகவுமுரியதாம்; இவ்விரண்டும் பரமேஸ்வரன்சொல்லியது.— ஒருவனுக்கு யோகமான தரியதாகும்; ஒருவனுக்கு மெய்ஞ்ஞானமான தரியதாகும், ஆகவிந்தவிரண்டில் மெய்ஞ்ஞான முன்னமேசொன்னேன்; மேல்யோகத்தின் கிரமத்தைக் கேட்பாய்.

௩௨. முன்பு ஞானத்தி னிலக்கணஞ்சொல்லிப்பின்பு யோகத்தி னிலக்கணஞ் சொல்லுதல்.

தேவாமிர்தத்தையொத்த ஒருசரித்திரத்தைச் சொல்லுவேன். நானொருகாலத்தில் தேவேந்திரனது சபையில் தேவரிஷிகளுடனிருந்தேன்; அக்கு, நாரதர்முதலிய முனிவர்களால் சிரஞ்சீவிகளின் கதைகளைக்கேட்டேன், அதை நீ கேட்பாய். சிறந்திருக்கு மகாமேருவின் ஈசானதிசையில் பதுமராக ப்ரகாசமுண்டாகிற கொடுமுடியிலிருக்கின்ற கற்பகவிருட்சத்தினது தென்புறக்கொம்பிற்கட்டியபெரியகூண்டினிடத்தில் புறம்பிலொருமலையிருந்ததுபோல புசண்டனென்னும் பெயரையுடைய வொருவாயசமானது வசிக்கும்.— பிரமாவுக்கொப்பாக இருந்த புசுண்டயோகியைப்போல அநேககாலம் யோகத்திலிருந்தவர்களார், பழமையான சொர்க்கலோகத்திலும் முன்னும்பின்னு மில்லையாம். அப்புசுண்டமே தீர்க்காயுசுடையது, ஆசையில்லாதது மோக்ஷசெல்வமுடையது, பெரிதான வறிவையுடையது, விஸ்ராந்தியுடையது, துன்பமற்ற மனதினுன் மூன்று காலத்தையும் வரையறுத்தறிந்தது.—

௩௩. ஆப்த்தர்களால் யோகியின பெருமையைக் கேட்டல்.

௩௪. இதுவுமது.

என்று தேவசபையில் யாவருங் கேட்கும்படியாக இரண்டுதரமாய் அன்று புசுண்டயோகியின் குணத்தை உண்மையாக சாதாதபமுனி சொன்னப்ரகாரநான்கேட்டு, போய்ப்பார்ப்போமென் றிச்சித்து மகம்மேருவின்முடியில் வாசனை பரிமளிக்கின்ற கற்பகவிருட்சத்தில் வேறொரு கற்பகவிருட்சம்போல் இருக்கப்பார்த்தேன்.— அவ்விடத்தில் மலைச்சார்புகடோறும், குகைகடோறும், அளவற்ற புட்பங்கள் தங்கிய கொடிகடோறும், கிளைகடோறும், பெரும்பக்ஷிகள் வசித்திருக்கும், சந்திரநிறத்தை யுடையனவாயிருக்கின்ற பிரமதேவனுடைய வாகனமாகிய அன்னக்கூட்டங்களினுடைய குஞ்சுகள், உயர்வான சாமவேதகானங்களையும், மந்திரங்களையும், சுவாகாகாரத்தோடு முச்சரிக்கின்றன.— கோகிலங்களும், கிள்ளைகளும், இன்னும் வெகுபக்ஷிகளும், சுப்பிரமணியர்போதித்த சிவஞானத்தை பயிற்சிசெய்கின்ற மயில்களுமாகிய அநேக பட்சிகளைப்பார்த்தேன். பெரிய சரீரத்தையுடைய வாயசசமுகத்தில், மலையைப்போலும்; உயர்

௩௫. புசுண்ட யோகியைக் காண்டல்.

௩௬. புசுண்ட யோகியி னாச்சிரமச் சிறப்புக்கூறல்

௩௭. இதுவுமது.

ந்தவடிவமும், மிகவும் பூரணமானமனதும் மௌன மும், பிராணசல முண்டாகாமல் அகமுகநீங்காத சுக முள்ளதாய்,— இருந்த அந்தப்புசுண்டன் முன்பு யான்டைய், பரவசராய் எதிரேவந்து வசிட்டனென் றறிந்து,சீக்கிரமாகசிறப்பாகவந்தநல்லவரவையுடைய முனீஸ்வரரேயென் றினிதுசொல்லி சங்கற்பத்தினு லுண்டான விசாலம்பொருந்திய கரங்களினுற்புட்பத் தையருச்சித்து;— இருப்பாயென்று ஆசனத்தைக் கொடுத்து இருந்தபின்பு, இன்பத்தோடும் அருக்கிய முதலான சகலத்தையும் கொடுத்து, அன்பாயிருக் கின்ற மதுரவசனங்களைச்சொல்லி, மகானே? உமது தரிசனமென்னும் அமுதத்தின் மகாவருஷத்தினுல் எனது கூட்டத்தோடும் யான் மனமகிழ்ந்தேன்; நீர் வழிநடந்துவந்துசரீரம்வருத்தப்பட்டீர்,¶— தேவரீர் பாததரிசனத்தினுல் அனைத்துமறிந்தேன். சிரஞ்சீவி யாயிருக்கின்ற மாசற்றபெரியோர்களோடும்எனையுஞ் சிந்தித்தீர்; அதைப்போல நீர்வந்தத்தையுந் தெரிந் தேன், என்றாலும் உமதுவசனுமிர்தத்தைப் புசிக்க விரும்பினேனென்று சொல்ல, அதைக்கேட்டு பரி சுத்தமான நல்லமனதையுடைய புசுண்டயோகிக்கு இந்தவசனத்தைச் சொன்னேன்.—பக்ஷிகளுக் கிறை யே? நீர் சொன்னப்பிரகாரமேமெய், வெகுகாலமாய் மரணமில்லாத நின்னைக்காணும்பொருட்டு வந்தேன், நீ எந்தக்குலத்தில் சநநமானுய்? எப்படி தத்துவஞா னத்தை யடைந்தாய்? மாட்சிமையான வுனதாயுள் எவ்வளவாயிற்று? இச்சகத்தினீதியில் நீயறிந்திருக் கின்ற தம்மையென்ன?— சர்வஞ்ஞத் துவமுள்ள யாவனல் நீயிந்தவிடத்திற் சேர்ந்திருக்கின்றாய்? கிரமமாகக்கொள் ளும்படி யெல்லாவற்றையும் சொல்லு மென்றுகேட்க, ஒழுக்கமிகுந்த புசுண் டர்சொல்லுவார். யாவருக்கு மேலான சிவத்தினழகானசந்நிதியில், கஜமுகத் தையும், அஜமுகத்தையும், ஒட்டை முகத்தையும், கரடிமுகத்தையும், பூமி யின்பலத்துக்கொப்பான மற்றவுதனங்களையும் பெற் றிருக்கின்ற சிவகணங்க ளனேகமுண்டாம். —அவர் கள்சிரசிற்குளம்புள்ளவர்களும்,குளம்புள்ளகரங்களை யுடையவர்களும், வயிற்றில் முகததையுடையவர்களு மாகிய அளவில்லாதவர்களான அநேககூட்டங்க ளோடுஞ் சூழ்ந்திருப்பார்கள். அப் பூதகணங்களைப்

௩அ. புசுண்ட யோகிபூசித்து முக மன் வசனமொழி தல்.

௩௯. இதுவுமது.

௪0. பூசித்த புசு ண்ட யோகியை யைந்துசங் கதியை வினவுதல்.

௪௧. இதுவுமது.

௪௨. பிரமநிச்சயங்கூறி அதன் கண்ணனுபவமான சீவன் முத்த னது யோகலீலையை யறிவிக்கு நிமித்தம் அவரது பிறப்பும், ஞான ம்பெற்றவிடமும், நீண்டவாயுளி னளவும், இதுபரியந்தநடந்த சகச் சிததிரங்களும், ஏகாந்த ஸ்தானங் கிடைத்ததுமாகிய விவ்வைந்து சங்கையை வினவினதற் குத்தரங் கூறுநிமித்த முன்பு சநகாரணத் கூறத்தொடங்கல்.

௪௩. சத்திகண ங்களின் சிறப்பைக் கூறல்.

¶ இ.ம். கேட்டுக்கொண்ட மரபினைக் கூறியதாம்.

போல, கைலாசகிரியில் சிவன்முன்பு, பூதகணங்களினால் வணங்கப்பெற்றவர்களாய், மலையினுச்சியும், ஆகாயமும், பூமியும், கானங்களும், சுடுகாடும், உடனும் இடமாகவிருக்கின்ற சத்திக்கூட்டங்களானவை

சச. அஷ்டசத்தியினொன்றினூர்தி சண்டனெனல்.

நிருத்தஞ்செய்வார்கள்.— தாரதன்மியத்தினுயர்ந்திருக்கின்ற சயையென்றும், விசையையென்றும், சயந்தியென்றும், அபராசிதையென்றும், சித்தையென்றும், இரத்தையென்றும், அலம்புசையென்றும், உற்பலையென்றும் எட்டுமகாசத்திகளாம்; அவர்களுக்குள்சொல்லிய அலம்புதையென்னுஞ் சத்திக்கு வாகனமாகவுடைய சண்டனென்கின்ற நாமத்தை

சரு. சத்தியினுச்சவஞ் செய்து களித்தல்.

யுடையஓர்வாயகம்.— அணிமாதிகுணங்களையுடைய அஷ்டவயிஸ்வரியத்தையும்பெற்ற அச் சத்திகளனைவரும். இஷ்டமாகிய சிவனாஞ்ஞாபிக்க, அனைவருஞ் சேர்ந்து ஆகாசத்தினிடத்தில் குறைவில்லாத திருவிழாவை யாரம்பித்து மதுக்களைக்குடித்து நடனஞ் செய்தார்கள், பாடினார்கள், மதர்த்தார்கள், சிரித்தார்

சசு. அவர்வாகனங்களுங் களித்தல்

கள்.— அத்திருவிழாவானது, நடக்குங்காலத்தில் அவர்களுடைய வாகனங்களியாவும் இக்கிரமப்படி மதுக்களையுண்டு ஆகாயத்தினோர்பக்கத்தில் அழகுள்ள இப்பெண் அன்னங்கள் சண்டனென்கிறவாய

சஎ. அன்னங்களோடுக் காகம் புணர்தல்.

சத்தோடும்.— சேர்ந்துவிளையாடி களித்து அந்த வழகிய காக்கையைக்கூடி, கருப்பத்தையடைந்து மனங்களிக்கின்ற அந்தக்காலத்தில் தேடிமுயற்சித்த திருவிழாவை முடித்துக்கொண்டு, பரமேஸ்வரனுடைய சத்திகளும் அவர்கள்கணங்களும் பாடலுமாடலுநீங்கி மனமகிழ்ச்சியுடன் 'தங்கள் தங்களிடத்

சஅ. அன்னங் கருவடைதல்.

துக்குப் போனார்கள்.—அப்படிப்பட்ட காலத்தில், கருப்பமடைந்தபிரமசத்தியின் அன்னங்கள் சங்கற்பமற்றதங்களிசமானிக்கு கருப்பமுண்டானவிதத்தை உண்மையாகச்சொல்ல, ஊழின்படி கருப்பமடைந்தீர்கள்; எனதுஇரதத்தையிழுக்கின்ற வல்லமையின்ராயினீர்; உங்கள்நினைப்பின்வண்ணஞ்சென்று வசியுங்

சகூ. இருபத்தொரு வருடஞ் சனித்தல்.

களென்று அருளினாற்சொல்லி.— நிருவிகற்பசமாதியில் தேவியானவள இருந்தாள். அன்னங்கள் கருப்பமுதிர்ச்சியாய் மாநதத்தடாகக்கரையில் காலநியமப்படி முட்டையிட்டு குஞ்சாகவராநின்ற சண்டனென்கின்றகாகத்தின்புத்திரர்களாகிய அர்தவிருபத்தொரு

ருO. பிரமசத்தியினன் ஞானம் பெறல்.

பேர்களும், பெருநின்ற வன்னைகளோடும் பிரமசத்தியை வெகுகாலம் பூசித்தோம்.¶— பிரமசத்தியானவள், சமாதியிலிருந்தும் எழுந்திருந்து அன்பி

¶ இ-ம். சனித்தமரபைக் கூறியதாம்.

ணல் தானே யனுக்கிரகஞ்செய்ய, வாட்டமில்லாமல் மோக்ஷத்தை யடைந்தோம்; உபசாந்தத்தினல் அக மகிழ்ச்சியடைந்தோம். சங்கமில்லாது ஏகாந்தமாக வசிக்கும் ஸ்தானமெதுவென்று கேட்கும் பொருட்டு குணமுள்ள தந்தையை அலம்புதையின் பக்கத்திற் போய் இருவரையுஞ் சேர்ந்து வணங்கி,¶— பிரமி யென்கின்ற சத்தியினது கிருபையினல் மோக்ஷத்தை அடைந்தோம்; தனித்த நிருவாண சுகத்தில் இருக்கின்ற ஸ்தானத்தைச் சொல்லுவாயென்று நாங்கள் கேட்க, பொருந்தாதஸ்தானம் இந்நல்லகற்பகவிருக்ஷ மென் றனுக்கிரகிக்க, அங்கவர்களை வணங்கி துன்ப மறும்படி வந்திவ்விடத்தில் வசித்தோம்.‡— அன்று முதலாக யான்செய்த கருமங்களனைத்தும் உமது ஸ்வரூபமாய் இன்று பலித்தது, மேலான ஞான வான்கள்சங்கமென்கின்ற நிறைந்தநிலவானது பரிமள முள்ள வமுதமயமாக தவிராத பிரமசுகத்தை எவருக்குங் கொடாது. இது நல்லதென்கின்ற ஆத்மாவுக் குறுதியானது சத்துக்களனுக்கிரகத்தைவிட வேறே யுண்டோ.— பிரமத்தை யறிந்தே னென்ருலும், உமது கடாக்ஷத்தினல் எனது பாவங்களனைத்தும் சீக்கிரமாகக் கெடுத்தபடியால் இச் சமயமே, மிகுந்த ப்ரயோசனத்தை யுடையது ஈஸ்வராவென்று, என்னைத் திரும்பவும் ஆராதனை செய்தான். பின்பந்தப் புசுண்டனை உனது சகோதரர்கள், நீங்கின ப்ரகார மென்ன சொல்லென்று கேட்டேன்.— இவ்விடத்தி யாவரும் அனேக யுகங்களும், அநேக கற்பங்களும், ஒத்து வசித்தோம்; தொந்தமா யிருக்கின்ற எனது தம்பிகள்,தேகங்கள் துரும்பெனத்துறந்து மேலாகிய பிரமபதத்தை அறிந்தவர்களாய் மோக்ஷத்தை யடைந்தார்கள். மிகுந்த வாயுவையும், தகுந்தமகிமை யையும், வல்லமையையும், பெற்றிருந்தும் தங்கள் சங்கற்பத்தினல் தாங்களே மரித்தார்கள்.†—என்று புசுண்டர் சொன்னவுடன் கற்பமுடிவும், அலைவீசா நின்ற பிரளயவெள்ளமும் ப்ரசண்டவாய்வும் உண்டாகுங் காலத்தும், நெருங்கி துவாதசாதித்தாளெரிக் கும்போதும், நீ எப்படியிறவாம லிருந்தாயென்று கேட்க, புசுண்டர் சொல்லுகின்ருர். நீண்ட சகத்தின் றெழிலானது எக்காலம் அல்லாமற்போமோ, அக் காலத்தில் யானுமிந்தக் கூட்டைவிடுவேன்.— துவாத

௫க அலம்புதையின லேகாந்தஸ்தானம்பெறல்.

௫உ. மூன்று வினவுக் குத்தரஞ் சொல்லித் துதித்தல்.

௫௩. தம்பிமாரிறந்ததென்னவென்றிடையில் வினவுதல்.

௫௪. தம்பிமார் தேகத் தோடுங் கூடியிருந்த லற்பமென் றறிந்து விதேகமுத்தி யடைதல்.

௫௫. நான்காம் வினவை நான்கு விதமாக வினவுதல்.

௫௬. மூன்று தார

¶ இ-ம். ஞானம்பெற்ற மரபைக்கூறியதாம்.
‡ இ-ம். ஏகாந்தஸ்தானம்பெற்ற வரம்புகூறியதாம்.
† இ-ம். இடையில் வினவின வினவுக் குத்தரஞ் சொல்லியதாம்.

ணையைக் கூறல்.

சாதித்தாளனவரு மெரிக்கும்போதில் சலதாரணையி னுல் ஆகாயத்தை யடைவேன்; மலைகள் சிதறும்படி காற்வடிக்கில், பருப்பதத்தாரணையினுல் அசையாமல் ஆகாயத்தை யடைவேன்; பழமையான சகமும் மகம் மேருவுடன் சமுத்திர மூடிக்கொண்டால், வாயுவுதா ரணையினுல் சலனமின்றி மிதப்பேன்.— சர்வ சங்கார காலம் வந்ததானுல் பிரமாண்டத்தின் முடிவை யடைந்து துன்பமில்லாத தத்துவமுடி வென்கின்ற குற்றமற்ற பிரமபதத்தில், சுழித்தியென்கின்ற கலங் திருக்கின்ற வவத்தையினுல் திரும்பப் பிரமதேவன் சிருஷ்டிக்குமட்டும் இருப்பேன்; பிரமதேவன், பிர மாண்டத்தைச் சிருட்டிக்கில் பக்ஷியினது பெரிதான விக்கூண்டிற்சேர்வேன்;— என்னுடைய சங்கற்பத்தி னுல், இந்த மலையினது இக்கொடிமுடியில் பருத்த கற்பகவிருக்ஷம் கற்பங்கள் தோறும் இந்தப்ரகாரமே யுண்டாயிருக்குமென்று புசுண்டர்சொல்ல, மாசில்லா தவனே? தாரணைகளினுல் அநேககற்பம் நீ கெடாம லிருந்தாய்; மற்றயோகிக ளியாவரும் இறந்ததேனே, சொல்லென்றுகேட்டேன் ¶— புசுண்டயோகி அதற் குச்சொல்லுவார், அழிவற்ற பரமேசுரன் நியதியான இதை ஆர்கடப்பார், எனக் கிந்தப்ரகாரமாம்; அவர் களுக் கந்தப்ரகாரமாம், வருகின்றது நீக்கக்கூடாத தால், எது எப்படியாகின்றதோ அதவ்விடத்தில் அந்தப்ரகாரமாகுமென்று நீர்கருதும், இதுவே நியதி நிச்சயமாம்.— என்ற புசுண்டயோகியை, பிரமஞா னத்தையும், சாஸ்திர ஞானத்தையும், அடைந்த நீர் பூரணயோகத்தைத் தொடர்ந்த மனதினுல் பழமை யான திரியுவனத்தினது அதிசயங்கள் உம்முடைய மனதில் எதிரிட்டது யாதியாதோ, அவைகளனைத் தையும், ஒன்றுந்தவிராமல் சொல்லுமென்று கேட்க, மேலான புசுண்டயோகிசொல்லுவார்.—இந்தப்பூமி, கற்களினுனிறைந்து கிரியுங், தருவும், புல்லும், வெகு காலந் தோற்றுதிருந்து, சொல்லால் நிறைந்த பதினே ராயிரம் வருடம் பஸ்பத்தினு னிறைந்திருந்தது; நன்மையையுடைய வசிட்டரிஷியே? வேறே சதுர் யுகம்பொருந்திய காடுகளினுல் நிறைந்திருந்தது. அப் படியிருந்ததுமன்றி, நாலுயுகம் இடமில்லாமல் மலைக் கூட்டங்களினுல் நிறைந்திருந்தது.— பூமியானது, நான்குயுகம்அகஸ்தியரில்லாமல்பரந்தவிந்தகிரியினுல் மறைப்பட்டதுஉண்டாகியவொருசிருஷ்டியில்,கள்ளை

ருஎ. நான்காந் தாரணையைக் கூறல்.

ருஅ. இந்நான்கு தாரணையினுற்றேக மழியாமலெப் போது மிருக்கின் றேனௌல்.

ருக. இத்தார ணைகளிருக்க மற்ற யோகுகண் மறிப்ப தேனெனில்.

கூ0. ஐந்காம் வினவை ஞாபகப் படுத்தி மீளவும் வினவுதலுக் குத் தாஞ் சொல்லத் தொடங்கல்.

கூக. தனதாயு ளிற்கண்ட சகச் சித்திரங்களைத் தெரிவித்தல்.

கூஉ. இதுவுமது.

¶ இம் தாரணையினியல்பைக் கூறியதாம்.

† இம் பரமேஸ்வரநியதி யங்ஙனமா மென்பதாம்.

பிராமணர்களிச்சிக்க, சூத்திரர்கள் அதைநிந்தித்தார்
கள்; கற்புள்ளஸ்திரீகள் விரும்பினபடியே நடந்தார்
கள். மேலாகிய வசிட்டமுனியே? இவைகளைப்பார்த்
தேன், வேறேகண்டவைகளுமுண்டு சொல்வேன்.—

௬௩. தனதாயுளிற்கண்ட சகச்சித்திரங்களைத்தெரிவித்தல்.

சூரியராதியானவர்க ளுற்பத்தியும், இந்திரோபேந்
திரர்கணிலேயும், இரணியாக்ஷதனல் திருடிக்கொண்டு
போன பூமியை வராகவவதாரமாய்ப் பிடிங்கிவந்தது
வும், நுட்பமாகச் செல்லுகின்ற கற்பங்கடோறும்
சிதறிபபோன வேதங்களைச் சேர்த்துவைத்ததுவும்,
பாற்சமுத்திரத்தில் மந்தரகிரியினுல் அமுதங்கடைந்
௬௪. இதுவுமது. தெடுத்ததும், யானறிவேன்.- மகத்துவத்தினையுடை
ய சகத்திலுள்ள இவைகளனைத்தையும் எனக்கிளைய
வர்களாயினும் அறிவார்கள்; உலகத்தி லவதாரமான
வர்கள் உமைமை யாதியானவர்கள் தவத்தையுடைய
நாரதரும், பரத்துவாசரும், மரீசியும், புலத்தியரும்,
அத்திரியும்,தேவேந்திரனும், சனற்குமாரரும், மதஞ்
சொரியும் யானைமுகத்தையுடைய விநயகரும், சுப்
பிரமணியரும், பிரிங்கியும், ஆதியானவர்கள் சொல்லி
௬௫. இதுவுமது. முடியாதவர்கள்.— அந்தப்படி இதுகாலவரையும்
சிருஷ்டிகளினிடத்தில் பவஞ்சேர்ந்தவர்களில் ஓரள
வுண்டாமோ. சத்தியவசனத்தையுடைய வசிட்ட
முனியே? உனதுபிறப்பைச்சொல்லில் இதெட்டாவ
தாம், இந்தவண்ணம் அந்த எட்டாஞ்சநநத்தில் இவ்
விடத்திலிரண்டுபேரும் அடைந்தோம்;உயிர்வாழ்வா
யென்று அன்றுவந்ததுபோல இப்போது மென்னி
௬௬. இதுவுமது. டத்தில் வந்தாய்.— நீர்ஒருதரம் ஆகாயத்திலிருந்து
பிறந்தாய்; ஒருதரம் சலத்திலிருந்து பிறந்தாய்; ஒரு
தாம் வாசமுள்ளசோலைசூழ்ந்த மலையிலிருந்தும,ஒரு
தரம் சிவந்த வக்கினியிலிருந்தும் உண்டானய். ஐந்து
சிருஷ்டியில் இந்தப்பூமி மறைந்துபோனதும், திரும்
பக் கூர்மாவதாரத்தினு லெடுத்ததும், க்ஷீரசமுத்திர
த்தி லமுதமெடுக்க பன்னிரண்டுதரம்கடைந்தார்கள்
௬௭. இதுவுமது இவைகளையுமறிவேன்.— மூன்றுதரம் இரணியா
க்ஷன் பாதாளத்தில் பலம்பொருந்திய பெரியபூமியை
எடுத்துக்கொண்டுபோனுன்; விஷ்ணுவானவன் இரே
ணுகையிடத்தில் ஆறுதரம் பரசிராமனுகப்பிறந்தான்
திரும்பவும் நூறுகலியுகத்தில் புத்தாவதாரஞ்செய்
தான்; திரிபுராதிகள் ஒருதரத்தைப்போல முப்பது
௬௮. இதுவுமது. தரம் தகனமானுர்கள்.— தட்சப்பிரசாபதியானவனிர
ண்டுதரம் யாகத்தையிழந்தான்; சந்திரமௌலியினுல்
சக்கரத்துக்கு அபசெயம் பதின்றாமுளதாம்; ஈஸ்வர
னுடன் அருச்சுனர்க்கு பன்றியினிமித்தம் உண்டான

கொடியயுத்தம் எட்டுத்தரமாம் தொகுப்பானயுகங்க டோறும் அநாதியாகிய மறை புருடர்களுடைய புத்திக்கீடாக வுண்டாயிருக்கும்.— அறிவின் மார்க்கமாய் வேத மேற்றக்குரைச்சலாம்; உலகத்தின்ரூழிலும், அப்படியே அதிசயங்களாம்; இதைப்போல புராணக்கூட்டங்களும் பாடம்பலவித விதமாகி அருத்தமொன்ருகும்; யுகங்கடோறும் அமலராமாயணமென்கின்ற நாமமுடையதாய், அதிசயத்தினுல் இலக்ஷங் கிரந்தத்தினுல் ஞானசாஸ்திரமானது சொல்லப்படும்.— ஞானராமாயணமாகிய இதை நல்லவான் மீகிரிஷியானவர் சொல்லியதுபோல, பின்புண்டான வான்மீகரும் பன்னிரண்டுதர முண்டாக்கினுர்; இதற்கொப்பாகஇரண்டாமிதிகாசமான பாரதமாகியஇதை முதல்மாட்சிமையான வியாசமுனி செய்ததும், அதுகிலமாகமற்றுள்ளவர்களுஞ்சொன்னுர்கள்.—இராக்ஷதர்கள் கெடும்படியாக பதினேராமவதாரத்தில் ஸ்ரீராமனென்று விஷ்ணுவானவர் இந்த சிருஷ்டிகாலத்தில் பூமியிலுண்டானவர்; வாசுதேவனுடைய விசாலமுள்ள வீட்டினிடத்தில் பதினுருவதுதரம் இந்தச் சிருஷ்டிகாலத்தில் உண்டாகுவன்; சொல்லாநின்றவிந்தச் சகப்பிரமையானது ஒருதரந்தோன்ருததாகவும்,ஒருதரந் தோன்றுவதாகவும் வரும்.— உண்டாகிய திரிஸ்யமென்கின்ற இப்பிரமையானது, கெடாமல் எப்போதும் ஞானுத்மாவினுள் நிலையாகவிருந்து சலத்திற்பொருந்திய திரைகளைப்போல் உண்டாகி நாசத்தையடையும்.சொல்லப்பட்ட வெட்டுத்திக்குகளும், மலைகளும், சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும், மகாமேருவினிடங்களும், சிருஷ்டிகடோறும் வேறு வேறு தன்மையாம்.மேலானவசிஷ்டமுனியே இவைகளையும்பார்த்தேன்.¶— நான்குயுகங்களும், ஒருயுகத்துக்கொருயுகம் ஒழுக்கங்களோடும் மாறுபட்டிருக்கும் என்று சொல்லிய புசுண்டயோகியை திரும்பவுமொன்றையான் சங்கித்துக்கேட்டேன், தொழிலோடும் இங்கப்பூமியிற் சஞ்சரித்தும் நீர் யமனைநீங்கினதெப்படியென்று கேட்க, யோகி,சொல்லுவார்.—

மகான்களாணையை செய்யத் தெரியாதவர்களுக்கு ப்ரயோசனமியாது, உமக்குத்தெரிந்திருந்தும் இவ்விடத்தில் அடியேனைக் கேட்டதை சொல்லுவன் கேட்பீர்; வாதனையென்னுஞ் சூத்திரத்திற்கொக்கும் நிறைந்த குற்றங்களாகிய பெருமுத்துமாலையைத்

சுகு. தனதாயுளிற்கண்டசகச்சித்திரங்களைத் தெரிவித்தல்.

எ௦. இதுவுமது

எக. இதுவுமது.

எஉ. இதுவுமது

எங. காலாதீதமானஞானத்தை யறிவிக்குநிமித் தங்காலனை வென்றவனுபவத்தைவினுவினதறிவித்தல்.

எச. அசுத்தவாசனையைக் கெடுக்கவேண்டுமெனல்.

¶ இ-ம் மாயாவிசித்திரமே சகமுதலிய யாவுமாமென்பதைத்தரிசிப்பித்ததை நீக்குநிமித்தஞ் சகத்தின் விசித்திரங்களை வினுவினதையறிவித்ததாம்.

தள்ளி சாராமலிருக்கின்ற மனதையுடையவர்களை கூற்றுவனெருங்கான்.— நிச்சயமாகியவிருக்ஷத்துக்கு பிளக்கின்ற அறிவாளாகியும், சரீரமென்னுங்கொடிக்கு எரிபுழுவாகியு மிருக்கின்ற சுழலாநின்ற மனதினது துயரத்தை அடையாதவர்களை கூற்றுவனெருங்கான்.

எடு. மனோதன் பத்தையு மாசை யையுங்கெடுக்கவேண்டுமெனல்.

நசியாநின்ற சரீரமென்னும் விருக்ஷத்தைசுற்றிக்கொண்டிரங்காநின்ற மனதினிடத்திற் நிலையை வைத்துக்கொண்டு சீறுநின்ற விச்சையென்னுஞ் சர்ப்பமானது நெருங்காத முதன்மையான சத்துக்களை கூற்றுவனெருங்கான்.— இராகத்துவேடமென்கின்ற விஷம்பெருக மனமென்கின்ற புற்றில் லோபமென்கின்றசர்ப்பமானதுவந்து நெருங்கி புசியாத ஞானவான்களை கூற்றுவனெருங்கான். மிகுந்தவிவேகமென்னும்சலம்வற்றி தேகமாகிய சமுத்திரத்தில் வடவாமுகாக்கினியாய் பரவாமற் கோபவேரைக்கெடுத்த குணத்தையுடையவர்களை கூற்றுவனெருங்கான்.— உறுதியாகிய செக்கில் எள்ளுநசிப்பதுபோல கொடிதான மன்மதனால் அழிவுபடாத அறிவையுடையவர்களை கூற்றுவனெருங்கான். நாசமில்லாத நின்மலமாகிய நிருவாணபதத்தில் மனனமிருதிமிகுந்த துன்பநீங்கி விஸ்ராந்தியடையும்நிலையைப்பெற்றவர்களைகூற்றுவனெருங்கான்.—

எசு. கோபலோபங்களைக் கெடுக்கவேண்டுமெனல்.

எஎ. காமப் பற்றைக்கெடுத்துவிட்டில்விஸ்ராந்தியடையவேண்டுமெனல்.

சொல்லப்பட்ட வித்தோஷங்கள் சுழலாநின்றபவத்துக்கு வித்துகளாம். வேற்றுமையில்லாமல் ஏகமாகிய மகாமனதைத் துன்பஞ்செய்யாது. ஆதிவியாதிகளிலுண்டாகி நீங்காத பிரமையினால் சஞ்சலிக்கின்ற துன்பமானது வேற்றுமைகெட தீமையில்லாத ஏகமாகிய மனதின் பக்கத்திலுஞ் செல்லமாட்டாது.—

எஅ. அபேதமான மனோசித்தத்தை வருத்தாதெனல்.

இருதயாகாயத்தை இருளாகச்செய்து இராகத்துவேடத்தில் உண்டான சிந்தையானது கெடாத வேற்றுமைகெட ஏகமாகிய மனதின் பக்கத்திலு நெருங்கமாட்டாது. தீமையான வஸ்துக்களும், தீமையான வசனங்களும், துஷ்டாரம்பங்களும், தீமையாகியகுணங்களும், சமோதயமாயிருக்கின்ற சமத்துவத்தையடைந்து ஏகயானமனதி னகத்திற்புகமாட்டாது.— பிரமையும், உபாதியும், களங்கமுமாகிய விவைகளல்லாமல் மெய்யாகி மேலான முத்திக்குரிமையாய் செயலில்லாத தற்பதார்த்த வசத்திற் றொடரும்படியாக மனதைச் செய்யவேண்டும். உண்டாகாநின்ற வெகுகாலம் பாழான பயத்தைக்கொடுத்து அசுத்தமாகிய பேதமென்கின்ற பசாசங்கள் தங்காத தற்பதார்த்தத்தில் அடையும்படி மனதைச் செய்யவேண்டும்.—

எகூ. இதுவுமது

அ0. அபேதவஸ்துவினிடத் தில்மனதைச்செ லுத்தவேண்டுமெனல்,

அக. தன்னைத்த

ஆத்மாவை அதனறிவினாலறிதலே சகலதுன்பங்

களையும் நீக்குதற்கிடமாகும்; உமக்குச் சமானமான வர்களுக் கெளிதாகும்; என்போலிகளுக்கரியதாம். மேலான வசிஷ்டமுனியே? தொழில்களுக் கெல்லாம் அதீதமாகிய சேடமான முடிவைப்பொருந்தும் இப் படிப்பட்ட பதத்தை மூடத்தில் உண்டாகாநின்ற மதியையுடையவர்கள் எப்படி யடைவார்கள்.†—

ன்றாற் தெரிசிக்கிற்கூற்றுவ நீங்குமெனல்.

அஉ. மத்தியகத ஞானத்தாற் பிரமாநந்தத்தையடைந்தி த்தேகத்தோடிரு த்தற்குபிராணனே க்கினிருக்கவேண் டுமெனல்.

ஞானதிருஷ்டிக்கு சமானமாகியும், ஞானநாட்டத் தில் அன்புள்ளதாகியு மிருக்கின்ற சற்குணங்களின் மத்தியின் ஒன்றைப்பெற்று துக்கங்களனைத்தையுங் கெடுத்து, சிறந்தசுகத்தைப்பெருக்கி மரியாதிருக்குங் காரணமாயிருக்கின்ற குற்றமற்றபிராணனாட்டமென் கின்ற குணமடைந்தேனென்று புசுண்டமுனிசொன் னார்.— இப்படிசொல்லுகின்ற சமயத்தில் தெரிந்திருந்தும், பிராணநாட்டமென்று நீர் சொல்லிய தியாது சொல்லுமென்று கேட்கவும், புசுண்டயோகி சொல் லுவார். நீரிவ்விடத்தி லெதிரேபார்க்கின்ற ஐம்பூத சரீரமான வீட்டின்மத்தியில், இதய தாமரையான குளிர்ச்சியுடைய புட்பத்தினிடத்தில், பிராணபான வாயுவென்று இரண்டு சேர்ந்திருக்கும்.— தோற்ற முடைத்தாய் இந்த விரண்டுவாயுவினது வலியை யுடைய நடையை எப்போதும் வருத்தமில்லாமல் அனுசரிப்பன்; மேலாகிய விதயாகாசத்தில் சூரியசந் திராவன், ஆகாயத்திற்சஞ்சரிப்பன், பற்றுதலுடன் சரீரமாகிய எந்திரத்தைச் சுமந்துக்கொண்டுசஞ்சரிப் பார்கள்.— நன்றாய் மேலுங்கீழுஞ் சஞ்சரிப்பன;சாக் கிரங்களிலும், சொப்பனங்களிலும், சுழுத்திகளிலும் ஒன்றான சமவடிவத்தையுடையவைகள் முன்சொல் லப்பட்ட பிராணபானவாய்வுகள் பிறகிடாமல் இவற் றின்கதியில் எப்போதுமனுசரிக்கின்ற வெனக்கு சுழு த்தியவத்தையில் நின்றவனுடையவாசனையைப்போல விளங்குகின்ற வாசனைகளானவை போயினவாம்.—

அக. பிராணயாமமறிவிக்கு நிமித்த மஃதியாதெனிற் சொல்லத்தொடங் கிப் பிராணபானஸ் தானங் கூறல்.

அச. இதயாகாசத்துக்குச் சந்திரசூ ரியராய்வலம்வருகி ன்றாரெனல்.

அரு. அவைகளி ன்கதியிற் செல்வி ன்வாசனக்ஷயம் வருமெனல்.

தாமரைத்தண்டினது ஒருநாலை ஆயிரம்பங்கு செய்து அதனிலொருபங்கு சமானமென்றாலும் சமான மாகாமல் மிகவுஞ் சூக்ஷுமமாய் உண்டாயிருந்தும், எதிர்த்து அந்தவாயுவின்நடையினுடைய குணத்தை யறிய வறியதாம். கலத்தலாகிய விப்பிராணனது விடாமலசைகின்ற சத்தியைப்பொருந்தி நீங்காமற் சஞ்சரிக்கின்ற சரீரத்தினுள், ஸ்திரமில்லாமல் புறம்பி லும் அகத்திலும் எக்காலத்தும் திரும்பாமல் மேலே செல்லுதல் தொழிலாகும்.— இரண்டாவதான வபா

அசு. அவைகளின்சதியின் மேன்மையும் பிராணமேனேக்கமு முரைத்தல்.

அஎ. அபானனது

† இம். வாசனைமுதலிய பற்றுக்களியாவையுங் கெடுத்து தனதாத்மஞானத்தை த் தரிசிக்கில் யமனனுகானென் றறிவித்ததாம்.

கீழ்நோக்கஞ் சொல்லிப் பிராணயாமமெனண் விதமாகக் கூறத் தொடங்கி முதற்பிராணனைய கத்திற்பூரித்தலுட் பூரகமெனக் கூறல்

அஅ. (உ) அபானனையகத்திற் பூரித்வுட்பூரகமும் (ஙு)அவைகளை யகத்திற் றம்பித்த வுட்கும்பகமுங் கூறல்.

அகூ. (ச) அப்பிராணன் புறம்பினின்றுண் ணேக்கடையுமுள் ரேசகமும் (ரு) நாசினுனியினிற்கும் புரப்பூரகமும் சூ நாசியின்று வாதசாந்தத்தினிற்கும்புறப்பூரகமுஞ் சொல்லுதல்

கூ0 (எ) பிராணன் புறத்திலும் அபானனுன்ளிலும் ஸ்தம்பிக்கும் புலக்கும்பகமும் (அ) அபானன் புறம்பினின்றுண்ணேக்கும் புறரேசகமுங் கூறல்

கூக இப்பிராணயாமத்தான்மனதையடக்கினேர்விடயத்தையும் பரிசியாரெனல்

னவாயுவும், அசைவாகிய சத்தியைப் பொருந்தி உட்புறம்பில் நீங்காமற் சஞ்சரிக்கும், சீரத்தின் கீழேசெல்லும், சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் இமமேலான பிராணனுனது முழுதுந் திரும்புவது நன்மையாம்; இதைத் தெரிந்தவர்களுக்கு சகமுழுமையுங் கொடுக்கும்; இந்தப்பிராணன் குணத்தை சொல்லக் கேட்பாய், அடையப்பட்டபுறத்தில் பன்னிரண்டங்குலமளவில் பிராணவாயுவு திரும்பச் சீரத்திற்புகுதல் பூரகமாகச் சொல்லப்படும்.— புறத்திலிருந்து உள்ளடங்க வருத்தமடையாமல் அபானவாயுவு சீரத்திற் புகுதலையடையும்; அதையும் பூரகமென்று சொல்லப்படும். முடிவாக வபானவாயுவு மறைந்து பிராணவாயுவும் இதயத்தில் எதுவளவும் அசைவற்றிருக்கின்றதோ அதுவரையிலும், கும்பகமென்கிற வவத்தையாம். சகல கலைஞானங்களையும் கற்றறிந்த வேதத்தையுடைய வசிட்டரே? மரியாதைல்லயோகிகள், இதையனுபவிப்பார்கள்.— இதயாம்பரத்திருந்தும் தன்மனதில் *வருத்தமில்லாமல் பிராணவாயுக்கள் வெகுற்முகமாகுதல் செய்ய அகத்திற் பொருந்தி யிரேசகமாகும். புறம்பே நாட்டமிருந்த பிராணவாயுவானது நாசியினூடுறுவி அதனுனிமட்டும் நடையை முன்னேபொருந்த வெளிப்பூரகமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். விரிவையுடைய நாசிகாந்தத்தினின்று நீங்கி பன்னிரண்டங்குலப் பிரமாண நடையை வேருன புறபபூரகமாமென்று சொல்லுவார்கள்.— வெளியில் பிராண வாயுவானது அடங்க, அபான வாயுவானது வெளிப்படாமலிருக்க, பூரண அவத்தையாய் விளங்கிய புறக்கும்பமாகும். அபானேதயத்தின் ப்ரகாசரூபமான வாயுவின் உட்பார்வையானது திரமான புறரேசகமாகும்: இதுவே மோட்சத்தையடைவிக்கும்; சதாகாலமும் தியானிக்கப்படும், தடையில்லாமல் புறம்பிலு முள்ளிலும் கும்பகமுதலான நடைகளை தவிராம லறிந்தவர்கள் திரும்பவுஞ் சனியார்கள்,*— பிராணவபானவாயுவின் இயல்பாக யான் சொல்லப்பட்ட இவ்வெட்டுகதிகளும் வீட்டைக்கொடுப்பன; இராப்பகலும் விரும்பத்தக்கன: வேகமில்லாமல் இத்தொழில்களில் கூடினவர்கவாய் புறத்திற்செல்லாமல் மனதைக்காப்பவர்கள், குறைவில்லாமல் சிறிதுநாட்களில் நிருவாண நிலையைச் சேர்வார்

* இ-ம். பிராணபானனை நிறுத்து முட்பூரகமிரண்டு, முட்கும்பகமொன்று. முள்ரேசகமொன்றும், புறப்பூரகமிரண்டும், புறக்கும்பகமொன்றும், புறரேசகமொன்றுமாகிய வெண்வகையையுஞ் சொல்லியதாம்.

கள். இதை அப்பியாசஞ்செய்பவர்கள், பிராமணர் சள் நாய்தோலைத் தொடுவார்களோ அதுபோல வி டயவிச்சையை யடையார்கள்.— சென்றாலும், நின் றாலும், சாக்கிரத்திற் சொற்பனத்தின் மேவினாலும், இந்தப்பார்வையை யுடையவர்கள், பந்தமணியார்கள், துன்பம் பொருந்தார்கள்; அடையத்தக்க பலன்க ளனைத்தும் அடைந்ததாகும். இருதயகமலத்தில் நின் றுண்டாகிய செல்கின்ற பிராணவாயுவு வெளியில் பன்னிரண்டங்குலப் பிரமாணத்தில் இறந்துவிடும்; அபானவாயுவும் பன்னிரண்டங்குலப் பிரமாணத்தில் உண்டாகி இருதயகமலத்தில் அடங்கி யிறக்கும்.—

கூஉ இவ்வெண் விதமான பிராணாயா மசாதனஞ் சொல் லி மேற்சகத்தையு ஞ்சொல்லவேண் டிப் பிராணாபான லயஸ்தானஞ் சொ ல்லுதல்.

கலந்துவருகின்ற வெளியிலிருந்தும் அபான னென்கின்ற சந்திரனனது சரீரமியாவையுங் குளிரச்செய்விக்கும் பிராணனென்கின்ற சூரிய னனவன் சூடாகசொல்லப்பட்ட விச்சரீரத்தி னுள் பாகமுண்டாகச்செய்யும். நில்லாமற் சுழ லுகின்ற அபானனென்கின்ற சந்திரனிடத்திற் சேராநின்ற இயல்பாகிய கலைகள்பிராணனென் கின்ற சூரியனால்வலிமையாகி விழுங்கப்பட்டது எவ்விடத்திலோ, அந்த மேலானபதத்தை யடை ந்தால், பின்பொருதுன்பமுண்டாமோ.— அந்தப்ர காரமே பிராணனென்கின்ற சூரியனிடத்திற் சேர்ந் திருக்கின்றகலைகள், அபானனென்கின்ற சந்திரனால் வாரிவிழுங்கப்பட்டது எவ்விடத்திலோ, அந்தவலிய பதத்தை யடைந்தால் சென்மமானது பின்புண்டாகு மோ. அபானவாயுவானது, பிராணவாயுவைப் பக்ஷி க்கும்படிபார்க்க, பிராணவாயுவானது விழுங்க, கலந் திருந்த அபானவாயுவைப் பக்ஷிக்கும்படி பார்க்க இவ்விரண்டின் மத்தியாக நிற்பவர்கள் எப்போதும் எழுபவந்துன்பத்தை பின்படையார்கள்.— அசை கின்றபிராணலயத்தினது பக்கத்திற்பொருந்தி அபா னவாயுவின் லயத்தில் பக்கத்தையடைந்து பிராணா பான மத்தியிற்கூடிய சிதாத்மாவை துதிக்கின்றேன், அபானவாயுவின் பிறப்பும் தவிர்ந்துநிற்க, நீண்டபிரா ணவாயுவும் இறந்துநிற்க, நாசிகாந்தத்துக்கு நேராகிய வாகாயத்தில் சிதாத்மாவை நீக்கமில்லாமற் சிந்திக் கின்றேன். ஒரு களங்கமுமில்லாமல் கலைகள் சூழ்ந்தி ருக்கின்ற நல்லதிருஷ்டியினால் தேவர்கள் வணங்கா நின்ற பரமபதத்தை யடைந்தேன்.— என்னுடைய மனமானது பிராணனிஷ்டையினால் சொல்லிய இந்த மார்க்கத்தினால் நின்மலமாகிய பரதத்துவத்தில் எப்

கூக அபானனதுகுளி ர்ச்சியும்பிராணனதுஉஷ் ணமுமொன்றின் கலைக ளையொன்று பக்ஷித்தலு மொன்றையொன்று ப க்ஷித்தலு மிவ்விரண்டி னிறத்தலின் மத்தியிற் பூரணமாய்விளங்குகின்ற சைதன்யத்தை வணங்கு தலுங்கூறல்.

கூச இதுவுமது.

கஎ இதுவுமது.

கூரு சகசஞ்சொ ல்விச் சாக்ஷாத்கா ரானுபவஞ் சொல் லுதல்.

¶ இ-ம். பிராணாபானவிறத்தலியக்கங்களிற் பூரணமானசித்தைத் தெரிவித்ததாம்.

போதும் ஒப்பற்ற துன்பந்தீர்ந்தடைகின்றவழி யிது வாகும். இந்தத்திருஷ்டியைப் பிடித்துக்கொண்டு இறந்தகாலத்தையும், எதிர்காலத்தையும், நினைக்கேன்; மிகவும் நிகழ்காலத்தின் றன்மையை பொருந்துகின்றேன்; யானிதையடைந்தேன்; அடையவேண்டிய திதுவென்று நினைக்கேன். வசிட்டமுனியே? அதனால் துன்பமொன்று மில்லாமல் முடிவற்ற நீண்டபிராணனை யடைந்தேன், மயக்கநீங்கினேன்.- இன்பமடைந்தவர்க ளிடத்திலிருந்தால் இன்பத்தையே யடைவேன், துன்பமடைந்தவர்களிடத் திருந்தால் துன்பத்தையே யடைவேன்; உலகமுழுமையு முற வாயிருப்பேனதலினல், தவறுள்ள துன்பங்கெட்டு உயிர்வளர்ந்து சுகித்தேன், உண்டான ஆபத்திலும் மேலான சம்பத்திலும் எவ்வளவுஞ்சலியேன், உலகத்திலுள்ளவர்களுக்கு பொருந்திய சினேகிதனுமேவேன்; அகங்கார மில்லாதவனல், முனீஸ்வரா? துன்பமொன்றுமில்லாத நிறைந்த வுயிரைப்பெற்றிருக்கின்றேன் என்றும்,— உமது கிருபையினு லிவ்வண்ணம் அளவற்ற ஆயுளையடைந்தேன், தத்துவஞானமும் நன்று கப் பெற்றேனென்று சொல்லிய அத்தன்மையான புசுண்டயோகியை, பகவானே? நீர்சொல்லிய ஆத்ம தத்துவத்தின் குணமானது அழகுள்ளவதிசயம் இது மிகவுமதிசயமாம்! காதுக்காபரணங்களாகும், இதைக் கேட்டாராயின் யாரதிசயப்படமாட்டார்கள் நல்ல நலத்தையே யடையக்கடவாயென்று,நிலைபெற்ற சூரியன்மத்தியில் வருகாலமிதுவாதலால் தெய்வலோகத்திற்போவேன், நீ வாழக்கடவாயென்றுசொல்லி,—

கஎ யாதியா தெப்படியோவப்படியப்படியேவிளங்குகின்றேனெனல்.

கஅ இவைகளான் ஞானமுமாயுளும்பெற்றேயெனல்

அவரைவிட்டு அவ்விடத்திலிருந்துஎழும்பியானகாயத்தின்மேற்செல்ல, என்னைவிடாமல் பத்துநாழிகை வழி ஆகாயத்தில்வந்தான் இரசஞானமுடையபுசுண்டரே? நிற்பாயென்று வலிமையால் நிறுத்தினன் பரிகத்தஞானிகளை நீங்குதல் துன்பமல்லவா பெரியோனாகிய புசண்டயோகியைவிட்டு முன்கிருதாயுகத்தில் நீங்கினன்; திரும்பவும் இரண்டாவது நெருங்கிய திரேதாயுகத்தில் தரிசனஞ்செய்தேன்; மலர்ந்தபுட்ப மாலையைத்தரித்திருக்கின்ற மார்பையுடையஸ்ரீராமா? நீபின்பவதாரஞ்செய்தாய்; இந்தக்கதைபுசுண்டயோகி யடைந்த மார்க்கமென்று நீ யறிந்துகொள்வாய்.*—

கக. வசிட்டர் விண்ணுலகத் துக் கேகுதல்.

புசுண்டன்கதை

முற்றிற்று.

* இ-ம். சுவாத்மானுபவமு நீண்டவாயுளாகிய ஸ்வரூபசாக்ஷாத்காரமும் பெற்றதைத் தெரிவித்ததாம்.

# தேவபூசைகதை.

## அவதாரிகை.

முற்கதையி னித்தியமான ஞானத்தினுலுஞ் சிரஞ்சீவமானயோகத்தினுலுஞ் சர்வம் பிரமமயமென்னும் நிருவாணசுகஞ்சொல்லி, இத்தேகமுதலிய யாவும் அசத்தியமென்றறிந்து நித்தியமாய் விளங்குகின்ற ஞானமே தேவென் ருராதிக்கவேண்டி பூசையை நிரூபிக்கின்ருர்.

---

௧. அஸ்திமுதலிய தடிப்புள்ளதேகமணுத்துவமு மகத்துவமுமாகுந்தன்மையிருத்தலினஃதை யாத்மாவென்றுரைக்கலாமேயெனின், அஃதையப்படி யாக்குந்தன்மையுள்ள ஞானமேவாத்மா வி தன்ப்ரதிபாமாத்திரமே தேகமென்றறிந்தஃதை நீக்குதல்

இப்பாஞ்சபூதபௌதிகம் தோற்றரவு மாத்திரமேயாம; விசாரணையற்ற விக்காலம், இந்தப்ரகாரமாகவே தோற்றுகின்றது; பற்றுதலுடன் இவனென்றும் நானென்றுஞ் சொல்லப்பட்ட சரீரத்தை மனதில் நானெனக் கருதுவது மிகுந்தவசத்தியமே; மிகுந்த நரம்புகளினுலும், எலும்புகளினுலும், பொருந்திய சரீரத்தை யானென நினைக்கின்ற மயக்கத்தை நீக்கக்கடவாய்; சங்கற்பத்தினுல் பொருந்திய வுருவங்களுக்கு ஓரளவுண்டாமோ.— இன்பத்தையுடைய மெத்தையில் நித்திரைசெய்தும் சொற்பன சரீரமாய்திக்குகளிற்சென்றுகலக்கத்தையடைந்தாய் உனதென்கின்ற அச்சரீரம் எவ்விடத்திலிருக்கின்றது ஸ்ரீராகவா? அறிந்துபார்ப்பாய், சாக்கிரத்தில் மனோராச்சியஞ் செய்வதினுல் எந்தச் சரீரத்தினுல் மகாமேருவிலும், தேவலோகத்திலும், எப்பொழுதுநீயே மயங்கிச் சுழலுகின்ருய்; உனதென்று சொல்லப்பட்ட அச்சரீரம் எவ்விடத்திற் சேர்ந்திருக்கின்றதோ.—

௨ சூட்சும ப்ரபஞ்சத்தைக்காண்பித்துத்தூலப்ரபஞ்சத்தை நீக்குதல.

௩ சூட்சுமப்ரபஞ்சத்தை நீக்குதல்

நெடியசொற்பனமும் நெடிய மனோவிராச்சியமும் நெடியசித்தப்ரமையுமென்று இவ்வண்ணஞ் சம்சாரத்தைக் கருதுவாய். தோற்றரவு மாத்திரமாகிய இச்சகமானது, காணத்தகும்படி உள்ளதுமன்று இல்லாததுமல்லவென்று, வேருனசிந்தையை கெடுத்தலே இராசாவே? நன்மையான தரிசனமென்று தத்துவஞானிகள் சொல்லுவார்கள்.—தீர்ப்பாக யாம் எவ்விதத்திலும் மரிப்போமென்பது நிச்சயமே. உலகத்தின்கண்ணுள்ளவர்கள் மரணமடைகின்ற காலத்தில் வீணுகப் பாதவிக்கின்றவிதம் ஏனோ. வீரனுன ஸ்ரீராமா? எவ்விதத்திலும் பிரந்தவர்களுக்கு சிறிது அற்பசுகம் பொருந்தத்தக்கது, இப்படி யற்பமாய்ச் சேருகின்றஒவ்வொருவஸ்துக்களில்அகங்கரிக்கின்றவகங்காரமேன் சொல்லுவாய் —வஸ்துக்களில்வேறுபாட்டைநீக்கி ப்ரதிபாமாத்திரத்தில் நிலைபெற்றசமமாக சகத்தைப் பார்க்கக்கடவாய். ப்ரதிபாமாத்திர

௪ இத்தேகங்களினகம்பாவத்தைநீக்குதல்.

௫ சமதிருஷ்டியினுலிப்ரபஞ்சங்களைநீக்குதல்.

மான சகம் நினைக்கின்ற மனக்கண்ணாடிக்கு களங்கமா குர். ஆகையினால் பொருந்தியவனைத்தும் பிரிவில்லா மற்கெடுத்து மாட்சிமையுள்ள ஸ்ரீராமா? ப்ரதிபாவில் லாதவனாய்,—எவனுடைய மனப்புற்றில் இராகத்து வேடமென்கின்ற சர்ப்பங்களுளாவவில்லையோ, அவ னென்கின்ற கற்பகவிருக்ஷத்தினால் பிறரடையாத தொன்றுளதா அறிவின்மிகுந்த ஸ்ரீராமா? கலக்க மில்லாத வுணர்வினால் செருக்கையுடையவர்களாய் சகல கலைஞானசாஸ்திரங்களினால் அறிவுமிகுந்திருந் தும், தவமற்ற இராகத்து வேடங்கள் நிறைந்தவர் களே கழுதையைப்போல நீக்கத்தக்கவர்கள்.—இப் பிறவி மயக்கமெனும் சக்கரத்தையுடைய ரதமான து, சங்கற்பமென்கின்ற வதின் அச்சை செவ்வை யாகத்தடுத்தால் ஓடாது. சங்கற்பமென்கின்ற அச்சா னது, சற்றசைந்ததானால் வலிமையாக யாவர்தடுத்தா லும் தடுக்கப்படாது. ஞானவல்லமையும், சூட்சுமயுத் தியும், உண்மையான புருடப்ரயத்தினங்களுமாகிய இவைகளைக்கொண்டு தடுக்கவேண்டும்.—நல்ல ஞான த்தையும், நல்லசத்துக்கள் குணத்தையும், நல்லவாத் மஞான சாஸ்திரங்களையும் பொருந்திய நல்ல ப்ரயத் தினத்தினால் பொருந்தாத வஸ்துக்கள் எவ்விடத்தி லுங் கிடையாததாம். மனமென்கின்ற பொல்லாத வலியபசாசம், துன்பத்தைக்கொடுக்கும், அச்சத்தைக் செய்யும், தீரமாகிய மாட்சிமைப்பட்ட செல்வங்க ளியாவையும் கெடுக்கும்; கொலைசெய்யாநின்ற இந்த மனதைக்கெடுத்து எதுவானையோ, அதுவேயாய் பூரணமாவாய்.—மனமென்கின்ற கொடிய பசாசம் உறுதியாகப் பற்றிக்கொண்டால், நூல்களினாலும் உறவினராலும் நீக்கக்கூடாது; ஆசாரியராலும் திருப்புதற்கரியதாம். அப்பசாசமானது விட்டுப் பிரிந்து சித்வேஷமில்லாமல் நிற்குமாயின், முன்சொல் லப்பட்ட சாத்திரமுதலிய பிரிவுகளினால், மிகுந்த சேறில்லாவிடில் கிறியபள்ளத்தில் வீழ்ந்திருக்கின்ற மிருகத்தை கரையிலேற்றுவிப்பவர்களைப்போல, சந நத்தைத் தீர்க்கப்படும்.—அனுபோகத்துடன் அநு பவிக்கப்படுவனவாகிய விஷயங்கள் புறம்பில்நீங்க ஆசாரியனது பாதத்தைவிரும்பி தரித்து யுக்தியுடன் விசாரணைசெய்து ஏகமாகிய பூரணவஸ்துவான தன தாத்மஸ்வரூபத்தை அறியவேண்டுமாதலினால், மகா மோகத்தைக் கெடுப்பதற்கொன்றாகிய இப்பரமதரிச னத்தை, சந்திரனைத்தரித்திருக்கின்ற சடாமகுடத்தை யையுடைய பரமேஸ்வரன் எனக்குசசொன்னார்; அதை

ச. சமத்துவத்தைக்குறித் திராகத் துவேடத்தை நீக்குதல்.

எ. பவத்தின்காரணமான சங்கற்பத்தைநீக்குதல்.

அ. சுங்கற்பவடிவமான மனதைநீக்குதல்.

கூ. மனதின்வலிமைசொல்லி யஃதை நீக்குதல்.

க0. மகா மோகமானகாரண ப்ரபஞ்சத்தை நீக்கி ப்ரத்யேகாத்மாவைத்தரிசிப்பித் திஃதுறிதிப்படுத்தித் தாசிரிய வசனத்தைக் காட்டத் தொடங்கல்.

யுனக்குச் சொல்ல தெளிவுற்றுக் கேட்பாயாக.¶—
௧௧. ஈசனைநோக்கித்தவஞ்செய்தல். மேலான கைலாயகிரியில் பரமேஸ்வரனை ஆரா
தித்து ஒருகாலத்தில் கங்காநதியின் பக்கத்திலிருக்
கின்ற பன்னகசாலையிற் றவஞ்செய்து சித்தர்குழாங்
களோடும் பலசாஸ்திரார்த்தங்களைப்பார்த்து ப்ரயோ
சனத்தையடைய வெகுகாலம் போக்கினேன். பின்
பொருதினம், ஆவணிமாசம் பூர்வபக்ஷத்தில், இயல்
பான வஷ்டமிதிதியில், இராக்காலத்தில், பதினைந்து
௧௨. இருளிலோரொளியுண்டாதல். கடிகை கழிந்தபோதில்.—மனதுசுருங்கி சமாதியை
நீங்கிய வெகுற்முகத்தி லியானிருக்க, திக்குகளனைத்
தும் அரவமடங்கினதாய்காட்ட சமாதியைப்போல
வும், மவுனமா யிருப்பனபோலவும், நடப்பில்லாமல்
கத்தியினுல் வெட்டுதற்கான இருளானது மூடிக்
கொண்டு, மலையின்குகைகளும் கானசங்களுமற்றெவ்
விடத்திலுநிறைந்து சூனியமாயிருக்கின்ற அச்சமயத்
தில், விரைவில்வுண்டாகி ஒப்பற்ற ப்ரகாசமானது
௧௩. ப்ரசன்னமானபரமேஸ்வரனைப் பூசித்தல். என்முன்னே ப்ரகாசிக்கப்பார்த்தேன்.—வெண்மை
நிறைத்தையுடையஅநேகமேகங்கள்போலவும், வெண்
ணிறத்தையுடைய சந்திரர்கள் அநேகர்போலவும்,
ப்ரகாசத்தை சட்சுவினுற்பார்க்குமளவில், நந்திகேஸ்
வரர் முன்வர பார்வதியினஸ்தத்தின்மேல் தமது
கரத்தைவைத்து அடியேனினைப்புற பரமேஸ்வரன்
வரவும், சீடர்களோடும்சீக்சிரத்திலெழுந்துஆராதனை
செய்வதற்கு தகுந்த திரவியங்களைக் கொண்டுபோய்
பலபுட்பங்களை யருச்சித்து தூரத்திலிருந்து வணங்
௧௪. உமையைப் பூசித்தல். கித் தோத்திரஞ்செய்து.— பூரணசந்திரனினும்
குளிர்ச்சியடைந்து, துன்பங்களனைத்தையும் நீங்கு
கின்ற அழகியகண்ணினுல் கிருபாதிருஷ்டிவைத்த
அவனை, நமஸ்காரத்தினுலும், அருக்கியத்தினுலும்,
பரிசுத்தமுள்ள வுபசாரங்களினுலும், குளிர்ந்த நல்ல
புட்பங்களின் வருஷத்தினுலும் பரமேஸ்வரனைப்
பூசித்தேன்; பரமேஸ்வரியையும் அந்தப்ரகாரமே
௧௫. சுவாமிவினவுதல். பூசித்து பாதத்தைவணங்கினேன்.—பரமேஸ்வரன்,
பணிகளுக்கியைந்த சிவகணுதிகளையும், பார்வதியின்
பாங்கியர் கணங்களையும், பிரியமாக அன்போடும்
வணங்கினபின்பு, பூரணசந்திரனை குளிர்ச்சிசெய்விக்
கின்ற குணமானவசனத்தினுல், ப்ரகாசத்தையுடைய
பரமேஸ்வரன் என்னைப்பார்த்து கேட்டார்; உபசாந்
தத்தினுல் துன்பந்தீர விஸ்ராந்தியடைந்துகுற்றமறச்
சுகங்களைக்கொடுக்கின்ற உனதறிவுகளானவை பிரம

¶ இ-ம் பாஞ்சபூதபௌதிகமுதலிய யாவுஞ் சிற்ப்ரகாசமென்றறிந்து சின்மாத்திரமாய் விளங்கவேண்டுமென்பதாம்

கசு. சுவாமிவிஞவுதல். பதத்தி னிலேயானதா.— விக்கினமில்லாமல் தவமானது வினக்கு நடந்துவந்ததா, அடையவேண்டியவை அடையப்பட்டதா, திரிஸ்யங்களானவை இறந்தனவாவென்று, சகத்துக்குக் காரணமாயிருக்கின்ற புனிதனை பரமேஸ்வரன் சொல்ல, பரமசிவனை நானமஸ்கரித்து வேண்டிக்சொல்லுதலினுற் சொன்னேன். தேவதேவனே? கிரமமாக வுன்னுடைய கிருபையை பெற்றவர்களுக்கு பெறுதற்கரிய தொன்றுமில்லை; விஷயஅச்சங்கள சமீபத்திலும் வரமாட்டாவாம்.*—

கஎ. துதிசெய்தல். உலகத்தில் உம்மைவணங்கினவர்களை வணங்காதவர்களில்லை; தேவரீரை யடைக்கலமாக வணங்கிய மகான்கள் எவ்விடத்தில் வாழ்வுற்றுர்களோ அதுவே தேயமும், அதுவேநாடும், அதுவேகிரியுமாம்; தேவரீரைச் சிந்தித்தல் தொகுப்பாயிருக்கின்ற முற்காற் செய்த தருமத்துக்கு உறுயப்ரயோசனமாகும்;இந்தக் காலம் தொடர்ந்துசெய்யுந் தருமத்துக்கு சொரிந்த வருஷமாம்; இனியடையுந் தருமத்துக்கு விதையாகும்.—

கஅ. இதுவுமது. தேவரீரைச் சிந்திக்குஞ் சிந்தனையானது, ஞானமுதமிருத்தற்கு ஒப்பற்ற பூரணகும்பமாகும்; நீரமைகின்ற நல்லநிலவுக்கு பூரணசந்திரனுகும்; உண்மையான மோக்ஷத்துக்கு மார்க்கமாகும்; யாவுமாய்விளங்கிய தேவரை சிந்தித்தலென்கின்ற அழகு விளங்கிய சிந்தாமணியை அடியேனடைந்து இல்லாமையையுடைய சகலவாபத்தினது சிரசை மிதித்திருக்கின்றேன்.—

கக. இதுவுமது. என்றுதோத்திரஞ்செய்து கருணை முகமலர்ந்திருக்கின்ற முதற்காரணமாயிக்கிற பரமசிவத்தின் மிருதுவான வுபயபாதங்களை திரும்பவும் வணங்கி நான்கேட்டவொரு பொருளைச்சொல்ல, ஸ்ரீராமா? விளங்கும்படிகேட்பாய். கைலாயமலையில் வசிக்கின்ற கிருபாசமுத்திரமே? உமதுகிருபையினுல் அறியவேண்டுவன யாவுங் குறைவில்லாமலறிந்தவெனக்கு ஐயமொன்றிருக்கின்றது;அதனிச்சயத்தை யனுக்கிரகிப்பாயென்று சொல்லி.†—

உ0. தேவநிச்சயம்விசாரிக்க வசிஷ்டசுயஞ்சித்தேயெனப்போதித்தல். துன்பங்களனைத்தையுங்கெடுத்து சுகங்களியாவையுங் கொடுக்கின்றதேத்வாராதனையாவதென்னவென்று கேட்கவும், அனுக்கிரகிப்பார். தேவானது எதுவென்றுகேட்கில், தனிமையான விஷ்ணுவுமல்ல, சிவனுமல்ல, ஐம்பூதவடிவத்தாலானசரீரங்களைப்பெற்றதுமல்ல, ஒழிகின்ற மனமல்லது, ஆதியுமந்தமுமில்லாதாகியும் சுயமாகியு

* இ-ம் உபாசனுமூர்த்தி ப்ரசன்னமாய்ச் சுவானுபவத்தை விளக்கும்பொருட்டிவ ரனுபவத்தை விஞவினதாம்.

† இ-ம் பரமசிவத்தைத்துதித்து ஓர் சங்கைவிஞவினதாம்

உக. இந்தஞான தேவையேயாராதிக்கவேண்டுமெனல்

மிருக்கின்ற ஞானமே தெய்வமாம்.— சரீரமாதியான பேதங்களாய் அற்பமாயிருக்கின்ற வஸ்துக்களில் அந்தத்தெய்வ முண்டாயிருக்குமா,ஓரளவறவும் செய்கையறவும் ஆதியந்தமுமற்றிருக்கின்ற ஞானமே பிரமஞானமாதலினால் அந்தஞானமே தெய்வமாகும், ஆராதனைசெய்வதற் குரியதாகும். ஞானமில்லாத மூடர்களுக்கு வடிவங்கண்முதலிய வாராதனையே

உஉ. மற்றவிக்கிரகவாராதனை கூடாதெனல்.

ஒழுங்கென்று சொல்லுவார்கள்.— செல்லுகின்றமார்ககம பதின்கடிகை வழிநடக்குஞ் சத்தியில்லாதவர்கள், கூக்கேட்குந் தூரமபோகும விதத்தைப்போல ஞானமில்லாதவர்கள நாநாவிதவடிவங்களில் ஆராதிப்பார்கள். ஞான நிச்சயத்தைப் பெறுர்களென்று சத்துக்கள் சொல்லுவார்கள். ஆதியந்தமில்லாத ஞானுகாயமே எந்தவிடங்களிலும் நிறைந்திருக்கும், வலிதான பழமையாகிய கற்பங்களியாவிலும் கெடாத

உங. ஞானதேவார்ச்சனைக்கிச்சாந்தியாதிபுட்ட மேபுட்டமாமெனல்.

வதனுல் அந்த ஞானமே தெய்வமாகும்.— ஞானமும் சமபாவனையும் சந்தோடமென்கின்ற புட்பங்களினுல் அந்தஞான தெய்வமான நீங்குதற்கரி யவாத்மஞானத்தை ஆராதனைசெய்வதே மகாபூசையாம்; குறித்தவுருவங்களில் ஆராதிப்பது ஆராதனையல்ல. அகண்டமென்று சொல்லப்பட்ட ஞானசுகமானது, மார்க்கமாகக்கொண்ட வேறு சாதனங்களினுற் கிடையாது இவ்விடத்தில்அந்தஞானுர்ச்சனையினுல் ஆநந்தமானது

உச. சத்தாய் விளங்கிய ஞானமே தேவெனல்.

பூரணமாம்.—தெளிவுள்ள ஞானமானது, சகல சாஸ்திரங்களுக்கும் எட்டாததாம். சகல கருத்திலும் அடைநதுளளிருக்கும் சத்தசத்தினிரண்டின் மத்தியில் சத்தாசாமானியமே ஸ்வரூபமாயிருக்கும்; நீக்குதற்கரிய மகா சத்தாமாத்திரம்மே ஸ்வரூபமாகும்; தெய்வமு மிதுவேயாகும். நிந்திக்கப்படாத விந்த ஞானமானது விகற்பரூபமானுல் ஞானஸ்வரூபத்னதக்

உரு. இதன் விஸ்மரணமேகற்பனுரூபமாகியசகத்தமுதலி யாவுமாமெனல்.

கைவிட்டு வேறுகும.‡— மூடபாவத்தை சித்தானது கிரமமாகப் பாவனைசெய்யசங்கற்பநிலையை யடையும்; பினபு தேசத்தோடும் காலமுதலாகிய சத்திகளினது ப்ரகாசஞ்சூழ்ந்துஅடையப்பட்டு அறியாமைபொருந்திய சீவனுகும்; புத்தியாகும்; அகங்காரமாகும்; மனமாகும்.இபபடிசஞ்சரிக்கினற மனத்தின் றன்மையைச் சேர்ந்து சநநமரணங்க ளனைத்தையு மிச்சித்துப்பிடிக்

உசு. சங்கற்பாதிதமான சைதன்யமேநித்தியாநந்தமாமெனல்.

கும்.—சரீரத்தில் அடைந்தோமென்று நினைத்தலால் மாமோக மென்கின்ற சேற்றிலழுந்தும்; மிகுந்த துன்பத்தினுல் துன்பத்தையடைய கீழுக்குக் கீழே துக்கமானது நீளும்; சங்கற்ப முள்ளமட்டும் துயரையடை

‡ இ-ம் ஞானதேவனையு மதையர்ச்சிக்கு முறைமையுந்தெரிவித்ததாம்.

யும்;சங்கற்பநீங்கியவளவில்இவ்விடத்திற் பொருந்திய துக்கங்கெடும். சங்கற்பமேதுயரமாகும், அச்சங்கற்ப

**௨௭. சங்கற்பத்தைக்கெடுத்துச்சகசாநந்தாம் பதியின் வாழ்வாயெனல்.**

மில்லாதிருக்கில் பிரமாநந்தமாம்.— தனது விவேகமென்கின்ற சண்டமாருதத்தினால்சங்கற்பமென்கின்ற மேகத்தைப்போக்கி நிலைபெற்ற சரற்காலத்தாகாயத்தைப் போல நிருமலத்தைப் பொருந்திருக்கும்; உனது சங்கற்பமென்கின்ற களங்கத்தை களங்கமற்ற உனது முயற்சியினால் நினக்கு நிவர்த்திசெய்து மிகுந்த தெளிவையடைந்து பிரமாநந்த சாகரத்தில்

**௨௮. இத்தேவாகியசத்திமானுக்குச்சத்தியளவின்றெனல்.**

மூழ்கி வாழக்கடவாய்.*— ஆத்மதத்துவமானது, எல்லாச் சத்தியையு முடையதாம்; அச்சத்திகள் நடனங்களினால் உண்டாகாநின்ற பந்தமும் மோக்ஷமுமாகிய சகலத்தையுஞ் செய்யும்; சமமாகியும் பரிசுத்தஞானமாகியும், விகற்பவடிவங்களனைத்தையுஞ் செய்கின்றதாயு மிருக்கின்ற இந்த வாத்மாவுக்கு, இச்சாசத்தியும், வியாம சத்தியும், காலசத்தியும், நியதிசத்தியும், மகாசத்தியும்,— ஞான சத்தியும்,

**௨௯ இதுவுமது**

கிரியாசத்தியும், தொழிலைச் செய்கின்ற சத்துருசத்தியும், தொழிலைச் செய்யாத வகாதத்துருசத்தியும், இடமான சத்திகளுமாகிய இவைகண முதலிய பிரமசத்திகளுக் களவில்லை. அஞ்ஞானமாகிய உல்லாச சத்தி பிறப்பிறப்புகளைக் கொடுக்கும்; சகமுழுதும் விசாலமாகிய நிரோதமென்கின்ற சத்தியினால், சநநமரணங்கள் நீங்கும்.¶— சகலமாகிய வாராதனைகளிலும்

**௩௦. தேகோகநீங்கிச் சித்தோகமாயினதன்சுயம்ப்ரகாசந்தெரியுமெனல்.**

பாவனையைத்தகித்தலை நின்மல பூசையாகும்; வினைவடிவமான சரீரத்தை யானென்கின்றதை நீக்குதலே மேலான வாராதனையாம்; இப்படிப்பட்ட தியானத்தினு லாராதிக்கக்கடவன். ஞானஸ்வரூபமாய் இலட்சஞ்சூரியன் றிணையளவாமென்றுகூற ப்ரகாயங்களுக்கெல்லாம் ப்ரகாசமாம்; அகத்திலிருக்கு ஞானப்ரகாசத்தை யானென்று சேரக்கடவது.— மேலான

**௩௧. இந்தஞானதேவதைதப்புருடனாகச்சிரப்பித்துக்கூறல்.**

வாகாயமே எழுச்சியாய் மிகவும் பருத்தகந்தரமாம்; அதற்குக்கீழான அளவிறந்த வாகாயமேசொன்னமயமான பாதபதுமம்; அளவற்றதிசைகள் நீளமாய்உயர்ந்த புசங்களாகும்; நாநாவிதமான சகங்களே படைகளாகும்.—

**௩௨. இதுவுமது.**

அளவிறந்த கோடி பிரமாண்டங்கள் இதயகமலத் தொருபக்கத்தில் விஸ்ராந்தி யடையும்; அந்த வஸ்துவே அழகிய ப்ரகாசத்தையுடைய பராகாயத்தின் ஆதியந்தமில்லாத வடிவமிதுவாகும்;

---

* இ-ம் இச்சிற்சரீரத்திரில் யாவுமுதித்தொடங்குமென்பதாம்

¶ இ-ம் ஆத்மஆபரணம் வேருகவிளங்கிற் கற்பனையாகவும் தானாகவிளங்கில் இதார்த்தமாகவும் விளங்குமென்பதாம்.

விட்டுணுவும், அயனும், உருத்திரனும், தேவேந்திரனும் முதலாகிய தேவர்கள், இவ்விறைவனது ஸ்வரூபத்தில் இந்தச் சகலவுயிர்களும் மயிர்ப்பந்திகளாம்.†—நாநாவிதமான துவக்கங்களைச் செய்வனவாகியும், சகமாகிய எந்திரத்துக்கு வினை சூத்திரமாகியுமிருக்கின்றஒழியாதஇச்சைமுதலாகிய அநேக சத்திகள் அவனதுசரீரத்திற் றங்கியிருக்கும். ப்ரகாசியாநின்ற இவனே மேலான தெய்வமென்று உணர்ந்த ஞானவான்களால் பூசிக்கப்படுவன்; செம்மையான ஞானமாத்திரமானவன், அனுபவமாய் விளங்காநின்ற வாத்மஸ்வரூபன்— எவ்விடத்திலும் வசிப்பவன், யாவராலும அடையப்படுவன். அளவில்லாது தங்காநின்ற பதவிகளுக்கு இடமாகவுடையவன், சத்துமாத்திரமே சரீரமானவன், உலகக்கூட்டங்களை ஒழுங்காக நடத்துகின்ற காலதத்துவத்தை மேலான துவாரபாலகனாக உடையவன், பரிசுத்தமான சுயம்ப்ரகாசம்.— கண்ணும், நாசியும், காதும், சருமமும், நாக்கும், மனமுமாகிய சத்திகளினால் இயல்பாக எவ்விடத்திலுமுள்ள விடய வஸ்துக்களைப் புசித்து, சங்கற்பங்க ளனைத்தினுக்கும் அதீதமான எங்கும் பரமேஸ்வரனே யென்று உளத்திற் சிந்தித்து, மேலான தேவதையை விதிமார்க்கத்தின்படியே உயர்வான வாராதனையை செய்யவேண்டும்.— தனதாத்மஞானஸ்வரூபமாகி விளங்காநின்ற தேவாராதனைக்கு நிலைபெற்ற வுபசாரங்களனைத்தும் முறைமையல்லவாம்; எப்போதும் துன்பமில்லாமல் மகிழ்ந்துகேடில்லாமல் ஒன்றாகி அமுதமாகி நிறைந்த தனது ஞானத்தினால் சுத்தமானவாராதனையைச் செய்யவேண்டும்.—நீங்காமல் அகத்திற் சுத்தவறிவாகிய ஞானமெதுவோ அதுவே இழிவற்ற தியானமும், அதுவே சுபாவமாகிய வாராதனையுமாம். கண்ணும், தொக்கும், காதும், நாக்கும், நாசியுமாகிய ஐந்தினாலும், பஞ்சவிடயங்களைக் கிரகிக்குமிடத்தும், நித்திரைசெய்யுமிடத்தும், பேசுமிடத்திலும், நடக்குமிடத்திலும், சுவாசம் விடுமிடத்திலும், முழுதும் ஞானமாகவேண்டும்.— ப்ரகாசிக்கின்ற ஆத்ம தத்துவத்தினது, மேலான தியானத்தை பூசாதிரவியங்களுடன் செய்கின்ற வாராதனையாகும்; இம்மார்க்கத்தினாலல்லாமல் வேறொரு மார்க்கங்களினால் மகான்கள் துதிக்கின்ற வுண்மை ஞானங் கிடைக்கமாட்டாது. பூரணத்தியானமான ஆராதனையை, யாவரு நிந்திக்கப்பட்ட மூடர்கள் செய்தாலும்,

௫௩. சர்வதிமாத்திரத்திற்சகலத்தையுமசைப்பிக்கின்றசத்திமானே சத்தனாமெனல்.

௫௪. சத்தன்மகிமையைக்கூறல்.

௫௫. ஆறிந்திரியங்களாலனுபவித்துமனுடவியாதஞானமேபரமேசனென்றாராதித்தல்.

௫௬. தன்னைத்தானேயருச்சித்தல்.

௫௭. தன்னைத்தானே தியானித்தல்.

௫௮. ஞானதேவார்ச்சனையைச்சொல்லியதன்பயனையுரைத்தல்.

† இ-ம். ஞானாத்மாவின் வியாபகத்தைத் தெரிவித்ததாம்.

பதிமூன்று மாத்திரையில் கோதானபலனாகும்.—

௬௯. ஞானதேவார்ச்சனைவைச் சொல்லியதன் பயனையுரைத்தல்.

இயல்புள்ள ஆத்மதேவதையை நூறுநொடிநேரம் ஆராதிக்கில், ஆயிரமசுவமேதத்தினது பலனும். அரைநாழிகையாராதனைசெய்பவர்கள், இலட்சமசுவமேத ப்ரயோசனமடைவார்கள். இக்கிரமத்தினால் இலாபமிகுந்த வாராதனையை யொருநாழிகை நேரஞ் செய்தால், இராஜசூயயாகத்தின் பயனும்.—

௭௰. ஞானதேவார்ச்சனையைச் சொல்லியதன்பயனை யுரைத்தல்.

பாசமில்லாமல் ஆத்மஞானத்தை பதினைந்துநாழிகை ஆராதிக்கில், இலக்ஷ்மி ராஜசூயயாகத்துக் கொப்பாகும். இந்தப்ரகாரம் ஒருதின மாராதனை செய்யில், குற்றமற்ற பிரமப்ரகாசத்தில் பொருந்தலாகும் இதுவே குற்றமற்ற மேலானயோகமும் இதுவே மேலான கிரியையுமாம்.†-

௭௧. தீவினையெலாமறுத்தேனுங்கவிமுத லிவ்விருபத்தொரு கவிதை யினானுஞ் சர்வம் பிரமமயமென்னும் பரோக்ஷ சாக்ஷாத் காரமாகிய புறபபூசையைச்சொல்லி யிதற்குச்சாதனமாகியப்ரத்யேகாத்ம ஸ்வரூபமாகிய வகப்பூசையைப்போதிக் தொடங்கல்

ஞானதேவனது புறப்பூசையான திதுவேயாம்; அகப்பூசையை திடமாகக்கேட்பாய் சதாகாலமும் சரீரத்தில் வசிக்கின்ற இந்தத் தெய்வமான இந்தப் பரமசிவத்தை மரவாமல் வருபவனும், இருப்பவனும், நித்திரை செய்து எழுந்திருப்பவனும், குணமான செல்வவிடயங்களை அனுபவிப்பவனும், தள்ளுபவனுமாக தியானித்து,¶—

௭௨. நின்மலவறிவினாற் சுகபோகத்தையருச் சித்தல்.

பலவாகச்சேர்ந்தவஸ்துக்களிலடைந்து தனது தத்துவஞானமாகிய தகுந்த தீர்த்தஸ்நானத்தினால் களங்கமற்று தவறாத ஞானார்ச்சனையினால் மிகுந்த சுகஞானமான சிவலிங்கத்தை விரும்புகின்ற வாராதனையைச்செய்யவேண்டும்; ப்ரகிருதியில்லாதஇந்தஞானமானதுகூடாதிருக்குமிடமுண்டோ.-

௭௩. அகத்திற் குரிக்கின்றலக்ஷியங்களை வியாபித்து நிற்றலெனல்.

ஞானதெய்வமானது மனத்திலும், சிந்திப்பிலும், பிராணாபானமத்தியிலும், இருதயத்திலும், கண்டமத்தியிலும், நாவின்மத்தியிலும், புருவமத்தியிலும், நாசிகாந்தத்திலும், முப்பத்தாறாகப் பொருந்திய பதத்திலும், மனதின்றிரிபுநீங்கின உள்ளத்தினிறைந்திருக்கும்.—

௭௪. மனமுதலியாவுமபினசத்தியாயுள்ளசத்தனை யாராதித்தல்.

எனது சரீரத்தில் ஞானப்ரகாசமாய் விளங்காநின்ற தெய்வத்தை, நானென்று சிந்திக்கின்ற மனமும், விழியும், வாக்கேந்திரியங்களுமாகியசத்திக்கூட்டங்களனைத்தும் பிரிவில்லாமல், புருடனை விட்டு நீங்காத குலஸ்திரீகளைப்போல, எப்போதும் ஆத்மாவை நெருங்கியிருக்குமென்று சதாகாலமும் தொடரும் பாவனையைச் செய்யவேண்டும்.—

௭௫. சித்தமுதலியயாவும பரிசாரக

திரிலோகங்களையும் அறிவிக்குமனமானது, என்னுடைய வொப்

† இம். ஞானார்ச்சனையின் கிரமமப்பூசையின் பயனளவையு முரைத்ததாம்.

¶, இ-ம் அகப்பூசை சமாதிஞானமும்புறப்பூசை சாக்ஷாத்காரஞானமுமாமென்பதாம்

ரெனல்............ பற்ற துவாரபாலகனும்; என்றனக்குரி நல்லசிந்தை யானது உள்வாசலிற் பொருந்திய பரிசாரகனும்; விருத்தி ஞானங்களானவை முடிவான தேகத்துக் காபரணங்களாம்; ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்தும் வாசல்களாம். என்கின்ற பாவனை யொழியா மல்,— அவ்வண்ணமான இந்தப்ரத்யக்ஷஞானமே

சசு. தன்னைச் சித்தாகவே யாராதித்தல்

தற்பதஞானமாகிய ஆத்மாவான யான் முடிவாகாமலும், பிரிவில்லாமல் தவறுமல் சகலத்தையுந் தரித்தும் ஏகமாயும், பூரணமாய் சகலத்தையும், பூரணமாக்கி எந்தவிடத்திலும் ஒப்பற்ற சமத்துவமாகி இயல்பான வாசாரமும், இயல்பானப்ரகாசத்தைக் கொண்டு சமானமில்லாததா யிருக்கின்ற ஞானமா யிருந்தேன், நீங்கேனென்று ஆராதிக்கக்கடவது—

சஎ ப்ரத்யோகாத்மாவை யாராதித்தல்

நின்மலமான இவ் வாராதனையினுல் மிகுந்ததெளிவை அடையலாம்; சமத்துவமாய் யாவுமாயிருக்கின்ற விசாலமானவறிவினுல்சரீரஞானம்சுமையென்றறிந்து இதற் கதீதமாகிய ஞானத்தை அடைந்தவொருதிரவியத்தினுல் நின்மலமானவர்கள். எப்பொழுதும் விட்டு நீங்காமல் ஆராதிக்கவேண்டுமென்று சத்துக்கள்

சஅ தேகங்களங்களுக்கு முள்ளான சித்தையாராதித்தல்

சொல்லுவார்கள்.— கிடையாத வொருவஸ்துவை பெறவேண்டுமென்று இதற்காக விதனப்படாமலும், ஆசைமார்க்கத்திறுற் றட்டுப்படாமலும், ஞானத்தினுலாராதித்தல் ஒழுக்கமாகும். அன்னபானத்தினுலும், தடையின்றி மேலாயிருக்கின்ற சம்பத்தினுலும், சயனத்தினுலும், ஆசனத்தினுலும், வாகனங்களினுலும், சுகங்க ளியாவையினுலும், ஆத்மசுகத்தையுணர்ந்து

சகூ இதுவுமது.

வாராதனையைச் செய்யக்கடவது.— மனோவியாதியினுலுந் தேகவியாதியினுலும், மோகாரம்பத்தினுலும், சகல துன்பங்களினுலும், நீதியைச் செலுத்துகின்ற விராச்சியபாரத்தினுலும், மிகுந்த தாரித்திரியத்தினுலும், அதிசயமான குற்றமற்ற கிருத்தியங்களான புட்பங்களினுல் ஞானத்தைத்தரிசித்து ஆராதனை செய்ய, குற்றமற்ற போகத்தை கொள்ளுதலாலும், குற்றமுள்ள போகத்தை மாற்றுதலாலும், ஆராதனை

ருO யாவையுமுணர்வாகப்பூசித்தல்

செய்ய,—அபேதபாவனையினுல் கிடைத்தவஸ்துவை இனிமையாகப்புசித்துநீங்கி மரித்த பதார்த்தத்தைப் பொருந்தாமையே ஞானர்ச்சனையாம். பயப்படுகின்ற துக்கசுகமுதலிய சகலத்தையும் ஞானஸ்வரூபமாய் முடிவின்றிய ஞானதேவாராதனையைதவிராதவர்கள்

ருக இதுவுமது

சிந்திக்கவேண்டும்.— எப்போதும் சகலவுருவங்களினுலும், சகலவிடங்களினுலும், எல்லாம் பிரமமே யென்று தெளிந்து ஆராதனைசெய்ய வேண்டும்;

அல்லவென்று வெறுக்காமலும் ஆமென்று விரும்பாமலும் கிடைத்த போகங்க ளனைத்தும் ஞானிகளுக்குப் பொருந்திய சுபாவத்தினால், கடலுக்கு ஆற்றின் கூட்டங்களைப் போல அனுபவித்தற்குரியதாகும்.— இழிவு முயர்வுமாகிய பார்வைகளை

௩௨. பூசாதிரவிய மீதெனல்.

திரிட்டால் சற்றும்பிடியாமல் தேசமுங்காலமுந் தொழில்களுமாகிய விவைகளுக்கு உரியதாய் சுகதுக்கங்களை குற்றம்பொருந்திய வேற்றுமை கெட கைக்கொண்டு ஆராதிக்கவேண்டும். சொல்லப்பட்ட தேவபூசாவிதியில் மகத்தான விவைகளே நல்ல பூசாதிரவியமாம்.— இப்படிப்பட்ட திரவியங்களியாவும் இனி

௩௩. திரவியவியல்பைக் கூறுதல்.

மையாகிய ஒருசத்தியினாலும் நினைக்கின்ற பாவனையினால் புளிப்பும், உறைப்பும், கசப்பும், துவர்ப்புமாகிய எல்லாவற்றின் அதிசயமான அறுசுவையினால், அற்பமுமில்லாமல் நிறை தனவாகிய அச்சாந்தியென்கின்ற விரதத்தினால் அரியதவமுள்ளவரே மிகவும் பூரணமானது.— உரிமையான சாந்தியென்று சொ

௩௪. திரவியசுத்தி சொல்லுதல்.

ல்லப்பட்ட இரசசத்தியினால் பாவனைசெய்யில், தொகுத்த விடயங்களாய் பார்க்கின்ற சகலமும் இமைநேரத்தி லமுதமாய் பரிசுத்தமான சந்திரனது, சொரிந்தவமுத இரசத்தைப் போலவாம். மேலானசமமானது, சாந்தத்தினால் அறிவினாற் பாவனைசெய்ய, ஞானவஸ்துவாயிருந்தும் சிலையைப்போல விளங்கும்.—

௩௫. தெளிவாய்ப்பூசிக்கின் மாயை கெடுமெனல்.

தேயமுங் காலமுஞ் செயலுமாகிய இவ்வொழுங்கினால் அடைந்த வஸ்துக்களினது சுகதுக்கங்களின் மயக்கங்களை யெறிதலினால், தேகத்திலுள்ள தேவதையை ஆராதனைசெய்து இச்சைக ளனைத்தையும் அறிவில்லாம விருப்பாய். மேலான சுத்தமாயையானது, இழிவான அசுத்தமாயையைக்கெடுக்கும், மகா

௩௬. ஆசிரியருபதேசமே யறிவைக் கொடுக்குமெனல்.

கற்பமான விஷத்தையுங் கெடுக்கும்.— நினைத்து அழுக்கினால் அழுக்கைக் கெடுக்கின்ற வண்ணானைப் போல, அசுத்தமாயையை சுத்தமாயையினால் கெடுக்கவேண்டும். சுத்தமாயையானது, காரணப்பொருளல்லாத தானாலும், ஆசாரிய வசனத்தினால் சொல்லப்பட்ட வஸ்துவாய் காரணமாகப் பொருந்தும். அறிபவர்களுக்கு ஞானமாகிய தனதாத்மஸ்வரூபத்தை தவறுமற்கொடுக்கும்.— ஆசாரிய ரனுக்கிரகத்

௩௭. தனதறிவைத்தானே தரிசிக்க வேண்டுமெனல்.

தின் கிரமமானது, குறிப்பினாற் சீடனிடத்தில் வளர்வுற்று கலக்கு ானல் குருவினாற் காட்டற்கரியதாயினும், சீடனுக்கு ப்ரத்தியக்ஷமாயறிய வரிதானாலும், சுயமாகவே பிரமஸ்வரூபமானது ப்ரத்தியக்ஷமாகும் பலசாஸ்திரார்த்தங்களினாலும், ஆசாரிய வசனத்தினா

௫அ. தனதறிவினாற் கூடாவிடிற் சுருதிகுரு சுவானுபவத்தினாற் கூடுமெனல்.

லும், பெறுதற்கரிய தனது ஞானத்தினாற்றானே யுணர்ந்து அடையவேண்டும்.— ஆசாரியர் வசனத்தினாலும், சாஸ்திரார்த்தங்களினாலும், அல்லாமற் பெறுதற்கும் அரியதாம். ஆசாரியரும், ஞானசாஸ்திரமும் சீடனும் விசேடமா யிந்த மூன்றுபேர்களுஞ் சேரில், பாசத்துக்கதீதமான பிரமமடையும். பலகால நீங்காத விச்சங்கமானது பகற்காலம் சகலகிரியைகளையுங்கொடுப்பதுபோல குற்றமற்ற ஞானத்தைக் கொடுக்கும்.†— சொல்லிய மார்க்கத்தினால் ஞானவான்கள் நாடோறும் தேவாராதனை செய்யில், நான் முதலான அடியார்களாற் றோத்திரஞ் செய்யும்படி மேலாயிருக்கின்ற பிரமபதத்தை யடைவார்கள்.

௫௯. இத்தேவாராதனையினாற் சகத்தோற்ற நீங்கிச் சாக்ஷாத்காரமாமெனல்.

வுலகமானது, இல்லாமலிருந்தும், உள்ளதுபோலத் தோற்றும். அரியதவசிற்சிறந்த வசிட்டனே? ப்ரதிபாமாத்திரமேயன்றி வேறேயில்லை.‡—முன் பிரமனாதியானவர்களாலுண்டாகிய வசனங்களனைத்துக்கும் தெரிகின்ற தெந்தப்பொருளோ அதுவே ஞானமென்று நினைப்பாய்

௬0. சித்தின் சந்நிதியி லுண்டான திருஷ்டியைச் சிலேடையாகக் கூறல்.

அகோசரமான வச்சைதன்னியமானது தோன்றி இரண்டாகவறிகின்றதிரிஸ்யத்தைப்போலாகி தொடரும் பரியாயநாமங்களுக்கு முரியதாய் மனப்பாவனையினால் அகம்பாவத்தையும் பின்றொடரும்.—

௬௧. இதுவுமது.

இவ்வகம்பாவத்துக்கு தேச பாவனையாகியுங் கால பாவனையாகியும், சாராநின்ற தோழிக் கூட்டங்களாகிய சத்திக்கூட்டங்களுண்டாம் இவைகள் சூழ்ந்த சற்பாவமானது. விளங்குஞ் சிவநாமமடைந்து, அப்போதே மிகுந்த புத்தியென்று சொல்லப்பட்டதாய் தீமையினையுடைய மூடர்களிடத்தில் வசிக்கும்:—

௬௨. இதுவுமது.

சத்தமுங்கிரியையும் ஞானமுமென்கின்ற சத்திக் கூட்டங்களோடுஞ் சேர்ந்த கூட்டமானது, ஒருநொடியில் நினைவையுண்டாக்கும்; சங்கற்பமென்னும் விருக்ஷத்தினது, விதையாமென்று சொல்லும்படி மனமுண்டாகும்; கொத்தாகிய புரியட்டகசரீரமாம்; வசனத்துக்கு அதுவே யிடமென்றுசொல்லுவார்கள்.-

௬௩. இதுவுமது

அந்தமனத்துக்கு மேலான வாத்மாவினால் உருவமாகிய சத்திகளை யமைத்தல், இவ்வளவென்பதற்கரியதாகும்.. இதுவே ஆகாயமுதலாகிய வுருவங்களை யடைந்து ப்ரகிருதி முதலான தத்துவங்களை யுண்டாக்கும்: நினைக்கின்ற சூனியத்திற் பேய்களுண்டாவதுபோல அதில் மனோவாசனை

---

† இ-ம். ப்ரத்யேகாத்மாவாகிய தேவையுமஃதைத் திரவியங்களோடு மாராதிக்குந் தன்மையு மஃதுப்ரசன்னமாதற் கேதுவையுங் கிரமமாக வறிவித்ததாம்.

‡ இ-ம். அகப்பூசை புறப்பூசையினாற் போதாநந்த புத்தேளைப் போதித்ததாம்.

சுச. அபக்குவிக்குடதேசிக்கக்கூடாதெனல்.

யுண்டாகும்.○— உலகநாமத்தைப் பெற்றிருக்கின்ற இந்த வாதனையானது, கெடுமாயின் கெடாத வுபசாந்தமாம். அகப்பாகத்திலும், இவ்வுலகத்திலும், கானற்சனத்திலும், உயர்வான நிச்சயமுள்ளையவர்கள் உபதேசிக்கத் தகாதவர்கள். அவர்களை உண்மையை யறிந்தசத்துக்கள் மிகப்பாவிகளாமென்றுநிந்திப்பார்கள்;*— பிரமத்தையறிந்த விவேகத்தை யுடையவர்களுக்கு, பிரமவுபதேசஞ் செய்வார்கள்; பிரமின்றிப் பிரமையிலிறங்கினவர்களுக்கு, உபதேசிக்க நினையார்கள். சொன்னாலது கனவிறகண்ட புருடனை சாக்கிரத்திலுள்ள குமரிக்கு கொழுநனுகச்செய்கின்ற தன்மைக்குச் சமானமாம். தவத்தையுடையவசிட்டமுனியே? நீர்கேட்ட வினாவுக்கு தத்துவத்தைச்சொன்னேம்‡— நினக்கு என்னிடத்தில் அன்புண்டாகக்கடவது, யாம் போவோமென்று பார்வதியும் பரமசிவனும், பரிசனங்கள்பக்கத்திற் சூழ்ந்துவர ஆகாயத்திற்சென்றார். குளிர்ச்சியுள்ள நல்ல புட்பாஞ்சலியை வருஷித்துவணங்கினேன்; அன்றுமுதலாகஅத்துக்க நிவிர்த்தியையுடைய தடையற்றவானந்தமுண்டாகும் வழியினால், உண்மைஞானத்தை தொடர்ச்சியுடன் ஆராதிக்கின்றேன்.†— இப்போதும், எப்போதும், தவறுமற்செய்கின்ற ஆராதனைக்கிரமத்தினால்வாசனைகள் பாரமில்லாமல் தாங்குகின்றேன்; அப்பொழுது கிடைத்த கிரிகைகளுடன் ஒழுக்கங்களே புட்பங்களாக இருக்கின்றதேவார்ச்சனையில்குறைவையுநிறைவையும், இராவிலும், பகலிலும், பார்க்கிலன்.— ஞாதாவும் திரிஸ்யமுஞ்சேர்தல் ஆத்மாக்கனைத்திற்கும் சமமாகும். அச்சங்கத்தில் ஞானயோகிகளுக்கு கிரிகித்தலாவது அவ்விடத்திலுள்ள தெதுவோ அதுவேயாம்; அதுவே மேலான ஞானத்மாவுக்கு ஆராதனையாகும்; தெளிகிறன் இந்த திருஷ்டியினால் விடயசங்கஞ்சேராத மனதினு லுலகத்தின்கண் ஸ்ரீராமா? நீவசிப்பாய்.¶— இவ்வண்ணம் சகமென்கின்ற மகாரணியத்தைபடைந்து துன்புறுதேயென்று சொல்லவும், இராமரானவர் சொல்லுவார். சந்தேகங்களைத்

சுரு. பக்குவிக்குபதேசிக்கவேண்டுமெனல்.

சுசு. சுவாமியெழுந்தருளுதல்.

சுஎ. ஞானபூசையாலுள்ள வனுபவங்கூறல்.

சுஅ. தன தனுபவப்படி இராமனுக்காம்பொருட்டுபதேசித்தல்.

சுகூ. இராமன்றன தனுபவமுரைத்தல்.

○ இ-ம். சித்தினகம்பாவமுதற் றிரிஸ்யவாசனைபரியந்தந் தோக்றுமென்பதாம்.
* இ-ம். சகநிச்சய புத்தியுள்ளவனுக் கிவ்வனுபவஞ் சொல்லுத விழிவென்பதாம்.
‡ இ-ம். சர்வம் பிரமமயமென் றுபதேசிக்கத்தக்க சீடனையுரைத்ததாம்.
† இ-ம். தயதாசாரிய ருபதேசப்படி போதவிலிங்கத்தை யாராதிக்கின்றேனென்பதாம்.
¶ இ-ம். தனது சுவானுபவத்தைக்கூறி நீயு மப்படியேபூசித்து விளங்குவாயென்பதாம்.

தை நீக்கினேன்; மிகவுந் தவறாமல் அறியவேண்டின யாவும் தெரிந்துகொண்டேன்; சலனமில்லாம லுமது கிருபையைப்பெற்றேன்; தும்பிக்கையுள்ளயானையை யொத்த இச்சையைக் கெடுத்தேன்; ஒன்றிலுஞ் சலனமில்லாதவனானேன்.— பவசாகரத்தின் கரையாகிய முத்தியையடைந்து கற்பனைகளனைத்தையும் நீக்கி வருத்தமற்று மிகவுமுறுதியாகத் தெளிந்து பிரமாநந்தத்தைப் பொருந்த அகமகிழ்ந்து மனமானது சுகமானதென்று தத்துவஞான வலிமையுள்ள அற்புதனாகிய வசிட்டமுனியோடுசொல்லி இன்னமுஞ் சொல்லத்தொடங்கினார்‡—

௭௦. இராமன் றனதனுபவ முரைத்தல்.

தேவபூசைகதை

முற்றிற்று.

# வில்வபலக்கதை.

## அவதாரிகை.

முற்கதையில் அபரோக்ஷஞானார்ச்சனையினாற் சர்வம் பிரமமயமென்னுநிருவாணசுகஞ்சொல்லி, அதன்வியாபகமே சர்வமுமாமென்பதை யறிவிக்கு நிமித்தம் வில்வபலக்கதையை நிரூபிக்கிறார்.

௧. இந்த ஞான தேவை யாராதிப்பதற்கிச்சை தடையாதலா லஃதை நீக்குதற் பொருட்டத னியல்பைக் கூறுதல்.

௨. இதுவுமது.

௩. வாசனை யற்ற மனதினாற் செய்யுங் கிரியை துன்பமாகா தெனல்.

உமது வசனமாகிய வமுதவருடமானது, பூரணமாகியும் உள்ளே போதுமென்கின்ற திருப்திபிறக்கவில்லை, இன்னமும் பூரணஞானத்தைச் சொல்லுவாயென்று இராகவன்கேட்க, நிலைபெற்ற மகானானவசிட்டமுனிசொல்லுவார். வஸ்துக்கள் முந்தினக்ஷணத்தில் இனிமையாம், மறுக்ஷணத்தில் அவ்வாறு இன்பமாக மாட்டாது,— இதை யனுபவியாதவர்கள் யாவர். பொருளானது, ஆசைபட வின்பமாகும்; இச்சியாத போது கசப்பாகும். ஆகையினால், ஆசையானது இன்பத்துக்குக் காரணமாகும். அந்தவினிமையும் போதுமென்று திருப்திபிறக்க நீங்கும்; ஆசையை நீக்கினால் சகலமுநீங்கும்.*— பலவிதமான விச்சைகளொழியக்கடவது, பாவனைகெடக்கடவது, மனமில்லாததாய்த் தவிரக்கடவது, நிற்சங்கமானவனே? நினக்குச்சொல்லுவோம்; அற்பமாகிய வாதனையையடை

‡ இ-ம். துக்கநிவிர்த்தியாய்த் தடையற்ற பிரமாநந்தாமுதமா யுள்ளம் விஸ்ராந்தி யடைந்ததாம்.

* இ-ம். இச்சாத்யாக வுத்தியைக் கூறினதாம்.

யாத அந்தக்கரணத்தினுல் செய்யுந் தொழில்களில், வலிமையினுல் கலக்கங்க ளநேகம்வந்தாலும் துன்பஞ் செய்யாது.—மனமானது, விழிப்பிலு மிமைப்பிலும் உலகத்தையுண்டாக்கிக் கெடுக்கும்; வாசனையைக் கெடுத்தாவது பிராணபந்தத்தினுலாவது மனதைக் கெடுப்பாய். இழிவாயிருக்கின்ற வறியாமையினது உண்டாதலு மொடுங்குதலுமாம்; உபாயத்தினுலும் சுழிக்கப்பட்ட கன்மங்க ளனைத்தும் உண்டாகும் அழியும்.—ஆதலினுல், ஆசாரியரும் ஞானசாஸ்திரங்களுமாகிய நீங்காத சங்கத்தினுலும், அதன் பலத்தினுலும் அஞ்ஞானத்தையுடைய மனதைக் கெடுப்பாய். பிராணபந்தனம் பண்ணினுலும், அறிவின் சலனந் திரும்படி விட்டாலும், மனமானது கெடும். அந்த மனோநாசமே மேலாயிருக்கின்ற பரமபதமென்றுசத்துக்கள் சொல்லுவார்கள்.— திரிஸ்யமும், காட்சியும் கூடிய கூட்டத்தில் இவ்விரண்டு, நீங்கி யுண்டானவானந்தமே வியாபித்திருக்கின்ற பரமார்த்தமாகும்; அதற்குமேலாக இனி வேறே வஸ்துவில்லை; பிரம திருஷ்டியினுல் மனதுகெடும், ஒழுங்காகிய [மனோ நாசமானது பேரானந்தமாம்.— அவ்வானந்தந் தேய்தலும் வளர்தலுமில்லையாம்; தோன்றுது மறையாது; ஆராய்ந்தறிந்த ஞானவான்கள் மனதுமனமல்ல, அதன் பேர் தத்துவமாம்; நாநாவிதமான பொருள்களால் வேறுபாடடைகின்றதே மனமாகும், செம்பு சொன்னமாவதுபோல் பொருந்திய ஞானத்தினுல் நின்மலமாம்.— ஞானமென்கின்ற வுண்மையானது, மனமாகி உலகத்திலொருதரம் தொந்தித்தவிளையாடல் செய்து துரியாவவத்தையைப் பொருந்தி நித்தியமான துரியாதீதவுண்மையாகும். ஆகையினுல், பிரமமானது, ஏகமாகியும் மயக்கமுள்ள சகமாய் அநேகமாகியு மிருக்கும்.†— எல்லாமான பிரமமேயல்லாமல் மொய்த்திருக்கின்ற மனமுதலாகிய வேறுபாடா யிருந்தவைகள் அற்பமுமில்லை; மனதிலுண்டான ஒரு கற்பனையைப் போல எப்போதுந் தோற்றும், அதைச் சொல்லுகின்றேன் அறியக்கடவாய். கல்வியை யுடையவர்களதிசயிக்க நன்றுகியும் அற்பமாகியுமிருக்கின்ற ஓரிதிகாசத்தை ஸ்ரீராமா! நீ கேட்பாயாக.— கோடியும், மகாகோடியும் இலட்சங்கோடிகளு மென்னு மளவை கொண்டிருக்கின்ற காதங்கள் நீண்ட அகலத்துக்கொப்பாகாமற் பருத்தது, நீண்ட மகாகற்பம்வந் திறந்த

௪. வாசனு நாசந்தான் மனோநாசமாமெனல்.

௫. மன நசித்தவிடமே பரமபதமாமெனல்.

௬. பரம திருஷ்டியினுல் மனது நசிக்குமெனல்.

௭. ஞானத்தால் மனது பரிசுத்தமாமெனல்.

௮. சித்தேமனோரூபமா யதீதமாகுதல்.

௯. சர்வம் பிரமமயமென்பதைத் திருஷ்டாந்த ரூபமாக வறிவிக்கத் தொடங்கல்.

௧0. பிரமஸ்வரூபத்தை வில்வக்கனியாக வுருவகப்படுத்திக் கூறல்.

† இ-ம். மனதின்கண்ணுள்ள திரிஸ்யவாசனுரூபமான விச்சைநீங்கினு லம்மன முதலியயாவுஞ் சின்மாத்திரமாய் விளங்குமென்பதாம்.

சாலத்திலும் முதிராதது, அது புராதனமானாலும் பெருமையியைந்த மூன்றும் பிறையிலும் மிருதுவான தாம்.— கற்பாந்தரத்தி லடிக்கின்ற சண்டமாருதத்தினாலும், கலக்கப்படாத்ததாகியும், பிரமாண்டங்களுண்டாவதற்கு காரணமாகியு மிருக்கின்ற, ஒரு வில்வக்கனியுண்டு. சொல்லாற் குறிச்குமந்த வில்வக்கனியினிடத்தில் உதித்து நசிக்கின்ற பிரமாண்டங்களானவை கொஞ்சத்தி லெண்ணக்கூடாது.— எப்போதும் பருவமாகயிருந்தும் சற்றும் மூப்புவருத்தாது; இருந்தவநேக பலங்களினது சரீரமுழுதையும் பூரணமாகப் பெற்றிருப்பது, நிறைந்துவக்கினியிலுள்ள சதைக்குமட்டில்லை; நிறைந்த சதையென்றது ஞானவடிவத்தின் சுபாவமாகிய விளக்கமாம்,*— சஞ்சல வடிவமாயிருக்கின்றசிற்சத்தியென்னும் சமத்காரத்தினால் சமமான தன்னிடத்தில் சிருட்டிக்கு மறிவினேக்கானது வியாபித்தலைச் சொல்லுமிடத்து, இது மிஞ்சினவாகாயம்; இதுகாலத்தின் கலைகள், இது அழிவில்லாத நியதி, இது அசைகின்ற செய்கை,— இது பிரமாண்டமண்டபம்,இதுதிசைகளி னெழுங்கென்று சொல்லப்பட்ட பேதம் பொருந்திய வில்வபலத்திலுள் மச்சையானது ஸ்ரீராமா? பெருமையுள்ள சிற்சத்தி சமத்காரமாமென்று வசிட்டமுனி சொல்லவும் ஸ்ரீராமருஞ் சொல்லுவார். ஞானத்துக்கு முதன்மையானவரே? நீர் வில்வபலமாக சொன்னதறிந்தேன்.¶-

௧௧. பிரம ஸ்வரூபத்தை வில்வக் கனியாக வுருவகப் படுத்திக் கூறல்

௧௨ இதுவுமது,

௧௩. சிற்சத்தியின் விலாசத்தை மச்சையாக வுருவகப்படுத்திக்கூறல்

௧௪. இதுவுமது.

ஆசாரியரே? வில்வப்பழமென்று சொன்னது பூரணஞானத்தின் மேலான சற்பாவமே; அகம் பாவமுதலிய வஸ்துக்களியாவும் அந்த ஞானத்தினது லஜ்ஜையேயாம். துவிதமாகியும், ஏகமாகியும், தோற்றுகின்ற ஞானஸ்வரூபத்துக்கு திடமுள்ள வாசாரியரே? எப்போதும் பேதமில்லை.-

௧௫. பூசணிப்பழமுமதன் மச்சையும் பிரமாண்டமு மேருமுதலியவையு மென்றல்போலப் பிரமமுஞ் சகத்தும் பிரிவின்றி விளங்குமெனல்.

பிரமாண்டமென்கின்ற பூசணிப்பலத்திலுள் மச்சையானது மகாமேரு முதலிய சகலமுமானதுபோல மேலாயிருக்கும், ஞானமாகியவில்வபலத்திலுள் வியாபித்திருக்கின்ற தசையானது பிரமாண்டமுதலிய சகங்களனைத்துமென்று சொன்னர்.‡—

௧௬. இதுவுமது.

வில்வபலக்கதை
முற்றிற்று.

---

* இ-ம். பிரமசுபாவத்தை யறிவித்ததாம்.
¶ இ-ம். சிற்சத்தியின் வியாபகத்தைக் கூறியதாம்.
‡ இ-ம். பிரமசத்தியே யாவுமாய்விளங்குமென் றறிந்தேனென்பதாம்.

# சிலைக்கதை.

## அவதாரிகை.

முற்கதையில் சர்வம் பிரமவியாபகமென்பதை யறிவித்து, அஃது வேறுபோற் றோற்றினும், பிரமஸ்வரூபப்ரகாசமே யென்பதைத்திருஷ்டாந்தமா யறிவிக்குநிமித்தஞ் சிலைக்கதையை நிரூபிக்கிறார்.

க. சித்தைச் சிலையாகக் கூறல்.

திரும்பவு மொருகதையைப் பேரழகான ஸ்ரீராமா? நீ கேளென்று வசிட்டமுனியானவர் சொல்லுவார். பிரியாமல் நெருக்கமுற்று மிருதுவாகி விசாலங்கள் முடிவில்லாமல் விளங்காநின்ற வோர் மகாசிலை மாட்சிமைப்பட்டதாகவுண்டு; அச்சிலையினிடத்தில் விரிந்த தாமரைப்புட்பங்கள் விகசித்திருக்கின்ற தளவில்லை.—

உ. சிற்சுபாவமான சகத்தைச் சித்திரமாகக்கூறல்.

பத்திறங்கள் ஒன்றிலொன்று சேர்ந்தன, நெருக்கமுற்றன, நேரே சிலது தெரியாதன, சிலது தெரிந்தன, சிலது மேலேதாளாயின, சிலது கீழேதாளாயின, சிலது நிலையாயின, வேரில்லாத இதன் மத்தியெல்லாம் விளங்குகின்ற சங்கங்கள் அநேகந்திரளாயின, சக்கரங்களும் செய்த தாமரையைப்போலஅளவில்லாதாயின:—

௩. சிலையன்று சித்தேயெனல்.

என்று வசிட்டமுனி சொல்ல, சாலக்கிராமமென்கின்ற நாமத்தையுடைய ஸ்தானத்தில் நெடியமாலானவர் நிற்கப்பட்டமலையில் அப்படிப்பட்டதான ஒருயர்ந்த கல்லை பார்த்தேன் என்று சொன்ன ஸ்ரீராமனை முனியும்பார்த்து மலையானது நீ முன்புபார்த்ததன்று. பெரிதான வண்டத்தின் நிலைமைகளானவை அகத்தில் வாசஞ்செய்கின்ற சித்தையே கல்லென்று சொன்னேன்.—

௪. சித்துக்கும சகத்துக்கும்வேறுபாடின்மையைக் கூறல்.

அநேகமும், ஏகமும், உண்மையா யிருக்கின்ற வுலகங்கள், அகத்திற்றங்கிய ஞானமானது, மேலானசிலையாகும்; நன்றாய் நெருங்கிக்கெட்டியாய் ஏகமென்றுசொல்லிய ஞானகல்லினிடத்தில், சகக்கூட்டங்கள் ஆகாயத்தில் வசிக்கின்ற வாயுவைப்போல வாசஞ்செய்யும். பூமியும், ஆகாயமும், காற்றும், மலையும், திக்குமாகிய இவையாவுங்கூடியும் பெரிய கல்புரையுடைய தாகாது.—

௫. சித்திற் சகநிச்சலமாய் விளங்குமெனல்.

அழகானகல்லில், தாமரையும், சங்கமும், சக்கரமும், என்கின்றஇரேகைகள்பொருந்துகின்றது ஒப்பற்றசுழுத்தியவத்தையாகப் பொருந்தும் அதைப்போல குற்றமற்ற ஞானத்தின்கண் சகங்களியாவும் வேறுபாடில்லாமல் இருக்கும். எந்தவிடத்தில் எதெப்படியிருந்ததோ அந்தவிடத்தில் அப்படியேயிருக்குமென்று சத்துக்கள் சொல்லுவார்கள்.—

௬. சகத்து சிற்ப்ரகாசமாய் விளங்குமெனல்.

பலவிதமாகிய விரேகைகள் அகத்திற் பொருந்தினாலும் சிலையைப்போலநீங்காதவுலகங்களை அகத்திலடக்கியிருந்தாலும், பேதம்பொருந்தாமல் சித்தொன்றுமேயாம்.

காடாகவிரம்பிய தாமரைகளனைத்தும் வேறுபடாமல் கல்லாகவேயிருக்கும்; ஞாயத்தைப்போல பெருமை பொருந்திய ஞானஸ்வரூபத்தை வேறுபடாமல் சகமனைத்தும் அச் சித்துமயமாகும்.— பரந்த கல்லிற் பொறித்த தாமரைமுதலியவை உண்டாகி இறந்ததுண்டோ, ஞானத்தில் மூன்றுலகங்களும் அந்தப்ரகாரமேயாம். வில்வபலத்தில் நிறைந்த மச்சையினது கிரம முன்சொல்லியதுபோல அளவற்ற வேறுபாட்டினால் விரிந்த வண்டங்களானவை குற்றமற்ற சித்தினிடத்தில் நிறையும் வேற்றுமையென்று சொல்லக்கூடாது.— பிரமத்தினது சற்பாவமேரூபமாகியிருக்கின்ற பெரியசகத்தின் வேற்றுமையாவும் உண்மையாக சிலையினிடத்திலிருக்கின்ற பதுமங்கள்போல, சுழுத்தியாகியும், சாந்தமாகியும், சமத்துவமாகியும், ஞானமாகியுமிருக்கின்ற கைவசப்பட்ட தனதாத்மஸ்வரூபமாகிய இடமாகும். நிலையில்லாத சிருட்டிகளனைத்தும் ப்ரயோசன மில்லாததாம், வடிவங்களனைத்தையும் எப்போதுஞ் சேராதனவாம்.¶—

எ. சகமுற்பத்திலயமின்றி யெப்போதுஞ் சித்தில் விளங்குமெனல்.

அ. பிரமசத்தே ப்ரபஞ்சமாக விளங்குமெனல்

சிலைக்கதை

முற்றிற்று.

---

# அருச்சுனன்கதை.

## அவதாரிகை.

முற்கதையில் துவிதம்போலத் தோற்றுவதும், அத்துவிதாநந்தமாதலாற் சர்வம் பிரமமயமென்பதை ப்ரத்யக்ஷமாகத் தரிசிப்பித்து, இவ்வனுபவிக்கு யுத்தமுதலிய செய்கையும் வேறுபடாவென்பதைத் தெரிவிக்கு நிமித்தம் மேனடக்கு மருச்சுனன்கதையை நிரூபிக்கிறார்.

க. சர்வம் பிரமமயமாய் விளங்கப் புரியட்டக சரீரம் வந்த காரண மியாதெனில் அதற்குத் தரங் கூறல்.

இப்படியென்று வசிட்டமுனி சொல்லவும், தெரியவேண்டுவன யாவையும் தெரிந்துகொண்டேன், பார்க்கவேண்டுவன யாவையும் உமது கிருபையினால் பார்த்தேனென்றாலும், சுகபோதமானது வளரும்பொருட்டு திரும்பவுமொன்று கேட்கின்றேன்; நெருங்கிய சகத்தை அநேகந்தரமுண்டாக்குவதாய் கண்ணாடியிற் சாயைபோல தோற்றுகின்ற புரியட்டகசரீரத்தினது உருவமியாது சொல்லுமென்றுகேட்க, வசிட்டமுனி சொல்லுவார்.— ஆதியந்தமில்லாததாகியும், உலகங்களின் விதையாகியுமிருக்கின்ற பிரமமானது அடுத்தவண்ணம் வேறுபாடடையவும் சீவனாதும்;

உ. பிரமப் பிரகாசமான சீவஸ்புரணமே புரியட்டக

---

¶ இம் கல்லிற்றோற்றுகின்ற சித்திரங்களதற்கு வேறுபடாமலதுவாய் விளங்குதல்போல பிரமத்திற்றோற்றுகின்ற சகமதற்கு வேறுபடாமற் பிரமமாகவே விளங்குமென்பதாம்.

சரீரமாதல்.

யானென்று நினைவுவேற்றுமைப்பட்டு குற்றமுற வகங்காரமென்பதாம்; மனனஞ்செய்ய மனமாகும். அறிவானது அறிகின்ற நிச்சயத்தினால் புத்தியாகும்;

௩. இதுவுமது.

விடயங்களால் இந்திரியங்களாகும்.— சரீரமென்கின்ற வெண்ணத்தினால் சரீரமாகும்; கலசமென்னுங் கருத்தினால் கலசமேயாகும்; சுபாவத்தையுடைய விவ்வுருவத்தை ஸ்ரீராமா? புரியட்டகமாகுமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். பரிசுத்தமான ஞாதா, கருத்தா, போக்தா, சாட்சி என்று சொல்லுவது முதலியவற்றின் வேகமாகச்சென்று மேவிய நாமமுள்ள சீவனாகிய சித்தானதை புரியட்டகமென்று

௪. புரியட்டகத்தைச் சொல்லி யதன்விருத்திகண் முதலிய சகத்து மாத்ம ஸ்வரூபமாய் விளங்கு மென்பதை கீதாசாரத் தாற் போதிக்கத் தொடங்கல்.

௫. இதுவுமது.

சொல்லப்படும்.*- புதுமையாயிருக்கின்ற புரியட்டகத்தினுடைய வயத்தினால்செப்பனத்தின்மேற் சொப்பனம்பிடித்து, நாநாவிதமான மித்தியாகற்பனைகளைக் காணுகின்ற தன்மையைப்போல இவ்வுலகமும் விளங்கும். பூமியையளந்த கிருஷ்ணசுவாமியானவர் அனுக்கிரகிப்பதாகிய ஒருமார்க்கத்தைக் கேட்பாய்; அந்த மார்க்கத்தை விசயன்பிடித்து ஆதியந்தமில்லாத பிரமபதத்தில் சீவன்முத்தனாகி சுகசீவியாவன்.— பயப்படாமல் விசயனானவன், காலங்கழிப்பதைப்போல ஸ்ரீராமா? காலத்தைத்தள்ளுவாயென்று வசிட்டமுனி சொல்ல, பெருமானே? விசயனானவன், எப்பொழுது பிறப்பான்? அவ்வருச்சுனனுக்கு இலக்குமிநாயகனான கிருஷ்ணசுவாமியானவர் கிருபையினால் எப்படியுபதேசிப்பதென்று கேட்ட ஸ்ரீராமருக்கு, அரிகிருஷ்ணனாகி யெழுந்தருளி விசயனுக்கு இனியுபதேசிக்குமார்க்கத்தை வசிட்டமுனி சொல்லுவார்.¶— சதுர்யுக

௬. இயமன் றபஞ்செய்யுங்கால நிரூபணம்.

முடிவுகடோறும் சீவர்களியாவையும் கொன்ற தொழிலை யமனினைத்த தகுதியாகிய தவத்தைச்செய்வான்; ஒருகால மெட்டுவருடமும், ஒருகாலம் பத்துவருடமும், ஒருகாலம் பன்னிரண்டுவருடமும், ஒருகால மைந்துவருடமும், ஒருகாற்றிரும்பவேழுவருடமும், ஒருகாலம் பதினாறுவருடமும், இந்தப்பிரகாரம் பலகாலந்தெளிந்து தவஞ்செய்வன்.—

எ. அந்தந்தக் காலத்திற் பூபார நீக்குதல்.

இவ்வண்ணமே யமனானவன், தவத்தைத்தரித்து ஒருசீவனையுங் கொலைசெய்யாமல் இருந்தகாலத்தில் அநேக சீவர்களாலும் பேர்தலுக்கிடமல்லாமல் பழையசகமானது மிகவுநெருங்கியிருக்கும். ஆகையினால் அந்தநாநாவித

* இ-ம் சீவசைதன்யத்திலுதித்த வகங்காரம், மனது, புத்தி சத்தம், பரிசம்; ரூபம், ரசங் கெந்தமென்னு மெண்வகையும் புரியட்டக சரீரமாமென்பதாம்.

¶ இ-ம். சர்வம் பிரமமயமென்பதை யறிவிக்கத்தொடங்கினதாம்.

மான பலசீவர்கள், அளவிறந்தனவாயின, சகாய முடைய யுத்திகளினால் ஆதிமுதல் கண்ணன் பூமி பாரத்தை நீக்குவிக்கும்;— இந்தப்ரகாரமே நான்கு யுகமும் அநேக சீவர்களும், சகமுதலியயாவுமழிந்து போயின; அவ்வண்ண நீங்கினதோர் கணக்கில்லை. சூரியன்பெற்ற யமனானவன் அந்தப்ரகாரம் ஒழுங் காகவளர்ந்த பலசீவர்களையுங்கொலைசெய்து மறைந்த காலத்தில், பாவமற்ற பந்தத்தைக் கெடுக்கும் பொருட்டு துன்பமில்லாத தவசைத்தரித்து பன்னி ரண்டுவருடம் தனித்திருந்த காலத்தில்,— இறவாத பலசீவர்களினால் நெருங்கியிருக்கின்ற மிகுந்தபளுவை யாதினாலீங்குவோமென்று விஷ்ணுவை பூமிதேவி யபையமாகவடைவாள்; திருமாலானவர், இரண்டுருவ மாகபூமியி லவதாரஞ்செய்யும், அதில்வாசுதேவருக்கு புத்திரனானதொரு வடிவம்; பாண்டவனுக்கு புத்திர னான வடிவமென்று,— வாசுதேவனென்னு நாமத் தையும் விசயனென்னு நாமத்தையும் தரித்துவரு கின்ற வக்காலத்தில். மணம்வீசாநின்ற மாலையை யணிந்த திரிதராட்சதனுடைய புத்திரர்களான திரி யோதனாதியர்கள், பந்துசனங்களுடன் அருச்சுனன் மேல் குற்றமுள்ள யுத்தத்தைச்செய்ய வருபவர்களா கிய தனதுறவினர்களுடைய இறத்தலுக்கு அர்ச்சுன னைவ னிரக்கமுற்று சீக்கிரமாக வில்லைவளையாதவ னுவான்; அதுநிமித்தங் கிருஷ்ணரானவர் உபதேசிப் பார்.*— விசயனென்கின்ற நாமத்தையுடைய சரீ ரிக்கு, கிருஷ்ணனென்கின்ற ஞானசரீரியானது, சொல் லாநின்ற தத்துவத்தை நன்றாகக் கேட்பாய். அந்த மில்லாததாய் அதற்கரியதாய் ஆதியந்தமில்லாமல் இருக்கின்ற அவனது ஆத்மஸ்வரூபத்தை அருச்சுனா! சலனமின்றிப்பார். அப்போது ஞானஸ்வரூபமானது குற்றமற்றதாயிருக்கும், மாமிச சரீரத்திலொருகாலத் திலும் சனியாய், மரியாய், சத்தாகவேயிருப்பாய்.—

சநநமரணமில்லை இவனென்னும் படியான வுருவமில்லை, பின்புதித்தலில்லை, புராதனமாகி யும் நித்தியமாகியுமிருக்கின்ற நீகெடாநின்ற வுடலிலிருந்தும் கொஞ்சமுங் கெடாதுசெய்யுங் கிரிகைகளை நீ விடாமல் பலாபேட்சையைத் தள் ளிச்செய்வாய். நசியாத பிரமாற்பணமான வொழுங்கை யடைந்தால் க்ஷணத்திற் பிரமஸ்வ ரூபமாயிருப்பாய்.— ஈஸ்வரனிடத்தில் எந்த வஸ்து

அ. உயிர்களை யிமிசைசெய்தபாப நீங்கும் பொருட்டு இயமன்றவஞ்செய் தல்.

௯. இப்போ துள்ள பூபாரநீக் குதற் பொருட்டுத் திருமா லிருவடி வாக வவதரித்தல்.

௧0. தனக்குத் தானே யுபதேசித் தல்.

௧௧. சரீரத்தின் கண்ணுள்ள சரீ ரிக்குச் சநநமரண மின்றெனல்.

௧௨. ஆத்ம ஸ்வரூபத் தை நிரூபித் தலீ துதய மாம்பொருட்டுச் சங்கத் தியாகம் பிரமாற்பண மீஸ்வராற்பணஞ் சந்நி யாசம் யோகம் ஞான மென்னு மிவ்வாறையு நிரூபித்தல்.

௧௩. இதுவுமது.

*இ-ம். பூபாரந் தீர்க்குநிமித்தந் திருமாலவதாரஞ்செய் துபதேசிப்பதைத் தெரிவித்ததாம்.

வையுஞ் செலுத்தி‡ மேலான வீஸ்வரஸ்வரூபத்தை யடைந்து பந்தமடையுஞ்சீவர்களனைத்திற்கும்,ஈஸ்வரனுகி சங்கற்பத்தின் பிடிப்பைக்கெடுத்து நீ சமத்துவனுகியும், சாந்தமனதை யுடையவனுகியும்,‡தவத்தை யுடையவனுகியும், சந்நியாசத்தை யுடையவனுகியும், குற்றமற்ற யோகியாகியும்: ஞானத்தை யுடையவனுகியும், மோக்ஷத்தையடையக்கடவாயென்றுசொல்ல.—

கச. இவ்வாறினனுபவத்தைவினவுதல்.

சங்கத்தைக் கெடுத்தாலும், பிரமாற்பணமும் ஈஸ்வராற்பணமும், சந்நியாசமும், வேறுபாடில்லாத ஞானமும், யோகமுமென்கின்ற இவைகளின் பகுப்பெது, சிவந்தகண்களையுடைய மேகம்போன்றவரே? என்று கெட்ட வருச்சுனனுக்கு கிருஷ்ணரானவர் சொல்லுவார். சங்கற்பங்கெடவும் வாதனைகெடவும் ஓரெண்ணமுமற்றவிடமே, பிரமவஸ்துவென்று சத்துக்கள் சொல்லுவார்கள் —

கரு. இவ்வாறினனுபவத்தைச்சொல்.

ஒன்றென்கின்ற பிரமத்தையடைவதற்கு முயற்சியே விளங்குகின்ற ஞானமும், அம்முயற்சியே யோகமுமாமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். சகமும் யானும்பிரமஸ்வரூபமென் ருராய்ந்தறிதல் ஆகாநின்றபிரமாற்பணமாகும்;ருசமபலத்தை விடுதலே சந்நியாசமாம்; துன்பம்பொருந்திய சங்கற்பத்தைக் கெடுத்தலே சங்கத்தைக் கெடுத்ததென்று, சத்துக்கள் சொல்லுவார்கள்.—

கசு. இதுவுமது.

நினைவுகளிலெல்லாம் ஈஸ்வரனொருவனேயென்று துவித நினைவுநீங்குதல் புண்ணியத்தையுடைய ஈஸ்வராற்பணமாகும்; என்னைச்சிந்தித்து எனக்கன்பனு யாராதனைசெய்து என்னையடைந்து, என்னைவணங்கி, என்னைத் தோத்திரஞ்செய்வையாயின், நானென்கின்ற வுமதுஸ்வரூபப்ரகாசமானது உள்ளேபூரணமாம். பரமமுஞ் சாமானியமுமென்றும் சொல்லப்பட்ட இரண்டுருவம் எனக்குண்டாயிருக்கும்,*-- 

கஎ. பிரமத்துக்கிரண்டுவடிவ நிரூபித்தல்.

சங்குசக்கரங்கள்பொருந்திய கைகள்முதலாகவுடைய சரீரமே சாமானியவடிவமாகும்;கெடாமல் ஆதியந்தமில்லாமல் ஏகமானஸ்வரூபமே பிரமஸ்வரூபமாகும்; இவ்விடத்திலுண்டாகிய பிரமமென்றும், பரமமென்றும, சொல்லப்படுவனயாவும் இந்தப் பரவடிவமாகும்; இளையாமலிந்தப் பரவடிவத்தை நீதெளிகின்றபரியந்தம் சதுர்ப்புசங்களையுடைய தெய்வத்தை வணங்கு;‡—

கஅ. பூசாபலனை நிரூபித்தல்.

அத்தேவார்ச்சனையினுல் ஞானமானது பூரணமான வத

---

* இ-ம். பிரமஸ்வரூபத்தை யுபதேசித் தஃதடையு மாறுவிதமான மார்க்கத்தைக் கிரமமாகச் சொல்லியதாம்.

‡ இ-ம். சாமானியவடிவம் பரவடிவமென்னு மிரண்டிற் பரவடிவத்தை யடையும்பொருட்டுச் சாமானியவடிவத்தைப் பூசிக்க வேண்டுமென்பதாம்.

னல் அப்பிரமபதத்தையு மடைவாய். மேலான பரவடிவாகிய எனதுஸ்வரூபத்தை யடைந்தால் பவ வியாதிதிரும்ப வடையாது; நட்புற்ற வபிமானநீங்கி அஞ்ஞானநீங்கி பற்றுவிட்டு பரவடிவமே யுண்மை யாய் துன்பவின்பங்களின் றொடர்புநீங்கி இச்சைவிடு பட்டு ஞானமடைந்தவர்கள் அப்பிரமயதத்தையே

௧௯. சமாதியைச் சொல்லி சகசத்தைச் சொல்லுதல்

தொடர்வார்கள்.*— ஆசைபொருந்தும் சங்கற்பமில் லாமல் முயற்சிகளியாவையும் சேர்ந்துநிற்பவர்களை, சுகத்தைப்பொருந்தியஞானக்கினியினல்கன்மங்களை யெரிந்த அறிஞரென்று சத்துக்கள் சொல்லுவார்கள் க்ஷேமமும், இனிவருவதான வஸ்துக்களும், சிந்தை யில்லாமல், தொந்தமில்லாமல், ஞானமாகிய தத்து வத்தை குற்றமறுப்படிபெற்று, சதாகாலமும் உண் டாகின்ற செயல்மார்க்கமாய் சலனமில்லாம லிருப்

௨௦. இப்பிரமானுபவமுதிக்கின்ற பரியந்த முறுதிமொழி கூறல்

பாய்.†—வூழிகாலமதிகரித்தாலும் விந்தமலை பிளந்த காலத்திலும் ஆசாரியருபதேசிக்கு ஞானசாத்திரத்தி னல் போதித்த செம்மையான மார்க்கத்தை ஞான வான்கள் மாறுபடுத்தார்கள்; களங்கமற்ற தத்துவ ஞானமில்லாத அறிவின்மையினல் வாசனையானது நித்தியரூபமாயிருக்கும்; குற்றமற்ற தத்துவஞான மென்கின்ற பெருங்கடல் மூடிக்கொண்டால், வாசனை

௨௧ அனுபவமாதல்,

அதிற்கரைந்துபோகும்;‡—என்றனுக்கிரகஞ்செய்து கிருஷ்ணசுவாமியும் நிமிடநேரம் மௌனியைப்போல இருக்கவும், வெற்றிமிகுந்தவருச்சுனன், [மனங்களித் துச் சொல்லுகின்ற விதத்தை உண்மையானஸ்ரீ ராமா நீகேட்பாய்] ஆசாரியரே? எனதறிவுநைவிக்கின்ற துன்பமெல்லாம் விடுபட்டு சூரியன் பார்க்க விசசித்த தாமரைப் பூவைப்போல பிரமவஸ்துவை கலந்த தென்று அருச்சுனன் சொல்லுவான்.¶—

அருச்சுனன்கதை
முற்றிற்று.

---

## சதவுருத்திரர்கதை.

### அவதாரிகை.

முற்கதையில் யுத்தஞ்செய்தனமுதலிய விருத்திகளும் வேறுபடாம லாத்மஞானசாக்ஷாத்காரமாய்விளங்குவதைபறிவித்து அதனலுண்டான

* இ ம். சகளத்தைப்பூசித்தலி னறிவுண்டா யதனு னிட்களமானபிரமத்தை யடைவார்களென்பதாம்.

† இ ம். பிரமாக்கினியின லியாவையுமெரித்துப் பிரமமாய்ச்சகலதொழிலையுஞ் [செய்ய வேண்டுமென்பதாம்.

‡ இ-ம். சுருதிகுருசுவானுடவத்தின் றிடவற்பியாசத்தினற்சகலகன்மமு நீங்கிப் பிரமமாத்திரமாய் விளங்குவ னென்பதாம்.

¶ இ-ம். மவுனமாயிருந்து மனத்தைத் தரிசிப்பித்ததாம்.

சநகபரம்பரையு ஞானதிருஷ்டியினா லாத்மசாக்ஷாத்காரமாய் விளங்கு
வதை யறிவிக்குநிமித்தஞ் சதவுருத்திரர்கதையை நிரூபிக்கின்றார்.

---

௧. சந்நியாசி சமாதியினின்றுலகவிபகாரத்தை. லீலையாகச்செய்ய நினைத்தல்.

திரும்பவும் ஒரு கதையைக் கேட்பாயென்று வீர
னான ஸ்ரீராமருக்கு வசிட்டமுனி சொல்லுவார். ஓர்
தேயத்திலுள்ள ஞானவானும், சமாதியுள்ளவனு
மாகிய ஒரு சந்நியாசியானவர், வெகுகாலமாகச்செய்த
சமாதியினால் நின்மலமனதில் ஒருபொருளை கிடைக்
கும்படி நினைத்தால், சலம் அலையானதுபோல

௨ இதுவுமது.

அப்போ தவ்வுருவமாவன்;- ஒருதினத்தில் சமாதியை
விட்டிருந்தனன்; நினைக்கின்றவர்களுக்கு பிரதிமை
யானது தோற்றுமென்று வேதஞ்சொல்லுவதுண்டு.
சகத்திலுள்ளவர்க ளியற்றப்பட்ட செய்கையை நாம்
விளையாட்டாக மனதினினைப்போமென்று இவ
னுடையமனது நினைத்தது.—மனத்தினசைவுமாத்தி

௩. சந்நியாசி தனது சங்கற்பத்தாற்றானே சீவடனாதல்.

ரத்தினால் வேறொரு புருடனானன்; திரும்பப்பிடித்
தும்பழைய சந்நியாசியைதாமென்று பாவித்தலுக்கு
அடைந்திலன். காகதாலீய ஞாயம்போலடைந்த விச்
சையினால் சந்நியாசியாகிய தன்னை சீவடனாமமுள்ள
வொருவனாகவறிந்து பொருந்தினான்.—மனமானது,

௪. சீவடனித்திரை யடைதல்.

மற்றொருவனாகிய சீவடனானவ னிவ்வண்ணமாய்
பொருந்தப்பட்ட விச்சொப்பனத்தினா லுண்டான
பட்டணத்தில் ஒருவீதியிற்சென்று வெகுகாலமிருந்
தான். அவ்விடத்தில் விளையாட்டாக மதுவைப்
புசித்து களிப்புடையவனாய் தேனைப்புசித்த வண்
டைப்போல நித்திரையையடைந்தான்.—விருக்ஷம்

௫. சீவடன்கனவிற்கண்ட பிராமணனாய் நித்திரைசெய்தல்.

வித்தானதுபோல நித்திரைசெய்கின்ற பிராமணனான
தன்னிடத்தில் அப்போதுண்டான சொப்பனத்திற்
பிராமணனை ஒப்பற்ற யன்னியனாகப் பார்த்தான்;
மேன்மையான போசனத்தினா னித்திரைசெய்து
உண்டான சொப்பனத்தில் தன்னிடத்தில் பூமிக்கி
ராசாவாக அந்தவன்னியனை விளங்கப்பார்த்தான்;—

௬. அந்தணன் கனவிற்கண்ட வன்னியனா யவன் கனவிற் கண்டவரசனாதல்.

கனமுள்ள சொப்பனத்தில் மற்றொரு கல்வியை
யுடைய பிராமணனாகக்கண்டான்; மனதிற் ப்ரதிபா
மாத்திரமாயிருக்கு மதனால் வேறொரு நாட்டை
அடைகின்றதுபோலாகி கிலதினஞ் சஞ்சரித்தான்.
அவ்விடத்தில் ஒருநாள் மிருந்ததொழில்களினால்

௭. அரசன்கனவிற்கண்ட தெய்வப் பெண்ணாயவள்கனவிற்கண்டமானாகிநிற்றல்.

சரீரம்வாடி துயினறான்.—இராசாவானவன், ஓரிராத்
திரியி னித்திரைசெய்து அப்போதடைந்த ஒரு
சொப்பனத்தில், தெய்வப்பெண்ணாகப் பார்த்தான்.
அந்தத்தெய்வப்பெண்ணானவள், சூதப்போரில் பர
வசமாகி நித்திரைசெய்ய அப்போதனுபவிக்கின்ற

சொப்பனத்தில் தன்னிடத்திற் குளம்புள்ள பெண் மானைகப்பார்த்தான்; ஒருபோது அந்தமானானது

௮. மான்கன விற்கண்ட பூங் கொடியாதல்.

நித்திரைசெய்தது.—நித்திரைசெய்கின்ற மானானது அதன்பழக்கத்தினல் சூழ்ந்ததான ஒருகொடியாக தன்னிடத்தில் செம்மையாகச் சொப்பனத்திற் பார்த்தது. அரசனே? மிருகமானும் மனதிற் பொருந்தப்பார்த்ததும் கேட்டதும் மறப்பில்லாமல் விளங்குகின்ற சொப்பனத்தில் சஞ்சரிக்கும்படி தோற்றும் ஆகையினல் சொல்லக்கேட்பாய்.— புட்பங்களும்

௯. பூங்கொடியில் வசிக்கின்ற வனதேவதைச் சிறப்புக்கூறல்.

மிருதுவரன் துளிர்களும் காய்களும் விளங்கிய அந்தக்கொடியானது, தனதுவனதேவதையாகிய அந்தத் தெய்வப்பெண் வாழுகின்ற கொடிவீடாயுண்டாக விதையென்கின்ற அவைகளினுள்ளமுளைக்குச்சமான மாய் பலப்படுகின்ற விடயத்தைப்பொருந்திய தனதறிவினல்,- தனக்குப்பற்ருகிய சோலைசெய்மையில் பொருந்தினதாக தனக்குள்ளே பார்த்தது; நினைக்

௧௦. பூங்கொடி சுழுத்தியினல் வண்டாதல்.

கப்பட்டசுழுத்தியவத்தையையடைந்தஞானத்தினல் அறியாமையை நன்ருயனுபவித்து வண்டாக கொடியான தன்னைப்பார்த்தது. அந்த வண்டானது குளத்திற் ருமரைத்தண்டைக்கிழித் ததற்குள்ளானது,—

மூடபுத்தியையுடைய கிருமிகீடாதி யுயிர்களுக்கும் மனமானது ஓரிடத்தில் விநோதமாக சேர்ந்திருக்கும்,

௧௧. வண்டியானை யைப் பார்த்தல்.

இதழ்களையுடைய தாமரைப்பூவினுள் ஞமிறுகள வாசஞ்செய்கின்ற தடாகத்தில், ஒருமதயானைவந்து கலக்கியெறிய அதினுள்ள தாமரைகளும், குளமும், ஞமிறும், தூளியாயின; அந்தவண்டானது இந்த

௧௨. வண்டி யானையைப் பார்த் தலா லியானையா கவு மியானை வண் டின் பரிசத்தால் வண்மோதல்.

யானையைப்பார்த்தது;— அந்தயானையாகவண்டு தன்னைப்பார்த்தது; பெரியபள்ளத்தில் தும்பிக்கையையுடைய யானையானது விழுந்தது; அந்த யானையை ஓரரசனுடைய யானைப்பாகன்கெட்டியாகப்பிடித்துக் கொண்டுபோய் அவ்விடத்திலொரு யுத்தத்தில் மடியச்செய்தான்; கன்னபக்கத்திலிருக்கும் கரும்பின் கூட்டரவினல் தும்பிக்கையையுடைய யானையானது திரும்பவண்டானது,—கோபித்தவோர் யானையினல்

௧௩. வண்டன்ன சினைவினு லன்ன மாய்ப் பின் சில பிறப்பை யடைந் தன்னப்பற்ரு விசைபாடு மன்ன மாதல்.

திரும்பவும் அக்குளத்தோடும் அவ்வண்டானது பொடியாகி சேர்ந்தகரையில் அம்சவுணர்வினல் அம்சமாயிற்று; சமுத்திரஞ்சூழ்ந்த சகத்தில் அவ்வன்னமானது வருத்தமில்லாத சிலயோனிகளை யடைந்து தடுத்திருக்கின்ற சலத்தையுடைய ஓடையிலுள்ள தாமரையில் ஒப்பற்ற அன்னமாயிற்று,—

௧௪. அன்னஞ் சிவோக பாவனை

அவ்வன்னமானது ஒருபோதுஆகாயத்திற்சென்று உருத்திரனுலகத்தில் உருத்திரனைப்பார்த்துமேலான

யாற் சிவமாதல்.

விந்தவுருத்திரனே யானென்று உண்மையாகப் பாவித்தவுடன், உருத்திரனது ஸ்வருபமாய் இச்சித்தபடி வுருத்திரவுலகத்திலகூடிய வநேகசிவகணங்களுடன் சூட்சுமான வுண்மைஞானத்துடனும்,†— சிவனுகச் சஞ்சரிப்பவன்; முன்னடந்த சரித்திரங்களனைத்தையும் குற்றமற்ற வறிவினலறிந்தான்.

௧௫. உருத்திரன் முன்னெடுத்த சநநங்களைப்பார்த்தல்

மறைவில்லாத ப்ரகாசமான இஞ் ஞானசரீரத்தையுடைய உருத்திரனுக ஏகாந்தத்திலிருந்து நூறு சொப்பனத்தினது அதிசயங்களனைத்தையும் ப்ரகாசிக்கப் பார்த்துச் சொல்லுவார்.—அதிசயமதிசயம்!!

௧௬. சங்கற்பமான மாயா விசித்திரத்தைப் பார்த்ததிசயித்தல்.

இவ்வுலகத்தை மயக்கஞ்செய்கின்ற மாயையானது பொய்யாயிருந்தும்,கானற்சலத்னதப்போல உண்மையாகும். இந்தப்ரகாரம் பிரமையாக இந்த மகாமாயாவனத்தில் பலவிடத்திற் சென்று அளவில்லாமற் சுழன்றேன்.—எனது மனதளவில் உண்டாகிய கற்பனையினுல் முன்பொருசிருஷ்டியில் யான்சொல்லிய

௧௭. உருத்திரன் சீவடன் முதலிய பவநூற்றையுந் தன்மயமாக்கக் கருதுதல்.

சீவடனென்னு நாமத்தை யுடையவனுனேன்; பின்னெரு சிருஷ்டியில் மகா கலைஞானங்களை யுணர்ந்த பிராமணனுனேன்; பின்னுண்டானதாகிய ஒருசிருஷ்டியில் அரசனுனேன்;—இந்தப்ரகாரம் சதயோனியை

௧௮. இதுவுமது

யடைந்து இவ்விடத்திலுருத்திரனுனேன்; மிகுந்த வருடமும், யுசங்களும், தொழில்களும்,பலகழிந்தன; அவ்வளவு சநநத்தையும்சென்று யாம்பார்ப்போம்; நன்றாகப்பார்த்து ஒருமையாகச்செய்து சகலத்தையும் ஒன்றாகச்செய்வோம்.*-இப்படியென்று சிந்தித்த

௧௯. சந்நியாசியின் சங்கற்பநீங்குதல்.

வுருத்திரனுனவன் முன்னிருந்த சந்நியாசியினிடத்தில்போய் அவனை நித்திரையைவிட்டெழுப்பி, ஞானத்துடன் மனதை ஒன்றுபடச்செய்தவளவில், விழித்துணர்ந்த சந்நியாசியும் நின்றதனது பிரமைகளனைத்தும் நினைப்புண்டாகப் பார்த்தான்.—சீவடன்முத

௨௦. சீவடனைச் சிவரூபமாக்குதல்.

லானதனது கற்பனுரூபத்தை உருத்திரனுனவராலோசித்து சலனமற்ற ஞானகாயத்தின் ஒருபக்கத்தில் சேர்ந்து சீவடன்வாழாநின்ற நாட்டில் தனிமையானவுருத்திரனும் சந்நியாசியுநெருங்கி அச்சீவடன்ஞானமடைய, ஞானத்துடன் மனதை பொருந்தச்செய்

௨௧. மூவருங் கூடிச் சேரல்.

தான்.—மூன்றுபேர்களும், ஞானத்தைப் பெற்றவர்களாய் பழைய பழக்கத்தினுல் மிகுந்த வாச்சரியத்தையடைந்தும் எவ்வளவும் அதிசயமில்லாதவர்களாய்

† இ-ம் சந்நியாசி சீவடன்முத லுருத்திரனீருக நூறுசென்மமெடுத்த தென்பதாம்.

* இ-ம். உருத்திரன் றனது சிவஞானத்தாற் சங்கற்பவடிவமான நூற்றையுஞ் சிவாகாரமாக்க நினைத்ததாம்.

௨௨- மறையவன் முதலிய தொண்ணூற்றெண்வரையுஞ் சிவமாக்குதல்.

ஒன்றான சிவரூபத்தைப் பொருந்தியும் தேகமுன்றுருவ மானவர்கள்மேலான வுருத்திரனும்சீவடனும் சந்நியாசியும் கூடிப்போய்.— பிராமணன்முதலாக உள்ளவர்கள் செனித்தவிடங் களெல்லாஞ்சென்று தீமைகெடும்படி தங்களுடன்சேர்த்து, தெய்வீகஞானத்தினால் ஒளிமிகுந்த ப்ரகாசத்தையுடைய வுருத்திரர்களாய், ஞானமடைந்தார்கள். முன்சொல்லப்பட்ட வுருத்திரனானவர், உங்களிடத்துக்குப் போங்களென்றுத்தசவுசெய்ய தங்கள் தங்களிடத்திற்குப்போனார்கள்.—சீவடனும், பிராமணன் முதலான சகலரும் போய் தங்கள் தங்களுடைய மனைவியர்களோடுங்கூடி வாழ்ந்து தங்களுரிமையைப்பெற சரீராந்தில் சிவத்தை அடைந்தார்கள் என்று வசிட்டமுனி சொல்லியவளவில், வீரனான ஸ்ரீராமன்கேட்டு, இதாச்சரிய மாச்சரியமென்று அதன்காரணத்தை கேட்கத் தொடங்கினார்.*—

௨௩- சீவன்முத்தராயிருந்து விதேகமுத்தராதல்.

௨௪- சங்கற்பரூபஞ் சத்தியமானதெங்ஙனமென்றதற்குத்தரஞ் சொல்லத்தொடங்கல்.

அவ்விடத்தில் சீவடன்முதலானவர்கள் சந்நியாசியினது சங்கற்பத்தினால் வடிவமானவர்கள் உண்மையானதெப்படி, மிகுந்த சங்கற்பத்தினது வஸ்துக்களியாவும் மித்தையேயல்லவா, இவ்விடத்திலிதை தெரிவிப்பாயென்று கேட்ட ஸ்ரீராமனுக்கு வசிட்டமுனி சொல்லுவார்.—

௨௫. சித்தி லியாவுமஃதாயிருத்தலிற் சங்கற்பஞ் சத்தியமாயிற்றெனல்.

அறிவினிடத்தில் யாவுமுண்டு, சித்தானது எந்தப்ரகாரமதைக் கண்டதோ தான் சகலமுமாதலால் அதை அந்தப்ரகாரமாயடையும், ஈதுண்மையே. யாதுசொப்பனத்திற் பார்க்கப்படுகின்றதோ யாதுசங்கற்பத்தினிடத்திற் சேர்ந்ததோ அந்தவஸ்து எக்காலமும் அவ்விடத்தி லுண்டாயிருக்கும்; அவ்வண்ண முருவமாகும்;—

௨௬. அங்ஙனமாயினுயிர்களின் சங்கற்பமனைத்துமுண்மைவேண்டுமேயெனி னங்ஙனங்கூடாவவ்வுயிர்களின்மாத்திர்மாயிருந்து சங்கற்பிக்கி னஃதுண்மையாமெனல்.

சங்கற்பத்திலும் சொப்பனத்திலும் சேர்ந்தவஸ்துவானது எப்படியடைந்ததோ, அவ்விடத்திலந்த வஸ்துவானது பிரமத்தின் அழுந்துகின்ற வப்பியாகம்யோகமென்கின்ற பரிசுத்தமான தன்மையினாலன்றி சத்தியமாகத்தோற்றாது. யோகத்தையும்ஞானத்தையும் இவ்விடத்திலடைதலினால் ஈசன்முதலிய தேவர்களுமெவ்விடத்திலும் யாவையும் பார்க்கின்றார்கள்,—

௨௭. ஆயிற்சீவன் சித்தன்றோவெனின் சித்தாயிருந்து மதனை மறந்து சிதாபாசனைச்சேரலினஃதைமறந்ததற்காதாரமான பிரமநிஷ்டாபரனாயிற் சங்கற்பித்தபடி சளுவிற்கிடைக்குமெனல்.

பிரியமாயிருக்கின்ற வஸ்துக்களியாவும் ஒன்றான நிஷ்டையையுடையவர்களுக்கு எளிதிற்கிடைக்கும்; செவ்வையாக தென்றிசையைப்பார்த்து நடப்பவர்கள் உத்தரதிசையையெப்படி யடை

* இ-ம். சந்நியாசியின் ஞானவியாபகத்தினின்றுதித்த சங்கற்பவடிவம் பின் ஞானவடிவமாகவே விளங்கிற்றென்பதாம்.

வார்கள்; பரிசித்த சங்கற்பத்தினு லுண்டான வஸ்துவை கருதுபவர்கள் அதையே யடைவார்கள்; குறைவற்ற தமதாத்மப்ரயோசனவசத்தி யுள்ளவர்கள் முன்பு சேர்ந்திருக்கின்ற விடயவஸ்துவை நினையார்கள்.— முன்னிருக்கின்ற வஸ்துக்களுக்கிடமாகியும் சங்கற்பத்தையெதிர்த்து இச்சிக்கின்ற மூடபுத்தியானது அப்பொழுதே ஒன்றிலமுந்தாதபடியினுல் அந்த விரண்டையும் இந்தப் புத்தியானது கெடுப்பிக்கும், இனிமேல்யான் வித்தியாதரனுகும், நிலையாயிருக்கின்ற யான் இவ்விடத்தில் பிராமணனுமென்று சிந்திக்க,— இந்தநினைவேஒருவிடயத்தில்அடைகின்றபேற்றின் திருஷ்டாந்தமாம்; அக்காரியமானது சித்தியினிமித்தமாம்; ஆகையினுல் ஒன்றுனவஸ்துவில் திரம்பொருந்திய சமாதியினுல் சந்நியாசியின் சீவனுனது உருத்திரனுகி, உருத்திரரூபத்தினுல் பொருந்துகின்ற சங்கற்பத்தினுல் அடைந்த வஸ்துவுக்கு உண்மையைப் பொருந்தி,— தெளிந்த சந்நியாசியின் சங்கற்பத்தியுண்டானவர்களாகிய சீவடனுதியானவர்கள் களிப்புடைய தங்கள் தங்களின் வேறுன சகங்களை உருத்திரரூபத்தினுல் பார்த்தார்கள்; சத்தியசங்கற்பத்தினுல் தத்துவத்தை யடைந்தார்கள்; உருத்திரனது ஞானத்தினுல் தனது சங்கற்பத்தினுல் எளிதாகச் சேராநின்ற பட்டணத்திற் சேர்ந்தார்கள்.*—

உ௮. பிரமநிட்களசங்கற்பமுழுது முண்மையாமோ வெனிற் சங்கற்பமொன்றிலமுந்துமாயி னஃதுண்மையாம் இரண்டாயினுகா வெனல்.

உ௯. சித்தரயிருந்தொன்றி லமுந்தினபடியாற் சன்னியாசி சங்கற்பமுழுது முண்மையாயிற் றெனல்.

௩௦. சங்கற்பத்தை யதற்காதாரமான சிவஞானமாகக் கரைத்தவிலந்நூற்று வருஞ் சீவன்முத்தராயவரவரிடத்தில் வசித்தார்களெனவ்.

சதவுருத்திரர்கதை

முற்றிற்று.

---

# வேதாளகதை.

---

## அவதாரிகை.

தன்னிடத்திற் சொற்பன கற்பிதமாகத் தோற்றினசநபரம்பரைகளிதார்த்ததிருஷ்டியினுற் பிரமசாக்ஷாத்காரமாக விளங்கினதை யறிவித்திவ்வனுபவநன்றாய் விளங்கும்பொருட்டுச் சுழுத்திமவுனமுள்ள வேதாளகதையை நிரூபிக்கிறுர்.

==

௧. மௌனுதீத சுழுத்தி மௌனத்தை யுடையவனுய் மனதினதுமாக்கும் பொருட் உதயமறும்படி அமிழ்த்தாநின்ற களங்கமான சங்கற்

---

* இ-ம். சைதன்ய வியாபகயாயிருந்து சங்கற்பிக்கி லது சத்திமமாமென்றும ஃதையறிந் தச்சங்கற்பமாயிருந்து சங்கற்பிக்கி லஃதசத்தியமாமென்றுங் கூறியதாம்.

டிச் சுழுத்திமவுனமாய்ச் சுகிப்பாயென்றாசீர்வதிக்க வவையாதென வினவுதல்.

உ. முனிவரிரண்டிற் காட்டத்தவமுனிவனிலக்கணங்கூறல்.

௩. சீவன்முத்தமுனிவனிலக்கணங்கூறல்.

௪. மௌனநான்கிற் காட்டத்தவமுனிவர்க்கியல்பான மூன்று மௌனத்திலக்கணங்கூறல்.

௫. சீவன்முத்தமுனிவர்க்கியல்பான வேரர்சுழுத்திமௌனத்திலக்கணங்கூறல்.

௬. இதுவுமது.

எ. சுழுத்திமௌன

பத்தைக்கெடுத்து, அகண்டாகாரமானபிரமபதத்தில் இருப்பாயென்று வசிட்டமுனி சொல்லவும், வாக்குமௌனமும், கரணமௌனமும், காட்டமௌனமுமென்று மாட்சிமைப்பட்ட மூன்றையும் சுழுத்திமௌனத்தையும் தெளியும்பொருட்டு சொல்வாயென்று ஸ்ரீராமன்கேட்க, முனிசொல்லுவார்.— வருத்தமில்லாததவசிகளிரண்டுவிதமாவர்; ஒருவன் காட்டதபசியாவன்; பின்னொருவன் சீவன்முத்தனுவன் செய்கின்ற பிராணாயாமத் தொழில்களில் திடமான சிந்தையைப்பொருந்தி இந்திரியங்களை மிகுந்த வலியையுடைய அடையோகத்தினுல் செயித்தவனை காத்தலையுடைய ஸ்ரீராமா? காட்டத்தவமுனிவனென்று சத்துக்கள் சொல்லுவார்கள்.— உலகத்தின்றன்மையை யதார்த்தமாக அறிந்து தன்னிடத்தில் ஆத்மாவைசிந்தித்து உலகத்தாருக்கு கிரிகையிலொப்பாயிருந்தாலும், அகத்திலமைவுபிறந்தவன் நின்மலமான சீவன்முத்தனுகும். இப்படிப்பட்ட சாந்தமுனிவனிடத்தில் மேலான மனத்தினது உண்மைவடிவமாயிருக்கின்ற தகுந்த வுயர்வுள்ள வடிவமாகிய பாவனையே, சொல்லப்பட்டமௌனவாக்கியத்துக்கு அருத்தம்.— வாக்கு மௌனமானது வசனத்தையடக்குதலாம். இந்திரியத்தை யடக்குதலே தாக்காநின்ற கரணமௌனமாகும்; தனது தொழிலனைத்தையுநீக்கலே காட்டமௌனமாகும். ப்ரகாசிக்கு மனேவிபகாரம் நீக்கமின்றி மூனறுவிதமாக சொல்லப்பட்ட மௌனங்களிவைகளேயாகும் — உறுதியாகச்செய்யப்படுகின்ற இந்த மூன்றுமௌனங்களும் காட்டத்தவமுனிவருக்குச் சுபாவமாகும்; ஆதியந்தமில்லாமல் வேற்றுமையில்லாத துன்பங்கணீங்கிய ஆநந்தமானது, ஆனந்தானுபூதியை யுடையவர்களுக்காயினும் இந்த வனுபூதியில்லாதவர்களுக்காயினும், இந்தப்பிரமாநந்தமே ஒருதுன்பமு நெருங்காதசுழுத்திமௌனமென்று சத்துக்கள் சொல்லுவார்கள்.- பலவிதமான மயக்கத்தையுடைய இச்சகத்தைப்பிடித்து அதற்குள்ள குணங்களையறிந்து நிச்சயத்தையுடையவனுய்ச் சந்தேகநீங்குவதே சுழுத்திமௌனமாகும் ஞானமயனுன பூரணஞான வடிவமாகிய சிவஸ்வரூபமே இச்சகமெல்லா மென்கின்ற மூன்வடிவான சித்தாந்தமே சுழுத்திமௌனமென்று சத்துக்கள் சொல்லுவார்கள்.*— சத்தாகவும் அசத்தாகவும் சத்தசத்தாகவும்

* இ-ம். மௌனநான்கி னிலக்கணமு மஃதையுடைய முனிவரிருவ ரிலக்கணமும் விபரமாயறிவித்ததாம்.

னஞ் சாங்கியம் யோகமென விரண்டுவிதமா மெனல்.

அ சாங்கியயோகம், யோகயோகம் ஆகிய விரண்டி னிலக்கணங்கூறல்

௯. இவ்விருவரிலக்கணமுஞ் சொல்லி யவர்களபிப்பிராயமு மறிவித்தல்.

௧௦. சுழுத்தி மௌனிக ளபிப்பிராயத்தை யடையுஞ் சாதன மூன்றுண்டெனல்.

௧௧. சாதனமூன்றி னொருமை யுரைத்தல்.

௧௨. இம்மூன்றி னொன்றி லுறுதியாகச் சாதிக்கவேண்டுமெனல்.

௧௩. இச்சாதனத்தாற் பவமயக்கங்கி னனவிற் சுழுத்தி வருமென்றுரைத்திதற்

விளங்காநின்ற யாவும் நித்தியமாயிருக்கின்ற சிதாகாசமென்றெண்ணி சுழுத்துவமும் சாந்தமுமாகி இருக்கின்றது; சுழுத்திமௌனமென்று சொல்லப்படும்; சுழுத்திமௌனமானது, யோகிகளுக்கு சாங்கியமென்றும், பரிசுத்தமாகிய யோகமென்றும், இருவகையாம்.—தெளிவாகிய கல்வியறிவினாலும், நாடோறும் பூரணநிஷ்டையினாலும், பிரமாணமான விசாரணையினாலும், பிரமமென்றுணர்ந்தவர்களே சாங்கியயோகியர்களாகும். யுத்திகளினாலுண்டான பிராணன் முதல் வாயு அடங்கினவிடத்தில் எளிதாக அந்தமில்லாத மேலானபதத்தை யடைந்தவர்கள் யோகயோகியர்கள்.—நித்தியமாகிய உபசாந்தமானவிடமே யாவருக்கும் பிடிப்பாகும்; நினைக்கத்தகுந்த சாங்கியரடைகின்றபதமே யோகிகளுக்கும் ஸ்தானமாகும்; கருதத்தகுந்த வாசனைவலையினாற் கட்டுப்பட்ட பிராணனும் மனமுமாகிய இவ்விரண்டும், இயற்றுங்கிரியைகள் முழுதுங்கெடுமாயின் அதுவே பிரமபதமாகும்.‡—

விசாரித்துப்பாராமையினால் மனமானது உள்ளதுபோலத் தோற்றும்; விசாரிக்கில் மித்தையேயாகும். சொப்பனத்தில் தனது மரணத்தைதான் கண்டிருந்தும் மெய்யாமோ, களங்கமற்ற வத்துவித வஸ்துவில் அப்பியாசத்திடமும் பிராணபந்தனமும் மனோபந்தனமுமாகிய இவைகளே சுருக்கமாகமோக்ஷசத்தார்த்தமாகும்.—திடமாகிய ஒருவஸ்துவி னப்பியாசமும் பிராணனொடுங்குதலும் மனமடங்குதலுமாகிய மூன்றில் பக்குவமாயொன்று கிடைக்குமாயின், ஒன்றுக்கொன்று சம்பந்தமான மூன்றும் ப்ரயோசனமாகும். மேலான பிராணனும் மனதும் இல்லையாயின், யாவருக்கு நினைவுகள் சேராது. புட்பமும் வாசனையும் எள்ளுமெண்ணையும்போல நிலையாக இவ்விரண்டுமொன்ருகும்.—பிராணனுமனமும் ஆதாரமு மாதேயமுமபோலவாம். அவற்றிலொன்றிகெடுமாயின் அடுத்தமற்றொன்றுங்கெடும்; சொல்லாநின்ற இவ்விரண்டுங் கெட்டால் மேலாகிய மோக்ஷத்தையுங் கொடுக்கும். மேலாகிய தன தப்பியாசத்தினால் ப்ரத்தியக்ஷமாத எண்ணமானது கெடுமட்டும் ஏதாகினு மோருண்மையில் நினைவானது அழுந்தவேண்டும்.—வெகுகாலமா யப்பியாசிக்கின்ற தன்மையினால் மனதினிடத்தில் ஏகத்துவமான தொன்றுண்டாகும்; அக்கணத்தில் இக்கூட்டங்க ளனைத்தும் கெட்டுப்போகும்; சநநமரணத்தின் றீர்க்கசொப்பனநீங்கி துரியத்தில்

‡ இ-ம் சுழுத்திமௌனத்தி னியல்பை நன்ருய்ப் பகுத்துச்சொல்லியதாம்.

வோர் திருஷ்டாந்த முரைக்கத் தொடங்கல்.

விழித்துக்கொண்ட வலியுள்ள வேதாளமானது கேட்டகேள்வியை, ஸ்ரீராமா? நீ கேட்பாயென்று தவமிகுந்த வசிட்டமுனி சொல்லுவார்,—விந்தாடவியிலிருக்கின்ற ஒரு வேதாளமானது, மற்றொரு தேயத்திற் கொடிதாகிய பசியினால் வந்துசேர்ந்து ஒப்பற்ற சத்துவினிடத்தில் அளவற்றவுணவைப்பெற்று மனங்களிக்கும்; முதன்மையாகின்ற வுதராக்கினியானது மிகுந்தாலும் எதிர்வந்தவர்களுக்கும்வருந்துங்காரணமில்லாமலும் இகழ்வில்லாமலும் கொலைசெய்யாது. பெரியோர்கள் சன்மார்க்கத்தை பிரிவார்களோ.—

௧௪. வேதாளவியல்பு கூறல்.

௧௫. வேதாளம் வினாக்கூறத் தொடங்கல்.

காட்டிலிருந்து அவ்வேதாளமானது கொடியவுதராக்கினிக்கு நியாயத்தினால் நன்கு தீதென்றறிகின்ற யுத்தியினால் மனிதரை புசிப்பாகச்செய்ய ஒருபட்டணத்தில்வந்து, அவ்விடத்திற்சூரியவரசன் இராத்திரியிற்சஞ்சரிக்கின்றகாலத்தில்,அவ்வரசனைக்கண்டு ஆகாயத்தினிடியைப்போலவேதாளமானது அரசனுக்குச் சொல்லியவிதத்தை, ஸ்ரீராமா? யான் சொல்லக்கேட்பாய்.—அரசனே? என்கைவசமானாய்; மேலான வாண்சிங்கத்துக் கொப்பாகிய என்னால் உனது நிறைந்தவயிரையிழந்தாய்; மேலெனக்குப் புசிப்பாகக்கடவாயென்று வேதாளஞ் சொல்லவும், ஞாயமில்லாமல் என்னிடத்தி னெருங்குவையாயின், உன்னால் உனது சிரசு பொடியாகப் போகுமென்று அரசனானவன் சொல்லினன். வேதாளமானது,இப்படியென்று சொல்லிய வரசனுக்கு பதிலுத்தரவு சொல்லுகின்றது,—

௧௬. வேதாளஞ் சொல்ல வரசனுரைத்தல்.

௧௭. வினாவுக்கு விடை யாசித்தல்.

நியாயமில்லாமல் நின்னைக்கொல்லேன், நீதியைச் சொல்லுவேன், அரசனே? நீர் குற்றமற்ற யாசகாளனைவருக்கும்குறைவை நீக்குகின்றகுணத்தையுடையவனாதலினால் எனது குறையை நீக்குவாய் சந்தேகமான குறைவைக்கேட்டு அரசனே? உனதுத்தரமாகிய விகையினால் நன்மையாகப் பூரணஞ்செய்வாயென்று வேதாளஞ்சொல்லியது.†— எந்த சூரியனது கதிகளுக்கு இப்பிரமாண்டங்களியாவும் சிந்துகின்ற அற்பமான வணுக்கூட்டங்களாக விளங்கும்? எந்தக்காற்றினால் முடிவற்ற ஆகாசமென்கின்ற அணுக்கள் ப்ரகாசிக்கும்? உண்டாகிய சொப்பனத்தின் மேல் சொப்பனமுண்டானாலும் திரிவின்றிய தெளிவான ப்ரகாச ஸ்வரூபமியாது?— வாழையினது தண்டினுள் ளுள்ளேபோகியும் அந்தத்தண்டேயிருப்பதுபோல அளவில்லாத உள்ளுள்ளே யானும்

௧௮. வேதாளம் வினவின வினாவில் மூன்று வினவுதல்.

௧௯. இரண்டு வினவுதல்.

† இ-ம். வேதாளமனுபவ வேத்தியத்தைக்குறித்துப் பிரமஸ்வரூபத்தைப் பகுத்து வினவத் தொடங்கினதாம்.

வேறொன்றுகாத வணுவேது? நிறைந்த பிரமாண்டமும், ஆகாயமும், சிவகோடிகளும், ப்ரகாசிக்கின்ற சூரியனும், மகாமேருவுமாகியசகலமும், விரிந்தபரமாணுக்களைப்போலகூடிப்பிரியாத அணுவானதெது?—

௨௦. ஒன்றுவினுவுதல்.

அவயவங்களொன்றுமில்லாமல் பரமாணுவாகிய எந்தப்பெரியமலைக்கு, தங்காநின்ற கல்லைப்போல நெருங்கி யொன்றாயிருக்கின்ற உலகங்கள் வைரமாயிருக்குமென்று உயர்வானவேதாளமானது கேட்ட வசனங்களுக்கு நகைசெய்து, ப்ரகாசிக்கின்ற கிரீடத்தையுடைய அரசன் சொல்லியயாவையும், ஸ்ரீராமா? நீ கிரமமாய்க்கேட்பாய்.*— உதயமான இந்த ஞான சூரியனுள் சகமுதலிய விச்சகலமும் ப்ரகாசிக்கின்ற, நிச்சயித்திருக்கப்பட்ட நின்மலஸ்வரூபனுன பிரம சூரியனது மிகுந்த பிரகாசமாகிய இந்தச் சூரியன் கிரணத்துக்கு இச்சகங்களியாவு மணுக்களாகும், தோத்திரஞ்செய்யப்பட்ட இந்தச்சூரியனது ப்ரகாசத்தினல் சகத்துண்டாகி ப்ரகாசிக்கும்.†— காலசத்தையும்,விசும்புண்மைவியோமசத்தையும், கண்ணுயிருக்கின்ற சலனசத்தையும், ஞானசத்தையும், நின்மலமான சேதனத்தையும் முதலிய சத்தைகளனைத்தும் நல்லறிவான பிரமமென்னுஞ் சண்டமாருதத்தினல் பொடிப்பொடியாகி அழகிய புட்பத்தினது வாசனையைப்போல, தாங்கொண்டிருக்கின்றஸ்வரூபசுபாவத்தினல் ப்ரகாசிக்கும்.¶— சகமென்னும் பெயரையுடைய தீர்க்கசொப்பனத்தில் ஒருசொப்பனத்தின்மேல்ஒருசொப்பனமாக, அநேகம்பிடித்தும் தனதுவடிவத்தைப்பிரியாமல் சாந்தியினல் வியாபகமானபிரமமொளிரும். வாழைமரத்துக் குள்ளேயுள்ளேயும் மடலேயிருக்கின்ற தன்மையைப்போல, அளவற்ற சகமுள்ளுக்குள்ளே ஆகியபோதுமந்த பிரமமேவிளங்கும்.‡— சூட்சுமமாய் அறிதற்கருமையினல் முன்சொல்லப்பட்ட பிரமமே பரமாணுவாம்;

௨௧. எந்தச் சூரிய கிரணத்துக்கிந்த சகங்க ளணுவாகுமென்று கேட்ட முதல்வினுவுக்குத் தரங்கூறல்.

௨௨. எந்தக் காற்றிற் காலமாகாயமுதலிய சத்தைகள் தூளாமென்று கேட்ட விரண்டாம் வினுவுக் குத்தரங்கூறல்.

௨௩. கனவின்மேற் கனவு வறினு மதன்வயமாக மயங்காமற் றெளிந்தபடி யிருக்கின்றதெதுவென்ற மூன்றாம்வினுவுக்கும், அரம்பையைப்போல வகத்திற் செல்லச்செல்ல வேறுயிராததெதுவென்ற நான்காம் வினுவுக்கு முத்தரங்கூறல்.

௨௪. எந்தவணுவிற் பிராமாண்ட

---

* இ-ம். வேதாளம் வினுவாறுக்கு மரச னுத்தரஞ்சொல்லத் தொடங்கினதாம்.

† இ-ம். பிரமசூரியனது ஞானப்ரகாசமானது கிரணங்களுக்குச் சகலசகங்களு மணுக்களாய் விளங்குமென்பதாம்.

¶ இ-ம். நித்தியதத்துவமென்னுங் காலதத்துவமுதலிய சத்தையாவும் பிரமனிலத்திற் றூளாய் நீங்குமென்பதாம்.

‡ இ-ம் சகத்தென்கின்ற தீர்க்கசொற்பனத்திற் சங்கற்பமாகிய சொற்பன நானாவிதமாகத் தோற்றியு மிவைகளின் மறைவுபடாமற்றன்னைத் தெளிவுற்றிருப்பது பிரமமென்றுங் கதலியைப்பிரிக்க வதன்றண்டே யிருப்பதுபோலப் பிரமத்தை வேறுவேறு செய்தவிடத்துந் தானுகவே விளங்குமென்று சொல்லியதாம்.

முதலிய சீவர்க ளனைத்தும் பரமாணுக்களாமென்ற வைந்தாம் வினவுக் குத்தரங்கூறல்.

உ௫. அவயவ ரகிதமான எந்த வணுவுக்குச் சகமச்சையாமென்ற வாறும் வினவுக் குத்தரங் கூறல்.

உ௬. இதுவுமது.

நீக்குகின்ற முடிவில்லாததினல் நீண்ட மகாமேரு வாதியான சகலத்துக்கும் இதுவே தாக்கப்பட்ட காரணமாகும். விசாலமான மகம்மேருமுதலியவைகளை இந்தப் பரமாணுவுக்கு பார்க்கும் பரமாணுவைப்போல, பார்க்குமிடத்தில் துவட்சியாக ப்ரகாசிக்கும்,‡— அடையப்படாமையினல் பரமாணுவாகிய இப்பிரமமே பூரணத்தினல் பெரியகிரியாகும். குறைவில்லாத வவயவங்களியாவையும் அணிந்தும் அவைகளைத்தரியாத வாத்மாவானவன், குறைவில்லாத மெய்ஞ்ஞானஸ்வரூபமாய் சகலவஸ்துக்களுக்கு மாதாரமாயிருப்பன், அறிதற்கரிய இந்த வாத்மாவுக்கு இந்தச்சகலசகங்களும் விஞ்ஞானவிரசமாகிய மச்சையாகும்.§— பொருந்திய விஞ்ஞான மாத்திரத்தினது மத்தியிற் சகமான திருக்குமென்று மேலான வரசன் சொல்லக்கேட்டு மனத்தில் தனது ஸ்வரூபத்தையறிந்து மயக்கமற்ற விசாரணையினல் உபசாந்தமனத்தையுடைய வேதாளமானது, ஏகாந்தஸ்தானத்துக்குச் சென்று துக்கமுள்ள உதராக்கினியை மறந்து சலனமில்லாத பரிசுத்தமான சமாதியிலிருந்தது.*—

வேதாளகதை
முற்றிற்று.

---

# பகீரதன்கதை.

## அவதாரிகை.

முற்கதையிற் சுழுத்திமெளனத்தாற் சர்வம் பிரமமயமாய் விளங்குமென்பதைவினவிடையினலறிவித்து,இவ்வனுபவமடைதற்கரிதாயினுஞ் சங்கத்தியாகமுள்ள தனதுமுயற்சியினு லெளிதாயடையலாமென்பதை யறிவிக்கு நிமித்தம் பகீரதன்கதையை நிரூபிக்கிறார்.

---

க. மனந்தெளிந்து நிற்குஞ் சகசானுபவ மருளிச்செய்தல்.

சலனமற்ற அந்தராத்மாவினல், சகலவிடயங்களில் நின்றும் மனதைத்திருப்பி, இசையத்தக்கவைகளைச் செய்து, ஆசையில்லாமல் மெலிவில்லாமல் மனது

‡ இ-ம். அணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய்விளங்குகின்ற பிரமவியாபகத்திற் சகல பிரமாண்டங்களும் பரமாணுக்களாக விளங்குமென்பதாம்.

§ இ-ம். அகோசரமான பிரமஞானத்துக்குச் சாரமான மச்சையாகச் சகத்து விளங்குமென்பதாம்.

* இ-ம். சர்வம் பிரமமயமாய் விளங்குமென்ற வுத்தரங்கேட்ட வேதாளஞ் சாந்தியுடனனந்தாமிர்தம் புசித்தும் சமாதியை யடைந்ததென்பதாம்.

உ. பகீரதனைப் போல சுகத்தைப் பெறுவாயெனல்

ங. பகீரதன் யாதினு லாத்மானுபவம் பெற்றதுங் கங்கையைக் கொண்டுவந்ததுமென் றவினுவின் முதல் வினுவுக் குத்தரங் கூறத்தொடங்கல்.

ச. பகீரதன்மகிமையைக் கூறல்.

ரு. விடயதோட திருஷ்டியினல் விசார முதித்தல்.

சு. தனித்திருந்து சகத்தன்மையை விசாரித்தல்.

எ. புவனபோகங்களைக் கானருனம்போலக் கருதுதல்.

விஸ்ராந்தியடைந்து, சாந்தமனதினல் அசுத்தமனதை ஆகாயத்தைப்போல நின்மலமாகச்செய்து சலனமற்ற மௌனியாகவும், ஒருவனுகியும், உபசாந்தமே ஸ்வரூபமாகியும்,—சமத்துவனுகியும், மனமானது ஆகாயத்தைப்போல, ஸ்ரீராமா? நீ மிகவுந்தெளிந்திருக்கக்கடவாய். நின்மலமானபுத்தி திடநிறைந்து அறியாமையின்றி, யமைவாகவந்தவைகளை அனுசரிக்கின்ற வேந்தனுகிய பகீரதனைப்போல, குழந்தாய்? அடைதற்கரியதாயினும் குறைவின்றி யடையலாமென்று வசிட்டமுனிசொன்னர்.†— 'இப்படி வசிட்டமுனி சொல்லவும் அவரைப்பார்த்து, எனதாசிரியரே? பகீரதவரசனுனவன், எந்தமனவல்லமையினுல் பரம சுகத்தை யறிந்தான்? அப்போது தேவநதியை கொண்டுவந்தானென்று ஸ்ரீராமன்கேட்க, நான்கு வேதங்களையுமுணர்ந்த வசிட்டமுனி சொல்லுவார். ஏகத்துவத்தையறிந்த பகீரதனென்னு நாமத்தையுடைய அரசனுனவன், பூமியின்கண் ஒருவனிருந்தான்.— பெரிதான பூமியனைத்தையும் காப்பவன்; சிந்தாமணியிலும் ஈகையின்மிகுந்தவன்; கங்காசோபானக்கிரமத்தினுல் பாதாளத்தினுல் பஸ்பமாகிய தனது பாட்டன்மார்களனைவரையும் கொடியநரகநீங்கும்படி சத்தியலோகத்தைச்சேர்ந்து சுகிக்கவைத்தவன்; சந்திரன்போன்ற வெண்மையாகிய பூச்சக்கரக்குடையையுடையவன்.—அப்படிப்பட்ட பகீரதன், எவ்வனகாலத்தில் உலகத்தினது துன்பமிகுந்த ஆசாரமாகிய இதைப்பார்த்தவளவில், தன்னுடைய நினைவினினைத்த சூட்சுமவிசாரணையினது களங்கமற்றதோற்றமானது மனதில் நிலைபெற்ற விளம்பருவத்தில் உண்டானததிசயம்!—ஊழினுல் அளர்பூமியினது புட்பக்கொடியைப்போல விசாரணை யுதயமாகவுதவும் ஏகாந்தஸ்தானத்தை யடைந்து, ஒன்றோடொன்று பொருந்தாத சமூகமான வியப்புள்ள சகத்தின் சுபாவமான இவைகளைப்பார்த்து மனதில் விசாரிப்பான்; ஒன்றுவது நூதனமானதில்லை, எப்பொழுதும் போயினதே திரும்பவும் வரும்.—போனபகலே திரும்பவும் வருகின்றது; போனவிராத்திரியேதிரும்பவும்வருகின்றது; போன வீகையே திரும்பவும் வருகின்றது; போன யாசகமே திரும்பவும்வருகின்றது; ஆனபுசிப்பே திரும்பவும் வருகின்றது, ஆனகருமமே திரும்பவும் வருகின்றது. போகத்தையுடையவர்கள், ஒன்றிலும் வெட்கப்படாமல் திரும்பத்திரும்ப அதில் முயற்சி

† இ-ம் சகசநிஷ்டையை யனுக்கிரகித்ததாம்.

அ. ஆத்மாநந்தங் கொடாத கன்மத்தை வெறுத்துப் பூரணானந்தத்தைக் கொடுக்குங்கன்மத்தை விரும்புதல்.

செய்வார்கள்.— இரசமில்லாமல் வாடுகின்ற அத்தொழிலையே சூழ்ந்திருப்பார்கள். குற்றமறும்படி எதையடைந்தால் அடையப்படாத தில்லையென்று சொல்லும்படி யாவையும்வந்து பொருந்தும்; அதைச் செய்தலே சுபாவமாகிய தொழிலாம்; இரண்டுபடுகின்ற மற்றசசலகருமங்களும் விடூசிகாரோகமாம்.*—

௯. சற்குருவைத் தரிசித்துப் பவத்துன்பத்தை நீக்குதற் பொருட்டுக் கூறுதல்.

அஞ்ஞானிகள் அநேகமாகச் செய்ததையேசெய்வார்கள்; ஞானிகள்செய்யமாட்டார்கள். சகத்தின் றன்மை யிதுவென்று மனதிலச்சமுற்ற பகீரதனானவன், ஒருநாட்போய் திரிதுலனென்னு நாமத்தையுடைய சற்குருவினது பாதத்தைவணங்கி, துன்பமிகுந்தபவத்துக்குப்பயந்து ஏகாந்தமாய்இவைகளைச் சொல்லத்தொடங்கினான்.—முனீஸ்வரா? சொல்லப்பட்டமூப்பும், மரிப்பும், மயக்கமுமுதலிய சமஸ்தமான பயத்தைச்செய்யாநின்ற அரியதுன்பத்துக்கு முடிவியாது? விளங்கும்படியாக அனுக்கிரகிப்பாயென்றுபகீரதன்கேட்க, திரிதுலமுனி சொல்லுவார்.

௰. பவத்துன்ப நீக்க மியாதென்ற வினாவுக்குத் திரிதுல முனியாத்மஞான முபதேசித்தல்.

அரசனே? ப்ரகாசம்பொருந்திய ஞானாத்மாவை பூரணாகாரமாகப்பார்க்கில்.—துக்கங்களனைத்தும் அப்பொழுது நீங்கும்; இதயத்திலுள்ள பந்தங்களெல்லாங் கெடும்,பலவாகிய சந்தேகநீங்கும்;மிகுந்த கருமங்கள் கெடும்; செம்மையாக அறியத்தக்கதானது சின்மாத்திரமே ஸ்வரூபமாகி இருந்தபரமாத்மஸ்வரூபமாம்.

௧௧. இதுவுமது

சொல் இதைக்கேட்பாய்.—எவ்விடத்திலு முள்ளதான நித்தியமானது, உதித்தொடுங்குதலில்லாதது; அழகிய உண்மைஞானமும், உபசாந்தமும், நின்மலமும், கெடாததும், திரிகுணங்களுந் தங்காததுமாகிய இப்படிப்பட்ட தொன்றுண்டாயிருக்கின்றதென்று சொன்னவுடன், வேறுபாடில்லாததிரிதுலமுனியைப் பார்த்து, பகீரதன் சொல்லத்தொடங்கினான்.†—

௧௨. இதுவுமது

௧௩. தேகமுதலிய விருத்திகணீங்கிச் சித்தாயிருப்ப தெங்ஙனமெனில்.

தனக்குவேறாகின்ற சரீரமுதலான ஒருவிடயத்தையும் பாராதவனாய் ஈனமான விபகாரங்களியாவும் திரமிலலாமற்போக, தேவராற்சொல்லப்பட்ட ஞானஸ்வரூபமாகி தடையில்லாம விருப்பதெப்படிகிருபையுள்ள ஆசிரியரே சொல்லுமென்றுகேட்க,— திரிதுலமுனியானவர் சொல்லுவார். அரசனே? மனமானது. இதயாம்பரத்தில் வியாபகமான வறிவினால் ஸ்வரூபநிட்டையைப்பொருந்தும்; பின்பு பெரி

௧௪. சமாதியினால் ஞான முதயமாகிற் சநநமரண நீங்குமெனல்.

---

* இ-ம். கிதகன்ம புண்ணியபரிபாகத்தினாற் சாதனசதுஷ்டய முண்டாயிற் றென்பதாம்

† இ-ம். ஆத்மஞானந்த சாக்ஷாத்காரம் வருமாயின் பவத்துன்ப நீங்குமென்பதாம்

தானசகலவடிவங்களுமான மேம்பாடானசிவனுனது, இகழ்ச்சியாகியசநநத்தை சகத்திற்றிரும்பவும்அடையாது;— மனையாள் மனைமுதலிய விவற்றில் பற்று நீங்குதலும், சுகதுக்கங்கள் சார்ந்தால்சமமானஞான பாவனை அடைதலும், தனக்குப் பேதமல்லாதனவாய் எப்போதும் அவையவங்களின் றேற்றங்களாகுதலும், வளப்பமுள்ள ஏகாந்தத்தையடைதலும், மானிடக்கூட்டங்களை நீக்குதலும்,— ஆத்மதத்துவத்தில் நீங்காத ஞானநிட்டையும், அசைவின்றி நிற்கின்ற தத்துவஞானத்திலுண்டான வபரோட்சானுபவமும், இப்படிப்பட்டதோற்றமாகிய அடையாளங்களை யடைவதே ஞானமாக மோக்ஷசெல்வத்தையுடைய சத்துக்கள் சொல்லுவார்கள்; இதற்குவேறுயிருக்கின்ற மார்க்கங்களியாவும் வேதனையுள்ள வறியாமையாம்.— குற்றத்தையுடையதான சரீரத்தை யானென்றுநினைத்தல், நசித்தபோதததுவேஇராகத்கு வேடத்தை நீக்காநின்ற ஆதாரமாக சநநவியாதிக்து மேன்மைபொருந்திய அவிழ்தமாகும்; சைதன்னியம் ப்ரத்யக்ஷமாகுமென்று அனுக்கிரகித்த ஞானமுனிவனுகிய திரிதுலமுனிக்கு பகீரதன்சொல்லுவான்.*—

கரு. சமாதிகூடுதற்குச் சங்கதியாகம் வேண்டுமெனல்

கசு. ஞானசமாதிக்கிந்த சங்கத்யாகமே மார்க்கமெனல்.

கஎ. தேகோக நீங்கிற் சித்து ப்ரத்யக்ஷமாமெனல்.

கிரியின்மேலிருக்கின்ற விருட்சத்தைப்போல நெடுநாளாக வலிமைபொருந்த இச்சரீரத்தில் திரமாக நானென்றெண்ணுகின்ற நினைப்பை தள்ளுவது எப்படியென்று பகீரதன்கேட்க, சிரேஷ்டமான வாசாரியர் சொல்லுவார். தனது மனோவருத்தத்தினுல் நீங்காத போகத்தில் நினைவுதொடராமல்கெடுத்து,— வியாபித்திருக்கின்ற சர்பாவத்தைப் பொருந்தினுல், வினையான வகங்காரங்கெடும். ஆசைகெட இவைகளனைத்தையும் அறிவினுற் றீரும்படிகெடுத்து துன்பமான சலனமில்லாமல் இருப்பாயானுல், யானென்கின்ற தோற்றமானது தெரியாமல் பிரமமே கூடஸ்தமான வத்துவிதஸ்வரூபமாம்; வேதங்களாற் றுணிந்த பிரமமு மதுவேயாம். †— வெகுவாயிருக்கின்ற வன்னுச்சிரம பேதமான விசேடத்தைவிட்டு, பயமில்லாமல் ஈடணுத்திரியத்தில் தினையளவும் பற்றில்லாமல் தரித்திரத்தை யுறுதியாகவடைந்து, செல்வங்களை போர்செய்கின்றசத்துருக்களுக்குக்கொடுத்து, அகம்பாவத்தைநீக்கி, சரீரத்தினது தொழிலைவிட்டு, அச்

கஅ. எங்ஙனந் தேகோக நீங்குமென்றவதற்குச் சாதனங் கூறல்.

ககூ. அத்துவித ஞானமடைதலைக் கூறல்

உ0. விடயசுகம் விடுதற்குச் சாதனங்கூறல்.

* இ-ம். இச்சாதனங்களாற் பவமுந்தொழிலும் பற்றறநீங்கியிச்சமாகிய ஞானம் வெளிப்படுமென்பதாம்.

† இ-ம். விடயசுகம்விட்டுப் பிரமசுகஞ்சேரி லகம்பாவநீங்கி நீ யத்துவிதப் பிரமாவாயென்பதாம்.

சத்துருக்களிடத்தில் பிச்சையைவாங்கி எனையும் விட்டு.— பாரமில்லாமல் இப்படிநின்றால், உயர்வுக்

உக. இங்ஙன நிற்கி னீயே பிரம மாவாயென் றருள் செய்தல்.

குயர்வாகிய பிரமம் நீயாகக்கடவாயென்று அந்ததிரி துலமுனியானவர் சொல்லக்கேட்டு, மலையுடன் பொருந்துகின்ற புயத்தையுடைய பகீரதன், மனதில் செய்வதானகுணத்தை விரும்பிநாநாவிதமான தனது

உஉ. செல்வ மனைத்துந் துறத் தல்.

தொழிலில்பகீரதவரசனிருப்பதானான்.*—சிலகாலம் போனபின்பு சிறப்பான வோரக்கினிஷ்டோமயாகஞ் செய்து, நீதியாகவளர்ந்த சம்பத்தெல்லாம் பாத்ரா பாத்ரம்விசாரித்துதரித்திரரானபிராமணர்கள், தெய் வங்கள், உறவினர்கள், முதலாக வந்தவர்களுக்கு கொடுத்து, தரித்திருக்கும் வஸ்திரமொன்றேயல்லா

உ௩. துறவியா ய்த் தனியே சஞ் சரித்தல்.

மல் மூன்றுதினத்தில் வேறில்லாதவனானான்.— சகல ருங் கண்ணீர்விட்டழ சகலமு மினிமையாகவிருந்த தனதுதேயத்தை அடைதற்கரிய சத்துருக்களுக்குக் கொடுத்து, தரித்திருக்கின்ற வோர்வஸ்திரத்தை யுடையவனான பகீரதன், நினைத்தற்கரிய முனிவனாய் ஞானமுனிவர்கள் குணத்தையடைந்து, தன்னுடைய விடுதற்கரிய தேயத்தைவிட்டு, தனியனாக சஞ்சரிக்கத்

உச. அகம்பாவ நீங்கி யாத்மஞான முதயமாய் விஸ் ராந்தி யடைதல்.

தொடங்கினான்.— வதனத்தினாலும், நாமத்தினாலும், பார்த்தவர்களறியாத பழையவூறுகடோறும், மலைக டோறும், காடுகடோறும் தீரனாய் அடைந்தான்; மனதிலுள்ள இச்சைகளனைத்தையும் சிலதினத்தில் வெளிப்படுத்தினான்; இப்பொழுதே மேலான சாந் தத்தினால் ஆத்மாவினிடத்தில் விஸ்ராந்தியடைந்

உரு. ஞானத் தாற் றேகாபிமான நீங்கி நிற்றல்.

தான்.§—பூமியெல்லாஞ் சஞ்சரித்து, ஒருதினம் சத் துருவுக்கு தான் முன்புகொடுத்த விளக்கமானபட்ட ணத்திற்புகுந்து,சகலகரணங்களையும்சயித்தபகீரதன் அசத்தியமில்லாத மந்திரிகள் எனையோர்கள் வீடுக டோறும்போய்பிச்சைவாங்கினான் கிரீடத்தையுடைய வித்தப் பகீரதவரசனைப்பார்த்து எதிரேபார்த்தவர்

உசு. ஆத்மபோ கத்தா லநாத்ம போக நீங்கிநிற்றல்

கள் கண்ணீர்விட்டழுதார்கள்.— மிகுந்த வாராதனை கள்செய்து அரசாட்சிசெய்து இரட்சிப்பாயென்று இவன் பட்டணத்தைப் பெற்றிருக்கின்ற சத்துருவும் சொல்லவும், பிச்சையேயல்லாமல் வேறொன்றும் துரும் பையாவது விரும்பாமலிருந்து, சிறிதுநாள் ஈததிசய

உஎ. சமாதி

மென்று யாவரும் வாட்டத்தையடைய சுயமாகவே புறநாட்டிலும் சென்றனன். †—சாந்தமேஸ்வரூபமா

* இ-ம். சர்வசங்கற்பப் பரித்தியாகத்தினாற் பவத்துன்பநீங்கி மாத்மசுகமுண் டாமென்பதாம்.

§ இ-ம். சர்வசங்கற்பப் பரித்தியாகஞ்செய்து ஆத்மநிட்டையினா லப்ரோக்ஷ [ஞானம் பெற்றாரென்பதாம்.

† இ-ம். சமாதியனுபவங் கைகூடினதென்பதாம்.

ஞானநீங்கிச் சகச ஞான முதிக்கும் பொருட்டாசிரிய ரெதிரிட்டிருவரும் பிரமாநந்த லீலையாகச் சஞ்சரித்தல்.

உஅ. சகசஞான முதயமாதல்.

உகூ. தமதுசிதாநந்த போகத்தாற் றேவ போகமுந் திரணமாக நீங்குதல்.

௩0. ஸ்வரூப சாக்ஷாத்காரமாய் விளங்குதல் தெரிவிக்கும் பொருட்டரசாங்கஞ் செய்யும்படி பிராரத்த கன்மங் கூட்டிவித்தல்.

௩க. முன்னுட்டோர் விருப்பப்படி யதற்கு யரசனுதல்.

௩௩. உபசாந் தனுயிருந்து அரசு செய்தல்.

௩உ. இரண்டாம் வினுவுக் குத்தரங்கூறல்.

கிய மனதுதளர்ச்சியில்லாமல் ஆநந்தமடைந்து, ப்ரகாசம்பொருந்திய தனதாத்மதிருஷ்டியில் விளையாட்டையடைந்து, வரப்பட்ட திரிதுலராகிய சற்குருவை தோத்திரஞ்செய்து கூடி, மலைகளிலும் கானகங்களிலும், நாடுகளிலும், அவர்கள் சஞ்சரித்தார்கள்.—

ஆசாரியரும் சீடனும் பூரணமான சமத்துவத்தையடைந்து, இரண்டுபேரும் குணத்திற் சமமானவர்களாய் விளையாட்டினுல் சரீரத்தைச்சுமந்து, கருப்பத்திலுண்டாகிய சரீரமிருந்தென்னபோயென்ன இச்சித்தபடி சஞ்சரித்து ஒற்றுமையாக உள்ளபடி இருக்கக்கடவதென்று நன்றுயாலோசித்து,— துக்கமடையாத் சுகத்திலும், துக்கத்திலும், நடுவினும், சுகமடையாதவர்களாய், திரவியங்களும், ஸ்திரீகளும், இசைந்த செல்வங்களும், அணிமாமுதலிய வஷ்டவயிஸ்வரியங்களும், முன்பாகவிருப்பமுற்று சித்தர்கள்கொடுத்தவைகளை ஆசையில்லாமல் மிருதுவான திரணத்துக்கொப்பாகி விட்டுநீங்கி, மற்றொரு மேன்மையான தேயத்தில் போயினுர்கள் †—புத்திரனில்லாத அந்தப் பெரியபட்டணத்தரசன் மரித்தமாத்திரத்தில், மந்திரிகளனைவரும் நன்மையையுடைய அரசனெவனென்று யோசிக்குங்காலத்தில், அற்பமான பிச்சையையுடைய முனிவனுகிய அழகையுடைய பகீரதவரசனைப்பார்த்து, ப்ரகாசிக்கின்ற கிரீடத்தையுடைய அரசனுகச்செய்ய,— பகீரதனுனவன் இராசாவாகி அனேகம் பெரிதானபடைகள் சூழும்படியாக பூமிபாலனஞ் செய்வதை பழைய பட்டணத்தோராகிய மந்திரிமுதலியவர்கள் கேட்டுவந்து, கிரமமாக நீர் முன்புவைத்த எங்களுடையவரசன் இறந்தான், நாங்களனைவரும் ஆதரவுகாண்கிலேம், நீரே இராசாவாக வேண்டும்.—ஆசியாமல் வலியவந்த செல்வத்தை வெறுக்குதல் நல்லதன்று சம்மதிக்கவேண்டுமென்று நினைத்து, மனக்களிப்பினுல் பிரார்த்திக்கப்பார்த்து அழகுவிளங்காநின்ற மார்பையுடைய பகீரதவரசன் போய் திடமான பூமிமுழுவதையு மாண்டு இருக்கும்போது, மகாமௌனத்தையும் உபசாந்தத்தையும் சமத்துவத்தையு மடைந்து, ஆசையில்லாமல்.*—

மாச்சரிய மில்லாமல் வந்தவியவகாரங்களின் ஒரு மார்க்கத்தி லிருந்து, துதிக்கப்பட்ட அதிசயமில்லாதவனுப் பாட்டன்மார்கள் கரையேற மிருந்த வநேக

† இ-ம். சகசசமாதி கைகூடினதாம்.

* இ-ம். துறந்த மனவல்லபத்தாற் பிரமசாக்ஷாத்கார சுகமாய் விளங்கினுரென்றதாம்.

வருடந் தவஞ்செய்து, நிந்தனையற்ற தபசினால் தேவ நதியைக் கொண்டுவந்து இந்தப் பூமியின்மேல் புகழழியாமல் ஸ்தாபித்தான்.†—

பகீரதன்கதை

முற்றிற்று.

---

# சிகித்துவசன் கதை.

## அவதாரிகை.

முற்கதையின் முன்புறப்பற்றையு மதனுலகப்பற்றையுநீக்கிப் பின்றனது முயற்சினாற் பிரமசாக்ஷாத்கார மடைந்ததைத் தெரிவித்து, இவ்வனுபவம் ப்ரதிபந்த சேடத்தினாற் றானடைவதற் கரியதானாலு மநேகவுபாயங்களாற்போதிக்கு மாசாரிய வல்லமையினா லுண்டாமென்பதை யறிவிக்குநிமித்தஞ் சிகித்துவசன் கதையை நிரூபிக்கிறார்.

---

௧. மனதைக் கரைத்துச் சிகித்துவசனைப் போலவுணர்விற் சுகிப்பாயெனல்.

மனமென்கின்ற பெரியபட்சியைமுன்னீக்கித் தூத்தியசிகித்துவவரசனைப்போலஉபசாந்தமுடையவனாய் உனதாத்மஸ்வரூபத்தில் மூழ்குவாயென்று வசிட்டமுனி சொல்ல, ஆநந்தானுபவ போதமாயிருந்துள்ள அந்தச் சிகித்துவசனானவன்யார்? ஆசிரியரே? அனைத்தையுந் தாங்காநின்ற ஞானயானது மேலுமேலும் பூரணமாவதற்கு அனுக்கிரகிப்பாயென்று அவ்விராமன்கேட்க, தவத்தையுடைய வசிட்டமுனியுஞ் சொல்லத்தொடங்கினார்.—

௨. சிகித்துவசனிலக்கணங் கூறல்.

துவாபரயுகத்தில் முதலிற் பிறந்தவன், ஏழுமனுக்க ளிறந்தகாலத்தில் சூரியனுக்கொப்பான மாளவதேயத்துக்கரசன், சிகித்துவசனென்னு நாமத்தையுடையவன், நீதியையுடையவரசன், ஆசைமுதலாகிய துற்குணமில்லாதவன், கொடைமுதலிய சற்குணங்களியாவு முள்ளவன், சொற்கலகமற்ற மௌனத்தை யுடையவன், சமமுந் தபமுமாகிய குணங்கணிறைந்தவன், மிகவு நன்மையையுடையவன்;—

௩. மனைவியோடுஞ் சுகித்திருத்தல்.

சுராட்டிரதேயத் தரசன்பெற்ற சூடாலையென்னுந் தவப்பெண், மயிலுக் கொப்பானவள், கெடாத சற்குணத்தினால் தனக்குத்தானே சமானமானவள், அச்சூடாலையை அச் சிகித்துவசன் கலியாணஞ்செய்தான். தளர்வற்ற மனமொத்து பிரிவில்லாமல் செய்யப்பட்ட கிரியைகள் வேறுபாடில்லாமல் பெருமையுள்ள சகலகலைஞானங்களுக்கும் வல்லமையுள்ளவர்களாய் இருவர்மனமு மொன்றாய் இனி

---

† இ-ம். பிதாமகாள் முதலிய சிவர்க ளுய்யும்பொருட்டுத் தபோமனவல்லமையாற் கங்கையைக் கொண்டுவந்தா னென்பதாம்.

௯. சனா வரு மென்றதற் கஞ்சுதல்.

மையுடன் வாழ்ந்தார்கள்.— இரண்டுசரீரத்துக்கும் ஒருபிராணனைப்போல இரண்டுபேருங்கூடி எவ்வன்னசுகத்தை இன்பமாகப்புசித்தார்கள்; சிறப்பையுடைய வருடங்களானவை இப்படியே அளவின்றி நீங்கினவளவில், ஒரு நிச்சயமுமில்லாத வெவ்வனமானது உடைபட்ட கடசலத்தைப்போல ஓடிப்போக, புனலினுள்ளகோகனகத்தின்மேல்பனிக்கட்டியைப்போல மூப்புவந்தெய்தியது.— உள்ளங்கைசலத்தைப்போல, நாடோறு மாயுளானது மிருதுவாகக்கழிந்துபோக மிகுந்து வருஷிக்குங் காலத்தி லுள்ள சுரைக்கொடியைப்போல, நீங்காதவோராசையே விசாலமாக சரற்காலத்தில் நதியின்சலத்தைப்போல எழிலானது சீக்கிரத்திற்போக சரீரத்திற் பொருந்திய நல்ல இன்பங்களனைத்தும், வில்லைவிட்டு நீங்கின அம்புகளைப்போல செல்லும்.*— வாழையானது, அடைந்தகருப்பத்தைப்போல, ப்ரயோசனமற்ற தொழிலானது இராகத்தையடைந்தது. உரிமையாக அவ்விடத்தவர்கள் சிந்திப்பார்கள். எதைப்பெற்று மனமானது திரும்பயாதிலுஞ்செல்லாததோ அதுமிகவுநன்மையாம்; இச்சமுசாரத்தின் முழுகுபவர்களுக்கு அப்பகுப்பருமையாம்; திரமாக அத்தியாத்தும ஞானசாஸ்திரமே சநநவியாதியை நீக்குமவிழ்தமாம்.— இருவர்களும் ஆத்துமதத்துவ ஞானமாகிய ஒன்றினாலேயல்லாமல் மற்றொன்றினால் சநநநீங்காதென்று சிந்தித்து, நிலைபெற்ற வாத்மஞானதினராயும், அதில் மனமுடையவர்களாயும், அதையடைந்தபிராணனை யுடையவராயும், எப்போதும் சொல்லப்பட்ட அதினிட்டையை யுடையவராயும், அதற்கடுத்த சத்துக்கள் சார்பையுடையவராயும், அறிஞர்கள் ஆராதனைக்கடுத்த செய்கையினால் சற்றுமிடைவிடாமல்பழக்கமுள்ளவர்களாயும்,— தமக்குள் தாங்களறிந்தவர்களாயும், அதற்கடுத்தான ஒழுக்கத்தைப்பூண்டுநெடுங்காலம் மிகுந்தகளிப்புள்ளவர்களாயும், ப்ரகாசித்தார்கள். பின்னந்த விவேகப்பெண்ணான சூடாலையானவள், மறுமைக்காகியநன்மையான பதக்கிரமத்தினால் மூதறிஞரானவர்கள் அனுக்கிரகித்த சாஸ்திரார்த்தங்களைத்தரிக்க, தகுந்தமாத்திரம்

௰. விடய சுகாநுபவ நீங்குமெனல்.

௯. நித்தியசுகத்தைக்கொடுக்கின்றஞானநூலே சநநமரணத்தை நீக்குமென் றாலோசித்தல்.

எ. சாது சங்கத்துடன்கூடி யாத்மவிசாரஞ் செய்தல்.

அ. சூடாலை தனித்துச் சூட்சுமவிசாரஞ் செய்தல்.

க. ஆத்மாவும் அஃதெரிந்து நன்றாய்க் கேட்டு,‡—நித்தியாதகாரியதை மறைக்கு மோகமும் மும் காரியமில்லாமையும் இரண்டுமில்லாமல்

* இ-ம். சரைவ ன் சுவானுபவங்களனைத்து நீங்கி மரணமுண்டாமென விதிவிராசை தோற்றிற்றென்பதாம். [பவமாய் விசாரிக்கத் தொடங்கினதாம்.
‡ இ-ம் இருவகு மாத்மவிசாரஞ்செய்வதிற் றீவரமாகச் சூடாலை தனித் தனு

மஃதை யுடையவனு அஃதிதிக்கும் இடமுமாகிய நான்கையும் விசாரிக்கத் தொடங்கி முன்னாத்ம ஸ்வரூபத்தைவிசாரித்தல்.

௯௦. இந்திரியங்களைக்கண்டு தேகத்தையு மனனதக்கண் டிந்திரியங்களையு நியதிகளைதல்.

௯௧. புத்தியைக்கண்டு மனதையு மகங்காரத்தைக் கண்டு புத்தியையு நியதிகளைதல்.

௯௨. சீவனைக் கண்டகங்காரத்தையும் ப்ரத்யேகாத்மாவை தரிசித்துச் சீவனையு நியதிகளைதல்.

௯௩. ஆத்மதரிசனமா யதனாற் சீவன் விளங்கின தறிதல்.

௯௪. மோகவிலக்கண முமஃதுடை யவனையும் விசாரித்தல்.

தாவள்யமாய் விளங்கிய நல்லறிவினால் சூடாலையானவள் விசாரணை செய்கிறாள். தெளிவாக ஆத்மாவை முன்னே பார்த்து யானென்றதைச் சொல்லுகின்றோம், மனதில் நீங்காத இந்த மோகமியாது, இஃது யாருக்குரியது, எந்தப்ரகாரம் யாதினால் எவ்விடத்திலுண்டானது,— முன்னே தோற்றுவதான தேகத்தை நானென்னில், சடமாகவு மூடமாகவு மிருப்பதனால் நானென்றுரைக்கத் தக்கதன்று. இவ்விதமானதேகத்தை யறிந்தசைப்பிக்கின்ற பத்திந்திரியங்களையு நானென்னில், தண்டினாலோட்டை யசைக்க அஃதசைவதுபோல சபலசித்தத்தினால் மூடமாய்த் தனியேயிருக்கின்ற இப்பத்திந்திரியங்களும் அசைகின்றன, அதனாலும் நானல்லனவாம்.—இந்திரியங்களை யசைப்பிக்குஞ் சங்கற்பமென்கின்ற சத்தியையுடையதாகிய மனதை நானென்றால், அதுவும் கவண்டினால்வீசச் செல்லுங் கல்லைப்போல புத்திநிச்சயத்தினால் அசைகின்ற சடமாகு மதனால் நானப்புத்தியுமல்லவாம்;— புத்தியை யசைப்பிக்கின்ற தீயவகங்காரத்தை நானென்றால், ப்ரயோசனமில்லாததாய் பராதீனமாய் குழந்தைகளின் பிரமையில் பிசாசந் தோற்றும்விதத்தைப்போல சீவனாற் றோற்றுகின்ற விதுசடமாம்; ஆதலாலிவ்வகங்காரமு நானல்லவாம். அகங்கார்த்தை வசைக்குமென்றுரைத்த சீவன் நானென்னில் அதுவும் கிரியையே வடிவமாய் பிராணாகாரமாய் அகத்தில் இருதயத்தற்று மிகவுமிருதுவாயிருந்தும் ப்ரத்யேகாத்மாவாற் சுகிக்குமதனா லச்சீவனு நானல்லவாம்.¶— சீவனைச் சுகிப்பிக்கின்ற விதுவே ஆத்மாவாகிய வுண்மைஞானமென்று உணர்ந்தேன். இவ்வறிவானது விடயங்களாற் களங்கமடையாமல்தெளியும், எனதாத்மஸ்வரூபமாய் நித்தியமான ஞானஸ்வரூபமா மிதனால் சீவன் சீவிக்கும். இஞ் ஞானஸ்வரூபத்தினால் விடயவஸ்துக்களிற் பிரமிக்கின்ற சீவன் சீவிக்குந்தொடர்பைச்சொல்ல நினைக்குமிடத்து, வாயுவினால்வரும் வாசனைபோலவும் பள்ளத்திற்றங்குஞ் சலம்போலவுமாம்;†— மித்தையாகியும் மூடமாகியு மிருக்கின்ற விடயங்களின் உணர்ச்சியால் ஞானஸ்வரூபசத்தியானது களங்கமுள்ளசடரூபமாய், மிகுந்தசலத்துக்குள் அக்கினியைப்போல தனதுருவத்தைமறந்துசீவனும்,

¶ இ-ம். சித்தைத் தானெனக்கண்டு சீவன்முதலியவற்றைத் தானல்லவெனத் தள்ளியதாம்.

† இ-ம். ஆத்மா சயம்பிரகாசரெனவு மதனாற்சீவன் விளங்குமெனவு மறிந்ததாம்.

உண்மையாகிய சிற்சத்தியானது, இந்தப்பிரகாரஞ் சீவனாய் விடயத்தை விரும்புதலினால், ஐயோ! மித்தையாகி, மூடமாகி, ஆத்மஞானத்தினால் றெரிவிக்கத் தெரிந்தது§— இந்த ஆத்மஞானமானது, யாதினால் றெரியப்பட்டதென்றால், தன்னாலன்றி வேறொன்றினாலுமில்லை. முடிவற்றகாலத்தினால் அறியத்தக்கவாத்மஞானத்தை யறிந்தேன், அம்மம்மா!!! முதன்மையான சித்துவியாபகத்தை அந்தமாக சிந்தியாததினால் ஆறிந்திரியமுதலிய வனைத்தும் உண்டாயினவாம்; அவ்வறிவைச் சிந்தித்தால் அம்மனமுதலிய சகலமுமித்தையேயாம். ‡—அளவற்றபூரணஞானமே இவ்விடத்திலுள்ளதாம்; இந்தப் பூரணஞானத்தை மகாசத்தையென்றுஞ் சொல்லுவார்கள். துன்பமிகுந்த மாசுநீங்க சமத்துவமாய் அகம்பாவமற்ற ஸ்வரூபமாகிசுயம்ப்ரகாசமானது, ஏககாலத்தில் ப்ரகாசிப்பதாயும், நித்தியமாயும், சுத்தமாகியுமிருக்கின்றதிடமுள்ள மேலான பிரமமென்றும் பரமமென்றும் நாமத்தைத்தரித்துவழங்கும்.— இந்தப்பிரகாரம் நாடோறும் தனதாத்மஸ்வரூபத்தில் சுகிக்கின்ற மனோதிருட்டியினால் தவறாத சுபாவமான நிலையினின்று அவாநீங்கி விடயசங்கமெவ்வளவு மில்லாமல், தொந்தம்விட்டு செய்கையில்லாமல், விருப்பு வெறுப்பொன்றுமில்லாமல், பற்றில்லாத வியல்பான செயல்களைச்செய்து மேலான பிரமப்ரயோசனத்தினால் மனம்பழுத்து.— உள்ளத்திற்பொருந்திய பரிபூரணத்தையடைந்து உவமானங்களுக்கு அதீதமாய் யாவராலும் ஆராய்ந்தளவிடக்கூடாத நிச்சயமாகிய தனது விவேகத்திலுண்டான மிகுந்தவப்பியாசமிக, தனதாத்மஸ்வரூபமானது ப்ரத்யக்ஷமாய் மிருதுவான புட்பக்கொடியைப்போல விளங்கினாள். நிந்தித்தற்கரிய புதுமையான பேரழகுமிகுந்த இந்தச் சூடாலையின் றேயுசை இனிமையாகச் சிகித்துவசன் பார்த்து,†—இது நான்பார்த்தறியாத அழகென்று அதிசயித்து சிகித்துவராசன் சொல்லுகிறான். முன்னெவ்வனத்திலுள்ள வழகை திரும்பப் பெற்றவள் போலவும், பேரழகை யநேகமாக வடைந்தவள்போல

௬௫ மோகமுதிக்குங் காரணம் விசாரித்தல்.

௬௬. இவ்விசாரங்களாலாத்மாவே பிரமமென்னு மத்துவிதஞான முதயமாதல்.

௬௭. சகத்தி லிச்சொரூபானு சந்தான முதிர்ச்சியாயிற றெனல்.

௬௮. அத்துவித ஞான வபரோக்ஷ சாக்ஷாத்கார ஸ்வரூபமாதல்.

௬௯. சூடாலையின ழகைப்பார்த்தரச னதிசயித்து வினவுதல்.

§ இ-ம். ஆத்மா தன்னை விடயமாகக்கண்டு மயங்கின மயக்கமே மோகமென்று மஃதுள்ளவன் சீவனென்று மறிந்ததாம்.

‡ இ-ம். ஆத்மாவே சீவன் முதலிய சகத்தாக விளங்குமே யன்றி வேறின்றென்னு மனுபவமாயறியாததே மோக ... டாவதற்குக் காரணமாயிற்றென்பதாம்.

† இ-ம். சமாதியினின்று நீங்கிச் சகச நிஷ்டையைக்கூடிச் சர்வம் பிரமமயமென்கின்ற நிரதிசயாநந்த சாக்ஷாத்கார வடிவமாகப் பிரம தேசசாய் விளங்கினாளென்பதாம்.

வும், தேவாமுதம் புசித்தவள்போலவும், யாவருக்கும் பொருந்துதற்கரிய பிரமபதத்தை அடைந்தவள் போலவும், பூரணாநந்தம் நிறைந்தவள்போலவும், களங்கமற்றவளே! நீ விளங்குகின்றாய்.—போகத்தை யிச்சியாமல் உபசாந்தமாகியும், அசைவின்றி நிற்ப தாகியும்,ப்ரகாசமுண்டானதாகியும், கெம்பீரமாகியும், உன்மனமிருக்குந் தன்மையென்ன? சரீரத்திற்பெற் றிருக்கு மழகும் மனதிலுள்ளவழகும் உண்டான தெப்படி? நீ கற்பினாற்சொல்லென்றுகேட்ட தலைவ னுக்கு சூடாலையானவள் சொல்லுவாள்.§—அற்பமு மில்லாமல் அற்பவுருவமாயிருக்கின்ற இச்சகத்தை நீக்கி மகத்தான சேடித்த வொப்பற்ற ஞானஸ்வரூபத் தைப்பெற்றேன்; அதனால் அழகையுடையவளாய் ப்ரகாசிக்கின்றேன். அணுவுக்கணுவாகியும், ஒரு தன்மையாயும், உற்பத்திநாசமில்லாததாயும், மிஞ்சின தெதுவோ அதைத் தெரிந்துகொண்டேன்; அதனாலே அழகையுடையவளாய் ப்ரகாசிக்கின்றேன்.— சேய் மையாயிருக்கும் போகங்களை அனுபவியாமலிருந்தும், அனுபவித்ததுபோல சுகத்தையடைந்து துன்பப் படாமல் இராகத்துவேடநீங்கின அதினால் அழகை யுடையவளாய் சுகிக்கின்றேன், பெரிதான விராகத்து வேடமாகிய விரண்டும் ஈனச்செயலுள்ள தொழிய ராகவும், ஞானமாகியமகாமாதர்கள்பக்கமாய்சாஸ்திர திருஷ்டியிற் சுகிக்கின்றேன், அதினால் தேகவழகை யும் மனமகிழ்ச்சியையு மடைந்தேன்.—அற்பமும் ஸ்வரூபமில்லாத சகங்களனைத்திற்கும் சுயம்ப்ரகாச மான தெய்வமாய் பூரணமாயிருப்பவளென்று ஆத்மா வில் ரம்மிப்பேன், அதினால் யான் சிறந்தவழகை யடைந்தேன். திரளான இச்சகலத்தையும்விட்டேன்; விலக்ஷணமாய் அசத்தும் சத்துமாகிய சேடித்தவதை பூரணமாகப் பெற்றேன்; அதினால் அழகுடைத்தான வளாய் ப்ரகாசிக்கின்றேன்.—நயனங்களினாலும், பல விந்திரியங்களினாலும், மனதினாலும், இவ்விடத் தெதைப்பார்ப்பேனோ அத்திரிஸ்யத்தையே அற்ப மும் பாராமல் அக் சகத்விலக்ஷணமாய் அற்பமாகாத சைதன்யத்தை அகத்தின்கண் சுகமாகப் பார்ப்பேன்; அதினால் உண்டாகியவழகிதுவென்று சூடாலையானவு ளுரைக்க, அவைகளை ஊன்றிப் பாராதவனாய் அச் சூடாலையை மதியாமற் சிறித்து, சிகித்துவவாசன்

௨௦. சூடாலையி னழகைப்பார்த் தரச னதிசயித்து வினாவுதல்.

௨௧. அழகுண் டானதற்குக் கார ணமான வாத்ம சாக்ஷாத்கார நித் தியாநந்த வனுபவ விலாசத்தை ஏழு விதமாகப் பகுத் துச் சொல்லுதல்.

௨௨. இதுவுமது.

௨௩. இதுவுமது.

௨௪. இதுவுமது.

§ இ-ம அரசனரசிக் கழகுண்டான காரணம் வினாவினதென்பதாம்.

மற்றொன்றைச் சொலலத்தொடங்கினன். ¶— வஞ்சிக்கொடிபோன்ற இடையையுடைய பெண்ணே? தகாத வசனத்தைக்கூறினய். அறிவில லாதவர்களைப்போல மயங்குகின்றய், மேலாகிய வரசாது செல்வத்தில் விளங்குகின்ற நீ ஆத்மாவில் எங்ஙனம் விளங்குவாய், அற்பமான சகத்தைவிட்டு அற்பமல்லாத பூரணவஸ்துவை அடைந்தசத்துக்கள் ப்ரத்தியக்ஷமான சகத்தை சேரார்களாயின், பஞ்சிலு மிருதுவான பாதங்களையுடையவளே? அந்தச்சத்துக்கள் ப்ரத்தியக்ஷமாக ப்ரகாசிப்பது எங்ஙனங் கூறுவாய்?...அநுபவியாதயோகத்தினல் யானுண் மகிழ்ச்சியானேனென்று அப்போகத்தை நீக்குபவர்கள் தரித்திரரைப்போல அபாக்கியவான்கள் எப்படி விளங்குவார்கள், சொல்லக்கடவாய். செவ்வையாகச் சகத்தைப்பார்க்கிலேம். வேறே பாத்மாவைப் பார்ப்போம் என்றுசொல்லுபவர்கள், இருந்துசொல்லப்பட்ட இந்த வசனத்தைத்தவிராமல் அவர்கள் ப்ரகாசிப்பதெவ்வண்ணம், கூறுவாய்?— ஆதலினல் பேதமை யுடையவளாயும், அறிவில்லாதவளாயும், சஞ்சலமுள்ளவளாயும். பல வசனங்களினுலும் மிகவுஞ் சந்தோஷிக்கின்றுயென்று சொல்லிவெளிப்படச் சிரித்து அரசனனவன் வேறோரிடத்திற் சென்றன். சூடாலையானவள், அவ்வறியாமைக் கிரக்கமுற்று ஆத்மஞானத்தில் விஸ்ராந்தியடைந்து, சுகியாதவனய் வேற்றுமையாக எனது வாக்கியத்தை அரசனறியவில்லையென்று சொன்னள், —பின்பும் இராசாவுஞ் சூடாலையும் முற்காலம்போல வேற்றுமையில்லாமல்

௨௫. தலைவனிடத்துள்ள வன்பினற் பக்குவமில்லாதகாலத்திற் போதிக்கத்தகாத சுவானுபவ சாக்ஷாத்காரமாகிய பரஞானத்தைப் போதித்தும், அதை சிரவணத்தின லுண்டான வபரஞானபுத்தி நான்கினல் மறுக்கத்தொடங்கிச் சமாதியிற் சேடித்த வஸ்துவானதினனும். அஃதையறிந் ததுமயமானதினனும், சகசத்திலொன்றிலும் விருப்புவெறுப்பின்மையினனும், வாக்கியார்த்த திருஷ்டியினனும் சாக்ஷாத்காரத்திற் சர்வவியாபகமானவொன்றுதலினனும், பூரணமானதினனும், அணுவுக்கணுவான வஸ்துவைத் தரிசித்ததுவா யிருக்கின்றதினனும், விளங்குகின்றே னென்கின்ற எழுருத்தத்தையும், அரசபோகத்திற் றிகழ்கின்றவர்களாத்மபோகத்திலெங்ஙனந்திகழ்வான். தேகத்தை நீக்கித் தேகியானவன் பின்பெங்ஙன மத்தேகமாய் விளங்குவான், போகத்தைவெறுத்த தரித்திரனெங்ஙனஞ் செல்வத்திற் றிகழ்வான் காண்பவையைநீக்கிக் காண்பவனயிருப்பவன் வசனத்திலெங்ஙனம் விளங்குவானென்னு நான்கு யுத்தியினன் மறுத்தானெனல்.

௨௬. இதுவுமது

௨௭. சுவானுபவத்தையிங்ஙன பிழுத்தலுக் கிரங்கி யிவனுக்கிவ்விதார்த்தத்தை யற்புதங்களோடு மறிவிக்கு நிமித்த மணிமாதி சித்தியை யடையத் தொடங்கி யாதனங் கட்டல்.

௨௮. இதுவுமது.

¶ இ-ம் பிரமானந்தமே வடிவமாய் விளங்குகிறேனென் றுண்மைபா யறிவித்தாளென்பதாம்.

* இ-ம். சூடாலைகூறிய வேழருத்தத்துக்கும்பகுத்துச்சொல்லும்விவேகமின்றி நான்கினடக்கிச் சொன்னாராயினு மஃதின் மூன்றிற்கோருத்தியும் இரண்டுக்கோருத்தியும் மற்றிரண்டுக்கு மிரண்டுத்தியுமா யமைத்துக்கொள்ள வேண்டுமென்பதாம்.

வெகுகாலஞ் சுகித்தார்கள். மிகுந்த வமைதியை யுடையவளாய் அவாவானது சற்றுமில்லாதிருந்தும், சூடாலையானவள் சுயமாகவினைத்து மேலான வாகாய கமனஞ்செய்ய, செய்வோமென்று மிகுந்தபோகங் களின் துன்பநீங்க, சகலத்தையுநீங்கி ஏகாந்த ஸ்தா

௨௯. ஆகாய கமனமுதலிய சித்திகள் வருமார்க்கமியாதென வினவுதல்.

னத்தில் சுகாசனத்தில்இருந்து,¶—பிராணவாயுவை நேரே மேனோக்கும் படியாக வெகுநாள் அப்பியாசித்தாள். என்று வசிட்டமுனிசொல்ல, ஸ்ரீராமன் கேட்டு, மிகவும் வருத்தப்பட்டு வெகுகாலம் அப்பியாசஞ் செய்தால் அரிதான வாகாயகமனஞ்செய்தல் முதலாகிய சித்திகளனைத்தையும் கொடுக்கத்தகுந்த உரித்தானமார்க்கமியாது? அருள்வாயென்றுகேட்க,

௩0. பிராணயாமத்தாற் சித்திகளுண்டாகு மப்பியாசங்களை யறிவிக்கத் தொடங்கல்.

வசிட்டமுனிசொல்லுவார்.— செல்வனாகியசிகித்துவராசன் கதைக்கு மத்தியில் யோகங்கேட்கின்றபடியாலதைச்சொல்லுகின்றேன். இராசாவே! பிராணன் முதலிய வாயுவின்பழக்கத்தினது குணமாகி,மரியாத பிரயோசனத்தைக்கொடுக்கின்ற மார்க்கத்தைக்கேட்கக்கடவாய். எவ்வளவும் வாசனைகளில்லாமல் நீங்கும் படிசெய்து, மனதினிடத்தில் இச் சாதனத்துக்குத்

௩௧. இதுவுமது.

தகுந்த வாசனையே அடைந்திருந்து,—குதமுதலாகிய இரந்தரங்களினது சுருக்கத்தினாலும், மகாமுத்திரையான தானமுதலான குறிக்கின்றதொழில்களின் விதமான முறைமையினாலும், உணவினாலும், சுகாசனத்தினாலும், பரிசுத்தத்தினாலும், மிகுந்த நன்மையுள்ள யோகசாஸ்திரங்களினாலும், பொருட்சிந்தையினாலும்; அதனடையினாலும், மேலான சத்துக்களின் சார்பினாலும், மற்றச் சகலத்தையும் நீக்குதலாலும்

௩௨. இதுவுமது.

சேர்ந்த பிராணயாமத்தினாலும்,— குரோதலோப முதலியவைகளையும், போகங்களையும் நீக்குதலினாலும், சிலபேர்களுக்கு குறித்தகாலத்தில் ஒழியாத பற்றுதலும், விடுதலும், நீங்கியகாலத்தில், கைவசமாக பிராணன்களானவை தேவவடிவமாகின்றபடியால அந்தவாயுக்களின் றன்மையுணர்ந்து அடைந்தவர்களுக்கு பரிசனங்களைப்போலச் சகத்தையாளும் படிசெய்யும்; மோக்ஷத்தைக் கொடுக்கும்; சகல

௩௩. ஆந்தாவேஷ்

சித்தியையுங்கொடுக்கும்.‡— ஆந்திரவேட்டனிகை

---

¶ இ-ம். நாயகனை முன்னிட்டு பரவிச் சாபிராரத்தத்தினால் யோகம்வந்தடுத்ததென்பதாம்.

‡ இ-ம். இச்சாதனத்துக் கிதாமான வாசனைகளனைத்தையுந் தள்ளிக் குதத்துவாரஞ் சிறிகல்முதலிய சாதனங்களினாற் பிராணன் கைவசமானலதையறிந்த புருடனுக் கப்பிராணதிவாயுகளேவலாளைப்போலச் சகமுதலியவற்றைச் சுவாதீனமாக்குமென்பதாம்.

டனியி னிலக்கணமுரைத்தல்.

யென்னு நாமத்தையுடைய ஒப்பற்ற வொருநாடியானது, நூறு நாடிகளினடுவே பொருந்தியிருக்கும், இராகத்தையுடைய வீணையினங்கத்திலுள்ள விருத்தத்தைப் போலவும், நீர்ச்சுழியைப்போலவும், விருத்தமேயாகும்.பொருந்திய இடங்களனைத்தும். அடையும் பிரமாவினிடத்தும், எறும்பினிடத்தும், உண்டான சகலசீவர்களிடத்துமுள்ள சரீரங்கடோறும் உண்டாகி யடைந்திருக்கும்,—

௩௪. குண்டலிசத்தியி னிலக்கணங்கூறல்.

குளிர்ச்சியின் வருத்தத்தினல் நித்திரைசெய்கின்ற பாம்பினுடல்போல கெட்டியாகவளைந்து சதாகாலமும் அசைவற்ற ஆந்திரவேட்டனிகையானது பிராணவாயுவினு னிலையாயிருக்கும், வாழையினது மிருதுவானமலரைப்போல அகத்திலும் வேன்மையாக மிருதுமானதாகும். அவ்வாந்தரவேட்டனிகையினிடத்தில் ஒருகுண்டலிசத்தியானது பரிசுத்தமாய் குற்றமற்ற மேலானதாய் சத்திகளனைத்திற்கும். சயத்தையடையக் கொடுக்கும்.—

௩௫. இதுவுமது.

கோபமிகுந்த பெண்சர்ப்பத்தைப்போல பெருமூச்சுவிடும்; சதாகாலமும் வதனமேலாயிருக்கும்; எப்போதும் சலனத்துக்குக் காரணமாகும், மனப்பெட்டியைச் சேர்ந்திருக்கின்ற நாடிகளியாவுங் இக்குண்டலிசத்தியினிடத்தில் பந்தப்படும். இதனது நாமம் குண்டலிசத்தியாம். வியங்குகின்ற பரிசமான ஞானத்தினது கலையினுற் பரிசுத்தமாகும். †-

௩௬. இக்குண்டலிசத்தியின் பாவனையே கலைகண் முதலியவாய் புரியட்டக சரீரமாமெனல்.

அக்குண்டலிசத்தியானது கிந்தனையினுற் கலையாகும்; ஞானத்தான்ஞானமாம்; சீவனத்தினலழகுபொருந்திய சீவனகும்; மனனத்தினல் மனமாகும்; சங்கற்பத்தினல் அளவற்றசங்கற்பமாமும்; நிச்சயவறிவினல் புத்தியாகும்; அகம்பாவத்தால் வரப்பட்ட வகங்காரமாகும். இப்படிப்பட்ட புரியட்டகமெனனு நாமத்தைப்பொருந்தும்.-

௩௭. குண்டலினிசத்தியே பிராணபான ரூபமாய்ச் சீவனுக்குச்சநந மரணத்தைக் கொடுக்குமெனல்.

குண்டலினியென்கின்ற சிவசத்தியானது, மிகவுநன்மையதாக தேகத்திற் புணர்ந்திருக்கும பிராணவபான வுருவமாதலினல் கீழிலுமேலிலும வருதலும் போதலுமாகும், உறுதியில்லாமல் சமஸ்தமுமாய் ஊர்த்தமுகத்திற் சென்றுலுஞ் செல்லும் சகலமுமாய் அதோமுகத்திற் றிரும்பினுலுந்திரும்பும், தடையில்லாமல்சீவனய் மரணத்தையடைகின்ற பிராணவாயுவும் அந்தக்குண்டலிசத்தியேயாம்.

௩௮. அக்குண்டலினிசத்தி பிராணசலன மின்மிய

தனதிடத்தில் எவ்விதந்திலும் செல்லுதல் மீள்தலைக்கெடுத்து இக்குண்டலிசத்திநின்றல், அகத்திற்சேர பிராணவாயுவைத் தடுத்தலினல் நிலைபெற்ற சீவர்களு

† இ-ம். சதாநாடியின் மத்தியின் விளங்கிய வாந்தரவேஷ்டினியி னியல்பையுமதனிடமாகவிளங்கின குண்டலிசத்தியி னியல்பையுந் தெரிவித்ததாம்.

சைவறநிற்கிற்சராமரண வியாதியுண்டாகாவெனல்.

ச்கு வியாதிவரமாட்டாது என்று சொல்லவும், ஆதியும் வியாதிகளுமாகிய இரண்டுமுண்டாகுதலையும் நசித்தலையும் உமது கிருபையினால் சொல்லவேண்டுமென்று ஸ்ரீராமன் கேட்டவளவில் வசிட்டமுனி சொல்லுவார்.

௩௯. ஆதிவியாதியினுற்பத்தியையியாதென்ற வினாவுக்குத்தரங் கூறல்

*—சரீரத்தினது துன்பத்தை வியாதியென்பார்கள், அந்தக்கரணவாசனையை ஆதியென்று சொல்லுவார்கள். பேதமுள்ளஞானத்தினால் உந்தியினது மூலத்தில் ஆதியானது உண்டாயிருக்கும், உயர்வுள்ளஞானமில்லாமையினாலும், இந்திரியங்களை அடக்கப்படாதபடியினாலும், தங்காநின்ற மனதில் விஸ்தாரமாய் ஆசையும் அகங்காரமும் வளர்தலினாலும்,—

௪௦. இதுவுமது.

இதையடையவில்லையென்கின்ற† அவதானத்தினால் மோகங் கெட்டிப்படும்.§ அம்மோகமிகவுமுண்டாக மழைநாளில், மிகுந்த பனியைப்போல ஆதியானது நெருங்கும். மிகுந்த வாசையானது, வெளிப்பட்டு மூடபாவனையானது முதிருங்காலத்தில் நியமித்தவிபகாரத்தையல்லாமல் கொடியவுபகாரங்களைச் செய்கின்றதினால் சரீரவியாதியுண்டாகும்.

௪௧. வியாதியுண்டாகுதலின் காரணமுரைத்தல்.

துற்புசிப்பினாலும் கொடிய தேயங்களிற் சஞ்சரித்தலினாலும், துறகாலவியவகாரங்களினாலும், செய்கின்ற கிருத்தியங்களில் கட்டுப்படும் பொல்லாங்குகளினாலும், துற்சன சங்கத்தினாலும், கொடியவஸ்துவை நினைத்தலாலும், துராசையினாலும், துர்நினைம்படைதலினாலும்,—

௪௨. இதுவுமது.

நரம்புகளிடத்தில் கணுக்களினதுரந்தரங்கள் சிறுத்தல் பெருத்தலினாலும், நல்லபிராணவாயுவானது ஓடி மிகவுஞ் சின்னாபின்னமாகவும் தேகமுஞ் சிறுதலையடையும். அதையடைந்தால் கேடிதுவென்னுமபடி முன்சொல்லப்பட்ட குற்றங்களானவை, மூலமாக நீண்டவேனிற்க காலத்திலும், வருஷகாலத்திலும், ஆற்றுநீர் குறைவையு நிறைவையும் பெருகின்றதுபோல தேகத்தின்மிகுந்த வியாதியுண்டாகும்.

௪௩. ஆதிவியாதியுண்டாகும்ஸ்தானமுரைத்தல்.

பழையசந்நதி யுள்ளதானாலும், இச்சநநத்திலுள்ளதானாலும், சுபமானாலும், அசுபமானாலும் அளவின்றிய மிகுந்தவாசனையெதுவோ, அது தன்னிடத்தில் அவ்வண்ணமே கிரிகித்துக்கொள்ளும். இவ்வண்ணமாய் ஆதிகளும், வியாதிகளும்

---

* (இ-ம்) குண்டலினிசத்தியினசைவே பவநோயு மஃதின்மையே பவநோய் நிவிர்த்தியுமென்பதாம். [கணமு மஃதிலுற்பத்தியுங் கூறினதாம்.

† (இ-ம்) வாசனாரூபமான ஆதியுந் தேகவருத்தமான வியாதியு மதனிலக்

§ (இ-ம்) செயற்கைத் தொழிலே வியாதியுதிப்பதற்குக் காரண மென்பதாம்.

பஞ்சபூதத்தினு லுண்டாகும்; சொல்லப்பட்ட இந்த
ஆதிகளானவை இரண்டுவிதமாய் நசிக்கின்ற கிரமத்
தை, ஸ்ரீராமா? நீ யான்சொல்லக்கேட்கக்கடவாய்.*-

௪௪. ஆதியானது சாமானியஞ் சாரமெனவிரண்டாமவற்றிற் சாமானியவாதிகெடுகின்ற மார்க்கமுரைத்தல்.

ஆதியானது, சாமானியமென்றும் சாரமென்றும்
இரண்டுவிதமாமென்று சொல்லுவார்கள். சாமானிய
மானது சரீரத்திலுள்ள வியாதியாம்; சாரமானது
பிறப்பாகும். முழுது மிச்சரீரத்திலுள்ள வியாதியா
னது தனக்குரிய வஸ்துவையடைந்தால் நாசமடை
யும், பாவனையான ஆதிகளில்லாவிடின் உண்டாகும்
வியாதியானது நீங்கிப்போகும்.— சாரமென்கின்ற

௪௫. சாரவாதி நசிக்கின்ற மார்க்கமு மாதியினுலுண்டாகாத வியாதியிறக்குமார்க்கமுங் கூறுதல்

சநநவியாதியானது, ஆத்மஞானத்தினுலல்லாமல் எவ்
வளவு நீங்காது, தீருப்படி இது பழுதையென்கிற
அறிவினுலல்லாமல் சர்ப்பம்கெடுவதுண்டோ. சுமை
மிகுந்த ஆதியிலுண்டாகாத சரீரவியாதியானது, மந்
திரத்தினுலும், அவிழ்தத்தினுலும், அநேகவயித்திய
சாஸ்திரங்களை யப்பியாசித்த மிகுந்த வறிவினையு
டைய வயித்தியரென்றும், உரைத்த இத்தன்மை
யாற்கெடும்; இதை யாஞ்சொல்லவேண்டியதில்லை.¶-

௪௬. ஆதியிலெங்ஙனம் வியாதியுற்பத்தி லயமாயிற்றென்கின்ற வினுவிரண்டிற் கதனுற்த்தியைக்கூறல்.

என்று சொல்லியவளவில், ஆதியிலிருந்து வியாதி
யானது எப்படியுண்டாகும்? பின்பெதினுற்கெடும்?
மலைக்கொப்பானவரே? நீர் சொல்வாயென்று ஸ்ரீரா
மன் கேட்டமாத்திரத்தில், வசிட்டமுனி சொல்லு
வார். நிலையாயிருந்தமனதுகலங்கவும் சரீரங்கலங்கும்
சரீரங்கலங்கினு லெதிரேவந்து பொருந்திய ஒன்றை
யுந்தெரியாமல் நேரானமார்க்கம்விட்டு தீயமார்க்கத்

௪௭. இதுவுமது.

திற் பிராணனேடும்.— அர்த்தசந்திரபாணமானது
தைக்கின்ற மிருகத்தைப்போல வழிதப்பியோடும்,
கலக்கத்தினுல் பிராணவாயு நிறைந்திருக்கின்ற சம
மில்லாமற் பாந்துசெல்லும் நாடிகளு நிலையினிற்க
மாட்டாது. சொல்லாநின்ற சீரணமாகியும் அசீரண
மாகியும் மிகுந்த சீரணமாகியும், அசனமானது
தங்குகின்ற சரீரத்துக்கு நாடிகள் பிராணன்களு

௪௮. இதுவுமது.

டைய சலனத்தினுல் நமனுகும்.— சரீரத்தினுள்
விரோதத்தினுல் தரிக்கின்ற அன்னமானது, வேறு
வடிவமாய் தீராத வியாதியாகும். அத்தன்மையால்
ஆதியினுல் வியாதிபிறக்கும், தொடர்பில்லாமல் ஆதி
யானது கெடுமானுல் நோய்களு நாசமடையும். உச்ச

* இ-ம்) பஞ்சதன்மாத்திரையி லாதியும் பஞ்சபூதத்தில் வியாதியுமுண்டானதை யறிவித்து, அதுகளிரண்டுவிதமாய் நசிப்பதைச் சொல்வதாம்.

¶ (இ-ம் அபிமதவஸ்து லபித்தாற் சாமானியவாதியும் ஆத்மஞானத்தாற் சாரவாதியு மணிமந்திரவவிஷதங்களினு லாதியிலுதியாம லசனுதிக்கிரம விரோதங்களினுலுண்டான வியாதிகளு நசிக்கு மென்பதாம்.

ரிப்பான மந்திரத்தினுல் நோய்க ணீங்காநின்றமார்க்
௪௯. வியாதியினுசங்கூறல். கத்தை சொல்லக்கேட்பாய்.‡ எவ்விதத்தில் கடுக்
காய்களானவை சுபாவத்தினுல் மலவிமோசனத்தைச்
செய்கின்றதோ, அவ்வண்ணமே யரலவமுதலிய மந்
திராக்ஷரங்களின் பாவனையினுல் ஆரோக்கியகாரியங்
களைச்செய்யும். மெய்யாகிய புண்ணியமாய் பரிசுத்த
மாகிய தொழிலினுலும், சத்துக்களின்சார்பினுலும்,
பொன்னைப் புடம்வைத்தலினுல் நல்ல தங்கமானது
போல, தவறில்லாமல் மனது பரிசுத்தமடையும்.—
௫௦. இதுவுமது. பரிசுத்தமாக மனதுதெளிந்தால் சரீரத்தில் ஆநந்
தந்தோன்றும்; மெதுவான மிருதுவான பூரணசந்திர
னுதயமானுல் சகங்களனைத்தும் நன்மையாக ப்ரகா
சிக்கமாட்டாதோ. சாத்துவீதத்தையுடைய மனது
தெளிந்தால் பிராணவாயுக்களும் கிரமமாகச் சஞ்சரி
க்கும்; புசித்த அன்னமும் கிரமமாகச் சீரணத்தை
யடையும்; அதனுலே வியாதியொன்று முண்டா
௫௧. குண்டலினிசத்திக்குஞ்சீவனுக்குமபேதங் கூறல். காது.*— ஆதிவியாதிகளான விரண்டும் உண்டாகி
நசிக்கின்ற மார்க்கங்களைச்சொன்னேன்; முன்சொல்
லப்பட்ட குண்டலிசத்தியினது கிரமத்தினுல் முன்
சொல்லிய யோகத்தைக்கேட்பாய். குற்றமற்றபுரியட்
டகமென்று ஒருநாமத்தைத்தரித்த சீவனுக்கு, பிரா
ணவாயுவென்கின்றநாமத்தைத்தரித்த குண்டலிசத்தி
௫௨. குண்டலினிசத்தியினற்பியாசத்தினுலுண்டான சித்திகளுன்கை யறிவிக்கத்தொடங்கி கிரிமாவுமாகாயகமனமுமாகிய விரண்டின் சித்திமார்க்கங் கூறல். யானது, வாசனைக்கிடமாகிய புட்பத்தைப்போல இரு
க்கும்.— சொல்லப்பட்ட குண்டலிசத்தியை, பூரகப்
பழக்கத்தினுல் பூரணஞ்செய்து ப்ரகாசிக்கும்படி
நின்றுல், அப்பொழுது மகாமேருவுக் கொப்பாகிய
வலிமையுண்டாகும்; மிகவுஞ்சரீரம்பருக்கும். பூரகத்
தினுல் பிராண னிறைந்திருக்கின்ற சரீரத்தை சொல்
கின்ற வறிவானதுமேனேக்கினுல் ஒருபோதேஆகாய
கமனஞ் செய்விக்கும்.- சர்ப்பத்தைப்போலவேகமாய்
௫௩. இதுவுமது. தண்டைப்போலுயர்ந்து குண்டலிசத்தியானது விரி
ந்து மேலேசெல்லும் கயிற்றைப்போல, சரீரத்தைக்
கட்டிய நாடிகளனைத்தும் தான்கிரிகித்து தேகமியாவு
மிளையாதவண்ணம், வாயுவினு னிறைந்த தோற்பை
யானது சலத்தின் மத்தியிலமிழ்த்தினுலும் எழுப்பு
௫௪. இதுவுமது. கின்ற தொடர்புபோல மேலேகிளப்பிவிக்கும்.—இந்
தப்ரகாரமே மிகவுமப்பியாசிக்கின்ற யோகத்தினுல்
யோகியரானவர்கள், ஆகாயத்திலெழும்பிக் கொத்திக்
கிரிகிக்கின்ற தூண்டிலிலடைந்த மச்சத்தைப்போல,
சஞ்சரிப்பார்கள். குண்டலினியென்கின்ற சத்தியா

‡ இ-ம். ஆதியில் வியாதி மனக்கலக்கத்தினுலுண்டான கிரமமறிவித்ததாம்.
* இம் வியாதிகள்மனந் தெளிந்தாநந்தமடைதலினசிக்குங்கிரமமறிவித்ததாம்.

னது, சுழிமுனைக்குட்சென்று பிரமரந்தரத்தின் மேலாகப்புறப்பட்டு மேலொரு பன்னிரண்டங்குலத்தினது அளவிலடைவதாகி.—

௩௫. சித்ததரிசன சித்திமார்க்கங் கூறல்.

நாடிகளனைத்தையும்தடுக்கின்ற விரேசகத்தினால் இரண்டுநாழிகைஅடைந்திருந்தால், நீண்டவாகாயகமனஞ் செய்பவர்களை தரிசிக்கலாம். ஞானநுட்பத்தினால் சமீபத்திற் செல்லுகின்ற ஞானதிருஷ்டியினால் ஆகாயத்திற் அணிமாமுதலிய நல்ல வஸ்துக்களைக்கொடுக்கின்ற சித்தர்குழாங்கள், சொப்பனத்திற் றோற்றுவதுபோல, நிலையாகத்தோற்றும்.—

௩௬. பரகாயப்ரவேசசித்திமார்க்கங்கூறல்.

பன்னிரண்டுவிரலளவு வதனத்தின்முன்புசென்று இரேசகத்தினுடைய அப்பியாசத்தினால்நிலைபெற்ற பிராணனானது வெகுகாலம் நிலையாயிருக்குமாயின், பரகாயப்ரவேசஞ்செய்யும், என்ற வசிட்டமுனியை ஸ்ரீராமர், சூட்சுமமார்க்கத்திற் போவதற்கும் பருமனாக வாகாயத்தை நிறைவதற்கும் சரீரத்திற்கு அணுத்துவமும் மகத்துவமும் கொடுக்கும் வண்ண மெப்படி?‡—

௩௭ இச்சித்திகளையடையத் தேகத்துக்குச்சூக்குமத்துவமுந் தூலத்துவமு மெங்ஙன முண்டாயிற்றென்னு மினாவுக் குத்தரங் கூறல்.

கிருபைசெய்வாயென் றிராமர்கேட்கவும், வசிட்டமுனிசொல்லுவார். ஒன்றாகியும் சின்மாத்திரமாகியும், மத்துவமாகியும்,பரிசுத்தமாகியும், உபசாந்தமாகியும், ஒருசம்பந்தமுமில்லாதவஸ்துவாகியும், சூட்சுமத்தில் மிகவுஞ் சூட்சுமமாகியும், சகமல்லாததாகியும், சகத்தைச்சேராததாகியும், பொருந்தியிருக்கின்றது ஒன்றுண்டு; அதுவேசங்கற்பத்தையடைய தன்னைத்தானே பிரிவாகச்செய்யும்.-

௩௮ இதுவுமது.

அநேகமான கலக்கஞ் சூழ்ந்தபோது:சீவனாகும்; சங்கற்பமென்று சொல்லப்பட்ட பிரமையினால் கலங்கப்பட்ட சீவனானவன், மூடமாய் குழந்தைகள்பார்க்கப்பட்ட பசாசைப்போல, மித்தையாகிய விந்தச்சரீரத்தைப்பார்க்கும். அநேக சீவர்களும் இப்படியே எங்ஙனமெனைக் கருதுகின்றார்களோ அந்தப்ரகாரமேசகத்தில், மனதின்கண்ணுள்ள திடத்தினால் அதைப்பார்ப்பார்கள்.—

௩௯. இதுவுமது.

திடமான பாவனையினது அப்பியாசத்தினால், அறிவில்லாதவர்களும் ஒன்றையொன்றினாற் கெடுத்து விஷத்தை யமுதமாக்கி, அமுதத்தை விஷமாக்கி, பொருந்தியிருப்பார்கள், மேன்மை பொருந்திய மெய்ப்பாவனையால் இவ்வுடலானது தூலமாயிற்று, தோற்றப்பட்ட விச்சரீரமானது திரும்பவும் அசத்தியபாவனையால் சூட்சுமரூபமாம்.*—

‡ இம். நான்குசித்தியுண்டாகுங் கிரமமறிவித்ததாம்.

* இ-ம். அகோசரமான சைதன்யம் பாவனையாற் சித்துஞ் சகத்துமாவதுபோல சீவனணுத்துவ பாவனையாற் சூக்குமத்துவமு மகத்துவபாவனையாற் றூலத்துவமு மவனது பாவனாவடிவமான தேகத்துக்கு வருமென்பதாம்.

௩௦. இவ்வணிமாதியஷ்டசித்திகளையுஞ் சூடாலைபெற்று விளங்குதல்

அணிமாமுதலிய அவ் வஷ்டசித்தியினது தன்மையை யடைவதின் பாவனையாலுண்டான யுத்திகளும் இந்த மார்க்கமேயாகும்; தெளிவினால் யோகத்தினது சித்தியை தெரிபவர்களுக்கு ஈதெளிதாகும். காரணமாகிய அணிமாமுதலிய குணசம்பத்தை அப்பியாசிக்கின்றகருத்தினாலடைந்து இரத்தினங்களையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த சகங்களனைத்திலும் க்ஷணநேரத்தில் களங்கமற்ற சூடாலையானவள், லீலைசெய்தாள்.*

௩௧. நாநாவித வுபாயங்களாற் போதித்து மறிவுண்டாகாமையாலஃதை நிறுத்தல்.

தலைவனை நொடிநேரமும்பிரியாதவள் ஆநந்தாமுதமாகிய ஞானத்தை சிறந்த தனதுபுருடனுக்கு பலதந்திரங்களினால் தெரிவித்தும், அந்தவரசனானவன் பரிசுத்தஞானத்தில் விஸ்ராந்தியடைந்திலன். மகாயோகினியாகிய சூடாலைக்குப் பொருந்தியகுணங்களையும் குழந்தைகள் கல்வியை யறியாததுபோல தெரிந்திலன்.—

௩௨. இதுவுமது.

தனதாத்மஞானத்தில் விஸ்ராந்தியடையாததினால் அந்தப் புருடனுக்கு தனது நல்ல ஞானசம்பத்தை யுரைத்திலள். சூத்திரற்கு யாகமார்க்கத்தைச் சொல்லுவாருமுளரோ, என்று வசிஷ்டமுனி சொன்னவளவில், மகாசித்திகளையுடைய சூடாலையானவள் வருந்திச் சொல்லவும், அந்தச் சிகித்துவசனானவன் ஞானத்தை யடைந்திலனாதலால், ஆசாரியரே? மற்றவர்களெப்படி தெரிந்துகொள்ளுவார்கள்.¶

௩௩. வல்லமையுள்ளவாசிரியர் போதித்துமுதியாதவறிமேலெங்ஙன முண்டாமெனி லாசிரியவாக்கியத்தி னம்பிக்கையுள்ள சீடனறிவே காரணமாக வுண்டாகுமெனல்.

அடையும்வகையை சொல்லுமென்று ஸ்ரீராமன் கேட்கவும், வசிட்டமுனி சொல்லுவார். பிரமோபதேசயானது, நம்புதல்மாத்திரம் நன்மையாகச் செய்ததாம், அறிதற்கரிய வாத்மஞானத்துக்கு பரிசுத்தமான சீடனறிவே காரணமாகுமென்று சொல்ல, திரும்பவு முனிக்கு ஸ்ரீராமன் சொல்லுவார்.—

௩௪. சீடனறிவேயேது வென்றாலாசிரியவசனமேது வன்றேவெனில் அஃதேஎதுவென்பதற்கோ ரிதிகாசமுரைத்தல்.

சீடனறிவே கணமானால் ஆசாரியவசனங்காரணமாக, மேலான வாத்மஞானத்துக்கு வருவதெப்படி? என்றிராமன்கேட்க, வசிட்டமுனியானவர் அதற்குச் சொல்லுவார். விந்தமலையின் மகாரணியத்தில் ஒருவேடன் பெரியசம்சாரி, அவனொருதினம் புல்லுகள் நிறைந்தகாட்டில் நடக்கின்ற மார்க்கத்தி லோர் பலகறையைப்போட்டுவிட்டு அழுகையுடன் தேடினான்.—

௩௫. இதுவுமது.

மூன்றுதினந் தேடினபின்பு,

---

* இ-ம். கணவனை யுய்விக்கு நிமித்த மிச்சித்திகளைப் பெற்றாளென்பதாம் அணிமாதியஷ்டசித்தியாவன.) அணிமா, மகிமா, கிரிமா, லகிமா, பிராத்தி காமியம், ஈசத்துவம், வசித்துவமென்பனவாம்.

¶ இ-ம். பக்குவமின்றியகாலத்தெவ்விதத்தி லுண்மையைப்போதிக்கினுமஃது உதியாதென்பதாம்

பூர்ணசந்திரனையொத்த ஒரு இரத்தினத்தை எதிரே கண்டான்; ஏக்கமுற்று பலகறையைத்தேட சத்தவுலகமும் விலைபெறத்தகுந்த இரத்தினத்தை வேடுவனேரேபெற்றான். அதைப்போல பக்குவ காலத்திற் செய்யும் பிரமவுபதேசத்தினாலும், வேதாந்தசாஸ்திர ஞானத்தினாலும் அறிவுண்டாம், ஆசாரிய ருபதேசத்தினால் திரமாகவொன்றைநினைக்க மற்றொன் றுதபமாம்,†— சுகம்பொருந்திய வியாபக ஞானத்துக்கு ஆசாரிய ருபதேசமானது காரணமாதலைக் கிட்டாததானாலும், பலகறையானது நல்லவிரத்தினங்கிடைப்பதற்கு காரணமானதுபோல காரணமாகப் பயனைக் கொடுக்கும். குலவாநின்ற சிகித்துவ வரசனானவன் ஆத்மஞான மில்லாததினால் மயக்கமடைந்து மிகவும் லகுவாய்ப் பொருந்துகின்ற தனது செல்வங் காடாக்கினியென்று நினைத்து துக்கமடைந்தான்;— அரிய தானங்கள் அநேகங்களைச்செய்தான்; விரதங்களை மிகுதியாகச்செய்தான்; தீர்த்தங்களிலெல்லா முழுகினான்; துன்பமில்லாமையை அவைகளாலு மடைந்திலன். மிகுந்த துன்பத்தினால் மனதுநைந்து ஒரு தினந்தனியேயிருந்து தனது மடியின்மேற் சூடாலையை வைத்துக்கொண்டு மகாவெப்பமடைகின்ற துன்பங்களனைத்தையும், அவளுக்குச் சொல்லுவான்.— ஆளப்பட்ட வரசாட்சியிலும், அநுபவித்த சம்பத்திலும், இப்போது யானிச்சைவிட்டேன்; நெடியகாட்டினிடத்திற்செல்ல விரும்பினேன்; துன்பவின்பங்களும் ஆபத்துச் சம்பத்துகளுமாகிய யாவும் மாக்ஷிமைப்பட்ட வாரணியத்தில் வசிப்பவர்களை துன்பஞ்செய்யாது; பூமியினிமித்தம் பிரமிக்கவேண்டுவதில்லை; காணத்தகுந்த தனதுயிர்ச்சார்பு பொருட்சார்பில் பற்றுநீங்காதிருக்கும் இராச்சியத்தைக் காட்டிலும் வலியவனம் நன்மையாம்;—ஆசையில்லாமல் ஏகாந்தமாயிருக்கின்ற மனதைப்போல குளிர்ச்சிபொருந்திய சந்திரனும் பிரமதேவனும் சொர்ன சமூகத்தை யடைந்திருக்கிற தேவந்திரனும் இன்பமடையார்கள். ஆதலால் வனத்திற் செல்லுகின்ற வென்னை நீ குற்றமென்று தள்ளாதே; தலைவன் விரும்பியது குலஸ்திரீகள்மாற்றார்கள்; நுண்ணிய விடையையுடையபெண்ணேயென்று சொல்லிய அரசனுக்கு சூடா

௬௬. சீடனறிவு முயற்சிக்கு மாசிரியர் வாக்கதன் பயனுக்கு மேதுவெனக்கூறிச் சூடாலையின் கூட்டரவால் நித்தியவிவேகந் தோற்றிற்றெனல்.

௬௭. இல்லறத் தருமப்படி தான முதலியவைகளைச் செய்தும் துன்ப நீங்காமையாற் றாரவறத்திற் றவஞ்செய விரும்பி தேவிக்குரைத்தல்.

௬௮. இதுவுமது.

௬௯ இதுவுமது.

† இ-ம். குருவாக்கியங்காரணமாகச் சீடன் முயற்சிக்கின் ஞானமுதிக்குமாதலினதுவே காரணமாமென்பதாம்.

எ0. அரசன் கருத்து முதிரு நிமித்தங் கபடமாய் வனஞ் செல்வதை விதிம்படி தடுத்தல்.

லசொல்லத்தொடங்கினுள்.¶—வசந்தகாலத்தில்புட்பங்கள் ப்ரகாசிக்கும்; சரற்காலத்தில் காய்கள் ப்ரகாசிக்கும்; அம்முறைமைபோல உரியகாலத்தில் செய்யப்பட்ட கன்மங்கள் ப்ரகாசிக்கும்; மூப்பினுல் சரீரமானது தளர்ந்தால் நட்புற்றவிச்சைகெட, கானகத்திற்செல்லலாம். எவ்வன்னகாலத்திற் செல்லுதல் முறைமையன்று, செல்லாதிருப்பாயென்று சூடாலைசொன்னதற்கு மன்னன்கூறுவான்.—தடுக்காமலிருப்பாய்;

எக. வனஞ்செல்லக் கூடாதென்ற சூடாலை வசனத்தை :விதிப்படி தடுத்தல்.

ஏகாந்தமான கானகத்தில் யான் சென்றிருப்பேன்; எவ்வளவுந் தங்கமாட்டேன். கச்சிறுக்கிய தனத்தையுடையவளே? நீ சிறுபெண்ணுதலால் என்னுடன் வருவதற்குக் கூடாது; நீ பூமிபாலனஞ்செய்து நீங்காமலிருப்பாய்; நல்லவீட்டில் நின்று நாயகநீங்கினுல் சம்சாரமிளைக்காமல் கெடாமலிரட்சிக்குதல் குலஸ்திரீக்குத் தவமென்றுசொல்லி ஸ்நானஞ்செய்யும்பொருட்டு சென்றுன்,—பகற்காலம் போனபின்பு சந்தியாவந்தன நியமங்களைச் செய்து, மனையாளுடன் இன்புற்ற பஞ்சணமெத்தையைப்போல பூமியினித்திரைசெய்து, அர்த்தசாமத்தில் நித்திரைசெய்யும் வஞ்சிக்கொடிபோன்ற சூடாலையானவள் உள்ளேயிருக்க மிருதுவாக வெழுந்திருந்தவளறியாதபடிபோய், தெரிந்தவனைவர்களுக்கும் நகர்சோதனையாகச் செல்வோமென்று, எல்லாரையுநிறுத்தி வெளியிற்சென்று பட்டணத்தினின்று நீங்கினுன்.— மூடத்தன்மையை நீங்காத பெரியசம்பத்தே உன்னை வணங்கினேன் நிற்பாயென்று நிறுத்தி, தானேசென்று காட்டிற் ப்ரவேசித்து பன்னிரண்டுநாளில் அநேகமலைகளையும், அநேகநதிகளையும், கடந்து மனிதர்கள் போகக்கூடாததாகிய மந்தரமலைக்கு பக்கமான வனத்திற்சென்று, இதழ்கள் விரிந்த தாமரைத்தடாகமும், பூங்காவனமும் சூழ்ந்திருக்கின்றவந்த ஸ்தானத்தில்வாசஞ்செய்வதானுன்.— பன்னகசாலைசெய்தான், வேணுத்தண்டஞ்செய்தான், கமண்டலத்தையுஞ் செய்தான், செபமாலையும், வஸ்திரமும் காய்கனிகள் வைக்கத்தகுந்த பாத்திரங்களும் மிருகசருமமாகிய விவைகளை ¶சேகரஞ்செய்தான். மேல்மேலான தபசைச் செய்யத்தொடர்ந்து உதயமான முதற்சாமத்தில் சந்தியாவந்தனமும், செபமும், இரண்டாஞ்சாமத்தில் புட்பமெடுத்தலும், இப்படியேகன்மங்களுண்டாக்கி,— மூன்றுஞ்

எஉ. அரசனரசியறியாத வண்ணம் வனஞ்செல்லல்.

எ௩. மந்தரவெற்பின்சாரலை யடைதல்.

எச. தவவேடம் பூண்டு நியமப்படி தவத்தைச் செய்தல்.

எ௫. இதுவுமது

¶ இ-ப். நித்தியாநித்தியவஸ்து விவேகமுண்டா யதனுனிகபரவிச்சை விராகமுதித்ததென்பதாம்.

சாமத்தில் தேவாருச்சனையும், நான்காவதுசாமத்தில் கனிகாய்களைப் புசித்தலும், படர்ந்த விராமுழுதும் செபமுமாகும்; இப்படிசொல்லப்பட்ட சிகித்துவ ராசன் தவஞ்செய்தான். இந்தவரண்மனையி லிருக்கின்ற சூடாலையானவள், பாதிராத்திரியில் விழித்துக் கொண்டாள்; தனதுபக்கத்திலிருந்த அரசனைக்காணா தவளாய் துன்பமடைந்து, செல்வத்தினின்று நீங்கி, மன்னவன் கானகத்திற் சென்றானென்று இரக்கத் துடன்மெலிந்து,¶—

௭௬. தலைவி தலைவனைப் பார்த்து மேனடக்குங் காரியங்களை யாலோசித்தல்.

கொழுநனையல்லாமல் குலப் பெண்களுக்குவேறேகதியில்லை; ஆதலின், இராசாவை யாங்கூடவேண்டுமென்று மனதிற்சிந்தித்து, பலகணி வாயலால் வெளிப்பட்டு ஆகாயத்திற்சென்று, ஆகா யத்திலுள்ள சித்தர்கள் மிச்சமான விதோவொரு சந்திரனென்று சொல்லும்படி வதனமானது விளங்க செல்லுகின்றவள், அவ்விடத்தில் ப்ரகாசம்பொருந் திய வடித்த கத்தியோடும் இராத்திரியில் ஒருவனாகச் செல்கின்ற அரசனைப்பார்த்து, சூடாலையானவள் சிந்திப்பாள்.—

௭௭. காணுங் காலமிதுவன்றெனத்திரும்பி வீடு வருதல்.

இனிமேலிவன் செய்யத்தக்கன வென்னவென்று சிந்தித்தா மேல்நடப்பவை யாவை யும்பார்த்தாள்; மதுரவசனமுள்ளசூடாலையானவள், தன் சிந்தனையினின்று திரும்பினாள்; இப்பொழு திவ் வரசனை நாமடையுங், காலமல்ல, இராகத்துவேடங் கெடபின்னடைவதே நியதிமார்க்கமாமென்று திரும் பிப் பழைய பதியில்வந்தாள். கேட்டவர்களுக்கு அரசனொரு காரணத்தினாற் போனாரென்று யாவருக் குஞ்சொல்லி,—

௭௮. தலைவனுத்தரவின்படி யரசு செய்துமீண்டேகுதல்.

தெய்வப்பெண்ணுக் கொப்பான சூடாலையானவள், இராசநீதியினால் பூமியை சம திருஷ்டியினால் தனிமையாக விரட்சித்தது கிரமமாக பதினெண்வருடனீங்க, சூடாலையென்பவளும் தன தரண்மனையில் வாழ்ந்திருந்தாள். சிகித்துவசன்குற்ற மிகுந்த வனத்திலிருந்தான்; அவனிடத்தில் யாஞ் செல்வதற்கு இது தகுந்தகாலமென்று இராத்திரி யிலே வெளிப்பட்டு ஆகாயத்திற் சென்றாள்.—

௭௯. தலைவனைக் கண்டு தலைவி வியசனப்படுதல்.

வாயு வின் றோளிலேறிதெரியாமற்சென்று மந்திரகிரியைச் சேர்ந்து, முத்துமாலையும் மிகுந்த விரத்தினாபரணங் களும் இல்லாமல் கருகியுலர்ந்துபோன சரீரமாய்ஒரு சரீரமிருந்ததைப்பார்த்தாள்; தனதுதலைவனென்று தெரிந்திலள்; மகாயோகத்தினால் தனது நாயகனான வரசனென்று அறிந்து மிகுந்ததுன்பங்களைகொஞ்ச

¶ இ-ம். புறப்பற்றாகிய வுயிர்ச்சார்பு, பொருட்சார்பு, துன்பமெனக்கண்டு அஃதைத்துறந் தகப்பற்றைநீங்கத் தவஞ்செய்ததாம்.

மடைந்து, தன்னிடத்தில் மனதுடன் சொல்லத் தொடங்கினாள்.†— அந்தோ! அந்தோ! அஞ்ஞானமானது, மிகவுங்கொடியது; ஆதலால் இவ்வேந்தனவன் துன்பமுற்றான்; பிரிவற்ற வாத்மஞானமும் சம்பத்தும் மோக்ஷமுமான விவைகளை இப்போதே கொடுப்பேன்; வேறொருசந்தேகமில்லை

௪௰. போதித்தற்கு தெய்வீகவடிவமெடுக்கவாலோசித்தல்.

சிறியவளாகிய இந்தப்பெண் நமது பாரியாள் என்று நிந்தியாதபடி மற்றொரு சரீரத்தையெடுத்து கிரமமாகப் போதிப்பன்; அறியாமைநீங்கும் மனதுடையவனாய் அரசனிருந்தான்.— பக்குவமாயிருத்தலின், இந்த நின்மலமான மனதில் ஞானமானது ப்ரதிபலிக்கும்; இப்பருவம் தகுந்ததென்று சிந்தித்து ஒப்பற்ற நிலதியானத்தினால் தான் வேற்றுருவமாகி, மேலானவொரு பிராமணன் குமாரனாய் ஆகாயத்திலிருந்து தனது தலைவன்முன் னிறங்கினாள்.

௪௧. தேவகுமாரனாகத்தெரிசனங்கொடுத்தல்.

அந்தக்ஷணமே அவ்வரசன் பார்த்து சீக்கிரத்தி லெழுந்து ஏற்கத்தகுந்த பூசைகளெல்லாஞ் செய்தான்.— சொர்ணமயமான வடிவமுடையவன், வெண்மையான முத்துமாலையையுடைவன், வெள்ளை வஸ்திரத்தைத் தரித்தவன், முறுக்கிய வெண்பூணூலையுடையவன், நல்லபூமியை நீங்க கொஞ்சமேல நிற்கின்றவனைப்பார்த்து, இவ்விடத்திலெழுந்தருளுமென்று சிகித்துவ வரசன் தன்னிடத்திலுள்ள, ஆசனங்கொடுத்தான்; பிராமணனுடைய குமாரனும் திருப்பவியல்பான தவத்தையுடைய இராஜரிஷியே? உன்னை வணங்கினேனென்று

௪௨. பிரமரிஷியுமராசரிஷியுமொருவருக்கொருவருபசரித்தல்.

மறுவசனஞ்சொல்லி,— ஆசனத்திலிருக்க அரசன் சொல்லுவார். தேவகுமாரனாகிய நீர்வருதலினால் இப்பொழுதல்லவா ஆத்ம ப்ரம்யான மடைந்தேனென்று சொல்லி, அநந்த வாராதனைகளைச்செய்து களங்கமற மதிஷ்டதெய்வமென்று நினைத்தான்.

௪௩. பூசித்துத்துதித்தவரசமுனிக்கிப் பிரமமுனி முகமன் கூறல்.

இந்தப்பிராமணனு மப்பூமிக் கரசனைப்பார்த்து, உமது குணமும் வினையமும் யாரடைந்திருக்கின்றார்கள்;— அதனால் வெகுகாலம் வாழ்வாய். உபசாந்தமுள்ள மனதினால் நாநாவிதமாகிய கற்பனைகளிறந்து அரிதான தவத்தை மோக்ஷத்தையடைய மிகவுஞ்செய்தீரோ, சதமகனையொத்த அரசனாகியபதத்தை நீக்கி தவத்தைச்செய்ய காட்டை யினிதாகக்கருதி வசித்தல், கத்திமுனையிற் செய்யுந் தவமென்கின்ற வியல்புக் கொப்பாகும்.§—

௪௪. இதுவுமது.

---

† இ-ம். பக்குவமுண்டாகும் பரியந்தம் பார்த் தலைதுதித்தகாலம் போதிக்க வெழுந்தருளித் துறந்துவந்த வறியாமை செய்ததைப்பார்த்து அகத்தில்வருந்தினளென்பதாம்.

[தனது முகப்படுத்திக் கொண்டதாம்.

§ இ-ம். போதிப்பதினம்பிக்கையுண்டாகும்படி யிறந்தகால வியற்கையைக்கூறித்

**௮௫. முனியை மூன்று வினுவினுவுதல்.**

இப்படியென்றுசொல்லிய பிராமணனைப்பார்த்து மன்னன் சொல்லுவான்; இவ்விடத்தில் எனது தன்மைகளனைத்தையும் கடவுளாதலால் நன்ருயறிந் தாய்; இதிலதிசயமுறும்படி நின்ருய், நீ ராருடைய புத்திரர்? உமது நாமமென்ன? இங்குவந்த காரிய மென்ன? சொல்லவேண்டுமென்றுகேட்க, ஒன்றுந் தவிராமல் சொல்லக்கேட்பாயென்று பிராமணகுமா

**௮௬. ஒருசிறிது தியானத்தாற் கும்பவடிவெடுத்தலை யோர் வரலாருகக் கூறுதல்.**

ரன் சொல்லத் தொடங்கினுன்.— நாரதனென்ருே ரந்தணன் மெய்ஞ்ஞான தீபத்தையொத்தவன், நல்ல சலத்தையுடைய கங்கைக்கரையிலிருக்கின்ற அழகிய விடத்தில் நிட்டையிருந்தான். அச்சமாதியினின்று நீங்கி ஒருநேரமிருச்கின்றசமயத்தில் விளையாடுகின்ற வொருசத்தமானது காதிற்புக அந்த மார்க்கத்தைக் கண்டான். அழகிலுயர்ந்த வரம்பைக்கும், திலோர்த் தமைக்கும், ஒத்தவர்களாகிய சிலதேவஸ்திரீகள் கூடி

**௮௭. இதுவுமது.**

வந்தார்கள்;— தேவநதியில் சலக்கிரீடையில் சந்தோ ஷிப்பவர்களும், புருடர்களை சமீபத்திற் காணுதபடி யால் வெட்கமில்லாமல் வஸ்திரமில்லாதவர்களுமாகிய அவர்கள் வரவைப்பார்த்து, மனமானது தாவிக் கொண்டுபோய் பரிசுத்தமான விவேகத்தைவிட்டு, விடயசுகத்தை யடைவதற்கு, பிராணனலைவுற்று, தொடர்ந்திருக்கின்ற குற்றமற்ற நாராதனது மன மானது நிலைபிறழ்ந்து இந்திரியமுமொழுகிற்று.—

**௮௮. ஞானிக்கெங்ஙனங் காமமுதிக்குமென்றிடையிலரசன் விணுவினதற்குத் தரங்கூறல்.**

என்று முனியானவர் சொல்லவும், உமது வசன மாகிய இனியவமுதத்தினுல் மனஞ்சாந்தியானேன்; ஆனுலும் வேறேசொல்லுகின்ற வசனம் பரமார்த்தத் தைப்போல அறிதற்கரியது, உனதுற்பத்தியை சுருக் கிச்செல்லுவாய்; பின்பு மேலான ஞானர்த்தத்தை ப்ரார்த்தித்துக் கேட்கின்றேன் மேலேசொல்லுவா யென்று அரசனுனவன்சொல்ல, சூடாலையாகிய பிரா

**௮௯. தாதுகடத்திற் கருக்கொண்டு வளர்தல்.**

மணகுமாரன் உரைப்பார்.—நிலைபிறழு மனமென் கின்ற மதத்த மதயானையை நாரதமுனியானவர், நல்லவிவேகமென்னும்குற்றமற்றபெரியஸ்தம்பத்தில் நல்லவறிவென்னு மங்குசத்தினுல் அன்பென்னும்வட கயிற்ருற்பிணித்து தழுவாநின்ற பளிங்குகடத்தில் இந்திரியத்தைவிட்டான்; பாலைநிரம்பவும்விட்டான், செழுமையான சந்திரன் க்ஷீரசாகரத்தில் வளருதல் போல, கருப்பமானது வளர்ந்து சிறப்புற்றது.—

**௯0. புறப்பாடு கூறி நாமம்வந்த காரணமுரைத்தல்.**

கடத்திலிருந்து வெளியில்வந்த புத்திரனுக்கு வித்தையென்கின்ற குறைவற்ற சம்பத்தாகிய சமுகங் களைக்கொடுத்து, பிரமதேவனிடத்தில் என்னைக் கொண்டுபோக, பிரமாவும் நமக்குக்கடபையென்று

பௌத்திரனை வெனக்கு தத்துவஞானமாகிய முடிவைத் தரிசிக்கும்படி தெரிவித்தான்; உடனே யத்தினத்தில் அப்பிதாமகனால் நான் கும்பத்திற் பிறந்தபடியால் கும்பமுனி யென்கின்ற ஓர்நாமத்தையடைந்தேன்.—

௬௧. பிறப்பும் நாமமுங்கூறி வரவைக்கூறல்.

செவ்வையான சரஸ்வதி எனக்கு மாதாவாம்; காயத்திரியானவள், சிறியமாதாவாம்; குற்றமற்ற நான்குவேதமென்கின்ற சிநேகிதரோடும்லீலைசெய்துகொண்டுவந்தேனென்று கும்பமுனிசொல்ல, ஆசாரியரே? உம்மைத்தரிசனஞ்செய்தேன், அடையவேண்டிய இலாபமனைத்தையுமடைந்தேன், அரசனானவன் ஈதுண்மையென்று சொன்னான், கும்பமுனியானவர் அதற்கிவ்வண்ணம் சொல்லத் தொடங்கினார்.†—

௬௨, அரசன் முறையை வினவுதலுக் குத்தரங் கூறல்.

வுமக்கு முன்னெனது வரலாற்றைச்சொன்னேன், நீரார்? இங்கென்னசெய்கிறாய்? என்றனக்கு நீரும் உமதுவரலாற்றைச்சொல்லுமென்றுகும்பமுனிகேட்கவும், அரசன்சொல்வான்; பவத்துக்கு மனதுபயந்துசெயலற்ற வனத்துக்குவந்தேன், நாமஞ் சிகித்துவசனாம்; பட்டணத்தில் அரசாந்தன்மையைநீக்கிஇவ்விடத்திலிருக்கின்றேன்; சநநத்துக்கே ஓயாமல் மனதுதவிக்கின்றேன்,—

௬௩. துறந்துசெய்யுந் தவமுந் துன்பமாயிற்றென்ற அரசனுக்கு அத்துன்பத்தை நீக்கிச்சித்த சாந்தியினால் ஞானமுதிப்பிக்கும்பொருட்டுச் சுகங்கொடுப்பது ஞானமேயன்றித் தவகிரியைக் கொடாதெனல்.

இவ்வண்ணமே, தவக்கிரியைக்கு உண்டான சகலமுஞ் சம்பாதித்து நடத்தியும், துன்பத்தைநீக்கி உரைத்தற்கரிய பெரியதுன்பத்தை யடைந்தேன்; உவமித்தற்கரிய முனியே? பாற்றீயவிடமாயிற்று, என்றரசன் சொல்லவும், கும்பமுனி சொல்லுவார். ஆசாரியரறிவிக்கு ஞானமானது உண்மையாக வந்தால் பிரமாநந்தமாகும்; தவத்தொழிலானது காலத்தைக்கழிக்கின்ற விளையாட்டல்லவா.— அரசனே? ஞானமில்லாத சகலருக்கும் கன்பமேகதியாகும்;

௬௪. கிரியைக்கிப்பயன் வாசனையாதலி லவ்வாசனை நசிக்கிற் கிரியை நீங்குமெனல்.

சற்கிருத்தியமானது அசுத்தவாசனையே பயனாகவுடையது; ஆதலால், கன்மமுஞ் சொற்காதியபலனையடையும்படி கொடுக்கும். அளவையடைந்த விருது வந்தால் முந்தினவிருதுக்களின் பயன்கள் அவ்விடத்திற்றானே கெடுவதுபோல, அசுத்தவாசனை கெட்டால், கிரியையினால் வரப்பட்ட ப்ரயோசனமும் விர்ந்துபோகும்.—

௬௫. சர்வம்பிரமமயமென்னும் ஞானம் வந்தால் வாசனை

பழங்களை ஒருகாலத்திலுங் கெடாதநாணலின்றன்மையைப்போல, சஞ்சலமுள்ள வாசனைநீங்கிய கிரியையும் மேற் பயனைக்கொடுக்க

† இ-ம். பிரமத்தினின்றும் ப்ரபஞ்சமுண்டாயஃதைப் பிரமமயமாய்விளங்குமென மேலறிவிப்பதைக் குறிப்பாயறியும்பொருட்டு தனது தியானமே இச்சரீரமாயிற்றென்பதை நாரதமுனிபுத்திரனென வோர் வரலாறாகச் சொல்லியதென்பதாம்.

நசிக்குமெனல்.

மாட்டாது; சர்வம் பிரமமென்கின்ற பாவனையினால் அஞ்ஞான நீங்கிவிட்டால் அசுத்தவாசனை யுண்டாகாது; கானலிற் சலமிருக்கின்றதென்று நிச்சயிப்பவர்களுண்டோ.— வாசனையைமட்டு நீக்கினால் சராமரணங்கள் சநநமானது பொருந்தாததாகி குற்றமற்ற பரமபதமுண்டாகும்; வாசனையுடன்பொருந்திய மனமான துவேற்றுமையான வஞ்ஞானமேயாகும்,வாசனைநீங்கியமனமானது, சனியாக வாத்மஞானமாம். குற்றமற்றஞானத்தினால் சீவனானவன் பிரமவஸ்துவை யறிந்தால்

௩௯௬. வாசனைநசிக்கிற் பிரமானுபவ மூண்டாமாதலாலவ்வாசனையுள்ள மனமாகிய வஞ்ஞானத்தைக்கெடுத்தஃதின்றிய ஞானமனதினாற் பிரம சிந்தனைசெய்யிற் பவத்துன்ப நீங்குமெனல்.

மடையாது.¶- ஞானமேமிகவு நல்லதென்று பிரமாமுதலாகிய பெரியோர்கள்சொல்லியிருக்க நீர்விரும்பாதிருந்ததென்ன? நானார்? இச்சகம் எப்படி உண்டாயிற்று? எவ்விடத்திலிறக்குமென்று சாருதாததென்ன? அறிவில்லாதவர் களைப்போல சோர்கின்றதென்ன?

௩௯௭. அறிவை விரும்பாமலும் குருமுகமாய்ச் சித்தென்னு முத்தியாது சகத்துற்பத்தி லயமென்கின்ற பந்தமியாதென்று விசாரித்திஃதைநீக்கி யஃதையடையாமலு மேல் வருந்துகின்றாயெனல்.

மகானான வாசிரியரைவணங்கிபந்தமோக்ஷம் எவ்விதமென் றறியாதென்ன?— பூரணஞானத்தினால் சமதிருஷ்டியுள்ளவர்களை தரிசித்தடைந்து நிரந்தரமாய் பெருமையாக விசாரித்தால் மோக்ஷமடைகின்ற சூட்சுமஞானமானது கிடைக்குமென்றுகும்பமுனிசொல்லவும், கண்களிலானந்தபாஷ்பம் பொழிந்து அழுது அரசனுரைப்பான். ஆசாரியனே எளியேன் தேவராற் றெரிந்தேன்.†— அஞ்ஞானத்தினால் மகான்களுடைய சமுகத்தைவிட்டு இந்தக் தனிமையான காட்டில்வந்தேன்; துன்பம்பொருந்திய பாவங்களனைத்தையும் இப்பொழுது தவிர்ந்தேன்; காட்டிலிருக்கின்ற அடியேனை நீரடைந்து கடமையாக வறிவிப்பதால் ஆசாரியருநீர்தான், எனதுதந்தையுநீர்தான், எனது சிநேகிதனு நீர்தான், திரமுள்ள சீடனைய் உமதுபாதத்தை வணங்குகிறேன், கிருபைசெய்யவேண்டும்,—

௩௯௮. சாது சங்கத்தால் விசார ஞான முதிக்குமெனல்.

௩௯௯. தேவரீராசிரியரா யடியேனை யடிமை கொண் டனுக்கிரகஞ்செய்ய வேண்டுமெனல்.

உதாரமுள்ளதாகியும் அறிந்தால் துயரங்களனைத்தையு நீக்குவதாகியும் சதாநந்தமான வஸ்துவாகியுமிருக்கின்ற நீ யுணர்ந்தவஸ்துவெதுவோ அதையெனக்குச்சொல்லுவாய்.பிரமதேவனுக்குச் சமானமானவரே? யென்று சொல்லிய அரசனுக்கு கும்பமுனி சொல்லுவார்; வேகமாய்த் தாவியெழாநின்றமனதில் ஒன்றுபட்டறிவாயானல் நினக்குஞானத்தைச்சொல்

௪00 நித்தியாநந்த மாகும்பொருட் டனுக்கிரகிக்குமெனது வாக்கியத்திற் சித்த மேகாக்கிரப் படுமோயினுரைப்பேனெனல்.

¶ இ-ம். வாசனாட்சயம்வரிற் கிரியாபலநீங்கிப் பரஞானமுண்டாய்ச் சநநமரண நீங்குமென்பதாம்.

† இ-ம். ஞானசுகமுண்டாவதற்குக் காரணம் ஆத்மவிசாரமென்றறிவித்ததாம்.

௯௦௧. இதுவுமது லுவேன்.— உரைத்ததை கிரிகிக்காமல் விளையாட்டினால் கேட்குமவர்களுக்கு உரைத்தவாக்கியம் சொல்லியும் ஓர்ப்ரயோசனமில்லை; அந்தகாரத்தில் கண்களுக்கு அறியும்பலனுண்டாமோ. என்றுகும்பமுனி சொல்லவும், அரசன் சொல்லுவான் உமது கிருபையினால் நீரிவ்விடத்திற்சொல்லிய சர்வார்த்தமும்வேத நியமமென்று உண்மையாக கிரிகித்துக்கொண்டு நன்

௯௦௨. எளிதாய்க் கிடைத்ததையிகழ்ந் தரிதாய்க் கிடைத்றதைப்புகழ்ந்த வறியாமையை நீக்குநிமித்தஞ் சிந்தாமணிகதையைச் சாமானியமாகச் சொல்லத்தொடங்கல், றுகச் சிந்திப்பேன்.†— என்றரசன்சொல்ல, அழகுநிறைந்த கும்பமுனி சொல்லுவார், ஒன்றுந்தெரியாத குழந்தைக்கு உரிமையான பிதாசொல்லுவதுபோல,வெற்றியையுடைய வரசனே! நானுமக்குச் சொல்லும் வசனத்தை தடுத்துக்கேளாமல் நன்மையெனவினைத்துக் கேட்பாயென்று அறிவுண்டாகக் கூறத்தொடங்கினர்.—

௯௦௩. இதுவுமது அரசனே! இஃதொருகதையைசொல்லக் கேட்கக்கடவாய்; இந்தக்கதையில்பொருந்திய வருத்தத்தை பின்பு யான்சொல்லுவேன். முற்காலத்தில் ஒருபெரியவர், மிகுந்தசம்பத்துடையவன் சொல்லாநின்ற கலைஞானங்கண் முதலிய சகல சாஸ்திரங்களிலும் வல்லமையுடையவன், ஆத்மஞானமில்லாதவன் அப்படிபட்டவன் மேலானசிந்தாமணியை மிகவுமுயற்சித்து தேடத்தொடங்கினன்,—

௯௦௪. இதுவுமது மிகுந்த பிரயாசமுள்ள தபசினால் நிரயாகவடையவேண்டுமென்கின்ற முயற்சியினால் தகுந்த சிந்தாமணிகிடைத்தது; வருத்தப்பட்டு முயற்சித்தவர்களுக்குஎன்கிடையாது. மிகுந்த ப்ரகாசமுள்ள சிந்தாமணியானது, தன்னெதிரிற்றோற்றி சந்திரன்போல ப்ரகாசிக்கவும், அதைக்கை

௯௦௫ இதுவுமது வசப்படுத்தாமல் பலவிதமாகச் சிந்தித்தான்.— இது சிந்தாமணியல்ல வேறேயொரு வற்பமணியாகும்; சிந்தாமணியானது வருத்தப்பட்டு வெகுநாள் தேடி வாழுங்காலமெல்லாநீங்கி மெலியுங்காலத்திலல்லாமல் கிடைக்குமோ, துன்பப்பட்டாலும் பாவிகளுக்குக் கிடையாது, நல்லவர்களிற் சிலபேர்களுக்குக்கிட்டும்; தங்கள் தங்கள் கன்மத்தை எண்ணுமல் சோர்வுற்றால்

௯௦௬. இதுவுமது. அவர்களுக்குச் சீக்கிரத்திலடையுமோ;— யானோமானிடன் எனதுதவமோசொற்பம் வல்லமைகளோவெனக்கற்பமுமில்லைதாரித்திரமுள்ளவன் இப்படிப்பட்ட வெனக்கு காணற்கரியசிந்தாமணியானது எளிதாக முன்னே தோற்றுமா, இன்னமுந் தேடுவோ

† இ-ம். முற்போதனை கிட்பலமானதுபோல வாகாமலுதிதிப்படுத்திக்கொண்டெபதேசிக்கத் தொடங்கினதென்பதாம்.

மென்று நல்லசிந்தாமணியை எடுக்கவில்லை; பரிசுத்த முள்ள அந்தசிந்தாமணியும் போய்விட்டது; தீயவர் களுக்கு நன்மையுண்டாமோ.—திரும்பவும் வருத்த முற்றுத் தேடினன். வெப்பமுற்று சிறிதுநாள் கற் றவும், அவ்விடத்தின் மறைவாகி சிலசித்தர்கணங்கள் அவனைப் பரியாசஞ்செய்யும்பொருட்டு உடைந்த வளையலின்றுணுக்கை எதிரே காண்பிக்க ஒருமணி யிருக்கப் பார்த்தான்; அறிவில்லாதவன் மாட்சிமைப் பட்ட சிந்தாமணி யிதுவென்று சந்தோஷித்து அதி சயித்து கிரிகித்தான்.— வெந்தமணியை விரும்பி செல்வங்களனைத்தையு நீக்கினன். கிடைத்த காச்சுக் கல் சகல செலவத்தையுங் கொடுக்கும்;மற்றத்தனங்க ளென்னத்துக்கென்று நினைத்தான். இந்நாட்டில் கொ டியவர்களுண்டு, சுகங்கிடையாது; இத்தேசங்கொடி யதென்று கானகத்திலிருந்து இன்பமடைவோமெ ன்று நீங்கினன்.*—சுகிக்கலாமென்று நினைத்து கிடைத்த கல்லினல் துன்பங்க ளனைத்தையுத் மடைந்து தாழ்வை யடைந்தான். மற்றொரு கதையைச் சொல்லக் கேட்பாய்; புத்திக்குப்பூர ணமாக அறிவைக்கொடுப்பிக்கும் பழைய இந்த வனமத்தியில் ஒரு யானையானது யானைகளுக்கு மே லாக மிகவுமுன்னித முள்ளதாம்.— வச்சிராயுதத் தைக் காட்டிலும் நீளமாய் கூர்மையையுடையதாய் வலிமையாயிருக்கின்ற இரண்டு தந்தங்களை யுடைய தான யானையுடன்பழகி இருப்புக் கயிற்றல் பாகன் பிணித்து விலங்கிட்டான்; குற்றம்பொருந்திய அநே கங் கட்டுகளினல் மனஞ்சோர்ந்து இரண்டு தந்தங் களினலும் நெருக்கிவைத்த வலியகட்டுக ளனைத்தை யும் ஒரிரண்டு முகுர்த்தத்தில் கெடுத்தது—விலங்கு முறிந்த தன்மையைப் பார்த்தவனகிய மேலான மா வுத்தன், கலக்கமுற்று யானைமத்தகத்தி லிருந்து தவ றிப் பூமியில் விழுந்தான்; அவன் விழப்பார்த்தயானை யானது கிருபையினல், சலிக்கும்படி கொல்லாம னீங்க, பின்பு அந்த மாவுத்தன் திரும்பவுமெழுந்திரு ந்து தணியாத கோபத்துடன்போய் அந்த யானை யைத்தேடி யெதிரேசென்ருன்.—ஒருகாட்டினடுவே அந்தயானையை யடைந்தான்; ஒரு படுகுழிதோண்டி

௧௦௭, எளிதாய்க் கிடைத்ததையிகழ்ந்தரிதாய்க் கிடைத்ததைப்புகழ்ந்த வறியாமையை நீக்கு நிமித்தஞ் சிந்தாமணி கதையைச் சாமானியமாகச் சொல்லத்தொடங்கல்.

௧௦௮ இதுவுமது.

௧௦௯. அறியாமைக்கிரங்கக் கூடாதென்பதை யுறுதிப்படுத்து நிமித்தமியானையின் கதையைச் சாமனியமாக நிரூபித்தல்.

௧௧௦ இதுவுமது.

௧௧௧. இதுவுமது.

௧௧௨. அறியாமைக்கிரங்கக் கூடாதென்பதை யுறு

* இ-ம் சிந்தாமணியின் குணந்தெரியி னங்ஙனந் துன்பம்வாராததுபோலச் சகலத்தியாகத்தி லுண்மைதெரியினஃதெளிதிற் கிடைக்கினு மரிதிற்கிடைக்கினுமப்போதே துன்பமற்ற பரமசுகத்தை யடையலாமென்பதைக் குறிப்பாற் சொல்லியதாம்.

திப்படுத்த நிமித்தமியானையின் கதையைச் சாமானியமாக நிரூபித்தல்.

உலர்ந்த இலைகளினாலும் கொடிகளினாலும் மறைவு செய்தான்; யானையானதுசிறிது நாட்சஞ்சரித்துஅவ்விடத்தில் வருகின்றகாலத்தில் படுகுழியில் விழுந்தது; அந்த மாவுத்தனவன், அழுந்தக்கட்டினான். நினைக்கின்ற யானையானது இப்பொழுதும் துன்பத்துடன் இருந்தது.—தனதரண்மனையில் காவலிருக்கின்ற ஒப்பற்ற மாவலியைப்போல இருந்தயானையானது பூர்வத்திற் றனது முன்னேவீழ்ந்த சத்துருவாகிய மாவுத்தன் தலைமூளை சிதறும்படியாகக் கொன்றால் கானகத்துக்குவந்து கொடியபடுகுழியில் பிணிப்புற்று கலங்கவேண்டியதில்லை. அக்கதையைப் போல, விசாரித்து நிகழ்காலத்தால் இனிவருங்காலத்தின் காரியாகாரியங்களைப் பாராதவர்கள் துன்பத்தை யடைவார்கள்.¶—இப்படியென்று கும்பமுனி சொன்னவளவில்; சிகித்துவ அரசனானவன் எனது பிதாவே? சிந்தாமணியினாலும், வெற்றியையுடைய யானையினாலும், சொல்லிய கதையை தெரிவிப்பாயென்றுகேட்க, நிலையாயிருந்த கும்பமுனி சொல்லுவார், மிகுந்த சாஸ்திரார்த்தங்கள் சகலமுமுணர்ந்தவனும், நன்மையான தத்துவஞான மில்லாதவனும், நல்லசிந்தாமணியைத் தேடினவனும்,—என்றுசொல்லியது உன்னையேயாம்; நீ சகல சாஸ்திரங்களையுமப்பியாசித்தறிந்தும் நிலைபெற்ற உபசாந்தத்தை யடைந்தாயில்லை: சிந்தாமணியென்றதெதுவென்றால், வஞ்சங்கெட துன்பங்களியாவும் நெருங்காத அச்சகலத்யாகத்தை தேட முயற்சித்து அரசாக்ஷியை விடுத்து.— இல்லாளையும் உறவையுநீங்கிஇந்தக் காட்டினிடத்தில்வந்தாய், உனது தேசத்தைவிட்டு நீங்கினாய். அப்படி சகலத்யாகமானது நிறைவாகின்ற சமயத்தில் அந்ததியாகவிகற்ப வபிமானமானது மனதில் தளர்ந்து, ஆகாயத்தை மறைக்கும் கரியமேகத்தைப் போல, உன்னைமறைவுசெய்ய, இப்படிப்பட்ட சகலத்யாகமானது மேலான சுகமல்ல மகத்துமல்ல— வேறொன்று மேலானதுண்டென்று நினைத்து அச்சகலத்யாகம் அநேககால முயற்சி செய்தால் வருமென்று பயனின்றிய விகற்பமானது மனதில்நிறைய மேலான சர்வத்யாகமானது நீங்கினதாம். சன்மார்க்கமுள்ள சகலத்யாகமென்னும் இரத்தினம்போக,

௧௧௩. இதுவுமது.

௧௧௪. இவ்விரண்டு கதையையும் பகுத்து வினாவினதற்கு முற்சிந்தாமணியைக்கூறல்

௧௧௫. இதுவுமது;

௧௧௬. இதுவுமது.

௧௧௭. இதுவுமது.

¶ இ-ம். வல்லமையுள்ள யானையாயிருந்து மதியின்றிய மனிதனால் வருந்துவது பாவப் பூரணஞானமானது, அற்பசங்கற்பமான வறியாமையால் வருந்துவதைப் பார்த் தலைக் கொடுக்கவேண்டுமென் றறிவித்ததாம்.

உனதுதவமாகியகாச்சுக்கல்லே உணர்வில்லாத விகற்ப திருஷ்டியினுற் பார்த்து அதுநன்மையென்று துன்பப்படுகிறுய்.—மட்டில்லாமல் இலேசாய்க் கிடைத்த சுகத்தைத்தள்ளி அரிதாகிய அற்பமான வஸ்துவில் மனதுபொருந்தினவர்களே, உயிர்கொலேஞர்களென்றும், கொடியவரென்றும், சத்துக்கள் சொல்லுவார்கள். வளப்பத்தின் மிகுந்த மேலான சிந்தாமணியானது நீகிடைத்ததென்று கருதின தவத்தினல் தளர்வைநீங்கினுயில்லே. ஒருபளிங்கின் ப்ரயோசனத்தையு மடைந்தாயில்லே; யானையென்று சொல்லிய தினிமேற் கேட்பாய்.*— மதத்தையுடைய யானையென்று சொல்லியது உன்னையேயாகும்; வயிராக்கியமென்பதும், விவேகமென்பதும், அதனுடையநீண்ட தந்தங்களாகும்;, உனதறியாமையையுடைய குணங்களே யானைமேலேறி நடத்தாநின்ற மாவுத்தனுகும்; நாநாவிதமாக வுன்னை மெலிவுசெய்கின்றது மிகுந்த வஞ்ஞானமாகும்; அந்தவஞ்ஞானத்தினு லுண்டான துன்பங்களில் நடாத்துகின்ற அந்த மாவுத்தனுல் யானையைப்போல் சிதறுகின்றுய்:— இருப்புக்கயிறும், விலங்குகளும், ஆசாபாசமென்று சொல்லப்பட்டனவாம்; நீ இவைகளாற் பந்தப்பட்டாய். சொல்லப்பட்ட இரும்பிலும் இச்சைமிகவு முறுதியாம்; இரும்புச்சங்கிலிகளும், காற்றளைகளும், வெகுகாலமானல் தேய்ந்துவிடும்; களிக்கின்ற விச்சையானது மேலுமேலும் கெடிதாகவுறுதியாகவளரும்:

௩௯௮. இவ்விரண்டு ததையையும் பகுத்து வினவினதற்கு முற் சிந்தாமணியைக் கூறல்.

௩௯௯. யானைக்கதையைப் பகுத்துக்கூறல்.

௩௨௦. இதுவுமது.

௩௨௧. இதுவுமது. பலமுள்ள இப்புக் கயிறறையும், தணைகளேயும், ஆணைமுறித்ததென்றது, பூமியிலுள்ள இப்போகங்களனைத்தையும் நீமுன்னமே இச்சையில்லாமற்கெடுத்தவிதமாகும். வீரத்துவமில்லாத மாவுத்தன் மத்தகத்தினின்று விழுந்ததென்பது உமதுவித்ரதியில் அஞ்ஞானங் கெட்டதாகும். மிகுந்த வாசையையொழித்தால் பின்பு சநநத்தைக் கொடுக்கின்ற வஞ்ஞானமுண்டோ.—

௩௨௨. இதுவுமது. செல்வமயக்கத்தை துறவினுற்கெடுச்கவெணணினுல் அஞ்ஞானமானதுஓட நினைத்து, வெட்டுகின்ற தருவிலிருக்கும் பேயைப்போல இருந்தலேயும். மயக்கங்கெடும்படியாக செல்வங்களனைத்தையும் விவேகத்தினுல் நீக்கினுல், வெட்டித்தள்ளிய விருட்

* இ-ம். சிந்தாமணி தேடினவன்முதலிய திருஷ்டாந்தத்துக்குச் சாந்தியை தேடின வரசன்முதலிய தாஷ்டாந்தங்களாற் சகலத்யாகமென்னுஞ் சிந்தாமணியுனக்கு லகுவாய்க்கிடைத்து மதையிகழ்த்து தவ மென்னுங் காச்சுக்கல்லினுற் றுன்பப்படுகிறுயென்று விசேடமாய் நிருபித்ததாம்.

௧௨௩. யானைக் கதையைப் பகுத்துக்கூறல்.

௧௨௪. இதுவுமது

சத்திலிருக்கும் பசாசைப்போல, அஞ்ஞானமானது விரைவில் நீங்கும்.—அளவற்ற போகங்களனைத்தையும் ஒழித்தால், அஞ்ஞானத் தொடர்புகளனைத்து நீங்கும்; வெட்டுப்பட்டுவிழுந்த விருக்ஷத்திலிருந்து விழுந்துபோகின்ற பட்சியின் கூண்டுகளைப்போல, கானகத்தை நெருங்கி நீயடைந்தமாத்திரத்தில் அஞ்ஞானமானது விழுந்தது; தடையற்ற சகலத்யாகமென்கின்ற ஒப்பற்ற கத்தியினால் அவ்வஞ்ஞானத்தை கெடுத்திலை.—அதைக்கொல்லாமையினால் திரும்பவு முண்டாகிவளர்ந்த அறியாமையினால் மிகவும்வருந்தினாய், மதத்தையுடைய யானைக்கு மாவுத்தனானவன் படுகுழியை வகுத்தானென்றதுதான் திரமாக நினக்கு தவமென்கின்றதுயரை மிகுந்த வஞ்ஞானமானது கொடுத்ததாகும்; கேடுநிறைந்த படுகுழியின் மேலுமேலுங் கொடிகளென்பது துன்பமிகுந்த தவத்தைச் சார்ந்த சத்கிருத்தியங்கள்.‡—இவ்விதமாயிப்போதும் துன்பமென்னுந் தவமாகிய இந்தப்பள்ளத்தில் கொடிய வாள்திறத்தையுடைய மாவலியானவன் சிறையிலடைபட்டவனாய் மிகுந்த பாதாளத்தில் இருப்பதைப்போல் நீ இருக்கிறாய், தவறாத வசனத்தையுடைய மிருதுவான சூடாலையானவள் சொல்லப்பட்ட ஞானத்தை இழந்து என் வருந்துகின்றாய், சகலத்யாகத்தை என் விட்டுவிட்டாய், சொல்லென்று கும்பமுனிகேட்க.—

௧௨௫. சகலத்யாகத்தை முன்னிட்டுத் தடுக்கத்தடுக்கவனேபற்றுக்களனைத்தையுங்மண்டு நீக்கித்வேக முதலிய வற்றையு நியதிகளைந்தொம்ப தஸ்வரூபத்தையடையும் பொருட்டு, என் ஞானத்தையுஞ் சகலத்யாகத்தையு மிழந்தாயெனல்.

௧௨௬. உயிர்ச்சார்பு, பொருட்சார்பு, நீக்கினேனெனி லஃது சகலத்யாகமன்றெனல்.

௧௨௭. வனப்பற்றிருக்கின்றதென்றறிந்தஃதை நீக்கினேனெனி னஃதுஞ் சகலத்யாகமன்றெனல்.

அரசன் சொல்லுவான். எனது பூமியை விடுத்தேன், அரண்மனையை விடுத்தேன், செல்வத்தை விடுத்தேன், பாரியாளை விடுத்தேன், இந்த சகலத்யாகமானது இப்பொழுது நீக்கினவதக்காட்டிலும் வேறியாது சொல்லவேண்டுமென் றரசன் கேட்கவும், கும்பமுனி சொல்லுவார். நீ நாடுமுதலாக சேர்ந்திருக்கின்ற சகலத்தையும் விட்டுவிட்டாலும் சகலத்யாகமல்லவாம்.—நினக்கு சகலத்திலு மாசையுண்டு. அந்த ஆசைகளனைத்தையு மொருங்கேநீக்கி சத்துக்களுக்குரிய பிரமாநந்தத்தை அடைவாயென்று கும்பமுனி சொல்ல, அரசன் சொல்லுவான், வளமைநிறைந்த சகத்தைவிட்டது சகலத்யாகமல்லவானால் எனக்குடையது கானகமே, மலைகளினு

‡ இ ம். யானைமுதலிய திருஷ்டாந்தத்துக்கு, அரசன்முதலிய தாஷ்டாந்தங்களாற் சகலத்யாகமுதித்தவிடத்து நீங்கின வஞ்ஞானத்தை யங்ஙனங் கெடுக்காமலதனால் வகுக்கப்பட்ட தவத்துன்பத்னில் வீழ்ந்து வருந்துகின்றாயென் றஃதை நீக்கும்பொருட்கு விசேடமாய்ப்பிவித்ததாம்.

லும், மரங்களினாலும், நிறைந்திருக்கின்ற கான கத்தில் விரும்பப்பட்ட வாசனையை நீக்கினேன்.—

௧௨௮. வனப்பற்றிருக்கின்றதென்றறிந்தஃதை நீக்கினேனெனினஃது ஞ் சகலத்யாக மன்றெனல்.

இப்பொழுது யான் சகலத்தியாக மென்பதை அடைந்தேனென்று அரசன் சொல்லவும், கும்பமுனியானவர் பழங்கள் நிறைந்த விருக்ஷங்களும், உயர்ந்த கிரிகளும், நீங்கினால் சகலத்தியாகமல்ல; சகலத்திலும் நினக்குத் துன்பமிகுந்தவாசையுண்டு, அந்தத்துயரை நீங்கினால் பரமசுகமென்று சொல்ல, பரிசுத்தத்தையுடைய முனியே? இதுவுமல்லவானால் சொல்லுவேனென்று அரசனானவன் சொல்லுவான்.— வஸ்திரமும், தண்டமும், உருத்திராக்ஷத் தாவடமும், மான்றோலும், மண்பாத்திரங்களும், கமண்டலமும், எனக்கிருக்கின்றன; என் பிதாவே? இவைகளை நீக்குகின்றேனென்று சேர்த் தக்கினியினா லெரித்து மனமகிழ்ந்து வேறுசரீரமாய் நட்பற்றனன். ஆசையில்லாதவனானேனென்று அநாதிஞானஸ்வரூபியானகும்பமுனியினது வதனத்தைப்பார்த்து சிகித்துவசன் சொல்லுவான்.-

௧௨௯. வஸ்திர முதலிய பற்றுக்களிருக்கின்றதென்றறிந் தவைகளைத் தகனஞ்செய்து நீக்குதல்.

அம்மம்மா!!! தேவகுமாரனானவும்மால் அறிவைப் பெற்றேன்; துன்பத்தினின்று நீங்கினேன், தனிமையாக களங்கமொழிந்தேன், இப்படிப்பட்டதென்று சங்கற்பத்தினாற் பொருந்தி பிறிதொன் றில்லாமல் சகலத்தையு நீக்கினேன்,செவ்விய பதார்த்தங்களின் கூட்டங்களியாவும் பிறவியைக் கொடுக்கின்ற பந்தமாம்.— பதார்த்தங்களானவை எவ்வளவெவ்வளவு நீங்கினவோ, அவ்வளவவ்வளவும் தெளிவுள்ள மனமானது ஆநந்தத்தைப்பெறும். போருகளைச் செயஞ் செய்து அவ் வாநந்தத்தை யடைந்தேன், மயக்கத்தைச் செய்கின்ற பந்தங்களு நீங்கினேன்,களங்கமற்ற திருவாணியாய் தேவரீர் கிருபைசெய்யா நின்ற சகலத்யாகத்தைப் பெற்றேன், வேறென்ன விருக்கின்றனவென் றரசன் கேட்டான்.¶— கும்பமுனி சொல்லுவார். நீ ஒன்றையாவது நீக்கவில்லை, இச்சகலத்யாக வபினயம் வீணென்று சொல்லுமளவில், அரசனானவன் மனதிற்சிந்தித்து திரும்பவுஞ் சொல்லுவான். கொடிய பஞ்சேந்திரியங்க ளென்னுஞ் சர்ப்பங்கள் சார்ந்திருக்கின்ற வெள்ளெயெலும்புகளும் மாமிசங்களுமான சரீரமொன்றே அடியேனுக்கு இவ்விடத்தில் மிஞ்சினது, இச்சரீரத்தை இப்போதே சுளுவில் நீக்குகின்றேன்,— பார்ப்பாயென்று ஒருமலையிலேறி அரசன் விழுகின்றசமயத்தில், மேலான கும்பமுனியானவர், இவ்விடத்தி லிதென்னகாரியம்? இச்சரீர

௧௩௦. சகலத்யாகத்தை யடைந்தேனெனல்.

௧௩௧. அது மது.

௧௩௨. இஃதுஞ் சகலத் தியாக மன்றெனி லிந்திரியங்களுக் கிடமான தேகந்தா னிருக்கிறதென் றறிந் தப் பற்றையும் நீக்குகின்றேனெனல்.

௧௩௩. தேகத்யாகமுஞ் சகலத்யாக மன்றெனல்.

¶இ-ம்.புறம்பாயுள்ளபற்றுக்களியாவுந் தானேகண்டுகெழலும்படிசெய்வித்தாம்.

மானது, அறிவில்லாதவனே? உனக்கென்ன குறைவைச் செய்தது, இறந்து ப்ரயோசனமென்ன? இளமையான பசுவின்கன்றை பலம்பொருந்திய எருதானது கோபிப்பதைப்போல தாண்டிக்குதித்து சரீரத்தை விட்டாலும் சகலத்யாகி யாகமாட்டாய்.—

௩௫௪. பவபீசமானதை நீக்கலே சகலத் தியாக மெனி லஃதியாதத னை நீக்குமுபாய மியாதெனல்.

யாதினுற் சரீரஞ்சஞ்சரிக்கின்றதோ சநநத்துக்கும் கருமத்திற்கும் விதையாயிருந்ததோ அதை விடுவையாயின், அரசனே? சகலத்யாகமாம். உண்மையான திதுவென்று கும்பமுனிசொல்லவும், சரீரத்தையசைத்து சநநத்தை மிகுவிக்கும் விதையாகித் தாவாநின்றதெதுவோ, அதை நீக்கும்விதத்தை சொல்லுவாயென் றரசன் கேட்டான்;—சற்குண நிறைந்தகும்பமுனி சொல்லுவார். சகலபதார்த்தங்களிலும் சார்ந்திருக்கின்ற வின்பமாய் பெருமைபொருந்திய சீவனென்றும், பிராணனென்றும் பொருந்திய நாமங்கள் அநேகந்தரித்து, ப்ரயோசனமுள்ள சடமும் அசடமும் அல்லாததாய் மயக்கத்தில்விரிந்த மனதை சத்துக்கள் சகலமென்று சொல்லுவார்கள்; சகமுமிது பந்தமுமிச்சித்தமே.—பவக்கன் மக்களுக்குப்பீசமாய் மரத்தை யசைக்கின்ற வாயுவைப்போல, சித்தமும் சரீரத்தை யாட்டிவிப்பதும் மனமாகும்; இம்மனதை விட்டுவிடுவதே, களங்கமற்றவரசனே? சகலத்யாகமாகும், அச்சகலத்யாகமே பிரமாநந்தமாகும். சொல்லப்பட்ட மற்ற யாவும் மிகவும் பயப்படுகின்ற வெவ்வியதுன்பமே.—சகலத்யாகத்தைப் பண்ணி உபசாந்த முடையவனுய் துவேஷமில்லாமல் இயல்பான குணத்தினுல் தெளிவடைந்தால், சொல்லப்பட்ட ஸ்வரூபமெதுவோ அப்பிரமஸ்வரூபமும் உனதாத்மஸ்வரூபமும் அயிக்கியமாய் ப்ரகாசிப்பாயென்று கும்பமுனி சொல்லவும், அரசன் சொல்லுவான். தேவரீர் சொல்லியமனதுக்குச் சொல்லப்பட்டகாரணமியாது? உருவமியாது? எவ்வித மியானந்தமனதைக் கெடுப்பது சொல்லுவாயென்று கேட்க,—திரும்பவுங் கும்பமுனி சொல்லுவார். மனத்துக்கு வடிவமானது வாசனையேயாம்; மனமென்றுசொல்லப்பட்ட சொல்வாசனையினது பரியாயநாமங்களாகும். பிழைகளியாவும் கூடியிருக்கின்ற கூண்டாகிய யானென்கின்றதே மனமாகிய விருட்சத்துக்கு விளங்குகின்ற வித்தாகும், அரசனே? நீ அறிந்துகொள்வாய்,—

௩௫௫. பிரமசங்கற்பமான மனமே சகல பற்றுயு மிருக்கின்றதெனல்.

௩௫௬. சித்தத்யாகமே சகலத்தியாகமதுவே பரமசுகத்தைக் கொடுக்குமெனல்.

௩௫௭. சித்தத்யாகமேயாத்மாவெனிலதன் காரணமுமுருவமு மதைக் கெடுக்கு முபாயமுமியாதெனில்.

௩௫௮. மனதிற்குருவம் வாசனை அதின் காரண மகம் பாவமாமெனல்.

முதலிலுண்டாகிய இவ்வகம்பாவத்தின், முளையானது அனுபவாகாரமாய் நிச்சயிப்பதாய்சொல்லும் வடிவமில்லாமல் உண்டாகும், அந்தமுளையை புத்தி

௩௫௯. அகம்பாவத்தி லுதித்ததேயந்தக் காரணமாமெனல்.

யென்று சொல்லுவார்கள். சொல்லப்பட்ட இந் நீதியையுடைய புத்தியென்கின்ற முளையினிடத்தில், நிறைந்து வளந்திலையுடையகிளைகளை சங்கற்பமென்று சொல்லுவார்கள். வேறுபாடுஇவையாதலினுல், சித்தமும் புத்தியும் பெரிதாகிய மனமென்பன யாவும் அகங்காரத்தினது நாமங்களாம்.—இப்படிப்பட்ட மனமென்கின்ற கொடிய விருட்சத்தினது கிளையை நாடோறும் தறித்து, வேரோடுங் கெடுப்பாய். வினையையுடைய வாசனையென்னும் கிளைகள் வெகுவான காய்களைக் காய்க்கும், ஞானமென்னுங் கத்தியினுல் அகத்தில் தறித்தால்கெடும். பாவனைகெடவும் ஆசைகெடவும் மகாமௌனமாய் எதிர்வந்ததைச் செய்பவர்கள் அகத்தின் மனதைச் செயித்தவர்கள். அவ் விருட்சத்தின் கிளைகளைவெட்டுதல் கௌவுணமென்று சொல்லுவார்கள். அதனது மூலத்தைக் கெடுத்தலே முக்கியமென்று சொல்லுவார்கள். †—

௧௬௦. மனதைக் கெடுக்கு முபாய மறிவித்தல்.

ஆதலால் மிகுந்த சன்மார்க்கத்தினுல் அந்த மனமென்னும் விருக்ஷத்தினது மூலமாகிய வகம்பாவனையை, நீ களைந்தெரித்தால் மனமுண்டாகாதென்று கும்பமுனிசொல்லவும், அரசன்சொல்வான். தனிமையான மனவிருட்சத்தின் பீசமாகிய அகம்பாவனையை, மேலான தவமுடைய முனியே! எரிக்க அக்கினியேதென்றரசன்கேட்கவும், கும்பமுனி திரும்பவுஞ் சொல்லுவார். யானுரென்று சிந்திக்கின்ற ஆத்மஞான விசாரணையே மனதினது பீசத்தை கெடுக்கின்ற அக்கினி யெனவும் அரசன் சொல்லுவான்.¶—

௧௬௧. அகம்பாவத்தை கெடுக்கு முபாயங் கூறல்.

எனதறிவினுல் யான் அநேக விதமாகச் சிந்தித்துப்பார்த்தேன்; அறிவின்மையதலின் இவ்வுலகமும் யானன்று, இம்மலசரீரமும் யானன்று, இந்திரியங்களும் யானன்று, சிந்திக்கின்ற மனமும் யானன்று, தொடர்பாகின்றபுத்தியும் யானன்று, அபிமானித்தெழுகின்ற தீயவகங்காரமும் யானன்று, என்றரசன் சொல்லவும், கும்பமுனியானவர் இவைகள் நீயல்லவாயின், நீவேறேயார்? சொல்வாயென்றுகேட்க, அரசன் சொல்லுவான். சகலத்தையு

௧௬௨. விசாரமுகத்தால் முன்பற்றறநீங்கிய சகத்து முதலியவைகளை யறிகின்ற வறிவைக்கொண்டு பார்க்கினவைகள் சடமாயிருத்தலாலவைக ளியானன்றெனத் தள்ளின விடத்தவைகட்குச் சாட்சியாய் விளங்கிய சுயஞ் சித்தே சேடித்திருத்தலாலஃதே தானெனத் தரிசித்தானெனல்

---

† இ-ம். இந்திரியத்தோடுஞ் சேர்ப்பற்றை நீக்கிச் சித்தத்யாகஞ் செய்யும்பொருட்டதனுருவமாகிய வாசனைமுதலிய சங்கற்பங்களைக் கெடுத்தல் கௌவுணமெனவும், அதன்மூலமாகிய வகம்பாவத்தைக்கெடுத்தல் முக்கியமெனவு மிரண்டுவிதமாகக் கூறினதென்பதாம்.

¶ இ-ம். அகம்பாவத்தைக் கெடுக்கின் மனமுண்டாகாதாதலா லஃதை யாத்மஞான விசாரத்தாற் கெடுக்கவேண்டு மென்பதாம்.

முண்டாக்கி இரட்சித்தடக்குகின்ற களங்கமற்ற சைதன்னிய மாத்திரமாகிய ஆவரூபமேயான்.¶—

கசஙு. தொம்பதத்தை தரிசிப்பித்து, தற்பதத்தை ரிதசிப்பிக்கத் தொடங்கி யிதிகளைந்த சடம்வேறு சித்துவேறு யிருமைப்பட் டிருத்தலைச் சின்மாத்திரமா யொருமைப் படுத்து நிமித்த மச்சொருபஞான ப்ரதிபல னமாகத்தோற்றிய சகத்து மதைய றிந்தவிருத்திஞானமு மஃதைத் தானென்கின்ற வகம்பாவமுதலியவுங் கற் பிதமாகக் காண்பிக்க வவ் வகம்பாவத்தின் காரணமியா தென வினவுதல்.

இப்படிப்பட்ட ஞானஸ்வரூப மாகிய வெனக்கு ஒருகாரணத்தையுங் கண்டிலன்; துன்பத்தையுடைய மனவிருட்சத்தின் வித் தாகிய அகம்பாவத்தைதள்ளுகின்ற மார்க்கத் தைத் தெரிந்திலன்; தள்ளத்தள்ள ஒடிவரா நின்ற விவ்வகம்பாவத்தினல் மனந்தளர்ந்தே னென்று அரசன்சொல்ல,கும்பமுனிசொல்லு வார். அரசனே? காரணத்தையல்லாமல் ஒரு காரியமுண்டாகாது, முன்னுகின்ற அகம்பா வத்தின் காரணத்தைப்பார்த்து சொல்லுவா யென்று சொல்ல,மன்னவன் சொல்லுவான்.-

கசச. அகம் பாவத்தின் காரண மறிவெனி லதன் காரணமியாதெனல்

அகம்பாவமென்கின்றகுற்றத்திற்குகாரணமானது போதமாகும்; அப்போதமானது இவ்விடத்தி லயிக் கும்வித மென்ன? திரிஸ்யத்தில் போதமுண்டாதலி னல் இளைக்கின்றேன். காணப்பட்ட திரிஸ்யத்தை நீக்கும்வித மெப்படி சொல்லுவாயென் றரசன்கேட்க, கும்பமுனிசொல்லுவார், அறிவின்காரணத்தை நீ சொன்னல், பின்பு விளங்குங்காரணத்தையும் காரண மல்லாததையும் உனக்கு யான் சொல்வேனென்று

கசரு. விருத்திஞானம் விடயத்தைப்பற்றி யெழு தலி னவ்விடயங்காரணமா மஃது நசிக்கி னகம்பாவஞா னமு நசிக்குமெனி லல் விடய நீங்கினவிடத்தறி வெங்ஙனம்விளங்குமெனல்

சொல்ல, அதற்கரசன் சொல்வான்.— சரீர முதலாகிய வஸ்து சத்தையினல் அறிவுண் டாகும், அந்த வஸ்து சத்தை அசத்திய மானல் அறிவில்லை, அகம்பாவ ஞானமென் கின்றமனத்தின்விதையும்ஒடுங்கிவிடுமென்று அரசன் சொல்ல, அதற்குக் கும்பமுனி சொல்லுவார். விரும்பியசரீரமுதலான வஸ்துசத்தை யிருந்தால் அறிவுண்டாயிருக்கும்; சரீரமுதலான பரவஸ்துக்களில்லாத சமயத்தில் விளங்கிய ஞான மானது எப்படியிருந்ததென்று சொல்லென்று

கசசு. தேகமுதலிய விடயமெங் ஙன நீங்கு மதைப்பற்றி யெழுகின்ற வறிவெங்ஙனந் தனியேயிருக்குமெனி லங்ஙனந் தனியே யில்லாமையாற் றேகங் காரணமாகா, அஃதங்ஙனமா கவே யிப்போதங்கபரியமாகா, அஃதங் ஙனமாகவே வதனுற்றோற்றிய வகம் பாவமுதலிய யாவுமித்தைய ராய்ப் பிரம ப்ரதிபாமாத்திரமாம் விளங்குதெனல்.

கேட்க, அரசன் சொல்லுவான்.— காசரணமுத லவயவங்க ளாதியா கச்செய்யப்பட்ட கருமத்தின் பயனை யுடையதாய் அனுபவிக்கப்பட்டசரீர மானது, எனதாசிரியரே? இல்லை யென்கின்ற விதமெப்படியென் றர சன்கேட்க,கும்பமுனிசொல்லுவார். கருமத்தினுள்ள இக்காயங் கார ணத்தைப்பொருந்தாததானல்போத

¶ இ-ம். ப்ரத்யோகத்மஸ்வரூபமாய் விளங்கியகூடஸ்தஸ்வரூபமானு னென்பதாம்.

மென்னுங் காரியமுமில்லையாகும்; அந்தவறிவும் பிரமையேயாம். மிகுந்த பிரமையினால் வருவனவாகிய அகம்பாவமுதலிய சகலமுமில்லாததாகும்; காரணமல்லாமல் வரப்பட்ட வஸ்துக்களிரச்சுவிலுண்டான

௩௪எ. தற்பதத்தைத் தரிசிப்பித்து வசிப்பதத்தைத் தரிசிப்பிக்கத் தொடங்கி விடயமும், போதமுங் காரணகாரிய மாகாதெனக்கூற வஃதெங்ஙனங்கூடுஞ் சகத்துக்குப் பிரமன் காரணமல்லவாவெனி லியாவுஞ் சத்தா மாத்திரமா யிருத்தலிற் காரணமாகாதெனல்.

சர்ப்பத்தைப்போல மித்தையாம்*— இப்படி சொல்லவு மிச்சகத்து முதன்மையாயிருக்கின்ற பிரமன் உண்டாகிய பலசிருட்டியாகிய இச்சகமிருந்தன. அந்தப்பிரமன் இச்சகத்துக்குக்காரணமல்லாதமார்க்கமதுவென்றரசன் கேட்கவும்.கும்பமுனி சொல்லுவார். சிருட்டிக்கு முன்னே கேவலமாய் உபசாந்தமாகியபிரமஸ்வரூபமேசத்தாய்ப்ரகாசிக்கும் அவ்வொன்றைத்தவிர இரண்டில்லாதகாரணத்தினால் மேலான பிரமாவும் காரணத்தையடையான், என்று சொல்ல.—

௩௪அ. அங்ஙனமாயின் பிரமனுக்குப்பிரமங் காரணமன்றோவெனி லஃதுமில்லையெனல்.

அரசன் கும்பமுனியை நோக்கிமேலான பிரமமானது பிரமாவுக்கு காரணமல்லவா வென்று கேட்க. கும்பமுனிசொல்லுவார். கைவல்யமாகியும், கெடாததாகியும், அளவில்லாததாகியும், உபசாந்தமாகியும், பரிசுத்தமாகியும்,! இறத்தலும், சனித்தலும், துன்பமும், வியத்தமும், எப்பொழுதும் நெருங்காமல், பாவமிறந்து ஆதியந்த மிறந்து அத்துவிதமாக நிறைந்து அரிதாய் சிந்தனாதீதமாகியு மிருக்கின்ற பிரமஸ்வரூப மிருக்கும். அறிதற்கரிய அப்பிரமமெப்படி காரணமாம்? யாதினால் கருத்தாவாகியும் போக்தாவாகியுஞ் சேரும்விதம்?—

௩௪௯. சர்வம் பிரமமயமெனல்.

ஆகையினால் இச்சகம் எவ்வளவும் பண்ணப்பட்டதன்று; சேர்ந்திருக்கின்ற இவ்வுலக முண்டானதுமில்லை, சித்துமாத்திரத்தின் மேன்மையான சங்கற்பமே பிரமாவாகும்; உண்மையாக ஞானத்தைத்தவிர வேறே யொன்றுமில்லை; ஞானமாத்திரத்தில் உண்டான சிருஷ்டியானது, அந்த ஞானமேஸ்வரூபமென்றுசொல்லப்படும். இருக்கின்ற சகலமும் சநநந்தீர்ந்த பிரமஸ்வரூபமே ஆதலால் சொல்லப்பட்ட கருத்தாவும், போக்தாவும் இவ்விரண்டுமல்லாதவன்.†—

௩௫௦. சர்வம்பிரம

உறுதியாக நிச்சயஞ்செய்து

---

* இ-ம். பிரமப்ரதிபாமாத்திரமாகப் பாஞ்சபூதபௌதிகத் தோற்றினதேயன்றியதற்கோருருவமின்மையா லதுவுமதனாற்றோற்றியயாவையுஞ் சிற்பிரகாசமாய்விளங்குதலாற் காரணகாரியமிரண்டுமின்றென்று தற்பதார்த்தத்தைத்தரிசிப்பித்ததாம்.

† இ-ம். பிரமப்ரதிபாமாத்திரமாய்ச் சகத்துவிளங்குதலாற் சகமேயில்லை.இங்ஙனமாம்போ தெங்ஙனங் காரியமாம், இங்ஙனங் காரியமாகாதபோது பிரமனெங்ஙனங் காரணமாவன் இவற்குக்காரணம் பிரமமென்றாலதுசுசாதியம்விசாதியஞ்சுகத பேதமறத்தானே தானால் விளங்குதலி னெங்ஙனங் காரணமாமாதலாற் காரணகாரியமின்றிச் சின்மாத்திரமே விளங்குதென வசிபதவருத்தத்தைத் தரிசிப்பித்ததாம்.

மயமென்னு மனு பவ திருஷ்டியால் அஞ்ஞானங் கெடு மெனல்.

அகத்தின்கண்ணுள்ள வறியாமையைக் கெடுப்பித்தால், அறியாமையானது அழிந்ததேயாகும்; மிகுந்த கருமநாசத்தினலல்லாமல் மயக்கமாகச்சொல்லிய நிச்சயம் வழுவாது. சொல்லப்பட்ட வஞ்ஞானமானது கிரமமாக நசிக்கில், முன்னுள்ளசகத்தினிச்சய நீங்காமல் முதன்மையான பரமபதமாகும்; அதனல்முதற் கடவுளான பரமாத்மா வியாபகமாகிய ஞானஸ்வரூபத்தினல் தன்மனதினல் எப்போதுஞ் சிருஷ்டியைச் செய்யும்.- ஆத்மதத்துவமாகிய வதனலே பிரமமென்று சொல்லப்படுவது, எல்லாமாய் காணப்பட்ட விச்சகங்க ளுபசாந்தஸ்வரூபமேயாகும்.

௧௫௧. அஞ்ஞான நீங்கி விளங்கிய ஸ்வானு பூதியைக் கூறுதல்.

அரசனே யென்று கும்பமுனி யுபதேசித்தவனைத்தும் ஏற்றனவே சிருட்டிக்கு முன்னேசிருட்டிப்பவன் இல்லாததினல் சகமில்லையாகும்; அதினலே பலவான்பதார்த்ததிருஷ்டியில்லை, தெளிவிக்கின்ற இவ்வகையால் நன்ருகத் தெரிந்தேன்; சிவஸ்வரூபமானேன்; மற்றென்றும் தோற்றப்பார்த்திலன்,*- எனைத் தொழுதேன்,பலபதார்த்தங்களை பார்க்கின்ற வறிவினு லிங்ஙனம் அசத்தியமாய்த் தோற்றினதென் றறிந்தது, இந்தஞானத்தினல் சிந்தனையற்ற உபசாந்தமாகிய ஆகாயத்தைப் போல பூரணமாயிருக்கின்றேனென்று அரசனவன் சொல்லவும், ஆத்மாவைக் கொடுக்கின்றகும்பமுனியுஞ்சொல்லுவார்.

௧௫௨. இவ்வனுபவஞ் சமாதிகூடிச் சகத்தி லாள வேண்டு நிமித்தஞ் சின்மயமாய் நிற்கின்றேனென்றவனை நெடுநாளயுள்ளவிடய பழக்கம் இதனற்சிலநாளில் நீங்கிச் சின்மாத்திரமாய் விளங்குவாயெனல்.

தேசமும் காலமும், விசாலமாகியதிக்குகளும், மனச்செயல்களும், அடைந்த சகலமும், யாவையும்பார்ப்பதுஉலகத்தைப் பகுத்துப் பார்ப்பதாம்; அப்பிரிவு வெகுகாலமாயுள்ளது சிலநாளில் விடுபட்டுப்போகும்.— உபசாந்தமடையநாசமில்லாத பிரமமானது அவ்விடத்திற் றனிமையாயிருக்குமென்று கும்பமுனிசொல்லவும், அரசனவன் ஞானத்தையடைந்து ப்ரகாசித்திருந்தான்; கொடிய மாயர்க்கிரகத்திலிருந்து வெளிப்பட்டான்; அப்படியே கற்பனை நீங்குப்படி கும்பமுனி யருள்செய்ததைக்கருதி தனதாகிய இப்பிரமபதத்தில் ப்ரகாசமாக சேர்ந்தடங்கினன் மனதையும், பார்வையும், மிகுவ

௧௫௩. முன்சிரவணமானபடி மனனஞ்செய்து நிதித்தியிற் காக்ஷிப் பட்டானெனல்.

* இ-ம். பிரமமே பிரமனைப்போலவும் ப்ரபஞ்சம்போலவுந் தோற்றினதேயன்றிவேறின்றென்று மனுபவததின லஞ்ஞானங் கெடுமெனப் போதிக்க, முன்னமே அகோசரமான பிரமமாத்திரமாய் விளங்குதலி னலெதெங்ஙனங் காரணமாமது காரணமாகாதபோது சகமெப்படி காரியப்படு மலின்றியபோ ததைபரியும் போதமெங்ஙனமுண்டா மலின்றியபோ ததை யானென்னு மகம்பாவ மெங்ஙனமுண்டா மலின்றியபோ ததைச் சிந்திக்குஞ் சித்தமெங்ஙனமுண்டாம், ஆதலாற் சர்வம் பிரமமென்னுந் திருஷ்டியாற் சர்வமில்லாமற்போனதா லஞ்ஞானநீங்கிச் சிவஸ்வரூபமாய் விளங்குகின்றேனென்பதாம்.

கடுச நிதித்தியின் காக்ஷியிற் றுக்க நிவர்த்தியுந் தடையற்ற வானந்த முதலியவனுபவமுண்டாயிருக்குதோவென் றாசிரிய ரனுபவம் வினவுதல்.

கடுடு. பெற்ற வனுபூதியின் விலாசத்தைச் சொல்லுதல்.

சனத்தையும் நீங்கினவன் ஒருக்ஷணத்தில் அந்தப் பிரமபதத்தில் பூரணமானான்.‡— இருகடிகை நிதித்தியிலிருந்தறிந்து அரசன் விழித்தமாத்திரத்தில் மேலான கும்பமுனி சொல்லுவார். உள்ளதாகியும், நன்றாகியும், நிருமலமாகியும், பரிசுத்தமாகியும், மிருதுவாகியும், நிருவிகற்பங்க ளனைத்தினுக்கும் நிலையாகியுமிருக்கின்ற செல்வமிகுந்த இந்தப் பிரபமதத்தில் ஆநந்தமாகி துக்கநீங்கினையோ? ஆத்மஞானத்தில் தெளிவடைந்தாயோ? வராகின்பபிரமைநீங்கினையோ? அறியத்தக்கதை நன்றாயறிந்தாயோ? பார்க்கவேண்டியதைப் பார்த்தாயோ? வென்று கேட்டார்.— அரசனானவன், அதற்குச் சொல்லுவார். பகவானே? உமது கிருபையினால் மகாசம்பத்தாகிய வின்பத்தினால் மிகவு மகத்தாகி சகலத்துக்கு மும்பர்வாகி மிஞ்சியபரமபதத்தையடைந்தேன், அகோ! அகோ!!பிரமஞானத்தைத் திடமாகப்பெற்ற மகத்துக்கள் குழாத்தையடைந்து தெளிவான வமுதமாய்ப் பேராநந்தத்தை நிறையக் கொடுக்கின்ற வரமாகிய வுமதுசங்கத்தினால் ஒருபொழுதுங் கிடையாத பராவமுதத்தை அடையப்பெற்றேன்.— அளவில்லாததாகிய இந்தப்பராவமுதமானது அடியேனுக்கு பூர்வத்தில் அரியதானதென்ன

கடுசூ. சென்ற காலத்துக் கிரங்கி வினவுதலுக் குத்தரங்கூறல்.

வென் றரசன்கேட்க, கும்பமுனிசொல்லுவார். மனதிற் சாந்தமடைந்து போகத்திற் கசப்புவந்து வலிய விந்திரியங்களகத்திற்றிரும்பி மன வஞ்ஞான நசித்த போதே, வனத்திலுண்டாகும் சிவந்த குசும்பாசலமானது களங்கமற்ற வஸ்திரத்தில் ஒளிவடைவதுபோல, சீடனுடையமனதில் மேன்மையான சற்குரு வாக்கியம் கலந்து நன்மையாகும்; தேகத்திலுள்ள களங்கங்களும் விருக்ஷத்தினது கனிகளைப்போலநழுவிப்போகும்.— மனதில் இரண்டென்றும், ஒன்றென்றும், நினைத்தலே யஞ்ஞானமாம்; இவ்விரண்டு நீங்

கடுஎ. இங்ஙனம் பெற்ற வனுபவப்படி ஸ்திரமாய் நிற்பாயெனல்.

குதலே ஞானமாகும், தெளிவான பரகதியுமதுவேயாகும். தெளிவுற்று மோக்ஷத்தையடைந்தாய், மனதையுந் தவிர்த்தாய், ஞானசம்பத்தையுடையவனாய், தள்ளப்பட்ட களங்கததைவிட்டு மகாமௌனியாய் தனித்திருப்பாயென்று கும்பமுனிசொல்லவும்,சீவன் முத்தர்கள் கொள்ளப்பட்ட செயல்களனைத்தும் மனதினாலல்லவா, கொள்ளப்பட்ட மனதையன்றி நடக்குந்தன்மையாது,— சொல்லவேண்டுமென்று அரசனானவன் கேட்க, கும்பமுனி சொல்லுவார். மனமென்று சொல்லியதுமற்றொன்றுமல்ல அளவற்ற சந

கடுஅ. சமாதியிற் றியானித்தல் முதலிய தொழில் மன்

‡ இ-ம். சந்தேகம் விபரீதமின்றி யாத்மஸ்வரூபத்தைத் தரிசித்தானென்பதாம்.

தையன்றி யெங்ஙனங்கூடுமெனி லதற்குத்தரங் கூறல்.

நங்களைக்கொடுக்கின்ற வாசனையே மனமாம்; காணப்பட்ட தன்னைத் தெரிந்துகொண்டால் அந்த வச்சமில்லை; தடையறப் பார்த்தவர்கள் கருமங்களிற் சஞ்சரிக்கின்ற சத்தவாசனை மறுபவத்தைக்கொடாது அவ்வுயர்வுள்ளமனதை சாத்துவிதமென்று சொல்லுவார்கள்; ஞானமில்லாதடமனதை மனமென்றுரைப்பர்.—

கடுக. இதுவுமது.

ஞானமுள்ளமனதை சாத்துவிதமேயென்றுசொல்லுவார்கள்; ஞானமில்லாதவர்கள், மனதினடையிவிருப்பார்கள்; குற்றமற்ற ஞானவான்கள், சாத்துவீதத்திலிருப்பார்கள். யாதொன்று சுவர்க்கமுமோக்ஷமுமாகிய இவைகளனைத்தையுங் கொடுக்கின்றதோ ஆகிய வச்சகலத்தையுந்தள்ளி சமமான சுயம்பிரகாசமானால் ஏதாகின்றாயோ, இவ்விடத்தில் அதுவேயுனது ஸ்வரூபமாகும். ஈனமாகிய பதார்த்தங்கள் ஒன்றையுங் கைவசப்படுத்தாமல் மனோசலனமில்லாமல்

கசு0. பிரமத்திலுண்டான ஸ்புரணம் பிரமமாய்விளங்குதென்பதக் கையாண்டஃதொருமையாய்ச் சமாதியடையு நிமித்தஞ் சலனசலனமின்றி யயிக்கியங் கூடும்வித மெங்ஙனமெனி லதற் குத்தரங்கூறல்.

திடமாக இருப்பாய்.*— மனமில்லாதவர்கள் பிறவி; வெகுதூரத்திற் செல்லும், நீண்டபூமியில் துன்பமானது சற்றுநேரிடாது; பயப்படுகின்ற மனமானது சஞ்சலத்திலுண்டானதாகும்; அசைதலும் அசையாமைகளுமாகிய இரண்டையு மொன்றாக்கி சஞ்சலத்தைக் கெடுத்து ஞானமாகும்படிக்கு நிற்பாயென்று கும்பமுனி சொல்ல, அரசன் சொல்லுவான். அயிக்கியமடைவதெப்படி? அசைவுமசையாமையும் இரண்டுமொன்றாக நீங்கும்படி சொல்லுவாயென்றரசன் கேட்க, கும்பமுனிசொல்லுவார்,—

ஈகூக. இதுவுமது.

சமுத்திரத்தின் சலத்தைப்போல சகங்களனைத்தும் ஏகமாகிய சின்மாத்திரமேயாகும்; அச்சின்மாத்திரமானது, புத்தியை கிரிகித்தலினால் நிறைந்த சலமானது பேரலையினால் அசைகின்ற தன்மையைப்போல, சஞ்சரிக்கும்; சிவமும், சின்மாத்திரமும், சத்தியமும், பிரமமுதலாகிய அநேக நாமங்களையுடையதாய் சொல்லிய பரவஸ்துவை உலகமென்றுபதித்து, நிஷ்டையற்ற மூடர்கள் பார்ப்பார்கள்; சித்தான்து கொஞ்சமசைந்தமாத்திரத்தில், சகசிருட்டி யுண்டாகும்.—

ககூஉ. பிரமத்திலுண்டான ஸ்புர

தோன்றின சகசிருஷ்டியை ஞானசுகமாகப்பார்த்தால் அது

---

* இ-ம். வாசனைருடமான மிமிரண்டுவிதமா மவற்றுள், இராசத தாமதத்துடன்கூடி வெளிமுகத்தில் அறிவின்மையாகச்செய்யுந் தொன்லாற் பவத்தைக் கொடுக்குமனதுக்கு மனமென்றுபேர். சத்துவத்துடன்கூடிய சமுகத்தின் ஞானமயமாய்ச்செய்யுங் கிரியையால் முத்தியைக்கொடுக்கு மனதுக்கு மனமெனப் பெயரின்றாமாதலா லவ்விரண்டையுநீக்கி மகாவாக்கியார்த்தம்படி சலனசலனமின்றிச்சுயஞ்சோதியே நீயாய் விளங்குவாயென்பதாம்,

ணம் பிரமமாய் விளங்கு கையாண் டஃதொருமை யாய்ச்சமாதிய டையு நிமித்தஞ் சலனுசலனமின்றி யயிக்கியங் கூடும் விதமெங்ஙன மெனி லதற்குத் கூறல்.

இறந்துபோகும்; திடமாக வறியாததன்மையினால், பழுதையில் சற்பமென்பவர்களைப்போல திரிஸ்ய மாகப் பார்த்தார்கள். ப்ரத்யக்ஷமாகின்ற ஞானசாஸ் திரங்களினாலும், சாதுசங்கத்தினாலும், தடையற்ற அப்பியாசத்தினாலும், சிலகாலத்தில் மனமானது விமலமாக சந்திரனைப்போல நின்றால் பழமையான அனுபூதியமாகவே ஞானசப்பத் துள்ளவர்களுக்கு

கசஙு. சமாதியிற்றனது ஸ்வர்னுபூதியினின்றுஸ்புரிக் கின்லஸ்புரணமெதிரிடாமற் றன்மயமாக்கிக் கொளெனச் சமாதியில்வைத் தஃது கூடு நிமித்தந் தனியேவைக்க நினைத்தல்.

இந்தத்திருஷ்டி தோற்றும்.¶— சக்தி னுடைய உற்பத்திலயத்தின் தத்துவத்தைச் சொன்னேன்; இந்த அருத்தத்தை சுகமுண் டாக வப்பியாசித்து சிந்தித்து வழுவாமல் விருப்பியபடி நீங்குதலில்லாமல், நேரிட்ட வனைத்தையும் பிரமபதத்துக்காகச் செய் திருப்பாய். சகலத்துக்குந் திலதமாகிய சுவர்க்கலோ கத்தை யானடைவேன், இதுவேகாலமாம்.— சத்திய

ககூச. இதுவு மது.

லோகத்தி னின்றும், தெய்வலோகத்தையடைந்து அவ்விடத்தி லென்னைப்பார்க்கானுயின் எனதுபிதா வாகிய நாரதமுனியானவர், பயப்படும்படி கோபிம் பார்; அன்புள்ளசிடர், மேலான வாசாரியரைகோபம் வருப்படிசெய்ய எவ்வளவுங் கூடாது, அரசனே? மயக்கமில்லாமல் வேற்றுமையைக் கெடுத்து சந்தோ ஷித்து, இந்தத்திருட்டியி லிருப்பாயென்று கும்ப முனிசொல்லி,†— யாம்போகிறேனென்று கும்ப

ககூரு. நிதித்தி யிற்சண்ட பேரா நந்தமோதமே தா னுகவியப்புறுதல்.

முனியானவர் மறையவும். அரசனுனவ னினைக்கின் றுன். குளிர்ச்சியாகியும், பரிசுத்தமாகியும், உபசாந்த மாகியும, தெளிந்த வமுதவூற்றுக் கொப்பாகியுமிருக் கின்ற இந்த வொப்பற்ற பதவியானது. எனக்குள் ளிருந்தவிதம் ஆச்சரிய மாச்சரியம்!!! குற்றமற்ற வென்னை சத்தாமாத்திரத்தில் விஸ்ராந்தியடையச் செய்ததென் றரசன்சொன்னுன்.— உண்டாகிய

கசுசு. வியப் புற்றபடி சமாதி கூடல்.

வாதனைகளிறந்து சலனமற்று நிலையிநீங்காதவனுய் மௌனமாகியும்,நிருவிகற்பமாகியும், இச்சையணைத்து மற்ற இடத்திலமர்ந்து கல்லைப்போலவும், மரத்தைப் போலவும், மதிலைப்போலவும், சமாதியிலிருந்தான். சென்ற கும்பமுனியென்னுஞ் சூடாலையானவள் முன் னழகிய புட்பக்கொடிபோன்ற தன வுருவமடை

¶ இ-ம். உததியும் வுனலும்போலச் சுயஞ்சைதன்னியமு மதன் ஸ்புரணமும் விளங்குதேயன்றி வேறின்றெனக் காரணத்தைத் தரிசித்ததுவாக நிற்றிற் காரி யமுமதுவாக விளங்குமப்போது லலனுசலனமின்று யயிக்கியமான நிருகவிற்பச மாதி கூடுமென்பதாம்.

† இ-ம். நிருவிகற்பசமாதி கூடுநெறியை யறிவித் தகன்றனரென்பதாம்.

கசுஎ ஆசாரிமர் சென்று பின்னு மெழுந்தருளுதல்.

ந்து,¶— ஆகாயத்திற்போய் அந்தப்புரத்திற் புகுந் தாள்; பூமிபாலனம் நமதுபாரமென் றிரட்சித்தாள்; மூன்றுவருடஞ் சென்றது. திரும்பவுங் கும்பமுனி யாய்த் தலைவனிருக்கின்ற வனத்தையடைந்து அவ் விடத்தி லக்கணவனைப்பார்த்தாள்; தூணைப்போல

கசுஅ. சமாதியி லசைவற நிற்ற லைப்பார்த்து ஆலோசித்தல்.

நிருவிகற்ப சமாதியிலிருக்கையைப்பார்த்து,— நமது வரவைத் தெரிவிப்போமென்று சிங்கத்தொனியினால் சத்தித்தவளாவிலும் அறிந்ததில்லை; மேலுமேலுஞ் சந்தித்து இந்தச் சூடாலையானவள், அரசனை கவிழும் படி தள்ளவும் கீழேவிழுந்து முணர்ந்திலன்; இதென்னவென்று கிரமமாகவாழ்விக்கின்ற கும்ப

கசுகூ. இதுவுமது.

வடிவத்தையுடைய சூடாலையானவள் எண்ணத் தொடங்கினாள்.— உத்தமனான வரசன், பிரம பதத்திற் கலந்தான், ஈததிசயம்!!! இந்தத்தனிமை யான சரீரத்தை நோக்கினால், இருதயத்தில் அறி வுக்கு விதையாகிய சத்துவசேட மிருக்குமாயின் நாயகனைச்சேர்ந்து மிருதுவாக திரமாகவாழ்வோம்; சத்துவசேடமில்லாவிடின் நமது பெண்ணுருவத்தை

கஎ0. இதுவுமது.

விட்டு,— மறுபிறப்பை அடையாதபடி குற்றமற்ற பிரமபதத்தை யடைவோம், நிச்சயமிதுவென்று சிந் தித்து பரிசத்தினாலும், கண்ணினாலும், அவ்வரசன் அறிவுக்கு விதையாகப் பொருந்திய சத்துவசேட மானது கெடுதலில்லாமல் இருதயத்தில் இருந்ததைப் பார்த்தாளென்று வசிட்டமுனிவர் சொல்ல,§—

கஎக. மனமிறந்த ஸ்வரூபசமாதியிற் சத்துவசேட மெங்ஙன மிருக்கு மெனல்.

இதைக்கேட்கவும், ஸ்ரீராமன்சொல்லுவார். சொல் லப்பட்ட மனது முழுதுங்கெட்டு, கட்டையுங் கல்லையும்போல பரிசுத்தமான ஞானதிருஷ்டியில் கலந்தவர்களுக்கு இவ்விடத்திற் சத்துவசேடமானது எப்படியுண்டாமென்றுகேட்க, தளர்வில்லாத அறி வின்மிகுந்த வசிட்டமாமுனியானவர் சொல்லுவார்.—

கஎஉ. தேக நிமித்தஞ் சத்துவ சேடமிருக்கு மெ னல்.

விதைக்குள் புட்பமும், பழங்களும், பொருந்தி யிருப்பதுபோல, இருதயத்தில் அறிவுக்குங் காரண மாகிய சத்துவசேடமிருக்கும்; சீவன்முத்தனாய் மனோ நாசமானால் வலிமையுள்ள சரீரநசியாது; போகங் களிற் பொருந்திய சுகதுக்கங்கள் கிட்டாமல்ஒற்றுமை

கஎங. சித்தாய்ச்

யாகும்†— ஆதலினால், ஸ்ரீராமா? அத்தெய்வகன்

¶ இ-ம். ஆசாரிய ரனுக்கிரகத்தி லனுபவமானதனது ஸ்வானுபூதி மாத்திரமாய் நிருவிகற்பசமாதி யடைந்தனரென்பதாம்.

§ இ-ம்- இச்சமாதி சீவன் முத்தாமா, விதேகமுத் தமாவென் றையுற் றான் றிப் பார்க்கின் சீவன்முத்தித் தன்மையி னிலக்கணத்தைக் கண்டனரென்பதாம்.

† இம் சத்துவசேடமிருக்குந்தன்மையை வினாவின தற் குத்தரங்கூறினதாம். சத்துவசேடமென்பது, அறிவுக்கு வித்தாகியசத்தில் அவ் வறிவு சீவன்முத்தியரி யந்தம் கரையாமலடங்கி நுண்ணிதாய்நின்று பிருத்தலெனக்கொள்க.

சென்லு சத்தி லடங்கியிருந்த சித்தை வெளிப்படுத்தல்.

னிக் கொப்பான சூடாலையானவள், அக் கும்பவடிவத்தைவிட்டு குற்றமற்றதாய் ஆதிமத்தியாந்த ரகிதமான சித்தினுள்ளேபுகுந்து, மேன்மைபொருந்திய சத்துவசேட மடைந்திருக்கின்ற அரசனதுமனதை சலிக்கச்செய்து,குற்றமற்ற தனதுசரீரத்தில், கூண்டிலடைகின்ற பட்சியைப்போல், திரும்பவந்தடைந்தனள்.—

௧௭௪. சத்தினின் றுஞ்சித்து விகசித்தல்.

கும்பமுனிவடிவமாய் பூமியில் தன தாசனத்திலிருந்தவளாய் பிள்ளாங்குழலைப்போல பாடசாமகானஞ்செய்துகொண்டிருக்க, கட்டையைப்போலிருந்தவரசன் சரீரத்தில், சாத்துவிதகுணத்தையடைந்திருக்கின்ற ஞானமானது, வண்டுக்கொப்பாக பாடுகின்ற சாமகானத்தைக்கேட்டு, மெல்லமெல்ல ஆதித்தகிரணத்தைச்சார்ந்த தாமரை மலரைப்போல விகசிதமாய் அவனுடையமனது நிலையாகி,—

௧௭௫. ஆநந்தக் தோடுமாசிரியரைத தோடுமாசிரியரைத் தரிசித்து வணங்கித் துதித்தல்.

கும்பமுனியைப்பார்த்தனன். இன்பமிகுந்த மனதையுடையவனாய் தடையற்ற கிருபையினால், என்னைச் சுகிக்கச் செய்யும்பொருட்டு முன்பெழுந்தருளியகுருநாதன் சுயமாகவேவந்தாரென்று, நல்லபுட்பங்களைச் சொரிந்து வணங்கித்துதிசெய்ய, பூமிக்கரசனை பின்பந்தக் கும்பமுனியானவர்பார்த்துச்சொல்லுவார்.¶-

௧௭௬. சீடன் சமாதி சுகத்தைக் கண்டு சந்தோடித்தல்.

இவ்விடத்திலிருந்துநீங்கினநாள்துடங்கி இன்றையவரைக்கும், உன்னிடத்திலென்மனமானது பிரிவற்றிருந்தது; தெய்வலோகமும் உனது சங்கத்தைப்போல இன்பமல்லவென்று கும்பமுனிசொல்ல, பெருமையிற்சிறந்த தெய்வமே? உம்மாற் சுகத்தையடைந்தேன்; பரிசுத்தமாகி சுகசமாதியில் துன்பமற்றேன்;—நிருவிகற்பசமாதியிலுள்ள ஆநந்தமானது

௧௭௭. ஆசிரியர் அவ்வனுபவ விலாசத்தை நான்குவிதமாகப்பகுத்து வினவுதல்.

புண்ணியநிறைந்தசுவர்க்கத்திலுமில்லை; தனிமையாகி அவ்வாநந்தத்தையடைந்து தெய்வ லோகத்திலும், பூலோகத்திலும், உலாவுவனென்றுவேந்தன்சொல்ல, கும்பமுனி சொல்லுவார். அரிதான பிரமாநந்தவாழ்வில் வருத்தங்களனைத்து நீங்க சுகித்தாயோ?—

௧௭௮. இதுவுமது.

வேற்றுமையே யுருவமாயிருக்கின்ற துயரங்களை கெடுத்தாயோ? வரும்பொழுது இனிமையாகிய சங்கற்பத்தில்கொண்ட சுகத்தை குற்றமென்று மூலத்துடன்கெடுத்து சமதிருஷ்டியை அடைந்தாயோ? எதிலும் விடுதலும் பற்றுதலுநீங்கி நேர்ந்த காரியங்களைச்செய்து சுகமடைந்தாயோ?†— இப்படியென்று கும்பமுனிகேட்க, உமது கிருபையினாலும் என்பங்கி

௧௭௯. அனுபவ விலாசத்தைச்

¶ இ-ம். சமாதியி னிரதிசயாநந்தமாய்க் தரைந்த வறி வவ்வனுபவத்தோடுங் வெளிப்பட்டாசிரியரை யந்தவடிவமாகத் தரிசித்ததாம்.

† இ-ம். சுட்டறப்பெற்றச் சகானுபவத்தைச் சுட்டிற்றரிசிக்கப் பகுத்து வினதாம்.

சொல்லுதல்.

ளுள்ள தேவாதீனத்தினாலும், திரிஸ்யமனைத்து நீங்கின வதீதத்தில் மனநிலையாயிருந்த சம்சாரத்தினது முடிவைப்பார்த்தேன்; வரப்பட்ட இலாபங்களனைத்தையும் திடமாகவடைந்தேன்; கேட்பதற்கும் பார்ப்பதற்கும் விரும்புவதொன்றுமில்லை; எப்பொழுதும் பூரணமானேன்; துன்பநீங்கினேன்; பவநீங்கினேன்;—

க௮௦. அனுபவ விலாசத்தைச் சொல்லுதல்.

பயமற்றேன்; மோகமற்றேன்; பற்றற்றேன்; சமமாய்நின்றேன்; மேன்மையடைந்தேன்; சகலமுமானேன்; ஒருதொழிலுமில்லாதவனானேன்; ஆகாயத்தின் றன்மையையொத்த தெளிவையுடையவனாய் உபசாந்தத்தை யடைந்தேன். மயக்கத்தினது தொழிலையெல்லாம் தாண்டின மனத்தையுடைய சிகித்துவசனென்னுநாமத்தையுடைய அரசன்சொன்னான்.¶—

க௮க. சமசதிருட்டியினாற் சாக்ஷாத்கார வனுபவமுண்டாகும பொருட்டாசிரியருஞ்சீடனும் ஒன்றாகச்சர்சரித்தல்.

அப்படியே இருவரும் ஆன்மதத்துவத்தினது அழகான விசாரணையினாலும், தெளிகின்ற வசனங்களினாலும், அழிவில்லாதவன் பின்மிகுந்தவர்கள் தங்களிற்றாங்கள் அறிந்துகொண்டு, விருப்பத்தையுடைய கானகங்களிலும், தடாகங்களிலும், மலைகளிலும், வேற்றுமையின்றி எவ்விடத்திலுஞ் சுகித்தார்கள்.—

க௮௨. தாங்கள் கொண்ட கோலமே கோலமாகச் சஞ்சரித்தல்.

சுபாவமான ஞானத்திலும், அன்புள்ள தொழில்களிலும், ஒப்பில்லாதவர்கள், இராகமும் துவேஷமுமாகிய மயக்கத்தையொருங்கேயொழித்து தென்றற்காற்றுக்கு சலியாத மகாமேருவுக் கொப்பானவர்கள், சொல்லப்பட்ட சரீரத்திலொருபொழுது விபூதியைப் பெருமையாகத் தரிப்பார்கள்; ஒருபொழுது வாசனையுள்ள சந்தனத்தைத் தரிப்பார்கள்.‡—

க௮௩. முன்பு ஞானமும் போகமும் வீடுமின்றளிப்பேனென்றபடி ஸ்வரூப ஞானத்தைக்கொடுத்துப் போகங்கொடுப்பதற் கதின்பற்று நீக்கப் பரிசோதிக்கச் சிந்தித்தல்.

கொஞ்சகாலம் கூடவே வாழ்ந்திருந்து, மதுரவசனத்தையுடைய சூடாலையானவள், அரசனை மனதிற்பார்த்து, தன்னைப்பிரிந்திருக்கின்ற தலைவனான சிகித்துவசன் அனுபூதியில்மிகவுமுறுதியுள்ளவனாய்த் துன்பநீங்கினான். மிகுந்த அழகையுடைய இளமையாகிய சம்பத்தும் புட்பங்கணிறைந்த வரண்மனையுமாகிய சகலமும் இல்லாமையைப்போல சுகிக்கின்றவர்களில்லாமையினால் வீணாய்ப்போகும்.—

க௮௪. ஸ்திரீயிச்சையைப் பரிசோதிக்கச் சிந்தித்தல்.

பூரணஞானத்தையடைந்தவர்கள் சுபாவமாகவலியவந்ததைத் தவிரும்படியாக விடுவார்களானால் தத்துவத்தை அறிந்ததென்ன. சன்மார்க்கமுள்ள வரசன்நம்மிடத்

¶ இ-ம் நீங்கவேண்டின பேதநீங்கி யடையவேண்டின வபேதமடைந்ததைப் பதினைந்துவிதமாகப் பகுத்துச் சொல்லியதாம்.

‡ இ-ம். இராகத்துவேஷமின்றி யேதேதெப்படியோ வதுவதப்படியாய் விளங்கினானென வறிந்ததாம்.

தில் கலியாணஞ் செய்வதற்கு உண்டாகிய வொருக்தியை அழிவற்ற வுணர்வினல் இவ்விடத்திலுண்டாக்குவோ மென்று மனதி னினைத்து.—

**௧௮௫. திருவிழாவைக் குறித்துச் செல்ல வேண்டுமெனல்.**

நாயகனைப்பார்த்து கும்பமுனியான சூடாலை சொல்லுவாள். தேவலோகத்தில் இன்றையதினம் ஒருநிலை பெறும்படி செய்யும் திருவிழாவுண்டு; அவ்விடத்தில் பொருந்திய நாரதருடன் நானும் அசைவ ரிருக்கவேண்டும்; மேலான நியதியின் பலத்தை யாவர்செயிப்பார்கள்; அஸ்தமான பர்வதத்தின் மேல் சூரியன் போகின்றசமயத்தில், இதோ சீக்கிரமாக இவ்விடத்தில் வருவேன்;—

**௧௮௬. சகசசமாதியிலிருத்திச்செல்லுதல்.**

நீங்குதற்கரிய வறிவுடன் நீ இவ்விடத்தி லிருப்பாயென்று, ஒருவாசனை பரிமளிக்கும் புட்பக்கொத்தைசிகித்துவவரசனுக்குக் கொடுத்துஆகாயத்திலெழுப்பினள்; அவன்கண்ணுக்குத் தெரியாதவரைக்கும்போய் சுமந்தகும்பனென்கின்ற சரீரத்தைவிட்டு தனது சூடாலைவடிவமுள்ளவளானள்.—

**௧௮௭. அரசாட்சி செய்துவருதல்.**

தேவேந்திரனனவன். இருக்கின்றதெய்வலோகத்துக் கொப்பாகிய தன் அரண்மனையிற் புகுந்து யாவருமடியாதபடி அரசநீதியில் இராசகாரியங்களை முறைமையாகச்செய்து, சந்திரனைப்போலகுளிர்ந்தமுகத்தையுடைய சூடாலையானவள் திரும்பவும் கும்பமுனிவடிவமாகி நாயகனிடத்தில் வந்திரங்கிமிகவுஞ் சுருங்கினமுகத்தை யுடையவளைப்போலாகி.—

**௧௮௮. ஓர் பாசாங்குரைக்க முகம் வாடி நிற்றல்.**

பனிமூடியசந்திரனைப்போலவும், தாமரைமலரைப்போலவும், சோம்பலாய் மிகவும் வதனஞ்சுருக்கி மனதிற்றுன்பமற்ற கும்பமுனியான சூடாலையானவள் சேர்ந்தவளவில் பரிசுத்தமுள்ள கணவனை சிகித்துவசனும் கும்பமுனியைப்பார்த்து, சீக்கிரமாக வெழுந்து பிரார்த்தனைசெய்து எனதுபிதாவே? துன்பமடைந்தவர்களைப்போலக்காணப்படுகின்றுய்! துன்பமென்ன, கெடுப்பாயென்று.—

**௧௮௯. அரசன் தேற்றுதல்.**

உண்மைஞானமடைந்தவர்கள் தளரார்கள்; சந்தோஷியார்கள்; தாமரையிலையானது கூடியிருந்தசலத்தில் பொருந்துமோ, என் றரசன்சொல்லவும், வஞ்சகவடிவத்தையுடைய கும்பமுனி சொல்லப்பட்ட வேய்ங்குழலினேசைபைப்போல அதிசயமாக ஒருசரித்திரத்தைச் சிகித்துவவரசனுக்குச் சொல்லுவாள்.†—

**௧௯௦. பிராரத்த கன்ம சேடமனுபவித்து நீங்கவேண்டுமென்பதை யுறுதிப்படுத்துநிமித்த நீங்காத தேககன்மத்தை நீக்கும்படி நினைத்து வருந்துவார்களெனல்.**

திரமாகச் சமத்துவமனதில் சேர்ந்தவர்கள், தேகமிருக்குமட்டும் கன்மேந்திரியங்களோடும் பொருந்தார்களாயின், ஞானிகளல்லவஞ்சகராவார்கள். சுயமாகவேவந்தடைகின்றஅவஸ்

† இ-ம். மாபோகத்தைக்கொடுக்கு நிமித்தம் பரிசோதிக்கத் தொடங்கினதாம்

தையை செயஞ்செய்யும்படிகருதி ஞானமில்லாதவர்கள் விருதாவாக விளைத்துவருந்துவார்கள்.— எள்ளுள்ளமட்டும் நீங்காத வெண்ணெயைப்போல சரீரமிருக்குமளவும்நாநாவிதமானவவத்தைகள் நீங்கமாட்டாது; பற்றுதலில்லாமல் இவ்வவத்தையைக் கெடுப்பவர்கள்; அளவிடக்கூடாத வாகாயத்தை அரசனே? கத்தியினால் அறுப்பவர்களுக் கொப்பாகும். மலசரீரத்துக்குள்ள பருவதுன்பத்தை கன்மேந்திரியநிக்கிரகத்தானீங்கில், அந்த ஞானத்தாற்செய்யுந்தேகதுக்கபரித்தியாகமான வதற்கு இணையான சுகமுண்டாகுமோ,— தேகத்துக்கு ஒருபக்கத்தில் ஞானேந்திரியத்தோடும், ஒருபக்கத்தில் கன்மேந்திரியத்தோடும், வருகின்றவித முண்டாயிருக்கின்ற பிரமன் முதலாகிய யாவரும் தெளிவுள்ள குணத்தை யுடையவராயினும், சரீரவவத்தையானது நீங்காதென்றறிதல் நசித்தானீங்காத நிச்சயமாகிய நியதிமார்க்கமாம்.— கற்றுணர்ந்த ஞானவான்களும், அஞ்ஞானிகளும் யாவுந் திரிஸ்யவஸ்துக்களாய் பொருந்தியதால், சமுத்திரத்திலுள்ள சலத்தைப்போல நியதியின்வசத்திற்செல்லுவார்கள். நாடோறும் ஞானவான்கள் சமமானவறிவின்னிச்சயத்தினால் கரசரணங்கள் சரிக்கப்பெற்றிருக்கின்ற சரீரமானது நீங்கும்பரியந்தம் நீங்காத நியதியை அநுசரிப்பார்கள்.—அஞ்ஞானிகள் கலக்கமுற்றுசுகதுக்கங்களிலமிழ்ந்தும்தேகமநேகமெடுத்தும், அவைகளினால் நிறைந்த நியதியை யநுசரிப்பார்கள்; மிகவுஞ்சொன்னேன். மார்க்கத்தில் யான்பட்ட துயரத்தைக் கேட்பாய், அரசுகளுக் கொப்பாகிய துயரத்தை அன்புள்ளவர்களுக்குச் சொன்னால் சாந்தியாகாதோ.‡—

புட்பக்கொத்தைக் கொடுத்து உன்னைநீங்கி ஆகாயத்திற்சென்று தெய்வலோகத்தில் உண்மையுள்ள பிதாவைபடைந்து தேவேந்திரனது சபையினிடத்திற்போய் திரும்பவும் இவ்விடத்தில் வரும்படியாகச் சிந்தித்து தாவப்படாத வாகாயத்தினின்றிறங்கிசூரியமண்டலத்தினது பக்கத்தில் வாய்வினது விசாலமான மார்க்கத்தினால் இப்பூமியில் வந்நடைய வரும்பொருட்டு, அழகுள்ள இந்தவிடத்தில்வரவும்.— மேகமார்க்கமாகப்போகப்பட்டதாருவாசரென்கின்றரிஷியை நேரேகண்டு, ஆகாயத்தில் அளவற்ற பெருமையுள்ள பாதத்தில்வணங்கி, பின்பு முனியைப்பார்த்து நீர் கரியவஸ்திரத்தைத் தரித்தாய், தூர்த்தபுருடனை இச்

௧௧௧. தேகமுள்ளமட்டு மவத்தை நீங்காதெனல்.

௧௧௨. கன்மநீங்காதென்னும் விதியைச் சொல்லுதல்.

௧௧௩. அறிஞர் விதி மார்க்கத்தை யநுசரிப்பார்களெனல்.

௧௧௪. தனக்குவந்த கன்மத்தைச் சொல்லத்தொடங்கல்.

௧௧௫. தாருவாசமுனிசபித்ததாகக் கற்பித்துச் சொல்லுதல்.

௧௧௬. இதுவுமது.

‡ இ-ம். யாவராயினும் பிராரத்தகன்ம மனுபவித்துத் தீரவேண்டுமென்பதாம்

சிக்கின்ற விபசாரிகளைப்போல போகத்தொடங்கினா யென்றுசொல்லிய வென்னை, அந்தரிஷியானவர் மிக வுங்கோபித்து,— நீ இங்ஙனமிசைத்தலால் இரவுகள் தோறும் அழகியவாபரணங்களையணிந்த பெண்ணாகி இருப்பாயென்றுமூதுணர்ந்த முனிவன் சாபமிடவும், அந்த வசனத்தைக்கேட்டழுது முனிவனது பாதபங் கயத்தைதுதித்து, வேண்டிக்கொள்வதற்கு சிந்சித் தேன்; நொடியில் முனியானவர், மறைந்துபோனார். அதைப்பார்த்து மனம்வருந்தி இவ்விடத்தில் வந் தேன்; பெண்ணாகுங்குணம் எனக்கு நீங்காது.—

௧௯௭. தூருவாச முனி சபித்ததாகக் கற்பித்துச் சொல்லுதல்.

ஆசாரியர், தேவர்கள், முனிவர்கள் முதலானவர் கள் குழாங்களைத் தரிசிப்பதற்குநாணாமல் இராத்திரி யில் பெண்ணாகி எப்படியிருப்பேனென்று கும்ப முனிசொல்லவும், சிகித்துவவரசனானவன் தேவர்பயப் படாதிரும்; இரங்குதலால் வருகின்ற ப்ரயோசன மென்ன; நியதிவல்லமையினால் வருவது வரட்டும்; சரீரத்துக்கல்லாமல் களங்கமற்ற வாத்மஞானத்திற் பொருந்தாது.— ஞானத்தினால் மூதிர்ந்த நீர், துயரி னிடத்தில் மூழ்குதற்குரியதாமோ; அறிவில்லாத மூடர்களல்லவா மனதிற் றுன்பப்படுவார்களென்று தெளிவித்து, தங்களிற்றுங்கள் பிரியாமல் சுகதுக்கங் கள் பேதமில்லாமலிருந்தார்கள். அவ்வளவில் நீதி நிறைந்த கும்பமுனிக்கு பெண்வடிவந்தரசசெல்வது போல சூரியன் மறைந்தான்.¶— மாலைப்பொழுது வரவும், நித்தியகன்மங்களை செய்திருந்தார்கள் அக் காலத்தில், முன்னே யிருக்கின்ற வேந்தனது முகத் தைப்பார்த்து கும்பமுனியானவர், தளர்வுடன் கூறு வார். இச்சரீரமானது பூமியில் விழுவதுபோலும், பெண்குறிகள் மேலெழுகின்றதுபோலும், விளங்கு வதுபோலும், மிகுந்த வெட்கத்தோடுங்கூடிய பெண் தன்மையானது அரசனே? என்னைவந்துசுற்றிக்கொண் டது;— அளகம் வளருகின்றதைப்பார், தனம் வளர் கின்றதைப்பார், கூடவருகின்ற வஸ்திரத்தைப்பார், நெருங்க முன்குறியும்பின்குறியுமுடையபெண்வடிவ மானதைப்பார், அரசனேயென்று துக்கப்பட்டவ னாய் உபசாந்தமுள்ள கும்பமுனியு மிருந்தார். அரச னும், சோர்வுற்றிருந்த வாசிரியரைப்பார்த்து,- ஞான வானாகிய நீர் நியதிமார்க்கத்தை நன்றாகத்தெரிந்தனை வாதலக்கது வந்தால், துன்பப்படாதேயென்று வேந் தன்சொல்ல, மேலான கும்பமுனியுஞ் சொல்லுவார்.

௧௯௮. இதுவுமது.

௧௯௯. இதுவுமது.

௨௱. இரவிற் பெண்வடிவம் வருதல்,

௨௱௧. பெண்ணின வயவங்களைக் காட்டுதல்.

௨௱௨. வந்தகன்ம மனுபவிக்கக் கடவதென் றிரக்கமுற்றிருத்தல்.

¶ இ-ம். இரவிற் பெண்வடிவு வருதலைநோக்கி வியசனமாகக்கூறினதை யாத் மாவுக் குண்டோவெனத் தேற்றினதாம்.

இனிச்செய்யவேண்டியதென்ன! தவறுநியதிலை ஆர் தடுப்பார்கள்; இராவில்சரீரம்பெண்வடிவமாய்அடையக் கடவதானேனென்றுசொல்லி.§— அன்றிராத்திரி ஒருசயனத்தில் சும்மாய்க்கூடி நித்திரைசெய்தார்கள்.

௨௱௩. ஏகாசனத்திற்பரிசித்திருந்து மயங்காத தன்மையைத் தெரிதல்,

உதயகாலத்தில், அடைந்த பெண்வடிவத்தைவிட்டு திரும்பக் கும்பமுனியுருவமாக, இந்தப்பிரகாரம் இரவில் மாதாகவும், இராக்காலநீங்கினுல் கும்பமுனியாகவும், ஆகிய கன்னித்தன்மைகெடாமல் சூடாலேயானவள் சிலநாட்கூடியிருந்தாள்.— அந்தச் சூடாலேயானவள், கும்பமுனிவடிவத்தையுடையவளாய் ஒரு மத்தியானத்தில் வேந்தனைப்பார்த்து, அரசனே? நாடோறும் இரவிற்பெண்டன்மைவருமாயின், பெண்களின்றன்மையல்லாமல் எத்தனைகால மிருப்பது. ஒருநாயகனை யடையவேண்டும், அன்பின் மிகுதியினுல் உன்னையல்லாமல் திரிலோகத்திலும் மற்றெவரையும் நான்விரும்பேன்;— கலியாணத்தினுல் பாரியாளாக இரவில் எப்போதும் என்னையேற்றுக்கொள்ளுவாய். இப்படிப்பட்டதைச்செய்தால் நரகசுவர்க்கமாகிய விரண்டும் இல்லையென்று கும்பமுனிசொல்லவும், அவ்விருப்பே நல்லதென்றரசன்சொல்ல, கும்பமுனியானவர் அதைக்கேட்டவளவில், அரசனே? இன்றைக்கு ஆவணிமாதப் பருவம், மாங்கிலியந்தரிக்கு நன்மையுள்ளதினம்,— சந்திரோதயகாலத்தில் கலியாணஞ்செய்யக் கடவதென்று சொல்லி, அழகிய கண்களையுடைய வேந்தனுடன் சென்று, தரிக்கப்படுகின்ற இரத்தினுபரணங்களும், சந்தனங்களும், உயர்வாகிய மகம்மேருவிலிருந்து கொண்டுவந்துபரிசுத்தமாகிய சலத்தையுடைய தேவநதியில் ஸ்நானஞ்

௨௱௪. புணரும்போதின் புளவோவென்பதறியு நிமித்த மனவினை வேட்டல்.

௨௱௫. ஆசிரியரபிப்பிராயப்படியாசனமைந்திருத்தல்.

௨௱௬. முகூர்த்தம் வைத்தல்.

மாகிய சலத்தையுடைய தேவநதியில் ஸ்நானஞ் செய்து, உயர்ந்த வேதமார்க்கத்தினுல் தேவர்களும், பிதிர்களும், முனிவர்களுமாகிய விவர்களுடைய பாதத்தைவணங்கி.- தொழிலைத்தவிராதவர்களும பிரயோசனத்தை விரும்பாதவர்களுமான இவர்கள், விளங்கிய கற்பகவிருட்சங்கொடுத்த வெள்ளைப்பட்டை உறியதென்று தரித்தார்கள்; சூரியன் உயர்ந்திருக்கின்ற வஸ்தமனகிரியின் மறைந்தான். பூரணச்சந்திரன் உதயமாகவும், சொல்லப்பட்ட முறைமையையுடைய கருமங்களால் சந்தியாவந்தனஞ்செய்து அப்பொழுதேசிகித்துவவரசன் அருமையானகலியாணஞ் செய்தரன் — இவ்வண்ண முயர்ந்த மந்தரமலையினிடத்தில் கலியாணஞ்செய்து, இவ்விருவரும் பற்

௨௱௭. மணஞ்செய்தல்.

௨௮. புணர்ந்து மகிழ்தல்.

§ இ-ம். பெண்வடிவத்தைக்கண்டு மயங்காததன்மையைத் தெரிந்தன ளென்பதாம்.

றில்லாத சுகத்தைப்புசித்து, மலைப்புறஞ்சூழ்ந்தவன
ங்கள்தோறும் சிவந்தவாயையுடைய மயில்போன்ற
சூடாலையும் சிகித்துவவரசனும் சஞ்சரித்தார்கள்.
மும்மூன்றுநாளில் கொடிய வாளாயுதத்தையுடைய
வேந்தன் நித்திரைசெய்கின்ற சமயத்தில் சூடாலை
௩௦௧. இடையிலரசுசெய்தல். யானவள்— அடிக்கடிபோய் அரசனது தேசத்தை
நீதியாகநடப்பித்து, படுக்கையில் நீங்காதவளைப்போ
லத் திரும்புவள். விவாகஞ்செய்த மதனிகையென்னு
நாமத்தையுடைய பாரியாளாகிய சூடாலையானவள்
இப்படியிருந்த் சிறுதுநாளின்பின்பு, மனதிலொன்
௨௧௦. செல்வத்திலிராக முளவோவெனப் பரிசோதிக்கத் தொடங்கல். றைச் சிந்தனைசெய்வாள்.†—இவ்வுலகத்திற் பொருந்
திய போகங்களில் இவ்வரசனுக் கெப்போதும்ஆசை
பொருந்தாது; மிகுந்த தேவபோகங்களினால் சோதி
க்கவேண்டுமென்று நினைத்து, தானப்பிசாசஞ்செய்
திருக்கின்ற அணிமாமுதலிய வித்தைகளினால்நான்கு
புறத்திலுந் தேவர்கள் சூழ்ந்துவர தேவேந்திரன்இந்
தக் கானகத்திற்றோற்றும்படியாக ஒரு மாயைசெய்
௩௧௧. இதுவுமது. தான்.— வந்திருக்குந்தேவேந்திரனை அரசனானவன்
பார்த்து நமஸ்கரித்து முன்னே வாராதனைசெய்து,
முதன்மையானவரே? நீ ரிவ்விடத்தில்வர என்னதரு
மத்தை முன்செய்தேனோவென்றுசொல்ல, தேவேந்
திரனும் அச்சிகித்துவ வரசனைப்பார்த்து அன்பினால்
இவ்வண்ணஞ் சொல்லுவான்.— உமதுகுணத்தி
௨௧௨. இதுவுமது. னன்மையினால் தேவர்களோடுமியான்வந்தேன. தேவ
லோகம் உமக்கேயாகக்கடவதென்று அவ்விடத்தி
லுள்ள ஸ்திரீகள் உமது வரவைப்பார்த்திருக்கிறார்
கள்; அரம்பைமுதலிய தெய்வஸ்திரீகளது அம்புச
மலரைப்போலமுகமானதுவிகசிக்க சூரியனைப்போல்
௨௧௩. இதுவுமது. வருவாய்.— கற்பகாலமட்டுமிருந்து தேவபோகங்க
ளனைத்தையும் விசித்திரமாகப்புசிக்க, சீவன்முத்தி
யையுடைய வரசனே? க்ஷணநேரந்தங்காமல் வருவா
யென்று அழைக்கும்பொருட்டு வந்தேனென்று
சொல்லிய தேவேந்திரன் சொல் விசித்திரங்களைக்
௨௧௪. இதுவுமது. கேட்டு, மேலான வரசன்கூறுவான்.— அவ்விடத்தி
லும் சுவர்க்கத்திலுள்ள சுகங்களையெல்லாம் எனது
பிதாவானதேவனே? யானறிவேன்; இவ்விடமென்
றும் அவ்விடமென்றும் பேதமில்லை, அடியேனுக்கு
எவ்விடத்துஞ்சுவர்க்கமேயாம், எவ்விடத்திலும்மிகு
ந்த சுகமேயாம். தேவலோகத்தை ஆதலால் விரும்
பேன், நீர் வாசஞ்செய்யாநின்ற இடத்துக்குப்போமி
னென்று எவ்வளவேனு மிச்சையின்றி யரசன்

† இ-ம் தனதின்பமாக மாதரின்ப நீங்கினனென் றறிந்தனளென்பதாம்.

உகடு. அபிமான மகங்காரமானது வேட முளவோ வெனப் பரிசோதித்தல்.

சொல்ல,†— திரும்பித் தேவகுழாங்கள்வந்த மார்க்கத்திற்செல்ல, தொடங்காநின்ற மாயையினுல் நாநாவிதமாகச் சோதனைசெய்யவும், மனநசித்ததைப்பார்த்து, பக்கத்திலொருமாயாவித்தையினுல் விசாலமாகிய கண்களையுடைய மயில்போன்ற சூடாலையானவள் ஏகாந்தமா யொருசோதனைசெய்தாள்,—

உகசு. தானே சோரனுகிக் கூடல்

சந்திரோதயமானசமயத்தில்,கங்கா தீர்த்தத்திற்செபஞ்செய்து பரிசுத்தமுள்ளசிகித்துவவரசனிருக்க, மயிலுக்கொப்பாகிய சூடாலையானவள் புறம்பாகிய கொடியவீட்டிற் சென்று கோங்குமலர்களினுனிரம்பியஅழகியவொரு சயனத்தில்வசிக்கின்ற வொருதூர்த்தபுருடனை தானுண்டாக்கிகூடினுள்.—

உகஎ அரசன் கண்டு மகிழ்தல்.

சந்தியாவனஞ்செய்து மதனிகையானபெண்ணை மலைப்பக்கங்களெல்லாந் தேடினாப்பட்டபார்க்கத்தில்,கூடிக்களிக்கின்றஅவர்களைப் பார்த்து, மனேவிகற்பமில்லாமல் மனமகிழ்ச்சியாய் அவ்விடத்திலவர்களை முன்னனுபவித்தப்ரகாரம் விக்கினமில்லாமல் நீங்கள் புணர்வீரென்று சொல்லிப் போனுர்:—

உகஅ. ஆர்த்த விலக்கணத்துடன் எதிரே நிற்றல்.

மறைந்துபோய் இரண்டுநாழிகைகழிந்த பின்பு இந்தமதனிகையும் கோபிக்காமற் போனவனுகிய வரசனிடத்தில் விகர்ப்பமில்லாமையைபார்க்கும்படிபோய், படுக்கையிற்றெருடர்பும் அதினழகும் அதினுருவமுந் தோற்றும்படி இராசயோகிமுன்பு பதுங்கி வெட்கத்துடன் வணக்கமுற்றுநின்றனள்,—

உகக. அரசன் குளிர்ந்துரைத்தல்.

மதனிகையென்னு நாமத்தையுடைய சூடாலையும் இவ்விதமாய் நொந்து வியசனத்தையடைந்தவளைப் போல நிற்க, அரசனும் சமாதியடைந்திருந்தான். சமாதியைவிட்டறியவந்த சிகித்துவசன் மதனிகையைக்கண்டு கோபமில்லாமல்சாந்தமுள்ள புத்தியினுல்

உஉ0 சோரத்தைச் சகிக்க வேண்டுமெனல்.

மிருதுவாகச் சொல்லுவார்,— புணராநின்றநாயகனைவிட்டு சீக்கிரமாகவந்ததென்ன! வரிசையாக வளையலையணிந்த காங்களையுடைய பெண்ணே? திரும்பிப்போய் சுகத்தைநிறைப்பாயென்று அரசன் சொன்னசமயத்தில், மதனிகைசொல்லுவாள், குற்றமற்றவர்கள் மூடர்களது பலகுற்றங்களைச் சகிப்பது

உஉக. இதுவுமது.

மேலான கீர்த்தியேயாம்.— பெண்களுடைய குணமானது அநந்தபேதமாக மயங்கும்; ஆசையோவென்ருல் எட்டுப்பங்காம்; ஒருகாரியமுந் தெரியமாட்டார்கள். ஆதலினுல் என்னுடைய வரிதான தப்பிதத்தை க்ஷமித்தருள்வாயென்று மதனிகை

† இம். தனது மாயையாற் றேவேந்திரன் முதலியோர்களாகவந்து தேவபோகங்கொடுக்கப் பிரார்த்தித்தழைத்து மதுவொரு சுகமாகத்தோற்ருமற் றனது சுகத்திற் சுகித்திருந்ததைத் தெரிந்தனளென்பதாம்.

சொல்ல, ஞானபாரகனான சிகித்துவசன், மதனிகை யானபாரியாளுக்கு இந்தவசனத்தைச் சொன்னான்.

உஉஉ. அரசன் சமதிருஷ்டியிலிருத்தல்.

ஆகாயத்தில் விருட்சமுண்டானாலும் கோபமென் னிடத்தில் வரமாட்டாது, சத்துக்கள் நிந்திப்பார்க ளென் றுன்னுவதேயன்றி, அன்னத்தைப்போல நடையையுடையவளே! உன்னை மேலாகவிரும்பி மனைவியாக இச்சிக்கிலனென்றுசொல்லி சிகித்துவச னானவன் குறைவில்லாததான ஒப்பற்ற சமத்துவ முள்ள திருஷ்டியுடனிருக்க,¶— பார்த்திருந்த

உஉங. சின்மாத்திரமாய்ச் சகல பற்றையு நீக்கினானெனல்.

சூடாலையானவளும் மனதினாற் சிந்திப்பாள் மிகுந்த காமத்தையும், குரோதத்தையும், மூலத்துடன்கெடுத் தான்; மிகுந்தபோகங்களும் சிறந்த சித்திகளும் இவ் வரசனை யடையமாட்டாது. வலியபுசத்தையுடைய வரசனானவன் ஞானத்தினதுமுடிவைத்தரிசித்தடைந் தான்.— மறைந்திருப்பதுபோதும். இப்போது

உஉச. இனிப்பரிசோதிக்குங் கருத்தையும் போதிக்கவந்த மறவையு நீக்கிச் சூடாலையாக நிற்றல்.

மதனிகையென்னு முருவத்தைவிடுத்து தனக்கு முறைமையாயிருக்கின்ற சூடாலைவடிவத்தையுடைய வளாய் எதிரேநிற்பேனென்று நினைத்து அரசன் முன்னே சூடாலையாகத்தோற்றவும், இச்சூடாலையை உபசாந்தத்தி லிருந்தவன்பார்த்து நல்ல வதிசயத் துடன் சொல்லுவார்.— உருவமும், வசனமும்,

உஉரு. அரசன் வினவுக் குத்தரங் கூறல்.

அடக்கமும், இன்னமுண்டாகிய சகலகுணங்களும், அளவற்றிருக்கின்ற சூடாலையைப்போல என்முன் றோன்றினாய்; நீண்டகண்களையுடையவளே? நீயா ரென்றுஅரசன்கேட்க நீர்கலியாணஞ்செய்தசூடாலை யானவள் யானென்றுசொல்லி, இன்னமுஞ்சொல்லு

உஉசு. மறுவேங்கொண்டுவந்தவளடியேனே யெனல்.

வாள்.—நான் கும்பமுனி வடிவத்தையும், மதனிகை வடிவத்தையுங்கொண்டு,எனதுநாயகனே!உனதாத்ம ஞானத்தையறிவித்தேன்;ஞானத்தினதுநிச்சயத்தை இவ்விடத்தில் மாயையினால் பரிசோதித்தேன்;இவை களை நிருவிகற்பசமாதியில் பார்ப்பாயென்றுசொல்ல,

உஉஎ. ஞானதிருஷ்டியாற் றெறிந்தானெனல்.

சைதன்னியத்திலயிக்கியமானகருத்தினால் அரசன் பார்த்து, மாட்சிமைப்பட்ட நகரத்தை நீக்கினநாள் முதலாக தானேவந் தனுபவத்தைவிளக்கின சூடாலை யாகத் தோற்றினபரியந்தம் ஒன்றுங்குறைவில்லாமற் சமாதியிலிருந்துசகலத்தையுமறிந்தான்.—சமாதியை

உஉஅ. துதித்தாலிங்கனஞ் செய்தானந்தத்தின் மூழ்குதல்.

விட்டு நல்லபுளகாங்கித நிறைந்தவனாய் பலம்பொருந் திய புசத்தினால் தயவும் ஆசையும் இதென்னவென்று சொல்லும்படியாத ப்ரகாசிக்கின்ற சூடாலையினது தனதுகிரியைத் தழுவி வெகுநேரமிருந்து ஒன்றையு மேற்சொல்லாதவனாய் நீதியுள்ள வரசன் ஒருக்ஷணம்

¶ இ-ம். அபிமான வகங்காரமின்மையைக் கண்டனனென்பதாம்.

௨௨௯. சைம்மாறுளவோவென வினவுதல்.

ஆநந்தத்தின் முழுகினன்.— துடையின்மேல் அந்த சூடாலையை வைத்துக்கொண்டு அவ்வரசன்சொல்லுவான்; அளவற்றஇருட்குகைக்கொப்பாகியமோகத்திலிருந்தவென்னை விசாலமானவறிவினல் கரையேற்றினய்; உனக்காரொப்பானவர்கள், கொடிபோன்ற விடையையுடையபெண்ணே? செய்கின்றவதிலுபகாரமொன்றுண்டோ சொல்வாய்.-

௨௩௦. இதுவுமது.

வராநின்ற சநநசாகரத்தின்கரையேறியிருப்பவளே? நிராசையைப்பொருந்துகின்ற நீதியானவளே? இதற்கென்ன பிரதியுபகாரமிருக்கின்றதென் றரசன்சொல்ல, சூடாலையானவள் சொல்லுவாள். வாடுகின்றபலதவத்தொழிலாற்கலங்குகின்ற கன்மத்தைப்பார்த்து, உன்னைக்கரையேற்ற

௨௩௧. சங்கற்பமற்ற நீ சங்கற்பித்தேன் றறிகின்ருயெனல்.

வருத்தமாய்த்தேடிவந்தேன்;— நீரிதற்காக வென்னை மேம்பாடாகசொல்லுவதென்ன; அற்பச்செயல்களும், நினைப்புகளும், சங்கற்பவிகற்பங்களும் ஆகிய தெவ்வளவோ அவையாவையும் நீக்கினையல்லவா, மேலான தலைவனேயென்று சூடாலைசொல்லவும், அரசனுஞ்

௨௩௨. மனைவியாற்பெற்ற மகிழ்ச்சியை யுரைத்தல்.

சொல்லுவான்.— சந்தேகம்நீங்கினேன் இச்சையற்றேன், வேற்றுமையற்றேன், சொச்சமான வாகாயத்துக்கொப்பானேன், பதார்த்தவடிவங்களாகவாடேன் செய்யத்தகுந்ததான ஒப்பற்ற சமாதியடைந்தேன், மனமகிழ்ச்சியுங் கொடிய துயரமும்பொருந்திலன்,

௨௩௩. இதுவுமது.

இதுவதுவென்று ப்ரகாசிக்கேன்;— ப்ரகாசமுள்ள சூரியமண்டலத்திலிருந்து உண்டானதாய் சுவரிற்படாமல் மேல்நிறைதலும் குறைதலும் இல்லாதிருக்கின்ற ஒப்பற்ற ப்ரகாசமானது குற்றமற்றவெனக்கு ஒப்பாகும் உலகத்தைவிட்டு சகலத்தையும்பொருந்தி

௨௩௪. அநுபவா வேசத்தாலாசிரியரை வணங்குதல்.

ஆகாயமிருப்பதற்கு ஒப்பாயிருந்தேன்.—சத்தாமாத்திரமென்னுங் குணத்தையுடையது எனதுஸ்வரூபம் மற்றொன்றையும் சொல்லவறியேன். ஆதலால் அடியேனுக்கு கிருபைசெய்கின்ற வாசாரியார்நீயேஉனது தாமரைமலர்போன்றபாதத்தைவணங்கினேனென்று அந்த வரசன்சொல்ல; கோவைப்பழம்போன்ற வதரமுள்ள சூடாலையானவள், இனிசெய்யுங்காரியத்தை

௨௩௫. பிராரத்த கன்மசேடம் நீங்கும் பொருட்டரசாங்கஞ் செய்ய வேண்டுமெனல்.

சொல்லுமென்று கேட்டாள் ¶— இராகத்துவேடமில்லாதவனுனேன், பளிங்கிற்பற்றிப்பாய்கின்றபஞ்சவன்னத்தைப்போல நாடோறும் உனதாக்கினைப்படியே அரசனுன யான் செய்வேனென்று சொல்லினன். நீயடைந்த திருவாலுல் அறிவின்மையை மாத்திரந்தள்ளி, முன்னமேயுள்ள அரசியல்பி லிருப்

¶ இ-ம். தலைவியெனத் தலைவன்கண் டொருவருக்கொருவர் முகமன்வசனத்தோடு மகிழ்ந்திருந்ததாம்.

உஙசு. துறவு மறுசென்மமாதலால் தை நீக்குதற்கடையாளமாகப் பட்டாபிஷேகஞ் செய்ய வெத்தனஞ் செய்தல்

பதே நியாயமாம்.— யாம் சிலகாலம் இந்தப்ரகாரஞ் சீவன்முத்தனுயிராச்சியபரிபாலனம்பண்ணிக்கொண் டிருந்து, பின்பு சரீராந்தத்தில் அந்த விதேககைவல் யத்தைஅடைவோமென்றுசூடாலையானவள்சொல்ல, நீதியிற் செல்லாநின்ற வரசனும் சம்மதித்தான். சூடாலையெழுந்து குறிப்பாகக்கொண்ட சங்கற்பநிய மத்தால் இவை இவைகளைக் கொண்டுவந்தாள்.—

உஙஎ. முடி சூட்டல்.

சத்தசமுத்திரத்தின் தீர்த்தங்கணிறைந்த இரத் தின கும்பங்களினல் இவனை யபிடேகஞ்செய்வித்து, ஒளிபொருந்திய இரத்தினசனத்தில்ப்ரகாசிக்கும்படி யிருத்தி, வாழக்கடவாயென்று சூடாலையானவள் பட்டாபிஷேகஞ்செய்தாள். கஜங்களினுலும், துரகங் களினுலும், இரதங்களினுலும், பதாதிகளாலும், ப்ரகாசிக்கும்படியாக அளவற்றபடைகளையு முண் டாக்கினுள்.—இப்படிப்பட்ட சமயத்தில், மன

உஙஅ. சதுரங்க சேனையுங் கற்பித்துப் பட்டணத்துக் கேகுதல்.

மொத்து சுகத்தையேசெய்கின்ற அப்படிப்பட்ட மனைவியான சூடாலையும், இராசனும், எழுந்திருந் தலங்கரித்த யானைமேலேறினுர்கள். அழகிய பட்ட ணத்தைப்பார்த்து யுத்தஞ்செய்கின்ற மிகுந்த சது ரங்கசேனைகளோடும்சந்தோஷிக்கத் திரும்பினுர்கள்.

உஙகூ. சீவன் முத்தியையும் விதேக முத்தியையுங் கொடுத்தல்.

பட்டணத்தை யடைந்தவளவில் பட்டணத்தி லுள்ள சதுரங்கசேனையை நடவுமென்று சாமந்தர் கள் நடத்த, கிரமமாக எதிர்ப்பட்ட இரண்டுசேனை யுமவிளங்க, அன்பினுற் பட்டணத்தை யடைந்த வர்களாய் பதினுயிரமாண்டு நாயகியுடன் கூடி யிருந்து விதேககைவல்யத்தை பின்படைந்தார்.¶—

உச0. இராகவற்கு இக்கதையைச்சொல்லி இவ்வண்ணம் பெற்ருல் ஞானமுஞ்சீவன்முத்தித்தன்மையிலுள்ள போகமும், விதேக முத்தியும், பெறலாமென்றுபதேசித்தல்.

ஸ்ரீராமா? இம்முறைமையினுல் காரியங்க ளிற்கூடி துள்ளாநின்ற விடயசுக மில்லாத உபசாந்தஞானமானது சதாகாலமுந் தொட ரில், தெளிவானபோகங்களும், மோக்ஷமும், கிடைக்குமென்று தெளிந்தமனதையும், மகா தவத்தையுமுடைய வசிட்டமகாமுனியான வர் சொன்னுர்.

சிகித்துவசன்கதை

முற்றிற்று.

—

¶. இ-ம். பதினுயிரம் வருடஞ் சீவன்முத்தரா யரசாங்கஞ்செய்து மேல்விதேக முத்தியை யடைந்தனரென்பதாம்.

## கசன்கதை.

### அவதாரிகை

முற்கதையில் ஆசிரியர்கேட்கும் வினவைக்கொண்டு அரிதாயுதித்த வகம்பாவநீக்கமாகியசித்தத்யாகமென்னுஞ் சகலத்யாகத்தாற்சர்வம்பிரமமயமாய் விளங்கினதையறிவித்து, அவ்வகம்பாவத்யாகமாகிய சித்தத்தியாகமே சகலத்யாகமன்றி வேறின்றென்பதைச் சுளிவி லறிவிக்குநிமித்தங் கசன்கதையை நிரூபிக்கிறார்.

க. இதற்கொப்பான கசன் கதையையுங் கூறுதல்.

தெளிவில்மிகுந்த மேலான சிகித்துவவரசனது கதையைச் சொன்னேன்; இந்தப்பிரகாரம் கனிவாக நின்றாயானால் அரியதுன்பத்தை யடையமாட்டாய். அவனது மார்க்கத்தைப்போல குளிர்ந்த வதனத்தை யுடைய தேவகுருவின் புத்திரனாகிய கசன் அறிந்தனன். அதைக்கருதி அறிவாயென்று வசிட்டமுனி சொல்ல, ப்ரத்யக்ஷமாக அக்கச னறிந்திருக்கின்ற மார்க்கத்தை சொல்லுவாயென்று, —ஸ்ரீ ராமர்கேட்கவும் வசிட்டமுனியானவர் சொல்லுவார். குருபுத்திரனை கசனென்னும் பெயரையுடையவர், தெரியப்பட்ட பதத்தோடும் பதார்த்தத்தைத் தெரிந்தவரான கசமுனி, தேவகுருவின் முன்புசென்று மிகுந்த சகநமென்கின்ற கூண்டிலிருந்து பிராணனென்கின்ற கொடிய யானைபுறம்பிற்செல்லுதற்கு தகுந்தபிரகாரமியாதுசொல்லென்று கேட்கவும், தேவகுருசொல்லுவார்.—அனத்தமாகிய மகரமச்சங்களுக்குவசிக்கின்ற விடமாகி விசாலம்பொருந்திய இந்தச் சகநசமுத்திரத்தை, கனத்ததான ஒப்பற்ற சகல தியாகத்தினால் தாண்டலாமென்று குருவானவர்சொல்ல, சொன்னமுதல் ஆகியயாவையும்விட்டு தனித்தவராகி, கசனானவர்போய் கானகத்திலடைந்து எட்டிவருடமிருந்தார்; திரும்பவு மவருடைய தந்தையான குருவந்தார்.—

உ. பவநீங்கு மார்க்கம் யாதென வாசாரியரை விசாரித்தல்.

ங. பவத்தை நீக்குநெறி சகலத்யாகமென்ன அப்படியே புறப்பற்று நீக்குதல்.

வந்தபிதாவைத் தொழுது, யாவையும்விட்டு எட்டு வருடம் மனமற்றிருந்தும் துன்பத்தை நீங்கிலன்; நின்மலமானவரே? இதென்ன காரணமென்று துன்பமுற்று கசமுனியானவர் சொல்லவும், யாவையுந் தள்ளுவாயென்றுசொல்லி திரும்பவும் போயினன், பிதாவானவர் சென்றபின்பு மரவுரி வஸ்திரமுதலான யாவையும் ஒருங்கேயொழித்தான்.—சூரியனும், சந்திரனும், மேகமும், நக்ஷத்திரமுமுதலாகிய பற்றற்ற சரற்காலத்தின் ஆகாயத்துக்கொப்பானான், தனியனாய் கசமுனிபோய் திரும்பவும் கானகத்தில் தந்தையான குருவை அடைந்தவனாய் அன்பினால் பாதத்தை வணங்கி துன்பமடைந்து நான் தரித்திருக்கின்ற மரவுரி முதலாகிய யாவையும் ஒருங்கேதள்ளினேன்;—

ச. அஃது மன்றெனக்கூற வஸ்திர முதலியவையு நீக்குதல்.

ரு. புறப்பற்றுநீக்கத்தைச் சகலத்யாகஞ் செய்தேனெனல்.

சு. அகப்பற்றை நீக்கும்படி மனோ நீக்கமே சகலத்யாக மெனல்.

எதைநீக்கியும் என்னிடத்தில் விஸ்ராந்தியடைந்திலன், இனிச்செய்யவேண்டுவ தென்னவென்று கசன் கேட்க, பிதாவானவர் சொல்லுவார். மனதையே உயர்ந்தோர்களனைவரும் சகலமென்று சொல்லுவார்கள்; ஆதலினால் மனதைநீக்குதலே சகலமுநீக்குதல்; அச்சகலத்யாகத்தினால் துன்ப நீங்குமென்றுசொல்லி குருவானவர் நீங்கினார். விளங்காநின்ற கசமுனியானவர் இதைச்செய்தார்.—மனமியாதென்றாராய்ந்தனன்; தெரிந்திலன்; சரீரமுதலான சகலமும் மனமல்லவானால் குறைவுசெய்யாது, இச்சரீரமுதலியவைகளை யானீங்கியும் என்னப்ரயோசனம். சித்தமானதெது வென்று தேவகுருவினிடத்திற்போய் கேட்கவும், அத் தேவகுருவானவர் மனமானது மனதையறிந்த சத்துக்கள் அகம்பாவமென்று சொல்லுவார்கள்.—

எ. மனமிதென விசாரித்தலுக் ககம்பாவமே மன மெனல்.

அ. அகம்பாவ மெங்ஙனங் கெடு மெனில்லஃது சுளுவிற் கெடுமெனப் பரமபாவனை போதிக்கத் தொடங்கல்

பிராணிகளனைத்தையும் அகத்திற்பொருந்த நானென்று நினைக்கின்ற பாவனையே, குற்றஞ்செய்கின்ற மனமென்று தேவகுருசொல்லவும், இவ்விடத்தினிதை நீக்குவது மிகவும் வலிமையாம். இப்படிப்பட்ட வயிரமானது நீங்குவதெப்படியென்று கசன் கேட்க, திரும்பவும் தேவகுரு சொல்லுவார். காய்கின்ற துன்பமானது அற்பமுமில்லை; அகங்கார நீக்குதற்கு மிகவுமிலேசாம்;— புட்பத்தைக் கசக்குமுன்னும், இமைத்தலுக்குமுன்னும், அகங்காரத்தைநீக்குதல் சுளுவாகும். பல சொல்லவேண்டிய தென்ன, ஒன்றாகியும் முடிவில்லாததாகியும், பரமஞானமாகியும், பொருந்திய பரிசுத்தமாகியும், ஆகாயத்திலுஞ் சொச்சமாகியுமிருக்கின்ற பூரணவஸ்துவிருக்கும்; சஞ்சலமில்லாமல் அவ்வாத்மாவைத் தியானித்து உபசாந்தத்தை யுடையவனாய் துன்ப நீங்குவாய்.—

கூ பிரமபாவனை யாலகம் பாவ நீங்கி விஸ்ராந்தி புண்டா மெனல்.

௧0. தத்துவபாவனையால சத்தான வகம்பாவ மெங்கே யிருக்கு மெனல்.

முழுது மசத்தியமேயாதலால் அகங்காரமானது கெட்டுப்போகும்; சத்தியமாகிய ஆத்மாவைச் சிந்திக்கலினால் ஞானத்தில் அகங்காரமெங்கேயிருக்கும்; மிருதுவானசலத்திற்றாளியும், அக்கினியில் சலமுமுண்டாயிருக்குமோ; நித்தியஸ்வரூபத்தை சிந்தித்து இவனென்கின்ற மெய்ம்மை யறும்படி யிருப்பாய்.—

௧௧. விடயதோற்ற மின்றிச் சுயஞ்சித்தாய் விளங்கிநிற்பாயெனல்.

திசையும் காலமும் முதலாகியவைகளின் வசத்திற் பொருந்திய அற்பமாகிய வடிவமில்லாமல் துக்கமானது நிறையும்படி அப்படிப்பட்டவைகளால் மறைவுபடாமல் சூட்சுமமாகியும், சொச்சமாகியும், மேலான சுயஞ்சோதியாகியும், எல்லாமாகியும், ஏகமாகியுமிருக்கின்ற தத்துவஞானமான தொன்றேயாகும். தகுந்த இந்தநிச்சயம் உனதாத்ம ஸ்வரூப

மென்றறிந் ததில் நிற்பாயென்று முதன்மையான வுபதேசத்தை பிரகஸ்பதிபகவான் சொன்னான்.¶— சீவன்முத்தனாகிய நிலைமையடைந்து அகம்பாவம் விட்டுயானெனதென்றுசொல்லாமல் அகம்பற்றுனது கெட்டுப்போய் புத்தியில் விகற்பங்களியாவு நீங்கி ஆத்மபாவனைமுதிர்ந்த கசமுனியிருந்த நிலையில், ஸ்ரீராமா? நீ இச்சையானது நீங்கும்படியிருப்பாய் கைவல்யத்தில் இந்த அகம்பாவமானது மித்தையேயாகும்; இதைவிடுத்தலும் பிடித்தலும் உனக்குவேண்டாம்.— மித்தையாயிருக்கின்ற முயற்கொம்பினை பிடிக்கவும், விடுக்கவும், கருதுபவர்யாவர், எனதாசிரியரே? பிரமஞானமாகிய பூரணத்தில் வேறென்று வருகின்றவிதமென்ன, அசத்தியமாகிய பலபாவனையை அடைதல் அற்பமான சாதனமாகும். சந்தேகமில்லாத ஒன்றான ஸ்வரூபபாவனையில் அமிழுதலேசாதனந் தீர்தலென்று வசிட்டமுனிசொன்னார்.§—

௬௨. ஸ்ரீராகவற் கிதவுபதேசஞ் செய்தல்.

௬௩. அகம்பாவ மோர் பொருளன் றாதலா லஃதைப் பற்றுதல் விடுதல் கூடா வெனல்.

கசன்கதை
முற்றிற்று.

# மித்தையா புருடன்கதை.

## அவதாரிகை.

முற்கதையில் ஆத்மவிசாரத்தினுதித்த வகங்காரத்யாகமான சகலத்தாற் சர்வம் பிரமமயமென்றறிவித்து, அவ்விசாரமின்றி யகங்கார நீங்காதவிடத்திற் றிரிஸ்யரூபமா யனுபவிக்குந் துன்பங்களை யறிவிக்கு நிமித்த மகம்பாவ வுருவமாக மித்தையாபுருடன்கதையை நிரூபிக்கிறார்.

௧. பேதநீங்கிய சுயஞ்சித்திற் சுகிப்பாயெனல்,

இரண்டுடன் ஒன்றையுந்தள்ளி இருந்த வாத்மஞானத்தையடைந்து பரமசுகத்தை யடைவாய். மித்தையாபுருடனைப்போல, ஸ்ரீராமா? வருத்தப்படவேண்டாமென்று வசிட்டமுனிசொல்லவும், 'எனதுபிதாவான வசிட்டமுனியே? மித்தையாபுருடனானவன், ஓர் ப்ரயோசனமுமில்லாமல் துன்பமுழுற்று அவனலைந்தவிதமென்ன?— ஞானமாகிய வமுர்தத்தினால் நன்மையுண்டாக நிறைந்ததானாலும், நானறியும்படியாக இந்தத்தன்மையைச் சொல்லுவாயென்று இராகவர்கேட்க, மாட்சிமையுள்ள வசிட்டமுனியானவர் சொல்லுவார். இராசாவே? சிரிப்புக்குக் காரணமாகிய

௨. அகம்பாவ நீக்கற்பொருட்டதன் விகாசத்தைச் சாமானியமா யறிவிக்கத்தொடங்கல்

¶ இ-ம். உள்ளதான ஸ்வானுபூதி திஷ்டியினை வில்லாததான வகம்பாவநீங்குமஃதே சகலத்யாகமென்பதை யறிவித்ததாம்.

§ இ.ம். அறிவினுண்மையைப்போதித் தகம்பாவத்தை நீக்கினதென்பதாம்.

இந்தக்கதையை நான்செப்புவது மிகவு மதிசய

௩. சூனியத்தி லுண்டான வகங் கார னெனல்

முடையது.—சிதாகாசமான வோரிடத்தில் ப்ரபஞ்ச
மில்லாமற் றனித்தவிடத்தில் விசேடமில்லாத விடத்
தில் உண்டாகி அந்த இடத்திலிருப்பவன் மாயா
யேந்திர மயத்தையுடைய ஓராண்மகனுண்டு. அவ
னஞ்ஞானத்தையுடையவன்; ஈனமாகியும் குழந்தை
யின் றன்மையாகியும் அற்பமாகியு மிருக்கின்ற
புத்தியையுடையவன்; மிகுந்த மூடத்தன்மையை

௪. சூனியத்தில் வளர்கின்றவ னெ னல்.

யுடையவன்;— ஆகாயத்தில் சுருண்டுதோற்றுகின்ற
மயிர்ச்சுருளைப்போலவும், அளர்ப்பூமியிற் றோற்று
கின்ற கானற்சலத்தைப்போலவும், அந்த மித்தையா
புருடன் உண்டாகி, கலந்திருக்கின்ற சூனியத்தில்
சூனியமேயல்லாமல் வேறொன்றுமில்லை; அவ்விடத்
தில் ஏதொன்று உண்டானதோ, மநுகுலத்திற்
பிறந்தவனே? அதுவுமந்த மித்தையாபுருடனே.

௫. ஆகாயத்தைக் காக்க வோரகங் கட்டல்.

அவனது வளர்ச்சியும் அவ்விடத்தில்,—ப்ரபஞ்சத்
துக்கு வேறாகவே எக்காலமும் ப்ரகாசிக்கின்ற
சித்தினது சுபாவத்தை அவன்பாராதவனாய், அவன்
ஒரு சங்கற்பத்தையடைந்து ஆகாயத்தைவிரும்பி
இடையூறில்லாமல் வைப்போம் இது மேலானதே
யென்று மனதினினைத்து, திடமான சந்தோஷத்
தோடும் ஆகாயத்தை காவல்செய்யும்பொருட்டு ஒரு

௬. வீடுகெட விண் போனதென வருந்தல்.

வீடுகட்டினான்.— அவ்வீட்டில் ஆகாயத்தைவைத்து
காக்கின்றோமென்று, அவ்விண்ணில் இச்சை கட்டுப்
படவும், அவன்மனையானது வெகுகாலத்தினால் நாச
மடைந்து இந்தக்காற்றினாலலையு மலையைப்போலவும்
சரரிதுவின் அந்தத்தினால் மழையைப்போலவும்,
கெட்டுப்போக, அந்த மித்தையாபுருடன் பார்த்து
ஆகாயம்போய்விட்டதென்று அழத்தொடங்கினான்.

௭. மனைகெட விண்ணைக் கூபத் தில் வைத்தல்.

மனையிலிராமல்ஆகாயமேஒருக்ஷணத்தில் நீஎங்கே
போனாய் இல்லாததானாயென்று கிரகாகாயத்துக்கு
மிகவுமழுது, கொடியமனதினால் திரும்பவு மவ்விடத்
தில்ஒருநூதனமான கூபத்தையுண்டாக்கி, ஒருவருங்
கெடுக்காமல் இதனிடத்தில் வைப்போமென்று

௮. கிணறுகெட விண்ணுக் கிரங்கி கும்பாகாயத் தடைத்தல்.

கிணற்றாகாயத்திற் பற்றுள்ளவனானான்.— சிலகாலத்
தில் கிணறானது அழிந்தமாத்திரத்தில் மிகவுந் துன்
புற்று கதறினான். திரும்பவுமவ்விடத்தில் அவ்வாகா
யத்தை இரட்சிப்பதற்கு ஒருகுடத்தைச்செய்து
அழகையுடையதென்று சந்தோஷித்து அக்கடா
காயத்திற்பற்றுள்ளவனானான். கறுத்தமேகம்போன்ற
ஸ்ரீராமா? அக்கலசமும் நடக்குங்காலத்தா லுடைப்

௯. கும்பங்கெட

பட்டது.— மிகவுநம்பிக்கையற்று பெற்றவனைத்தும்

அவ் விண்ணுக்கிரங்கிக் குண்டத்திலடைத்தல்.

கெட்டுப்போக மித்தையாபுருடன் அந்தக்கடாகாயத்துக்குப்புலம்பி, அதன்பின்பு ஒருகுழியை அவ்விடத்திற்றோண்டி நிலையென்று அக்குண்டாகாயத்திற் பற்றுள்ளவனாய் அடைந்தான். அப்பள்ளத்தையும் நெருங்கிய விருட்டைக் கெடுக்கின்ற பிரகாசத்தைப்போல யானையாகிய காலமழித்தது.— குழியாகாசத்துக்கு புலம்பினபின்பு, வளைவான நாற்சாரிமனையைக்கட்டி அளவற்ற கிருபையிருந்த அதுபற்றுள்ளவனாகவாழ்ந்தான். அந்தவீட்டையும் அண்டங்களையெல்லாம் அழிக்கின்றகாலமானது கெடுக்க. அதற்குவியசனப்பட்டு பெருங்காற்றிலகப்பட்டஉலர்ந்த இலையைப்போல சோர்வுற்றலைந்து,— விசாலமுள்ள நாற்சாரியாகாயத்துக்குஅழுது, பின்பு அந்தவாகாயத்தைக் காவல்செய்வதற்கு ஒருகுதிரைச்செய்து, விசாலமுள்ள குதிரிற் ப்ரவேசித்து அவனிருக்க, இக்குதிரையும் காலனழிப்பித்தான். உடனே குதிராகாயத்துக் கலறினான், ஒன்றுதானோ வீடாகாயமும், குதிராகாயமும், குழியாகாயமும், கடாகாயமும், நாற்சாராகாயமும், என்கின்ற விவைகளினால் வெகுகாலம் துன்பத்தை யடைந்தான்.—

௧௦. குண்டங்கெட வவ்விண்ணுக்கிரங்கி நாற்சாரகங் கட்டியதில் வைத்தல்.

௧௧. நாற்சாரகங்கெட வதற்கிரங்கிக் குதிர்செய்தடைத்தல்.

௧௨. இதுவுமது.

ஆகாயத்தை வீட்டிலடைத்தவனாய் கிரகாகாயமானது தன்மயனாய் மனந்தளர்வையடைந்த மிகுந்ததுக்கத்தினால் ஒவ்வொருகாலத்தில் உழைப்பவனாகவும் பிழைப்பவனாகவும் நினைத்து, இருப்பதிதுநசிப்பதிதுவென்றறியாத இந்தப்புருடன் தெரியாதவன், என்று தருமரூபியான வசிட்டமுனிசொல்ல, ஸ்ரீராமன் சொல்லுவார்.¶— மித்தையா புருடனுடைய கதையினாலென்னசொன்னீர்? ஆசாரியரே? மித்தையாபுருடனை,இவனாகாயத்தைக் காவல்செய்தானென்றுசொன்னதேதுவென்றுஅருள்செய்வாயென்றிராமன்கேட்க, உண்மையானவசிட்டமுனிசொல்லுவார். மித்தையாபுருடனென்று சொல்லிய இவன் கரியநிறத்தையுடைய மேகம்போன்ற சூனியவாகாயத்தில் உண்டான வகங்காரமாம்.— இச்சகங்களனைத்து மிருக்கின்ற இவ்வாகாயமெதுவோ அது பூரணமாய் முடிவில்லாததாயு சிருட்டிக்கு முன்னமே சுயமாகவேயிருக்கும், குழந்தாய்? அதனிடத்தில் அகம்பாவமானது காற்றிற் பரிசமுண்டாவதுபோல முன்னமே யுண்டாகி, சிதாகாசமான ஆத்மாவைக் காப்பதற்காகசூனியமான வகங்காரன்முயற்சித்தான்.-

௧௩. இத்திருஷ்டாந்தத்தி னபிப்ராயங் கூறத்தொடங்கல்.

௧௪. இதுவுமது.

¶ இம். வீடுமுதலியவைகண் மரித்தலை விண்ணிறந்ததாக நினைத்து வருந்தினதென்பதாம்.

௧௫. இதுவுமது

கிணறும், குழியும், கடமும், நாற்சாரியும், குதிரும் என்று சொல்லப்பட்டனவாகிய சரீரங்களைப் பொருந்த பலவிதமாக வுண்டாக்கி திரும்பத்திரும்ப விழந்து துன்படைந்தான்; சரீரங்கடோறும் சிதாகாசவாத்மாவைக் காவல்செய்தேனென்று பூதாகாயபாவனைக்கு நில்லாதான்; வீணாக வருத்தப்பட்டு பதைபதைத்தான்.— பூதாகாயத்தை நானென்றுகாவல் செய்து, கிரகாகாசமுதலானவைகளில் பொருந்தித் தளர்வடைகின்ற மித்தையாபுருடனைப்போல, தாமரைக் கண்ணனை ஸ்ரீராமா? துன்புறாமல் நீங்கக்கடவாய் ஆகாசத்திலும் மிகவும் வியாபகமாகியும் மாசில்லாததாகியும், சொச்சமாகியுமிருக்கின்ற நினைவிலடங்காத அழிவற்ற சிவமே, சுபாவமான ஆத்மதத்துவமாம்.¶— அந்த வாத்மதத்துவமானது, தரிசிக்கப்படுமோ; யாவர்க்குங்கிடைக்குமா. இப்படியிருக்க சரீரபரித்தால் இதபரபரமாத்திரமானவை அரசனே? நானிறந்தேனென்றுவிவேகமற்றவர்கள் தளருவார்கள் தவிராத வாகாயமானது கடமுதலியவைகள் கெட்டபோது நீங்கிப்போமோ,— குடமுடைந்தால் ஆகாயமானதுபிரியமாட்டாது. சரீரம் நசித்தால் ஆத்மாவான தழியமாட்டாது. பெருமைபொருந்திய சின்மாத்திரமாகியும், சத்தாகியும். ஆகாயத்திலுஞ் சூட்சுமமாகியும், அணுவுக்கணுவாகியுமிருக்கின்ற பிரமஸ்வரூபமானது, குழந்தாய்? அனுபூதியின்மட்டே வியாபிக்கும்; யானென்றுசொல்லிய வகங்காரமானது கடத்தைப்போலழியும்.‡— எதுவும், எப்போதும் எந்தவிடத்திலும், மரித்தலும், செனித்தலும் இல்லாததாகும்; சொல்லப்பட்ட விவ்வுருவத்தினால் சகமாய் பிரமமேவிர்த்தியடையும்; ஆதலினால் இச்சகங்களனைத்தும் ஆதியும், மத்தியும், அந்தமுமில்லாமலும் பேதாபேத மில்லாமலும், பாவமுமபாவமுமுண்டாகாமலு மிருக்கின்ற பரவஸ்துவென்றெண்ணி துன்பநீங்குவாய்.— ஆபத்துக்களனைத்திற்கு மிடமாகியும்,

௧௬. இத்திருஷ்டாந்தத்தி னபிப்பிராயங் கூறத் தொடங்கல்.

௧௭. தேகநீங்கினலுஞ் சித்து நீங்காதெனல்.

௧௮. தானென்பது நிறைந்து நானென்ப திறக்குமெனல்.

௧௯. செகத்திருவஞ்சித்தேயெனல்

௨௰. அகம்பாவ

¶ இ-ம். உள்ளதான சிதாகாயத்தி வில்லாததாயுதித்த வகம்பாவமே, மித்தையாபுருடன் சிதாகாயத்தைக்காக்க நினைத்தல் விண்காக்கநினைத்தல் தேவர்முதலிய சரீரங்கள் வீடுமுதலியன சநநமரணமே, அவைகளுண்டாகி யழிதல்நீங்காத சிதாகாய நீங்கினதாக விளங்குதலே, வீணாகக்கதறினனெனக்கூறி யிவ்வகம்பாவத்தால் வருந்தாமற் சிவஸ்வரூபமாய் விளங்குவாயென்பதாம்.

‡ இ-ம். வீடுமுதலியவைகள் நசிக்கினு மதிலகப்பட்டதுபோலத்தோன்றியகிரகாகாசமுதலாகச்சொல்லுஞ் சத்தமிறந்ததேயன்றி, யதனருத்தமான பூதாகாசமிறவாததுபோலத் தேகாதிகணசிக்கினு மதிற்பந்தப்பட்டதுபோலத் தோற்றினசத்தரூபமான சிதாபாசனான வகம்பாவ நீங்குவதேயன்றி யதனருத்தமான சித்துநீங்காவென்பதாம்.

த்தையறிவிற்கெடுக்க வேண்டுமெனல்.

அநித்தியமாகியும், வசமில்லாததாகியும், விவேகமில்லாததாகியும், பாபங்களுக்குமுதலாகியு மஞ்ஞானமாகியும், சநநபீசமாகியும், நாசத்தையுடையதாகியும், துன்பத்திற் கோர்வித்தாகியு மிருக்கின்ற அகம்பாவத்தை, இச்சையற்றவாத்மஞானத்தினால் கெடுப்பாயானல் அவ்வகங்கார மிறந்தவிடமே நின்மலமான சிவன்முத்திப்பதமாம்.¶—

மித்தையாபுருடன்கதை
முற்றிற்று.

---

## விரதசூயைகதை.

### அவதாரிகை.

முன்கதையில் அகம்பாவத்தால் வீணாகவருந்துவதை திஷ்டாந்தப்படுத்தி, அஃதுநீக்கிச் சர்வம் பிரமமயமாய் விளங்குமென்பதையறிவித்திவ்வனுபவ மியாவிற்குஞ் சான்று நானேயென்னு மகாகர்த்தத்வமுதலியவற்றால் விளங்குமென்பதை யறிவிக்குநிமித்தம் விரதசூயைகதையைநிருபிக்கிறார்.

௧. சிற்ப்ரகாசமே சகத்தாக விளங்குதெனல்.

ஆதலினால்சகத்தினிச்சயமானது, இந்தப்ரகாரமேயாகும். ஆத்மஞானத்தில் சகமானது, ரச்சுவிற் கற்பமுண்டாவதுபோல வுதித்தே வேற்றுமையாக மற்றொன்றினுண்டானதில்லை; சூரியனைவிட கிரணமானது வேறில்லையென்று பாவனை செய்தவர்களுக்கு கிரணமேவேற்றுமையில்லாமற்சூரியனாகும்; சொல்லுமிடத்தில் உதுவே விரும்பப்பட்ட நிருவிகற்பமாகும்.— கனகத்துக்கு தோளணியானது வேறுபாடல்லவென்று பாவிக்கில் பொன்னென்றேயாம்; இவ்வபின்னத்தையே நிருவிகற்பமென்று சொல்லுவார்கள். சூரியனென்றும் கிரணமென்றும் வேறாகநாடினால், ப்ரகாசிக்கின்ற கிரணத்துக்கும் சூரியனுக்கும் வேற்றுமையைப்போலத் தோற்றும். நானாவிதமாகநெருங்கிய பலவிதங்களையும்விட்டு சகமில்லாதனுபூதியாஞானத்தில் ஸ்ரீராமா! நீதெளிந்திருப்பாய்†.—

௨. அபேதானுபவ முரைத்தல்.

௩. பிரம சங்கற்பமே மனமுதலிய சகமாகத் தோற்றுதெனல்.

சங்கற்பமென்கின்ற சலனசத்தியை பிரமமே மிக்குற்றகாற்றானது சலனத்தைச்செய்யுந் தன்மையைப்போல,தன்னாற் சங்கற்பித்தபொழுதில் அச்சங்கற்பமானது பரந்தவடிவமாகி வேறுபோலாகி உலகத்து

---

¶ இ-ம். சித்தே சகத்தாய் விளங்குதென்றறியினஃதை யானென்னு மகம்பாவ நீங்கிச சர்வமுந் தானாகவே விளங்குமெனபதாம்.

† இ-ம். கிரணமென்று மாபரணமென்றும் வேறுபிரித்துப் பாராமற் சூரியனைவும் பொன்னாகவும்பார்க்கினவைகளாய் விளங்குவதுபோலச் சகத்தை வேறுபிரித்துப்பாராமற் சின்மாத்திரமாகப்பார்க்கி லஃதாகவேயாவும் விளங்குமென்பதாம்.

உருவமாகி தன்னைத்தானேபார்த்து பொலிவுள்ளமன மாகும்; அதன்சங்கற்பமயமாக இச்சகத்தைப் பார்க் கக்கடவாய்.— சகமானது எப்போதும் சத்தியமு மல்ல, அசத்தியமுமல்ல, கனவின் கூட்டத்தைப் போலத்தோற்றும். காண்பவனும், கேட்பவனும், பேசுபவனும், பரிசிப்பவனும், வாசனைகொள்ளுபவ னும், நடப்பவனும், திரும்புபவனும், சொல்லப்பட்ட சகலமும் நூதனவாகவுண்டானதல்ல; சகலமு மூண் மையென்று அறிவாய். செய்கின்ற உனது செய்கை களனைத்தும் களங்கமற்ற ஞானமயமானவஸ்துவே யாம்.*— மகத்துக்கு மகத்ரூபமானது பிரமஸ்வ ரூபமே யாதலால், சகத்தென்பதுவேறொன்றுமில்லை. வஸ்துக்களனைத்தும் சித்தின்வடிவாகி தங்குதலினால் இச்சகங்க ளனைத்தும் கரியமேகமே சின்மாத்திரமே யாம்; கற்பிதம் வேறில்லாததினால் பார்க்கப்பட்ட வஸ்துக்களில் சித்துண்டாயிருத்தலின், விஷயமாகிய சகலமுமில்லை.§— ஆகையினால், பெத்தமுத்திஎங்கே யிருக்கின்றது;முத்தியிதுவென்றும் சேர்ந்திருக்கின்ற பெத்தமிதுவென்றும் நினைப்ப தனைத்தையும் உறுதி யாகத்தள்ளி, அபிமானமானது அற்பமுமில்லாமல் குற்றமற்றமௌனியாகி, இந்திரியங்களைச் செயித்து, அபிமானமும் செருக்கும்நீங்கிய மேலானவனாய்ச் சொல்லியவுனதுதொழிலைச்செய்து, ஸ்ரீராமா? அகம் பாவந் தவிர்ந்திருப்பாய்,‡— மயக்கத்தினால் வரா நின்ற சந்தேகங்களனைத்துநீங்கி நிச்சயமான குண த்தை முழுதும்பிடித்து, மகாகர்த்தனாகியும், மகா போகியாகியும், மகாத்யாகியாகியும், நீ வாழக்கடவாய் என்று வசிட்டமுனிசொல்ல, முகிலுக்கொப்பாகிய ஸ்ரீராமா, இந்தமூன்றுகுணங்களும் யாது சொல்வா யென்றுகேட்க, உபாயந்தெரிந்த வசிட்டமுனியான வர், அந்தமூன்றுகுணங்களையும் தோற்றும்படி சொல்லத் தொடங்கினார்.— மூவகையான நோன் பென்கின்ற இந்த அருத்தத்தை, பிருங்கீசனானவர், தனது மயக்கங்கெட உண்டான பரமார்த்தத்தை அறியவேண்டுமென்கின்ற பிரியத்தினால் மகம்மேருவி னுத்தரசிகரத்தையடைந்து, சிதாகாசத்துக் கொப்பா

௪. அனுர்வாச்சியமானசகத்துமுதலிய சர்வமும் பிரமமாகவே விளங்குதெனல்.

௫. சைதன்யவியாபக முரைத்தல்.

௬. அகம்பாவ நீங்கி யரசாங்கஞ் செய்வாயெனல்.

௭. பிரமமயமாயிருந்து விபசரிக்கும்பொருட்டு மாகர்த்தன் முதலியவற்றைச் சொல்லத் தொடங்கல்.

௮. பிருங்கீசன்றனது மயக்கநீங்கும்பொருட்டு பரமேஸ்வரனை வினவுதல்.

* இ-ம். சைதன்யந் தனதல்லாசத்தினாற் றானேசகமுதலியவைபோலத்தோற்றி மகிழ்தலேயன்றி வேறின்றென்பதாம்.

§ இ-ம். காணப்பட்ட சகலவஸ்துக்களுஞ் சைதன்யமாய் நிறைந்திருக்கின்றபடியா லதைத்தவிர வேறவஸ்து வில்லையென்பதாம்.

‡ இ-ம். பற்றுவிடுமுதலியயாவும் பிரமத்தைத் தவிரவில்லையென்று மனுபவத்தினாலகம்பாவத்தை நீக்கி இராசப்ரவிர்த்தியைச் செய்வாயென்பதாம்.

கிப பரமேஸ்வரனை வணங்கிப்போற்றி, இந்தச் சகந மயக்கத்தைப்பார்த்து தோற்றப்பட்ட ஞானத்தில் விஸ்ராந்தியில்லாததினால் மயக்கமுற்று அலைந்தே னென்றுஞ்சொல்லி,— இவ்வுலகமாகிய சீரணமான வீட்டில் விஸ்ராந்தியடைந்து யான் சஞ்சரிப்பதெப் படி, எப்போதும் பயமில்லாமலிருக்கின்ற நிச்சய மான மார்க்கத்தை அனுக்கிரகஞ் செய்வாயென்று அன்பினாற்கேட்க, நிச்சயமாகப் பரமேஸ்வரன் கிரு பைசெய்வார். சந்தேகங்களனைத்தையுங் கெடுத்து முடிவான நிச்சயத்தைப்பிடித்தால், துதிக்கப்பட்ட மகாகத்தனும் மகாபோகியும் மகாத்யாகியும் ஆவா யென்றுசொன்னார்*— இந்த மகாகத்தனும் மகா போகியும், மகாத்யாகியும், என்று சொல்லிய இக்குண ங்களை தெரியும்படியாக வருள்செய்வாயென்று வினா வின பிருங்கிசருக்கும் பரமேஸ்வரன் சொல்லுவார். கொடிதாகிய விருப்பு, வெறுப்பும், சுகதுக்கமும், தருமாதருமமுமாகிய இவைகளில், தவறாத பலமு மபலமுமாகிய விவைகளில் இச்சையில்லாமல் இயற்று பவனே ஒப்பற்ற மகாகத்தனாம்.—மௌனமாய் அகங் காரமும், அபிமானமும், ஆச்சரியமுநீங்கி வலிந்து மெலியாமல் குறைவற்றவைகளைச்செய்பவனும், எவ் விடத்தும் பற்றற சாட்சியென்று சொல்லும்படியாய் ஒன்றினுமாசையற தொழிலைச்செய்பவனும், பயமும், சுகமும், தட்டுப்படாதவனும் ஆகிய சமமாக சொச்ச மான செயலினால் துன்பமற்று சந்தோஷமுதியாத வனுமாகிய விவனே மகாகத்தனாம்.†— பிறப்பினு மிறப்பினும் தோற்றுதலினும், மறைதலினும்,சமமாய் மனதொத்தவன், மகாகத்தனென்று தெளிந்துகொள் வாய் மாபோகியினது குணத்தைச் சொல்லுமிடத் தில், கோபமடைந்து ஒன்றையுந்தள்ளாதவனும், ஒன்றையும் விரும்பாதவனும், இயல்பாகவந்ததை முழுதும் புசிப்பவனுமாகிய விவனே முன்சொல்லிய மகாபோகியாம், இவனதுபெருமையை திரும்பவும் யாஞ் சொல்லக்கேட்பாய்.—மிகவும் பயப்படுதலும் சுகமும், இல்லாதவனும்பிரமையையுண்டாக்குவதான சுகதுக்கங்களை அனுபவித்து அவைகளாற் கலங்காத வனும், மூப்பிறத்தலும் தொடாநின்ற வாபத்தும்,

௯. மோகநீங்கும்படி விரதத்திறையமாவாயெனல்.

௧0. மாகத்தனிலக்கணங்கூறல்

௧௧. இதுவுமது.

௧௨. மாகத்தனிலக்கணங்கூறி மாபோகியினிலக்கணங் கூறல்.

௧௩. இதுவுமது.

* இ-ம். பவப்பிணிநீங்கும்பொருட் டிவ்விரதமூன்றையு மனுட்டித் ததன்மய மாவாயென்பதாம்.

† இ-ம். சந்நிதிமாத்திரத்தின் விளங்கிய யாவிலும் பற்றற்றதற்குச் சாட்சியாகநின் றவைகளை நடத்து நானென்கிறதைத்தானெனுமனுபவமாய்நடாத்திவிப்பதே மாகத்தனென்பதாம்.

சிறந்த வரசாக்ஷியும், தாரித்திரங்களும், நல்லதென் றனுபவிப்பவனும், புளிப்பும், கசப்பும், உறப்பும், உவர்த்தலும், சொல்லப்பட்ட விவைகளின்சந்துஷ்டி யசந்துஷ்டியின்றி சமமாயுண்பவனும், மகாபோகித் தன்மையை யுடையவன்,¶— உப்பின்றன்மையைப் போல நனகுதீங்காகிய இவ்விரண்டிலும் சமமாகி சேர்ந்திருப்பவன், பரிசுத்தம்பொருந்திய மகாபோகி யாகும், மகாத்யாகியின்றன்மையை மொழியக்கேட் பாய், குற்றமற்ற தருமாதருமமும், துன்பவின்பமும், மரித்தல் செனித்தலாகிய வனைத்தையும், ஒருமிக்கத் தள்ளாநின்ற செவ்வையான புத்தியையுடையவனே மகாத்யாகியென்று அறிந்துகொள்ளுவாய்.— சகல விச்சைகளும், சகலசந்தேகங்களும், சகலசெய்கை களும், சகலநிச்சயங்களுமாகிய எல்லாம் நினையள வேனும் அடையாதவறிவையுடையவனே, மகாத்யாகி யென்று சொல்லுவார்கள். மற்றுள்ளதாகிய தருமா தருமமும், மனதும், சிந்தனையும், செயல்களுமாகிய யாவையும் உள்ளத்தில் நீங்கினவனே, வணக்கமுடை யவரான பிருங்கீசனே, மகாத்தியாகியென்று சுருதி சொல்லும்.— திரிஸ்யத்தி னினைவாக பார்க்கின்ற விவைகளெவ்வளவோ அக்கூட்டங்களனைத்தும் களங்கமில்லாமல் நன்றாகவிட்டவனேமகாத்யாகியென்று கிருபாஸ்வரூபியானபரமேஸ்வரன், உரித்தாகியபிருங் கீசருக்கு முன்னாளிற்சொன்னார். இம்மேலான பார் வையை பழக்கஞ்செய்து நீ பற்றிக்கொண்டுசகத்தை யிரட்சிக்கின்ற தாமரைக்கண்ணையுடைய இராமா? துன்பநீங்குவாய்.*— சதோதயமுள்ளதும், ஆதியா னதும், முடிவில்லாததும், நின்மலமானதும், ஒன்றா னதுமாயிருக்கின்ற அப்படிப்பட்ட பிரமஸ்வரூபமே யுள்ளது, வேறு நினைவுமற்றொன்றுமில்லை. இந்தப்ர காரமென்று பாவனைசெய்து களங்கமில்லாதவனாய் ஆநந்தத்தையடைந்து முயற்சிக்கின்ற தொழில்கள் பரிசுத்தமாகி நின்மலமான உபசாந்த முண்டாக ஸ்ரீராமா? அனைத்தையும்பொருந்துவாய்.†— குற்ற முள்ள துன்பநீங்கிய பிரமமாகியும், கற்பனைகளனைத்

௧௪. மாபோகியி னிலக்கணங் கூறி மாத்யாகியி னிலக் கணங்கூறல்.

௧௫. இதுவுமது.

௧௬. இதுவுமது-

௧௭ இத்திருஷ்டியினின்று யாவுஞ் செய்வாயெனல்.

௧௮. பாவனையனைத்து மின்றி எப்போதுஞ்

---

¶ இ-ம். விருப்பு வெறுப்பின்றிச் சகலபோகங்களுந் தனதானந்தானுபவமாகப் போகிப்பவனே மகாபோகியென்பதாம்.

* இ-ம். தனக்கெதிராயுள்ள யாவையும் பிரமமாகவறிந் தஃது தான்மாத்திர மாய் விளங்கி யவைகளனைத்தையுந் தள்ளினவனே மாத்யாகியென் றீஸ்வரனனுக் கிரகப்படி நீ விளங்குவாயென்பதாம்.

† இ-ம். நிரதிசயாநந்தவடிவமாய் நின்று சகலதொழிலையுஞ்செய்யிற்செய்தாஞ் செய்யாததென்பதாம்.

சின்மாத்திரமே விளங்குதெனல்.

தும்பொருந்திய கிரியையொன்றுக்கும் உயர்ந்தவிதை யாகியும், பரமாத்மஸ்வரூபமாகியும், மகாணுகியும், மேலான மகத்தாகியும், பருத்த பாவனைகளனைத்தும் நிறைவதாகியுமிருக்கின்றஞான ாசமெதுவோ, அது வேளப்போது முண்டாயிருக்கின்றது. மெய்ஞ்ஞான வீரனன ஸ்ரீராமா? இவ்விடத்தில் அற்பமும் வேறொ

௧௧. பிரமத்தைத் தவிர வற்பமும் வேறின்றெனல்.

ன்று மில்லையென்று சொல்லுவதாம்.— அயலாக ஒருவிடத்திலும் ஈதற்பமுமில்லையென்றும் எப்போ தும் அசத்தியமும்சத்தியமும் நெருங்கமாட்டாதென் றும் உள்ளே திடநிச்சயமாய் அகம்பாவத்தைக்கெடுத் திருப்பாய். உன்னில் அகமுகத்தை யுடையவனுய் புறம்பில் வருவனவாகிய சகலமும் ஒற்றுமைசெய்து பின்னுநின்ற செயலினது துன்பமடையாமல், வடிவ மில்லாத அகங்காரத்தை ஸ்ரீராமா? நீ நீங்கக்கடவ தென்று சொன்னுர்.*—

விரதசூயைகதை
முற்றிற்று.

---

# இட்சுவாகுகதை.

---

## அவதாரிகை.

முற்கதையில் மாகர்த்தத்வமுதலிய மூன்றினுலுஞ் சமாதிநிஷ்டை யின்றிச் சகசநிஷ்டையினுற்சர்வம் பிரமமயமென்பதைவிளக்கி, இவ்வனு பவந்திரமாம்பொருட்டு இட்சுவாகுகதையை நிரூபிக்கிருர்.

---

௧. சுகமனதின் இலக்கணம் விசாரித்தல்.

தன்மங்களனைத்தையும் அறியாநின்ற வசிட்ட முனியே? சொல்லப்பட்ட அகங்காரத்தைப் பொரு ந்தாநின்ற மனமானது, தனது, இதார்த்தஸ்வரூப மிருக்க, கற்பனுவடிவமிறக்கில் அங்குள்ள தத்துவத் துக்கு பெரிதான வடையாளமியாது? சொல்லுவா யென்று எம்பெருமானுகிய ஸ்ரீராமன்கேட்க,வசிட்ட முனி சொல்லுவார். வடிவமிருக்க மனம் நசித்தவுண்

௨. அனுபவிம னதி னிலக்கணங் கூறல்.

மைக்குள்ளகுறிசேளாய்.‡— திடமுள்ள ஆத்மவசத் தில் இருப்பவனை அப்புயத்தினீர்போல உண்டான ஆசைமயக்கமுதலிய எந்தகுற்றங்களும் வருத்தமாட் டாது, எல்லாமான முதிதைமுதலாகியசற்குணங்கள்

---

* இ-ம். தன்னைத்தவிர வற்பமும் வேறின்றெனன்கின்ற ஸ்வானுபவதிருஷ்டியி னுலகம்பாவத்தைக்கெடுத்துத் தன்மயமாய் விளங்குவாயென்பதாம்.

‡ இ-ம். விடயசம்பந்தநீங்கிப் பிரமசம்பந்தமாகச் சஞ்சரிக்கு மனதுக் கப்போ துண்டான குறிகள் யாதெனவிசாரித்ததென்பதாம்.

வதனத்திற் சுந்தரமாக வற்பமுநீங்காது; பாவங்களனைத்துங்கெடும்; வாசனையினது பந்தமானது மிருதுவாகக்கெடும்.¶—கோபமானதழியும்; ஆசையுள்ள குணமுமிளைக்கும்; காமவிகாரத்தின் குணங்கெடும்; மயக்கமானதுபோய் எவ்விடத்தி லொளிக்குமோ, பஞ்சேந்திரியங்களும் வலிமையாக ப்ரகாசியாது; துன்பமான தெழுந்துவருந்தாது; இன்பமுமதிகரித்துண்டாகமாட்டாது; துன்பநீங்க அகமகிழ்ந்து எந்த

௩. அனுபவிமனதி னிலக்கணங் கூறல்.

௪. இதுவுமது.

விடத்திலும் சமத்துவந் தோற்றும்†— துக்கமுதலியவனைத்தும்வதனத்திற் றோற்றுவமானாலும்தோற்றக்கடவது; வலியின்றிய அச்சுகதுக்கங்கள் மனதை வருத்தாது; மனமாத்திரநசித்தால் தேவர்களும் அவனையன்பினாற் சினேகிப்பார்கள்; ஆநந்தமுண்டாகும்; அவ்விடத்தில் சமத்துவமாகியவறிவுண்டாகும், அஸ்திகுளிருகின்ற சாந்தமானவழகுண்டாகும்; அள

௫. இதுவுமது.

வற்றமாட்சிமைப் பொருந்தும்.*— யாவரும் வணங்குதலும் விளங்குதலும் சொச்சமும் பொருந்திய குற்றமற்ற நின்மலஸ்வரூபமுண்டாகும். துன்பமற்ற சத்துக்களை சம்சாரப்ரமையானது மகத்தான வதிசயமானாலும் அடங்காதஉற்பத்திநாசத்தினால் அலைக்கப்பட்டாலும் சுகதுக்கங்க ளூறுகோடியானாலும், கிருபையுள்ளவிசாலமான கண்ணையுடைய இராமா! ஒன்றுஞ்செய்யமாட்டாது.‡— ஞானதிருஷ்டிக்ககப்

௬. சுத்தமனதி னிலக்கணஞ் சொல்லித் தன்னை யறியாதவனை யிகழ்ந்து அறிபவர்கள் விசார விலக்கணஞ் சொல்லுதல்

படுவதாகி சொல்லப்பட்ட ஆபத்துக்களனைத்துமரித்த இப் பரவஸ்துவை, ஆசையினால் அடையாதவர்கள், சீ-சீ, கீழ்ப்பட்டவர்களேயாம். தொந்தமாகிய சிலகாலப்பற்றினாற் றோற்றுந்துன்பமென்கின்றஇரத்தினங்கணிறைந்த பந்தமென்னும் பவசாகரந்தாண்டுங்குணம் விரும்பினவர்களது கிரமத்தைக்கேட்

௭. இதுவுமது.

பாய்.— மாமிசநிறைந்த பவசமுத்திரத்தை தாண்டுபவர்களுக் குறித்தாயிருக்கின்றவிஸ்ராந்தியையடையயானார், இவ்வுலகமான தெப்படிப்பட்டது, தேடும் பரமமெவனும், நீங்காத விடயபோகத்தினால் உண்டாவதென்ன, என்கின்ற விசாரஞானமேஆகியமேலானவுபாயமென்று, சற்குணத்தையுடைய ஸ்ரீராமா!

---

¶ இம். ஆத்மாவிற் சுகிக்குமனதை மோகமுதலிய குற்றங்களணுகாமன் மயித்திரியாதிகுணங்கள் விளங்குமென்பதாம்.

† இ-ம். இராகத்வேடமுதலியகுணங்களிரந்து சமதிருஷ்டியாய் விளங்குமென்பதாம்.

* இம். சுகதுக்கமின்றிச் சாந்தமானதேசசாய் விளங்குமென்பதாம்.

‡ இ-ம். நின்மலமா யாதுவரினு மதனாற் சுகதுக்க மடையாதென்பதாம்.

அ. இங்ஙனம் விசாரித்த இட்சுவாகுகதையைச் சொல்லத்தொடங்கல்.

வேதங்கள் சொல்லும்.‡— மேலான உனதுகுலத்துக்கு முதன்மையாகிய இட்சுவாகுவென்கின்ற அரசனனவன், ஞானமென்னு மேலான மோட்சத்தை அடைந்த கிரமத்தைக்கேட்பாய். கிருபையுள்ள வரசன் தோற்றத்தையுடைய தனது பூமியை பழமையான மார்க்கத்தில் நடாத்துகின்றகாலத்தில் மேலான மனதினால் தனியனாகவே இருந்து சிந்திப்பான்.—

௯. தனித்திருந்து சகத்காரணமியாதென விசாரித்தல்.

மூப்பிறப்பையும், சுகதுக்கங்களும், பிரமைகளும், மயக்கங்களும், அளவிடாதனிலையாகக் காணப்பட்டனவும், அளவில்லர்தவுலகத்துக்கு குற்றமற்ற காரணமெதுவென்று, பூபதியானவன் விரும்பிச் சிந்தித்தான். வசனநிறைந்த சகத்காரணத்தை சிந்தித்தும் அறிந்திலன்,†— சத்தியலோகத்தினின்றும் வந்து

௰. பிரமனை வணங்கித் துதித்தல்.

பொருந்திய முதன்மனுவாகிய பகவானைத் தரிசித்து கிரமத்தினலாராதித்து கிருபாநிதியே? இப்போது நீ இவ்விடத்தி லெளிதாகவந்து முயற்சியினாலருள் செய்தவுமது கிருபையினால் மயக்க நீங்கினிலையாயிருக்கும்ப்ரயோசனத்தினால் எனதுஸ்வரூபத்தை யனுக்கிரகிப்பாயென்றுவணங்கி மன்னன் சொல்லுவான்.-

௧௧. இப்பவமோக நீங்கும்பொருட்டிச்சகத்தை யாறுவிதமாகப் பிரித்து வினாவினனெனல்.

இந்தச்சகசிருட்டியானது எவ்விடத்திலிருந்துதித்தது? இச்சகத்தி னுருவெப்படிப்பட்டது? கெடாநின்ற சகமெவ்வளவு? ஈதாரையுடையது? எக்காலத்தில்இதென்னகாரணத்தினாலுண்டானதென்று அறிவித்து,உயர்ந்துதாழ்ந்த இச்சகத்தில் மிகுந்தமயக்கத்தை, வலையினின்று நீங்கும்பட்சியைப்போல,நீங்கும்விதத்தைச் சொல்லுவாயென்று இட்சுவாகு கேட்டார்.¶— இப்படியென் றரசன் சொல்லவும்,

௧௨. (௧-௨) சகத்காரணமு மதனுருவமு முரைத்தல்.

மிகவுமாச்சரியமாம். அளவில்லாத காலத்தோடும் நீ விவேகமிகுதியினால் கேட்ட சங்கையே மித்தையாகச்சொல்லிப மாயா வஸ்துவைக் கெடுப்பிக்குமென்று மனுவானவர் சொல்லுவார். அற்பமாகப்பார்க்கின்ற இச்சகங்கள் கந்தர்வநகரம்போலவும், அளர்ப்பூமியிற்றோன்றுங் கானற்சலம்போலவும், எவ்வளவுமில்லை.-

௧௩. இதுவுமது.

அற்பமும் இந்திரியங்களுக் கெட்டாததாகியும், ஆகாயத்திலுஞ் சூட்சுமமாகியும், வேறு அந்தரத்தில் குறைவில்லாததாகியும், அழிவில்லாமல் எப்போதும்

‡ இ-ம். ஆத்மாயாது, சகம்யாது, இது நீங்கியபிரமம் யாதென விசாரித்தலே மேலான விசாரயுத்தியென்பதாம்.

† இ-ம். சகத்தி னநித்தியத்தைப்பார்த் ததற்குக் காரணமான நித்தியத்தைவிசாரித்துந் தெரிந்திலனென்பதாம்.

¶ இ-ம். மாயாசகமுண்டானவிடமு, மதன்வடிவமு,மதன்முடிவு,மஃதையுடையவனு மஃதிதித்தகாலமுங், காரணமும், விசாரித்தானென்பதாம்.

இருந்ததே ஆத்மஸ்வரூபமாகும். மேலான அந்தப் பெருங்கண்ணுடியில் திரிஸ்யமாகிய விரிந்தவிஷயமான பஞ்சபூத சிருட்டிகளனைத்தும் ப்ரதிபலித்தொளிரும்.‡— பிரமசம்பந்தமாயும், ப்ரகாசரூபமாயும் உண்டாகிவிளங்கிய புரணசத்திகள்சேர்ந்து பிரமாண்டத்தினுடைய வடிவமாகி சிலசத்திகளிருந்தன; பல சிவக்கூட்டங்களின் வடிவமாய் சில சத்திகளிருந்தன; தேவலோகமாய் சிலசத்திகளிருந்தன, தோற்றுகின்ற சகத்தினுண்மையிதுதான்.¶— பெத்தமுமில்லை, முத்தியுமில்லை, துன்பமில்லாத பிரமமேயுள்ளதாகும்; அவ்வொருமையுமில்லை, இருமையுமில்லை, ஞானமேவளர்ந்தெழுந்தது, சமுத்திரத்தலையினது வேறுபாட்டினுல் விளங்குகின்ற சலத்தைப்போல, முடிவில்லாதஞானஸ்வரூபமே ப்ரகாசிக்கும், வேறென்று மில்லையாம்.†—பந்தம் வீடென்கின்ற எண்ணங்களை கூடாமற்றுரத்தி உனதுவசமாகி முன்னுனபவத்தின் அச்சங்களனைத்தையும் முழுதும் நீக்கி நிலையாயிருப்பாய். அப்படிப்பட்ட நீ சங்கற்பமுள்ள மனதைச்சேர்ந்தால், சின்மாத்திரஞானமானது சலம் அலையாவதுபோல உண்டாகிச் சீவத்தன்மையை யடைந்தது.— முதற் காலத்திலுண்டான சநநத்தில் அந்தச்சீவர்கள் சுழலுகின்றார்கள். சொல்லப்பட்ட சுகதுக்கங்களின் பிரமையானது மனதுக்கேயல்லாமல் ஆத்மாவுக்கில்லை; மேலேதெரியாத இராகுவானவன் சந்திரனையடைந்து காணப்படுவதுபோல, அனுபூதிமாத்திரமானவாத்மாவானது திரிஸ்யமாய் தோற்றப்படும்.—ஞானசாத்திரங்களினுலும், ஆசாரியராலும், பார்ப்பதற்கரிய பிரமமானது, முதன்மையாகிய சத்துவஞ்சேர்ந்த தனதறிவினுலும் தன்னுலும் நிலையில் வெளிப்படும்மார்க்கத்திற்செல்லுபவர்கள் மார்க்கத்திற்சேராநின்ற திரிஸ்யங்களில் புத்திசென்று பார்ப்பதில் பற்றற்றிருப்பதுபோல, பகையாகிய இந்திரியங்களைப் பார்ப்பாய்.—இப்படிப்பட்ட இந்திரியங்களை விரும்

௧௪. (௩-௪) சகத்தினள வுரைத்தல்.

௧௫. (௪-௫-௬) சங்கைக்கு உத்தரங்கூறல்.

௧௬. இவ்வாறுசங்கைக்கு முத்தரஞ்சொல்லி மேலாத்மானுபவ முண்டாகும் பொருட் டாத்மசங்கற்பமே சீவனுயிற்றெனல்.

௧௭. சுகதுக்கஞ் சங்கற் பத்துக்கேயன்றி யாத்மாவுக்கின்றெனல்.

௧௮. ஆத்மாவையுமநாத்மாவையு மறிகின்றவிலக்கணமுரைத்தல்.

௧௯. அநாத்மாவை

‡ இ-ம். ஆத்மாவினிடத்திற் சகந்தோற்றுமா மஃதினுருவங்கானற்சலம் போலத்தோற்றமாத்திரமா மென்பதாம்.

¶ இ-ம். பாஞ்சபூத பௌதிகமாகத்தோற்றிய சிற்சத்தியினளவே சகத்தினளவா மென்பதாம்.

† இ ம். சின்மாத்திரமே யுள்ளதென்னு மனுபவமில்லாதவனை யுடையதென்றுமிவ்வனுபவ மில்லாதபோததித்து என்றுமிவ்வனுபவம் நவநவமாய்விளங்குநிமித்தமுண்டானதென்று மறிந்து இஃது சின்மாத்திரமா யிருக்கின்றதென்றறிந் தயவென்னுங் கற்பனையை நீக்கவேண்டுமென்பதாம்.

நீங்கி யாத்மாவா யிருப்பாயெனல்.
புதலும், வெறுத்தலும், இரண்டுமொழுங்கல்ல; கன்
மத்தினு லுண்டாக்கப்பட்ட தேகமுதலிய வஸ்துக்
கள் வரத்தக்கசுபாவமாய் வரக்கடவது. அப்படிப்
பட்ட வஸ்துக்களை அறிவினுல் விளங்கும்படி தள்ளி
குளிர்ச்சியான அந்தக்கரணத்தையுடையவனுய் எக்
உ0. பந்தமும் அத னிவிர்த்தியுங் கூறல்.
காலமும் பிரமமயமாவாய்.— தேகத்தை யானென்
கின்ற புத்தியானது பவத்தையடைந்த பந்தமாகும்.
ஒருபோதும் துன்பமில்லாத நிருவாணத்தை இச்சிப்
பவர்களாகிய முமூட்சுக்களுக்கு உரியதல்லவான இப்
புத்தியானது அற்பமுமில்லாத சின்மாத்திரவடிவ
முள்ளவன்; விசாலம்பொருந்திய ஆகாயத்திலும் சூட்
சுமமென்கின்ற சமமாகியபுத்தியானது பவத்தைக்
உக. ஆத்மவியா பகங் கூறல்.
கெடுக்கும்.‡—தெளிந்தசலத்தில் உள்ளிலும் புறம்
பிலும் நெருங்கிய சூரியகிரணத்தைப்போலவஸ்துக்க
ளெல்லாவற்றிலும் ப்ரகாசமுள்ள வாத்மாவானது
நிற்கும். வடிவங்களனைத்தின் அகத்திற்ப்ரவேசித்து
வெளியாகச்செய்கின்ற ஆபரணங்கள்தோறும்சொன்
னம்விளங்கு மதிசயத்தைப்போல, ஆத்மாவானது
ப்ரகாசிக்கும். கனிந்த அவ்வபின்னமாய் விளங்காத
வடிவமானது ஆத்மசத்தையையுடைய உலகமாகத்
உஉ. இதுவுமது.
தோற்றும்.— நாசமென்கின்ற வடவாமுகாக்கினி
படர்ந்துவர பயத்தைச்செய்யும் காலமென்கின்ற
சமுத்திரத்தில் சகக்கூட்டங்களாகிய ஆறுகள் பல
சீவர்களாகிய அலைகளுடன் சேர்ந்தும்,நிரம்பாமலிருக்
கின்ற அக்கடலையும் ஆசமனஞ்செய்த கும்பமுனி
யாகிய ஆத்மாவென்று மனதிலறிந்து கொள்வாய்.¶—
உ௩. ஆத்ம திரு ஷ்டியைக் கூறல்
அநாத்மாவாய் முன்சொல்லிய உலகத்தினது கூட்
டமாய் சரீரமுதலாகிய வஸ்துக்களின் கூட்டைத்தை.
ஆத்மாவினுல்நீங்கி ஞானசற்பாவத்தைமேற்கொண்டு
அடக்கமுடையவனுய், குறைவில்லாத அறிவை
யுடையவரசனே? இச்சாப்ரகார மிருப்பாய்.*—
உ௪ அநாத்ம நாசத்தை யாத்ம நாசமாக நினைத்த றியாது வருந்துதல்.
கொங்கையினிடத்தில்நித்திரைசெய்கின்ற குழந்
தையை, மாதாவானவள்மறந்து மிகவுந்தேடி மனதை
நசிக்கின்றதுபோல, மூப்பிறப்புப் பொருந்தாத ஆத்
மாவையுணராமல், சனங்களானவை சலனமுற்று
யான்கெட்டேனென்றும் யானெருங்கிய நாதரில்லா
தவனென்று: அன்னமயமாகியசரீரமான துநசிக்கின்று

‡ இ-ம். சங்கற்பமே பந்தமு மதன்விடுதியே முத்தியுமாமென்பதாம்.
¶ இ-ம். ஆத்மாவானது சகலவஸ்துக்க ளுள்ளிலும் புறம்பிலு மிடையன்றிக் காலாதீதமான பூரணமாய் விளங்குமென்பதாம்
*. இ-ம். அநாத்மாவை யாத்மாவினுற் கெடுத் ததுவாயிருந் திச்சையின்படி சஞ்சரிப்பாயென்பதாம்.

காலத்தில்நானழிந்தேனென்றும், அந்தோ! அந்தோ! என்று அழுவார்கள்.-சலமானது சலித்தசலனத்தினால் அலை முதலிய நானாவித வுருவங்களானதுபோல, சங்கற்பத்தின் மிகுதியினால்சிற்பிரமமானது வியாபிக்கும் சங்கற்பமென்னும் பெரிதான களங்கத்தை விட்டு விரிந்தசித்தத்தை ஆத்மாவினிடத்தில் தீர்ப்பாக விருத்தி ஐயத்தினது குணங்களனைத்தையும் நீங்கினவனாய்,—அலைவிலும் அசைவில்லாமல் மேலான பராத்மாவைப்போல நிலைநின்று நித்தியத்துவத்தை யுடைய ஆநந்தியாய் இந்தநாட்டை, அரசனே? வெகுகாலமிரட்சிப்பாய், சேடமான வாத்மாவானது தன்னிடத்தில்தனதுசங்கற்பசத்திகளினால்அளவற்ற லீலையை குழந்தைகளைப்போலத்தொடர்பாகச் செய்யும்.¶|—அழிக்கும்தனது சத்தியினால் பின்னழித்து தன்னிடத்திற்பொருந்தும்,இழிவுசெய்யும்பந்தத்தை யடைகின்ற சத்தியானது இந்தவாத்மாவுக்கு தன்னிடத்திற்றானேயுண்டாகும். நிந்திக்கின்ற·பந்தசத்தி எங்ஙன முதித்ததோ, அங்ஙன மது பற்றில்லாமல் நீங்கும்; சங்காரசத்தியானது இவ்வாத்மாவுக்குத் தானேவந் துண்டாகும்.—சந்திர சூரியருடைய கிரணங்கள் சேர இரத்தினங்களிற்சேர்கின்றப்பிரகாசங்களைப்போலவும், முதிர்ந்தவிருட்சங்கள் பழம்பத்திரங்கள் முதலானவை யுடையனபோலவும், மலையருவிகளிற் சிதறுந் துளிகள்போலவும், விளங்கும் பிரமத்தில் சலனத்தையுடைய புந்திமுதலாக கற்பிதமான இவ்வுலகமானது வுண்டாகும்.— அவ்வாத்மாவை யுணராதவர்களுக்கு துன்பத்தைக் கொடுத்து அச்சகமே அக்கற்பிதமாகாததுபோல நிலையாயிருக்கும்; இந்த மாயையினது விசித்திரமானது அற்புதமேயாம். சாதாரணமாய் அவயவங்களியாவையும் கலந்து பிரிவில்லாமலிருக்கவும் உரிமையாக ஆத்மாவை ஆத்மாவானது காணாமலிருக்கும்படியாக யாவரையு மயக்கும்,—பரமாகாயத்தில் உலகங்களனைத்து மிருக்கின்றனவென்று பாவனைசெய்து இச்சை நீங்கினால் பிரமத்தையே கவசமாகத்தரித்த பேரானந்தத்தை யுடைய சீவன்முத்தனாகும்; யானென்கின்ற வகங்காரத்தைக்கெடுத்து அபாவரூபமான பாவனையினால் வஸ்துக்கள் யாவும் வடிவமில்லாததாகவும், பற்றுக்கோடில்லாததாகவும், சித்தாகவும், சாந்தமாகவு

உ௫. சிதாநந்தமாயிருந் தரசு செல்வாயெனல்.

உசு. இதுவுமது.

உஎ. ஆத்மசத்தியினுற்பத்தி நாசஞ்சொல்லுதல்.

உஅ. பிரமத்திற்ப்ரபஞ்சந்தோற்றுதலைக் கூறுதல்.

உகூ. ஆத்மாவினிடத் தில்லாமையாகத்தோற்றின சுகம்அஃதையேமறைக்கு மெனல்.

௩0. பிரமகவசமுரைத்தல்.

¶ இ-ம் சைதன்ய சங்கற்பத்தைக்கரைத்து நித்தியாநந்தனாயிருந்து பூமிபாலனஞ்செய்வாயென்பதாம்.

௩௧. மனோபேதத்தைக் கெடுத்தல்.

மிருக்குமென்று பாவிப்பாய்,§—இதுவேநல்லதென்னும் நல்லதல்லவென்றும் நினைக்கின்ற இப்பேதபாவனையே துக்கபரம்பரைக்கு விதையாகும். அந்த வித்தானது சமபாவனையான வக்கினியில் எரிந்தொழிந்தால் துன்பத்துக்கு இடமேது. சாதாரணமான நன்மைதீமையென்னும் பேதத்தை அபாவமென்கின்ற கத்தியினால் நாநாவிதமாகிய புருஷப்பிரயத்தனத்தினால் மிருதுவாக மனதிற்றறிப்பாய்.¶—எண்ணத்தினால் நிறைவேற்றப்பட்ட கன்மமென்கின்ற

௩௨. கன்மத்யாகஞ்செய்து விவேகத்தாற் பிரமபதத்தைப் பெற்றிருப்பாயெனல்.

பெரிய கொடியவனத்தை அலங்கரிக்குமாலையுடைய இட்சுவாகுவென்கின்ற அரசனே? நீ யபாவனையினால் வெட்டி பரமபதத்தையடைந்து கன்மநீங்கிய உன்னுடைய விவேகத்தைப்பொருந்தி எப்பொழுதும் நிலையாயிருப்பாய்.—சகத்தினதுவிரிவை தனக்குள்ளடக்கி நினைக்கின்றபேத நினைவுக்கு அப்பாலாய், கலக்கத்தைவிளைக்கின்ற பெண்களும்பொன்னுமென்கின்ற ஆசைவிட்டு யானென்கின்ற அஞ்ஞானவிருணீங்கிவிவேகநிச்சயத்தைச் சேராநின்றவனே,பிரமாநந்தமானது ப்ரகாசிக்கப்பெற்றவனும், அனேககாலம்

௩௩. துக்கநிவர்த்தியாய்த் தடையற்ற வானந்தமடைதல்.

௩௪. ஆத்மாவைத் தரிசிப்பித்தலைதை யடைதற்குண்மை நெறியான ஞான பூமியைச் சொல்லத் தொடங்கி முதற்பூமியான சுபேச்சையைக் கூறுதல்.

இவனே துக்கமில்லாதவனும்.†— உபசாந்தனாகியும், சமநிலையாகியும், மிகவுஞ்சொச்சமாகியுமிருந்து ஞானஸ்வரூபத்தை, அரசனே? எப்பொழுதுந் தியானிப்பாயென்று மனுவானவர் திரும்பவுஞ்சொல்லுவார். ஆராய்ந்தறிந்த ஞான சாஸ்திரங்களினாலும், சத்துக்களினாலும், ஞானத்தை முன்புவளரச்செய்யவேண்டும். பொருந்திய ஞானத்துக்கு இச்சுபேச்சையே முதற்பூமியாகும்; கன்மயோகிகளுக்கில்லை,—தளர்வற்ற வாத்மவிசாரணையே இரண்டாம் பூமியாகும்; அசங்கபாவனையே மூன்றாம்பூமியாகும்; சொல்லப்பட்ட நான்காம்பூமியான விலாபினியேவளருகின்ற வாசனையை பற்றிலாமற்கெடுக்கும்; மயக்கமில்லாத பரிசுத்தமாகிய நல்ல ஞானமயமான ஆநந்தஸ்வரூபமே ஐந்தாம் பூமியாம்; நித்திரையும் விழிப்புப் பாதிகளில்லாத இதுவே தொடரா நின்ற சீவன்முத்தியாம்,—அறிதலில்லாமையே வுருவமாகி பூரணமான வோராநந்தத்தி

௩௫. விசாரணை தனுமாநசிசத்துவாபத்தியசம் சத்தியென்னு மின்னான்கு பூமியையுஞ் சொல்லுதல்.

௩௬. பதார்த்தபாவனை அரிய

§இ-ம். சிற்ப்ரகாசமே சகத்தென்றறிதல் போதிக்கப்படாத ஞானகவசமாமென்பதாம்.

¶ இ-ம். மனதின்கண்ணுள்ள பேததுன்பங்களை யறிவின் கண்ணுள்ள வபேதசுகத்தாற் கெடுக்க வேண்டுமென்பதாம்.

† இ-ம். பாவனை கன்மங்களை யபாவனையாற் கெடுத்துச் சகலமுந் தனது வியாபகத்திற் கரைத்துப் பிரமாநந்தத்திற் சுகிப்பவனே துன்ப மற்றவனென்பதாம்.

மெனுமிவ்விரண்டு பூமியையுங்கூறல்.

௧௭. ஞானபூமிகா ஸ்வரூபமான பிரமபுருடனுக்கதை ஐந்தவத்தையாகச் சொல்லத் தொடங்கி முதற்பூமி மூன்றையுஞ் சாக்கிரவவத்தையெனல்.

௧௮. நான்காம் பூமி சொற்பனம் ஐந்தாம் பூமிசுழுத்தி யாறும் பூமி துரியமெனக் கூறுதல்

௧௯. எழாம்பூமி துரியாதீதமெனல்.

௨௦. ஞானபூமி யற்பியாசத்தினற் சத்யோமுத்த னுவனெனல்.

௨௧. துரியாதீத வனுபவியெங்ஙன மிருக்கினுஞ் சுகியேயன்றி துன்புறுனெனல்.

னுலும் நிறைந்தவடிவமாகி சுழுத்தியவத்தையைப் போல விளங்குகின்ற மேலானவாறும்பூமியாம், பிரிவற்றசமமாகியும், சொச்சமாகியும், நல்லதாகியும், உபசாந்தமாகியும், சுத்ததுரியமாகியும், கைவல்யமாகிய மோக்ஷமே ஏழாவதான பெருமைபொருந்திய பூமியாம்.¶— விடயங்கள்நீங்குதலினுல் பேரானந்தத்தில்வாழும் இந்த வேழாம் பூமியை மோட்சஸ்வரூபமாய் சித்தான துரியாதீத பதமென்று சிலர்சொன்னுர்கள். வேருக இவ்வேழுபூமிகளில்முதற்கண்சொல்லிய அவத்தைகளான மூன்றுபூமியும்,தொடராநின்ற சாக்கிரவவத்தையாக நினைப்பதாகும்.— உலகங்களானவை சொர்ப்பனத்தைப்போலத்தோற்றுவனவாகியதன்மையுடைய நான்காம்பூமியே சொற்பனுவத்தையாம். ப்ரகாசியாநின்ற ஓரானந்தத்தினுலும் நிறைந்த வுருவமானதை ஐந்தென்று சொல்லிய பூமியே சுழுத்தியவத்தையாகும். அறிதலில்லாத வாநந்தமே ஸ்வரூபமாய் விளங்காநின்ற வாறும்பூமியை சிறப்புள்ள துரியவவத்தை என்று சொல்லப்படும்.— சலனமானமனதும் வாக்கும் எட்டுதற்கரிதாகியும் தனது ப்ரகாசமாகியும் சத்துருவமாகியுமிருக்கின்ற துரியாதீதப்பதமான வவத்தையே பரிசுத்தம்பொருந்திய மேலான வேழாவதுபூமியாகும். நீங்காமல் அகத்தின்வசமாகிய சித்தநிரோதனத்தினுல் தெரியாததாய்பார்க்கப்பட்ட திரிஸ்யக் கூட்டங்களியாவும் நீங்குமானுல்,‡— அப்படிப்பட்ட மகாசத்தைபினுல் அவனே சீவன்முத்தனைவன், சந்தேகமில்லை. வந்திருக்கின்றபோகங்கள் இன்பதுன்ப விதங்களினுல் தாக்காமல் மிகவுநிறைந்திருக்கின்ற அறிவையுடையவனுய் ஆத்மாவிற்கலந்து மகிழ்ச்சியுற்றிருக்குமாயின்.இப்புருடனிச்சயத்திற்கு மேலானமோக்ஷமானது இவ்விடத்திற்றேற்றும்.—

மிகுந்தசெயலை யடைந்தவன், தொழிலற்றவன், கிரகஸ்தன், துறவி, சரீரமுள்ளவன், தேகமில்லாதவன் என்று சொல்லப்பட்டாலும், அவனே சீவன்முத்தனுகும். எவ்விடத்திலும் மரிக்கேன், பிழைக்கேன், இல்லாதவனு முண்டானவனு மல்லாதவன், இவ

¶ இ-ம். ஞான சத்தபூமியினருத்தத்தை யற்பியாசிக்குங் கிரமமறிவித்ததாம்.

‡ இ-ம். மூன் மூன்றுபூமி யற்பியாசத்திற் சகமுள்ளதுபோலத் தோற்றுதலினுற் சாக்கிரமென்றும் நான்காம் பூமியிற் சகம் ஸ்புரண ரூபமாகத் தோற்றுதலாற் சொற்பனமென்றும், ஐந்தாம்பூமியிற் சகஞ் சுகரூபமாய்த் தோற்றுதலிற் சுழுத்தியென்றும், ஆறும்பூமியிற் சகமறிதலிறந்து விளங்குதலிற் றுரியமென்றும், எழாம்பூமியிற் சகமகோசரமான சாக்ஷாத்காரமாய் விளங்குதலிற்றுரியா தீதமென்றும், இதுவே யாத்மார்த்தமென் றறிவித்ததாம்.

னென்பதும், நானென்பதும், அற்பமுமில்லாதவன் என்றுசிந்தித்து, தீரனுனவன்சோர்வையடையான்.- யான் ஒன்றிலுநெருங்கேன்; நரையும், ஆசையும், மனதும், மமதையும், அகங்காரமும் என்று சொல்லப்பட்ட ஒன்றுமில்லாதவனென்று நினைத்து, தீரனுனவன் துன்பமடையான். மூன்றுகுணமில்லாதவன், மூப்பிறப்பில்லாதவன், யான்பரிசுத்தன், நான் பரிசுத்தஞானி, நானிலையானவுபசாந்தன், யான்சமரசன், இப்படியென்று சிந்தித்தவன், துன்பத்தை யடையான்.— துரும்புகளி னுனிகளிடத்திலும், ஆகாயத்தினிடத்திலும், சூரியனிடத்திலும், அமரர்களிடத்திலும், நரகரிடத்திலும், மனிதரிடத்திலும், வியாபித்திருக்கின்ற ஞானமே யானென்று ப்ரகாசிக்கும் தீரனுனவன், இளப்பையடையான். சொல்லப்பட்ட குறுக்கும் மேலுங்கீழும் எனது சித்துவிலாசமானது வியாபித்திருக்கின்றதென்று அரியதாய்அளவற்ற விசாரணைபண்ணி இந்த நிலையையுணர்ந்தவன் நாசமில்லாதவன்.¶— திரமானவாசனையுடன் யாதொருவஸ்துவனுபவிக்கப்படுமோ சீக்கிரமாகஅதுவே சுகத்தைக்கொடுக்கும். யாதொருவஸ்து சுகத்தின்பொருட்டாகுமோ அப்பொருள் சீக்கிரத்தில் பயங்கரமானகாலத்தில் நசிக்கின்றபடியினுல் துக்கமுண்டாகு நிமித்தமாம். மகத்தான சுகதுக்கங்களுக்குநீங்காதிருத்தல்பிரசித்தமாம்.-வாசனையிறந்தாயினும், தேய்ந்தவாசனையிஞயினும், விடயவஸ்துவை யடைந்தால், அதனுற் சுகமுண்டாகாது. இன்பதுன்பங்கள் உதிக்கும்போது இரண்டுமொரு மித்துண்டாய் விளங்கும்; குறைந்து கெடும்போதில் அச்சுகதுக்கங்களிரண்டுமொன்ருய்நசிக்கும்.§—மனமானது சிரணித்தவாசனையினுல் செய்யப்பட்ட கன்மமானது வறுபட்டவித்தைப்போல திரும்ப சுகதுக்கங்களாயுண்டாகாது; தேகேந்திரியங்கள் வேருகவிரிந்து காரணங்களினுற் றிடமான பேதகன்மங்களுண்டாகும்; அக்காரணங்களுள் சமைப்பவனுகவும் முன் புசிப்பவனுகவும் யாரொருவன் எதிரிடுவன்.‡— பாவிக்கப்பட்டனவாகிய வஸ்துக்களனைத்தினும் மனம்பற்றுமல்அறிவிலுயர்ந்தவன் சந்திரனைப்போல

௪௨. துரியாதீதவனுபவியெங்ஙனமிருக்கினுஞ் சுகியேயன்றி துன்புருனெனல்.

௪௩. இதுவுமது.

௪௪. சுகதுக்க நிவர்த்தியின் பொருட்டஃதி னெருமையைக் கூறல்.

௪௫. இதுவுமது.

௪௬. வாசனையிறந்து செய்யுங் கன்மங்கன்ம மன்றெனல்.

௪௭. சீவன்முத்தன்கன்ம நிவர்த்தி

¶ இ-ம் சராசரங்களாய் ப்ரகாசிக்கின்ற சைதன்னியமே நானென்கிற ஞான திருஷ்டியுடையவன், யாதினுங் கூடியுங் கூடாதவனுய்த் துரியாதீதவடிவமாய் ப்ரகாசிப்பானென்பதாம்.

§ இ-ம் வாசனையின்றிச்செய்யுங்கன்மங்களினுண்டாகா சுகதுக்கங்களுக்கு பட்சியின் சிறகைப்போலப் பிரிவில்லை யென்பதாம். [காவென்பதாம்.

‡ இ-ம். சாந்தமான வாசனையாற் பவகன்ம நீங்குவதன்றியு மகம்பாவமுண்டா

யைக்கூறல்

அகத்திற் சீதளமாய்சிவந்தசூரியகிரணத்தைப்போல பூரணமாக ப்ரகாசிப்பன்; உலகவியவகாரங்களில் வருந்திச்சுழலாநின்றநவத்துவாரமுள்ளதேகமென்னு மிலவமரத்தில் பொருந்திய சஞ்சிதாகாமியமென்னும் வினைப்பஞ்சானது அறிவென்னுஞ் சண்டமாருதத்தினால்வேகமாயொருபக்கத்திற்பறந்துபோம்.—

௪அ. ஞானமற்பமாயுதிக்கினுமகண்டமாய் வளருமெனல்.

சனிக்கின்ற சீவர்களுக்கு எண்ணமெல்லாம் அடிக்கடி யற்பியாசிக்காததினால் இறக்கும், நேத்திரமாகிய ஞானமுள்ள கல்வியானது ஒருபோதுண்டானாலும் உழவு செய்திருக்கின்றநல்லவயலில் விரைத்தவிதையானது பலங்கொடுப்பதுபோல மெய்யன்பினால் மேன்மையாக மிகவும் விருத்தியடையும்.—

௪௯. ஆத்மசத்தையே சகத்தாக விளங்குமெனல்.

எல்லாரூபங்களாயும் ஏகமாயுமிருக்கின்ற வாத்மாவானது, நிறைந்த வாற்றிலும் சமுத்திரங்களிலுமுள்ள நீரைப்போல சகலசத்திகளிடத்திலும் இருந்து ப்ரகாசிக்கும்; நீங்காத வெண்ணத்தினது சமூகமில்லாததாய் ஏகமாயிருக்கின்ற சற்பாவத்தில் எல்லாவுலகங்களையும் தழுவாநின்ற பங்கினளவாக அறிவாய்.¶— இப்படியென்றுசொல்லி மனுத்திரும்பவுஞ் சொல்லுவார்.

௫௦. ஆத்மாவுக்கிச்சை யுண்டாதலு மழிதலுங்கூறல்

இசைந்தவிடயமான போகவிச்சையில் இருந்ததெந்தமட்டோ அந்தமட்டும் ஆத்மாவானது சீவனென்னு நாமத்தையடையும்; அவிவேகத்தினால் அந்த விடயவிச்சையுண்டாகும்; அரசனே? தானேயுண்டாகமாட்டாது; விவேகத்தினால் அவ்விச்சையானது,நாசமடையும்.—

௫௧. ஆத்மாவுக்கிச்சையே பந்தம் அதன் விடுதியே முத்தி யெனல்.

இச்சை எப்பொழுது நீங்குமோ அப்போது கூடிய சீவத்தன்மையைநீங்கி குற்றமற்ற மேலான பிரமத்தின் றன்மையை ஆத்மாவானது அடையும்; இந்த வாத்மாவானது வெகுகாலம், துன்பமாக சுவர்க்கத்திலிருந்து நரகத்துக்குவரும், நரகத்திருந்தும் சுவர்க்கத்திற்செல்லும்.†—

௫௨. அகம்பாவமுள்ளவனிழிவு கூறுதல்.

பவமென்னும்பெரியஎற்றத்தினது சிந்தனையென்னுங்கயிற்றின் கடமாகாதே; இதென்னுடையது, இதற்கு நானே கருத்தாவென்று உறுதிப்படுத்துந்தொழிலாகிய மயக்கத்தில் நெருங்குபவர்களியாவர், அக் குற்றத்தை யடைந்திருக்கின்ற வஞ்சகரானவர்களே,ஒப்பற்றவேலாயுதத்தையுடையவரசனே? கீழேயிருந்துக்கீழேபோகத்தக்கவர்கள்.‡—

௫௩. அகம்பாவமற்றவர்களினுயர்

இதற்கு நானுடையவனென்றும், இதெனக்குள்ளதென்றும், அவனென்றும்,இவனென்றும், நானென்

---

¶ இ:ம் கன்மநிவிர்த்தியு ஞானவிருத்தியுஞ் சகத்தபின்னத்துவத்தையு மறிவித்ததாம்.

† இ-ம். இச்சாத்யாகம் வரவேண்டுமென் றறிவித்ததாம்,

‡ இ-ம். அகம்பாவத்திற் கட்டுப்பட்டு மயங்குபவர்களே கீழுக்குங்கீழான சநந்தத்தை யடைவார்களென்பதாம்.

ர்வு கூறல்.

றுஞ் சொல்லப்பட்ட மயக்கமான நானாவிதத்தை மேலானவறிவினால் நீக்கினவர்கள் மேலுக்குமேலான முத்தியிற்செல்பவர்கள், திரமான தனது சுப்ரகாச மிகுந்த ஆத்மஸ்வரூபத்தை எவ்வளவுந் தவக்கப்படாமல் பொருந்தும்படி சித்து உண்டாகிய வுலகத்தை தனது பூரணஸ்வரூபமாக பார்க்கக்கடவாய்.¶— எப்போது இந்தப்ரகாரம் தனது ஞானஸ்வரூபமானது இரண்டற்று அகத்தில்ஒன்றாயுதிக்குமோ அப்போது இச்சகநநீங்கி பரமேஸ்வரனாகலாம்; பிரமாவும், உருத்திரனும், விட்டுணுவும், வெற்றியுள்ள இந்திரன் முதலானவர்கள் செய்யும் பஞ்சகிருத்தியமுதலியவெவையும் தத்துவத்திற்கலந்துநிறைந்த ஞானஸ்வரூபத்தையுடைய நானே இயற்றுகிறேனென்று அறிவாய்.*—

ருச. சித்துருவ மத்துவிதமாகவிளங்குமெனல்.

எந்தவெந்த தரிசனங்கள் எப்போது நேரிடுமோ அத்தரிசனங்களில் எது தத்துவமாகச் சொல்லப்பட்டதோ அவையனைத்தும் தடையற்ற ஞானத்தினது இனிதான லீலையேயாம்;குற்றமற்ற சின்மாத்திரமான குணத்தையுடையவனாய் காலனைச் செயஞ்செய்து குற்றமற்ற மனதுடனிருப்பவன் அடையாநின்ற பூரணாநந்தத்துடன் யாதொப்பாகும்,†—சகமானது இல்லாததுமல்ல, உண்டானதுமல்ல, அசித்துருவமுமல்ல, சித்துருவமுமல்ல, ஆத்மஸ்வரூபமுமல்ல அநாத்மஸ்வரூபமுமல்ல, என்று நினைப்பாய், சொல்லப்பட்ட இச் சுரூபத்தையடையபழமையாய்த் தொடர்ந்தமாயையானது இறக்கும்; மேலானமோக்ஷமானது பொருந்தாநின்ற தேயமுங் காலமுமல்லவாம்; புறம்பான வொரு ஸ்திதியுமல்ல.‡— அகங்காரத்தினது நானென்கின்றமயக்கமானது கெட்டால்பாவனையென்கின்ற நாமத்தையடைந்த மாயையின்முடிவு மோக்ஷமாகும்; தொகுத்துச்சொல்லாநின்ற சாத்திரங்களினது அருத்தபாவனையில் துவளாநின்ற பலவிதமான சுகங்களில்ப்ரவேசிக்குங்காவியவிச்சையுமாகியஎல்லா வேறுபாட்டின்றுன்பங்களும் அடையாமலிருக்கின்ற

ருரு. ஞானதிருஷ்டியின் பெருமையுரைத்தல்.

ருசு. செகத்தினிலக்கணஞ் சொல்லிச் சித்துருவமான முத்தியைக் கூறல்.

ருஎ. சீவன்முத்தனிலக்கணங் கூறத்தொடங்கி சாத்திரவாசனை முதலிய யாவுநீங்கிற் சம திருஷ்டியிற் சுகிப்பானெனல்.

¶ இ-ம் அகம்பாவத்தை யறிவினாற்கெடுத்தவர்களே மேலுக்குமேலான முத்தியை யடைவரென்பதாம்.

* இ-ம் சிவன்முதலியோரனுபவமுமிதுவேயெனத் தெரிவித்ததாம்.

† இ-ம். எதிரிட்ட சகலவஸ்துவுஞ் சைதன்யவிலாசமென்றறிந்த பூரணமனதுள்ளவன் சுகத்துக்கிணையாதென்பதாம்.

‡ இ-ம். இச்சக மறத்தக் கிரியைகளைச்செய்வதனாலில்லதும், கற்பிதமாகையாலுள்ளதும், விகாரமுள்ள வாதலாலறிவும், ப்ரகாசிக்கின்றபடியாலறியாமையும், பேதமாகத் தோற்றுகின்றபடியாலாத்மரூபமும், ஆத்மாவைத்தவிர வில்லாதபடியாலயலுமல்லவெனக் கூறினதாம்.

௰௮. சீவன்முத்தனிலக்கணங் கூறத்தொடங்கி சாத்திரவாசனை முதலிய யாவுநீங்கி சமதிருஷ்டியிற் சுகிப்பாயெனல்.

௰௯. கன்மத்யாகங் கூறல்.

௨௰. கருமபலம் விட்டவனிலக்கணங்கூறல்.

௨௧. அனைத்தும் பற்றியும் பற்றுஇருக்கின்ற விலக்கணங்கூறல்.

௨௨. சற்கருமஞ் செய்துஞ் செய்யாதவனெனல்.

௨௩. சீவன்முத்தன் சரித்திரஞ்

ஒருவனே முத்தியைப் பெற்றவனுகும்.—அவன்நாசமற்ற சமமாகிய ஆத்மாவாகவிருந்து ஆநந்தத்தையடைவான். ஏதாகிலு மொன்றைத் தரிப்பவனுகியும் ஏதாகிலுமொன்றைப் புசிப்பவனுகியும், வினையாமல் எவ்விடத்திலாகிலும்ஓரிடத்தில் அறிதுயிற்செய்கின்றவனுகியு மிருக்கின்றஅவன்ருன் அழகிய பூவுலகத்தை சக்கிரவர்த்தியைப்போலப்ரகாசிப்பன். ¶-- இருப்புக்கூட்டினின்று நீங்கிய சிங்கத்தைப்போல கன்மாஸ்திரங்கள் நடத்துகின்ற வன்ருச்சிரம தருமநெறியின் நடையைவிட்டு நசிக்கின்ற சகத்தின்கனநீக்கி; அரசனே? வசனங்களுக்கு எட்டுதற்கரியவன், தன்னைத் தேடிப் பிறவியைநீக்கினவன், மேகமறைந்த சரற்காலத்திலுள்ள ஆகாயத்தைப்போல ஒப்பற்ற சாந்தியையடைந்தவன். ‡—தெளிவும் ஆழமுமுள்ள மலையைச் சேர்ந்த பெரியகுளத்துக் கொப்பானவன்; களிப்பையுடைய பிரமாநந்த விரசமாகிய தன்னிடத்திற்ருனே கலக்கமுருமல் எளிதாகரமிப்பவன், கன்மபலங்களனைத்தையு நீக்கினவன்; நசியாமற் ப்ரகாசிக்கின்ற பூரணனுனவன்; இருவினைமுதலிய விகற்பங்களொன்றும் தாக்கப்படாதவன்; ஒன்றுஞ்சேராதவன் †—

பஞ்சவன்னங்கள் ப்ரதிபலித்து அகப்பற்றில்லாத படிகமணியைப்போல கன்மபலமானது ப்ரதிபலித்தும் அகத்திற்பற்ருதவன்; அநேகமாக நரர்களுடன் கூடியும் பத்தியினு லாராதனைசெய்தாலும் விரோதத்தினுல் சரீரத்தை யறுத்தாலும் ப்ரதி பலனத்தையடைந்ததுபோல சொல்லப்பட்ட சுகதுக்கங்களையறியமாட்டான்.§— தோத்திரங்களும், தேவபாகங்களும், தொடர்பாகப் பூசிக்கப்படுவோனும், பூசைகளு மில்லாதவன்; வேதவிதிப்படி செய்கின்ற நீதி நடையைப் பொருந்தியும் பொருந்தப்படாதவன்;எதிரிடப்பட்டதன்னுல் சகத்திலுள்ளவர்கள் எவ்வளவு மச்சப்படாதவனு மிருப்பவன் சகத்திலுள்ள வொன்றினுலும்பயப்படாமல் வாசஞ்செய்பவன்.*-பூரணமனதுடையவன் ஆசையும், கோபமும், அச்சமும்,

¶ இ-ம் . அசம்பாவமுதலான பேதநீங்கிச் சமதிருஷ்டியிற் சகலகிரியையுஞ் செய்பவனே யெதிரற்றசுகியாய்விளங்குவனென்பதாம்.

‡ இ.ம். வருணுச்சிரம தரும முதலியவைகளை யனுபவமாய் நீக்கினவனே யொப்பற்ற ஞானப்ரகாசமாய் விளங்குவானென்பதாம்,

† இ-ம்.பலாபேட்சையின்றிக் கருமஞ்செய்பவனே பரமசுகத்திற் சுகிப்பவனென்பதாம்.

§ இ-ம். பலனை யுத்தேசியாமற்செய்யுங் கருமத்தாற் சுக துக்கத்தை யடையானென்பதாம்

* இம். சீவன்முத்தனுக்கியல்பான நடையைக்கூறினதாம்.

சொல்லியவ னெங்ஙன மரிக்கினு முத்தியே யடைவா னெனல்.

சந்தோடங்களுமான வினைகளில் கூடாதவனுனுலும் கூடினவனுனுலும், முன்சொல்லப்பட்ட யாவருக்கு முள்ள பிரமேயந் தொடாதவனுனுலும், நற்குழந்தைகளடைந்த பிரமேயத்தை யடைந்தவனுனுலும், காசியிலிறந்தபோதும்புலையர்வீட்டிலிறந்தாலும்,பரம பதத்தைப்பொருந்துவன்.— சைதன்யத்தைப் பெற்றமாத்திரத்தில் இவன் நல்லமோக்ஷத்தை யடைந்தவன் மனோநாசமானவன்; துன்பமுள்ள, பந்தமாவது இழிவாகிய அகங்கார மயக்கமல்லவா, ஆகியமோக்ஷமாவது அஞ்ஞானந்தகாரங் கெடுவதல்லவா என் றறிந்த மாட்சிமையிலுயர்ந்த இவ்வறிஞன்வறின் புருடராராதிக்கவேண்டும்,— கொடியசாதனங்களைக் கொடுப்பவர்களுக்கு அச்சீவன்முத்தனே சதாகாலந் துதிக்கவும், வணங்கவும், ஆராதிக்கவும், புகழவும், பிரார்த்தித்துப்போய்த் தரிசிக்கவும், மிகவு முரியவன் எவன் சலனமில்லாத ஞானத்தினுல் பவத்தைநீக்கி மாக்ஷிமைப்பட்டவனே அவனுக்குச்செய்யு மன்புகொடுக்கும் ப்ரயோசனமானது சொல்லப்பட்ட யாகங்களினுலும், நதிகளினுலும், தவங்களினுலும், தானங்களினுலும், லபியாது.¶— அன்புற் றிந்தவண்ணம் போதித்து பகவானுன மனுவென்னு நாமத்தையுடைய பிரமாவானவர், தனதுகனகமயமான சத்தியலோகத்திலுள்ள அரண்மனையில் போய்ச்சேர்ந்தார், வீரகண்டாமணியை வரிந்திருக்கின்ற பாதத்தையுடைய ஸ்ரீராமா? இட்சுவாகுவென்கின்ற மிகுந்த கீர்த்தியை யுடைய வரசனும் அந்தத் திருஷ்டியையே பிடித்து தனதாத்ம நிச்சயத்திலிருந்தானென்று வசிட்டமுனியானவர் சொன்னுர்.†—

௬௪. அகம்பாவமான பந்தநீங்கி யறிவாய் விளங்கினவனே யாவருமாராதிக்கத் தக்கதெனல்.

௬௫. அவன் முமுட்சுக்களாராதிக்கத் தக்கவனெனல்.

௬௬. பிரமனுபதேசித் தெழுந்தருளுதல்.

இட்சுவாகுகதை

முற்றிற்று.

## மானுவேடன்கதை.

---

### அவதாரிகை.

முற்கதையில் தனது விசாரத்தால் அடையக் கூடாமல் ஆசிரியர் முகம் விசாரத்தால் அகம்பாவநீங்கிச் சர்வம் பிரமமயமென்னும் அநுபவம் விளைந்து அதை விளக்கி, மேல்துரியாநுபவத்தை விளக்கும் பொருட்டு மிருகவியாதன்கதையை நிருபிக்கிறுர்.

¶. இ-ம். முத்தி விருப்பமுள்ளவர்க் ளிச்சீவன் முத்தரைப் பூசித்ததையடையவேண்டுமென்பதாம்.

† இ. ம். பிரமவுபதேசத்தா லிட்சுவாகுவுஞ் சீவன்முத்திப்பதத்தை யடைந்தனரென்பதாம்.

க. அணிமாதி முதலிய சித்திகளில்லாத சீவன் முத்தருக் கற்புத மியாதெனவினவுதல்.

உ. ஆத்மாநந்தத்தி லதிசயிப்பவனணிமாதி சித்திகளி லதிசயக்கானெனல்

ரு. சித்திமுத்தியினிலக்கணங் கூறல்.

ச. சீவன்முத்தரிலக்கணங் கூறல்

ரு. சிற்ப்ரகாசமாய் விளங்கிய சிவேஸ்வராளுக்குக் காரண மின்றெனல்.

சு. சீவர்கள் பிறத்தற்குக் காரண முரைத்தல்.

இவ்வண்ணமிருந்தால், சீவன்முத்தனுகி இனிமையாயிருக்கின்ற அறிவையுடைய இவனுக்குள்ள புதுமையான வியப்பானது முடிவற்ற பிரமத்தைத் தரிசித்தவர்களுக்கு யாதென்றுகேட்ட அழகுள்ள இராமருக்கு; பழமையான வேதத்தையுடைய வசிட்டமுனி சொல்லுவார்,— சமானமில்லாத ஞானவானுடைய புத்தியானது, ஒன்ருன ஆத்மாவினிடத்தில் வியப்பையடையும் குற்றமில்லாமற் பூரணமாய், உபசாந்தமுடையவனுய், அச்சீவன்முத்தன் ஆத்மாவினிடத்திலிருப்பான். சொல்லப்பட்ட மந்திரங்களும், தவங்களும், உபாயங்களும், சிந்தித்தவர்களுக்கு கைவசமாகின்ற ஆகாயகமனமுதலிய கன்மத்திலதிசயமென்ன.†—சகமாகப்பரவிய இவர்களாலும் முறைமையாக விரிந்த ப்ரயாசையினுலும் பயனுயிருக்கின்ற அணிமாமுதலிய வஷ்டசித்திகளும் செய்யப்படும். ஆகையால் ஆத்மஞானிகளுக்கு இச்சித்தியில்லையாம்; இந்தஞானிகளுக்கு ஒரு விசேடமுண்டா யிருக்கின்றது ; இழிவுள்ள மூடமதிகளைப்போல அல்லாதவனுவன், எவ்விடத்திலும் இச்சையற்றதனுல் இவனது மனம் நின்மலமாகும்.¶— வருணுச்சிரமக் குறிகளில்லாத வுருவமாய் சநநமரணத்தில் அநேககாலங்கொண்டிருந்த பிரமையானது நீங்குதலினுல் பின்னமற்ற சுகபோதனுக்கு சொல்லப்பட்ட வடையாளமானது இம்மட்டல்லவா ; வாசனைமிகுந்த விச்சையும், கோபமும், துக்கமும், உலோபமும், ஆபத்துமாகிய விவைகள், நிபுணமாகத்தினங்கடோறும் அற்பமாகத் தேய்ந்துபோகுமென்று சொல்லி வசிட்டமுனி திரும்பவுஞ்சொல்லுவார்.‡—ஒருபிராமணன் தனது பெருமையைவிட்டு சூத்திரனுகிமரபுநீங்குவதுபோல, ஈசுனுவன் சீவனென்றுசொல்லும்படி யுண்டாயினன் சிருஷ்டிகடோறும் நிறைந்திருக்கின்ற நீண்டபிராணிகளானவைமட்டில்லாமற் ப்ரகாசிக்கும் ; காரணமான அறிவின்சலனத்தினுல் வழிகள்தோறும் அச்சீவவீசருண்டாகும்; தொடராநின்ற காரணமானது இவ்விடத்தில்லையாம்,— ஈஸ்வரனிடத்திலிருந்து உண்டாகி வளர்ந்த சீவர்கள், தாங்கள்செய்த கன்மங்களினுல் மேலுமேலும் சநநங்சனைப் பொருந்தும், தேய

† இ-ம் சீவபாவநீங்கிச் சிவமாவதற் கேதுவல்லாத வாகாயகமனமுதலியவை பறவைத்தொழிலெக் கொப்பென வதி யிக்கா ரென்பதமே.

¶ இ-ம். மாப்ராசகிதத்தாலடையு மணிமாதிசித்திக்கு மாயாரகிதத்தாலடையு முத்தி மிகவும் விசேடமாமென்பதாம். [மென்பதாம்.

‡ இ-ம். காமக்குரோதாதிய சகலகன்மங்களு மிறந்திருப்பதே யுடையாளமா

த்தையுடைய ஸ்ரீராமா? காரியகாரணத்தி னொழுங்கு இதுவேயாம். பழிக்கத்தக்க பவமுங் கருமமு மென்கின்ற இரண்டுக்கு மிந்தப்பிரகாரமே. †—

௭. அகாரணமாயுண்டான சீவர்களுக்குப்பின்வந்த காரணங்களைக் கூறுதல்.

பிரமபதத்திலிருந்து நிஷ்காரணமாய் விரிந்த சீவர்களனைவருமுதிக்கும், உண்டானதன்பின்பு அவ்வுயிர்கள் அனைவர்க்கும் தாங்கள்செய்த கன்மங்களானவை உரிமையான சுகதுக்கங்களுக்குக்காரணமாகும். ஆத்மாவையறியாத மயக்கத்தில் உண்டான சங்கற்பமானது, சொல்லப்பட்ட கன்மங்களினது காரணமாகும்.§—

௮. சங்கற்பத்தைக் கெடுக்கவேண்டுமெனல்.

பந்தத்துக் காதிகாரணமானது சங்கற்பமல்லவா; அதை நீ பற்றில்லாமற்கெடுப்பாய். முதன்மையான சங்கற்பமொழிந்தால் மோக்ஷமதுவேயாகும்; அச்சங்கற்ப நாசத்தை அறிவினால் பழக்கஞ்செய்வாய். விடயமும்விடயத்தைக்கிரிகிப்பவனும்வந்தால், குழந்தாய்? மெதுவாக எக்காலமும் சங்கற்பத்தை மறவாமற்கெடுப்பாய்.‡—

௯. இச்சாத்யாகமே முத்தியெனக் கூறுதல்.

கிரிகிக்கப்படுகின்ற விடயமாகவும் வேண்டாம்; கிரிகிப்பவனாகிய ஞாதாவின் உருவமாகவும்வேண்டாம்; சிந்திக்கின்ற சங்கற்பங்களனைத்தையுங் கெடுத்து எதுமிஞ்சினதோ அதுவேயாவாய் விரும்பப்பட்ட வொருவிடயார்த்தத்தை பஞ்சேந்திரியங்களடையுமானால், அவ்விடத்திற் றௌ்ளாநின்ற வாசையையுடையதே பந்தமாகும். சிறக்காநின்ற பற்றில்லாததே மோக்ஷமாம்.—

௰. இச்சையற்பமுங் கூடாதெனல்.

அற்பமானது உனக்கொருவஸ்துவி லிஷ்டமானால் அவ்விச்சையாற் பவத்திலகப்பட்டாய்; அழகையுடைய ஸ்ரீராமா? உனக்கொருவஸ்துவிலும் இன்பமடையாதென்றால் பவத்தை நீங்கினாய். சராசரமாகிய வஸ்துக்கூட்டங்களில் உனக்கு துரும்புமுதலாக கனகமுடிவான வஸ்துக்களில் கொஞ்சமும் விருப்புறவேண்டாம்.¶—

௧௧. பற்றறச்செய்யுங் கன்மமகம்பாவமாகாவெனல்.

ஆசையில்லாமல் எதைப்புசிக்கின்றாய்; எதைச்செய்கின்றாய், எதைவிடுகின்றாய்; பொருந்தின கருத்தாவும் போக்தாவும் அல்ல; நீயே உபசாந்தத்தையுடையவன், மனமிறந்தவனாகும்; பின்னுஞ் சத்துக்கள் போனபொருளுக் கிரங்கமாட்டார்கள்; வருவன

---

† இ-ம். சீவர்களுதித்தற்குக் காரணமின்றாயினுஞ் செனித்து மரித்தலுக்குக் கன்மசன்மமே யொன்றுக்கொன்று காரணமாயிற் றென்பதாம்.

§ இ-ம். பிரமப்ரதிபா மாத்திரமாபுண்டாயிருக்கின்ற சீவர் கடாஞ்செய்யுஞ் சங்கற்பத்திற் கருமமுங் கருமத்திற் சுகதுக்கங்களு முண்டாமென்பதாம்

‡ இ-ம். பந்தத்துக்குக் காரணமான சங்கற்பத்தை யெப்போதுங் கெடுக்கவேண்டுமென்பதாம்.

¶ இ-ம். முற்றும் பற்றறுத்ததே முத்தியாதலா லொன்றையுமிச்சிக்கவேண்டாமென்பதாம்.

வாகிய பொருளை மதித்து நினையார்கள்; முழுதும வர்த்தமாகனாலத்துப்பொருளை ஒழுங்காக வடைந்து கைவசப் படுத்துவார்கள்.— செருக்கும்; மோ

௧௨ மனதைமன திறைற்கெடுக்கவே ண்டுமெனல்.

மும், இச்சையும்; முதலான வைகள் மனதிற்கட்டிய பாசங்களேயாம்; தீரமாகிய மனதை விவேகமனத்தினால் அறிஞர்களால் கெடுத்துவிடலாம். உரிமையான நீண்ட மகாவிவேகத்தினலும் இரும்பாலிரும்பையறுப்பதுபோல் நாநாவிதமான மனதை ஒருப்பட்டமனதினற் சகமயக்கந்தீரக் கெடுப்பாய்.†—

௧௩. சீவனுக்குள்ள மூன்றுவடிவ முரைத்தல்.

அறிவுள்ளவர்கள்; துகிலின்களங்கத்தை உவர்மண் முதலிய களங்கத்தினர் கழுவுவார்கள்; கொலைசெய்கின்ற அக்கினியாஸ்திரத்தை வருணாஸ்திரத்தினற்றடுப்பார்கள்; தீண்டும்வழுவாகிய விஷத்தை அவிழதமாகிய விஷத்தினல் நீக்குவார்கள்போல உயர்வுள்ள சீவனுக்கு மூன்றுவடிவமுண்டு; இரண்டு தூலமென்றுஞ் சூக்குமமென்று மிழிவுள்ளதாம; ஒன்றுமேலான பிரமாம்.

௧௪ அவைகளிற்றூலஞ் சூக்குமமென்னுமிரண்டு வடிவி னிலக்கணங்கூறல்.

இப்பிரமத்தை யடைந்து அத்தூல சூக்குமமான விரண்டையும் நீக்குவாய்.—முகிலுக்கொப்பான ஸ்ரீராமா? கரசரணேத்திரமுமேவிய இச்சரீரமே போகத்தை அனுபவிக்க புமானுக்கு பொருந்திய தூலசரீரமாகும்; பிரிவுள்ள சங்கற்பகாரமாய சம்சார பாவனையைச் செய்கின்ற துன்பமுள்ள மனமானது ஆத்மாவுக்கு சூட்சுமான வாதிபாகியவடிவமாம்—

௧௫. மூன்றுவதான பரவடிவினிலக்கணங்கூறல்.

தத்துவமாய் ஆதியந்தமில்லாமல் வேறுபாடில்லாத ஞானமாத்திரமே, நிறைந்த சிவநீழகத்துக்கு மூன்றுவதான பிரமவஸ்வருபமாம். தாமரைபலரைப்போல கரங்களையுடைய ஸ்ரீராமா? பரிசுத்தமான துரியபதமானது இதுவேயாம். இத்துரியபதத்தில் மூழ்கி களங்கமுள்ள முன்சொன்ன விரண்டுவடிவங்களையும் கெடுத்து அவ்விரண்டையும் நானென்று சொல்ல வேண்டாம்*—

௧௬. துரியவிலக்கண மியாதெனவினவுதல்.

இப்படியென்று சொல்லிய வசிட்டமுனியை ஸ்ரீராகவனு நோக்கி எனதுபிதாவே? சாக்கிரசொப்பன சுழுத்திகள், அவ்வதத்தைகளாயிருக்கின்றன மூன்றில், தோற்றுகின்றஅப்பிரமமாயிருக்குந் துரியபதத்தைநினைத்துவிசேடம்பொருந்த, மேலான முனிசிரேட்டரே? சொல்லுவாயென்றிராமன்கேட்க நிறைந்தவமுத வருடத்தைப்போலும்

---

† இ-ம். மனமிறந் தசம்பாவ நீங்குமுபாய மறிவித்ததாம்.

* இ-ம். ஆத்மாவுக்கு போகநிமித்தமுண்டான தூலதேகத்தையும், பலபாவனை செய்கின்ற சங்கற்பமாகிய சூக்குமதேகத்தையுந்தள்ளி, ஆதிமத்யாந்தரகித சின்மாத்திரமான துரியமே தனது பாவடிவமாகத் தியானித்த வித்தாமயமான காரண தேகத்தைக் கெடுக்கவேண்டு மென்பதாம்.

௧௭. துரியவிலக்கணங்கூறல்.

வசனத்தினுல் வசிட்டமுனி சொல்லுவார்.—நானென்பதும், நானென்னுததுவும், உள்ளது மில்லாததுமாகிய விவைகளை ஒருங்கேநீக்கி, விளங்குகின்றசமத்துவமாய் இச்சையற்றபடி ஆத்மநிச்சயத்திலிருத்தல் துரியமாகும். மேலானவாத்மநிச்சயமாகியும், சமமாகியும், உலகத்தினது கிரியைகளுக்கு சாட்சியாகியும், சொல்லப்பட்ட சீவன்முத்தியாகியுமிருக்கின்றபொருதுகின்ற கற்பனைகணீங்கிய நிலையே துரியபதமாம்.*—

௧௮. இதுவுமது.

துன்பமாகிய சங்கற்பமானது இல்லாததினுல் இது சாக்கிரமுஞ் சொற்பனமுமல்ல; போதம் இல்லாதபடியினுல் சாதாரணமான சுழுத்தியுமல்ல; சதுரான ஸ்ரீராமா? இவ்வுலகமானது நன்மையாகிய ஆத்மாவினிடத்தில்சீரணித்துக்கெடும். முதிர்ந்த ஞானிகளுக்கு இவ்விடத்திலிதுவே துரியமாகும். மூடர்களுக்கு சகமானது திடநிலையாகும்.†—

௧௯. இத்துரியமடையுமிலக்கணங்கூறியஃதடைந்தவரிலக்கணங்கூறத்தொடங்கல்.

நானென்கின்ற நினைவானதற்ருல் சமத்துவத்தையடைந்து மனதை ஒருபோதும் நீங்காததொழிலைசெய்யாதவிதஞ்செய்தால் துரியநிலை யுண்டாயிருக்கும். ஞானுதீதனுகிய தலைவன் நீயானுலும் ஞானமிகவும் பொருந்த முற்காலத்தினடந்ததாகிய ஒருகதையை, அறிவில்மிகுந்த ஸ்ரீராமா? கேட்கக்கடவாய்—மகத்தானவோராரணி.

௨௦. துரியதிருஷ்டியுள்ளவரைவிடயதிருஷ்டியைவினவுதல்.

யத்தில் ஒரு தபசியானவர் மகாமவுனத்தை விரும்புகின்ற நிலையையுடையவன்; அந்தமுனிவனை ஒரு யுத்தஞ்செய்கின்ற வில்லையுடைய வேடனுவநெருங்கி வந்து எரியாநின்றவென் கையம்பானது பட்டுவருந்தி இவ்விடத்தொரு மானுேடிவந்தது; அந்தமான் எவ்விடத்திற்போயிற்றென்று தபசியே? சொல்லுமென்று கேட்டான்.—அக் களங்கமற்ற தபசியான

௨௧. விடயத்தைவினவத் துரியத்தைக்கூறல்.

வர் பார்த்து, நற்குணமுள்ளவனே? கானகத்தில்வசிப்பவர்கள், சமநிலையான திருஷ்டியையுடையவர்களாயிருக்கின்ற யாங்கள் தவசிகள் கூட்டம்; சகத்தின்

---

* இ-ம். ஆகமூன்று மவத்தைமூன்று மபிமானமூன்றுமாகிய வொன்பதுடன் கூடி வெளிமுகமாயிருந்து விடயசுகஞ் சுகிக்கும்போது சீவகிதாபாசனென்றும், இவைகளைக் கற்பனையென்றறிந் திவைகளிற்செல்லாமற் றனித்திருக்கும்போது சீவனென்றும். தனதானந்தத்தை யனுபவிக்கும்பொருட்டகமுகத்திற்சென்றனைத்திற்குஞ்சாட்சியால் நிற்கும்போது கூடஸ்தனென்றும், இங்ஙனம் விளங்குவது சீவதுரியமென்றும் இங்ஙனமண்டங்களின் விளங்குத லீஸ்வர துரியவென்றும், அண்டபிண்டங்களி லிங்ஙனம் பூரணமாகவிளங்குதல் பிரமதுரியமென்றும், இவைகளோடுங் கூடியுங் கூடாமற் றற்பிரகாசமாயாதுயா தப்படி யெப்படியோ வதுவதப்படி யப்படியாய் விளங்குஞ் சுருதுரியமென்பனதைச்சுருக்கி, யசம்பாவநீங்கிச் சமதிருஷ்டியாற் சர்வசாக்ஷியா யிருத்தலே துரியமெனக் கூறினதாம்.

† இ-ம், இத்துரிய மவத்தாத்திரயமான பௌதிகமு மதற்குக்காரணமான பாஞ்சபூதமு மன்றென்பதாம்.

றெழிலைச்செய்கின்ற குற்றமுள்ளவகங்காரம்யாங்களாகமாட்டோம்; விடயத்திற் சேர்க்காநின்ற விந்திரியங்களினதுவிவகாரங்களனைத்தையுங்கிரியாநின்ற மனஞ்செய்வதல்லவா.— அதனால் அகங்காரவடிவமாகிய அந்த மனமானது பெய்யாக நிரமாய்விடுபட்டு வெகுகாலமாயிற்று; நனவும், கனவும், சுழுத்தியவத்தையுமாகிய அவைகளொன்றுந்தெரியாது; மேலான துரியநிலையாயினன். நாநாவிதமாகவிருக்கின்ற திரிஸ்யங்கள் நின்மலதுரியத் தில்லையென்றுசொன்னார்.†—

உஉ. துரிதிருஷ்டியில் விடயதிஷ்டியின்று மெனல்.

குற்றமற்றதபசையுடையவர்சொல்லப்பட்டவருத்தங்களை அறியாத வேடனனவன், அவ்விடம்விட்டு நீங்கினான்; ஆதலினாற் கேட்பாய்; துரியபதத்துக்கு வேறாக வொருநிலையு முள்ளதல்ல; குற்றம்பொருந்திய வேற்றுமைகளனைத்து நீங்கிய ஞானமே துரியமாகும்; இதையல்லாமல் இவ்விடத்தில்; ஸ்ரீராமா? வேறொன்றுமில்லை.— கண்டிருக்கப்பட்ட சாக்கிரம் கோரவிர்த்தியாகும்; சொர்ப்பனம் சாந்தவிருத்தியாகும்; சுழுத்தியேமூடவிருத்தியாகும். சொல்லப்பட்ட இந்த மூன்றவத்தைகளும் பகுத்தமனத்தின் உருவமாகும். இம்மூன்றவத்தைகளையு நீக்கினால் மனது நீங்கும்; மனதுநசித்தால் சத்தாகி அத்துவிதமான சமநிலையுள்ளதாகும்.— அந் நிச்சயத்தையே ஞானவான்கள் அரிதாக அப்பியாசித் தடைகின்றார்கள். மகத்துக்களாகியும், மேன்மைபொருந்திய இருடிகளாகியும், பந்தமில்லாதவர்களாகியுமிருக்கின்ற அபேதத்தையுடைய பழமையான சீவன்முத்தர்கள் நீங்காமல் எந்தத் துரியபதத்தில் வசிப்பார்களோ; துன்பத்தைச்செய்யும் சங்கற்ப விகற்பங்களிறந்த அத்துரிய பதத்தில், குழந்தாய்? நிரமாயிருந்து துன்பத்தினின்று நீங்கக்கடவாய்.‡—

உ௩. திருஷ்டாதஞ்சொல்லி துரியத்தைத்தவிர வேறின் றெனல்.

உ௪. அவத்தாத்திரய விலக்ஷணமே துரியமெனல்.

உ௫. துரியபதத்திற்சுகிப்பா யெனல்

மானுவேடன்கதை.

முற்றிற்று.

# திருவாணப்பிரகரணம்.

## அவதாரிகை.

முற்கதையில் ப்ரத்யேகாத்ம ஸ்வரூபமான துரியானுபவிக்கி வாக்யத்திற் றிரிஸ்யதிருஷ்டியின்றி திருக்குஸ்வரூபமாய் விளங்குவதையறி

† இ-ம். அகம்பாவநீங்கிச் சமதிருஷ்டியி லிருப்பவர்களுக்குத் துரியமன்றி விடயந் தோற்றாதென்பதாம்.

‡ இ-ம். இங்ஙனங்கூறிய துரியத்திற்சுகிக்கி லதுவே துரியாதீதமான விதேக முத்தியைக் கொடுக்குமென்பதாம்.

வித்து, இத்துரியமே சர்வம் பிரமமயமென்னுந் துரியாதீதமாய் விளங்கு வதை யறிவிக்குநிமித்த மிந்த ஞானசாஸ்திரார்த்தம் ஞானபூமிகாசார மானபடியாலஃதின் ஸ்வரூபத்தை விரித்துப் பதினன்குகதையின் சார மான திருவாணப் பிரகரணத்தை நிரூபிக்கிருர்.

க. சர்வம் பிரம மயமாய் விளங்குத லே யன்றிவேறின் றெனல்.

சமஸ்த ஆத்மஞான சாஸ்திரங்களில் சொல்லப் பட்ட நிச்சயமெதுவென்ருல், எல்லாவற்றையும்சொ ர்ப்பனமாகப்பார்ப்பதல்லவா. இவ்விடத்தில் அவித் தையுமில்லை; தொழிலினது துன்பங்களைச்செய்கின்ற கொடியமாயையுமில்லை; திணையளவு துன்பமுமில்லாம விறந்து உபசாந்தத்தன்மையாகிய இதுவே விளங்கா நின்ற பிரமஸ்வருபமாம்.*—உபசாந்தமாகியும், சிதா

உ. இப்பிரமத் தையே மதாந்தரங் களி லுமபேதங்க ளாக நிச்சயிக்கப் பட்டிருக்கு தெ னல்.

காசமாகியும், சமமாகியும், சொச்சமாகியும், ஆத்மா வாகியும், தரிக்கப்பட்டசத்திகள் அநந்தமாகியும்பிரம மென்னும் தரிக்கின்ற நாமமுடையதாயுமிருக்கின்ற இந்தப் பிரமத்துக்கே சார்ந்திருக்கின்ற வநேகநிச்சய ங்களைச்செய்து, சிலமதஸ்த்தர் சூனியமென்றுசொல் லுவார்கள்: சிலமதஸ்த்தர் பரமேஸ்வரனுடைய வடி வமென்று சொல்லுவார்கள்; சிலமதஸ்த்தர் மகாவிஞ் ஞானமாக ப்ரகாசிக்குமென்று சொல்லுவார்கள்.‡—

ஆதலால் சகலத்தையு மொழித்து மகாமவுனத்தி

௩. வஸ்து நிச்ச யங் கூறியஃதாய் விளங்கு முபாயமு ங்கூறல்.

னிறக்கக்கடவாய். மோக்ஷத்தையுடையவனுய் பொல் லாங்கைச்செய்யுமானது நீங்கி சித்தநீங்கி புந்திநீங்கி நானென்பதுநீங்கி பேசாத வூமையனுக்கும், அந்தக னுக்கும், செவிடனுக்கும், ஒப்பாகி பரிசுத்தமாகிய ஆன்மாவில் அகமுகத்தையுடையவனுய் எக்காலமும் சொச்சமாகியும் பூரணஞானத்தையுடையவனுயுமிற் கக்கடவாய்.o— சாக்கிர சுழுத்தியினது தன்மையை யடைந்து நன்ருக சகலத்தையு முள்ளேதள்ளி தன

௪ சித்தத்யாகவு பாயங்கூறல்.

திச்சாப்ரகாரம் வந்ததை வெளியிற்செய்வாய். மன முண்டாதல் மிகுந்ததுன்பமாகும், மனமிறந்தால் பேரானந்தமாம், மனதை உனதுவசமாக்கி உணர்வின் மையால் ஞானஸ்வருபமாய் நீங்குவாய்.— துன்பமா யிருக்கின்ற இதாகிதங்களைசூழ்ந்திருந்தும் சமத்துவ மாகி பிரிவில்லாமல் கல்லைப்போல பொருந்தியிருப்

௫ சுகதுக்க சம த்துவமா யிருப்பா யெனல்.

பாய் அநந்தசாநங்களினதுமயக்கைக்குகின்றஅதுபரி யந்தம் முயற்சிக்கின்ற தனது எத்தனத்தினுல், மலைக்

* இ-ம் சகலவேதார்த்த சம்மதமான நிச்சயம் மாயைமுதலியயாவுங் கனவைப் போலக் கண்டகற்றி யாவுந் தனது ஸ்வானுபூதி சாக்ஷாத்காரமாக விளங்குவதென் றறிவதென்பதாம்.

‡ இ-ம். [illegible] யே சூனியமுதலியவஸ்துவாக நிச்சயிக்கப்பட்டிருக்கு தென்பதாம்.

o இ-ம். மகாமவுனத்தா லாத்மாவிற் சுகித்திருப்பாயென்பதாம்.

௬. இவ்வநுசந்தானத்தால் முத்தியுண்டாமெனல்.

கொப்பாகிய ஸ்ரீராமா? இன்பதுன்பம் சுகாசுகமும் நீ நாடாதே.—இவ்வளவாகிய தனது முயற்சியானது துன்பமில்லாத முடிவற்ற பிரமபதத்தைக்கொடுக்கும் சிதறுகின்ற அமுதகலைகணிறைந்த சந்திரனைப்போல குளிர்ந்த அமுதமான துள்ளத்தின்கண்ணிறைய அவ்வறிவை யுடையவன் சுகத்தை யடைவான். சகங்களினது வஸ்துசத்தையை முன்னேதெரிந்துதொழிலைச் செய்துஞ் செயயாதவனாய் மோக்ஷத்தையடைவன்.†—

௭. அபரோக்ஷஞானனுபவத்தைப் பெறுதற்கு முக்கியகாரணமான ஞானபூமியினப்பியாசமுமஃதை யடைந்தவர்க ளிலக்கணமு மியாதென்ற வினாவில் முதல் வினாவுக் குத்தரங் கூறத் தொடங்கி ப்ரவிர்த்த நிவிர்த்தனெனவிருவருண்டென்ன

ஞானபூமி யேழுக்கும் செய்யுமப்பியாசங்கள் எப்படியாகும்; ஆகிய இந்தஞானபூமிகளையடைந்த ஞானிகளுக்கு என்னவடையாளங்கள்; மயக்கமற்றவரே? சொல்லுவாயென்று கேட்க, வசிட்டமுனியானவர் ஸ்ரீராகவருக்குச் சொல்லுவார். போகவசத்திற் செல்லுபவனென்றும், திரும்பினவனென்றும், ஆத்மாக்களிரண்டுவிதமாம்.—

௮. ப்ரவிர்த்தனிலக்கணங் கூறல்.

போகமோக்ஷங்களையிச்சித்து தொடாநின்ற அவர்களுடையஅடையாளங்களைக் கேட்பாய், மகிழாநின்ற மோக்ஷமானது எவ்வளவாகும்சகத்தினுழுங்கேமேலானதாமென்று ஓங்கிய நிச்சயத்தினால் செய்பவன், பெரிதான போகத்தில் செல்லும் ப்ரவிர்த்தனும்,

௯. நிவர்த்தனிலக்கணங் கூறல்.

யாவர்க்கும் விவேகமடைந்திருக்கின்ற சநநமானது அடைதற்கரிய தன்மையையுடையது.— கடலிற்கிடக்கும் நுகத்தடியின் றுவாரத்தினுள் ஆமைக்கழுத்துப் புகுவதுபோல், கொடிய விந்திரியங்களுடைய அநந்தஞ்சநநத்தில் ஓர் புருடனானவன் விவேகியாகச்செனித்து, கெடாநின்ற சநநமானது ப்ரயோசன மில்லாதது, இந்தயயக்கம் போதும், செய்யப்பட்ட கன்மங்களினால் அடையும் ப்ரயோசனமென்ன, இக்கன்மங்களினால் நாள்களனைத்தும் வீணாகப்போகும்.—

௧௦. இதுவுமது.

சன்மத்தினது மிகுதிகெட்டு மேலாகிதுன்பநீங்கும்; அந்தப்பதமெதுவென்று மனதிலழிவற்ற நிச்சயமுள்ளவனே, முழுதும்விட்டு திரும்புநிவர்த்தனாகும். நீங்காதமயக்கநீங்கிசநநசமுத்திரத்தை தாண்டுவதெப்படியென்று நினைக்கின்ற தவிராத விசாரணையினால், தினம்வேண்டாமல்துறவுமுகூர்த்தங்களினாலகத்திற்பொருந்துவன்.¶—

௧௧. நிராசையாற் சஞ்சரிக்கு நிலையையுரைத்தல்.

மேலாகிய காரியங்களில் முயற்சித்துதினந்தோறுமகத்தின் கண்ணானந்தத்தையடைவான். சொல்லாநின்ற துச்ச

---

† இ-ம். பிரமாற்பியாசத்தாற் பிரமாபரோக்ஷ முண்டாமென்பதாம்.

¶ இ-ம். சுவர்க்காதிபோகங்களைக் குறித்துக் காமியகருமங்களைச் செய்பவன் ப்ரவிர்த்தனென்று நிட்காமபுண்ணியப்லத்தினு லதிதீவரனாகப் பவக்கடலைக்கடக்க நிராசபிறந்தவ னிவர்த்தனென்றுங் கூறியதாம்.

மாகிய குற்றமுள்ளகன்மங்களில் அருவருப்பன்; உபாயமாக புண்ணியகன்மங்களைச் செய்வான்; தான்செய்த கன்மங்களைச்சொல்லான்; உலகத்திலுள்ள சனங்கள் பயப்படாதப்ரகாரம் மிருதுவாயிருக்கின்ற கன்மத்தைச்செய்வான்;— கொடிய தொழிலுக்குப்பயப்படுவான்; எப்போதும் போகத்திலாசையைப்பொருந்தான்; அன்புள்ள வுபசாரமாய் மிருதுவாய் சாமர்த்தியமாய் தேசகாலங்களுக்கு பொருந்தினவசனங்களை வசனிப்பான்; இவ்வாருன இந்தநிவிர்த்தனே இப்படியானபோது, முதற்பூமியென்னுஞ் சுபேச்சையாகிய ஒன்றை யடைந்தவன்,— ஒன்றுபடத் திரிகரணங்களினுல் மேலான சத்துக்களை அநுசரிப்பான். மேலான ஞானசாத்திரங்களை எவ்விடத்திலாவதுபோய் விருப்புற்றுக்கொண்டுவந்து அப்பியாசஞ்செய்வான். கூடியிருக்கின்ற சம்சாரத்தைக் கெடுப்பதற்கு நிச்சயித்து இந்த விசாரணையைப்பெற்றவனே மேலான முதற்பூமியை யறிந்தவனுகும். இன்னிலையன்றிச்சன்மார்க்கத்தி லுள்ளவன் தகுந்த மேலானவனும்.¶—

௧௨. நிவிர்த்தனே ஞானபூமியின் முதற் பூமியை யடைந்தவனெனல்.

௧௩. இவனேமுதற் பூமியினிலக்கணத்தை விசாரித்தறிந்தவனெனல்.

அறியாமையில்லாத விசாரணையென்கின்ற பெயரையுடையஇரண்டாவதுபூமியை அடைந்தவனுகும், வேதங்களில் தருமநூல்களையும், நல்லநடைகளையும், தாரணையையும், நல்லதியானங்களையும், சற்கிருத்தியங்களையும், கேட்கும்பொருட்டு, களங்கமற்றவாக்கியார்த்தங்களை ப்ரகாசஞ்செய்யும் கீர்த்தியையுடைய பண்டிதருக்குள் மேலானசத்துக்களை இனிமையாகச் சேர்ந்து,- நிறைந்த நித்தியாநித்திய வஸ்துவின்பாகத்தைத்தெரிந்து செய்கின்ற காரியங்களையுஞ்செய்யாத காரியங்களையும், செல்வனுகிய வீட்டுக்குநாயகனைவன், கிரககிருத்தியங்களை யறிவதுபோல அறிவான். அழிகின்றசெருக்கும் பொறுமையும் அகங்காரமும், ஆசையும் மயக்கமுமாகியவணத்தையும் அறிவின்மையின்வசமாகவந்தாலும் சர்ப்பமானது சருமத்தைவிடுவதுபோல் அற்பமாகநீக்குவன்.-அறிவைஇவ்வண்ணமுடையவன் ஞானசாஸ்திரங்களினுலும், வணங்கத்தக்க ஆசாரியராலும், சத்துக்களாலும், அதிகமான இரகசியமான சர்வார்த்தங்களினது நிச்சயத்தையுணர்பவனும். அதன்பின்பு முதிர்ந்த பற்றின்மையென்று சொல்லுகின்ற நாமத்தையுடைய இந்த

௧௪. இரண்டாம் பூமியானவிசாரணையை யடைந்தபோதுள்ள விலக்கணங்கூறல்.

௧௫. இதுவுமது

௧௬. இதுவுமது

¶ இ-ம். வைதீகவிருத்தியின் மகிழ்ச்சியும், லௌகீகவிருத்தியி னிந்தையும், பிரமார்ப்பணமாகப் புண்ணியகன்மங்களைச் செய்தலும், பாவத்துக்கும்பயப்படுத்தலும், போகமயக்கம்விடுதலுஞ் சாஸ்திரவிசாரமுஞ் சாதுக்கள் சங்கமு முத்திவிருப்பமுமுள்ள நிவிர்த்தன முதற்பூமியை யடைந்தவ னென்பதாம்.

மூன்றும்பூமியை, நூதனமாகிய புட்பங்களாற்செய்த மிருதுவான வாளியிலடைந்திருப்பதுபோல சேர்ந்திருப்பன்‡— உள்ளப்ரகாரமே சாஸ்திரார்த்தங்களின் அசாரத்தை நிலையாகக் கைவசமாக்கி. நீங்காத பெருமையினையுடைய தபசிகளிடங்களெல்லாம், ஒரு வாட்டமுமில்லாத தத்துவஞானத்தை தெளிவாகச் சொல்லுகின்ற கதைகளைக்கேட்கும் மார்க்கங்களினால் நெடியபவாயுளைத் தள்ளுவான்.

௧௭. மூன்றாம் பூமியான தனுமாநசியை யடைந்தபோதுள்ள விலக்கணங் கூறல்.

சயனஞ்செய்வதற்கும் வாசஞ்செய்வதற்கும் விசாலமுள்ள பாறைக்கல்லையே ஸ்தானமாகக்கொள்வன்.— மனமானது அடங்கியிருக்கின்றநன்மையினால் பற்றில்லாதசுகத்தினால் சமத்துவமாய் கானகங்களிற் சஞ்சரித்துகாலங்களை செலுத்துவன். ஆராய்கின்ற ஞானசாஸ்திரவப்பியாசத்தினாலும், புண்ணியகன்மங்களைச் செய்தலினாலும், மனிதருக்கு இவ்வஸ்துதிருஷ்டியானது உள்ளவண்ணம் ப்ரகாசிக்கும்.§—

௧௮. இதுவுமது.

மூன்றும் பூமியை யடைந்து அறிந்த அவனே அனுபவிக்கின்ற பற்றில்லாமையானது இரண்டுவிதமாகும்; யாமிவ்விடத்தில் பிரித்துச்சொல்லக்கேட்பாய். முதிர்ந்த சாமானியமென்பதொன்று முதிர்ந்த சிரேஷ்டமென்பதொன்றாகும்; இந்தவிரண்டும் ஒவ்வொன்றில்மனுகுலத்தையுடைய ஸ்ரீராமா? இரண்டுவிதமாம்.†—

௧௯. மூன்றாம் பூமியான பற்றின்மையை நான்குவிதமாகப்பகுத்துக் கூறல்.

வஸ்துக்களிடத்தில், நான் கர்த்தாவுமல்ல, நான் போக்த்தாவுமல்ல, தெளிபவனாகிய சீடனும், தெரிவிக்கின்றவாசிரியரும், நானல்லேனென்று சொல்லிய சங்கமற்ற குணமே சாமானியவிரத்தியாம்.

௨0. சாமானியப் பற்றின்மையி னிலக்கணங்கூறல்.

புசிக்கப்பட்ட துக்க சுகங்களனைத்தும் பழைய நியதியினாலுண்டாகும்; அப்பொழுதே கிருபைசெய்யாநின்ற ஈஸ்வராதினமாம்; கருத்தாவாகுவதெனக்கேது.¶— பொல்லாத போகஸ்திதிகளியாவும் கொல்லுவதாகிய பெருவியாதியாகும்; சம்பத்துக்களனைத்தும் ஆபத்துக்கு ஸ்தானமாகும்; இறத்தல் பிறத்தலுக்கேயாகும், குழைதலாகிய நல்லபுத்திக்கு உண்டான துன்பமே

௨௧. சாமானியத்திற் சாமானியபற்றின்மை யினிலக்கணங் கூறல்.

---

‡ இ-ம். இங்ஙனங்கூறிய குணங்களனைத்தோடுங்கூடி யாசிரியருபதேசவாக்கியார்த்தங்களினாலும், வேதாந்த மகாவாக்கியார்த்தங்களினாலு மாத்மஸ்வரூபநிச்சயமுண்டாவதே இரண்டாம்பூமியை யடைந்தவ னிலக்கணமென்பதாம்.

§ இ-ம் முன்விசாரணையா னிச்சயித்த வாத்மஸ்வரூபத்தைப் பரிசீலனஞ்செய்தகத்துறவோடு மனந்தேய்ந்து சாந்திபுற்றிருப்பதே மூன்றும் பூமியை யடைந்தவ னிலக்கணமென்பதாம்.

† இ-ம். சாமானியப்பற்றின்மை கேட்டப்பற்றின்மையென்ப தொவ்வொன்றிரண்டாக நான்காமென்பதாம்.

¶ இ-ம். ஒன்றும் நாமல்லவென்னும் பற்றின்மையே சாமானியப்பற்றின்மை [யென்பதாம்.

௨௨. சாமானியத்திற் சாமானிய பற்றின்மையினிலக்கணங் கூறல்.

நீண்டவியாதியாம்; கூறுஞ் சகங்களனைத்தையும் இயமன்கெடுக்க விடாமல்முயற்சிப்பன்.— வஸ்துக்களிலெல்லாம் இச்சையற்ற பாவனையானது உள்ளத்தில் வுண்டாகும்; கிரிகித்த மகாவாக்கியார்த்தத்தை உரிமையராக அழுந்துகின்ற மனதை யுடையவர்களுக்கு காணப்பெற்ற விதுவே சாமானியபற்றின்மையாம்.

௨௩. சேட்டப் பற்றின்மையினிலக்கணங் கூறல்.

கிரிகிக்கின்ற ஆசையில்லாத இவ்வழியினாலும், அடையத்தக்க சத்துக்களினது சங்கத்தினாலும், மூடர்களுடைய நிவர்த்தியினாலும்,‡—சுயஞ் சைதன்யத்தை அகத்திற்றெளிந்ததெளிவினாலும், மேலாகிய புருடப் பிரயத்தினத்தினாலும், நீங்காத ஞானசாஸ்திரத்தின் அப்பியாசத்தினாலும், கரதலாமலகம் தோற்றப்படுவதுபோல, மாமிசநிறைந்த சநநமென்னும் மகோததியினுடைய மேலானகாரணமா யிருக்கின்ற மகாதீரமானது, மதுக்கள்நிறைந்த புட்பமாலையும், இரத்தினமாலையும், விளங்குகின்ற மார்பையுடைய ஸ்ரீராமா? உறுதியாக ஸ்புடமாய்ப்பார்க்கின்றன.—

௨௪. இதுவுமது.

யான் கருத்தாவல்ல, ஈசனே கருத்தா. அல்லாமல் என்னாமே கருத்தாவென்கின்ற இவ் வண்ணமாகிய வசனார்த்தங்களின் சங்கற்பங்களனைத்தும் உண்மையாக் பற்றாமல் வெகுதூரத்திற்றள்ளி, சேர்ந்தசாந்தமாகிய மௌனநிச்சயம், அருளைப் பொழிகின்ற மேலான கிருபாமேகமே, முன்சொல்லிய சேட்டப் பற்றின்மையாம்.¶—

௨௫. சேட்டத்திற்சேட்டப் பற்றின்மையினிலக்கணங் கூறல்.

உள்ளிலும், புறம்பிலும், மேலிலும், கீழிலும், திசைகளிலும், விண்ணிலும் உலகத்திலுமுள்ள வஸ்துக்களிலும், வஸ்துக்களல்லாதவற்றிலும், சடசித்துக்களிலும்பிரித்து நினையாமல் உபசாந்தத்திற்கூடி, எண்ணமிறந்து ப்ரகாசமிறந்து அளவற்ற சநநமழிந்து ஆதியந்தமில்லாததே மேலாகிய சேட்டப்பற் றின்மையாம்.†—

௨௬. சேட்டப் பற்றின்மையே மூன்றும் பூமியின் பலமாமெனல்.

களிப்பாகிய வாசனை சற்கிருத்தியமான துளிரையடைந்து தெளிவுள்ள மனமென்னுந் தண்டினது முனையையடைந்து விக்கினமாகின்ற முட்க ணிறைந்திருக்கின்ற ஞானமாகிய ஒப்பற்ற தாமரைபரும்பானது, உள்ளத்தின்கண் சார்ந்திருக்கின்ற விவேகமென்னுஞ் சூரியனால் விகசிதமாய், இத் தனுமாநசியென்கின்ற மூன்றும்

‡ இ-ம். கருமத்தினாலு மீஸ்வரனாலும் வருகின்ற சுகதுக்கங்களினமக்கு விருப்புவெறுப் பென்னவென்றவைகளிற் பற்றற்றவனாய் முன் விசாரித்த வேதாந்த மகாவாக்கியார்த்தநிச்சத்தழுந்துவதே சாமானியத்திற் சாமானியப் பற்றின்மையென்பதாம.

¶ இ ம். முன்னாத்மநிச்சயத்தி லழுந்தினபடியே யஃதை யனுபவமாய்த் தரிசித் [தல் சேட்டப்பற்றின்மை யென்பதாம்.

† இ-ம். உபசாந்த திருஷ்டியுள்ளவனாய் முன் றரிசனமான வாத்மாவின் மனங் கரைந்திருப்பதே சேட்டத்திற் சேட்டப்பற்றின்மை யென்பதாம்.

உஎ. முதற்பூமியின் விசேடந் தோன்றக்கூறல்.

பூமியை சேட்டப்பற்றின்மையாமது ப்ரயோசனமாகக்கொடுக்கும்.— பயக்கமற்ற சத்துருக்களது சங்கத்தினுலும், முதிர்ந்தநிட்காம தருமத்தின் சங்கத்தினுலும், காகதாலியஞாயத்தைப்போல, சுபேட்சையென்னு முதன்மையாகிய ஞானபூமியானது, மனதினுண்டாகும். அகத்தில் அமுதமுளைக்கிணையாக உதயமாகவும், ஒன்றான விவேகமாகிய சலத்தைப் பாச்சி முயற்சிசெய்து இதைக்காத் திரட்சிக்கப்படும்.— பற்றின்மையினுல் இந்த முதற்பூமியானது வளரும். விசாரணையினுல் அபபற்றின்மையை களங்கமற்ற பள்ளர்கள் தங்கள் பூமியினெல்முளையை வளர்ப்பதுபோல தினந்தோறும் வருத்தப்பட்டு வளரச்செய்ய, கெடுதலில்லாத அடுத்தபூமிகளுக்கு இம்முதற்பூமியான தொன்றுமே சநநபூமியென அந்ததில் வெளிப்படும்; அதினின்றும் இரண்டாம்பூமியாகிய விசாரணையையும் தனுமானசியாகிய மூன்றும்

உஅ. இதுவுமது.

பூமியையும் அடையலாகும்.¶— சேட்டமென்று சொல்லுகின்றபற்றின்மையையடைந்தால்அதுவேமூன்றும் பூமியாகும்; இதைச் சம்பாதிக்கின்றபுருடன்ஒருசங்கற்பநினைவும் இல்லாதவனென்று வசிட்டமுனி சொல்ல, ஸ்ரீராமர் சொல்லுவார். இழிவான குலத்தையுடையவனும். அறிவில்லாதவனும், பந்தத்தொழிலையுடையவனும், பொல்லாதவனும், ஞானமில்லாதவனும்,— இக்குணமுள்ளவர்களுக்கு சொல்லப்பட்ட முத்தியாவது எப்படியுண்டாகும்; இதுவிருக்க, இந்தப்பிரசாரம் மேலான ஞானபூமிகளில் முதற்பூமியையாவது இரண்டாம் பூமியையாவது மற்ற மூன்றும் பூமியையாவது வருத்தப்பட்டடைந்தவனது சீவன்பிரிந்தால், சேர்ந்தடைகின்ற கதியென்ன, குற்றமற்ற மகானே? சொல்லுமென்றுகேட்க, அரிஞுகிய வசிட்டமுனிசொல்லுவார்.— மூடனும் அநேகம்பிழைகள் சூழுகின்றவவனுக்கு பலவிதமாகச் சொல்லப்பட்ட அநேக சநநமுண்டாகும்; முதன்மையான பூமியானது கிடைக்கின்றபரியந்தம சநந நீங்காது. இதுவல்லாமல் காகதாலிய ஞாயத்தைப் போல சன்மார்க்கங் கூடினுலும் அதனுல் குறைவில்

உகூ. ஞானபூமியினிலக்கணங்கேட்ட இராமன்மூடர் முதலியோர்க் கும்மூன்று பூமியுண்டாதலு மிதிலிறந்தவன் கதியுமியாதென வினுவுதல்.

௩0. இதுவுமது.

௩க. முதல்வினுவி னுக்கிரண்டு விதமாக வுத்தரங் கூறல்.

---

¶ இ-ம். சாதுசங்கநிஷ்காமதபம் வித்தாகவுண்டான சுபேச்சையென்னு மாத்மாங்குரத்தை விவேகவிசாரமான சலத்தைப்பூரித்து முயற்சியாற் காக்கின் பற்றின்மையான தனுமானசியினுற் றழைக்குமாதலி னம்முதற்பூமியே காரணமாமென்பதாம்.

† இ-ம். இராமன் வினுவுக் குத்தரஞ்சொல்லத் தொடங்கினதாம்.

௩௨. முதல் விஞவினுக் கிரண்டுவிதமாக வுத்தரங் கூறல்.

லாத நிராசையானது உண்டாகும்.— அல்லாமல் சாதுக்கள் சங்கததினுல் சேர்ந்த நிராசையானது உண்டாகும்; நிராசையானது அடைந்தபொழுதே ஞானபூமியானது அடைதல் தப்பாது;நிறைந்த அந்த ஞானபூமியினுல் சநநநீங்கும். தொகுத்தசாஸ்திரார்த்தத்தின் முடிவிதுவாகும்; இவனிருந்த ஞானபூமியோடும் மரணமடைந்தவர்களின் மார்க்கத்தைக்கேட்பாய்.*— ஞானபூமி மூன்றின் அம்சம்விடாம லடைதலினுல் முன்னுள்ள தீவினைகெடும்; அதன்பின்பு

௩௩. இரண்டாம் விஞவுக் குத்தரங் கூறல்.

தெய்வவிமானத்தைக் கொண்டுவந்து இவனைக் கொண்டுபோய் தேவர்கள் வாழாநின்ற தெய்வலோக முதலாகிய மேலானவிடங்களிலும், நல்லமேருவிலும், சூழ்ந்தசோலைகளிலும், குகைகளிலும், போகமாதர்களுடன்சேர்ந்து மனங்களிப்பன்.— புசிக்கப்பட்ட

௩௪. இதுவுமது

போகநசிப்பதினுல், அளவில்லாதபழய விரண்டுவினைகளும் ஒருங்கேகெடும்; அப்பொழுதே ஞானிகளாய் பூமியிற்செனிப்பார்கள்; திருத்தமான சம்பத்தும், சற்குணமும், பரிசுத்தமும், சிறப்புற்றிருக்கின்ற சத்துக்களினது வீட்டிற்செனித்து முன்பு வருத்தப்பட்டு அப்பியாசஞ்செய்தலினுல் தவருமல் ஞான மார்க்கத்திலிருப்பார்கள்.‡—நாநாவிதமாயுள்ள

௩௫. ஞானபூமி யேழையும் ஐந்தவத்தை யாகச் சொல்லத்தொடங்கி இம்மூன்று பூமியற்பியாசத்திற் சகஞ் சாமானியமாகத் தோற்றுமாதலாற் சாகிரவவத்தையெனவும் அஃதை யடைந்தவனிலக்கணமுங் கூறுதல்.

வுலகத்தை நனவில் அறிவில்லாத புத்தியினுல் சாதாரணமாகப்பார்க்கின்றவதனுல் இந்தமூன்றுபூமியும் நனவேயாகும். அந்தப்பூமியே தனித்த கேவலமாகிய ஞானிக்கு ஆசாரியனென்று நாமமுண்டாகும்; காரணமான இந்த ஆசாரிய நாமத்தினுல் இவன்மோக்ஷமடைந்தவனென்று அஞ்ஞானிகளுக்கும் மோக்ஷவிச்சை யுண்டாகித் தோத்திரஞ்செய்யத் தோற்றும்.— செய்வதற்குரித்தான தொழிலைச்செய்பவன், செய்யத்தகாத காரியங்களைச்செய்யாதவன், இயல்பினையுடைய மார்க்கத்தில்

௩௬. இதுவுமது

இருப்பவனெவனே அவனே யுயர்ந்தோனுகும்;முயற்கிக்கின்றவாசாரத்திலும், சாஸ்திரவபிப்பிராயத்திலும் முதன்மையான நிச்சயவிவகாரத்திலும், மேகவண்ணனைஸ்ரீராமா? உள்ளப்ரகாரம்அமையுமவனே யுயர்ந்

---

* இ-ம். முதற்பூமிகிடையாதமூடனுக்குப் பவநீங்காதென்று மவனுக்குத் தெய்வீகமாய்ச் சற்கிருத்யமுண்டா யதனு னிராசையுண்டா யதனுற் சாதுசங்கமுண்டாயதனுன் விராகம்பெறினதனு லிப்பூமிதவாமல்வரும் அதனுற் பவநீங்குமென்பது சாஸ்திரார்த்த சங்கிரகமென்றுந் தெரிவித்ததாம்.

‡ இ-ம். மும்மூன்றுபூமியினற்பியாசத்தினு ளெங்ஙனமரித்தான், மீளவுமுதித்தவவ் விட்டகுறையான வங்ஙனமின் றற்பியாசித்து முத்திலயயடைவ னென்பதாம்.

௯௭. மூன்றுபூமியிலுதிக்கும் பயனைக்கூறுதல்.

தவனாகும்.— முதலான ஞானபூமியில் முளைக்கும், இரண்டாம்பூமியில்மலரும், மூன்றும் பூமியில்ஒப்பற்ற ஆசிரியனான தன்மைபலிக்கும். ஞானியானவனிந்தப் பூமிகளினிற்கும்போதில் மரித்தாலநேககாலஞ்சுவர்க்கத்திலிருந்து சுத்தசங்கற்பத்தினால் கொடாநின்ற போகங்களைப்புசித்து ஞானியாய் திரும்பச்செனிப்பன்.—

௯௮. மூன்றுபூமியின் அப்பியாசத்தாலஞ்ஞானநீங்கி ஞானமுதிக்குமெனல்.

மூன்றுபூமியி னப்பியாசத்தினால் அறிவின்மையான திறந்தமாத்திரத்தில், மாக்ஷிமையானஞானமுதித்து ஆதியந்தமில்லாமல் வியாபகமாய் பூர்ண சந்திரோதயம்போல மனதில் போதமடைய திரமாகிய ஞானத்தோடும் சேர்ந்தமனதையுடைய யோகிகளுக்கு விளங்கும்.¶—

௯௯. நான்காவதான சத்துவாபத்தி சொற்பனவத்தையெனல்.

நான்காவதுபூமியை அடைந்தவர்கள், சமத்திவமாக கனவைப்போலஉலகத்தின்கண் சகலத்தையும் அமரப்பார்ப்பார்கள். முதன்மையான மூன்றுபூமிகளும், ஸ்ரீராமா? சாக்கிரவவத்தையாம்; சொல்லப்பட்ட நான்காம்பூமியானது சொப்பனவவத்தையாகும்; நின்மலமனமானது சரற்காலத்திலுண்டான முகிற்கூட்டங்களைப்போல நசிக்கும்.†—

௪௦. ஐந்தாவதானவசம்சத்தி சுழுத்தியவத்தையெனல்.

விசேடமான சற்பாவமே மிஞ்சினதென்றிருப்பார்கள். மனமானதுமரித்ததினால் விகற்பங்களனைத்துமுண்டாகாது. நித்திரைசெய்யும் சுழுத்தியவத்தையென்று சொல்லப்பட்டஐந்தாம்பூமியிற்சென்று குணமான விசேடங்களெல்லாங்கெடும்படி அத்துவித நிச்சயமாத்திரத்தில் இருப்பன்.—

௪௧. இதுவுமது.

துவிதமென்கின்ற அந்தகாரமானதுநீங்கி உள்ளத்தின்கண்பிரகாசிகின்ற பூரணஞானமுடையவன், அருமையாகிய சுழுத்திநிலையையுடையவனாய் எப்பொழுதுமிருப்பன். ஒப்பில்லாத அந்தர்முகத்தி லிருப்பன். பெகுற்முகத்தில் கிரிகைகளைச்செய்தாலும், ஏகமான வுபசாந்தத்தினால் நித்திரை யதிகரித்தவனைப்போல காணப்படுவன்.‡-

௪௨. ஆறும்பூமியான பதார்த்தபாவனை துரியாவத்தையெனல்.

அழுத்தமான துரியமென்கின்ற பெயரையுடைய ஆறுவதுபூமியைகிரமமாகச்சேர்ந்துஉண்டாகியநாநாவிதவாசனை யில்லாதவனாய், இவ்வாறும்பூமியில் அப்பியாசஞ்செய்வன். நானென்பதும் நானென்பதல்லாததும் உள்ளதுமில்லாததுமாகிய விவைகள்நீங்கி, கேவலமாய் மனமில்லாதவனாய் பேதாபேதங்களைப் பாரான்.—

௪௩. இதுவுமது.

அகங்காரமுடிச்சுஞ்சந்தேகமுநீங்கிசீவன்

¶ இ-ம் இம்மூன்றுபூமியி னவத்தையு மதையடைந்தவன்றிறமு மதனால் ஞானமுதிப்பதுங் கூறியதாம்,

† இ-ம். முன்மூன்றுபூமியி னற்பியாசத்தினால் ஞானமுதயமா யதனாற் சகஞ்சொற்பனம்போலத் தோற்றுதலி னிப்பூமி சொற்பனவவத்தை யென்பதாம்.

‡ இ-ம். முன்பூமியிலுதித்த ஞானத்தினால் மனோநாசமாய்ச் சுழுத்தியவத்தையைப்போலச் சுகமாகச் சகந்தோற்றுதலிற சுழுத்தியவத்தையென்பதாம்.

முத்தத் தன்மையினல் கேவலமான நிருவாணமல்லாதவனும் நிருவாணமுண்டானவனுமாய் சித்திரதீபத்துக்குச் சமானமானவன், நீங்காதவாகாயத்தில்சூனிய கடத்தைப்போல வேருகிய ப்ரபஞ்சசிருட்டியானதுவாகியாந்தரங்களின்றி, அலைகள்வீசாநின்ற சமுத்திரத்தில் நிறைகுடம்போல, எவ்விடமுமான பிரமதிருஷ்டியால் வாகியாந்தரங்களிற்பூரணனயிருப்பான்.¶—

௪௪. எழாவதான துரியமே துரியாதீதவவத்தையெனல்

இப்புருடனே கொஞ்சமுள்ளவனுய்அவ்விடத்தில் இவனே கொஞ்சமு மில்லாதவனுவான். குறையாத வாருவது பூமியில தனிமையாயிருந்துஎழாவது பூமியை அந்தச் சீவன்முத்தனே யடைவான்; அடைகின்ற விவேகமுத்தியும் அந்த வேழாம்பூமியேயாகும். கிரிகிக்கின்றசாந்தமும் வசனத்துக்கெட்டாதது மாகிய மேன்மையான ஞானபூமிகளின் அளவிதுவாகும்.†—

௪௫. துரியாதீத விலாசத்தைக் கூறுதல்.

விதேகமுத்தியென்று சொல்லப்பட்ட வேழாவதுபூமியை விசாரணைசெய்து வேறுவேருகப் பிரித்து, சிலமதஸ்தர்கள் பரமசிவமென்று சொல்லுவார்கள்; சிலமதஸ்தர்கள் சூனியமென்று சொல்லுவார்கள்; சிலமதஸ்தர்கள்விஞ்ஞானமென்றுசொல்லுவார்கள்; சிலமதஸ்தர்கள் காலமென்று சொல்லுவார்கள்ஃ சிலமதஸ்தர்கள் பிரகிருதியென்று சொல்லுவார்கள்.○—

௪௬. இப்பூமிகளினற்பியாசிகளினிலக்கணங்கூறல்

பிறர்கள், தமதுவிகற்பத்தினல் ஒருறுதியில்லாத வேற்றுமையினல் ஒரு தன்மையினலும் இதுவென் றறிவிப்பதற்கு அகோசரமான விந்த விதேகபூமியை, மிகவும் வருத்தப்பட்டு முயற்சியையுடையவர்களாய் தெரிவிப்பார்கள்; சொல்லப்பட்ட இந்த ஞானபூமியேழும் மயக்கமற்ற குணத்தினல் அப்பியாசஞ்செய்தால், துன்பமானது அற்பமும் வரமாட்டாது.*—

௪௭. ஞானபூமியினிலக்கணங்கூறி, யஃதையடையு

மதங்கொண்டமதசலத்தைவருஷித்துமிருதுவாகஇனிமையாகியநடையையுடைய

---

¶ இ-ம். முன்னேன்தாம் பூமியிலுண்டான சுகத்தைவிளக்கும் விளக்கமாகச் சகந்தோற்றுதலிற் றுரியவவத்தை யென்பதாம்.

† இ-ம், முன்பூமியிற் சுகபோதமாய்விளங்கு மதீதமே துரியாதீதமாதலா லதுவே துரியாதீதவவத்தை யென்பதாம்.

○ இ-ம். துரியாதீதமான விதேகமுத்தியே சிவன் முதலான நாமங்களாகச் சிலர் பகுத்துரைக்கின்றார்களென்பதாம்.

* இ-ம். ஞானபூமிகளினற்பியாச மயக்க முள்ளவர்களுக்கு வருத்தமு மஃதில்லாதவர்களுக் கஃதெவ்வளவுமின் றென்பதாம். இன்னுஞானபூமியேழையு மைந்தவத்தையாகக் கூறினபடியா லைந்துசரீரமு மைந்தபிமானியுமுண்டெனக் கொள்ளப்பட்டது. அவையாவன-முன்மூன்றுபூமியுந் தூலம் அபிமானியற்பியாசி நான்காம்பூமிசூக்குமம் அபிமானிபிரமவித்தன், ஐந்தாம்பூமிகாரணம், அபிமானி பிரமவரன், ஆறாம்பூமி சைதன்னியம் அபிமானி பிரமவறியான்; எழாம்பூமி அதீதம், அபிமானி பிரமவரிட்டனென்பதாம்.

முபாயமுங்கூறத்தொடங்கிஇச்சையை மதயானையாக வுருவகப்படுத்தி யஃதைக் கெடுக்கி லிப்பூமியின்முடிவைத் தெரிசிக்கலாமெனல்.

தாகி, புள்ளிகளையுடைய தும்பிக்கையின்முனை துடித்து சங்குக்கொப்பாகியதந்தங்களை யுடைய யானையான துண்டு; அநர்த்தஞ்செய்கின்றஅது கொல்லப்படுமாயின், அப்போதே ஆநந்தமாக சீக்கிரத்தில் மானிடர்கள் முன்சொல்லப்பட்ட ஞானபூமியின் விரிவனைத்தையம் தாண்டுவார்கள்.—

சஅ. அவ்வானையைக்கெடுக்கும் பொருட் டஃதியாதென வினவுதல்.

மதசலங்க ளொழுகுகின்ற பெரிதாகியயானையை பலத்தினால்கொலைசெய்யாதிருக்குமட்டும், இழிவுள்ள துன்பநிறைந்தயுத்தகளத்தில் எவன்மகாவீரனுவான், என்று சொல்லிய வசிட்டமுனியைப்பார்த்து, நீர்சொல்லிய பலமுள்ளயானையாது? யுத்தகளமியாது? அது கெடுந்தன்மையாது? அது வாசஞ்செய்யும் ஸ்தானமியாது கிருபாவடிவமான ஸ்ரீராமர், அனுக்கிரகஞ் செய்வாயென்று கேட்டார்.—

சகூ. யானையினுருவகத்தை வெளிப்படுத்தல்.

வசிட்டமுனிசொல்லுவார் இதெனக்குண்டாகவேண்டுமென்றல்உருவமாய் துன்பத்தை விளைக்கு மாசையென்று நாமத்தையுடைய பொழியாநின்ற மகாமதசலத்தையுடைய கொடிய யானையானது,சரீரமென்கின்ற பெருங்காட்டில், மிகுந்த களிப்பையுடைய லீலையைமிகவுஞ்செய்யும்,கோபமுமதமுமுள்ள இந்திரியங்களாகிய கொடிய குட்டிகளை உடையதாகும்;—

ருo. இதுவுமது.

இனிமையாக நாக்கினல்வசனிக்கும்மன மென்கின்ற துர்க்கமான வனத்திலடங்கும், நடுக்கஞ்செய்கின்ற கொடியவிருவினைகளாகியஇரண்டுகொம்புள்ளதாம்; அநேகவாசனையாகிய மதத்தைப்பொழியும், எப்பொழுதும்எவ்விடத்திலும் பரவுகின்ற வுருவத்தையுடையதாம் உணர்வில்லாத சம்சாரதிருஷ்டிகளே சினத்தினர் கொல்லுகின்ற யுத்தகளமாகும் பலமுள்ளவாசையேமதயானையாம்.‡

ருக. வீறுள்ள விவ்விச்சையே யாத்மத் துரோகஞ் செய்யுமெனல்.

செயமும், அபசெயமும், மேலுமேலுங் கொடுத்து ஆசையென்கின்ற கோபத்தையுடைய யானையானது எளியரான சீவகோடிகளை சங்காரஞ்செய்யும், நிலையாயிருக்கின்ற விருத்தியையுடைய வாசனையும் பாவனையும், மனமும், புத்தியும் சங்கற்பங்களும். ஆசைகளும், மற்றவைகளும் இதனதுநாமங்களான திரவியங்களாய் அந்தக்கரணத்திலிருக்கும்.—

ருஉ. எவ்விதத்திலுமிச் சாத்தியாகஞ்செயயவேண்டுமெனல்.

தைரியமென்கின்ற மாட்சிமைப்பட்ட அம்பினல் மிகுந்த பலத்தினல் விளையாட்டாக அளவற்ற வஸ்துக்களைத்துமாய் நெருங்கி யொன்றுகிய ஆசையென்கின்ற யானையை, அச்சமில்லாமல் எந்தப்பிரகாரத்தினலும்

---

‡ இ-ம். இச்சையென்னு மியானையானது வினைகளென்னுந் தந்தங்களையும், வாசனையென்னு மதங்களுடன் தேகமென்கிற வனத்திலிருந் திந்திரியமென்னுங் கன்றுகளோடும் பவப்பார்வையென்னும் யுத்தகளத்தில் வசிக்குமென்பதாம்.

ஞானியானவர் செயிப்பது நன்மையாகும்; சஞ்சலத்துடன் இதெனக்குண்டாக வேண்டுமென்பது மனதில்வளர்ந்தால். அதைக்கேட்பாய்.—

௫௩. இச்சையே பந்தம் அதனிவிர்த்தியேமுத்தியெனல்

சொல்லப்பட்ட இவ்வாசையான திருக்கும்பரியபந்தம் சம்சாரமாகிய விடவிடுசியானது ஸ்ரீராமா? அழியமாட்டாது. ஞானசங்கிரகமான விதைக்கேட்பாய், பந்தமடைய இதெனக் குண்டாகவேண்டுமென்று விரியாநின்றமனதே பழிக்கின்ற சம்சாரமாகும்; இந்த மனோநாசமே மோக்ஷமாகும்; இவ்வளவுதான்.‡—

௫௪. இச்சாத்யாகவுபாயங்கூறல்.

மருட்சிசெய்கின்ற மயக்நந்தீர்ந்த நின்மலசித்தனனசிஷனிடத்தில் தெளிவாகத்தெளிந்த உபதேசத்தைக் கொடுத்தல், கண்ணுடியின் புறத்தில்தயிலத்துளிபோலவிஸ்ராந்தியடையும். தெளிவுள்ள ஞானத்தினுல் இச்சநநமயக்கத்தைவிட்டு ஆசையே முளையாக வடிவமாகியமனது உணர்விலாமை மாத்திரத்தால் அசம்வேதனத்தினுல் அற்பமுந் தோற்றமாட்டாது.*—

௫௫. இதுவுமது.

கெடாத அநர்த்தத்தைக் கொடுக்கின்ற ஆசையானது, ஒருபோதுவந்தாலும் அக்கணத்தே நீங்காதவிடயத்தில் அசம்வேதனமாகிய அதனுர்கெடுப்பாய் பலவிதமான ஆசையானது அநேகவுருவாய் தோற்றிக்கொண்டிருந்தாலும் இச்சரீரத்தின் நீங்காமலிருக்கின்ற வாசனையை அசம்வேதனமானது நீக்காமலிராது.¶—

௫௬. அசம்வேதனத்தையடையுமுபாயங் கூறல்.

பிரேதக் கூட்டங்களை இச்சியாதது போல, முடிவில்லாமலிருக்கின்ற இந்தவாசனையை விரும்பாயல் நீக்குவாய்; தெளிவாகிய பிரத்தியாகாரமென்னும் காரணத்தினுல் வாசனையை விரும்புகின்ற

---

‡ இ-ம். இச்சாத்யாகஞ்செய்யும்பொருட்டு அதன்றன்மைகளைப்பகுத்துச்சொல்லியதாம்.

* இ-ம். ஆசாரியனுடபதேசார்த்தத்தைத் சிந்திக்கச்சிந்திக்கச் சிந்தனுதீதசுகபோதஉதயமான வசம்வேதனத்தா விச்சாத்யாகம் வருமென்பதாம். ஆசாரியருபதேசவாக்கியார்த்தத்தைக்கேட்டு இருந்ததுதெரிந்தபடியாற் சத்தேசித்தென்றுந் தெரிவு சுகமா யெழுகின்றபடியாற் சித்தே யானந்தமென்று மானந்தமேயாவருக்குஞ் சுபாவமாய் விளங்குதலா லதுவே சித்தென்று மச்சித்திலியாவருஞ் சஞ்சரித்திருத்தலி னதுவே சத்தென்று மிங்ஙனஞ் சச்சிதானந்த வயிக்கியஸ்வரூபமே தனது ஸ்வரூபமெனச் சிந்தித்து, சிந்தித்தபடி சாக்ஷியுற்றுத் தெளிந்துதெளிந்தபடி யதுவாய்ச் சுகித்திருக்குஞ் சமாதியடைந்து, அசசமாதியினின்று வெளிப்படும்போதி லேகதேசவிடயாநந்தங்களைநீங்கி யேகாகாரமான பிரமாநந்தமாகவு மேகதேசமான விடய ஞானநீங்கி யேகாகாரமாக பிரமஞானமாகவு மிவ்விரண்டு மொன்றான நிரதிசயானந்த சைதன்னியமே சுவானுபூதிப்ரத்யக்ஷமாகச் சிந்திக்கச் சிந்திக்கச் சிந்தனுதீதமான சுகபோதமாக விளங்கிய சாக்ஷாத்காரமேயசம்வேதனமென்பதாம்.

¶ இ-ம். இச்சாவாசனை யசம்வேதனத்தாற் கெடுமென்பதாம்.

வாசனையினளவாகக்கருதி ஆசியாதிருக்கும்; அக்காலை மனஞ் சும்மாவிருக்கும்; அதுவே யசம்வேதனத்தை அடைகின்ற முயற்சியாகும்.†— இது எனதென்கின்ற அறிவை, துன்பம்பொருந்திய கற்பனையென்று சத்துக்கள் சொல்லுவார்கள்; ஞானபாவனையினுல் காணப்பட்ட சகலமும் நீங்கினுல், களங்மற்ற இராசாவே! மேலாகியசத்துக்கள் கற்பனைகள் நசித்த தென்று சொல்லுவார்கள். மனோபாவமே சங்கற்பமாகும்; மனதினது பாவனையற்றதே சிவமாகும்.‡—

௫எ. சங்கற்ப நாசமே சிவமாமெனல்.

விஷயத்தைத்தாவிஉணர்ந்ததும்,உணராததுமாகிய இரண்டையும், பாவனைசெய்வதே பாவனையாகும்: பட்டுப்போன விருக்ஷத்தைப்போல இந்தவறியாமை இரண்டிலும் பொருந்தாநின்ற பாவனையைவிட்டு, சுழலாநின்ற சகலத்தையும் சீக்கிரத்தின்மறந்து, பேரறிவை யுடையவனுய் நிலவரமாகத் தோன்றுதவில்லாத குணத்தோனுய் நிலைபெற்றிருப்பாய் §—

௫அ. அறிவறியாமை நீங்கினவறிவாய் விளங்குவாயெனல்.

இவன் கேட்கின்றவனென்று சொல்லும்படி ஒருவருமணுகாததினுல், புசங்கள் உயரும்படி கரத்தைத் தூக்கி சகலருக்கு மிந்த அருத்தந் தோற்றும்படியாக இருந்து வசனிக்கின்றேம், திரும்பாததாகிய சங்கற்பாவமே நிர்மலமாகிய பரமபதமாகும். அவ்வசங்கற்பத்தை மௌனமாக அகத்தில் ஏன் பாவனைசெய்ய மாட்டார்கள்.*— நெருங்கிய பூமியெல்லாம் ஆளுகின்ற சக்ரவர்த்திப்பதமும் துரும்பென்று சொல்லும்படியா யிருக்கும். பிரமபதமானது, மவுனமாயிருக்கின்ற விருப்பினுல் அடையப்படும். மகாநகரத்துக்கு மார்க்கத்திற்செல்லும் புருடனுக்கு இரண்டுபாதமும் நினையாதிருக்க நடப்பதுபோல, பொலிவுமிகுந்த தனது செய்கையானது சோராமற் சும்மாயிருக்கவும் நடந்துவரும்.¶— இவ்விடத்தில் சொல்லுகின்ற பலவற்றினுலென்ன ப்ரயோசனம்; சொல்லாநின்ற

௫௯. இராமனுக்குபதேசத்தை முடிக்கும் பொருட்டு சபையைப் பார்த்த திசயித்துரைத்தல்

௬0. சபையைப் பார்த்துரைத் திராகவனிடமாய் முடிக்கத் தொடங்கிச் சகசநிட்டையைக் கூறுதல்.

௬௧. வாக்கியார்த்த சங்கிரகங் கூறுதல்.

† இ-ம். சுகபோத வபிக்கியத்தி லசைவற்றிருப்பதே யதீதமுண்டாகுநெறியென்பதாம்.

‡ இ-ம். ஞானபாவனையா லதன்சங்கற்பரூபமாகிய விடயங்கணீங்கிற் சர்வம் பிரமமயமாய் பாகாசிக்குமென்பதாம்

§ இ-ம். விடயத்தையறிதலுந் தன்னை யறியாததுமான விரண்டையு நீக்கத் தானே தானுய்விளங்கிய சுகபோதமான பிரமஞானமாக விளங்குவாயென்பதாம்.

* இ-ம். இங்ஙனம் போதித்துவந்த வாக்கியார்த்த சூட்சுமம் வெளிப்படும் பொருட் டறிவி லசைவறநிற்றல் சுகமாயிருக்க வங்ஙனமில்லாத தேனேவென் றிரங்கிக் கூறினுரென்பதாம்.

¶ இம். அசம்வேதனத்தாற் பரமபதத்தையடையி னதன் சந்நிதானத்திற் சகல கிருத்தியங்களுந் தானே நடந்துவருமென்பதாம்.

சங்கிரகமான இந்த அருத்தத்தை நீ கேட்பாய், சங்கற்பமே சம்சாரபந்தமாகும்; சங்கற்பநாசமே மோக்ஷமாகும்; பிரிவில்லாமல் முடிவும், நாசமும், சலனமும், சம்சாரமும் இல்லாமல் உபசாந்தமாகின்ற ஞானஸ்வரூபமே, பரிசுத்தமாகிய வுலகங்களென்று பார்த்து, நிரதிசயானந்தமெப்படி விளங்குகின்றதோ அந்தப்பிரகார மிருப்பாய்.‡—நீங்காத நிலைமையாகிய

௬௨. சுகபோதமாகச் சஞ்சரிப்பாயெனல்.

உபசாந்த ஞானமென்று சொல்லுவது, அசம்வேதனமாம். முடிவில்லாத ஞானநிலையை யுடையவனாய் கிரிக்கிகின்ற வாசையைவிட்டு உனக்குள்ள செய்கையைச் செய்வாய். ஈனமாகச் செய்யப்படாத மனோநாசமான ஞானமே அசம்வேதனமாம்; இந்தநெறியினால் அவ்வுபசாந்த ஞானாகாரமாய் ஆநந்தித்தப்பிரகாசமேசீக்கிரத்திலிருப்பாய்§— இது எனக்கென்கின்ற

௬௩. சாக்ஷாத்கார திசையைக்கூறுதல்,

அறிவுடைமை துன்பத்தைவிட்டு நீங்காது; அசம்வேதனம் சுயம்ப்ரயோசனமான மோக்ஷத்தைக் கொடுக்கும் உனதுபிரியமியாது, இவ்விடத்திலதனைச் செய்வாய். உதியாத சுயம்பிரகாசமான சிவமானது எவ்விடத்திலு மிருக்கின்ற சத்து அதுவே சகலமும் விடுபட்டிருக்கின்ற வுபசாந்தமான மங்களகரமாகிய நிரதிசயாநந்தம், அதுவேசதோதயமான ஞானஸ்வரூபம் என்றுசொல்லப்பட்ட கனமாகிய அந்த அத்துவித பாவனையே, ஸ்ரீராமா! கருமத்யாகமாகும்.†- இப்படி

௬௪. நூலின் வரலாறுரைத்தல்.

யென்றுவசிட்டமுனியானவர்ஸ்ரீராமருக்குச்சொன்னாரென்று இலட்சங்கிரந்தங் கணக்கினால் பரத்துவாசரிஷிக்கு வான்மீகமுனியானவர் சொன்னார். பிற்காலத்தில் அந்த இலட்சங்கிரந்தத்தில் ஆறுயிரங் கிரந்தத்தை இவ்வண்ணம் சகத்திலுள்ள வாத்மாக்கள் பிரமாநந்தத்தில் வாழும்படி, சுயமாயுண்டான வேதத்தை ஆராய்ந்தறிந்த காஸ்மீரபண்டிதனென்னும் நாமத்தையுடைய பரமகுருவானவர் பிரித்தெடுத்

‡ இ-ம். காணப்பட்டயாவுஞ்சைதன்னியவடிவமாகப் பார்க்கும்போது தயமான சுகஸ்வரூபமாய் விளங்குவாயென்பதாம்.

§ இ-ம். இக்கணமே யாநந்தாதீதமாக விளங்கும்போதாகாரமாய்ச் சகல கிருத்தியங்களுஞ் செய்வாயென்பதாம்.

† இ-ம். நித்திய சுகபோதமான சிவஸ்வரூபமே யாவுமாய் விளங்குமென்னும் ஸ்வானுபூதியே கருமத்யாகமென வாக்கியார்த்த வுபதேசத்தை வசிட்டமுனிமுகத்திந்தப்பிரகாரஞ் சீவன்முத்தித் தன்மையிலிருந் திராமாவதாரங்கத்துக் குரித்தான துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்வாயென்றபடியே ஸ்ரீராமர்செய்து பின் விதேகமுத்தியை யடைந்தாரென்று பாத்துவாசமுனிக்கு வான்மீகமுனியனுக்கிரகஞ்செய்ய அந்தப்பிரகாரமே பரத்வாசரு நிரதிசயாநந்தசைதன்ய சாக்ஷாத்காரமான சீவன்முத்திப்பதத்திற் சுகித்திருந்து பின் விதேகமுத்தி யடைந்தனரென்பதாம்.

௬௫. நூலின் மகிமையுரைத்தல்.

தார்.— ஞானவாசிட்ட மென்னும் இந்நூலே ஞான சாஸ்திரங்களிற் பெரியதாகும்; இதுவேவிசாலமுள்ள காவியங்களில் பெரியதாம்; இதுவே தத்துவஞான மாத்திரத்தின் மார்க்கத்தினால் மகத்தானதாம்; இதுவே ஞானதிருஷ்டியில் சத்துக்களுக்குசங்கநிதி, பத்மநிதியைப்போல மகத்தானதாம்; சூரியனது கோத்திரமென்னும் கனகபாத்திரத்தில் பாய்ந்த அமுதாகும்;—

௬௬. பிரமன் முதலிய வாசிரியரை வாழ்த்துதல்.

பங்கயாசனன் வாழக்கடவது; சரஸ்வதிவாழக்கடவது; வசிட்டமுனிவாழக்கடவது; அரசாங்கஞ்செய்கின்ற ஸ்ரீராமர் மிகவும் வாழக்கடவது; மேலான வான்மீகமுனியானவர் வாழக்கடவது; நன்மைநிறைந்த பரத்துவாசமுனிவரெந்நாளும் வாழக்கடவது; ஞானவாசிட்ட மாத்மாக்களுக்கு ப்ரயோசனமாக வாழக்கடவது; காஸ்மீரபண்டிதரென்னு நாமத்தையுடைய இருஷியானவர் வாழக்கடவது.—

௬௭. பிரமன் முதலிய வாசிரியர் வடிவந்தனது வடிவமா யிருத்தலின், ஆரை வணங்குவே னெனல்.

தேன்சணிறைந்தமிருதுவாகிய தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமாவினது பதத்தைத் துதிப்பனோ! தெளிந்திருக்கின்ற வசிட்டமுனிபாதத்தைத் துதிப்பனோ! ஸ்ரீராமருடைய தாமரை மலர் போன்ற பாதத்தைத் துதிப்பனோ! இயல்பையுடைய வான்மீகமுனிவாது பாதத்தைதோத்திரஞ்செய்வனோ! கீர்த்தியையுடைய பரத்துவாசமுனிவாது பதத்தைத் துதிப்பனோ! வாசிட்டமென்னும் பெயரை பெற்றிருக்கின்ற ஞானசாஸ்திரத்தினது பதத்தை மதிசயிப்பனோ! யானடைந்திருக்கின்ற பரமபதத்தை நன்றென்று சொல்லுவனோ!—

௬௮. இந்நூலைப் பெற்றவர் களின் பேறுரைத்தல்.

பிரமஸ்வரூபமாயிருக்கின்ற வசிட்ட முனியானவர், மேகவண்ணனை ஸ்ரீராமருக்கு பிரமஞானத்தைப் போதித்த மாட்சிமைப்பட்ட ஞானவாசிட்டமென்னு ஞானசாஸ்திரத்தை, நிலையாகக் கற்றமாத்திரத்தில் சீவன்முத்திப்பதத்தை அடைவார்கள்; ஞானமாத்திரமாக உள்ளத்தின்கட் டெளிபவர்கள் அடைகின்ற விலாபத்தை எப்படி சொல்லுவது.§—

## திருவாணப்பிரகரணம்

முற்றிற்று.

---

ஆ பிரகரணமாறுமுள்பட கனை-சங

---

§ இ-ம். தனது நிரதிசயானந்த சைதன்யத்தை வெளிப்படுத்தின சுருதிகுரு ஸ்வானுபவத்தை வியந்துரைத்ததாம்.

## இந்நூலாசிரியர் மரபுகூறல்.

---

தாளவந்த மலரோன்றன் மனத்துதித்த வசிட்டனயன் றன்பாற் கேட்டு
நாளவந்தான் போகாத விராமனுக்கு முபதேச நல்கி யிங்கே
யாளவந்தான் வீரையின்மா தவப்பட்ட னங்க்ச வவதார மாகி
மீளவுந்தான் வந்துதமிழ் வசிட்டரா மாயனமும் விளம்பி னானே.

தண்டையுடைய மாதவனுபியிலுதித்த தாமரைப்பூவில் வாசமாகிய பிரமதேவனது மனதிலுண்டான வசிட்டமுனியானவர், பிரமாவினிடத்தில் இந்த ஞானார்த்தத்தைக்கேட்டு, தினங்கள் வீணாகக்கழியாத ஸ்ரீராமருக்கு அவ்விடத்தி லனுக்கிரகஞ் செய்து, இவ்விடத்தில் ஆளவந்தாரென்னு நாமத்தோடும் வீரையென்னு நகரத்தில் மாதவப்பட்டர் குலத்தில் அவதாரஞ்செய்து, திருப்பவுந் தானேவந்து தமிழில் இந்த ஞானவாசிட்ட வமலராமாயனத்தையும் அருளினார். ‡—

வெண்பா.

வாசிட்ட மென்றளவில் வாழ்வுதரும் வாசித்தா
னேசித்த தெல்லா நிரம்புமே—யோசித்து,
அர்த்த முணரி லருட்படுமங் கர்நிலையிற்
சித்தநிற்கின் முத்தியுமாந் தேர்.

ஞானவாசிட்டம்

முற்றிற்று.








---

‡ இ-ம். பிரமனே மிகுந்த காருண்யத்தினை லிப்புமியின்கண் ணாளவந்தாரென்னு மாசிரியராக வவதரித் திந்நூலைத் திராவிடபாஷையி லருளிச்செய்தனரென்பதாம்.